உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# மெய்கண்டசாத்திரம்

## மூலமுமுரையும்.

இவை

திருக்கைலாயபரம்பரைத்திருவாவடுதுறையாதீனத்து

மஹாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ-அம்பலவாணதேசிகசுவாமிகள்**

கட்டளையிட்டருளியபடி,

அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்மாணுக்கர்

வண்ணக்களஞ்சியம்

**காஞ்சி - நாகலிங்கமுதலியாரால்**

பலபிரதிரூபங்களைக்கொண்டுபரிசோதித்து,

இராமநாதபுரசம்ஸ்தானராஜாஸேதுபதி

ஸ்ரீமத் ஹிரணியகர்ப்பயாஜிரவிகுலமுத்துவிஜயரகுநாத

மஹாராஜா

**பாஸ்கரஸேதுபதியவர்கள்**

திரவியசகாயத்தினுல்

சென்னை:

ஸ்ரீநிகேதனவச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

கலியுகாதி௵ ௪௯௯௮-நிகழும் ஹேவிளம்பி௵ துலா௴



1897.

# இப்புத்தகத்திலடங்கியவை.

# இச்சாத்திரத்தின்விலை.



| | | | | | |
|---|---|---|---|---|---|
| பட்டுக்கட்டடம். | ... | .... | ரூ | ௮ | 0 |
| கித்தான்கட்டடம். | ... | ... | ரூ | 0 | 0 |
| காலிக்கோகட்டடம். | ... | ... | ரூ | 0 | 0 |
| தபாற்கூலி. | ... | ... | 0 | ௮ | 0 |

இங்ஙனம்,

ஏவிளம்பி௵ ஐப்பசிமீ ௩௨ } ☞ காஞ்சி - நாகலிங்கமுதலியார்,
நெ - 45. ஜெனரல் முத்தையாமுதலிவீதி - சென்னை.

உ

சிவமயம்.

# முகவுரை.

மண்ணிடைச்சமயபேதவழிப்படும்புன்மைநீங்க
வெண்ணியேவீடுசேர்க்குமெழிற்கவுமாரந்தன்னைப்
புண்ணியவேதுவாகப்பொருந்திடவெனச்சுத்தந்த
கண்ணியமேவுஞ்சீர்த்தென்றணிகைவாழ்கந்தன்வாழி.

அநாதிமலமுத்தராகிய சிவபெருமான் அநாதிமலபெத்தராகிய ஆன்மாக்கள் தம்மையறிந்து வழிபட்டுய்யுமாறு அநாதியே திருவாய் மலர்ந்தருளியவை வேதம் சிவாகமம் எனவிரண்டாம்.

அவற்றுள் முந்திய வேதத்தின் ஞானகாண்டப் பொருளைச் சிவாகமத்துக்கு மாறுபடாவண்ணம் உள்ளபடி சமயகுரவர் தேவாரம் திருவாசகம் என்னுந் தோத்திரவாயிலாக விளங்கவுரைத்தருளினர்.

பிந்திய சிவாகமத்தின் ஞானகாண்டப் பொருளைச் சந்தானகுரவர் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாவிருபது, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னுஞ் சாத்திரவாயிலாக விளங்கவுரைத்தருளினர். இவற்றுள்,—

௧ - வது. **திருவுந்தியார்**:—இது ௪௫ - கலித்தாழிசைகளையுடையது; சிவாகமத்தின் ஞானபாதப்பொருளை மிகவுஞ் சுருக்கி (சாலிவாகன சகாப்தம் ௧௦௭௦ - ல்) திருவியலூர் - உய்யவந்ததேவநாயனார் அருளிச்செய்தது. இந்நூற்குத் திருவாவடுதுறையாதீனத்துச் சிற்றம்பலத்தம்பிரான்சுவாமிகள் உரையிட்டருளினர்.

௨ - வது. **திருக்களிற்றுப்படியார்**:—இது ௧௦௦-திருவெண்பாக்களையுடையது; ஷ திருவுந்தியாரின் உட்கருத்தை விரித்து (சாலிவாகன சகாப்தம் ௧௧௦௦ - ல்) அவர்மாணாக்கர் திருக்கடவூர் - உய்யவந்ததேவநாயனார் அருளிச்செய்தது. இந்நாயனார் திருவம்பலத்திற்சென்று வணங்கித் திருக்களிற்றுப்படியிலே இந்நூலை வைக்குமளவில் அத்திருக்களிற்றுக்கை நிமிர்ந்து அதனைவாங்கி ஸ்ரீகனகசபேசரது திருவடியிற் கொடுத்தமையால் அத்திருப்படைவீட்டினுள்ள பெரியோர்கள் வியப்புற்று இந்நூற்குத் திருக்களிற்றுப்படியாரெனத் திருநாமஞ் சாத்தினரென்ப. இந்நூற்குத் திருவாவடுதுறையாதீனத்துச் சிவப்பிரகாசத்தம்பிரான்சுவாமிகள் உரையிட்டருளினர்.

௩ - வது. **சிவஞானபோதம்**:—இது ௧௨-சூத்திரங்களையுடையது; சிவாகமத்துளொன்றாகிய ரௌரவாகமத்துட் பாசவிமோசனப்படலத்து

அனுட்டிப்புச் சந்தசாய்த்துவாதச சூத்திரமாகக் கூறப்பட்ட சிவஞான போதத்தின் மொழிபெயர்ப்பாக (சாலிவாகனசகாப்தம் ககசரு - ல்) திருக் கைலாயவரைப் பரஞ்சோதிமுனிவர் மாணுக்கர் திருவெண்ணெய்நல்லூர்- மெய்கண்டதேவநாயனுர் அருளிச்செய்தது. இந்நூற்குத் திருவாவடு துறை யாதீனத்துத் திராவிடமாபாடியகாரராகிய சிவஞானயோகிகள் உரையிட்டருளினர்.

ச - வது. சிவஞானசித்தியார்:—இது கூஉஅ - திருவிருத்தங்க ளையுடையது; ஷை சிவஞானபோதத்தின் ஆழ்ந்த கருத்தினை உலகறிந் துய்யும்படி மிகவும் விரித்து (சாலிவாகனசகாப்தம் ககஎரு - ல்) அவர் மாணுக்கர் நாற்பத்தொன்பதின்மரில் முதல்வராகிய திருத்துறையூர் - அருணந்திதேவநாயனுர் அருளிச்செய்தது. இந்நூற்பாகம் இரண்டில் முற் பகுதியாகிய பரபக்கத்திற்குத் திருவொற்றியூர் - தத்துவப்பிரகாசத்தம்பி ரான்சுவாமிகள் உரையிட்டருளினர். பிற்பகுதியாகிய சுபக்கத்திற்குத் திருவாவடுதுறை யாதீனத்துத் திராவிடமாபாடியகாரராகிய சிவஞான யோகிகள் அருளிச்செய்த பொழிப்புரையின்படி அவ்வாதீனத்துச் சுப்பிர மணியதேசிககுவாமிகள் பதவுரையிட்டருளினர்.

ரு - வது. இருபாவிருபது:—இது க0 - திருவெண்பாக்களை யும் க0 - திருவாசிரியங்களையுமுடையது; பாசலக்ஷணத்தைப் பகுத்துக் கடாவிடையாக (சாலிவாகனசகாப்தம் ககஎசூ - ல்) ஷை சிவஞானசித்தி யார் செய்த ஆசிரியரால் அருளிச்செய்தது. இந்நூற்குத் திருவாவடுதுறை யாதீனத்து நமச்சிவாயத்தம்பிரான்சுவாமிகள் உரையிட்டருளினர்.

சூ - வது. உண்மைவிளக்கம்:—இது ருச - திருவெண்பாக்களை யுடையது; முன்னூற்களிலே கூறப்பட்ட தத்துவங்களைத் தசகாரிய முறையாக (சாலிவாகனசகாப்தம் ககஎஎ - ல்) மெய்கண்ட தேவநாயனுர் மாணுக்கருள் ஒருவராகிய திருவதிகை - மனவாசகங்கடந்ததேவநாயனுர் அருளிச்செய்தது. இந்நூற்கு உரையிட்டார்பெயர் கிடைத்திலது.

எ - வது. சிவப்பிரகாசம்:—இது க0க - திருவிருத்தங்களை யுடையது; முற்கூறிய நூல்களிற் பெறப்படும் சிவஞானமானது மென்மே லும் பிரகாசமெய்த (சாலிவாகனசகாப்தம் கஉஉஅ - ல்) அருணந்தி தேவநாயனுர் மாணுக்கராகிய திருக்கடந்தை - மறைஞானசம்பந்ததேவ நாயனுரது மாணுக்கர் கொற்றவன்குடி - உமாபதிதேவநாயனுர் அருளிச் செய்தது. இந்நூற்குக் காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம் - இலக்கணம் சிதம்பரநாதமுனிவர் உரையிட்டருளினர். இவர் திராவிடமாபாடிய கருத் தரின் மாணுக்கருளொருவரும், அப்பாடியகாரராற் காஞ்சிப்புராணஞ்செய் வித்த மணிகண்டமுதலியாரவர்களுடைய குமாரருமாவர்.

அ - வது. திருவருட்பயன்:—இது க0க - திருக்குறட்களை யுடையது; திருவருட்சகாயத்தால் உண்டாகும் அரியபேற்றினை (சாலி வாகனசகாப்தம் கஉஉக - ல்) ஷை சிவப்பிரகாசஞ்செய்த ஆசிரியரால் அருளிச்செய்தது. இந்நூற்குச் சேதுமடாலயம் - நிரம்பவழகியதேசிகர் உரையிட்டருளினர்.

கூ - வது. **வினாவெண்பா:**—இது கங - திருவெண்பாக்களையுடையது; மாயாலக்ஷணத்தை வினாவின் முகமாக (சாலிவாகனசகாப்தம் கஉஙo - ல்) ஷை திருவருட்பயன்செய்த ஆசிரியரால் அருளிச்செய்தது. இந்நூற்குத் திருவாவடுதுறை யாதீனத்து நமச்சிவாயத்தம்பிரான்சுவாமிகள் உரையிட்டருளினர்.

கo - வது. **போற்றிப்பஃறொடை:**—இது ககூo - அடிகளையுடையது ; பாசசம்பந்திகளாகிய ஆன்மாக்களைத் திருவருள் காக்குமென்பது விளங்க (சாலிவாகனசகாப்தம் கஉஙக-ல்) ஷை வினாவெண்பாசெய்த ஆசிரியரால் அருளிச்செய்தது. இந்நூற்கு உரையிட்டார்பெயர்கிடைத்திலது.

கக - வது. **கொடிக்கவி:**—இது க - கலித்துறையையும் ங - திருவெண்பாக்களையுமுடையது; ஞானமுதலிய சாதனங்களையும் அதனையடைந்தார்பெறும் பயனையும் எடுத்து (சாலிவாகனசகாப்தம் கஉஙஉ-ல்) ஷை போற்றிப்பஃறொடை செய்த ஆசிரியரால் அருளிச்செய்தது. இந்நாயனார் சிதம்பர நடராஜரது உற்சவத்தொடக்கமொன்றிலே ஏறாது நின்றிருந்த துவஜம் ஏறும்படி இந்நூலைச் செய்தனரொன்ப. இந்நூற்கு உரையிட்டார்பெயர் கிடைத்திலது.

கஉ - வது. **நெஞ்சுவிடுதூது:**—இது உ௫அ - அடிகளையுடைய கலிவெண்பாவினையுடையது; ஆன்மா பதியைக்கூடி அனுபவிக்கும் வழியை (சாலிவாகனசகாப்தம் கஉஙங - ல்) ஷை கொடிக்கவிசெய்த ஆசிரியரால் அருளிச்செய்தது. இந்நூற்கு அஷ்டாவதானம் பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள் பதவுரையிட்டனர்.

கங - வது. **உண்மைநெறிவிளக்கம்:**—இது சு - திருவிருத்தங்களையுடையது; முற்கூறிய உண்மைவிளக்கம்போல் வேறொருவகையால் தசகாரியத்தைப் பிரித்து (சாலிவாகனசகாப்தம் கஉஙச - ல்) ஷை நெஞ்சுவிடுதூது செய்த ஆசிரியரால் அருளிச்செய்தது. இந்நூற்கு உரையிட்டார்பெயர் கிடைத்திலது.

கச - வது. **சங்கற்பநிராகரணம்:**—இது உo - திருவாசிரியங்களையுடையது; பெரும்பாலும் அகச்சமயபேதமும் சித்தாந்தவுண்மையும் விளங்க (சாலிவாகனசகாப்தம் கஉங௫ - ல்) ஷை உண்மைநெறிவிளக்கம் செய்த ஆசிரியரால் அருளிச்செய்தது. இந்நூற்கு உரையிட்டார் பெயர் கிடைத்திலது.

இப்பெருஞ் சிறப்பினைவாய்ந்த சாத்திரம் பதினான்கையும் உரையுடன் அடிப்பட்ட சான்றோரால் வழங்கப்பட்டு வந்த மெய்கண்டசாத்திரம் என்னும் பெயரினால் திருவாவடுதுறையாதீனத்து மஹாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ - அம்பலவாணதேசிகசுவாமிகள் கட்டளையின்படி பல பிரதிரூபங்களைக் கொண்டு நன்றாகப்பரிசோதித்து, எழுதுவோரால் நேர்ந்தவழுக்களைக் களைந்து பலர்க்கும் எளிதிற்பயன்படும் வண்ணம் அச்சிற்பதிப்பிக்கவெண்ணிச் சென்ற கரஹ வைகாசிமீ முதல் கையெழுத்துப் பிரதிகள் பெற

தற்கு முயன்றுவருகையில், திருவாவடுதுறை யாதீனத்துத் திராவிடமாபாடியகருத்தரின் மாணாக்கரும் என்தந்தை பிரதாபம் - சரவணப்பெருமாள்முதலியாரவர்களின் ஆசிரியருக்காசிரியருமாகிய காஞ்சிபுரம் - வைத்தியநாததேசிகரவர்கள் பிரதியொன்று கிடைத்தது. அதைவைத்து அச்சிட்டுவழங்கும் பிரதியுடன் ஒத்திட்டு வருங்காலத்து, ஷை பாடியகாரர் மாணாக்கராகிய காஞ்சிபுரம் - சரவணதேசிகர் வம்சஸ்தராகிய சண்முக முதலியாரவர்கள் ஒருபிரதி உதவினர். அவ்விரண்டும் ஒன்றுக்கொன்று மிக வேறுபாடுற்றிருந்தமையால், பலபிரதிகள் பெறுதற்கெண்ணி இத்தமிழ்நாட்டில் வசிக்கும் எனதுநண்பர்களாகிய வித்துவான்கள் பலர்க்கும் அடிக்கடி கடிதமெழுதி மிக முயற்சிசெய்துவந்தேன்.

அப்பொழுது மதுரையில் வசித்த இராமநாதபுரம் - இராமசுவாமிப் பிள்ளையவர்கள் திருவாவடுதுறையாதீனத்துப் பிரதியை வருவித்துச்செப்பஞ்செய்தனுப்பினார்கள். அதன்பின்னர், காஞ்சிபுரத்து ஆளவந்தவள்ளலாராதீனத்துப் பிரதியொன்று கிடைத்தது.

மேற்கூறிய பிரதிகள் ஒவ்வொன்றும் ஆராய்ச்சிக்கு இன்றியமையாதனவாயிருந்தாலும் ஷை பிள்ளையவர்களனுப்பிய திருவாவடுதுறை யாதீனத்துப்பிரதியும், காஞ்சிபுரம் - வைத்தியநாததேசிகரவர்கள் பிரதியும் மிகப் பயன்பட்டன. இப்பிரதிகள் யாவற்றினுள்ளும் சிலசாத்திரங்கட்குத் தக்கவுரை கிடைத்திலது.

மஹாவித்துவான்களாற் பரிசோதித்தற்குரிய இச்சாத்திரம் பதினான்கையும் உரையுடன் பரிசோதித்துப்பதிப்பித்தலில் மிக்க நாணமுடையனேனும், இவற்றை யாவருக்கும் எளிதிற்பயன்படும்படிசெய்யவேண்டுமென்று வரம்புகடந்தெழுந்த ஆசைமேலீட்டால் அந்நாணத்தையிழந்து அச்சிற் பதிப்பிக்கத்துணிந்தேன்.

இவற்றைப் பரிசோதித்துவந்தகாலத்தும் அச்சிட்டுவந்தகாலத்தும் எனக்கு வேண்டிய உதவிபுரிந்துவந்த காஞ்சிபுரம் - வித்துவசிரோமணி - கந்தசுவாமிமுதலியாரவர்களுக்கும், வித்துவான் திருமயிலை - சண்முகம் பிள்ளையவர்களுக்கும், திருமயிலை - புசங்கராயமுதலியாரவர்களுக்கும் மனப்பூர்வமாக வந்தனஞ்செய்கின்றேன்.

இச்சாத்திரம் பதினான்கையும் உரையுடன் என் சிற்றறிவிற் கெட்டியமட்டுமே பரிசோதித்துப் பதிப்பித்தேனாதலின், இப்பதிப்பில் ஆங்காங்குக் காணப்படும் பிழைகளையும் அவற்றின் திருத்தங்களையும் தயை செய்து விவேகிகள் தெரிவிப்பின் அவற்றைப்பின்னரச்சிட்டுப் பலருக்கும் பயன்படும்படி செய்வேன்.

சென்னை :
விளம்பிஷு ஐப்பசிமீ ௨௳

இங்ஙனம்,
காஞ்சி - நாகலிங்கன்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# மெய்கண்டசாத்திரம்.

நேரிசைவெண்பா.

உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவியலூர்-உய்யவந்ததேவநாயனார்

அருளிச்செய்த

# திருவுந்தியார்.

இதில் முற்பட்ட கடவுளாகிய பரமாசாரியனை அருளிச்செய்கின்றார்.

கலித்தாழிசை.

அகளமா யாரு மறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற.

(இதன்பொருள்.) அகளமாய் யாரும் அறிவு அரிது அப்பொருள் சகளமாய் வந்ததென்று உந்தீபற - அநாதியே நிர்மலமாய்த் தன்னைக்கூடினவர்களாலும் கூடாதவர்களாலும் அறிதற்கரிய பரிபூரணமான அந்தப் பெரும்பொருள், நம்பொருட்டால் ஒரு திருமேனிகொண்டு எழுந்தருளி வந்தது;—தானாகத் தந்ததென்று உந்தீபற - இப்படி எழுந்தருளிவந்த அந்தப்பொருள் தீக்ஷையினாலே சஞ்சிதத்தையும் ஒழித்து, பிராரத்தம் புசிக்கச்செய்து, அதிலழுந்தாதபடியுங்காட்டி, ஆகாமியமேறாதபடி நிலையிலே நிறுத்தி, மாயாபடலத்தையும் உரித்து, மூலமாகிய நிகளத்தையும் விடுவித்து, அருளாகிய வமிர்தத்தைப் புசிப்பித்து, தன்னுடைய திருவடியிலேகூட்டி வேறறநிற்கத்தந்தது என்க. (க)

இனி அநாதியே கூடிப்போந்த பிரபஞ்சவாதனையைக் கூடாதபடி இந்தப் பொருளிலே அனவரதமும் வாதனைப்படு முறைமையை அருளிச்செய்கின்றார்.

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
யுழப்புவ தென்பெணே யுந்தீபற
வொருபொரு ளாலேயென் றுந்தீபற.

(இ-ள்.) பழக்கம் தவிரப் பழகுவதன்றி உழப்புவது என் பெணே உந்தீபற - (உபாயகுருவாலே இரக்ஷிக்கப்பட்டவர்களுக்குப் பிராரத்த காரணமாயதேகம் நிற்கையால் அநாதிகாலந்தொடங்கி இந்திரியாதிகளுடன் கூடிவருகிற வாதனையைவிடுதற்குஅரிதாயிருக்கும்; அதென்போலவெனின் :—பிறவிக்குருடனாய்த்திரிந்தவனுக்குக் கடாக்ஷத்தாலே கண் விழித்தாலும், அநேககாலம் அந்தகாராதி வாதனைபண்ணிப்போந்ததால் மருட்சியாய் வழியைக் குழியென்றுசந்தேகித்தும் முன்வந்தாரையாவரெ

னக்கேட்டும் நிற்பன். அதுபோலப்) பிராரத்தத்தாலே இந்திரியாதிவிடயங்கள் வந்தடுத்தகாலத்தில் இவற்றினைக்கியத்தாலே ஜநநங்கூடாநிற்கும்; இதுகூடாதபடி பிராரத்தமான கன்மம் அனுபவிக்கும்போதே அவற்றினைத்துண்ணுமற் கூடுகிற உபாயத்தைத் திருவருள் கண்ணுகக்கண்டு, இப்படிக்காட்டுகிற கண்ணுன திருவருளிலே வாதனைபண்ணுவதொழிந்து, பேய்த்தேர்போல் நிலையில்லாத பிரபஞ்சத்தை மெய்யெனக்கருதிப்பெறும் பேறென் நெஞ்சமே!—ஒருபொருளாலேயென்று உந்தீபற - ஒப்பில்லாதபொருள்கண்ணுக அந்தப்பொருளுடனே வாதனைபண்ணிநில் என்க.

இதில் நெஞ்சத்தைப் பெண்ணென்றதேதெனில், தன்னிடத்தில் நாயகரான தம்பிரானுர் அநாதியாயிருக்க அவருடைய திருவடியைப்பேணுமல், ஐம்புலவேடர் வசத்திலொழுகி நாயகரால் முனியப்படு மிக்கத்துயரமாகியநரக சுவர்க்கங்களிலே உழன்று அழிவில்லாதசுகத்தை யனுபவிக்கப்பெருது போக்குவாருடனேதிரிகையால், தன்னுடைய நெஞ்சத்தைப்பார்த்து என் பெண்ணே தகாதவற்றிற் குட்படுகின்ருயெனப் பேதைமையதனுல் நெஞ்சத்தைப் பெண்ணெனக்கூறியது. (உ)

மேலிந்தவுபாயங்கூடினவர்களுக்குஜநநமரணங்கூடாதென்றுஅருளிச்செய்கின்ருர்.

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவர்
பிண்டத்தில் வாராரொன் றுந்தீபற
பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற.

(இ-ள்.) கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர் பிண்டத்தில் வாராரொன்று உந்தீபற - தம்முடைய பாக்கியத்தாலே தமக்குப் பிராணனுனசிவன் கோசரமாக, இப்படி ஆசாரியராக வெழுந்தருளியவரைக் கொண்டே தீக்ஷையாற் சஞ்சிதமான கன்மத்தையும்போக்கி, தேகத்துடனே பிராரத்த கன்மத்தையும்போக்கி, அவர்நிறுத்தினவருட்கண்ணுலே ஆகாமியத்தையும்போக்கி இப்படி மூன்றுகன்மத்தையு முடித்துத்தீர்த்த ஆசாரியர் கைப்பட்டுநின்றவர்கள், ஒருகாலுந் தேகவாதனையின்வழி நில்லார்கள்;—பிறப்பு இறப்பு இல்லையென்று உந்தீபற - ஆகையாலே கன்மங்கூடாதபடி ஆசாரியர்கடாக்ஷத்தாலே சிவனது திருவடியிலே நின்றவர்கட்கு ஒருகாலத்திலும் ஜநநமரணமில்லை என்க. (ங)

இந்நிலையிலேநின்று சிவனை அனுபவித்தலாலுண்டானசுகம் வாக்கால் உரைக்க வாராதென்று அருளிச்செய்கின்ருர்.

எங்ங னிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகே
னங்ங னிருந்ததென் றுந்தீபற
வறியு மறிவதன் றுந்தீபற.

(இ-ள்.) எங்ஙன் இருந்ததென்று எவ்வண்ணஞ் சொல்லுகேன் அங்ஙன் இருந்ததென்று உந்தீபற - தன்னுடையநிலையுஞ் சிவசொரூபத்தன்மையும் இந்தச்சிவரூபங்கண்ணுகவே அறிந்து, இந்தச்சிவரூபத்துடனே வேறறநின்றனுபவிக்கத்தக்க ஐக்கியமுண்டானபோது, அதனுல் விளைந்த பரமசுகத்தை வாக்கால்உரைக்க எண்ணுமளவில், அனுபோகமா

னது உரைக்கப்படாதாகையாலும், மனவாக்குக்காயங்கள் மாயாவிகற்பமாகையால் இவற்றுக்கு அதீதமாயிருக்கையாலும், இப்பொருட்கு ஒரொப்பில்லாதொழிகையாலும்இப்படியிருந்ததென்று எப்படி உவமித்துச்சொல்லுவேன்; ஒருவனுக்குக்கன்மந் துலைபோலொத்து, மலபரிபாகமும்பிறந்து, தேசிகனுடைய திருவடியைப்பெற்றுச் சிவசொரூபத்தையுமுணர்ந்து இரண்டறக்கூடிப் பரமானந்தமும்விளைந்து, அந்தப் பரமசுகத்திலே அழுந்தினகாலத்து அவனுக்கு எப்படியிருந்ததோ அப்படியே யென்னுமதொழிந்து, இன்னபடியென்று அளவுபடுத்தி உரைக்குமதன்று. ஆதலால் அப்படியேயிருந்தது.—அறியும் அறிவதன்று உந்தீபற - அப்படியிருந்த பொருளை ஆன்மஞானத்தால் அறிந்து கூடத்தக்கதன்று என்க. (௪)

இப்படிப் படர்க்கையாய்நின்ற சொரூபந்தானே, அநாதியேநமக்குத் தன்மையுமாய், முன்னிலையுமாய், கன்மவொப்பும் மலபரிபாகமும் பிறந்தபின்பு ஆசாரியனுமாய் வந்ததென்று அருளிச்செய்கின்றார்.

ஏகனு மாகி யநேகனு மானவ
னாதனு மானானென் றுந்தீபற
நம்மையே யாண்டானென் றுந்தீபற.

(இ-ள்.) ஏகனுமாகி அநேகனுமானவன் நாதனுமானானென்று உந்தீபற - இப்படிப்பட்ட பொருளாயுள்ளவனே அநாதியே ஆன்மாவைக் கூடிப் பிரிதற்கரியனாகையாலே, ஒன்றென்னும் படியுமாய், யாம்செய்த கன்மத்துக்கீடாக உபகரிக்கவேண்டி, அவன் அவள் அதுவென்று பலவாய்நிற்கத்தக்கவனுமாய், இப்படிநின்று கன்மத்தையுந்தொலைப்பித்து மலத்தையும் பக்குவமாக்கின இந்த அவதாரத்திலே நமக்கு ஆசாரியனுமாய் எழுந்தருளிவந்தான்.—நம்மையே ஆண்டானென்று உந்தீபற - இப்படி எழுந்தருளிவந்து அநாதியே தொடங்கி இன்றளவுந் திருவருள்கிடையாமல் நரகத்திலே யுழைத்த நம்மையே, காருண்ணியத்தின் மிகுதியாலே பெறுதற்கரிய திருவடியைத்தந்து அடிமைகொண்டான் என்க. ஏகாரம் இழிவின்கண்வந்தது. (ரு)

இப்படி எழுந்தருளிவந்து அடிமை கொண்டபோதே, தன்பாரங்கெட்டுச் சர்வமுந் தம்பிரானார்க்கே பாரமாமுறைமையை அருளிச்செய்கின்றார்.

நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்னாதன்
றன்செய லாமேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற.

(இ-ள்.) நம்செயல் அற்று இந்த நாம்அற்ற பின் நாதன் தன்செயலாமேயென்று உந்தீபற - சர்வத்தையுந் தம்பிரானார்கூடிநின்று கூட்டுவிக்கைசெய்த இந்த முறைமையை அறியாமல், தன்னாலேசெய்யப்பட்டதென்றுகருதும் ஆன்மசுபாவமும் அருளாலே விட்டுநீங்கி, இப்படி நீங்கினேமென்கிற தன்னையும் அருளிலேகொடுத்துத் தானும் அருளேயாய அப்பொழுதே கர்த்தா இவனைக்கிருகித்துக்கொண்டு, இவன் செயலெல்லாந் தன்செயலேயாக்கி, இவனுந் தானாகவேநிற்பன்;—தன்னையே தந்தா

னென்று உந்தீபற - இப்படிக்கூடி, ஒருவன்கைம்மாறு செய்யத்தக்கதாகத் தன்னையொழிந்த பொருளிலே வேண்டுவது கொடுக்கையன்றி, தன்னையே தந்தானொருவனுக்குச் சிவனும் ஒருபதங்களைக் கொடாமற் கரையற்ற பலமாக அவனைப்போலத் தன்னையும் அவனுக்கேகொடுப்பான். என்க. (சூ)

இப்படிப்பெற்ற பொருளுடனே ஏகபோகம் பிறந்து ஒரு நீர்மையாய் நிற்குமுபாயம் எப்படி யென்று கேட்ட மாணாக்கனை நோக்கி மேல் அருளிச்செய்கின்றார்.

உள்ள முருகி லுடனாவ ரல்லது
தெள்ள வரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற.

(இ-ள்.) உள்ளம் உருகில் உடனாவர் அல்லது தெள்ள அரியரென்று உந்தீபற - ஸ்திரீகள்தங்களுக்கு உரிய புருஷர்களிடத்துண்டாகிய தலையன்பு இடையன்பு கடையன்பென்னு மூவகை ஆசைமிகுதிக்கொப்பாக, நம்பொருட்டுத் திருமேனிகொண்டு எழுந்தருளிவந்த தம்பிரானார் தமக்குத் திருநாமமாகிய பஞ்சாக்ஷரத்தி னுண்மையை ஒருகால் அருளிச்செய்யக்கேட்டும், உள்ளபடிகாட்டக்கண்டும், அந்தச்சொரூபம் அநாதியே தம்மிடத்திலே கூடிநிற்கிற முறைமையையுணர்த்தி அவர் கூட்டு முறைமைகளிலே கூட்டக் கூடியும், இப்படி மூன்றுவகையுங் கண்ட சீவர்கள் நிருவிகாரிகளாய் (அக்கினிகலந்த மெழுகுபோல்) உருகிப் பேரன்பு கூர்ந்து கரையழிந்திருந்தகாலத்து (குளிகையாலே, காளிதமறப் பேதிக்கப்பட்டசெம்பிலேயுள்ள மாற்றெழுந்திருந்து செம்பென்னும் பெயர்கெட்டுப் பொன்னென்னும் பெயர்பெற்றாற்போல) ஆன்மசொரூபமறைந்து சிவசொரூபமேயாய்ச் சிவனென நிற்பர். இப்படிக் கூடுகையொழிந்து தம்முடையபோதத்தால் ஆராய்ந்து கண்டு கூடுதற்கரியர்.—சிற்பரச் செல்வரென்று உந்தீபற-இப்படித் தஞ்செயல்கூடாதே கூடினவர்களே மேலான ஞானைசுவரியத்தை யுடையவர்கள் என்க. (எ)

இந்தநிலை கூடாதவளவில் வேறேயும் ஒருபாயமுண்டென்று அருளிச்செய்கின்றார்.

ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல்க வுந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற.

(இ-ள்.) ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று மீதானத்தே செல்க உந்தீபற - மூலாதாரஞ் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்கினையென்று சொல்லப்படாநின்ற ஆதாரங்களிலே ஒவ்வொரு ஆதாரந்தோறும் பொருந்தின தேவதைகளைத் தியானித்துச் சமாதியடைந்து, இது கைவந்தபின், நிராதாரயோகமென்று சொல்லப்பட்ட ஆன்மசொரூபத்தை உணர்ந்து, ஒருபற்றுமின்றிச் சமாதிபரனாய்நிற்க; அந்த நிராதாரயோகத்துக்கு உபாயயோகமாகிய மேலான யோகத்திலே சாதித்துத் தன்னுடைய செயலற நிற்குமதைச் சாத்திரங்களின் வழிகளிலே ஆராய்ச்சிசெய்து, மீதானமாகிய சிவசொரூபத்திலே கூடும்படி சிரத்தை

பண்ணுவாயாக.—விமலற்கு இடமதென்று உந்தீபற-இப்படிப்பட்ட இடமே நின்மலனாகிய சிவனைக் கூடத்தக்க இடமாவது என்க. (அ)

ஆதாரயோகத்துக் கிட்டவுபாயம் ஒழிந்த சாயுச்சியத்துக் கிலக்கணமான யோகம் அன்றென்று அருளிச்செய்கின்றார்.

ஆக்கிலங் கேயுண்டா யல்லதங் கில்லையாய்ப்
பார்க்கிற் பரமதன் றுந்தீபற
பாவனைக் கெய்தாதென் றுந்தீபற.

(இ-ள்.) ஆக்கில் அங்கே உண்டாய் அல்லது அங்கு இல்லையாய்ப் பார்க்கில் பரமது அன்று உந்தீபற - தற்போதத்தாலே மூலாதாரமுதல் பிரமரந்திரமீறாகவுள்ள ஆதாரங்களிலே ஒவ்வொரு தேவதைகளைத் தியானித்த காலத்தில் உண்டுபோலத்தோன்றியுந் தியானியாதகாலத்து இல்லையாகியும், இப்படித் தியானிக்கப்பட்ட தேவதைகள் இந்தத்தேகத்தில் ஆதாரங்கள்போலப் போகத்துக்குத் தானமாகிய அண்டத்திற்குட்பட்ட பதங்களிலே அடைவிக்குமதொழிந்து, பரிபூரணமான சாயுச்சியத்தை அடைவிக்கமாட்டா; அஃதேனெனில், ஆன்மபோதமானது சீவிக்குமளவில் அதோமுகமாகவொழிந்து சீவியாதாகையால், அதனாற்கற்பிக்கப்படுமவையெல்லாந் தனக்கு அநாதியேவாதனைபண்ணிப்போந்த மாயாரூபமேயொழியத் தன்னைவிட்டுநீங்காத சிவசொரூபத்தையுணர்த்தாது; ஆதலின் தன்னுடையபோதத்தாற் கற்பிக்கப்படுமவையெல்லாம் விசாரித்துப்பார்க்கில் சொரூபமல்ல.—பாவனைக்கு எய்தாதென்று உந்தீபற - இவ்வித அவாக் மனோகோசரமாயுள்ளபொருள் இவனுடைய கற்பனையில் அகப்படாது என்க. (கூ)

மேல் முன்சொல்லப்பட்ட நிராதாரயோகத்தை விரித்தருளிச்செய்கின்றார்.

அஞ்சே யஞ்சாக வறிவே யறிவாகத்
துஞ்சா துணர்ந்திருந் துந்தீபற
துய்ய பொருளீதென் றுந்தீபற.

(இ-ள்.) அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத் துஞ்சாது உணர்ந்திருந்து உந்தீபற - பஞ்சபூதபரிணாமமாகியதேகம் ஆன்மாவைக் கூடினாலொழிந்து சேட்டியாதாகையால் இந்தத்தேகத்துடனே கூடிநின்றால் உள்ளதோஷத்தைஅறிந்து வேறாகக்கண்டுநீங்கிநிற்கவே இந்தத்தேகமும் பிரமாண்டமாகிய பஞ்சபூதங்கள்போல இவனுக்குவேறாகியேநிற்கும். இவற்றை அருட்கண்ணாலேகண்டுநீங்கின ஆன்மாவுக்கு நீங்கினபொழுதே இவனுடைய இச்சாஞானக்கிரியைகளுந்தொலைந்து, இவனுக்கு அநாதியே பிராணனாய் மறைந்துநின்று இரக்ஷித்த சிவனும் இவனைக் கவளீகரித்துக் கொண்டு, தானான்மாவாகியேநில்லாநிற்பன். இந்நிலைதவறாமல்நிற்கும்படி (ஒருவனோரூர்க்குப்போகுமளவில் மற்றொருவன்காட்டிவிட்ட குறிவழிச் செல்லாமற் பக்கமேசெல்லத்தக்க கள்ளருடைய அடிப்பாட்டையை வழியெனக்கருதிச்சென்றாற் கள்ளராலே விதனப்படாநிற்பன். இந்தவிதனங்கள்கூடாதபடி பக்கவழிகளிற்செல்லாமல் ஒருவன்காட்டிவிட்டகுறிவழிச்

சென்றால் ஒருவியாகூலமுமறப்போய்க் கருதினவூரிலேசென்று தன்னுடைய கோட்பாடு முடியாநிற்பன். அதுபோல) சொரூபத்திலேசென்று இரண்டறக்கூடுகிறவழிக்கு விரோதவழியாகிய மயக்கவிகற்பங்களிலே விழுந்து ஜநநமரணங்களை அடையாதே, தன்னுடையசொரூபத்திலே வந்து கூடும்படி வழிகாட்டிநிற்கிறவுணர்வு கண்ணாகக் கேவலசகலத்திலே தாக்காமலிருக்கவேண்டும்.—துய்யபொருள் ஈதென்று உந்தீபற - இதுவே வேதாகமங்களில் தீர்வானபொருள் என்க. (௧0)

இப்படிக்கூடுமதொழிந்து தன்னுடையபோதத்தாலேகூடும்படி விசாரிக்கில் இப்பொருள் கைகூடாதென்று அருளிச்செய்கின்றார்.

தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பர
னோக்கிற் குழையுமென் றுந்தீபற
நோக்காம னோக்கவென் றுந்தீபற.

(இ-ள்.) தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரன் நோக்கில் குழையுமென்று உந்தீபற - ஆன்மாவுடனேகூடி ஆன்மாவாய் நின்றும், தன்னுடைய வுண்மைகுன்றாமற் பரமானந்த சொரூபமாய் நிற்கிற அந்தச் சொரூபத்தைக் கூடவிசாரித்து, அதுதனியே ஒருபொருளுமாக உன்னிவிரண்டுபட்டுநின்று பொருந்தவிசாரிக்கில், உனக்கு அப்பொருள்கைகூடாது.—நோக்காமல் நோக்கவென்றுஉந்தீபற-அநாதியே அந்தச்சொரூபந் தன்னைத்தோற்றாமல் நீயாகிநின்ற முறைமைபோல் நீயும் உன்னைத்தோற்றாமல் அந்தச்சொரூபந்தானாகியே நிற்கில் அப்பொழுதே பரிபூரணபரமானந்த சொரூபியாய்விடுவை என்க. (௧௧)

இனி, இந்தவுபாயத்தை அருளிச்செய்தகுருவின்பெருமையை அருளிச்செய்கின்றார்.

மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரொன் றுந்தீபற
தவத்திற் றலைவரொன் றுந்தீபற.

(இ-ள்.) மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர் சாலப் பெரியரொன்று உந்தீபற - மாதாவினிடத்துண்டான சுரோணிதத்திலே பிதாவினிடத்துண்டாகிய சுக்கிலம் பவளப்பையில் முத்தைவைத்தாற்போலப் படுகிறநாளில், சீவனானது பிராணவாயு வாகனமாகவும, மனம்வழியாகவும், சிவனுடைய ஆஞ்ஞையாலேசென்று, சுக்கிலசுரோணிதத்தின் தலையிலேபதிந்து, கன்மத்துக்கீடாகமூன்றரைக்கோடியுரோமத்துவாரமும் எழுபத்தீராயிரநாடியும் வாயுவிற்பிரதானமான தசவாயுவும் நவத்துவாரமும் எண்சாணுடம்பும் ஏழுதாதுவும் ஆறாதாரமும் ஐந்துபொறியும் நாலுகரணமும் மூன்றுமண்டலமும் இரண்டுவினையும் எனப்பெயர்பெற்று, இவற்றை ஒன்றெனப்போர்த்த புறத்தோலுமாக ரூபிகரித்து, பிராரத்தமளவுந் தன்னுடையதேகத்தில்உந்திச்சக்கரத்தின்மேலேகிடந்து, ஆறுமாதமுதல் உந்திநாளத்தாலே மாதாவினிடத்திலே அன்னரசமுங்கொண்டு, அவ்வன்னரசத்தின்மிகுதியாலே சுழுமுனைநாடி அடைபட்டு இடையும் பிங்கலையுந்திறந்து, பிராணவாயுபுகுந்து மேனோக்கி, நாசித்துவாரங்களாலே விட்டவெழுத்

நாலே நாளொன்றுக்கு இருபத்தோராயிரத்தறுநூறு சுவாசவுச்சாரணந் தோன்றி, முப்பத்திரண்டுநூறுயிரத்துநாற்பதினுயிரம் உருச்சென்றவாறே உதரகன்மந்தொலைந்து, மாதாவினிடத்துண்டான பிராணவாயுவிலே, தம்பிரானுருடைய காருண்ணியத்தாலே சத்தியதிஷ்டித்துக்கொண்டு, இந்தச் சத்திபலத்துடனே வாயுவானது பிரஞ்ஞையைப் பூமியிலே பதிவிக்கவேண்டிப் பிரஞ்ஞாபத்தியமென்னும் பெயர்பெற்று, இவனுடையபோதம்போல இவனுடையதேகமுங் கீழ்நோக்கிவிழும்படி தன்னுடையபலத்தாலே தலைகீழாகத்தள்ளிப் பூமியில்வந்தபின்பு, தேகத்துக்கடுத்த கன்மங்களாலே புசிப்புகளைக்கருதி இந்திரியங்களாகிய மூலைகளிலேயிருந்து, விடயங்களைப் புசித்துப்புசிப்பொழிந்தால், இவனுடையபோதமானது கீழ்நோக்கிச் சாக்கிரமுதல் அதீதமளவாக அவத்தைகளுக்கடுத்த தானங்களாகிய மூலைகளிலே அடைந்தும், இப்படி யிரவுபகல் இந்த மூலைகளிலுண்டான விருளினுலேமறைந்து விகற்பித்துமயங்கியும், இப்படிப்பொய்ப்பிரகாசமான சுகதுக்கங்களில் அழுந்தாமற் கீழ்நோக்கினபோதத்தை ஒழித்து, உண்மையையுணர்த்தி மேலாகியபிரகாசமான பரமாகாசவொளியிலேவிழித்துப் பரபோகத்தில் அழுந்தும்படி கூட்டுவித்த உபாயகுரு மிகவும் அளவிடப்படாதபெருமையையுடைய தம்பிரானுவர்.—தவத்தில் தலைவனொன்று உந்தீபற - அரியதவத்திலேநின்று வழிபட்டவர்க்கு வேண்டும்வரங்களைக் கொடுக்கவல்ல கர்த்தாவுமாவர் என்க. (கஉ)

இப்படிச்சொல்லுக்கும் நினைவுக்கும் எட்டாதபொருள் கூடுகைக்கு ஓரிடமுண்டென்று அருளிச்செய்கின்றூர்.

ஓட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்
தேட்டற் றிடஞ்சிவ முந்தீபற
தேடு மிடமதன் றுந்தீபற.

(இ-ள்.) ஓட்டற்று நின்ற உணர்வு முட்டி பதி தேட்டற்ற இடஞ் சிவம் உந்தீபற - தனக்கொரு போக்குவரவின்றியே ஒழிவறநிறைந்து சலிப்பறநிற்கிறஞானத்தை ஆன்மாவின்கண்ணுகக்கூடி, அந்தஞானமேயாய், அந்தஞானத்திலைக்கியத்தாலே கூடினேனென்கிற விகாரமும் அந்தஞானமுஞ் சேரக்கரைந்தவிடந்தானே சிவரூபமாம்.—தேடும் இடமதன்று உந்தீபற - இந்தவிடம் போதங்கரைந்தவிடத்திலே பிரகாசிக்குமதொழிந்து ஆன்மபோதத்தாலே ஆராய்ந்தறியத்தக்க விடமன்று என்க.

இந்தவிடத்தைத் தேசிகனுலே அறிந்தே அவனறிவித்த வுபாயத்திலே அவதிகூடாமற் கூடவே சிவம்பிரகாசிக்கு முறைமையை மேல் அருளிச்செய்கின்றூர்.

கிடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி
யுடந்தை யுடனேநின் றுந்தீபற
வுன்னையே கண்டதென் றுந்தீபற.

(இ-ள்.) கிடந்த கிழவியைக் கிள்ளி எழுப்பி உடந்தை யுடனே நின்று உந்தீபற - ஆன்மாவை அநாதியேபொருந்திப் போதுகிறஅருளாகிய சிவசத்தியை ஆசாரியன் கடாக்ஷத்தாலே பிரகாசிப்பிக்க அந்த ஞானத்துடனேகூடி அந்தமயமேயாய் நிற்பாய்.—உன்னையே கண்டதென்று

உந்திபற - அப்படி நிற்கவே சிவமானது உன்னையே கண்டு கிருகித்துக் கொள்ளா நிற்கும் என்க. (கச)

மலமாயைகன்மங்களைப் போக்குகிற ஞானத்தை ஆசாரியன்கடாக்ஷத்தாலே இவன்பற்றவே அப்பொழுதே சிவபிரான் இவனைப் பற்றினேமென்கிற நினைவையும் அறுத்துத் தானுக்குவானென்னு முறைமையை அருளிச்செய்கின்றார்.

பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றிலப்
பற்றை யறுப்பனென் றுந்தீபற
பாவிக்க வாரானென் றுந்தீபற.

(இ-ள்.) பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில் அப்பற்றை அறுப்பனென்று உந்தீபற - தேகேந்திரிய பிராணவாயு அந்தக்கரணங்கள் முதலாயுள்ள பற்றுகளை அறுக்கத்தக்க திருவருளை ஆன்மாபொருந்தி அந்தஞானமேயாய்நிற்கில்,அப்பொழுதே ஞானமாய்நிற்கின்றோமென்கிற பற்றையும்அறுத்துச் சிவன் தானுக்கியேவிடுவன்.—பாவிக்க வாரானென்று உந்தீபற - அல்லது சிவனைத் தியானித்துக் கூடவேண்டுமென்று விசாரிக்கில், அவன் ஒருகாலமுங் கூடப்படான் என்க. (கரு)

இப்படிக் கூடிநின்றவர்கள் ஒன்றிலும் பற்றுமனிற்கு முறைமையை அருளிச் செய்கின்றார்.

உழவா துணர்கின்ற யோகிக ளொன்றோடுந்
தழுவாம னிற்பனென் றுந்தீபற
தாழ்மணி நாவேபோ லுந்தீபற.

(இ-ள்.) உழவாது உணர்கின்ற யோகிகள் ஒன்றோடுந் தழுவாமல் நிற்பனென்று உந்தீபற-உணர்த்துமுறைமையினும் அவத்தையினுந் அழுந் தாமற் சிவனதுஞானத்தாலே சிவனைத்தரிசிக்கிற சிவயோகிகளுக்குப் பிராரத்தத்தாலே கன்மங்கூடிற்றாயினுந் திருவடிஞானங்கண்ணுகநிற்கை யாலே ஒருவிடயங்களினும் இரார்கள்.—தாழ்நா மணியேபோல் உந்தீ பற-தாழ்ந்தநாவையுடைய மணிபோல அசையும் ஆரவாரமும் அற்றிருப் பார்கள் என்க. (கசு)

இப்படிக்கூடுங்காலத்து நடுவே ஒருகுறிநிகழுமென்றும் நிகழ்ந்தாற்செய்யும் பரிகாரமும் அருளிச்செய்கின்றார்.

திருச்சிலம் போசை யொலிவழி யேசென்று
நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற
நேர்பட வங்கேநின் றுந்தீபற.

(இ-ள்.) திருச்சிலம்பு ஓசை ஒலிவழியேசென்று நிருத்தனைக் கும் பிடென்று உந்தீபற - தம்பிரானர் திருவுள்ளத்தடைத்த ஆன்மாக்கள் கருவிகரணுதிகளாலுள்ள ஆரவாரங்களைக் கடாக்ஷந்துணையாகவே ஓட்டி வெற்றியுடனே திருவடிசேரச் செல்லுங்காலத்து (இராசாவின் குமாரன் மறுதலையான மாற்றானையோட்டி வெற்றியுடனே தன்னுடைய பதியைச் சேரச் செல்லுமளவில் இராசாவின்அருகுநின்ற வாச்சியங்கள் எதிர் கொள்ளுந்தன்மைபோல) அனவரதமும் பரமானந்தநிருத்தம்பண்ணியரு ளாநின்ற தம்பிரானர் திருவடிக்குச் சிலம்பும் ஓசையுமான பரவிந்து பர நாதம் அடியார்பிறவித்துக்கங்கெடும்படி ஆரவாரியாநிற்கும்; இந்தப்பா

நாதவழியேசென்று பரமானந்தநிருத்தம்பண்ணியருளாநின்ற தம்பிரானை உன்னுடையபோதங்களைவதற்குத்தொழுவாயாக.—நேர்பட அங்கேநின்று உந்தீபற - மயக்க விகற்ப மென்று சொல்லப்பட்ட உட்பக்கவழிகளாகிய கள்ளரடிப்பாட்டையிற்சென்று தட்டுப்படாமல் நல்லடிக்குச் செல்லுகிற செவ்வைவழியே சென்று என்க. (கஎ)

இப்படித் திருவடிக்குச்செல்லுகிறவழிக்கு விரோதமாகிய மயக்கவிகற்பங்கள் ஒருகாலமும்பொருந்தாதபடி தம்பிரானுர் திருவருளைமறவாதிருக்கவென்று அருளிச்செய்கின்ருர்.

மருளுந் தெருளும் மறக்கு மவன்க
ணருளை மறவாதே யுந்தீபற
வதுவேயிங் குள்ளதென் றுந்தீபற.

(இ-ள்.) மருளும் தெருளும் மறக்கும் அவன்கண் அருளைமறவாதே உந்தீபற - உனதநுபூதிக்கு விரோதமாகிய மயக்கவிகற்பங்கள் ஒருகாலமுங்கூடாது. அஃதெதனுலென்னில்,உனக்குக்கண்ணுகிய சிவனருளை ஒருகாலமுங் கைவிடாமற் கூடிநிற்கில்,—இங்குள்ளது அதுவேயென்று உந்தீபற - இவ்விடத்திற் செய்யவேண்டுங் காரியமும் அதுவேயொழிந்து வேறொன்றுமில்லை என்க. (கஅ)

இப்படி அருளிலே இடைவிடாமனின்ருற் சிவம் பிரகாசிக்கும் விளைவை அருளிச்செய்கின்ருர்.

கருது வதன்முன் கருத்தழி யப்பாயு
மொருமகள் கேள்வனென் றுந்தீபற
வுன்ன வரியனென் றுந்தீபற.

(இ-ள்.) கருதுவதன்முன் கருத்தழியப்பாயும் ஒருமகள் கேள்வனென்று உந்தீபற-இப்படி அருளிலே இடைவிடாமனின்றவன் இந்தவருளினலே சிவனைக்கூடவேண்டுமென்று விசாரிக்குமளவில்,இவன் கருத்துக்குக்கருத்தாய் நிற்பது திருவருளேயாகையாலும்,இவனுக்குத்தனித்தொரு கருத்தில்லாதொழிகையாலும், (குகையிலுருக்கின செம்பிலே குளிகை பாய்ந்தவளவிற் செம்புங் காளிதமுமறப் பொன்னு மாற்றுமா யிருந்தாற்போல)இவன் கருதிய வப்பொழுதே இவனையுங் கிருகித்துக்கொண்டு இவனுடைய கருத்தையுமொழித்துத் தானுந் தன்னுடைய கருத்துமாய் நில்லாநிற்பன், ஒப்பில்லாத சத்தியஞானசத்தியினை அநவரதமும் பொருந்திக்கொண்டிருக்கத்தக்கநாயகன்.—உன்ன அரியனென்று உந்தீபற - ஆகையால் இப்படியன்றி ஆன்மபோதத்தால் எக்காலமும் நினைந்துகூட அரிதாயுள்ளவன் என்க. (ககூ)

இப்படிப்பட்ட வுண்மைப்பொருளைப் பெற்றகாலத்து இடைவிடாதே நின்றநுபவிக்கவேண்டுமென்று அருளிச்செய்கின்ருர்.

இரவு பகலில்லா வின்ப வெளியூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விளைய விளையநின் றுந்தீபற.

(இ-ள்.) பகல்இரவு இல்லா இன்பவெளியூடே விரவி விரவிநின்று உந்தீபற - உணர்ந்தகாலத்து மாயையும் ஒடுங்கினகாலத்து ஆணவமுங்கூடா

மல் ஞானமும் ஆனந்தமுமே பிரகாசிக்கத்தக்க பரமாகாசத்திலே கூடிப் பொருந்திநின்றனுபவிக்க.—விரைய விரைய நின்று உந்தீபற - தேசிகனாலே அறிந்தோமாகில், பின்பே சாதித்துக்கொள்ளுகிறோமென்று முன்புள்ளவாசனையின் மிகுதியாலே, பேய்த்தேர்போன்ற விசுவத்தையும், விசுவாதீதமான தேகத்தையும், ஒருநிலைநில்லாத மனாதிகளினுடைய சிக்கென்றவைகளையும் மெய்யெனக்கருதி ஜநநமரணங்களிலே அடையாமற் பரமானந்தத்திலேகூடி நின்று,இளைப்பாறும்படி மிகவிரைந்து கூடுவாயாகவென்க.

இப்படிக்கூடத்தக்கசிவம் ஆன்மபோதத்தால் உளதென்னும்பொருளினும் இலதென்னும்பொருளினுமன்றியே உண்டானபொருளென்று அருளிச்செய்கின்றார்.

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்
கல்லனு யானுனென் றுந்தீபற
வம்பிகை பாகனென் றுந்தீபற.

(இ - ள்.) சொல்லும் பொருள்களும் சொல்லாதனவும் அங்கு அல்லனாய் ஆனுனென்று உந்தீபற - வாக்கால் அளவுபடுத்தி உரைக்கத்தக்க சொரூபாதிகளாய்உள்ள பொருள்களும், வாக்கால் உரைக்கப்படாத முயற்கோடுபோன்று இல்லாத பொருள்களும், இவையிரண்டுமெல்லாதவனுமாய் வாக்குமனாதீதத்திலேநின்று உணரத்தக்க சுபாவ சொரூபியாய் உள்ளானொருவன்.—அம்பிகை பாகனென்று உந்தீபற-அவனே காருண்ணியசத்திக்கு நாயகனாகிய கர்த்தா என்க. (உக)

இப்பொருளைக் கூடுகைக்கு வேறுமோருபாயம் அருளிச்செய்கின்றார்.

காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினு
ளாற்றுவ தாற்றலென் றுந்தீபற
வல்லாத தல்லலென் றுந்தீபற.

(இ-ள்.) காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள் ஆற்றுவது ஆற்றலென்று உந்தீபற - இடைபிங்கலைகளாற் பிராணவாயு நின்று சலிக்குமளவும் மனமும் ஆன்மாவும் ஒக்கநின்று சீவிக்குமாகையால், இப்படிச் சலித்துப் புறப்படுகிற வாயு பன்னிரண்டங்குலமும் புறம்பேசலியாமல் உள்ளேதானே சுவறும்படி குருவசனத்திலே நின்று சாதிக்க மனச்சலிப்புள்ளது ஆற்றுவிடும். இப்படிச் சலிக்கத்தக்க விகாரம் அற்றபொழுதே இவன் கருத்தானது அவிகாரத்திலே செல்லுமாகையால், இந்த விகாரத்தில் விழாமல், தன்னுடைய கருத்துக்குக் கருத்தாய் நிற்கிற தம்பிரானார் திருவடியிலே கூடியிருந்து இளைப்பாறுகிறதே பொருள்.—அல்லாதது அல்லல் என்று உந்தீபற - இப்படிக் கூடுகிறதொழிந்து வேறொரு பிரகாரங்களாற் கூடுகிறது என்றும் நிலைநில்லாது என்க. (உஉ)

இந்தவுபாயத்திலே பொருந்திநிற்கவே, இவன் சுத்தனுமாய் வீடும் எளிதாகப் பெறலாமென்று அருளிச்செய்கின்றார்.

கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாமென் றுந்தீபற
வீடு மெளிதாமென் றுந்தீபற.

(இ-ள்.) கள்ளரோடு இல்லமுடையார் கலந்திடில் வெள்ள வெளியாமென்று உந்தீபற - களவுகாண்பானொருவன் தன்னுடைய சொரூபத்தை

யும் பேதித்து, தன்னுடைய சாத்திரத்தின் வழியிலே, மிருந்த பதார்த்தங் களுடையானொருவனைப் பார்த்து, அவனை மந்திரத்தாலும் ஔடதத்தா லுந் தியானத்தாலும் பேதித்துத் தன்னுடைய வசத்திலே யாக்கி, அவன கத்திலேயுள்ள பதார்த்தங்களை அவன் பொருந்திநின்று எடுப்பித்தாற்போ ல, தம்பிரானாரும் இவனுடைய அநாதிமலசம்பந்தத்தாலே இவனுக்குந் தெரியாதபடி கள்ளனைப்போல் மறைந்துநின்று உபகரித்துக் கன்மவொப் பும் மலபரிபாகமுமுண்டான அவசரத்திலே இவனுக்குப் பொருந்தின தொரு திருமேனியிலே பிரகாசித்துத் திருநீறென்கிற ஔடதத்தாலுஞ் ஸ்ரீபஞ்சாக்கரமென்கிற திருமந்திரத்தாலுஞ் சொரூபமென்கிற தியானத்தா லும் இவனைப் பேதித்து, இவனைத் தம்முடைய வசத்திலேயாக்கி, இவன் சஞ்சிதமாக நெடுங்காலங்களிலே தேடிய அத்துவாக்களாகிய அறைகளைச் சோதித் தெடுப்பிக்கிறவளவிலே, தேகமாகிய இல்லத்தையுடைய ஆன்மா வும் இதற்குப்பொருந்தி ஒருவழிப்பட்டால், இவனுக்கு ஒருமுதலும் இல் லையாய் இவனுடைய இருதயமும் வெளிக்கு வெளியாய்ப் பரமாகாசமாய் விடும்.—வீடும் எளிதாமென்று உந்தீபற - இப்படியான காலத்து ஐம் புலவேடராகிய கள்வர்க்கு ஈடுபடாத வீடும் இவனுக்கு வருத்தமறக் கிடைக்கும் என்க. (உரு)

இப்படி நின்றவர்கள் பிராரத்தத்தாலே தேகத்துடனே விசுவத்திலே இருந்தார் களாயினும் அவர்கள் விசுவமயக்கத்திற் படார்களென்று அருளிச்செய்கின்றார்.

எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டேநின்றார்
விட்டா ருலகமென் றுந்தீபற
வீடே வீடாகுமென் றுந்தீபற.

(இ-ள்.) எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண்டே நின்றார் விட்டார் உலகமென்று உந்தீபற - பஞ்சபூதமுஞ் சந்திராதித்தரும் ஆன் மாக்களுமாக எட்டுவகையுந் திருமேனியாக வெழுந்தருளிநின்ற தம்பிரா னார் அநாதியே தன்னைவிட்டு நீங்காது நின்ற முறைமையை அவருடைய திருவருளாலே அறிந்து, தானும் அவரைப்போலே சிநேகிதம்புரிந்து கூடி னவர்கள் பிராரத்தந் தொலையுமளவுந் தேகவிசுவங்களிலே நின்றாரேயாயி னுஞ் (சாக்காளியென்னும் புழுப்போல) கருத்து வேறே பூண்டு கிடக்கை யாலே விசுவத்திற்படார்கள்.—வீடே வீடாகுமென்று உந்தீபற - இப்படி விசுவத்தை அருட்கண்ணாலே பொய்யானபடிகண்டு நீங்கி நிற்கவே, ஒரு காலத்தினும் அழிவில்லாததிருப்பாதமே அவர்களுக்குப்புகலிடமாம்என்க.

இப்படி ஞானைசுவரியத்துடனே நிற்கப்பெற்றவர்களே புண்ணியபாவந் துலை போலொத்த வான்மாக்களென்று அருளிச்செய்கின்றார்.

சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
யொத்ததே யொத்ததென் றுந்தீபற
வொவ்வாத தொவ்வாதென் றுந்தீபற.

(இ-ள்.) சித்தமும் தீயகரணமும் சித்திலே ஒத்ததே ஒத்ததென்று உந்தீபற - அருளாலே சீவனது பசுத்துவ நீங்கிச் சிவத்துவமாகவுங் குற்

றத்தைக் குணம்போல விளைவிக்கிற அந்தக்கரணங்கள் பசுகரணபாவங் கெட்டுச் சிவகரணமாகவும் இப்படிக்கூடினவர்களே கன்மங்கள் பக்குவத்தையடைந்துதுலையொத்த வான்மாக்கள்.—ஒவ்வாதது ஒவ்வாதென்று உந்தீபற - இப்படி வினைகள் துலையொவ்வாத வான்மாக்களுக்குத் தம்பிரானார் திருவடிகூடக் கிடையாது என்க. (உரு)

இந்நிலையிலே நின்று இரண்டறச்சாதித்தாற்பின்புவிளையுமாறுஅருளிச்செய்கின்றார்.

உள்ளும் புறம்பு நினைப்பறி னின்னுள்ளே
மொள்ளா வமுதாமென் றுந்தீபற
முளையாது பந்தமென் றுந்தீபற.

(இ-ள்.) உள்ளும் புறம்பும் நினைப்பு அறின் நின்னுள்ளே மொள்ளா அமுதாமென்று உந்தீபற - கன்மயோகிகள் கருத்துப்போலத் தானிற்கிற தேகத்திலே ஒருதானத்தில் அவிகாரமாயிருந்தும்,கிரியாபாதத்தில் நிற்கிறவர்களைப்போலப் புறம்பே பாவித்திருந்தும் இப்படிச்செய்து அநுபூதி திரிந்து பிரபஞ்சமாய் நில்லாதே, தேசிகன் கடாக்ஷத்தாலே தேகாதிப்பிரபஞ்சங்களை உணர்ந்து நீங்கின தன்னையுந், தரிசிப்பித்த சொரூபத்தையும், அதன் கண்ணாகவுணர்ந்து தேகாதிப்பிரபஞ்சங்களையும் இல்லையாக்கித் தன்மையு முன்னிலையும் ஒழிந்து ஒரு நீர்மையாகப் படர்க்கையாய் உள்ளென்றும் புறம்பென்றுந் தானென்றும் அவனென்றுங் கூடவேண்டுமென்றுங் கூடினேமென்றும் விசாரிக்கிற உணர்வு ஒழியில் உன்னிடத்திலே ஒருவராலு முகந்துகொள்ளப்படாத அநுபோகரசமான ஆனந்தாமிர்தம் ஊறிப் பெருகி உன்னையே கிருகித்துக்கொண்டு தானேயாய்விடும்.—பந்தம் முளையாதென்று உந்தீபற - இப்படியானபின் ஜநநமரணங்கள் அங்குரிக்கத்தக்க பாசவிகற்பங்கள் உண்டாகா என்க. (உசு)

இப்படிப் பொருந்தினவர்களுக்கே பாசவிகற்பங்களாலாகிய கிலேசந் தீர்வதென்றும், அல்லது தீராதென்றும் அருளிச்செய்கின்றார்.

அவிழ விருக்கு மறிவுட னின்றவர்க்
கவிழுமிவ் வல்லலென் றுந்தீபற
வன்றி யவிழாதென் றுந்தீபற.

(இ-ள்.) அவிழ இருக்கும் அறிவுடன் நின்றவர்க்கு அவிழும் இவ்வல்லலென்று உந்தீபற - ஆன்மபோதம்போல ஒருபொருளைப் பற்றிக்கொண்டு நின்று விசாரித்து மயங்காதே அநாதியே பற்றும் விகற்பமும் மயக்கமுமின்றித் தன்னுடைய ஆஞ்ஞையாலே சர்வமு நடவாநிற்கத் தானொன்றையும் அறியாதே பரமானந்தமயமாய் எல்லாவற்றினுமுளதாய் நின்றே அவற்றிற்படாமல் அநவரதமுநின்று பிரகாசிக்கிற சொரூபத்தை ஆசாரியன் அநுக்கிரகத்தாலே பெற்று அதன் கண்ணாக அதிலேகூடி அதுவாய் நின்றவர்களுக்கு (ஆதித்தன் சந்நிதியில் ஆன்மாக்கள் கண்ணுக்கு அந்தகாரம் நினைவற அந்நியமாய் விடுந்தன்மைபோல) ஞானாதித்தனுதயந் தரிசன

மானபோதே ஜநநமரணங்களுக்கு ஏதுவாய் வருகிற பாசவிகற்பங்களாகிய பேரந்தகாரமானது இன்னவிடத்திலே போனதென்றறியாதபடி தானே இவனைக் கைவிட்டுப்போம்.—அன்றி அவிழாதென்று உந்தீபற - இப்படி நீங்காதவளவில்வேறொருபாயங்களாலும் இந்தக்கிலேசங்கைவிடாதுஎன்க.

இப்படி ஜநநமரணங்களுக்கு ஏதுவாக அங்குரிக்கத்தக்க பாசவிகற்பங்களை விட்டு முத்திக்கு வித்தாகிய சத்தியஞானத்தை அபேட்சித்தவர்கள் பெறும்பேற்றின் உறுதிப்பாட்டை அருளிச்செய்கின்றார்.

வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னார்களென் றுந்தீபற
பெறுவதங் கென்பெணே யுந்தீபற.

(இ-ள்.) வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர் பித்தேறினார்களென்று உந்தீபற - முத்திக்கு வித்தாகி அநாதியே தனக்குப் பிராணனுய் நின்று தோன்றாமல் உபகரித்துந் தொலைப்பித்தும் வருகிற அருளைத் தேசிகன் கடாக்ஷத்தாலே சந்தேகமறப்பெற்று ஜநநமரணங்களுக்கு ஏதுவாக அங்குரிக்கத்தக்க பாசவிகற்பங்களைவிட்ட பாக்கியவான்களே எக்காலமுந் தொலைத்தற்கரிதாகிய தேகாதிப்பிரபஞ்சங்களையுஞ் சுகதுக்க வேதனைகளையுங் கைவிட்டு மேலாகிய ஞானம் பிரகாசிக்கத்தக்க பரமானந்த சொரூபத்திலே மீளாதவழி சென்று புகுந்தவர்கள்.—பெறுவது அங்கு என்பெணே உந்தீபற - இவ்விடத்திலே இப்படிநின்று பெறத்தக்க பேறொழிந்து பாசவிகற்பங்களேபொருளெனநின்றால் அவ்விடத்துப் பெறும்பேறு எது நெஞ்சமே என்க. (உஅ)

இப்படி அரியபேற்றைப் பெறுமளவில் பெறுகைக்கு ஓரவதரமுண்டென்று அருளிச்செய்கின்றார்.

சொல்லு மிடமன்று சொல்லப் புகுமிட
மெல்லை சிவனுக்கென் றுந்தீபற
வென்றொ மென்செய்கோ முந்தீபற.

(இ-ள்.) சொல்லும் இடம் அன்று சொல்லப் புகும் இடம் எல்லை சிவனுக்கென்று உந்தீபற - இப்படிக்கூட வரிய சிவனைக் கூடத்தக்க இடம் ஆன்மபோதத்தால் உணர்ந்து வாக்குகளால் இன்னவிடமென்று உரைக்கத்தக்கதொருஇடமன்று;சொல்லுகைக்குக் கர்த்தாவாகிய ஆன்மா ஒருபொருளைக்கருதி உரைப்பதாக உணருமளவில், ஒருவன் உணர்த்த வுணருமதொழிந்து தானாக ஒன்றை உணரமாட்டாததலால், ஒருவன் உணர்த்த வுணருவதானபடியை ஆசாரியனாலேபெற்று உணர்த்த வுணருவதான வெல்லையில் அவனுணர்த்துகிற தன்மையை அவனாலே யுணரின் அவ்விடமே சிவனைப்பெறுதற்கு எல்லையாயினவிடம்.—என்றால் நாம் என்செய்கோம் உந்தீபற-இந்த விடத்தை அறிந்துகூடினால் யானென்றும் எனதென்றுஞ்சொல்லிநின்ற ஆன்மா அவ்விடத்து என்செய்ததோ அறிகின்றிலேன் என்க.

இந்த அவதரத்திலேநின்று கூடுமுபாயத்தை மன்னிவிடாதே உணரப்பெறின் எல்லாநிலையிலு நிற்கலாமென்று அருளிச்செய்கின்றார்.

வீட்டி லிருக்கிலென் னாட்டிலே போகிலென்
கூட்டில்வாள் சாத்திநின் றுந்தீபற.
கூடப் படாதகென் றுந்தீபற.

(இ-ள்.) வீட்டில் இருக்கில் என் நாட்டிலே போகில் என் கூட்டில் வாள் சாத்திநின்று உந்தீபற - எல்லாவற்றையுந் தன்னாலே விடப்பட்டுத் துறவறத்திலே யிருந்தாற் பிரயோசனமென்ன, இதுவொழிந்து நாடத் தக்க அர்ச்சனாதிகளினுந் தீர்த்ததரிசனங்களினும் உழன்றாலும் பிரயோசன மென்ன, (பொன்னுக்கு மாற்றுநின்றாற்போல) ஆன்மாவே குகையாக அநாதியே தனக்குப் பிராணனாய் நிற்கிற திருவடிஞானத்தைத் தேசிகன் கடாக்ஷத்தாலே உணர்ந்து தன்னுடைய சுதந்திரகீனத்தையுங் கர்த்தா வின் செயலென்றே கண்டு தனக்குப் பொருந்தினதொரு நிலையிலே நில் லானாகில்.—கூடப் படாதென்று உந்தீபற-இப்படி உண்மையறிந்து நில் லாமல் தன்னாலே செய்யப்பட்டதாகக்கருதில் மோக்ஷங்கூடாது போதத் துக்கு விரோதமேவிளையாநிற்கும்;(அஃதெப்படியென்னில்:—கர்த்தாவை அறியாமல் சகலர்க்கும் இதமாக யாகம்பண்ணின தக்ஷப்பிரசாபதிக்கு விரோதமே விளைந்தும், சகலரையுங் கைவிட்டுத் தன்னுடைய செயலறக் கர்த்தாவின் வசத்திலே நின்று சண்டீசநாயனார் சிவனை அர்ச்சிக்கிறவள வில் சகலருக்கும் அகிதமான பிரமகத்தி விளைய, இதுவுஞ் சிவனுக்கு இத மாகவே பலித்துத் திருவருள் விளைந்தபடியுங் கண்டுகொள்க; ஆதலால் உண்மையறிந்து சருவமுங் கர்த்தாவின் செயலென்றே கொள்ளாமல் தன் னுடைய செயலென்றே ஒவ்வொரு தவத்திலே நின்றவற்கு வினை ஏறா திராது) என்க. (௩௦)

இந்த வுபாயத்தையுடைய சைவசித்தாந்தத் திறமொழிந்து மற்றொருசமயிக ளின் பொருளைப் பொருளெனக் கருதவேண்டாமென்று அருளிச்செய்கின்றார்.

சாவிபோ மற்றச் சமயங்கள் புக்குநின்
றாவிய றாதேயென் றுந்தீபற
வவ்வுரை கேளாதே யுந்தீபற.

(இ-ள்.) சாவிபோம் மற்றச் சமயங்கள் புக்கு நின்று ஆவியறாதே யென்று உந்தீபற - ஆன்மாவுஞ் சிவமும் வேறறநிற்கும் அநுபோகரசமா கிய சைவசித்தாந்தத் திறமொழிந்து,ஒருவன் பசிதீரச்செய்த பயிரானது பயன்படுமளவும் பயிர்போலவந்து பலிக்கத்தக்க நாட்களிலே சாவிபோன தன்மைபோல, முடிவில் ஒன்றென்றுரைப்பார், இரண்டென்றுரைப்பார், இரண்டாய் நின்றே யொன்றுமென்பார், உடலந்தானே உயிரென்பார்,வாயு வை உயிரென்பார், கரண நாசமே பொருளென வுரைப்பார், மோகம் க்ஷயிக்க முத்தியென்பார்,இப்படிச் சொல்லப்பட்ட வெகுவிதமான சமயங் களிற்புகுந்து நின்று தனக்குப் பிராணனான சிவனைத் தரிசியாமல் நரகங்க ளிலடைவார்.—அவ்வுரை கேளாதே உந்தீபற - இப்படிப்பட்ட சமயிகள் வார்த்தை உன் சுரோத்திரத்துக்கு விடயமாகாதபடி நில் என்க. (௩௧)

இப்படிச் சைவசித்தாந்தத்தி னுண்மையிலே நின்றவர்கள் கருவிகரணாதிகளில் ஒருகாலங்களினுங் கூடாத துறவையுடையவர்களென்று அருளிச்செய்கின்றார்.

துரியங் கடந்தவித் தொண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய் நின்றதென் றுந்தீபற
துறந்தா ரவர்களென் றுந்தீபற.

(இ-ள்.) துரியங்கடந்த இத்தொண்டர்க்குச் சாக்கிரம் துரியமாய் நின்றதென்று உந்தீபற - பிருதிவிமுதலாக நாதமீறான தத்துவங்களையும் பஞ்ச மலங்களையும் அருளாலேகண்டு நீக்கித் தன்னைத்தரிசித்துத் தன்னையும் பொருளன்றென்று கண்டு திருவடியிலே பொருந்திநிற்கத்தக்க மெய்யடியார்க்குப்பிராரத்தத்தாலே சாக்கிரத்தானங்கூடிற்றாயினும்,இவர்கள்திருஷ்டிக்குப் பரமதுரியமானஞானமே பிரகாசிக்குமதொழிந்து ஒருகாலங்களினும் பிரபஞ்சத்துடன் கூடார்கள்.—அவர்கள் துறந்தாரென்று உந்தீபற- அவர்களே துறவையுடைய கலியாணர்கள் என்க.

இதில் முற்படுந்துரியமென்றது தற்போதத்தை, இரண்டாவது துரியமென்றது பரபோதத்தை யெனக்காண்க. (௩௨)

இப்படித் துறவையுடைய கலியாணர்களுக்கும் பிராரத்தகன்மம் புசித்தே தொலைய வேண்டுகையாலும் புசிக்குமளவில் கருவிகரணாதிகள் கூடவேண்டுகையாலும் இவைகூடினாலும் இவற்றின் வசத்தில் அழுந்தாமற் புசிக்கு முபாயமும், ஆகாமிய மேறாமல் நிற்குமுபாயமும், இப்படி அருளிலே நின்றவர்க்குப்பெத்த தசையிற் சுகந்தானே முத்திதசையிற் சுகமாமுபாயமும் அருளிச்செய்கின்றார்.

பெற்றசிற் றின்பமே பேரின்ப மாமங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது மாயையென் றுந்தீபற.

(இ-ள்.) பெற்ற சிற்றின்பமே அங்கே முற்றவரும்பரிசு பேரின்பமாம் உந்தீபற - தேசிகன் கடாக்ஷத்தாலே சொரூபத்தை உணர்ந்தகாலத்தும் பிராரத்தமானது எடுத்தவுடலிலேநின்றுபுசித்தே தொலைய வேண்டுகையால், அந்தக்கன்மத்தாலே நிலைநில்லாத சுகங்கள்வந்து கூடாநிற்கும். இது கூடாநின்றபோதும் இதில் அழுந்தாமல் இந்தச்சுகத்தையுங் கன்மத்தையுங் கருவிகரணாதிகளையுந் தன்னையுங்கூட்டிப் புசிப்பிக்கிற திருவருளை அது கண்ணாகவுணரவே ஜநநமுமேறாமற் கன்மமுந்தொலைந்து அவ்விடத்திற்கூடின அற்பசுகமானது, இவன் ஞானதிருஷ்டியிலே நிற்கையாலே, பரமசுகமாம்.—மாயை முளையாதென்று உந்தீபற - இப்படிநிற்கவே மலமாயை கன்மங்கள் ஒருகாலத்தினும் அங்குரியா என்க. (௩௩)

இப்படி அளவிடுதற் கரிதான பரமசுகங் கைகூடின காலத்தே,இவனிடத்து வேறொன்றும் வந்து கூடாதபடி இந்தச்சுகந்தானே இவனைவேறற அடைவித்துக் கொள்ளுமென்று அருளிச்செய்கின்றார்.

பேரின்ப மான் பிரமக் கிழத்தியோ
டோரின்பத் துள்ளானென் றுந்தீபற
வுன்னையே யாண்டதென் றுந்தீபற.

(இ-ள்.) பேரின்பமான பிரமக்கிழத்தியோடு ஓரின்பத்து உள்ளானென்று உந்தீபற-ஒருவனை ஓரின்பம் வந்தடுத்தகாலத்தே இதற்கு ஓரளவு

முண்டாய்இது நீங்கினகாலத்துச் சுகமான அந்த இராகந் துக்கமாகவும் வந்து கூடாநிற்கும்; ஆதலால், இந்தச் சுகதுக்கங்கள் இரண்டும் வந்துகூடாதபடி தம்பிரானார் திருவடியிலே அடைந்தகாலத்தே இவனளவிடுதற்கரிதாகிவிளைந்த அனுபோகரசமானது பரமாநந்தமாகிய பிரமசத்தியினைக்கூடினபொழுதே ஒருதன்மையான சுகசொரூபமாய் விடும்.—உன்னையே ஆண்டதென்று உந்தீபற-இப்படியே அசத்தியத்தைச் சத்தியமாகக் கொண்டொழுகின உன்னையும் மேலாயுள்ள ஞானாநந்தத்திலேசேர்த்தடிமைகொண்டதுஎன்க.

இந்தப்பேற்றைப் பெற்றவர்களுக்குத் தேகநிற்கின்றபோதும் ஆன்மாவின் செய்கை கிளையாமல் ஒடுங்கிச் சிவனுடைய செய்தியாய் நிற்கு நிலைமையை அருளிச்செய்கின்றார்.

பெண்டிர் பிடிபோல வாண்மக்கள் பேய்போலக்
கண்டாரோ கண்டாரொன் றுந்தீபற
காணாதார் காணாரொன் றுந்தீபற.

(இ-ள்.) பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக் கண்டாரோ. கண்டாரொன்று உந்தீபற - ஆன்மாவானது ஒருத்தியைப் பேய்பிடித்தகாலத்துத் தன்னுடைய சொரூபம் வேறாகாதிருக்க மனமும் வாக்குஞ் செயலும்பேயின்வசத்தேயாய்த் தன்னைமறந்து பேயெனநின்ற தன்மைபோலவும், நாயகரான தம்பிரானார் தேகியை ஆவேசித்த பிசாசமானது தன்னுடையசொரூபம் ஒருவர் காணநின்று தேகியினுடையசெயலையழித்துத் தன்னுடையசெயலே பிரகாசிப்பித்துத் தானேதேகியாய்நின்ற தன்மைபோலவும், இப்படிப் பாவனையாற் பாவகமாகக்கூடி நின்றவரே சிவனை உள்ளபடிகண்டு கூடினவர்கள்,—காணாதார் காணாரொன்று உந்தீபற - இப்படிக் கண்டுகூடாதார் எக்காலமும்விழியாத கண்ணையுடையவர்கள் என்க.(௩௫)

இந்நிலைகூடாதவர்களுக்குவேறேயுமோருபாயம்உண்டென்றுஅருளிச்செய்கின்றார்.

நாலாய பூதமு நாதமு மொன்றிடி
னாலா நிலையாமென் றுந்தீபற
நாதற் கிடமதென் றுந்தீபற.

(இ-ள்.) நாலாயபூதமும் நாதமும் ஒன்றிடின் நாலாநிலையாமென்று உந்தீபற-சுக்கிலசுரோணிதத்தின் றலையிலே சீவன் பதிகின்றவளவில் சிவனுடைய கிரியாசத்தியாலே நாலாம்பூதமாகிய வாயுவுஞ் சத்தப்பிரமமான நாதமுங் கூடப்பதிந்து சரீரம் பரிணமிக்க வாயுவானது நாடிகடோறும் பூரணமாகப் பிரதானவாயுவான பிராணவாயுவும் பின்பு மரணமுண்டாக்குதற்பொருட்டு நாபிசக்கரத்தின் கீழேசென்று பதியாநிற்குஞ் சத்தப்பிரமமான நாதாந்தந் தானந்தோறுநிற்குமெழுத்துகளாகிச்சென்று பின்பு மரணமுண்டாக்குகை காரணமாக மூலாதாரத்திலே பிரணவமாகப்பதிந்து கிடவாநிற்கும். இவற்றைத் தேசிகனருளாலே அறிந்து சத்திபீசத்தையுஞ் சிவபீசத்தையுங்கொடுத்துத்திருமந்திரப் பிரசாதமாக்கிமனத்தை ஒருமைப்படுத்தி,இந்தத்திருமந்திரப்பிரசாதத்தைக்கொண்டே நாதத்தையெழுப்பி,இந்த நாதத்தையும் பிராணவாயுவையுங்கூட்டிச் சுழுமுனைவழியே செலுத்தி முன்புதோன்றினபிரமரந்திரத்திலேகூடித்தான் பரமாகாசத்தில் அழுந்தில்,

நாலாநிலையாகிய சாயுச்சியம் அப்பொழுதே கைகூடும்.—நாதற்கு இடம தென்று உந்தீபற - கர்த்தா எழுந்தருளியிருக்கத்தக்க இடமும் அவனைக் கூடுகைக்கு இடமும் அதுவே என்க. (ருசு)

இப்படியன்றி வேறுவழிகளிற்சென்று தற்போதத்தாற் கூடத்தக்கதென்று பாவித்துஜநநமரணங்களிலேவிழுந்துஅழுந்தாதிருக்கும்படி அருளிச்செய்கின்றார்.

சென்ற நெறியெல்லாஞ் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
நீசெயல் செய்யாதே யுந்தீபற.

(இ-ள்.) சென்றநெறியெல்லாஞ் செந்நெறியாம்படி நின்றபரிசுஅறிந்து உந்தீபற - கன்மங்களுக்கீடாகத் துணைசெய்கிற மனுதிகளுடனேகூடி நச்சுவழியான விலக்கடியென்னும் ஐந்துபொறிவழியுஞ் சென்று விடயங்களிலே பொருந்தி இதாகிதங்கள்கூடி மறுமைக்கு வித்தாகிய குற்றங்களை விளைவிக்கின்ற வழிதானே, ஐயமற்ற ஞானப்பெருவழியாம்படி, தேகங்கூடினபடியுந் தேகத்திலே தானிற்கிற முறைமையுங் கன்மங்கள்வந்து கூடுமுறைமையுந் தன்னுடையபோதம் இந்தவகைதெரியாமல் இந்திரியகரணங்களுடனேகூடி நின்றுசலித்த முறைமையும் (காந்தமும் பசாசமும்போலத்) தம்பிரானார் சந்நிதியிலேகூடிச் சீவிக்குமுறைமையும் அருட்கண்ணாற் கண்டு தன்செயலறநிற்க, பிராரத்தமுந்தொலைந்து ஆகாமியமு மேலுமற் பின்பு தேகாந்தத்திலுந் திருவடியிலே கூடுகைக்குக் காரணமாம்; ஆதலாற் பக்கநோக்காமல் ஒருநிலையிலே நில்.—நீசெயல் செய்யாதே உந்தீபற - இப்படியொழிந்து உன்னுடைய செயலாலே கூடத்தக்கதென்று பாவித்து ஜநநமரணங்களிலே விழுந்து அழுந்தாதே என்க. (ருஎ)

இப்படித்தேசிகன் கடாக்ஷத்தாலேபெற்ற திருவருளைக்கொண்டு ஜநநமரணங்களுக்கு உற்பத்தி தேடாமல் எந்தவுபாயத்தினாலேயாயினுந் திருவடியை அடைகைக்கு விரும்புவதேபொருளென்று அருளிச்செய்கின்றார்.

பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதெ
னக்கொழு நீயறிந் துந்தீபற
வறிந்தறி யாவண்ண முந்தீபற.

(இ-ள்.) பொற்கொழுக்கொண்டு வரகுக்கு உழுவது என் அக்கொழு நீஅறிந்து உந்தீபற - பொன்னாலேசமைத்த கொழுவைக்கொண்டு வரகுவிளைய உழுதகாலத்திற் பலமுங்குறைந்து மிகுந்தசேதமுமாய் உழவுபிழைத்த தன்மைபோல, தேசிகனாலேபெற்ற திருவருளைக்கொண்டு பிழையே பெருக்கி ஜநநமரணங்களிலே போக்கு வரவு செய்யவுற்பத்தியான இந்திரிய விடயங்களில் நீ அழுந்தாதே, அநாதத்திருவருள் முன்பு தோன்றாமல் நின்றுஉபகரித்த முறைமையறிந்து, தோன்றினபின்பு அது கண்ணாக அதிலே கூடியழுந்தினகாலத்து ஜநநமரணங்களுஞ் சுகதுக்க வேதனைகளுநீங்கி, ஒருகாலத்தினு நீங்காப்பரமாநந்தமே விளையுமென்னும்படியும் அறிந்து, தன்னுடைய செயலற அதுவாய்நிற்கின்றதே நிலை.—அறிந்து அறியாவண்ணம் உந்தீபற - இப்பொருளை உணராதே யுணர்ந்துநில் என்க. (ருஅ)

இப்படி உணர்த்தாகின்ற சிவனை உணராதே யுணரக்கூடாதாகிற் சிவனைப் பாவித்து நிற்கவே இந்தவுண்மை கூடுமென்று அருளிச்செய்கின்றார்.

அதுவிது வென்னு வனைத்தறி வாகு
மதுவிது வென்றறிந் துந்தீபற
வவிழ்ந்த சடையாரொன் றுந்தீபற.

(இ-ள்.) அது இது என்னு அறிந்து அது இது என்னு அறிவாகும் உந்தீபற - ஆன்மாவினுடைய சருத்துப்போல அநாதியேமறைத்த சகச மலத்தாலே மாயையுங் கன்மமும்பொருந்திய ஜநநத்தையே விளைவித்து இந்திரிய வியாத்தனுய் விடயங்களிலே பொருந்துங்காலத்து, இரண்டுபொருளைச்சேர வறியமாட்டாமல் ஒன்றொன்றாக அறிந்தும், அறியுங்காலத்திலே அதுவிதுவென்று சுட்டிப்பற்றிநின்று சலித்து மயக்கவிகற்பங்களிலேயடைந்து பொய்யை மெய்யெனக்கருதித் தன்னுடைய வுண்மைவிளங்காமல் இரவுபகல் அகப்பட்டவாகாசம்போல இடைவிடாமல் நின்றழுந்தாதே, தம்பிரானுடைய கருத்தானது அநாதியேயுள்ள காருண்ணியத்தின் மிகுதியாலே ஆன்மாக்களுடைய மலமாயை கன்மங்களைத் தொலைப்பித்துத் திருவடியிலே கூட்டவேண்டுமென்கிற இச்சையாலே, ஆன்மாக்களுக்கு அநாதியே பிராணனாய்நின்றும் அவ்வக்கன்மங்களுக்கீடானவைகளைத்திருவுளத்தடைத்துச் சர்வத்தையும் ஒருகாலத்திலேசேரவுணர்ந்தும்உணர்த்துவித்தும் புசிப்பித்தும் பிரிப்பித்தும் ஒடுக்குவித்துஞ் செய்யாநிற்க, தானொன்றையும் அதுவிதுவென்று சுட்டிப் பற்றிநின்று சலியாதே தன்னுடைய அருளாலேநடக்கத் தானொழிவறநிறைந்து மயக்கவிகற்பங்களுமின்றி அசைவற நில்லாநிற்கும் அந்தப்பொருள் அநாதியே இவன்றானாய் நிற்கிற முறைமையை அருளாலேயறிந்து ஆன்மபாவனையைவிட்டுச் சிவபாவனையிலே நிற்க.—அவிழ்ந்தசடையார் என்று உந்தீபற - இப்படிக்கூடிநிற்கின்ற பொருளே ஒருவராற் சுட்டப்படாத விரிந்த சடாபாரத்தையுடைய தம்பிரானார் என்க. (௩௧)

நின்மலரான தம்பிரானார் ஆன்மாவுடனேகூடி ஆன்மாவாய் நிற்கைக்குக் காரணம் அவருடைய காருண்ணியத்தின் மிகுதியேயென்று அருளிச்செய்கின்றார்.

அவனிவ னான தவனரு ளாலல்ல
திவனவ னாகானென் றுந்தீபற
வென்று மிவனேயென் றுந்தீபற.

(இ-ள்.) அவன் இவனானது அவன் அருளால் அல்லது இவன் அவன் ஆகானென்று உந்தீபற - வாக்குமனாதீதமாயிருக்கத்தக்க தம்பிரானார் பிராணனாயிருக்கும்போதும் அநாதியே பசுத்துவமான ஆணவமலம் உண்டாகையால்,இந்த ஆணவமலம் பக்குவப்பட்ட வவசரத்திலே(செம்பிற்கிடந்த மாற்றுப் பிரகாசித்துப் பொன்னென்னும் பெயர்பெற்றாற்போல) தம்பிரானாரும் பிரகாசித்து இவனைத் திருவடியிலே கூட்டிக்கொள்ளுதற்பொருட்டுத் தம்முடைய காருண்ணியத்தினாலே இவனாகவெழுந்தருளி நின்ற தொழிந்து சிவபிரானன்மாவாகின்றாரல்லர். ஆன்மாவுந் தம்பிரானார் திருவடியிலேகூடிப் பரமாநந்தத்தை அனுபவிக்கிறதொழிந்து சிவனாலாய பஞ்சகிருத்தியங்கள் நடத்துகையில்லை.—என்றும் இவனேஎன்றுஉந்தீபற-சிவன் தம்முடைய கருணையாலே ஆன்மாவாகியுஞ் சிவனாகியு நிற்கவல்லர். ஆன்மாவானவன் என்றுந் தன்னுண்மை குன்றாமற் கூடினதொன்றிலே அதுவாய் நிற்க வல்லன் என்க. (௩0)

இந்தப்பொருளைக்கூடாமல் அநாதியே யுண்டாகத்தக்க விக்கினமும் அது நீரு முபாயமும் அருளிச்செய்கின்றார்.

முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்ததென் றுந்தீபற
வப்பழ முண்ணாதே யுந்தீபற.

(இ-ள்.) முத்திமுதலுக்கே மோகக்கொடிபடர்ந்து அத்திபழுத்தது என்றுஉந்தீபற-முத்தியைப்பெறுகைக்கு முதன்மையான ஆன்மாவிலே அநாதியே மறைக்கத்தக்க ஆணவ மலத்தின் காரியமான அஞ்ஞானமென்னுங் கொடி வெகுவிதங்களாகப்படர்ந்து, இதாகிதங்களைவிளைந்து இவைவகாரணமாகமயக்கத்தைச் செய்கிறமாயையாலே பூதகாரியமானவுடம்பு ஜநநந்தோறும் பலியாநிற்கும்.—அப்பழம் உண்ணாதே உந்தீபற - இந்தப்பழத்தை அருந்தி நரகவேதுவாகாதே,ஆசாரியன் கடாக்ஷத்தாலேபெற்ற அருளாகிய வாளாலே ஆணவமலமாகிய மூலத்தைவேரறுத்து முத்திப்பழமாகிய பரமாநந்தத்தை அனுபவித்துச் சிவனுடனே ஒரு தன்மையாய்விடுக என்க.(சக)

இப்படியொழியப்பரிபூரணத்துவமாகநிற்கத்தக்கதோருபாயம்அருளிச்செய்கின்றார்.

அண்ட முதலாமனைத்தையு முட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே யுந்தீபற
குறைவற்ற செல்வமென் றுந்தீபற.

(இ-ள்.) அண்டமுதலாம் அனைத்தையும் உட்கொண்டு கொண்டத்தைக்கொள்ளாதே உந்தீபற - அண்டமென்றுசொல்லப்பட்ட சக்கரவாளகிரியும் மகாமேருவும் அண்டகோளகையும் அட்டகுல பருவதங்களுந் திக்கயங்களும்அட்டநாகங்களுஞ் சத்தசமுத்திரங்களுஞ் சத்தமேகங்களும்பதினான்குபுவனங்களுந் தேவர் அசுரர் சித்தர்வித்தியாதரர் கின்னரர் கிம்புருடர் மற்றுமுண்டான அண்டர் முதலாக வுள்ளிட்டபேதங்களுஞ் சந்திராதித்தரும் பஞ்சபூத பரிணாமங்களும் பேய்த்தேர்போன்ற வியாபாரங்களும் பொதிந்த திரட்சியோரண்டமாக வளர்ந்தகோடியண்டங்களும்,இப்படி ஒவ்வோர் அண்டங்களைத் தசமடங்குபொதிந்த சலமும், அந்தச் சலத்தைத் தசமடங்குபொதிந்த அக்கினியும், இந்த அக்கினியைத் தசமடங்குபொதிந்தவாயுவும், இந்தவாயுவைத் தசமடங்குபொதிந்த ஆகாசமும், இவையெல்லாவற்றையுஞ் சேரப்பொதிந்த பேரண்டத்தையும், இவை யெல்லாவற்றிற்கு மேற்பட்டு நின்மலமாய்நிற்கிற நாதசொரூபத்தையும், இதற்கும் அப்பாற்பட்ட நின்மலமாயெல்லைப் படாத பரமாகாசமான பெருவெளியையும், உனக் குடம்பாகிநின்று உனக்கு நிலைநின்றவாறே உன்னை யுணர்த்தின சொரூப முடம்பாகிநின்று, ஆன்மபோதத்தையும் இந்தப் பரிணாமங்களையுஞ்சேர நினைவறவிடுவாயாக.—குறைவு அற்றசெல்வமென்று உந்தீபற - அப்பொழுதே நீஅகண்டபரிபூரணனாய்விடுவை என்க. (சஉ)

இப்படிப்பெற்றும் இந்த வுண்மையில்நில்லாமல் தேகத்தையும் விசுவத்தையு மெய்யென நின்றோருடைய வுண்மையை அருளிச்செய்கின்றார்.

காயத்துண் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற
வரட்டுப் பசுக்களென் றுந்தீபற.

(இ-ள்.) காயத்துள் மெய்ஞ்ஞானக்கள் உண்ணமாட்டாதே மாயக்கள் உண்டாரென்று உந்தீபற - தேகத்துநிற்கிற தேகியான சிவனுடைய சத்தியஞானமான திருவடித்தாமரையிலுண்டான பரமாநந்தத்தேனாகிய

மதுவையுண்டு தேகவிசுவங்களுந் தெரியாமல் தன்னையுஞ்சிவனையும் அறியாதபடி சிவேசுவாத்துவந்திலே அடையாதே (மிகவும் பசித்தானொருவன் தன்கையில்வந்திருந்த பாற்றிரளைப்போட்டு நாவுக்கெட்டாத முழங்கையை நக்கிப் பசிதீரவிசாரித்த தன்மைபோல) பேய்த்தேர்போன்ற விசுவத்தையும் இந்திரசாலம்போன்ற வாழ்வையும் மெய்யெனக்கருதி நரகவேதுவான விடயசமூகங்களினுண்டாகும் இதாகிதங்களாகிய மதுவையுண்டார்கள்.—வரட்டுப்பசுக்களென்று உந்தீபற - அவர்களே ஒரு காலங்களினும் பயன்படாத ஆன்மாக்கள் என்க. (சங)

இப்படியாவராலும் பெறுதற்கரியபேற்றைக் காருண்ணியத்தின் மிகுதியாலே தந்தகுருவைத் தம்முடைய சிநேகத்தின் மிகுதிப்பாட்டாலே துதிக்கின்றார்.

சிந்தையி னுள்ளுமென் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்தீபற
மடவா ளுடனேயென் றுந்தீபற.

(இ-ள்.) சிந்தையின் உள்ளும் என்சென்னியினுஞ்சேர வந்தவர்வாழ்கவென்று உந்தீபற-ஒழிவறநிறைந்த தம்பிரானார் அநாதியே அடியேனுக்குப் பிராணனாயிருக்க, அநாதியே யுண்டானமலத்தின் மிகுதிப்பாட்டாலே ஜநநமரணங்களிலேயுழன்று போக்குவரவே பொருளாகத் திரிந்தஅடியேனைத் தம்முடையகாருண்ணியத்தின் மிகுதியாலே பொருந்தினதிருமேனியுடனே எழுந்தருளிவந்து, மலமாயைகன்மங்களும் ஜநநமரணங்களுங்கூடாதபடி, என்னுடையபொல்லாபுலாற்றலையிலே யாவராலுங்குறித்தற்கரிய சிவகந்தத்தையுடைத்தாகிய திருவடித்தாமரையைச்சேர்த்தும், அந்தத்திருவடி அடியேனுக்கு அநாதியே பிராணனாய்நின்ற முறைமையையுணர்த்தியும், என்னுடைய சித்தமான துசலியாமல் அந்தத்திருவடியுடனேவிட்டு நீங்காமல்ஒருவழிப்படக்கூடி வேறறநிற்குமுபாயத்தைத்தந்தும், இப்படித் துக்கசாகரத்தினின்றுங் கரையேற்றின தம்பிரானார் காலங்காட்டாத சுகசொரூபத்துடனே மேன்மேலும்வாழ்வார்.—மடவாளுடனேயென்று உந்தீபற - சருவான்மாக்களும் ஈடேறுகைப்பொருட்டால் அநாதியே யுண்டான காருண்ணிய சத்தியுடனேயும் அனவரதமுங் கூடிவாழ்வார் என்க. (சச)

இந்தத்திருவுந்தியார் அருளிச்செய்த தம்பிரானார் இந்தச்சாத்திரத்தின் மகிமையுந் தம்முடைய திருநாமமுந்தோன்ற அருளிச்செய்கின்றார்.

வையமுழுது மலக்கயங் கண்டிடு
முய்யவந் தானுரை யுந்தீபற
வுண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற.

(இ-ள்.) உய்யவந்தான் உரை வையமுழுதும் மலக் கயங் கண்டிடும் உந்தீபற - உய்யவந்த தேவரால் அருளிச்செய்யப்பட்ட இந்தத் திருவுந்தியாரென்கிற சாத்திரத்தைக் குருமுகத்தாலே கேட்டு, இதனுடைய சம்பிரதாயத்தை அறிந்தவர்கள் அநாதியே தொடங்கியுழன்று போந்த தேகவிசுவங்களினுண்மைஅஞ்ஞான சாகரமென்றே விட்டேறி;—உண்மைஉணர்ந்தாரென்று உந்தீபற - உண்மையென்னுந் திருவடியாகிய நெடுங்கரையிலே சேர்ந்து பரமாநந்தமே அனுபவித்துக் கொண்டிருப்பார்கள் என்க. (சரு)

## திருவுந்தியார்முற்றியது.

உய்யவந்ததேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருக்கடவூர்-உய்யவந்ததேவநாயனார்

அருளிச்செய்த

# திருக்களிற்றுப்படியார்.

நேரிசைவெண்பா.

அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக
வம்மையப்ப ரப்பரிசே வந்தளிப்ப—ரம்மையப்ப
ரெல்லா வுலகுக்கு மப்புறத்தா ரிப்புறத்து
மல்லார்போ னிற்பா ரவர்.

(இதன்பொருள்.) அம்மை அப்பரே உலகுக்கு அம்மை அப்பர்என்று அறிக-மாணவகனே! சங்காரமானகாலத்து மலசகிதரான மூன்று வகைப்பட்ட ஆன்மாக்களையும் மாயைகளிலே ஒடுக்கி,இந்தமலமாயை சன்மங்களுடனே ஆன்மாக்களையுஞ் சிவசத்தியிடத்திலே ஒடுக்கி, இந்தச் சத்தியையுந் தம்மிடத்திலே கரந்துகொண்டு சிவமொன்றுமேயாய் நிற்கையில்,பின்பும் இந்தக்காலமானதுசென்று சிருஷ்டிகாலமான அவசரத்திலே, தம்முடைய காருண்ணியத்தின் மிகுதியாலே, இருந்த ஆன்மாக்களைப் பக்குவப்பட்ட கன்மமலத்தைக்கூட்டிப் புசிப்பிக்கவும் ஆணவமலத்தைப் பக்குவமாக்கும் பொருட்டும் அந்தச்சத்தியை மீண்டும் பிரகாசிப்பித்து,அந்தச்சத்தியிடத்திலே தாமும்பொருந்தி அந்தச்சத்தியில் ஒடுங்கிக்கிடந்த மலசகிதரான ஆன்மாக்களையுந் தோற்றுவித்து, இவர்களுக்கு முன்புவிட்ட குறைக்கீடான தனுகரண புவனபோகங்களையுங் கொடுத்துத் தாமும் முதல்கெடாமல்நின்றும் அவர்களைக் கன்மமலங்களுக் கீடாகநின்று புசிப்பித்து, இப்படிச்செய்கிற தம்மையும் இந்த வுபகாரங்களையுந் தெரியாமல் விஷயங்களிலே இரோசிக்கும்படி திரோபவித்து,இந்த நான்குகிருத்தியங்களினாலுங் கன்மமுந்துலையொத்து மலபாகமுமுண்டாய் இவர்கள் முத்திக்குப்பிராத்தராவதெப்போதென்று அநவரதமுந் திருவுள்ளத்தினால் அநுக்கிரகமே பண்ணி,இப்படியுள்ள பஞ்சகிருத்தியங்களைத் தம்முடையஅருளாலே நடத்திப்போதாநின்ற காலங்களிலே பக்குவப்பட்ட ஆன்மாக்களை அறிந்து அவர்கள் அளவுக்களவான தீக்கைகளாலே இரக்ஷித்து முறைமையிலே கூட்டிக்கொள்ளுகையால்,இந்தச் சத்தியையுடையசிவனே சர்வலோகங்களுக்குந் தாயுந்தந்தையுமென்று அறிவாயாக. பக்குவப்பட்ட ஆன்மாக்களைத் தம்முடையஅருளாலே நடத்திப்போதாநின்றகாலங்களிலே இரக்ஷிக்குமுறைமை எப்படியெனில்?—அம்மைஅப்பர் அப்பரிசேவந்து அளிப்பர் - அந்தச்சத்தியையுடைய சிவன் பக்குவப்பட்ட ஆன்மாக்களை அறிந்து ஒருமலத்

துடனேநின்ற விஞ்ஞானகலரிற் பக்குவர்க்குப் பிராணனாய்நின்று அம்முறைமையிலே பிரகாசித்தும், இரண்டுமலத்துடனேநின்றபிரளயாகலரிற் பக்குவர்க்குத் திவ்வியமான திருமேனியுடனேதோன்றி அந்தத்தரிசனத்தால் இரக்ஷித்தும், மூன்றுமலத்துடனேநின்ற சகலரிற்பக்குவர்க்கு அவர்களைப்போன்ற திருமேனியுடனே எழுந்தருளிவந்து சத்திநிபாதத்துக்கீடாகநான்குவகைப்பட்ட தீக்ஷைகளாலும் "திருநோக்கால் பரிசத்தால்திகழும்வாக்கால் பாவனையால் மிகுநூலால்யோகப்பண்பால்" என்கிற பிரமாணப்படியே ஆறுவகைப்பட்ட காருண்ணியத்தாலும் இரக்ஷித்தும், இப்படி இந்தமுறைமைகளிலே அநுக்கிரகியாநிற்பார்; இப்படித்திருமேனிகொள்வாராயின் அவரும் இந்தவுலகங்களிலுள்ளாரிலே ஒருவராகாரோவெனில்?— அம்மைஅப்பர் எல்லாவுலகுக்கும் அப்புறத்தார் - அருளாலே திருமேனிகொண்டு இரக்ஷித்ததொழிந்து அவருண்மையை ஒருவரும்அறியார். அறியுமிடத்துப் பிருதுவிமுதல் நாதமீறான தத்துவங்களுக்கு அப்பாற்பட்டுநின்றே அறியவேண்டுகையால் அறியப்பட்ட சத்தியையுடைய சிவனும், இந்தச் சர்வலோகங்களுக்கும் அப்பாற்பட்டேயிராநிற்பர். சிவன்பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டேயிருப்பாராகில் பிரபஞ்சமானது தானே நடந்ததோவென்னில்?—அவர் இப்புறத்தும் அல்லார்போல் நிற்பார் - அவர் தம்முடைய அருளாலே சர்வலோகங்களையும்நடத்தும்பொருட்டுத்தம்முடைய சொரூபந்தோன்றாதபடி அறுவகைப்பட்ட அத்துவாக்களே திருமேனியாகக்கொண்டு தத்தம் பிரக்கினையாலே பிரபஞ்சநடவாநிற்கத் தாம் அவை அவராய் அசைவின்றியே ஒருபணியற நில்லாநிற்பர் என்க.

இதனாலே கர்த்தாவுஞ், சத்தியும், மூன்றுவகைப்பட்ட ஆன்மாக்களும், மலங்களும், பஞ்சகிருத்தியங்களும், மூன்றுவகைப்பட்ட ஆசாரியமூர்த்திகளும், தீக்ஷாக்கிரமங்களும், பதமுத்திகளும், சாயுச்சியமும், கருத்தாவேகதேசியுமல்லர் பரிபூரணருமல்லர் பூவிற்கந்தம்போலப் பக்குவங்களிலே பிரகாசிப்பரென்னு முறைமையும், அவர் கிருபாமூர்த்தியென்னு முறைமையும், சர்வத்தையுங் கூடிநிற்பினும் ஒன்றோடுந் தோய்விலரென்னு முறைமையும் அறிவிக்கப்பட்டன. (க)

இப்படிச்சிவரூபத்தைத் தரிசித்துக் கூடுமுறைமை எப்படி யென்ற மாணவகனை நோக்கி அருளிச்செய்கின்றார்.

> தம்மிற் றலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்
> தம்மிற் றலைப்படுத லாமுணரிற்—றம்மி
> னிலைப்படுவ ரோரிருவர் நீக்கிநிலை யாக்கித்
> தலைப்படுவர் தாமத் தலை.

(இ-ள்.) தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டு-தத்தமிடங்களிற் பக்குவமறிந்து எழுந்தருளிவந்த ஆசாரியரிடத்திலே தாமுங்கூடிவழிபட்டு,—தம்மில் தலைப்படுதல் தாம்உணரில் - ஆசாரியரநுக்கிரகத்தாலே முன்பு தாமாக அபிமானம்பண்ணியிருந்த தேகாதிகளைத்தமக்கு வேறென்றறிந்து நீக்கித் தம்மையுந்தரிசித்துத் திருமேனிகொண்டெழுந்தருளிவந்துணர்த்தின தம்பிரானார் தம்மிடத்திலேநின்று பிரகாசிக்கிற முறைமையுந்தாம்அறிந்து,—தம்மின் ஓரிருவர் நிலைப்படுவர்-தம்மிடத்திலேஅநாதியே

தோன்றாமல்நின்று நடத்திப் பக்குவமாக்கி, அந்தப்பக்குவத்திலே இப்படித் தரிசிப்பித்த இந்தஞானஞேயங்களாகிய சத்திசிவமான இரண்டுமுதலுந் தோன்றுநிற்கும்,—நீக்கி அத்தலைதாம் நிலையாகத் தலைப்படுவர் - இப்படித் தரிசிக்கின்றோமென்கிற தம்முடைய சுட்டானபோதத்தைவிட்டு, அந்தஞானத்திலே பொருந்திநிற்கில், அப்பொழுதே அந்தஞேயசொரூபமாகிய சிவமுங்கூடி அந்தச்சிவமாகியே பிரகாசியாநிற்பர் என்க. (உ)

இந்த அவசரத்தை அடியேனுக்குக் கடாக்ஷித்தருளவேண்டுமென்ற மாணவகனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

என்னறிவு சென்றளவில் யானின் றறிந்தபடி
யென்னறிவி லாரறிக வென்றொருவன்—சொன்னபடி
சொல்லக்கே ளென்றொருவன் சொன்ன னெனக்கதனைச்
சொல்லக்கே ணுனக்கச் சொல்.

(இ-ள்.) ஆசாரியரதநுக்கிரகத்தாலே என்னுடையபசுஞானம்போனவளவில், நான் அந்த வவசரத்திலே நின்று அநுபவிக்கிறபடி எப்படியெனில்? பசுஞானம்போய்ச்சிவஞானத்திலே அபேக்ஷயுண்டானவர்கள் அறியுங்களென்று, ஒரு பரமாசாரியர் அருளிச்செய்தபடியே சொல்லக்கேளென்று, எனக்கு ஒரு பரமாசாரியர் என்னுடைய பக்குவத்துக்கீடாகப் பாரம்பரியம்போல ஒருபாயமாக அருளிச்செய்தார்; அந்தவவசரத்தை அந்த முறைமையிலே, நான் உனக்குச்சொல்ல, மாணவகனே! நீ புத்திபண்ணிக் கேட்பாயாக என்க. (௩)

பசுஞானம்போய்ச் சிவஞானத்திலேநின்று அநுபவித்தபடியே கேளென்று ஆசாரியன் அருளிச்செய்கையால், ஆசாரியனும் ஆன்மாக்களில் ஒருவனேயென்ற மாணவகனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

அகளமய மாய்நின்ற வம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போலுலகிற் றங்கி—நிகளமா
மாணவ மூல மலமகல வாண்டனன்காண்
மாணவக வென்னுடனாய் வந்து.

(இ-ள்.) அம்பலத்து அகளமயமாய்நின்ற எம்கூத்தன் உலகில் சகளமயம்போல் தங்கி - திருவம்பலத்தே, ஞானமயனாய் ஆநந்தநிருத்தஞ் செய்தருளுகின்ற எம்முடையசுவாமி, (தன்னுடைய காருண்ணியத்தின் மிகுதியாலே, என்னுடைய பிறவித்துன்பத்தைப்போக்கும்பொருட்டாக, எனக்கு ஞானக்கண்ணில்லாமையினாலே, ஊனக்கண்ணுக்குத் தோன்ற, விலங்குசாதிகளை உபாயமாகப்பார்வையிட்டுப் பிடிப்பாரைப்போல, சர்வமுந் தனக்குத் திருமேனியாகையால், என்னைப்போலச் சகளீகரித்து) விசுவத்தில் ஒருதேகிபோலத்தோன்றி.—மாணவக நிகளமாம் ஆணவமூல மலம் அகல என்னுடனாய் வந்து ஆண்டனன்காண் - மாணவகனே? (ஆன்மாவையும் மாயாதேகத்தையுங்கூட்டிப்) பிணிக்குக்காரணமான விலங்காகிய கன்மமுண்டாம்படி நிற்கின்ற ஆணவமலமாகிய மூலமலம் விட்டுப் போம்படி, அநாதியே என்னைவிட்டு நீங்காமல்நின்றும், இப்பொழுது பக்குவப்பட்ட அவசரத்திலே இப்படித் திருமேனிகொண்டெழுந்தருளிவந்து

(என்னுடைய பிறவிநோய்க்கீடாக உபாயமாகவே அவனே சங்காரங்களி னாலே பேதித்து) அடிமைகொள்ளும்பொருட்டாக இப்படி அருளிச்செய்த தொழிந்து, வாக்குமனாதீதகோசரமாயுள்ள சிவன் ஆன்மாவாவனோ? என்க.

இப்படிப்பட்டஇவன் திருமேனிகொண்டு இரக்ஷிக்கவேண்டுமோ தானே இர க்ஷிக்கமாட்டானோவென்ற மாணவகனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
யோகங்க ளெங்கே யுணர்வெங்கே—பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு.

(இ-ள்.) எனக்கு அநாதியேதொடங்கி விடியாமல்நின்ற பேரந்தகார மான ஆணவமலம் பக்குவப்பட்டபடியறிந்து, பரமேச்சுரன் தன்னுடைய வருளாலேதிருமேனிகொண்டெழுந்தருளிவந்து, என்னுடைய மலமாயைய கன்மங்களையும்விடுத்து,என்னையும் என்னுடைய சுதந்திரகீனத்தையும் அறி வித்து, தன்னுடையவடிமையாகக்கொண்டு ரூபசொரூபங்களையும் எனக் கேற்பத் தெளிவித்து, தன்னுடைய பரமாநந்த போகத்திலே என்னைத் திருத்தியடைவித்து ஆண்டிலனாகில், அவனுடைய எல்லைப்படாதசொரூ பத்தைஅறியவல்லார் யார்? அதனை அநாதியேசொல்லப்பட்ட ஆகமங்க ளும்,அவற்றிலே வகுப்புண்ட ஆறுசமயங்களும் அந்தச்சமயங்களில் முடிந் தபொருளின் யோகங்களும், இவற்றை அறியத்தக்க விவேகஞானங்களும் என்செய்யவற்று? இதனை விசாரித்துச்சொல்லாய் என்க. (ரு)

ஆனால், சாத்திரத்தாற் பிரயோசனம் ஒன்றுமில்லையோவென்ற மாணவகனை நோக்கி அருளிச்செய்கின்றார்.

சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறுமே—யார்த்தகடற்
றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாயிதனைச் செப்பு.

(இ-ள்.) சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின்றன் வசன மாத்தி ரத்தே வாய்த்த வளம் வந்துறுமே - உபதேசமின்றியே சாத்திரமாத்தி ரமே ஓதினால், திருமேனிகொண்டெழுந்தருளிவந்த ஞானாசாரியன் கரு ணையாலே உபதேசிக்கத்தக்க சத்நானவார்த்தையிலே உண்டாகும் பெரிய பிரயோசனம் உண்டாகமாட்டாது. அதென்போலவெனில்?— ஆர்த்த கடற்றண்ணீர்குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ தெண்ணீர்மையாய் இதனைச்செப்பு - ஆரவாரத்தையுடைய கடலினீர் பெரிதென்று மிகக் குடித்தாலும் சற்றுந் தாகந்தணியாது. (அந்தக்கடலினீர்மேகத்தின் கைப் பட்டுவந்தபொழுதே குறைந்தசலத்திலே மிகுந்ததாகந் தணியாநிற்கும்; அதுபோலச் சாத்திரமுங் குருமுகத்தாலே பெற்றாலொழிந்து பிரயோ சனமாகாது.)—தெளிந்த நீர்மையினையுடையாய் இதிலே சந்தேகமுண்டா யிற்சொல் என்க. (சு)

ஆசாரியனும் எம்மைப்போல ஒருடம்பிலே நின்றதற்குத்தக்க கிருத்தியங்கள் செய்து நிற்கும்போதும்,ஆன்மாக்களுடைய மலங்களைப்போக்கிச் சுத்தஞானத்தைப்

பிரகாசிப்பிக்கவல்ல சாமர்த்தியத்தையுடையனோவென்று ஐயப்பட்ட மாணவகனை நோக்கி, இதனை இன்னமும் விளங்க அருளிச்செய்கின்றார்.

இன்று பசுவின் மலமன்றே யிவ்வுலகி
னின்ற மலமனைத்து நீக்குவதிங்—கென்று
முருவுடையா னன்றே யுருவழியப் பாயு
முருவருள வல்லா னுரை.

(இ-ள்.) இவ்வுலகின் நின்றமலம் அனைத்தும் இன்று பசுவின்மல மன்றேநீக்குவது இங்கு-இந்தவுலகத்தில் எல்லாமலங்களையும் இப்பொழுது பசுவின்மலத்தாலன்றோ போக்கப்பட்டது,—என்றால் உருஅழியப் பாயும் உரு அருள வல்லான் உருவுடையானன்றே உரை - ஆனால் அநாதியே கூடிப்போதுகின்ற தேகாதிகளானவை பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு இல்லையாய்விடும்படி, பொருந்தப்பட்ட சுத்தரூபமான ஞானத்தைப் பிரகாசிப்பிக்கவல்ல சாமர்த்தியன், திருமேனிகொண்டெழுந்தருளி வந்த ஆசாரியனன்றி வேறொருவர் உண்டோ சொல் என்க. (எ)

இப்படிப்பட்ட ஞானசாரியன் பிரசாதத்தைப் பெற்றவர்கள் பெருமை அருளிச்செய்கின்றார்.

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரோ
யண்டத்தி னப்புறத்த தென்னுதே—யண்டத்தி
னப்புறமு மிப்புறமு மாரறிவுஞ் சென்றறியு
மெப்புறமுங் கண்டவர்க ளின்று.

(இ-ள்.) கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவரோ - அநாதியே பூரணனாய்த் தோன்றாமல்நின்ற சிவன், காருண்ணியத்தினாலே நம்மைப் போலே எழுந்தருளிவந்த ஆசாரியமூர்த்தியையும், அவனாலே இதுநான் அன்றாயிருந்ததென்றுகண்ட தன்னுடைய உடம்பையும், இந்தவுடம்பை வேறென்றறிவிக்கவறிந்த தன்னையும் ஆகப் பதி - பாச-பசுவென்று சொல்லப்பட்ட இந்தமூன்றுபொருள்களையுங்கண்டு உட்கொண்டு,இதனாலே கன்மத்தை முடித்தவர்களே. (இதனாற் கன்மத்தை முடித்தபடி எங்ஙனமெனின், கன்மமானது சஞ்சிதமென்றும், பிராரத்தமென்றும்,ஆகாமியமென்றும் மூன்றுவகைப்பட் டிருக்கையால், இவற்றை ஆசாரியன்செய்யுந் தீக்கையிலே அத்துவசோதனை பண்ணுகையினாலே சஞ்சிதமான கன்மத்தையும்,தேகமுள்ளவளவும் பிராரத்தமுண்டாகையால் இந்தத்தேகத்துடனே கூடப்பிராரத்தமான கன்மத்தையும், அவனருளிச்செய்த வுபாயத்திலேதா நின்று ஆகாமியகன்மமேறாமலும் போக்கினபடியா மென்க.)—அண்டத்தின் அப்புறத்தது என்னுதே-அந்த ஞானசொரூபத்தை அண்டத்துக் குள்ளேயென்றும் புறம்பேயென்றுங்கொள்ளாமல்,—அண்டத்தின் அப்புறமும் இப்புறமும் ஆரறிவும் சென்று அறியும்- அந்தஞானம் தத்துவாதீதமாயிருக்கின்ற முறைமையும், அந்தத் தத்துவங்களுக்குத் தத்துவமாய் நிற்குமுறைமையும், ஆன்மாக்களுக்கான்மாவாய் நிற்குமுறைமையும்உணர்ந்து, தாமும் இந்தப்பரிபூரணமான ஞானமேயாய்நிற்கவே, அவர்களுக்கு ஞானத்தி னைக்கியத்தாலே இப்படியானேமென்கிற கருத்துமழிய

நிற்கும் அப்பொழுதே அவர்கள் சிவமாயே நிற்பர்கள்.—இன்று எப்புறமும் கண்டவர்கள் - அவர்களே இப்பொழுது எல்லாப் பொருள்களையும் உணர்ந்து பரிபூரணமாய்நிற்கின்ற கலியாணர்கள் என்க. (அ)

அந்தச் சிவசொரூபந்தான் எப்படி யிருக்குமென்ற மாணவகனை நோக்கி அருளிச்செய்கின்றார்.

அன்றுமுத லாரோனு மாளா யுடனாகிச்
சென்றவர்க்கு மின்னதெனச் சென்றதிலை—யின்றிதனை
யெவ்வா றிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகே
னவ்வா றிருந்த தது.

(இ-ள்.) அன்றுமுதல் ஆரோனும் ஆளாய் உடனாகிச் சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றது இலை - அநாதியேதொடங்கி ஈசுவரனுடைய ஏவலினாலே சிருஷ்டிதிதிகளுக்குக் கர்த்தாக்களாய்ப் பின்பு சங்காரகாலத்திலே ஈசுவரனிடத்திலே கூடத்தக்க பிரமவிஷ்ணுக்களும் அவனுடைய உண்மையானசுகரூபம் இப்படி யிருக்குமென்று இன்றளவுந் தெரிந்ததில்லை,—இதனை இன்றுஎவ்வாறு இருந்ததென்று எவ்வண்ணம்சொல்லுகேன் அது அவ்வாறு இருந்தது - அவர்களாலும் அறிதற்கரிய இந்தப்பொருளை இப்பொழுது எப்படியிருக்குமென்று எதனைஉவமித்துச்சொல்லுவேன். அந்தப்பொருள் யாவர் சிலர்கூடி அநுபவித்தவர்களுக்கு எப்படியிருந்ததோ அப்படியே யிருக்கும் என்க. (கூ)

இன்னமும் இதனைவிளங்க அருளிச்செய்கின்றார்.

ஒன்றுங் குறியே குறியாத லாலதனுக்
கொன்றுங் குறியொன்றி லாமையினா—லொன்றோ
டுவமிக்க லாவதுவுந் தானில்லை யொவ்வாத்
தவமிக்கா ரேயிதற்குச் சான்று.

(இ-ள்.) இந்தப்பொருளுக்கு அநாதியே தொடங்கித் தான்பிரிந்துநில்லாமல் அதுவதுவாய் நிற்கின்றதே அடையாளமாதலால், இதுவொழிந்து, அந்தப்பொருளுக்கு வேறோரடையாளமும் இல்லை, ஆகையாலே, ஒருபொருளுடன் உவமித்துச்சொல்வதற்கு இதற்கொப்பானது ஒருபொருளுமில்லை; ஆதலால், இப்பொருள் அநாதியே இரண்டறநிற்கு முறைமைபோல,இடையறாதே இரண்டறநிற்குஞ் சிவாநுபவத்தையுடைய சிவயோகிகளே இதற்குச்சாக்ஷி என்க. (௧0)

இப்படிப்பட்ட ஞாதாக்களுக்குப் பிராரத்தத்தாலே தேகமுள்ளவளவும் இந்திரியாதிகள்சீவியாவோ? இவர்கள் இடைவிடாமற் சிவனை அநுபவிக்கின்றபடி எப்படியென்ற மாணவகனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

ஆற்றா லலைகடற்கே பாய்ந்தநீ ரந்நீர்மை
மாற்றியவ் வாற்றான் மறித்தாற்போற்—றேற்றிப்
புலன்களெனப் போதம் புறம்பொழியு நந்த
மலங்களற மாற்றுவிக்கும் வந்து.

(இ-ள்.) ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை மாற்றி அவ்வாற்றான் மறித்தாற்போல் - ஆற்றாலேசென்று அலையையுடையகடலிலே

கூடியநன்னீர், கடல்நீருடனே ஒன்றாய்த் தன்றன்மைகெட்டுமீண்டும் அந்த ஆற்றாலே நெடுந்தூரம் எதிர்த்தாலும், முன்புபோல நன்னீராகாமல் அந்த வுப்பு நீரேயானாற்போல,—தோற்றிப் புலன்களெனப் போதம் புறம்பு ஒழியும் - ஞானத்தாலே சிவனைக்கூடிச் சிவமாயிருக்கிற சிவயோகிகளுக்குப் பிராரத்தத்தாலே அநுபூதிதிரிந்தாலும், கண்டவர்களுக்கு இந்திரியங்கள் சீவிப்பதுபோலத்தோன்றி, அவர்களுக்குச் சுகரூபத்தி னைக்கியத்தாலே பசுகரணங்கூடாமல் சிவகரணமே பிரகாசியாநிற்கும்.—வந்து நந்தம் மலங்கள்அற மாற்றுவிக்கும் - இவ்வளவேயன்றியும், தரிசனமாத்திரத்தாலே அவர்கள் கருணையானதுபோந்து நம்முடைய மலங்கள் நில்லாதபடியும் போக்கி நம்மையும் இரக்ஷியாநிற்கும் என்க. (கக)

இதற்குப் பிரமாணமுண்டோவென்னில்? சிவகரணம்பிரகாசித்த சிவஞானிகளிடத்திலே விளைந்த விசேஷங்களை ஒருசெய்யுளிலே பல பிரமாணங்களால் அருளிச்செய்கின்றார்.

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனையன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்.

(இ-ள்.) சிவனுடையவருளாலே சிவனைப்பெற்ற நாயன்மார் பாலை நிலம் நெய்தல் நிலமாகப்பாடியதும், பாம்புகடித்துமரித்தவன் பிராணன் பெற்றெழுந்திருக்கும்படிபாடியதும், பக்குவத்திலே காலனையேவி முதலைபிடித்துமரித்த புதல்வனைக் காலத்தைப்போக்கி அழைப்பித்ததுவும் மாணவகனே? அவர்களுக்கு நம்மைப்போலப் பசுகரணமாகச் சீவியாமல் சிவகரணமாகவே இருத்தலால் காண் என்க. (கஉ)

இந்தவர்த்தம் பெற்றவர்களெல்லார்க்கும் இப்படி விசேஷஞ்செய்யுமோவென்ற மாணவகனைநோக்கி, மிகுத்த சத்திநிபாதமுடையவர்க்கே இவையுண்டாமென்று அருளிச்செய்கின்றார்.

தூங்கினரைத் தூய சயனத்தே விட்டதற்பின்
றூங்களே சட்ட வுறங்குவர்க—ளாங்கதுபோ
லைய னருட்கடைக்க ணுண்டதற்பி னப்பொருளாய்ப்
பைய விளையுமெனப் பார்.

(இ-ள்.) சுகதுக்கவேதனைகளிலே மிகவுமொத்துண்டாருக்கு அறிகருவிகள் நீங்கி மயக்கம்வந்தடுத்தகாலத்தில், அளவிலன்புடையவர்கள் நன்றாகப்படுத்தசயனத்திலே, அவர்கள் கூட்டியபின், தம்மையும் பிரபஞ்சத்தையுமறக்கத்தக்க பேருறக்கம் அவர்கள் கூட்டவேண்டுவதின்றியே தம்மிடத்திலே அதுதானே உண்டாகாநிற்கும். அந்தமுறைமைபோலச், சரியைகிரியாயோகங்களின் முற்றுதலாலே மிகுத்த சத்திநிபாதமுண்டாயவர்கள் அந்த மூன்றுபாதங்களையு நிகழ்த்திப் பிரபஞ்சத்தையும்விட்டு ஞானத்திலே அபேக்ஷையுடையராய், எம்மை இரக்ஷிக்கைக்கு ஞானசாரியனை எங்கே பெறுவேமென்று மிக்க தேட்டத்துடனே சென்றடைய, அவர்மீது ஆசாரியனும் மிகுந்த அன்பைவைத்து, ஞானதீக்ஷாக்கிரமங்களிலே மலமாயைகன்மங்களைப்போக்கி, ஆன்மாவினுண்மையை உணர்த்தி, இவ

ருடைய சுதந்திரகுணத்தையுங்காட்டி,ஞானத்தையுந்தரிசிப்பித்து, இதிலே ஒருதன்மையாக்கியபின், அந்தஞானத்தி னைக்கியத்தாலே தம்மையும் பிரபஞ்சத்தையு மறப்பிப்பதான அந்தச்சிவசொரூபந்தானே பிரகாசித்து ஒரு நீர்மையராகவே அவருக்கு எல்லாவிசேஷங்களும் விளையாநிற்கும்.—(ஆதலால் மாணவகனே?) நீயும் இப்படி இந்தத்திருஷ்டியிலே நிற்பாயாக என்க.

இனி இந்த அவசரத்திலே இவன் நிலைநிற்கும்படியை இன்னமும்விளங்க அருளிச்செய்கின்றார்.

உள்ள முதலனைத்து மொன்ற வுருகவரி
லுள்ள முருகவந் துன்னுடனுந்—தெள்ளி
யுணருமவர் தாங்க ளுளராக வென்றும்
புணரவர நில்லா பொருள்.

(இ-ள்.) உள்ள முதல் அனைத்தும் ஒன்ற உருகவரில் உள்ளம் உருக வந்து உன்னுடனும் - (மாணவகனே?) ஆன்மாவுக்குப் பிரபஞ்சமேதுவாயுள்ள தத்துவங்களும் மலங்களுமாயுள்ளவை கடாக்ஷத்தாலே ஒருவழிப்பட இல்லையாய்விடும்படி ஞானம்பிரகாசிக்கில், அந்தஞானத்தி னைக்கியத்தாலே இப்படிப்பெற்றோமென்கிற உன்னுடைய கருத்தானது அழியும்படி அப்பொழுதே சிவம் பிரகாசித்து, உன்னை ஒரு நீர்மையாக்கிக் கொள்ளாநிற்கும்.—தெள்ளி உணருமவர் தாங்கள் உளராக என்றும் புணரவர நில்லா பொருள் - இப்படியொழிந்து, சிவனைத் தெளிந்தறிய விசாரிக்குமவர்கள், தங்கள்பாவனை குலையாதுநிற்கச் சிறிதே அறிந்துகூட விசாரிக்கில், அவர்களுக்கு எப்பொழுதும் பொருந்துகைக்கு முன்னில்லாது அந்தப்பொருள் என்க. (கச)

இந்தப் பதினொன்குதிருவெண்பாக்களும் உபதேசத்தின் முறைமையாகையால், இதற்குப்பிரமாணமாகத் திவ்வியாகமங்களைத் தம்பிரானார்அருளிச்செய்தஅடைவே ஆன்மாக்களுக்கு அநாதியாகவருகிற ஜநநமரணங்களுஞ் சுகதுக்கங்களும் ஞானத்தாலல்லது போகாதாகையால், இந்தஞானமுண்டாகும்பொருட்டுப் பக்குவங்களுக்கிடாக ஆசாரியர் கடாக்ஷத்தாலே சரியைகிரியாயோகங்களைச்செய்து, இவற்றின் முற்றுதலாலே ஞானசாரியனைவழிபட்டு, ஞானோபதேசத்தைப்பெற்று, ஞானத்தினைக்கியத்தாலே சிவனைப்பெற்று முத்தராம்படியும், இந்த ஞானங்கூடாமல் முற்பட்டவழிகளிலே நின்றவர்கள் பதமுத்திபெறும்படியுமாம். இவற்றைச் சுருங்கக்கொண்டு சரியையுங் கிரியையும் ஒன்றாக்கிச் சிவதன்மமென்றும், யோகத்தைச் சிவயோகமென்றும்,ஞானத்தைச் சிவஞானமென்றும்,நான்குபாதங்களை மூன்றாக்கி இவற்றிலே சாதிக்கும் உபாயங்களையும் பேறுகளையும் மேல் அருளிச்செய்கின்றார்.

நல்லசிவ தன்மத்தா னல்லசிவ யோகத்தா
னல்லசிவ ஞானத்தா னனழிய—வல்லதனு
லானோனு மன்புசெயி னங்கே தலைப்படுங்கா
ணானோனுங் காணு வரன்.

(இ-ள்.) சிவனைக் கர்த்தாவாகக் கொள்ளாத சமயங்களிலே நின்று சாதித்துக்கெடாத குற்றமற்ற சிவனைநோக்கின சைவசித்தாந்தத்திலே, சிவதன்மத்தாலேயாதல், சிவயோகத்தாலேயாதல், சிவஞானத்தாலேயாதல், சிவனைக்கூடும்படி சாதிக்குமவர்,தங்களாலே செய்யப்பட்டதாகக்

கருதாதே, கர்த்தாவின் ஏவலென்றேயறிந்து, தம்முடைய சுதந்திரத்தை விட்டு, அவன்கைப்பட்டு வர வல்லார் ஆவர்; அவர்களே அந்தக்கர்த்தாவின்மேலே மிக்கவன்பைவைக்கில், அவரிடங்களிலேசென்று தலைப்படாநிற்பன்; மாணவகனே? பிரம விஷ்ணுக்கள் இன்றளவுங் காணப்படாத சிவன் என்க. (௧௫)

இத்திருவெண்பா மூன்றுவகைக்குங்காட்டும் இந்த மூன்றுவகையிலு முற்பட்ட சிவதன்மத்தையறிந்து வழிபடுவார் வழிபடும்படியேநின்ற மாணவகனை நோக்கி, சிவதன்மத்தை மெல்வினையென்றும், வல்வினையென்றும் இரண்டாக்கி இந்தமுறைமையை அருளிச்செய்கின்றார்.

மெல்வினையே யென்ன வியனுலகி லாற்றரிய
வல்வினையே யென்ன வருமிரண்டுஞ்—சொல்லிற்
சிவதன்ம மாமவற்றிற் சென்றதிலே செல்வாய்
பவகன்ம நீங்கும் படி.

(இ-ள்.) மெல்வினையென்றும் உலகத்தாராலே செய்தற்கரிய வல்வினையென்றுஞ் சிவனை வழிபடத்தக்க இந்த விரண்டுவகையுஞ் சொல்லுமிடத்து, சிவதன்மமென்றே சொல்லப்படுமாதலால், இவையிரண்டினுள், உன்னுடைய கருத்துக்குப் பொருந்தினதொன்றை வேறொருபலன்களையுங்கருதாதே செய்வாயாக.—மாணவகனே? உன்னுடைய பிறப்புக்கு ஏதுவாகிய வினைவிட்டு நீங்கும்படி. பலன்களைக்கருதிப் பதங்களையடையாமல், சாயுச்சியமே பெறுகைப்பொருட்டாக உண்மையான சிவஞானத்தைப் பெறவேண்டும் என்க. (௧௬)

இந்தஇரண்டுவகையில்முற்பட்டமெல்வினையின்முறைமையைஅருளிச்செய்கின்றார்.

ஆதியை யர்ச்சித்தற் கங்கமு மங்கங்கே
நீதி நிறம்பலவுஞ் செய்வனவும்—வேதியனே
நல்வினையா மென்றே நமக்குமெளி தானவற்றை
மெல்வினையே யென்றதுநாம் வேறு.

(இ-ள்.) வேதியனே ஆகமங்களில் அருளிச்செய்தபடியே, சிவனை உள்ளபடி அர்ச்சித்து வழிபடத்தக்க கிரியாவிதிக்குப் பக்குவனும்படி, இவனுடைய அவயவங்களினாலே அந்தந்த அவசரங்களிலே செய்யத்தக்க திருவலகு, திருமெழுக்கு, திருவிளக்கு, திருநந்தவனம், திருப்பள்ளித்தாமம், திருமஞ்சனம், திருமாலை, கூத்து, பாட்டு, முதலாயுள்ளதொழில்களும், திருவேடத்தாரை வழிபடுகையும், சிவபத்தருக்கு வேண்டுவன செய்கையும், திருமந்திரம் ஜபிக்கையுமாக இப்படியே செய்யப்பட்ட குற்றமற்ற வழிபாடான சரியையும், இந்தச்சரியையின் முதிர்ச்சியாலே திருவுள்ளத்தடைத்துச் சிவனை அர்ச்சித்து வழிபடுகிற கிரியாவிதியும், நல்ல செயற்பாடென்று நமக்கெளிதாகச் செய்யலாகையாலே, இவை இரண்டையும் மெல்வினையென்று திவ்வியாகமங்களிலே சொல்லப்பட்ட படியாலே, நாமும் இதனை உனக்குச்சொன்னோம் என்க.

சரியைகிரியைகளிலே நின்று வழிபடுகின்றவளவில், கொலை களவு கள் காமம் பொய்யென்கிற ஐந்தையும் விட்டு நிற்கையாலும், மனவாக்குக் காயங்களால் நினைப்பன, சொல்வன, செய்வனவெல்லாந் தெய்வகிருத்தியத்தினாலே யாகை யாலும், அசுத்தத்திலேநின்றும் நீங்கிச் சுத்தனாய்நிற்கையாலும், சர்வான்மாக்களை யுந் தன்னைப்போலே காண்கையாலும், வேதாகமங்களின் முறைமைகளிலே வழு வாமல் நிற்கையாலும் ஆசாரியனாலே வேதியனேயென்று அழைக்கப்பட்டது. ()

இந்தச் சரியையினையுங் கிரியையினையும் மெல்வினையாக்கி இந்த நிலைகளின் முதிர்ச்சியாலே பின்புண்டான ஜநநத்திலே சிவனளவிலே மிகுந்த சிநேகமாகி இவ னுக்கு விளைந்தவல்வினை யிருக்குமுறையை அருளிச்செய்கின்றார்.

வரங்கள் தருஞ்செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினா லன்றுகறி யாக்க—விரங்காதே
கொல்வினையே செய்யுங் கொடுவினையே யானவற்றை
வல்வினையே யென்றதுநா மற்று.

(இ-ள்.) நல்லவரங்களைத்தருகின்ற வயிரவவேடங்கொண்டெழுந்தருளி யகடவுளுக்குக்கறியமுதுசெய்யும்பொருட்டுமுன்னேஇரக்கமின்றித்தமது திருக்கரங்களாலே பிள்ளையைக் கொலைசெய்த சிறுத்தொண்ட நாயனாரது கொடுவினைபோன்றவற்றை நாம் வல்வினை யென்று கூறினோம் என்க. ()

பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டுஞ்—சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
சண்டீசர் தன்செயலாற் றான்.

(இ-ள்.) பாவம்பழிகளைநோக்காமல், பிதாவும் பிராமணனுமாகி யோனது பாதங்களை (த்திருமஞ்சனப் பாற்குடத்தை எற்றினமைற்றி)ச் சேதித்த சண்டேசுரநாயனாரது வல்வினையைநோக்கி, சிவபிரான் தாமாந் தன்மையை அருளினார் இதனைக்காண் என்க. (௧௯)

செய்யி னுகுத்த திருப்படி மாற்றதனை
யைய விதுவமுது செய்கென்று—வையவிருந்
தூட்டி யறுத்தவர்க்கே யூட்டி யறுத்தவா
நாட்டியுரை செய்வதென்னோ நாம்.

(இ-ள்.) ஐயரே! கழனியின்கமரிலே சிந்திய செந்நெலரிசி செங்கீரை மாவடுவென்னுங் கட்டளைப்பொருளாகிய இதனைத் திருவமுதுசெய்தரு ளுகவென்று மெல்லிருந்து கண்டத்தோடு தண்டினை அரிந்து, அச்சிவ பிரானுக்கு நிவேதித்துப் பிறவிவேரரிதலாகிய வல்வினைசெய்த அரிவாட் டாயநாயனாரை இவ்வியல்பினரென நாட்டிநாம்புகழ்வது முடியுமோ என்க.

இந்தமூன்று திருவெண்பாவாலும், சாத்திரங்களிற் சொன்ன வழியன்றியே அளவற்றவன்பின் பெருமையாலே, உலகத்தியற்கைவிட்டு யாவராலுஞ் செய்ய வொண்ணாத செயல்களைச் செய்தமையாலும், இவற்றை ஒரு பிரமாணநூல்களா லுஞ் சொல்ல அரிதாகையாலும்,அவைவல்வினைகளென்று சொல்லப்பட்டன.(௨0)

இப்படிக் கொடிதான வல்வினைகளைச் செய்யுமவர்களும் முத்தியைப் பெறுவார்களோ வென்று ஐயப்பட்ட மாணவகனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

செய்யுஞ் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டா—ரையா
வுழவுந் தநுசு மொருமுகமே யானு
லிழவுண்டோ சொல்லா யிது.

(இ-ள்.) செய்யும் செயலே செயலாகச் சென்று தமைப் பையக் கொடுத்தார் பரங்கெட்டார் - இப்படிக் கொடிதான வல்வினைகளைச் செய்யும்போதே இந்தக் கொடியசெய்திகளால் அகிதம்வாராமற் சிவனைநோக்கியே நின்று சிவனளவில்வைத்த அன்பின்பெருமையாலே இந்தச்செயல்களையு முறைமையான செயலென்றேகொண்டு தம்மையு மெள்ளச் சிவன் கையிலேகொடுத்துப் பரங்கெட்டு விடுகையாலே, அவர்கள் கர்த்தாவின் கைப்பட்டு முத்தியேபெறுநிற்பர்கள்,—ஐயா உழவுந்தநுசும் ஒரு முகமேயானல் இழவுண்டோ இதுசொல்லாய்-ஐயனே! ஒருவனுக்குஉழவோரிடத்திலுந் தநுசோரிடத்திலுமானல் ஒன்றுக்கொன்று உதவிகூடாது, அவையிரண்டும் ஓரிடத்திலேயானல் இவன் சூரனய்விடுகை சந்தேகமில்லை; அதுபோலச் செய்கின்றசெயல்களில் அகிதம் வாராமற் சிவனைநோக்கியே செய்தும் இந்தச் செயல்களுஞ் சிவன்செயலென்றேகொண்டுதம்மையும் அவன் கையிலேகொடுத்துப் பரங்கெட்டு விடுகையாலே இவன் பெறுகின்றமுத்திக்கும் இழவுண்டாகுமோ இதனை விசாரித்துச்சொல்லாய் என்க. (உக)

இனிச் சரியை கிரியைகளிலேநின்று சாதித்தவர்க்கும் பிற்பட்ட ஜநநத்தில் இப்படிமுதிர்ந்த வல்வினைகூடாமல் யோகத்துக்கு அதிகாரியானவனுக்கு யோகம் வெகுவிதமாகையினலே இதனைச் சுருங்கக்கொண்டு ஆதாரயோகமென்றும் நிராதாரயோகமென்றும் உத்தமமானயோகங்களை எடுத்தருளிச்செய்கின்றார்.

ஆதார யோக நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே—யாதாரத்
தாக்கும் பொருளாலே யாக்கும் பொருளாமொன்
றாக்காப் பொருளேயொன் றாம்.

(இ-ள்.) ஆதாரயோகம் நிராதாரயோகமென மீதானத்து எய்தும் விதி இரண்டே - ஆதாரயோகமென்றும் நிராதாரயோகமென்றும் எல்லாவற்றிற்கு மேலானவிடமாகிய திருவடியிலே பக்குவப்பட்ட ஆன்மாக்கள் பொருந்தும்படி சாதித்துக் கூட்டுகைக்கு வேதாகமங்களிலே விதிக்கப்பட்டன இரண்டு பிரகாரமாயிருக்கும்.—ஆதாரத்து ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருள் ஒன்றாம் - ஆதாரங்களிலே ஒவ்வொரு திவ்யரூபங்களை ஆசிரியனிடத்திலேபெற்று அந்தத்தானங்களிலே தியானித்திருக்கத்தக்க ஆதாரயோகம் ஒன்றாம்.—ஆக்காப்பொருள் ஒன்றேயாம் - இந்த ஆதாரயோகம் கைவந்தவாறே ஆதாரங்களில் பார்த்திருக்கும்படி கற்பித்துக் கொண்டு நிற்பதுபோலாது சைதன்னியசொரூபத்தைப்பாராதேபார்த்து நிற்கின்ற நிராதாரயோகம் ஒன்றாம் என்க. (உஉ)

இந்தத் திருவெண்பா ஆதாரயோகத்துக்கும் நிராதாரயோகத்துக்கும் காட்டாகையால் இவற்றில் முன்னே சொல்லப்பட்ட ஆதாரயோகத்தை மேல் விளங்க அருளிச்செய்கின்றார்.

ஆக்கி யொருபொருளை யாதாரத் தப்பொருளை
நோக்கி யணுவி லணுநெகிழப்—பார்க்கி
லிவனுகை தானொழிந்திட் டேகமா மேகத்
தவனுகை யாதார மாம்.

(இ-ள்.) ஆதாரத்து ஒருபொருளைஆக்கி - தேகத்திலே கற்பிக்கப்பட்ட ஆறுதாரங்களிலே ஆசாரியன் அருளிச்செய்ததொரு திவ்வியரூபத்தை இதற்குப்பொருந்தினதோர் ஆதாரத்திலே தன்னுடைய மனமானது விஷயங்களிற்பற்றுமல் இதிலே பற்றும்படி கற்பித்துக்கொண்டு,—அப்பொருளைநோக்கி - அப்படிக் கற்பித்துக்கொண்ட உருவங்கைவரும்படி நெடுநாள் தியானித்து,—அணுவில் அணு நெகிழப் பார்க்கில் இவனுகைதான் ஒழிந்திட்டு ஏகமாம் - அந்தத்தியானங் கைவந்தவாறே அந்தவாதாரங்களை விட்டுத் தன்னிலே அந்தப்பொருளைத் தியானிக்கின் அந்தத்தியானத்தின் முறுகுதலாலே தியானிக்கின்றேமென்கிற நினைவுகெட்டு அந்தப்பொருளொன்றுமேயாம்,—ஏகத்தவனுகை ஆதாரமாம் - இப்படித் தியானிப்பானுந் தியானிக்கப்படும்பொருளுமன்றியே தன்னைமறந்தந்தத் திவ்வியரூபந் தானுக நிற்பதுதானே ஆதாரயோகமாம் என்க. (உரு)

இனிஇந்தஆதாரயோகத்தைநுண்ணிதாகச்சாதிக்குமுறைமைஅருளிச்செய்கின்றார்.

கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயிற்
கொண்டவனு மப்பரிசே கூறுபடுங்—கொண்ட
விருபொருளு மன்றியே யின்னதிது வென்று
வொருபொருளே யாயிருக்கு முற்று.

(இ-ள்.) கொண்டது ஒருபொருளைக் கோடிபடக்கூறுசெயிற் கொண்டவனும் அப்பரிசேகூறுபடும் - தான்கைவரத்தியானித்ததொருபொருளை நுண்ணிதாக நுணுக்கிப் பரமாணுவினும் நுண்ணிதாகத் தியானிக்கின் இப்படித் தியானிக்கின்றவனுந் தியானித்த பொருள்போலப் பரமாணுவினு நுண்ணிதாக நிற்பன்.—கொண்ட இருபொருளும் அன்றியே இன்னது இது என்று ஒருபொருளேயாய் உற்று இருக்கும் - இப்படி நிற்கவே தியானிப்பானுந் தியானிக்கப்படுபொருளும் அன்றியே ஒருகற்பனையற அப்பொழுதே அந்த ஒப்பில்லாதபொருள் தானேயாயிருக்கும் என்க. (உச)

இனி இந்தநுண்ணிதான தியானமுங்களாய ஆதாரயோகத்துக்குமுடிந்தயோகமுமாய் உபாயயோகமுமாயிருக்கின்ற மந்திரயோகத்தை அருளிச்செய்கின்றார்.

அஞ்செழுத்து மேயம்மை யப்பர்தமைக் காட்டுதலா
லஞ்செழுத்தை யாறுகப் பெற்றறிந்—தஞ்செழுத்தை
யோதப்புக் குள்ள மதியுங் கெடிஅமைகோன்
கேதமற வந்தளிக்குங் கேள்.

(இ-ள்.) அஞ்செழுத்துமே அம்மை அப்பர்தமைக் காட்டுதலால் - அகாரம் உகாரம் மகாரம் விந்து நாதம் என்கின்ற பஞ்சாக்கரமான பிரண

வத்துக்குப் பிரமா விஷ்ணு உருத்திரர் மகேசுரர் சதாசிவர் இவர்கள் ஐவரும் அதிதேவதைகளுமாய், மந்திரமூர்த்திகளுமாய், ஓங்காரமாயே நின்று நடத்துகின்ற இந்தவைந்தெழுத்தே சத்தியையுடைய சிவன் திருமேனி கொண்டு நடத்துகின்ற முறைமையைக்காட்டுதலால்,—அஞ்செழுத்தை ஆறுகப்பெற்றுஅறிந்து-இந்தவைந்தெழுத்தும்மூலாதாரத்திலேஅகாரமும் பிரமாவும், நாபிகமலத்திலே உகாரமும் விஷ்ணுவும், இருதயகமலத்திலே மகாரமும் உருத்திரனும், கண்டத்திலே விந்துவும் மகேசுவரனும், புருவமத்தியிலே நாதமும் சதாசிவமும் இப்படிச் சுழுமுனைவழியாக நிற்கின்ற முறைமையைக் குருபதேசத்தாலேபெற்று,இந்த ஐந்தெழுத்தையும் மூலாதாரத்திலே, பிரமரந்திரத்திலேசெல்ல உச்சரித்தால்,இந்தப் பிரணவசொரூபமுங்கரைந்து விக்கிரகங்களும் ஒருநீர்மையாய் உனக்கு நாதரூபமாய் நாதாந்தத்திலே அருளைப்பெறுவையென்று ஆசாரியன் அருளிச்செய்ய அறிந்து,—அஞ்செழுத்தை ஓதப்புக்கு உள்ளமதியும் கெடில் - இந்த ஓங்காரமான ஐந்தெழுத்தும் உச்சாரணபேதத்திலே, நாற்பத்தொன்பதாமெழுத்தும் பதினுலாமெழுத்தும் ஆறுமெழுத்தும்இவைகூடினவிடத்திலே விந்தும் நாதமுமாக இந்தமுறைமையிலேஐந்தெழுத்தாமென்றும் வேதாகமங்களிலேவிதிக்கையால்,இந்தவைந்தெழுத்தையும் உன் தத்துவமானவுச்சரிப்புக்கு விந்துநாதமுடிந்தவிடத்திலே கிஞ்சிஞ்ஞமான ஆன்மபோதமுங் கெடில்,—உமைகோன் கேதம் அற வந்து அளிக்கும் கேள்-அப்பொழுதே சத்திக்குக்கர்த்தாவாகிய சிவன் குற்றமறத்தோன்றி உண்மையானசொரூபத்திலேகூடி இரக்ஷிப்பன். (மாணுக்கனே!) கேட்பாயாக என்க.

இந்த ஆதாரயோகத்தைத் தூலசூக்குமபரமென மூன்றுபடியாகக் கணாத்தவிது, பின்பு நிராதாரயோகத்துக்குப் பிராப்தனும்படியென அறிக. (உரு)

இந்த ஆதாரயோகங் கைவரச் சாதித்தவர்களுக்கு மேல் நிராதாரயோகமிருக்கும்படி அருளிச்செய்கின்றுர்.

ஆக்கப் படாத பொருளா யனைத்தினிலுந்
தாக்கித்தா னென்றோடுந் தாக்காதே—நீக்கியுட
னிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
நிற்கை நிராதார மாம்.

(இ-ள்.) ஆக்கப்படாத பொருளாய் - ஆன்மபோதத்தாற் கற்பிக்கக்கூடாத அர்த்தமாய்,—அனைத்தினிலும் தாக்கித் தான் ஒன்றோடுந் தாக்காதே - எல்லாப்பொருள்களினுந் தான்கூடிநிற்கும்போதே அவை ஒன்றோடுந் தான் தோயாமல்,—நீக்கி உடனிற்கும் பொருளுடனே - ஆன்மாவுக்கு முத்திக்குவிரோதமாய் நீக்கத்தக்க பொருள்களையுந் தானே அறிந்து நீக்கி, அநாதியே இப்படி நீங்கப்படாத அந்த ஞானசொரூபத்துடனே,—நிற்கும் பொருளுடனாய் நிற்கை நிராதாரமாம் - தன்னுடையபோதம் ஒழிந்து இதனைக்கூடித்தானும் அந்த ஞானசொரூபமாய்ப் பற்றறநிற்பது நிராதாரயோகமாம் என்க. (உசு)

இந்த ஞானத்திலே இப்படி இரண்டறநிற்கில் சிவனை உள்ளபடியே காணலா மென்று அருளிச்செய்கின்றார்.

காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே
காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலைக்—காண்கின்றார்
காண்பானுங் காணப் படும்பொருளு மன்றியே
காண்கையினாற் கண்டனரோ காண்.

(இ-ள்.) காண்கின்றது ஓர்பொருளைக் காண்கின்றயோகிகளே கண்ணுதலைக் காட்சி அறக் காண்கின்றார் - எல்லாவற்றையும் அறிந்து அறிவித்துநிற்கிறதாகிய ஞானத்தைஅதுகண்ணாகக்காண்கின்ற சிவயோகிகளே சிவனை இரண்டறக்காண்கின்ற கலியாணர்கள்,—காண்கின்றார் காண்பானும் காணப்படும் பொருளும் அன்றியே காண்கையினால்கண்டனரோகாண்- மாணவகனே! இப்படிக்காண்கின்றவர்கள் தன்னாலே காணப்படாததாகவும் காணப்பட்டபொருள் தனக்கு வேறாகவுங்காணாமல் அந்த ஞானமாகவேநின்று காண்கையாலே, இந்த ஞானமே சொரூபமாகவுடைய சிவனை அப்பொழுதேபெற்று வேறற்றிருப்பார்கள் இதனைக்காண்பாயாக என்க.

இனி இந்த நிராதாரயோகம் நிலைபெறும்படி, இதற்குபாயமான மௌன யோகத்தை அருளிச்செய்கின்றார்.

பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான்—பேசாதே
யெண்ணொன்றும் வண்ண மிருக்கின்ற யோகிகள்பா
லுண்ணின்றும் போகா னுளன்.

(இ-ள்.) பேசாமை பெற்று அதனிற் பேசாமை கண்டனைப் பேசாமைசெய்யும் பெரும்பெருமான்-வாக்கு மனங் காயங்கள் மூன்றினுள் மட்டுப்படாதது வாக்காலேயாலும், மாற்றமுண்டேல் வஞ்சமுண்டென்கையாலும்,பேசாமையாகின்றபரமோபாயத்தைஆசாரியன் பக்கலிலேபெற்று, அந்தப்பேசாமை தன்னுடன் வாசனையிற்போகாமல், வாக்குமனங் கிட்டாத சிவனைத் தங்களிடத்திலே ஞானதிருஷ்டியாலேகண்டு கூடி, செயலற்றிருக்கின்ற சிவயோகிகளை,பின்பு ஒரு சரீரங்கூடி வாக்குண்டாகாதபடி ஜநநத்தை வேரறுத்து விடாநிற்பன் சிவன்,—பேசாதே எண்ணொன்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால் உண்ணின்றும் போகான் உளன் - இப்படி உரையிறந்து சிவனுடனே இரண்டற்றிருக்கின்ற சிவயோகிகளிடத்துப் பரமேசுவரன் எவ்விடத்தினும் வியாத்தமாயினும், அவ்விடங்களிலே மறைந்தேநின்று, இவர்களிடத்தேபிரகாசித்து இவர்க்கே உடனாயிருப்பன் என்க.

பேசாமையாகின்ற பரமோபாயத்தை ஆசாரியன் பக்கலிலே பெற்றபடி எங்ஙனமெனின், தேகமுதலாயுள்ளவை உனக்கு வேறென்றும், இவற்றுடன் கூடினால் பிறப்புக்குக்காரணமான கன்மமுண்டாமென்றும், உனக்கு ஞானமேவடிவென்றும், தீக்கையிலே நாம் இசைவிக்க நீயும் இசைந்தாயென்றும், அல்லதூஉம் சரீரம் அர்த்தம் பிராணன் இவைதத்தம் பண்ணினையே யென்றும், நமக்குத் தத்தம் பண்ணின பொருளை நீ விரும்பக்கடவை யல்லையே யென்றும், ஆசாரியன் அருளிச்செய்ய, இவனும் நமக்கில்லாதபொருள்களை விரும்பக்கடவோ மல்லோமென்று அறுதியிட்டதேயாம். (உஅ)

நிராதாரயோகத்துக்குத் தூலசூக்கும பரமாக மூன்று திருவெண்பா அருளிச்செய்து, மேல் இந்தப்பரமாகிய சிவனை ஆன்மபோதம் இறந்தாலொழிந்து கூடவொண்ணாதென்று முறைமையைப் பல செய்யுட்களாலும் விளங்க அருளிச்செய்கின்றார்.

ஓட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்
தேட்டற்று நின்ற விடஞ்சிவமா—நாட்டுற்று
நாடும் பொருளனைத்து நானா விதமாகத்
தேடுமிட மன்று சிவம்.

(இ-ள்.) ஓட்டற்று நின்ற உணர்வு முட்டிப் பதி தேட்டற்று நின்ற இடம் சிவமாம் - ஒரு அசைவின்றியே நின்ற பரமஞானத்தை அது கண்ணாகக்கண்டுகூடின ஆன்மா, அந்தஞானமேயாய்த் தானும் அசைவின்றியே நிற்கில், அந்த ஞானத்தில் நிலையாகத்தன்னுடைய ஆன்மபோதம் ஒழிந்து அந்த ஞானமாயே நின்ற இடந்தன்னிலே, சிவமே பிரகாசித்து அவனையும் ஒரு நீர்மையாக்கிக் கொள்ளாநிற்கும்,—நாட்டுற்று நாடும் பொருள் நானா விதமாகத் தேடும் இடம் அனைத்தும் சிவம் அன்று - இப்படி யொழிந்து, சுட்டியறியத்தக்க ஆன்மபோதத்தாலே வெகுவிதமாக ஆராய்ந்தறியத்தக்க இடம், பிரபஞ்ச வியாபாரமாகையால், அவ்விடஞ் சிவரூபமாகாது என்க.

இன்னமும் இதனை விளங்கவறியும் உபாயம் அருளிச்செய்கின்றார்.

பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற—பற்றதனைப்
பற்றுவிடி லந்நிலையே தானே பரமாகு
மற்றுமிது சொன்னேன் மதி.

(இ-ள்.) ஆன்மாவுக்குக் கன்மபலத்தை விளைவிக்கின்றவைகளாகிய தனுகரண புவனபோகங்களினுள்ளே, பற்றிக்கொண்டு நிற்கின்ற இச்சா ஞானக்கிரியைகளை ஒழிப்பதான, சிவ போகத்தை விளைக்கத்தக்க சிவ ஞானத்தை அது கண்ணாகக்கண்டு கூடி, அதனைக்கூடினோமென்று பிரியப்பட்டிருந்தறிகின்ற கருத்தையுங் கைவிடின், அந்த நிலைதன்னிலே அந்த ஞானத்துக்கு மேலான சிவந்தானே பிரகாசியாநிற்கும். அறுதியாகச் சொன்னேன் இதனைப் புத்திபண்ணிக்கொள்வாய் என்க. (௩௦)

இன்னமும் இந்தநிலைக்குக் குற்றம்வாராதபடி வேறுமோர் உபாயம் அருளிச்செய்கின்றார்.

உணராதே யாது முறங்காதே யுன்னிப்
புணராதே நீபொதுவே நிற்கி—லுணர்வரிய
காலங்கள் செல்லாத காலத் துடனிருத்தி
காலங்கண் மூன்றினையுங் கண்டு.

(இ-ள்.) நீயாதும் உணராதே உறங்காதே உன்னிப்புணராதே பொதுவே நிற்கில் - நீ பொருளல்லவென்று அறிந்து நீங்கின தேகாதிப்பிரபஞ்சங்களிலே, வாசனைமிகுதியினாலே கூடிநின்று விகற்பியாதை! இந்த விகற்பங்கள் நீங்கின அவசரங்களிலுண்டான மயக்கங்களில் அழுந்தாதை! சுகசொரூபத்தை உன் போதத்தால் அறிந்து கூட விசாரியாதை! இந்தக் குற்றங்கள் நீங்கும்படி உனக்குக் கண்ணுமாய் உனக்கு நடுவேநிற்கின்ற ஞானத்திற்கூடி அந்த ஞானந்தானாகவே நிற்கின்,—உணர்வரிய காலங்கள்

செல்லாத காலத்துடன் காலங்கள் மூன்றினையும் கண்டு இருந்தி - யாவராலுங் குறித்தற்கரிய செல்காலம் வருங்காலம்நிகழ்காலமென்றுசொல்லப்பட்ட மூன்றுகாலங்களினும் படாமல் இந்தக்காலங்களாலே விசுவத்தை நடாத்திக் காலசொரூபமாயிருக்கின்ற சிவத்துடனே, நீயும் அக்காலங்கள் மூன்றையும் வேறாகக்கண்டு, அச் சிவமேயாய் அழிவின்றியே இருப்பாய் என்க. (௩௧)

இந்த அர்த்தத்தினுண்மையும் இந்த அர்த்தத்தைப் பெறத்தக்கவர்களுண்மையும் விளங்க அருளிச்செய்கின்றார்.

அறிவறிவாய் நிற்கி லறிவுபல வாமென்
றறிவி னறிவவிழ்த்துக் கொண்டவ்—வறிவினராய்
வாழ்ந்திருப்பர் நீத்தவர்கண் மானுடரின் மாணவகா
தாழ்ந்தமணி நாவேபோற் றன்.

(இ-ள்.) மாணவகனே! ஆன்மா தன்னுடையபோதத்தையே பொருளாகக்கொண்டு நிற்கின், விகற்பிக்கிறதே சுபாவமாய போதமும் பலவாய்ச் சிந்தி விடுமென்று இதனை ஆசாரியன் அநுக்கிரகத்தாலே அறிந்து,தனக்கு அநாதியே பிராணனாய்நிற்கின்ற ஞானத்தைக்கூடி, தன்னுடைய ஆன்ம சுபாவத்தையுமொழிந்து, அந்த ஞானமேயாய்,அந்த ஞானத்தி னைக்கியத்தாலே தனக்கு இன்றளவுங் கிடையாத பெருவாழ்வாகியபரமானந்தசொரூப சிவனைப்பெற்றுத், தானும் அந்தப் பரமானந்தமேயாயிராநிற்பன். இவ்வாழ்வைப் பெறவுரியார்யாரென்னில்? மானுடப்பிறப்பி னுள்ளாரில் தேகாதிப் பிரபஞ்சங்களிலுள்ள ஆரவாரங்களைக் கைவிட்டு, நிலத்திலேவைத்த மணியினது நாவேபோலச் சலிப்பற்றிருக்கின்ற சீமான்கள் என்க. (௩௨)

இந்த நிராதாரயோகத்திலே நிகழ்வதொரு குறியுண்டென்றும் இது நிகழ்ந்தாற் செய்யுமுபாயமும் அருளிச்செய்கின்றார்.

ஓசையெலா மற்ற லொலிக்குந் திருச்சிலம்பி
னோசை வழியேசென் றொத்தொடுங்கி—லோசையினி
னந்தத்தா னத்தா னரிவையுட னம்பலத்தே
வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து.

(இ-ள்.) இந்த நிராதாரயோகத்தைச் செய்கின்ற சிவயோகிகள், சிவனைப் பெறுகைப்பொருட்டுத் தேகேந்திரிய வந்தக்கரணங்களாயுள்ள ஆரவாரங்கள் ஒடுங்கும்படி, ஞானத்தினாலே தன்னுடைய இச்சாஞானக்கிரியைகளை ஒழித்தவவசரத்திலே, ஆனந்த நிருத்தம்பண்ணி யருளாநின்ற தம்பிரானார் ஸ்ரீபாதத்தில், பரவிந்துவென்கின்ற திருச்சிலம்பிற் பரநாதமென்கின்ற ஓசைதோன்றாநிற்கும். அந்த ஓசை வழியே நாடிச்சென்று கூடி, அந்த ஓசை முடிந்தவிடத்தே, தன்னுடையபோதமும் ஒக்கமுடியில், அப்பொழுதே அந்த ஓசை முடிந்தவிடமே இடமாகவுடைய தம்பிரானார் காருண்ணியசத்தியுடனே அம்பலமாகிய ஞானப் பிரகாசத்திலே வந்து இவனைப் பிரியத்துடனே கூடுவார் என்க. (௩௩)

இனித்தாம் அருளிச்செய்த நிராதாரயோகத்தி னுண்மையைத் தம்மையொழியப் பிறரும்விளங்க அருளிச்செய்தபடி விளங்க அருளிச்செய்கின்றார்.

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றமையாற்
சார்புணர்த றானே தியானமுமாஞ்—சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று.

(இ-ள்.) தெய்வப் புலமைத் திருவள்ளுவதேவநாயனாரும் "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின்" என்றமையால், தனக்கு அநாதியேதாரகமாய்நிற்கின்ற திருவடிஞானத்தை அதுகண்ணாக அறிந்து அதனுடனே இரண்டறக்கூடிநிற்கில், மீண்டும் ஒரு ஜநநமுண்டாகைக்குக் கன்மமுண்டாகாதென்று அருளிச்செய்த பிரமாணப்படியே, தனக்குத் தரிசனமான ஞானத்தைக்கூடி அசைவறநிற்கின், அதுவே சிவத்தியானமாம். அந்த நிலையில் தியானிக்கின்றோமென்கிற பாவனைகுலையின், அப்பொழுதே சுகசொரூபமான சிவனைக்கூடி நன்றான சமாதிபரனாகாநிற்பன். இப்படிக் கூடின சிவயோகிகளுக்குப் பின்பு ஜநநத்தை உண்டாக்குகின்ற ஆகாமிய கன்மம் உண்டாகாது என்க. (ருச)

ஞானத்தினாலே சிவனைக் கூடவேண்டுமென்று சிரத்தை பண்ணுவானை அந்தச்சிவமானதும் அவதிகூடாமல்வந்து கூடுமுறைமையை அருளிச்செய்கின்றார்.

அன்றிவரு மைம்புலனு நீயு மசையாதே
நின்றபடி யேநிற்க முன்னிற்குஞ்—சென்று
கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு
மொருமகடன் கேள்வ னுனக்கு.

(இ-ள்.) அநாதியே உன்னை மாறுபடுத்தி வருகின்ற விஷயங்களிலே கூடிநின்று நீசலியாதே, அவற்றை வேறாகக்கண்டு நீங்கினஉனக்குப் பிராணனாய்நிற்கின்ற ஞானமானது உன்னுடனே இரண்டறநிற்கு முறைமை போல, நீயும் அதனைத்தரிசித்து அந்தஞானமாகவே இரண்டறநிற்கில், அப்பொழுதே இந்தஞானத்துக்கு முதலாகிய ஞேயசொரூபமாகிய சிவம் தோன்றாநிற்கும். இப்படித் தரிசனமானசிவனைக் கூட வேண்டுமென்று சிரத்தை பண்ணுமளவில், அதற்குமுன்னே உன்னுடைய கருத்தையும் அழித்துத் தன்னுடனே ஒரு நீர்மையாக்கிக் கொள்ளாநிற்பன்; ஒப்பில்லாதசத்திக்கு நாயகனான சிவன் என்க. (ருரு)

ஆனால், ஆன்மாவாலே சிவனைநினைத்துக் கூடலாமோ வென்னின், சிவன் ஆன்மாவால் அறியப்பட்ட பொருளன்றென்று அருளிச்செய்கின்றார்.

உண்டெனி லுண்டாகு மில்லாமை யில்லையெனி
லுண்டாகு மானமையி னோரிரண்டா—முண்டில்லை
யென்னு மிவைதவிர்ந்த வின்பத்தை யெய்தும்வகை
யுன்னிலவ னுன்னுடனே யாம்.

(இ-ள்.) உண்டெனில் இல்லாமை உண்டாகும் (இல்லாமை) உண்டாகும் உண்டென்னில் உண்டாவதில்லை யென்றும். இல்லையென்னில் உண்டாவதில்லை யென்றும். எங்ஙனமென்னில், சிவனை ஆன்மபோதத்தால் அறிந்து கூடலா மென்னின், ஆன்மபோதத்தால் அறிந்து கூடத்தக்க பொருளாவது, இந்திரசாலம் போன்ற பிரபஞ்சமாகையாலுஞ், சிவன்

வாக்குமனதீதனுகையாலும், இப்படிச்சொல்லுமவனிடத்தில் உண்டாம் பொருளாவது, சிவனைத் தெரியாததொன்றுமே. சிவன் ஆன்மாவால் அறியப்படாத பொருளென்னின், அவனிடத்திலும்உண்டானது சிவனைத்தெரியாததொன்றுமே,—ஆனமையின் ஓர் இரண்டாம் - ஆனபடியினுலே, இப்படிச் சிவனைத் தெரியாதிருப்ப தொருமுறைமை இரண்டுபிரகாரமாயிருக்கும்,—உண்டு இல்லையென்னும் இவைதவிர்ந்த இன்பத்தை எய்தும்வகை உன்னில் அவன் உன்னுடனே ஆம் -இந்தப் பாவ அபாவமென்கின்ற இரண்டு வழியாலுஞ் சிவனைக் கூடவொண்ணுதென்று அறிந்து, இவற்றை விட்டுத் தானுகவே நிற்கின்ற ஞானமாயேநின்று, அளவிலாத பேரின்பத்தைப் பெறும்படி சிவனிடத்திலே அன்பை வைக்கில், அப்பொழுதே ஒன்றும் பாவிக்கப்படாதசிவன் தன்னுடைய காருண்ணியத்தினுலே உன்னைஇரண்டறக்கூடிநிற்பன் என்க. நிராதாரயோகமுற்றியது.

இந்த நிராதாரயோகத்திலே மிகவும் வாசனை யுண்டவர்களுக்கு ஒவ்வொரு பக்குவங்களிலே கூடாமைகூடினுல் என்செய்யலாமென்ற மாணுக்கனை நோக்கி, சிவஞானமாகிய தத்துவஞானம் இருக்கும்படியை அருளிச்செய்கின்ருர்.

தூல வுடம்பாய முப்பத்தோர் தத்துவமு
மூல வுடம்பா முதனுன்கு—மேலைச்
சிவமாம் பரிசினையுந் தேர்ந்துணர்ந்தார் சேர்ந்த
பவமாம் பரிசறுப்பார் பார்.

(இ-ள்.) தூலவுடம்பாய முப்பத்தோர் தத்துவமும் - ஆன்மா கன்மபலத்தைப் புசிக்கும்பொருட்டாக, அன்னமயத்தாற் பரிணமித்த சரீரத்திலே நின்று, இது பரிணுமமாம்படி இந்தச்சரீரத்துக்குக் காரணமுமாய், ஆன்மாவிற்குத் தனுகரணபுவனபோகங்களுமாய் நிற்கின்ற ஆன்மதத்துவம் இருபத்துநாலும், புசிக்கைக்குக் காலநியதிகளுமாய், இச்சா ஞானக்கிரியைகளைச்சீவிப்பிக்கைக்குக்கலைவித்தைஅராகங்களுமாய்,போகங்களிலேஅழுத்துகைக்குப் பிரகிருதியுமாய், மயக்குகைக்கு மாயையுமாய் நிற்கின்ற வித்தியாதத்துவமேழுமாகத் தூலவுடம்பிலே பொருந்திநிற்கின்றதத்துவ முப்பத்தொன்றும்,—மூலவுடம்பாம் முதல்நான்கும் - இம்மாயா தத்துவங்களைப் பிரேரிக்கவுங், கன்மங்களுக்கீடாக ஞானக்கிரியைகளை நூனுதிகமாகப் பிறப்பிக்கவும், வாக்குகளை எழுப்பவுங், காரணத்துக்குத் திருமேனியாகவும், பதப்பிராத்தங்கட்குப் பதங்களாகவுந்தோன்றி, உள்ளே மூலவுடம்பாய்நின்று நடத்துகின்ற விந்துசத்திமுதலான தத்துவம் நாலும்,—மேலைச் சிவம் - இத் தத்துவங்களுக்குக் காரணமுமாய் ஆன்மாவுக்குப் பிராணனுமாய் நிற்கின்ற சிவதத்துவம் ஒன்றும்,—ஆம்பரிசினையும் தேர்ந்து உணர்ந்தார் சேர்ந்தபவமாம் பரிசு அறுப்பார் பார் - ஆகிய இந்தத்தத்துவ முப்பத்தாறும் ஆன்மா புசிக்கைக்குத் துணைக்காரணமாய்த் தூல சூக்குமபரமாய் நிற்கையால், இந்தமுறைமையை ஆசாரியன் அருளாலே, உருவதரிசன சுத்திகளுடனேபார்த்து நீங்கி,தன்னையும் ஞானத்தையுஞ் சிவனையும் உணர்ந்த சிவஞானிகளே, அநாதியே பொருந்திப்போதுகின்ற ஜநந மரணங்களாகின்ற முறைமையைப் போக்காநிற்கின்றவர்கள் ; ஆதலால், உனக்குத் திருசியமாகவும் விரோதமாகவும் பிராரத்தத்தாலே பிரபஞ்சந் தோன்றினதாயினும் இப்படிப்பார்த்துக் கூடுவாயாக என்க. (௩௭)

இப்படிப்பார்க்க அரிதானவர்களுக்கு வேறேயும் ஒருஉபாயம் அருளிச்செய்கின்றார்.

எத்தனையோ தத்துவங்க ளெவ்வெவர்கோட் பாடுடைய
வத்தனையுஞ் சென்றங் களவாதே—சித்தமெனுந்
தூதுவனைப் போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனிற்
பாதிதனைக் கும்பிடலாம் பார்.

(இ-ள்.) எத்தனையோ தத்துவங்கள் எவ்வெவர் கோட்பாடுடைய அத்தனையுஞ் சென்று அங்கு அளவாதே-அநேகவிதமான தத்துவங்களையும், பலசமயிகள் கொண்டிருக்கத்தக்க கோட்பாடுகள் அடங்கலையுஞ் சென்றறியப்புக்கு, அவற்றிலே மொத்துண்டு அழியாதே,—சித்தமெனும் தூதுவனைப் போக்கிப் போய்த் தூக்கற்ற சோதிதனில் பாதிதனைக் கும்பிடலாம் பார்-உன்னை ஜநந மரணங்களிலே தள்ளுகைக்கு அநாதியே தூதனுகி விஷவத்திலே வாசனைப்படுத்திப்போதுகின்ற சித்தவிகாரத்தை ஞானத்தாலே ஒழித்துச்சென்று, ஒப்பில்லாத அந்த ஞானத்தைக்கூடி, இந்த ஞானசத்தியை ஒருபாதியாகவுடையசிவனை மனவாக்குக்காயங்கள்கூடாதபடி, அவன் திருவடியிலே அழுந்தி நிற்கலாம். இதனை விசாரித்துப்பார் என்க. (கஅ)

இந்த உண்மையிலே கூடுமளவில், உயிர்ச்சார்பு பொருட்சார்பிற் பற்றுவிட வேண்டுமென்று அருளிச்செய்கின்றார்.

சாம்பொழுது மேதுஞ் சலமில்லை செத்தாற்போ
லாம்பொழுதி லேயடைய வாசையறிற்—சோம்புதற்குச்
சொல்லுந் துணையாகுஞ் சொல்லாத தூய்நெறிக்கட்
செல்லுந் துணையாகுஞ் சென்று.

(இ-ள்.) சாம்பொழுதும் ஏதும் சலம் இல்லை செத்தாற்போல் ஆம் பொழுதிலே அடைய ஆசை அறில் - இப்படிப்பட்ட சிவஞானிகளுக்குச் சரீரம்விடுவதாகிய சாக்காடு வந்தடுத்தகாலத்தும், அந்தச்சிவரூபமாயே விடுவதொழிந்து சற்றுந் தத்துவங்களாலுள்ள அசைவுகூடாது. இதற்குக் காரணம் ஏதென்னில், தேகநிற்கின்றபொழுதே தேக மில்லாதவர்களைப் போல் அநாதியே வாசனைப்பட்டுப்போதுகின்ற உயிர்ச்சார்பு பொருட்சார்புகளிற் பற்று அடங்கலும் விடுகையால்.—சோம்புதற்குச் சொல்லும் துணையாகும் சொல்லாத தூய்நெறிக்கண் செல்லுந்துணையாகும் சென்று-இப்படிச் சரீரநிற்கும்போதே உயிர்ச்சார்பு பொருட்சார்பில் பற்று அடங்கலும் விடுமாகில், இதுதானே, பணியறுத்தலென்கின்ற நிலைக்குச்சொல்லப்பட்ட தொருதுணையாக நிற்கும்; இதுவொழிந்து, வாக்கால் உரைக்கப்படாத சுத்தநெறியால் விட்டின்பத்திலே பொருந்துகின்ற அவசரத்துக்குத் துணையாகாநிற்கும் என்க. (கக)

இந்த அவாவறுத்தலும் அவனருளாலே வேண்டுமென்று அருளிச்செய்கின்றார்.

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்
வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது—வேண்டினது
வேண்டாமை வேண்டவரு மென்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால்.

(இ-ள்.) வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால் வேண்டின் அஃது ஒன்றுமே வேண்டுவது - தெய்வப்புலமைத் திருவள்ளுவ

தேவநாயனுரும் "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்று அருளிச் செய்தமையாலே, தேகம் உள்ள அளவும் இவன் ஒன்றை விரும்பாதொழியினும் பிராரத்தத்தாலேயுள்ளது கூடுமாகையால்,ஒன்றை விரும்பவேண்டுமிடத்துப் பிறவாமை ஒன்றுமே விரும்பவேண்டுவது,—அது வேண்டின் வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டும் அவன்பால் வேண்டாமை வேண்டிடுக - அந்தப் பிறவாமையை வேண்டின் தான்வேண்டாமை வேண்டவருமென்று பிரமாண முண்டாகையாலே, நாம் விரும்பத்தக்க கர்த்தாவின் பக்கலிலே, பிறவாமைக்கு உற்பத்தியான அவாவறுத்தல் ஒன்றுமே வேண்டிக்கொள்ள வேண்டுவது. இந்த அவாவறுத்தல் உண்டாகவே அந்தப் பிறவாமை தானே உண்டாம் என்க. (ச0)

இப்படி உயிர்ச்சார்பு பொருட்சார்பிற் பற்றற்றபோதே சமாதிபரனுகவும் அங்ஙனம் நிற்கும்போதே, சமாதி விசாரித்தவர்களுக்குச் சமாதிகூடாமல் நினைவுகூடி, இதனுலே ஜநநங்கள் கூடுமுறைமையை அருளிச்செய்கின்றுர்.

அரண வுணர்வுதனி லவ்வுணர்வை மாற்றிற்
கரணமுங் காலுங்கை கூடும்—புரணமது
கூடாமை யுங்கூடுங் கூடுதலுங் கூட்டினுக்கு
வாடாமை யுங்கூடும் வந்து.

(இ-ள்.) அரண உணர்வுதனில் அவ்வுணர்வை மாற்றில் கரணமும் காலும் கைகூடும் - இந்திரியவேடர்சென்று ஈடுகொள்ளப்படாத புகலிடமான திருவடிஞானத்திலே தன்னுடைய போதத்தை ஒழிக்க விசாரிப்பானுகில், அந்த அவசரத்திலே, முன்பு தான்பற்றிப் போந்த உயிர்ச்சார்பு பொருட்சார்பின் வாசனையாலே, சொரூபமானது கைகூடாமல், மனுதிகளும் பிராணவாயுவுங்கூடி, மீண்டு விடயங்களிலே சலிப்பினுஞ் சலிக்கும்.—கூடாமை புரணமதும் கூடும் - இதுகூடாமற் புரிந்து மயக்கம்வந்து கூடினும்கூடும்,—கூடுதலும் கூட்டினுக்கு வாடாமையும் வந்து கூடும் - இப்படிமயக்க விகற்பங்கள் கூடிப்போதரவே, எடுத்த தேகம்போனுலும், இந்தப்பற்றுக்களாலே மீண்டும் ஒருதேகம்வந்து கூடாநிற்கும்; ஆதலால், இதுகூடாதபடி உயிர்ச்சார்புபொருட்சார்புகளில் பற்றுக்களை அற்றே சுகரூபத்திலே பொருந்தி நிற்பாயாக என்க. (சக)

சமாதிபரனுனவனுக்கும் பற்றுக்களாலே சமாதிகூடாமல் ஜநநங்கள் கூடுமாகில், சிவதீக்ஷையும் தரிசனமுமில்லாத ஆன்மாக்கள், மரியாதையோ பெற்றுள்ளவென்று கேட்ட மாணுக்கனைநோக்கி அருளிச்செய்கின்றுர்.

இன்றிங் கசேதனமா மிவ்வினைக ளோரிரண்டுஞ்
சென்று தொடருமவன் சென்றிடத்தே—யென்றுந்தான்
றீதுறுவ ஞைற் சிவபதிதான் கைவிடுமோ
மாதொருகூ றல்லனோ மற்று.

(இ-ள்.) இன்று இங்கு அசேதனமாம் இவ்வினைகள் ஓரிரண்டும் அவன் சென்றிடத்தேசென்று தொடரும்-இப்பொழுது இந்தத்தேகத்திலே நிற்கும்போதேகூடின அசேதனமான புண்ணியபாவங்கள் இரண்டும் இவன் பின்னொருதேகத்தை எடுத்த பொழுதே ஒக்கச்சென்று கூடாநிற்கும்,—தீது உறுவனுனல் பதிசிவந்தான் கைவிடுமோ என்றுந்தான் மாது ஒரு கூறு

அல்லனே மற்று - ஒருவன் சிவதீக்ஷையும் சிவஞானமும்பெற்றுத் தெளிந்திருக்கும்போதேயும் முன்புபோல உயிர்ச்சார்புபொருட் சார்புகளின்பற்று விடாமல் ஜநநங்கூடிற்றேனும், கர்த்தாவாகிய சிவனும் இவனைக் கைவிடாமல், முன்புண்டான மனம் பற்றுகைக்குத்தக்கவற்றைக் கூட்டித் தொலைப்பித்து, முன்ஜநநத்திலே சாதித்தகுறையிலே வந்து எடுத்துக்கொண்டு நிட்டையிலேகூட்டிச் சாயுச்சியத்தைக் கொடாநிற்பன்; இவன் காருண்ணிய சத்தியினை எப்பொழுதுந் தன்னிடத்திலே உடையனுதலால் என்க. ()

இன்னமும், பெத்தமுத்திகள் இரண்டினும் ஆன்மாக்களைப் பாதுகாத்து ஈடேற்றுகை அநாதியே கர்த்தாவுக்குக் காரணமான முறைமை என்பதுதோன்ற அருளிச்செய்கின்றார்.

அநாதி சிவனுடைமை யாலெவையு மாங்கே
யநாதியெனப் பெற்ற வணுவை—யநாதியே
யார்த்த துயரகல வம்பிகையோ டெவ்விடத்துங்
காத்த லவன்கடனே காண்.

(இ-ள்.) அநாதி சிவன் எவையும் உடைமையால் - அநாதியான சிவனுக்கு எண்ணிறந்த ஆன்மாக்களும் அடிமையாகையாலே,—ஆங்கே அநாதியெனப்பெற்ற அணுவை அநாதியே ஆர்த்த துயர் அகல - இப்படி அநாதியான ஆன்மாக்களைஅநாதியே பேதித்துக்கொண்டு நிற்கின்ற பாசமானது விட்டுநீங்கும்படி,—அம்பிகையோடு எவ்விடத்தும் காத்தல் அவன் கடனேகாண் - விட்டுநீங்காத சத்தியுடனே பெத்தத்தினுங் கூடிநின்று தொலைப்பித்து, முத்தியினும்மீண்டும் ஒருடம்புகூடாதபடி திருவடியிலே கூட்டிக்கொள்ளுகின்ற இது மாணவகனே! அவனுக்கு அநாதி முறைமையேகாண் என்க. (சஙு)

தேகாதிபாசம் அநாதியாகில், முத்தியிலும் போகாதேயென்று சந்தேகித்த மாணக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

தம்மிற் சிவலிங்கங் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பான் மஞ்சனநீர் தாமாட்டித்—தம்மையொரு
பூவாகப் பூவழியா மற்கொடுத்துப் பூசித்தா
லோவாமை யன்றே யுடல்.

(இ-ள்.) தம்மில் சிவலிங்கம்கண்டு - ஆசாரியனாலே, தனுகரண புவனபோகங்களை விட்டுநீங்கி,தன்னைத்தரிசித்து, தன்னிடத்திலே தனக்குப்பிராணனுமாய்ச் சிவனுக்கு அடையாளமுமாய் நிற்கின்ற ஞானமாகிய சிவலிங்கத்தைத் தரிசித்து,—அதனைத் தாம்வணங்கி - அந்தச் சிவலிங்கத்தைத் தம்முடைய போதம்விட்டுப் போம்படி, சாந்தமாகிய வணக்கஞ்செய்து,—தம் அன்பான் மஞ்சனநீர் தாம் ஆட்டி - இப்படிப் பெறுதற்கரியபேற்றைப்பெற்றோமென்கின்ற சிரத்தையாகிய சலத்தாலே, திருமஞ்சனம் பண்ணி,—தம்மை ஒருபூவாக அழியாமல் பூக்கொடுத்து - இப்படிச்செய்கின்ற ஆன்மசொரூபத்தை ஒப்பில்லாத் திருப்பள்ளித்தாமமாக மயங்காமல் அதனைச் சாத்தி,—பூசித்தால் - இப்படி ஞானத்திற் சரியைகிரியா யோகங்களினாலே உள்ளே சிவனைக்கண்டு ஐக்கியஞ்செய்கின்ற இது,—ஓவாமை அன்றே உடல் - செம்புருகின பதத்திலேகூடின குளிகையினது ஐக்கியத்தாலே,

அநாதியான காளிதமும் செம்பென்னும் உருவமும் நீங்க மாற்றுப் பிரகாசித்து, பின்பு இவை என்றுங் கூடாதவாறுபோல, ஒருவன் தன்னுடைய சத்திநிபாதத்தில் உண்டான அன்பின்மிகுதியாலே, தேகேந்திரியாதிகளை நீங்கின தன்னுடைய உண்மையான சொருபத்தைத் தனக்கேற்பப்பெற்று, தன்னிடத்திலே சிவனைக் கண்டு ஐக்கியஞ்செய்து வாசனைவிட்டால், பிராரத்த நாசம்பிறந்து தேகம்விட்டபொழுதே, திருவடியிலே இரண்டற்று விடுமதொழிந்து, மீண்டுந்தேகம் எடுக்க மாட்டாதன்றே என்க. (சச)

அநாதியானபாசம் விட்டுநீங்குமாகில் அநாதியென்று ஆன்மாவுக்கு வழியுண்டாமோவென்ற மாணாக்கனைநோக்கி, பாசத்திலே விரிந்த போதத்தை விட்டுத் தன்னைத் தனக்கு அறுதியாகப் பெறுகின்றதொழிந்து, இவனுக்கு அழிவில்லையென்றும், பாசத்தை நீங்கினபொழுதே இவனும் வியாத்தனென்னு முறைமையும் அருளிச்செய்கின்றார்.

தன்னைப் பெறுவதின்மேற் பேறில்லை தானென்றுந்
தன்னைத்தான் பெற்றவன்றா னொன்னிற்—றன்னாலே
யெல்லாந்த னுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
யெல்லாமாய் நிற்கு மிவன்.

(இ-ள்.) தன்னைப் பெறுவதின்மேல் பேறு இல்லை - ஒருவன் பெறத்தக்கபேறுகளிலே தான் அழிந்துபோகாமல், அருளாலே தன்னை உறுதியாகப்பெறுகின்ற பேற்றின்மேல் வேறுபேறு இல்லை,—தானென்றும் தன்னைத்தான் பெற்றவன்றான் ஆர் என்னில்·தானென்றும்தன்னைத்தான்பெற்றவனென்றும் இரண்டாக இவ்விடத்திற்சொன்னது யாரையென்னில்?—தன்னாலே எல்லாம் தன் உட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே எல்லாமாய்நிற்கும் இவன் - ஆன்மா தன்னை அறியாமல் முன்பு பாசமேயாய் நின்ற முறைமையொழிய, அருளாலே பரத்தையும் அறிந்து, பாசத்தையும் அறிந்து, இந்தப்பாசத்தைநீங்கின தன்னையுங்கண்டே, அண்டாண்டபகிரண்டங்களையும் உணர்ந்து, தான் அறியாமற்கொண்டு நின்றபாசத்தை ஒழிந்ததுபோல, இதையும் ஒழியவிட்டுத் தன்னுடைய போதஞ் சலியாமற் பூரணனாய்நிற்கவே, எல்லாவடிவுகளும் தன்னுடைய வடிவாய்த் தானே இந்த அண்டாண்ட பகிரண்டங்கட் கெல்லாங் கர்த்தாவாய் நிற்பன் இவன்றான் என்க. (சரு)

இந்த ஆன்மயோகந்தானே பொருளாகில், ஞானயோகஞ் சிவயோகமென்று சொல்லவேண்டுமோவென்ற மாணாக்கனைநோக்கி, இந்த ஆன்மயோகந்தானே ஞானயோகமாம்படி அருளிச்செய்து, இந்த ஞானயோகந்தானே சிவயோகமாம்படியும் அருளிச்செய்கின்றார்.

துன்பமா மெல்லாம் பரவசனாய்த் தான் றுவளி
லின்பமாந் தன்வசனாய்த் தானிருக்கி—லென்பதனா
னின்வசனா யேயிருக்கி னின்னுடனா நேரிழையா
டன்வசனா யேயிருப்பன் றான்.

(இ-ள்.) தான் பரவசனாய் எல்லாம் துவளில் துன்பமாம் - ஆன்மா, தானே கர்த்தனாய் எல்லாவற்றையும் அறிகின்றவனாய் நின்று விகற்பிக்கில்,

இம்மை மறுமை இரண்டுக்கும் பிரயோசனமாக வுள்ளது கிலேசமொழிய வேறில்லை,—தன்வசனாய்த் தானிருக்கில் இன்பமாம்-ஆன்மா, திரிவுகாட்சியான பிரபஞ்சநிலையை விட்டுநீங்கித் தனக்கு உண்மையான சைதன்னிய சொரூபமாய் இதிலே நிருவிகாரமாயிருக்கில், இந்த ஆன்மயோகந்தானே ஞானயோகமாய் இந்தவழியிலே சுகரூபம் வந்து பிரகாசியா நிற்கும்,—என்பதனால்-என்பது வேதாகமங்களுக்குங் கருத்தாகையால்,—நின்வசனாயே இருக்கில் நேரிழையாள் தன்வசனாயே இருப்பன்றான் நின்னுடனும்-மாணவகனே! இந்திரிய வசனாகாமல் நீ உன்னையொழிந்த பொருள்களெல்லாவற்றையும் உனக்கு வேறென்று அறிந்துவிட்டு நீங்கி, நிருவிகாரமான ஞானமேயாயிருக்கில், அப்பொழுதே அந்த ஞானசத்தியின் வசமாயிருக்கின்ற ஞேயசொரூபனானசிவன் உன்னைக்கூடி வேறறநிற்பன் என்க.(சசு)

இந்தச் சிவயோகத்திலே இடைவிடாமல் அநுபவித்தலாவது இந்தக் கருவிகரணங்கள் ஒருகாலமுங் கூடாதபடி அருளிலே நிற்க வல்லவர்களுக்கே யென்று தோன்ற அருளிச்செய்கின்றார்.

செத்தாரே கெட்டார் கரணங்கள் சேர்ந்ததனோ
டொத்தாரே யோகபர ரானவர்க—ளெத்தாலு
மாராத வக்கரணத் தார்ப்புண்டிங் கல்லாதார்
பேராமற் செல்வரதன் பின்.

(இ-ள்.) கரணங்கள் செத்தாரே கெட்டார்-அந்தக் கரணங்கள் நேராக அங்குரியாதபடி ஞானத்திலே கூடி மரித்த ஆன்மாக்களே, ஜநநமரணங்கள் கெட்டவர்கள்,—சேர்ந்து அதனோடு ஒத்தாரே யோகபரரானவர்கள்-இந்த ஞானத்தின் அழுத்தத்தினாலே பிரகாசித்த சிவரூபத்திலே பொருந்தி அதுவாய் நின்றவர்களே, சிவயோகத்திலே தற்பரமானவர்கள்,—இங்கு அல்லாதார் எத்தாலும் ஆராத அக்கரணத்து ஆர்ப்புண்டு அதன்பின் பேராமல் செல்வர்-இப்படிச் சிவயோகத்திற் பொருந்தப்பெறாத பாக்கியஹீனர், எத்தாலுந் திருத்தியடையப்பெறாத கருவி கரணங்களாலே கட்டுண்டு, இவற்றின்பின்னே தப்பாமல் ஏவற்செய்து, ஜநநமரணங்களிலே சென்று உழலா நிற்பர் என்க. (சஎ)

இந்தக் கருவிகரணங்கள் ஒருகாலமும் பொருந்தாதபடி நிற்கின்ற சிவயோகிகள் பெருமை இருக்கும்படி அருளிச்செய்கின்றார்.

கண்ணுங் கருத்துங் கடந்ததொரு பேறேயுங்
கண்ணுங் கருத்துங் களிகூர—நண்ணி
வடமடக்கி நிற்கும் வடவித்தே போல
வுடனடக்கி நிற்பர்கள்கா ணுற்று.

(இ-ள்.) கண்ணும் கருத்தும் கடந்ததொரு பேறேயும் கண்ணும்கருத்தும் களிகூர நண்ணி-யாவர்க்கும் கண்ணுக்கும் கருத்துக்கும் அளவுபடாத தொருபேறாயினும், சிவஞானிகள் சிவனுடனே இரண்டறக்கூடிப் பரமானந்தமே சொரூபமாயிருக்கையாலும், அவர்கள் கண்ணில் விசுவமில்லையாகையாலும், ஒடுங்கினும் விழிப்பினும் பொருளேயாய், அவர்கள்

கண்ணுக்கும் கருத்துக்கும்களிகூரப்பொருந்தி,—வடம் அடக்கிநிற்கும்வட-வித்தே போல உடன் அடக்கி உற்று நிற்பர்கள்காண்-அநேக தூரம் படர்ந்ததோர் ஆலின் பரிணாமமெல்லாம் ஒருகடுகையொத்த வித்திலே அடங்கின தன்மைபோல், அளவிடப்படாத வஸ்துவாயினும், தங்களுள்ளே அடக்கித் தங்களான்ம சுபாவத்தை விட்டு இந்தச் சிவமாகியே நில்லாநிற்பர்கள் என்க. (சஅ)

அளவிடப்படாத பொருளை ஒருடம்பிலே நிற்பானொருவன் அடக்கிக்கொண்டிருந்தபடி எப்படியென்ற மாணாக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

வானகமு மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை
யூனகத்தே யுன்னுமதென் னென்றனையே—லேனகத்து
வாதனையை மாற்றும் வகையதுவே மண்முதலா
மாதனமே யன்றோ வதற்கு.

(இ-ள்.) வானகமும் மண்ணகமும் ஆய்நிறைந்த வான்பொருளை ஊனகத்தே உன்னுமது என் என்றனையேல் - ஆகாசமுதல் பிருதிவி யீறாகவுள்ள பஞ்சபூத பரிணாமமான பிண்டப் பிரமாண்டங்களும், இவற்றிற்குக் காரணமான தத்துவங்களும், இவற்றிற்குட்பட்ட ஆன்மகோடிகளும், தானேயாய்ப் பூரணமாய் நிற்கின்ற சொரூபத்தை ஒரு சரீரியானவன் தனக்குள்ளே அடக்க நினைத்தபடி எப்படியென்னில்,—மண்முதலாம் அதற்கு ஆதனமே அன்றோ ஏனகத்து வாதனையை மாற்றும் வகை அதுவே,—மாணவகனே! பிருதிவி முதலாக முன் சொல்லப்பட்டவை யெல்லாம் அந்தப் பொருளுக்கு ஆதனமாத்திர மன்றோ ஆகையாலும், அப்பொருளை ஆசாரியனாலே கூடப்பெற்றவர்களிடத்தில் அந்தப்பொருளின் வியாத்தமெல்லா நின்று பிரகாசிக்கையாலும், ஞானதிருஷ்டி இல்லாதவர்களுக்குச் சரீரிகள் போலத் தோற்றினும் அவன் அந்த உண்மையேயாய் நிற்பவனாகையாலும், என்போல்வாரிடத்தும் அநாதியே கூடிப் போந்தவாசனையைப் போக்குகைக்கு இந்த நிலையேகாண் முறைமையாகவுள்ளது என்க.()

இந்தப்பொருளை உள்ளே கண்டு வாசனை தீர்ந்திருப்பார்போல், புறம்புங்கண்டு வாசனை போக்கலாமோவென்ற மாணாக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

கல்லிற் கமரிற் கதிர்வாளிற் சாணையினில்
வல்லுப் பலகையினில் வாதனையைச்—சொல்லு
மகமார்க்கத் தாலவர்கண் மாற்றினர்கா ணையா
சகமார்க்கத் தாலன்றே தான்.

(இ-ள்.) கல்லினும், கமரினும், ஒளியையுடைய வாளினும், சாணைக்கல்லினும், சூதாடுகருவிப்பலகையினும், திருக்குறிப்புத்தொண்டர் அரிவாட்டாயர் ஏயர்கோன்கலிக்காமர் மூர்த்தியார் மூர்க்கர் என்னும் நாயன்மார் ஒவ்வொருதொழில்களைச் செய்யும்போதே சொல்லப்பெற்ற சிவனளவில் ஒருவழிப்பட்ட கருத்தினாலே யன்றோ புறம்பேயும் அவன் பிரகாசிக்கப் பிறப்புக்கு வித்தான வாசனையைப் போக்கினார்கள்; ஐயனே! இந்த முறைமை பொய்யான உலகநெறியாலன்றே என்க. (ருo)

இந்த இரண்டு வகையில் எதிலேநின்று வாசனையைப் போக்கலாமென்ற மாணுக்கனை நோக்கி, இதனை இரண்டுவகையாக நீ கருதவேண்டாமென்றும், ஒருபடித்தாகக் காணவேண்டுமென்றும் அருளிச்செய்கின்றார்.

உள்ளும் புறம்பு நினைப்பொழியி லுன்னிடையே
வள்ள லெழுந்தருளு மாதினெடுங்—தெள்ளி
யறிந்தொழிவா யன்றியே யன்புடையை யாயிற்
செறிந்தொழிவா யேதேனுஞ் செய்.

(இ-ள்.) உள்ளும் புறம்பும் நினைப்பு ஒழியில் உன்னிடையே வள்ளல் மாதினெடும் எழுந்தருளும் - உள்ளேகாணவேண்டுமென்றும் புறம்பேகாணவேண்டுமென்றும் நீ விசாரித்த விடத்து, உன்னுடைய போதத்தையுஞ் சரீரத்தையும், முன்போலே கைவிடாமைகொண்டு, இரண்டுபட்டுத்தோன்றினதொழிந்து, அந்தப் பொருளுக்குத் தனித்தனி ஓரிடமிராதாகையால், பிண்டப் பிரமாண்டங்களையுந் தத்துவங்களையும் ஆன்மபோதத்தையும் உருவதரிசன சுத்திகளாலே, அருளாக்கி ஒரு நீர்மையான ஞானமேயாய் உன்நினைவு ஒழியநிற்கில், அப்பொழுதே உன்னிடத்திலே பரமசிவன்தன்னுடைய காருண்ணிய சத்தியுடனே கைம்மாறு கருதாமல்வந்துதோன்றி, உன்னை ஒருதன்மையாக்கிக்கொண்டு தானேபிரகாசியாநிற்பன்.—தெள்ளி அறிந்து ஒழிவாய் - இதனைச் சிவயோகத்தின் கண்ணே நின்று ஆராய்ந்து அநுபவிக்கின்றேமென்கின்ற தன்மையுங் கைவிட்டுநிற்பாய்,—அன்றியே அன்புடையையாயின் செறிந்து ஒழிவாய் - இந்த முறைமையன்றி, சிவனுடைய உண்மையைக் கேட்குதல் நினைக்குதல் காண்குதல் செய்தபொழுதே, உன்னுடைய கருத்தை உருக்குவதானதொரு பேரன்பு கூடுமாயின், அதனாலே உன்னுடைய கருத்தானது நேராக அழிந்து சிவனுடனே ஒரு நீர்மையாய் விடுவாய்,—ஏதேனும்செய் - இந்த ஞானயோக பத்தியோகங்கள் இரண்டினுள்ளே கூடின தொன்றைச் செய்வாயாக என்க. ()

இனி இந்தப் பத்தியோகந்தான் எப்படியென்ற மாணுக்கனை நோக்கிப் பத்தியிலே நின்று பெற்றவர்கள் பெருமை இப்படியென்று அருளிச்செய்கின்றார்.

கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையாற்
கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக்—கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்
றாரறியு மன்பன் றது.

(இ-ள்.) "கண்ணப்பனொப்பதோரன்பின்மை" என்று மாணிக்கவாசகமூர்த்திகள் அருளிச்செய்தபடியால், அவ்வன்பினைக் கண்ணப்பநாயனாரும் காளத்தியப்பரும் அறிவாரன்றி மற்றயாரும் அதனை அறியார் என்க.(ருஉ)

அவிழ்ந்த துணியி லவிழ்ந்த வவிழை
யவிழ்ந்த மனத்தா லவிழ்க்க—வவிழ்ந்தசடை
வேந்தனுர்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்
சேந்தனுர் செய்த செயல்.

(இ-ள்.) மெய்யன்பினையுடைய சேந்தநாயனுர் அன்பால் விரிந்த மனத்தோடு விரிந்த வஸ்திரத்தினின்று பக்குவமாய் மலர்ந்த அன்னத்தை அவிழ்த்து நிவேதிக்க (அது) விரிந்த சடையையுடைய சிவபிரான்

உண்டருளுதற்கு இனிய அமிர்தமாயிற்று. அந்நாயனர் செய்தசெய்கை (எத்துணைச் சிறப்புடையதென்று கூறலாம்) என்க. (ருந)

சுரந்த திருமுலைக்கே துய்யசிவ ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த
தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு.

(இ-ள்.) பால் பொழிதற்கிடமாகிய உமாதேவியார் தனத்தினின்று தூய சிவஞானப்பாலைப்பொழிய (அதனைத்) திருஞானசம்பந்தப் பிள்ளையார் பருகியருளினரென்று சொல்லக்கேட்டவளவிலே மங்கையர்க்கரசியார் பால்பொழிகின்ற தனமுடையாராயினர். (ஆதலால்,) உருகும் உள்ளமுடைய அப்பாண்டிமாதேவியாரது அன்பிருந்தமுறை (அளவிடற்பாற்றன்று) என்க. (ருச)

அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி
யன்பேயன் பாக வறிவழியு—மன்பன்றித்
தீர்த்தந்தி யானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்.

(இ-ள்.) அன்பினல் என்னுடைய அன்பே அன்பே என்று (சிவபிரானை நோக்கிப்) பெரிதும் அழுது பேரன்புமயமாகப் போதங்கரையும் அன்பன்றித் தீர்த்தமாடல் முதலிய செய்கை நேரே முத்திசாதனம் ஆகாது என்க. (ருரு)

இனி யாவர்க்கும் பத்திகூடுதற்கு அரிதென்றும், முறைமையிலே கூடத்தக்க ஞானயோகமே வாசனையைத் தீர்த்து முத்தியைத் தருவதென்றும், முன்னே பல பிரகாரங்களாகச் சொல்லப்பட்ட உபாயங்களின் தாற்பரியம் இதுவேயென்றும், மற்றுள்ள சமயிகள் தாற்பரியங்கள் இந்த உண்மையைக் கூட்டமாட்டாதென்றும், எல்லாவற்றையுந் தொகுத்து வாசனை தீர்ந்திருக்கைக்கு ஞானயோகமே பொருளென்று துணிந்து அருளிச்செய்கின்றார்.

எல்லா ரறிவுகளின் றாற்பரிய மென்னறிவு
செல்லு மிடத்தளவுஞ் சென்றறிந்தேன்—வல்லபடி
வாதனையை மாற்றும் வகையிதுவே மற்றவற்று
ளேதமறக் கண்ட விதம்.

(இ-ள்.) மாணவகனே! இந்த நூலிற்சொல்லப்பட்ட உபாயமொழிந்து வேறும் அறியவேண்டுவது உண்டோவென்று நீ சந்தேகிக்க வேண்டுவதில்லை. எல்லாச்சமயங்களினும் எல்லாச் சாத்திரங்களினும் உண்டான தாற்பரியார்த்தங்கள் என்னல் ஆராயத்தக்கவளவும் ஆராய்ந்தறிந்தேன். அவை எல்லாவற்றினும் வாசனையைப் போக்கி முத்தியைக் கூட்டுகைக்கு முறைமையாகக் கண்டது, சைவசித்தாந்தத்திற் சொல்லப்பட்ட இந்தஞானயோகம் ஒன்றுமேயாதலால், இந்தஅநுபூதி எல்லாக் குற்றங்களும் அறுகைக்குக் கண்ட அர்த்தமாதலின், நீயும் இந்த முறைமையிலே சாதிப்பாயாக என்க. (ருசு)

இனி இந்த அர்த்தத்தைப் பெறுதற்கரிய முறைமையும், பெற்றால் நிற்கவரிதான முறைமையும் அருளிச்செய்கின்றார்.

வித்துமத னங்குரமும் போன்றிருக்கு மெய்ஞ்ஞானம்
வித்துமத னங்குரமு மெய்யுணரில்—வித்ததனிற்
காணுமை யாலதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேணுமை யாலற்றார் பேறு.

(இ-ள்.) வித்தும் அதன் அங்குரமும் போன்று மெய்ஞ்ஞானம் இருக்கும் - நெல்லுமுதலான பலவித்துக்களும் அங்குரிக்கும்பொழுது அங்குரத்துடன் இரண்டுபட நில்லாமல் அந்த அங்குரமுள்ள அளவும் வியாத்தமாய் நின்று பரிணமித்து இந்த பரிணமத்தைப் பிரயோசனங் காரணமாக அங்குரித்த நாண்முதல் ஆசரித்துக்கொண்டிருந்த ஆன்மாக்களுக்குப் பரிணம முதிர்ந்த அந்தக் காலங்களிலே வித்தானது வெகுவிதமாகப் பலித்து அவர்கள் தாகங்களை க்ஷமிப்பித்துச் சந்துஷ்டி பிறப்பிக்க இன்பத்தையே கொடாநிற்கும்; அதுபோல, வித்தான சிவமும் ஆன்மாக்களுக்குக் கன்மவொப்பும் மலபாகமும் உண்டான அவசரத்திலே காருண்ணியமே திருமேனியாக எழுந்தருளிவந்து பக்குவப்பட்ட ஆன்மாக்களைத் தம்முடைய அளவிலே சினேகிக்கும்படி திருவுள்ளத் தடைத்து இவர்களிடத்திலே அநாதியே எழுந்தருளிநின்ற உண்மையைப் பிரகாசிப்பித்து இந்த உண்மையான ஞான சுகரூபத்திலே ஆன்மாக்களைக் கூட்டிநிறுத்தி இந்த நிலையின் முதிர்ச்சியாலே தன்னுடைய பேரின்பத்திலே இவர்கள் அநுபவித்துச் சம்பூரணத்தைத அடையும்படி வெகுபலமாகக் கொடாநிற்கும்,—வித்தும் அதன் அங்குரமும் மெய் உணரில் - இந்த வித்தாகிய சிவனுண்மையும் அங்குரமாகிய ஞானத்தினுண்மையும் உணர்வார் உணருமிடத்து,—வித்து அதனில் காணுமையால் அதனைக் கைவிடுவர் - நெல்லு முதலியவற்றின் அங்குரங்களை இந்தவித்தின் பரிணமமென்றும் இந்தப் பரிணமங்களிலே அந்தவித்துக் கலந்துநிற்குமென்றும் அங்குரத்தின் பரிணமமுதிர்ந்தபொழுதே அந்தவித்தே வெகுபலமாகப் பலிக்குமென்றும் இதனை ஆசரித்துக்கொண்டிருந்து பலிப்பிக்குங் காலங்களிலே பலங்கொள்ள அறியாமல் அங்குரம் பரிணமிக்கின்ற காலத்திலே வித்துத் தோன்றாததுகொண்டு இந்தப் பரிணமத்தில் ஓர்வித்துங் கண்டிலோமென்று அந்தப்பரிணமத்தையுங் கைவிட்டு அதினுடைய பிரயோசனமும் இழந்துபோகின்ற புத்தரைப் போல, தரிசித்து ஞானத்திலேநின்று சாதித்து இந்த ஞானமேயாய் இந்த ஞானத்துக்கு முதலாகிய சிவனைக்கூடிப் பேரின்பத்தையே பெறமாட்டாமல், அந்தஞானத்தைத்தரிசித்தவளவிலே இவ்வளவே பிரயோசனமென்று சிவரூபத்தினுண்மையை அறியாமல் அந்த ஞானத்தையுங் கைவிட்டுப் போன பாக்கியயீனர் சிவபோகத்தை இழந்துபோகாநிற்பர்கள்,—கண்டவர்கள் பேணுமையால் பேறு அற்றார் - அந்த நெல்லுமுதலியவற்றின் அங்குரங்களிலேவித்துக்கலந்துநிற்குமென்று அறிந்தவர்களும்பயன்படுமளவும் அந்தப்பரிணமத்தை ஆசரித்துக்கொண்டிருந்து பிரயோசனப்படுங் காலங்

எ

களிலே பிரயோசனங் கொள்ளமாட்டாமல் பராமுகத்தாலே அதின் பிரயோசனத்தைப் பிறர்கொள்ளத் தாம் இழந்துபோகின்ற பாக்கியயீனரைப் போல, சிவனைத் தாரகமாதலொழிந்து ஞானம் பிரகாசியாதென்று அறிந்தவர்களும் அந்த ஞானத்தைக் கைவிடாமனின்று விசுவத்தைக் கைவிட்டு அந்தஞானமாகவே சாதித்து இந்த ஞானத்தி னைக்கியத்தாலே சிவனைப் பெற்றுப் பேரின்பமே அநுபவித்துத் திருப்தியடையமாட்டாமல்,வாதனையின் மிகுதியாலே பராமுகராய்த் தாம்பெற்ற ஞானத்தினைப் பின்பு அநுபவிக்கலா மென்று நித்தத்துவம்பெற்றிருப்பாரைப்போல, நெகிழ்ந்திருந்தவர்கள் தமக்குப்பேறான சிவபோகத்தை இழந்துபோகாநிற்பர்கள். ஆதலால் நீயும் இந்தத்தவத்தைப் பெற்றோமென்று கர்வியாய்ப்போகாதை, இடைவிடாமல் ஞானமாய் நின்றே சாதித்துப் பின்பு இந்த ஞானத்தில் உறுதலாலே ஞானமானதுந் தலைமறையப் பலிக்கத்தக்க சிவபோகத்திலே அழுந்தி அநுபவிப்பாயாக என்க.

இதற்குப்பிரமாணம்—"வித்தினி லன்றி முளையில்லை யம்முளை-வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை-வித்து முளையு முடனல்ல வேறல்ல-வத்தன்மைத் தாகு மறநெறி தானே." என்னும் திருமந்திர மாலையாற்காண்க. (ருஎ)

இந்தச் சிவரூபந்தன்னை எப்படி அறிவேனென்ற மாணாக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானன்று—நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன் றடியன்று தான்.

(இ-ள்.) ஒன்று அன்று-எல்லாப் பொருள்களுங் கலந்த விடத்திலே உதிப்பது ஒன்றாகையாலே, எல்லாப்பொருளுந் தானாய் ஒன்றாயிருப்பதும் அன்று,—இரண்டு அன்று - தன்னிடத்திலே சுட்டறவிளைகின்ற அர்த்தமாகையினாலே, இரண்டாயிருப்பதும் அன்று,—உளது அன்று - வாக்குமனாதீதமாயிருப்பது ஒன்றாகையாலே, பிரத்தியக்ஷமாயிருப்பதும் அன்று, —இலது அன்று - ஞானவான்களுக்கு ஞானயோகத்தின் முதிர்ச்சியிலே பரமானந்தத்தை அளித்து நிற்கையாலே, இல்லாத பொருளும் அன்று,— நன்று அன்று தீது அன்று-ஆன்மபோதம் இறந்தாற் கூடும்பொருளாகையாலே, ஆன்மாக்களால் நன்று தீதென்று சுட்டப்படுவதும் அன்று,— நான் அன்று-நானே பிரமமென்று அகங்கரிக்கின்ற பசுஞானமும் அன்று, —நின்ற நிலை அன்று - அநாதியேதொடங்கி இன்றளவும் நிலையான பாசஞானமும் அன்று,—நீ அன்று - பசுஞானத்தையும் பாசஞானத்தையுமுடைய ஆன்மாவும் அன்று,—நின்னறிவும் அன்று - உனக் கறிவாய்நிற்கின்ற ஞானமும் அன்று,—தலை அன்று அடி அன்று தான்-ஆதியும் அன்று அந்தமும் அன்று இந்தச் சிவசொரூபம் என்க. (ருஅ)

இப்படி நிச்சயார்த்தமா யிருப்பதொன்று கூடும்படி எப்படியென்ற மாணுக்கனை நோக்கி அருளிச்செய்கின்றார்.

செய்யாச் செயலையவன் செய்யாமை கண்டுதனைச்
செய்யாச் செயலிற் செலுத்தினு—லெய்யாதே
மாணவக வப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கு
மாணவமு மித்தா லறி.

(இ-ள்.) செய்யாச்செயலை அவன் செய்யாமைகண்டுதனைச் செய்யாச் செயலில் செலுத்தினுல் - ஆன்மாவினிடத்திற் பக்குவத்திலே விளைந்த பரமானந்தத்தை ஆன்மா அறிந்து உண்டாக்கிக் கொண்டதும் அன்று. சிவன் விகாரியாய்நின்று கொடுத்ததும் அன்று. ஞானமானது கரைந்தவிடத்திலே பிரகாசிக்கின்ற படியை அறிந்து இந்தப்பரமானந்தம்பிரகாசிக்கின்றபொழுதே இதுவுந்தோன்றமல் அதுவே சுகரூபமாய்நிற்கும்படி அந்த நினைவானது அவிழத்தானும் அந்த நிராலம்பமேயானுல்,—மாணவக வாஞ்சைக் கொடிவளர்க்கும் ஆணவமும் அப்பொழுதே எய்யாதே இத்தால் அறி - மாணவகனே! ஜநநத்துக்குக் காரணமாகக் குறிக்கப்படாநின்ற ஆசையாகின்ற கொடிகளை வளர்க்கப்படாநின்ற மூலமலமாகிய ஆணவமலமும் அப்பொழுதே வேறற்று விடாநிற்கும். நீ ஒன்றுக்கும் அஞ்சாதை, இப்படி அறிவாயாக என்க. (ருக).

இந்தப்பொருளைச்சாதிப்பா னொருவனுக்கு ஒரு செயலுங்கூடவொண்ணுதபடியாலே, அவனுக்கு ஒரு நியமமும் வேண்டாமென்று அருளிச்செய்கின்றார்.

ஏதேனுங் காலமுமா மேதேனுந் தேசமுமா
மேதேனுந் திக்கா சனமுமா—மேதேனுஞ்
செய்வா னொருவனுமாஞ் செய்யாச் செயலதனைச்
செய்யாமை செய்யும் பொழுது.

(இ ள்.) ஆன்மபோதம் உள்ள அளவும் இதற்கு அரிதாகிய அந்த நிராலம்பமான வுண்மை ஒருவன் தன்செயலன்றியே கூடுமிடத்து, எல்லாக்காலமுமாய் எல்லாத் தேசமுமாய் எல்லாத் திக்குகளுமாய் எல்லா ஆதனங்களுமாய் எல்லாத் தொழில்களினு நிற்பா னொருவனும் என்க. ()

இனி இந்தச் சிவயோகத்தை எளிதாகச் செய்வதாயிருக்கும்போதே செய்யாதிருக்கின்றபடியும் இந்தச் சிவயோகத்தின் பெருமையும் அருளிச்செய்கின்றார்.

செய்தற் கரிய செயல்பலவுஞ் செய்துசில
ரெய்தற் கரியதனை யெய்தினர்க—ளையோநாஞ்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு.

(இ-ள்.) சிலர் செய்தற்கு அரிய செயல்பலவும் செய்து எய்தற்கு அரியதனை எய்தினர்கள் - சிலர் கர்த்தாவைநோக்கித் தங்கள் சரீரத்தையும் மனத்தையும் வருத்தி யாவராலுஞ் செய்தற்கரிய செயல்கள் பலவற்றையுஞ்செய்து பெறுதற்கரிய பேற்றினைப்பெற்றார்கள்,—ஐயோ செய்யாமைசெய்து செயல் அறுக்கலாயிருக்கச் செய்யாமை நாம் செய்யாதவாறு .

ஐயோ மாணவகனே! எல்லாவிகற்பங்களும் ஒழிந்து நிர்விகாரமான சுபாவத்தைப்பொருந்திச் சுகதுக்கங்களிலே மோத்துண்பதான ஜநநமரணங்களை வேரறுத்துவிடலாயிருக்க, இந்த நிர்விகாரமான வுண்மையை நாஞ் செய்யாதிருப்பது என்னையோ என்க.

இப்படிப்பொதுப்படச் சொன்ன இந்த வுண்மையை இவன் நெகிழாமல் விரைந்துகூடுகைப் பொருட்டு உபாயமாகவே அருளிச்செய்ததெனக் கொள்க. (சுக)

இந்த உண்மைகளில் ஒன்றும் அறியாத விசுவத்தார் படுகின்ற கிலேசத்தைக் கண்டு மேல் நொந்து அருளிச்செய்கின்றார்.

இப்பொருள்க ளியாதேனு மேதெனினு மொன்றுசெய்த
லெப்பொருளுஞ் செய்யா தொழிந்திருத்தன்—மெய்ப்பொருளைக்
கண்டிருத்தல் செய்யாதே கண்ட மனிதரெலா
முண்டிருப்ப தென்னோ வுரை.

(இ-ள்.) மாணவகனே! எண்ணிறந்த ஆன்மாக்களில், பெறுதற்கரிய மக்களாக்கையைப் பெற்ற ஆன்மாக்கள் சிவனைநோக்கி, மெல்வினையென்று சொல்லப்பட்ட சரியையாதல் கிரியையாதல் வல்வினையாதல் ஆதாரயோகமாதல் இவற்றில் ஒன்றைச்செய்தல், ஒன்றையுஞ் செய்யாது நிராதாரயோகத்தைச் செய்தல், இந்தவுண்மையான பொருள் நிற்கின்றமுறைமை அறிந்து, தானும் அந்த வுண்மையிலே முறைமையாகப் பார்த்துக் கூடியிருத்தல், இந்த முறைமைகளிலே ஒன்றைச்செய்து பெறுதற்கரிய பேறுகளைப்பெறாதே, தாந்தாம் விரும்பப்பட்ட தேகங்களும் அர்த்தங்களும் நிலையில்லாதபடி கண்டுபோதுகின்ற ஆன்மாக்கள் எல்லாரும் தேகங்களைப் போற்றிநின்று இதாகிதங்களின் பலன்களைப்புசித்து, அஞ்ஞானமெய்ஞ்ஞானமாய்ப்போதுகின்ற இது என்னகாரணம் இதனைநீ சொல்வாயாக. என்க.

ஞானத்துக்குப் பக்குவரல்லாத ஆன்மாக்களை நோக்கி நொந்து அருளிச்செய்த இதுவும், சர்வான்மாக்களுக்குங் கிட்டாதபொருள் உன்னுடைய பாக்கியத்தினாலே கிட்ட இதனைக் கைவிட்டு, வாதனையைக் கைவிடாமல் நின்று, இந்திரியவேடர்க்கு அடிமையாய்ப் பேறிழந்து போகாதே, இந்த வுண்மையிலே இடைவிடாமல் நின்று சாதித்தற் பொருட்டு, அந்நியோபதேசமாக அருளிச்செய்ததெனக்கொள்க. (சுஉ)

இனிச் சீடனைப்பார்த்து ஒன்று அருளிச்செய்கின்றார்.

வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடிலென்
நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென்—கூட்டில்வாள்
சாத்தியே நின்றிலையேற் றக்கனார் வேள்விசெய்த
மாத்திரமே யாங்கண்டாய் வந்து.

(இ-ள்.) வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடில் என்-முன்பு மருவிப்போந்த தொழில்களையும் புத்திர மித்திர களத்திராதிகளையுங் கைவிட்டுத் துறவறத்திலேபோய் நின்றாலும் பிரயோசனம் என்,—நாட்டிலே நல்வினைகள் செய்திடில் என் - இல்லறத்திலேயிருந்து நன்றான எக்கியாதி கன்மங்களைச் செய்தாலும் பிரயோசனம் என்,—கூட்டில் வாள்சாத்தியே நின்றிலையேல் - பொருந்தினதொரு நிலையிலே நின்றாயாயின் உனக்குப்

பிராணனுன சிவனைக்கூடி அவன் செயலாகவே கருதி உன்னுடைய செயலற நின்றிலையாகில்,—தக்கனார் வந்து வேள்விசெய்த மாத்திரமேஆம் கண்டாய் - தக்ஷப்பிராஜாபதி தன்னுடைய அகங்காரத்தின் மிகுதியாலே கர்த்தாவை இகழ்ந்து தன்னாலே செய்யப்பட்டதாகவே நின்று எக்கியத்தைச் செய்து ஒருபிரயோசனமுங் கைகூடாமல் நீங்காத துன்பமே பெற்றாற்போல, நீயும் கர்த்தாவைக் கைவிட்டு உன்னுடைய செயலென்றே நின்று பெறுதற்கரிய பேற்றை இழந்துபோவை. ஆகையால், இப்படிச்செய்யாமல் அந்தவுண்மையிலே நிற்பாயாக என்க. இது திருட்டாந்த பூர்வமாக அறிவித்தது. (கூரு)

இன்னமும் இவன் செயலறநின்று சாதிக்கும் உபாயத்தை உறுதி பிறக்கும் வண்ணம் அருளிச்செய்கின்றார்.

சிவன்முதலே யன்றி முதலில்லை யென்றுஞ்
சிவனுடைய தென்னறிவ தென்றுஞ்—சிவனவன
தென்செயல தாகின்ற தென்று மிவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான்.

(இ-ள்.) சிவன் முதலே அன்றி முதல் இல்லையென்றும் - நித்தனாய்ச் சுத்தனாய் எப்பொருட்குந் தாரகமாய்க் கிருத்தியகாரணனுமாய்க் கைவல்லிய தியாகியுமாய் அசைவின்றியேநிற்கின்ற சிவனாகின்ற கர்த்தாவை யொழிய வேறு நானென ஒருமுதல் இல்லையென்றும்,—என் அறிவது சிவனுடைய தென்றும்-ஆன்மாக்கள் யானே அறிந்தேனென்கின்ற அறிவெல்லாம் அவனாலொழிந்து அறியப்படாதாகையால், நீயும் இதனை அவன் அறிவேயென்றும்,—என் செயலதாகின்றது சிவனவனதென்றும்-எக்காலமும்ஆன்மாக்கள் யான்செய்தேனென்று செய்யத்தக்க செயல்களெல்லாம் அந்தக் கர்த்தாவின் செயலாகையால், நீயும்இதனை அந்தக்கர்த்தாவின் செயலேயென்றும்,—இவையிற்றைத்தன்செலாக்கொள்ளாமைதான்-இப்படிநினைப்பன சொல்வன செய்வனவான இவற்றை எப்பொழுதும் தன்னுடைய செயலாகக் கொள்ளாமல், சகலமுங் கர்த்தாவின் செயலேயென்று யாவர்தான் அறநின்றார்கள் அவர்கள்அந்தப்பொருள் தானாய்விடுவர்கள். என்க.

இனி இந்த அர்த்தஞ்சைவசித்தாந்தத்திலொழிந்து வேறொரு சமயங்களினும் இல்லையென்று அருளிச்செய்கின்றார்.

இன்றிச் சமயத்தி னல்லதுமற் றேழையுட
னென்றுசொலி மன்றத்து நின்றவரா—ரின்றிங்கே
யங்க முயிர்பெறவே பாடு மடியவரா
ரெங்குமிலை கண்டா யிது.

(இ-ள்.) இன்று இச்சமயத்தின் அல்லது ஒன்றுசொலி ஏழையுடன் மன்றத்து நின்றவர் மற்று ஆர் - இப்பொழுது இந்தச் சைவசித்தாந்தத்திலொழிந்து இப்படிப்பட்ட பரமஞானத்தையும் அருளிச்செய்து ஞானசத்தியுடனே கர்த்தா திருவம்பலத்திலே எழுந்தருளிநின்று ஆனந்த நிருத்தஞ்செய்தருளித் தன்னுடைய மெய்யடியார்க்கு எடுத்தருளிய ஸ்ரீபாதமே

இரக்ஷையென்றுகாட்டிய கையுடனே மோனத்தாலேமொழிந்துதிருக்கண் சாத்தியருளி எல்லாருங் காணவேகின்றார் வேறொருசமயங்களில்உண்டோ? —இன்று இங்கே அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவர் ஆர் - இன்று இந்த உலகத்திலே இந்தச்சமயத்திலே ஞானமுதமாகிய திருமுலைப்பாலை அமுதுசெய்து இந்தப்பெருமையாலே நெடுநாள் அஸ்தியாகக்கிடந்தது முன்புபோலே பிராணன்பெற்றுப் பிள்ளையுமாய் உள்ள வயதும் உற்று எழுந்திருக்கும்படி திருவாய்மலர்ந்தருளி இதனைப் பரசமயிகள் தங்கள் அஞ்ஞானத்தாலே சித்துக்காட்டினு ரென்னுமல் (சித்தர் சித்துகாட்டுவது மீண்டும் அப்பொழுதே பொய்யாய்விடு மாகையால், இப்படி யன்றியே) இந்தப்பெண் நெடுங்காலமிருந்து சிவத்தை அடையும்படி நிறுத்தினவர் சம்பந்தப்பெருமா ணையனுரொழிந்து வேறுமொருசமயங்களில் உண்டோ, —இது எங்கும் இலை கண்டாய் - இந்த முறைமைகள் இந்தச்சமயத்திலொழிந்து மாணவகனே! வேறொரு சமயங்களினும் இல்லைக்காண்என்க. (௬௫)

இனிஇந்தச் சைவசித்தாந்தத்தி னுறுதிப்பாட்டிலே நின்ற சிவஞானிகள் பெருமையை அருளிச்செய்கின்றார்.

விரிந்துங் குவிந்தும் விழுங்குவர்கண் மீண்டுந்
தெரிந்துந் தெரியாது நிற்பர்—தெரிந்துந்
தெரியாது நிற்கின்ற சேயிழைபா லென்றும்
பிரியாது நின்றவனைப் பெற்று.

(இ-ள்) விரிந்தும் குவிந்தும் விழுங்குவர்கள் - இந்தச் சிவரூபம் தம்மிடத்தில் நிற்பதுபோல எவ்விடத்தும் நிற்கின்ற முறைமையைக் கண்டு பேரின்பத்தை எய்தியும் இதிலுறுதலாலே தம்மையும் பிரபஞ்சத்தையும் அந்தப்பொருளையும் மறந்து சுபாவத்திலே அழுந்தியும் அநுபவித்தல் செய்யாநிற்பர் அன்றி,—மீண்டும்தெரிந்தும் தெரியாது நிற்பர்-இந்தமுறைமைகளிலே அநுபவியா நிற்கும்போதும் பிராரத்தத்தாலே பிரபஞ்சந் தோன்றினலுஞ் சொரூபத்தினைக்கியத்தாலே பிரபஞ்சநீதி அறியாமல் அந்த வுண்மையைக் கண்டு நில்லாநிற்பர்கள் சிவஞானிகள்,—தெரிந்தும் தெரியாதுநிற்கின்ற சேயிழைபால் என்றும் பிரியாது நின்றவனைப்பெற்று- அநாதியே சர்வத்தையும் அறிந்தும் அறிவித்தும் நடத்தாநிற்கும்போதுந் தான் ஒரு விகாரங்களினும் படாமல் நிற்கின்ற ஞானசத்தியுடனே எக்காலமும்விட்டு நீங்காத சிவனைத் தங்களிடத்தில் அறுதியாகப்பெற்று என்க.

இது சிவஞானிகளுக்கு ஒடுக்கத்திலும் விரிவிலுந் திருவிலும் இந்த வுண்மையே யொழியப் பிரபஞ்சவாதனை கூடாதென்று அறிவித்தது. (௬௬)

இன்னமும் ஒரு திருவெண்பாவாலே இதனை விளங்க அருளிச்செய்கின்றார்.

ஆதனமு மாதனியு மாய்நிறைந்து நின்றவனைச்
சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச்—சேதனனைச்
சேதனனி லேசெலுத்திச் சிற்பரத்த ராயிருப்ப
ரேதமறக் கண்டவர்க ளின்று.

(இ-ள்.) ஆன்மாக்களுக்கு இருப்பிடமான தத்துவங்களையும் இவையிடமாக நிற்கின்ற ஆன்மாக்களையும் அநாதியே பொருந்திஅவை அவராய்

அல்லவுமாய்நிற்கின்ற சைதன்னியசொரூபனான சிவனே அவன் காருண்ணி யத்தினாலே ஞானமே திருமேனியாகக்கொண்டு எழுந்தருளிவந்த ஆசாரி யனைக்கொண்டே தெளிந்து, தாமும் அந்தச்சைதன்னிய சொரூபராய், நிற்கின்ற தம்மையும் அந்தச்சைதன்னியத்தோடு கரையும்படி அந்தச் சிவன்கையிலே கொடுத்து, ஞானத்துக்கு மேலாகிய அந்தச்சிவமாகியே இன்றும் இராநிற்பர்கள், திரோதாயிநீங்கத் தரிசித்த கலியாணர்கள் என்க.

இப்படி நிற்கத்தக்க சிவஞானிகளிடத்தில் உண்டான விசேஷங்கள் அருளிச்செய்கின்றார்.

தாமடங்க விந்தத் தலமடங்குந் தாபதர்க
டாமுணரி னிந்தத் தலமுணருந்—தாமுனியிற்
பூமடந்தை தங்காள் புகழ்மடந்தை போயகலு
நாமடந்தை நில்லா ணயந்து.

(இ-ள்.) தாம் அடங்க இந்தத்தலம் அடங்கும் தாபதர்கடாம் உண ரில் இந்தத்தலம் உணரும் - இப்படி ஞானத்திலேநின்று சாதித்தவர்கள் அந்தச் சிவனைப்பெற்றுச் சிவனிடத்திலே ஒடுங்கவே, ஞானமும் ஒக்க ஒடுங்காநிற்கும், இப்படிப்பட்ட சிவஞானிகள் பிராரத்தத்தாலே நிலைதிரிந் தாலும் முன்பு ஒடுங்கினஞானமும் ஒக்க உணர்ந்து முன்பு மாயை சீவித் தாற்போல இப்பொழுதும் இந்தஞானமே இவனுக்குத் தனுகரண புவன போகங்களுமாய் நிற்கும்;—தாம் முனியின் பூமடந்தைதங்காள் புகழ்மடந் தைபோய் அகலும்நாமடந்தை நயந்து நில்லாள்-இப்படிப்பட்ட சிவஞானி களுக்குக் கோபப்பிரியங்கள் இல்லையாயினும் மிக்க பாவிகளால் அவர்கள் திருவுளங் கருகினகாலத்து அந்தப்பாவிகளுக்குண்டான ஐசுவரியமும் போய் அவர்கள் கீர்த்தியும் விட்டுப்போய் அவர்கள் வாக்குகளும் தம்பியா நிற்கும் என்க.

சிவனைக்கூடிநின்ற சிவஞானிகளுக்குப் பிராரத்தத்தாலே நிலைதிரிந்தாலும் விசு வங்கூடாமல் ஞானங்கூடின காரணம் ஏதென்னில்? ஞானத்திலே நின்றவன்விழுந் தால் அதற்குக்கீழான பிரபஞ்சத்திலே விழாநிற்பன். ஞேயத்திலே அழுந்தினவ னுக்கு நிலைதிரிந்தால் அதற்குக்கீழான ஞானத்திலேவிழுவன். இதனை யொழிந்து விசுவங்கூடாதென அறிக. (சுஅ)

இப்படிச் சிவனைப்பெற்றவர்கள் முத்தராய் விடுவதொழிந்து, ஒன்றை ஆக் குதல் அழிக்குதல்செய்யின், அவை ஈசுவரன் கிருத்தியமாயிருக்க, இவர்களுக்குண் டானபடி எப்படியென்ற மாணாக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்—றுரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளு
மாக்கியிடு மன்பர்க் கவன்.

(இ-ள்.) துரியங் கடந்த சுடர்த்தோகையுடன் என்றும் பிரியாதே நிற் கின்ற பெம்மான் - ஆன்மபோதத்தால் அறிதற்கரிய ஞானசத்தியுடனே எக்காலமும் விட்டு நீங்காமல் நிற்கின்ற பரமேசுரனானவன்,—துரியத்தைச்

சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளும் அவன் அன்பர்க்கு ஆக்கியிடும் - தன்னுடையவளவிலே மிக்க அன்பைவைத்த ஆன்மாக்களை ஆன்மபோதங்கூடாமல் விழிப்பித்த ஞானசத்தியிலே கூட்டித் தன்னாலே செய்யப்பட்ட அநுக்கிரகநிக்கிரகங்களையும் அவர்களைக்கொண்டு தான் கூடி நின்றுசெய்வித்து அவர்கள் செய்தார்களாம்படியே நிறுத்தாநிற்பன் என்க.

இப்படிப்பட்ட சிவஞானிகள் அருளாலே செய்த சாமர்த்தியங்களை நான்கு திருவெண்பாக்களாலே அருளிச்செய்கின்றார்.

ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்த—லேடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்த லீங்கிவைதா மோங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல்.

(இ-ள்.) முள்ளிவாய்க்கரையினின்று ஆற்றுப்பெருக்கிலேகோலின்றி ஓடஞ்செலுத்தித் திருக்கொள்ளம்பூதூர் சேர்ந்ததும், திருப்பட்டீச் சுரத்திலே முத்துச்சிவிகை பெற்றதும், திருவாவடுதுறையிலே உலவாக் கிழிபெற்றதும், திருமறைக்காட்டிலே திருக்கதவம் அடைக்கப்பாடியதும், திருவோத்தூரிலே ஆண்பனை பெண்பனையாகப் பாடியதும், திருக்கோலக் காவிலே பொற்றாளம் பெற்றதும், பாலையை நெய்தலாகப் பாடியதும், மதுரை வைகை நதியிலே திருவேடு எதிரேறப் பாடியதும், கூன் பாண்டியர் சுரநோய் தீர்த்ததும், திருமயிலையிலே என்பைப் பெண்ணாக்கியதும் ஆகிய இவ்வற்புதச் செயல்கள் உயர்ந்த புகழையுடைய அழகிய சீகாழிக்கு அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்திநாயனார் சிவபிரான் திருவருளாலே செய்யப்பட்டவைகளாம் என்க. (௭௦)

கொல்கரியி னீற்றறையி னஞ்சிற் கொலைதவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடனீந்த—னல்ல
மருவார் மறைக்காட்டில் வாசறிறப் பித்த
திருவாமூ ராளி செயல்.

(இ-ள்.) பல்லவராஜன் அநுமதிபெற்று க்ஷமணர்கள் விடுத்த கொல்கின்ற யானையினின்றும் அடைத்த நீற்றறையினின்றும் விட மூட்டுதெலி னின்றும் கொலையைப்போக்கியதும், கல்லே தெப்பமாகக்கொண்டு கடலை நீந்திக் கரையேறியதும், நல்லவாசனை பொருந்துந் திருமறைக் காட்டிலே திருக்கதவந் திறக்கப்பாடியதும் ஆகிய அற்புதச்செயல்கள் திருவாமூரை ஆண்டருளிய திருநாவுக்கரசுநாயனார் சிவபிரான் திருவருளாற் செய்யப் பட்டவைகளாம் என்க. (௭௧)

மோக மறுத்திடினு முத்தி கொடுப்பதென
வாகமங்கள் சொன்ன வவர்தம்மைத்—தோகையர்பாற்
றூதாகப் போகவிடும் வன்றொண்டன் றொண்டுகளை
யேதாகச் சொல்வே னியான்.

(இ-ள்.) ஒருவன் மோகத்தை ஒழித்தால்அவனுக்குவீடுபேற்றையாம் அருளுவது முறையென்று, வேதாகமங்களிலே விதித்தருளிய மேம்பட்ட

சிவபிரானையே,பரவையார் சங்கிலியார் இருவர்மாட்டும் தூதராகச்செலுத்துந்திருவருளை அப்பெருமான்மாட்டுப்பெற்ற வன்றொண்டராகிய சுந்தரமூர்த்திநாயனாரது தொண்டுகளை யான் எத்துணைப் பெருமையுடையதென்று அளவிட்டுரைப்பேன் என்க. (எஉ)

பாய்பரியொன் றூர்ந்தப் பரமானந் தப்பரனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து—மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன்.

(இ-ள்.) தாவுகின்ற குதிரைமேற்கொண்டு எழுந்தருளிய மேலாகிய பேரின்பவடிவமுடைய சிவபிரானை(அவரது திருவருள்பெற்று)த்தூயமலர்போலுந் திருவாயாற் புகழ்ந்து திருவாசகம் பாடி, யாங்கள் (அத்திருவாசகத்தை ஓதுதலால்) பொய்யாகிய கருப்பத்தின் வருத்தம் அறியாவண்ணம் செய்தருளினர்.திருவாதவூரை ஆண்டருளிய தேன்போலமனத்திற்குஇனித்தலுடைய மாணிக்கவாசகமூர்த்திநாயனர். இதனைக்காண்பாயாக என்க.()

இப்படிப்பட்ட சிவயோகமே முத்தியைத் தருவதென்றும் நின்றயோகங்களெல்லாம் ஜநநத்தைவிளைக்குமென்றும் அருளிச்செய்கின்றார்.

அம்மையினு மிம்மையினு மச்சந் தவிர்த்தடியா
ரெம்மையுமா யெங்கு மியங்குதலான்—மெய்ம்மைச்
சிவயோக மேயோக மல்லாத யோக
மவயோக மென்றே யறி.

(இ-ள்.) தம்பிரானார் திருவடியைப்பெற்ற சிவயோகிகள், பதமுத்திகளாலுண்டான பயங்களையும், பிராரத்தத்தாலே இந்த உலகத்திலுண்டான பயங்களையுஞ் சொருபத்திணக்கியத்தாலே கெடுத்து,அந்தச் சொருபத்துக்குள்ளளவும் வியாத்தராய்,ஒருசங்கற்ப விகற்பங்களுமின்றியே, எவ்விடத்துந் தங்கள் சுவேச்சையிலே திரிகையால்,மாணவகனே ! இப்படிச் சற்காரியமான சிவயோகமே, சிவனை உள்ளபடியறிந்து கூடினயோகமாம். மற்றுமுள்ளயோகங்களெல்லாம் சிவனைஉள்ளபடியறியாத யோகங்களாகையால், அவையெல்லாம் ஜநநத்தை யுண்டாக்குமென்றே அறிவாயாக என்க.

ஆன்மாக்களெல்லார்க்குங் கர்த்தா ஒருவனுயிருக்க, சிலரைப் பதமுத்திகளிலேவைத்துஞ் சிலரைத் திருவடியிலே சேர்த்துக்கொண்டுஞ், சிலரை விசுவத்திலே நிறுத்தியுஞ் செய்தால், பக்ஷவாதியாகானோ அவனுடையகிருபைக்குப் போதுமோ வென்ற மாணுக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

மன்னனரு ளெவ்வண்ண மானுடர்பான் மாணவக
வன்ன வகைய தரனருளு—மென்னி
லடியவரே யெல்லாரு மாங்கவர்தா மொப்பி
லடியவரே யெல்லா மறி.

(இ-ள்.) மாணவகனே! இராஜாவானவன் தன்னுடைய ஆஞ்ஞைவழி நடக்கும் இராச்சியங்களில், பிராணிகளெல்லாரையும் இரக்ஷிக்கவேண்டுமென்கின்ற கருத்து எப்பொழுதும் உண்டாயிருந்தும், புத்திமான்களாய்ச் சாந்தராய்த் தன்னளவிலே மிகுந்த சிநேகராயிருக்கத்தக்கவர்களைத் தானாகப்பார்த்தும்,தன்னளவிலேசிநேகமின்றிக்காரியத்தைப்பெற்று ஆஞ்ஞைக்குப் பயந்திருக்கத்தக்கவர்களை ஒவ்வொரு முகங்களிலேவைத்தும், குண

ஹீனரா யிருக்கத்தக்கவர்களை அவர்களுக்குத்தக்க தண்டங்களிலேவைத்துத்தண்டித்துக்குணவான்களாக்கியுஞ்செய்கின்றஇவையெல்லாங் கிருபையேயானாற்போல, பரமேசுவரருடைய திருவுள்ளம் எல்லாரளவிலும் ஒத்தவாறாயிருப்பினும், மலபாகமுண்டாமளவும் ஆன்மாக்களுக்குத் தனுகரணபுவனபோகங்களையுங் கன்மபலங்களையுங்கூட்டிச் சுகதுக்க வாதனைகளிலேவைத்தும்,சிலரைச் சத்திநிபாதக்குறைவுக்கீடாகப் பதமுத்திகளிலே வைத்தும், மிகுத்த சத்திநிபாதமுடையவர்களைத் திருவடியிலே சேர்த்தும் இங்ஙனம் முறையாக நிறுத்துவன். ஆனால், எல்லாரும் அவருக்கு அடிமையாயிருந்தாலும்,திருவடியைப்பெற்ற அடியார் ஒப்பில்லாத அடியராகையால், நீயும் இவையெல்லாவற்றையும் அறிந்து, திருவடியிலே பொருந்தியிருக்கின்ற சிவயோகமே ஜகநத்தை அறுக்கின்ற யோகமென்று இதிலே நிலைநின்று அநுபவிப்பாயாக என்க. (எரு)

இப்படி ஒப்பில்லாத அடியார்க்குத் தேகமுள்ளவளவும் பிராரத்தம் புசிக்கவேண்டுகையால், பிராரத்தம் புசிக்கும்போதும் ஆகாமியமேறாமற் புசித்தபடி, எங்ஙனமென்ற மாணாக்கனைநோக்கி, அருளிச்செய்கின்றார்.

உடம்புடைய யோகிகடா முற்றசிற் றின்ப
மடங்கத்தம் பேரின்பத் தாக்கிற்—றொடங்கி
முளைப்பதுமொன் றில்லை முடிவதுமொன் றில்லை
யிளைப்பதுமொன் றில்லை யிவர்.

(இ-ள்.) உடம்புடைய யோகிகடாம் உற்ற சிற்றின்பம் அடங்கத்தம் பேரின்பத்து ஆக்கில் - பிராரத்தநாசம் பிறக்குமளவும் உடம்பிருக்கத்தக்க சிவயோகிகள், தாம் சிற்றின்பத்தைப் பொருந்தினார்களாயினும், அந்தச் சிற்றின்பமானது நிலையில் வேறுபாடும், பாவனையில் வேறுபாடுமொழியப், பேரின்பத்திலே வேறுபாடில்லையாகையால், இவர்களுக்கு இந்தவிரண்டு வேறுபாடுமின்றிச் சொரூபத்திலே நிலைநிரிந்தாலும், ஞானத்திலொழிந்து, மலமாயைகன்மங்களிற்படார்கள் ; ஆதலாலே, கூடின சிற்றின்பங்களெல்லாம் ஞானத்தினிலையாலே மீண்டும் அந்தப்பேரின்பத்திலே ஆக்கிக்கொள்ளாநிற்பர்கள். இப்படிச்செய்யில் இவர்களுக்கு,—தொடங்கி முளைப்பதும் ஒன்றில்லை முடிவதும் ஒன்றில்லை இளைப்பதும் ஒன்றில்லை இவர் - பிராரத்தம் புசிக்கும்போதும் மறுமைக்குவித்தான ஆகாமியம் அங்குரிப்பது சிறிதுமில்லை. பிராரத்தநாசம் பிறந்து தேகமானது நழுவுங்காலத்து இவ்வுடம்புடன்கூடி மரிப்பதுமில்லை; ஆகையால், இவர்கள் ஒரு கன்மங்களாலும் ஒருசற்றுஞ் சலியார்கள் என்க. (எசு)

ஞானத்தாலே சொரூபத்தைக் கூடவேண்டுமாகில், அந்த ஞானந்தானே அமையாதோ, சொரூபமென்னும் ஒரு பொருளைக் கூடவேண்டுமோ வென்ற மாணாக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

பேரின்ப மான பிரமக் கிழத்தியுட
னோரின்பத் துள்ளானை யுள்ளபடி—பேரின்பங்
கண்டவரோ கண்டார் கடலுயிர்த்த வின்னமுத
முண்டவரோ யுண்டார் சுவை.

(இ-ள்.) பேரின்பமான பிரமக்கிழத்தியுடன் ஓரின்பத்து உள்ளானை உள்ளபடி பேரின்பம் கண்டவரோ கண்டார் - அளவிடப்படாத பரமானந்த

மான பிரமசத்தியுடனே இடைவிடாத சுகரூபனுயிருக்கின்றபரமேசுவரனை முறைமையிலேகூடி அந்தப்பரமாநந்தமே அநுபவிக்கின்ற சிவயோகிகளே சிவனை உள்ளபடி அறிவார்கள்,—கடல் உயிர்த்த இன் அமுதம் உண்டவரோ உண்டார் சுவை- கடலிற்பிறந்த இனிய அமுதத்தைப் புசித்து அதில் உண்டான இரசத்தில் அழுந்தினவர்களே, அமுதத்தைப் புசித்தவர்களும் அதிற் பிரயோசனமான நித்தியத்துவம் பெற்றவர்களுமல்லது, அந்த அமுதத்தைத் தரிசித்தமாத்திரத்தில் அதினுடைய இரசமுந் தெரியாது பேறுங் கூடாது. அதுபோல, மலமாயைகன்மங்களை நீங்கி ஞானத்தைத் தரிசித்தாலுஞ், சிவனைக்கூடிப் பரமானந்தத்தை அநுபவித்தா லொழிந்து, ஞானம் அறிந்த மாத்திரத்தில் சாயுச்சியங்கூடாது என்க. (எஎ)

இப்படிச் சுகரூபமாயிருக்கின்ற பரமேசுவரன் நானுவிதமாயிருக்கின்ற பிரபஞ்சத்துக்குக் கர்த்தாவாகில், அவனும் விகாரியாகானோ வென்ற மாணுக்கனைநோக்கி அருளிச்செய்கின்ருர்.

நங்கையினு னுமனைத்துஞ் செய்தாற்போ னுடனைத்து
நங்கையினுற் செய்தளிக்கு நாயகனு—நங்கையினு
நம்பியாய்த் தானடுவே நாட்டப் பெறுமிதுகா
ணெம்பெருமா னுர்த மியல்பு.

(இ-ள்.) நம்முடைய நினைவின்வசத்திலேநின்று, கைகள்முதலான அங்கங்களெல்லாந் தொழில்களைச் செய்துமுடியாநிற்க, அந்தச் செயற்பாடுகளெல்லாம் நம்மேலே ஏறுமாறுபோல, சுகரூபியாயிருக்கின்ற சிவன் சாக்ஷிமாத்திரமாயிருந்து தன்னுடையசத்தியாலே பிரபஞ்ச நடத்திநிற்க, இந்தச்சத்தியினும் நிர்விகாரமா யிருக்கின்ற சிவன்தான் ஒன்றைச் செய்யாதிருக்கும் போதும், இந்தச்சத்திக்குப் பிராணனும் நாயகனுமாகையாலே, இந்தச்சிவனையே கர்த்தாவாகச் சொல்லப்படுதலான் மாணவகனே! இவ்வளவேகாண் எம்முடைய கர்த்தாவுக்குச் செயலாயுள்ளது என்க. (எஅ)

இப்படி வெகுவிதயான சத்தியிலே, நிர்விகாரமான சிவன் பொருந்தி நின்றபடி எப்படியென்ற மாணுக்கனைநோக்கி, அருளிச்செய்கின்ருர்.

பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றுற்போ
லங்நிற மண்ணனு மம்பிகையுஞ்—செங்நிறத்த
ளெங்நிறத்த ளாயிருப்ப ளெங்கள் சிவபதியு
மங்நிறத்த னுயிருப்ப னுங்கு.

(இ-ள்.) பொன்னினது நிறமானமாற்றுனது கட்டியானபோதும் ஆபரணங்களானபோதும் மாற்றுக்கு வேறுபாடில்லாமைபோல, சுகரூபனை சிவனும் ஞானசொரூபமான சத்தியும் இந்த முறைமையேயாதலால், பிரபஞ்சநிமித்தமாகச் சத்தியானது யாதொருரூபமா யிருந்ததோ நம்முடையகர்த்தாவாகிய சிவனும் அந்தவிடங்கள்தோறும் அந்தந்த முறைமைகளாயே இராநிற்பன் என்க. (எகூ)

இன்னமுஞ் சிவனுடைய நிலைமையை விளங்க அருளிச்செய்கின்றார்.

தாரத்தோ டொன்றுவர் தாரத்தோர் கூறுவர்
தாரத்தோ டெங்குந் தலைநிற்பர்—தாரத்தி
னாதாந்தத் தேயிருப்பர் நாற்றானத் தேயிருப்பர்
வேதாந்தத் தேயிருப்பர் வேறு.

(இ-ள்.) தாரத்தோடு ஒன்றுவர் - சிருட்டிகாலத்திலே ஆன்மாக்கள் சூக்குமதேகத்துடனே இச்சாஞானக்கிரியை சீவிக்கைப் பொருட்டாகச் சிவனும் தம்முடைய சத்தியைத்தோற்றுவித்துத் தாமும் அந்தச்சத்தியுடனேகூடி இச்சாஞானக்கிரியாசொரூபமாவர்,—தாரத்து ஓர் கூறுவர்- அவர்களுக்குத் தூலதேகமாய் வகுப்புண்ணவேண்டித் தாமுஞ் சத்தியுமாக அர்த்த நாரீச்சுர விக்கிரகமாகாநிற்பர்,—தாரத்தோடு எங்கும் தலைநிற்பர்,—அந்த ஆன்மாக்களுக்கு மலபாக முண்டாகைப்பொருட்டு அவர்கள் கன்மங்களை அநுபவிக்கவும் ஆர்ச்சிக்கவும்வேண்டி, சத்தியுருவமான பிரமா விஷ்ணு உருத்திரர் மகேசுவரர் சதாசிவர் என்று சொல்லப்பட்ட விக்கிரகங்களுடனே அந்தாமூர்த்தியான பிரணவசொரூபமாய் ஆன்மாக்களிடங்களிலே மாயாதத்துவங்களுடனேகூடி நடத்தாநிற்பர்,—தாரத்தின் நாதாந்தத்தே இருப்பர் - மீண்டும் ஆன்மாக்களையுந் தத்துவங்களையும் பிரிக்கவேண்டி மகாமாயாசத்தியான நாதாந்த நிருவிகாரத்திலே இராநிற்பர்,—நாற்றானத்தே இருப்பர்-இவை ஒன்றையும்அறியாமல் உபாதானங்களிலே மறைபடவேண்டி நாலாந்தானமான திரோதானசத்தியிலே இராநிற்பர்,—வேதாந்தத்தே இருப்பர் - இவற்றுக்கு அநுக்கிரகஞ்செய்யவேண்டி வேதத்திலேமுடிந்தபொருளான பராசத்தியிலே இராநிற்பர்,—வேறு - இப்படி எல்லாமாய் நிற்கும்போதும் இவற்றுக்குத் தான்வேறுமாய்த் தன்னுடைய சுபாவமான சொரூபமாய் இராநிற்பர் என்க. (அo)

இப்படிப் பரமேசுவரன் எல்லாமாய் அல்லவுமாய் நிற்கின்ற முறைமையைப் பேதமென்னவோ அபேதமென்னவோ பேதாபேதமென்னவோ வென்ற மாணாக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்க ளொன்றாக
நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவா—லின்றுரைக்க
வென்னா லியன்றிடுமோ வென்போல்வா ரோதேனுஞ்
சொன்னாற்றா னேறுமோ சொல்.

(இ-ள்.) வெகுவிதமாயுள்ள சாத்திரங்களெல்லாம் ஒருசற்றுர்தரித்து நின்று அவனுடைய உண்மையை அறுதியிட்டுச் சொல்லமாட்டா. இப்படிப்பட்ட தொன்றை இப்பொழுது அறுதியிட்டுச்சொல்ல என்னால்முடியுமோ என்னையொப்பார் சிலர் சொன்னாலும் விசுவத்திலுள்ளார்க்கு ஏறிடுமோசொல்லாய் என்க.

இன்னமும் இவனுக்கு இந்த முறைமை விளங்கிற்றில்லையென்று நொந்து இப்படி அருளிச்செய்ததென்க்கொள்க. (அக)

இதனை இன்னமும் இவனறியும்படி அருளிச்செய்கின்றார்.

யாதேனுங் காரணத்தா லெவ்வுலகி லெத்திறமு
மாதேயும் பாக னிலச்சினையே—யாதலினாற்
பேதமே செய்வா யபேதமே செய்திடுவாய்
பேதாபே தஞ்செய்வாய் பின்.

(இ-ள்.) யாதொருகாரணத்தினாற் சர்வலோகங்களிலுமுள்ள எல்லாப் பொருள்களுஞ் சத்தியைப்பொருந்தின சிவனுடைய அடையாளமேயாகையால், நீயும் இதனைப்பேதமென்பாய் அபேதமென்பாய் பேதாபேதமென்பாய் இவற்றிற் பொருந்தினதொன்றைச் சொல்வாயாக என்க.

பின் என்றது ஞாதாக்களுக்கு இந்த மூன்றுகாரியங்களுங் கருத்தல்லவென்றது. அடையாளமென்றது சர்வமுஞ் சைதன்னியமாக நின்றவர்கட்கன்றி நின்றிரக்ஷிக்கையாலென அறிக. (௮௨)

இந்தமுறைமை அர்த்தத்தில் அழுந்தினவனுக்கொழிந்து,கேட்டவனுக்கு விளங்காதென்று, இன்னமும் இதனை விளங்க அருளிச்செய்கின்றார்.

நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்தெரியா
மன்றினுணின் றுடன் மகிழ்ந்தானுஞ்—சென்றுடனே
யெண்ணுருவமைம் பூதமுத லெட்டுருவாய் நின்றானும்
பெண்ணுறநின் றாடும் பிரான்.

(இ-ள்.) நீ சொல்லுகின்றபேதமும் அபேதமும் பேதாபேதமும் அன்று. சங்காரகாலத்திலே, சத்தியையும் ஒடுக்கிக்கொண்டு சங்காரதாண்டவஞ் செய்தருளின தம்பிரானே, சிருஷ்டிகாலத்திலே, தோற்றுவிக்கத்தக்கபொருள்களுடனே பொருந்திய பஞ்சபூதங்களுஞ் சந்திராதித்தரும் ஆன்மாக்களுமாய் நின்றானும், திதிகாலத்திலே, அடியார்பிறவித்துயரங்கெடத்திருவம்பலத்தில் ஆநந்தநிருத்தத்தை விரும்பினானுமாகையால், அநாதியே தன்னுடைய சொரூபந்தோன்றாமல் ஆன்மாவாய் நின்ற முறைமைபோல, ஆன்மபோதந்தோன்றாதபடி சிவனையே நின்றவர்களுக்கொழிந்து, சிவனுடைய உண்மைதெரியாது என்க. (௮௩)

இனிச்சொரூபத்திலே, ஒருதன்மையாய் நிற்குமுறைமையை அருளிச்செய்கின்றார்.

சிவமே சிவமாக யானினைந்தாற் போலச்
சிவமாகி யேயிருப்ப தன்றிச்—சிவமென்
றுணர்வாரு மங்கே யுணர்வழியச் சென்று
புணர்வாரு முண்டோ புவி.

(இ-ள்.) சிவமேசிவமாக யான்நினைந்தாற்போலச் சிவமாகியே இருப்பதன்றி-பேதமும் அபேதமும் பேதாபேதமு மறப் பக்குவத்திற் பிரகாசித்த சிவசொரூபமே சொரூபமாக வேறொரு விகற்பமுங்கூடாமல் நான்அநுபவித்தபடியே உன்னையும் நிறுத்த நினைந்தாற்போல, மாணவகனே! நீயும் ஒருவிகற்பமுங் கூடாமல் அந்தச்சொரூபமே சொரூபமாக இருப்பதொழிந்து,—சிவமென்று உணர்வாரும் அங்கே உணர்வு அழியச்சென்று புணர்வாரும் உண்டோ புவி - தானும் தனியே ஒருமுதலென்றும், சிவனும்

தனித்தொருமுதலென்றும் தன்னுடைய போதத்தாலே இந்தச்சிவனை அறியவிசாரிப்பாரும், அவ்விடத்தேதான்கெட்டுச் சிவத்துடனே பொருந்த விசாரிப்பாரும் உண்டோ உலகங்களில் என்க. (அச)

இன்னமும் இதனை விளங்க அருளிச்செய்கின்றார்.

அதுவிது வென்று மவனானே யென்று
மதுநீயே யாகின்ற யென்று—மதுவானே
னென்றுந் தமையுணர்ந்தா ரெல்லாமி ரண்டாக
வொன்றாகச் சொல்வரோ வுற்று.

(இ-ள்.) ஆன்மாவும் சிவமும் எப்பொழுதும் இரண்டாயிருக்குமென்றும், சிவமென்று ஒருமுதலில்லை ஆன்மாத்தானே சிவமென்றும், சிவம் நீயென்று வேறில்லை உன்னுடைய வுபாதிகள் நீங்கினபொழுதே நீதானே சிவமாகின்றாயென்றும், நான் சிவனுடனேகூடிச் சிவனாய் விட்டேனென்றும், தம்மையுள்ளபடி அறிந்திருக்கின்ற சிவயோகிகள் இப்படியே பேதமாகவும் அபேதமாகவும் பேதாபேதமாகவும் சொல்லுவார்களோ மாணவகனே! என்க. (அரு)

இனிக்கர்த்தா எல்லாமாய்நிற்கின்ற சுபாவத்தை விளங்க அருளிச்செய்கின்றார்.

ஈறாகி யங்கே முதலொன்றா யீங்கிரண்டாய்
மாறாத வெண்வகையாய் மற்றிவற்றின்—வேறா
யுடனா யிருக்கு முருவுடைமை யென்றுங்
கடனா யிருக்கின்றான் காண்.

(இ-ள்) ஈறாகி அங்கே முதல் ஒன்றாய் - சர்வமுமுடிந்த விடத்தே, சிவம் ஒன்றுமேயாய்,—ஈங்கு இரண்டாய் - மீண்டுஞ்சிருஷ்டிகாலத்திலே, சத்தியைத் தோற்றுவித்தும் அந்தச்சத்தியுந் தாமுமாய்,—மாறாத எண் வகையாய்-சர்வத்தையும் அந்தச்சத்தியிடமாய் நின்றுந் தோற்றுவித்துஅந் தச்சத்தியும் இவையுங் கூடிநின்று நடக்கும்படி ஒழிவற்ற அட்டமூர்த்தியுமாய்,—மற்று இவற்றின்வேறாய் - இப்படி இவற்றிற்பொருந்தி நிற்கும்போதும் இவற்றுக்குத் தான்வேறுமாய்,—உடனாய் இருக்கும் உருவுடைமை - இப்படி வேறாய் நிற்கும்போதும் ஒருமுதல் போல இவைதானேயாய் நிற்கின்றஉண்மையை,—என்றும் கடனாய் இருக்கின்றான்காண்-மாணவகனே! எப்பொழுதும் அவன் உடையனா யிருக்கின்றான்காண் என்க.

இது பேதமென்பார்க்கும் அபேதமென்பார்க்கும் பேதாபேதமென்பார்க்கும் இவை யல்லவென்பார்க்கும் பொருந்திநிற்ப னென்னுமுறைமை அறிவித்தது.(அசு)

சிவனுக்குச் சர்வமுந் திருமேனியாகில், உடல்உறுவதெல்லாம் உயிர்உறுதோ வென்ற மாணுக்கனைநோக்கி, அருளிச்செய்கின்றார்.

உன்னுதரத் தேகிடந்த கீட முறுவதெல்லா
முன்னுடைய தென்னாய்நீ யுற்றனையோ—மன்னுயிர்க
ளவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுவுஞ்
செவ்வகையே நின்றசிவன் பால்.

(இ-ள்.) மாணவகனே! உன்னுடைய வுதரத்திலே, நானாவிதமாய்கிடக்கின்ற ஜந்துக்கள் வினைக்கீடாகப் படுகின்ற சுகதுக்க வாதனைகளெல்லாம்,

உனக்குள்ளவினைபோல நீ கூடிநின்று அநுபவித்ததுண்டோ? ஆகையால், சர்வத்தையுங்கூடிநிற்கும்போதேயும் அவை ஒன்றுடனும் பற்றறநின்று பிரகாசிக்கின்ற சிவனிடத்திலே, அவனருளாலே நிலைபெற்று நிற்கின்ற ஆன்மாக்கள், ஆகையும் அழிகையுமாய் வருகின்றவுண்மை, அந்தமுறைமைபோலக்காண் என்க.

இது சுகதுக்கவாதனைகள் ஆன்மாவுக்கொழிந்து சிவனுக்கில்லையென்னும் முறைமை அறிவித்தது. (அஎ)

சிவன் சுகதுக்கவாதனைகள்கூடாமல் நிற்கும்போதே சர்வமுந்தானாக நிற்கின்ற சாமர்த்தியம் அருளிச்செய்கின்றார்.

அவனே யவனி முதலாயி னானு
மவனே யறிவாய்நின் றானு—மவனேகா
ணாகிப் பெண்ணா யலியாகி நின்றானுங்
காணாமை நின்றானுங் கண்டு.

(இ-ள்.) மாணவகனே! பிருதிவிமுதல் நாதமீறானதத்துவங்கள் சேட்டிக்கும்படி அந்தத் தத்துவங்களுக்குத்தத்துவனாய் நின்றானும் அந்தப் பரமேசுரனே. இந்தத்தத்துவங்களைப்பொருந்தி ஆன்மாக்கள் கன்மமலத்தைப் புசிக்கும்படி அந்தவான்மாக்களுக்கு ஆன்மாவாய்நின்றானும் அந்தப்பரமேசுரனே. தோற்றப்பட்ட பூதகாரியங்கள் ஆன்மாக்கள்செய்த வினைக்கீடாக ஆண் பெண் அலி என்று வகுப்புண்டு வடிவாம்படி அவற்றை வகுப்பித்து இந்தவகுப்புக்கு வகுப்பாய் நின்றானும் அந்தப்பரமேசுரனே. இவற்றை இப்படி அறிந்துகூடி இவை தானாய்நின்று நடத்தும்போதேயும் இந்த முறைமைகள் ஒன்றும் அறியாதபடி திரோபவித்து ஒருபணியறநின்றானும் அந்தப்பரமேசுரனே என்க. (அஅ)

இப்படிப்பட்ட பரமேசுவரனை இந்தத்திருஷ்டியாலே காணவொண்ணாதோவென்று அன்புமிகுதியாலே கேட்ட மாணாக்கனைநோக்கி அருளிச்செய்கின்றார்.

இன்றுதா னீயென்னைக் கண்டிருந்துங் கண்டாயோ
வன்றுதா னானுன்னைக் கண்டேனோ—வென்றா
லருமாயை யீன்றவடன் பங்கனையார் காண்பார்
பெருமாயைச் சூழல் பிழைத்து.

(இ-ள்.) இப்பொழுது நீ என்னைக்கண்டும் இவையெல்லாம் அறியும்போதும் என்னுடையசொரூபத்தை உன்னுடைய மாமிச திருஷ்டியாலே கண்டாயோ,அன்றி இவற்றையெல்லாம் அறிந்தறிவிக்கின்றநான்றான் உன்னுடைய சொரூபத்தை இந்தத்திருஷ்டியாலே கண்டேனோவென்றால், யாவர்க்குந்தெரியாத மாயையைப்பெற்ற சத்தியைப்பாதியிலே யுடைய பரமேசுரனை மாமிச திருடிஷ்யாலே காணவல்லார்யாவர்; விடப்படாத மாயையாலே மறைக்கத்தக்க மறைப்பையெல்லாந்தப்பி என்க.

இது இந்தத் திருஷ்டிக்குக் கோசரமாகக்கண்டு வழிபட்டு வீடுபெறுகைக்கு நம்மைப்போ லெழுந்தருளி வந்து அநுக்கிரகித்த ஆசாரியமூர்த்தியை யொழிந்து, வேறொருதெய்வம் இல்லை யென்று அறிவித்தது. (அகூ)

இப்படிக்கடாக்ஷித்த ஞானகுருவின் பெருமையை அருளிச்செய்கின்றார்.

கடலலைத்தே யாடுதற்குக் கைவந்து நின்றுங்
கடலளக்க வாராதாற் போலப்—படியி
லருத்திசெய்த வன்பனாவந் தாண்டதுவு மெல்லாங்
கருத்துக்குச் சேயனாய்க் காண்.

(இ-ள்.) மாணவகனே! கடலின்கண்ணெய்தித் திரைகளை அலைத்து நின்றாடுதற்குவல்ல சாமர்த்தியவான்களுக்கும், கடலினுடைய ஆழமும் அகலமும் நீளமும் அறியவாராததுபோல, பூமியின்கண்ணே சரியைகிரியை யோகங்களிலே தீரவநுட்டித்த பத்திமான்களுக்கும், சிவனுடைய ரூப சொரூபசுபாவங்களை அறியவிசாரிக்கில், அவர்கள்கருத்துக்கும் எட்டா தாகையாலே, நம்மைப்போலத் தம்பிரானார் திருமேனிகொண் டெழுந்த ருளிவந்து ஞானதீக்ஷாக் கிரமங்களினாலே மலங்களைப் போக்கி அவர்களை அடிமைகொண்டது என்க. (௬௰)

ஆகையால், நம் பொருட்டுத் திருமேனி கொண்டெழுந்தருளிவந்த ஆசாரி யனே அருளுஞ் சிவமுமென்று அருளிச்செய்கின்றார்.

சிவனெனவே தேறினன்யா னென்றமையா லின்றுஞ்
சிவனவனி வந்தபடி செப்பி—லவனிதனி
லுப்பெனவே கூர்மை யுருச்செய்யக் கண்டமையா
லப்படியே கண்டா யவன்.

(இ-ள்.) "சிவனெனயானுந்தேறினன்காண்க" என்று திருவாதவூர் நாயனார் அருளிச்செய்த பிரமாணப்படி, நம்மை இரக்ஷிக்குங்காரணத்தால் இப்பொழுதும் பரமேசுவரன் நம்மைப்போல எழுந்தருளிவந்த முறைமை சொல்லில், உலகில் உவரிநீர் இரதமானகூர்மையுப்பாகவே வடிவங் கொண்டதைக் காண்கையால் அப்படியேகாண் மாணவகனே! அருளாலே சிவன் திருமேனிகொண்ட முறைமை என்க. (௬௧)

இன்னமும் இவன்சந்தேகந்தீராததுகண்டு, ஆசாரியன் ஆன்மாக்களில் ஒரு வன் அல்லனானபடியைத் திருட்டாந்தபூர்வகமாக அருளிச்செய்கின்றார்.

அவனிவனாய் நின்ற தவனருளா லல்ல
தெவனவனாய் நிற்கின்ற தேழா—யவனிதனிற்
றோன்றுமரப் புல்லூரி தொல்லுலகி லம்மரமா
யீன்றிடுமோ சொல்லா யிது.

(இ-ள்.) வாக்குமனாதீத கோசரமாயுள்ள சர்வேசுவரன் ஆன்மாக்க ளைப்போலத் தேகியாய்த்தோன்றினது, சகலரிற்பக்குவரான ஆன்மாக்க ளுக்கு அவர்களுடைய சத்திநிபாதத்துக்கீடான சம்ஸ்காரங்களாலே அவர் களுடைய மலமாயைகன்மங்களைப்போக்கித் தனக்குடைமையான பரமா நந்தத்தை அளிக்கைக்குத் தன்னுடைய அருளாலே திருமேனிகொண்டெ ழுந்தருளிவந்த தொழிந்து, எப்படிப்பட்டவன் எப்படியாய் நிற்பானென்று சொன்னாய் அறிவில்லாதவனே; அஃதென்போலவென்னில், பூமியின்கண் ணே தோன்றினமரமானது, பயன்படுங்காலங்களிலே கைம்மாறுகருதாமல் சிரத்தையுள்ளவர்களுக்குப் பலன்களைக்கொடுத்துச் சந்துஷ்டிபிறப் பியா

நிற்கும்; இஃதொழிந்து, இந்த மரந்தாரகமாய்நிற்கின்ற புல்லூரி,மரத்தின் பலத்தைக்கொடுக்கவற்றோ மாணவகனே! இதனைச்சொல்லாய் என்க.

இது திருமேனிகொண் டெழுந்தருளிவந்த ஆசாரியனைச் சிவன்றானென்றே தெளிய அறிவித்தது. (௬௨)

அருளென்ப தொன்றுவேண்டுமோ சிவமொன்றுமே அமையாதோவென்ற மாணுக்கனைநோக்கி, அந்தச்சிவமும் அருளாலொழிந்து மோக்ஷத்தைக் கொடுக்க மாட்டாதென்று அந்தவருளின் பெருமையை அருளிச்செய்கின்றார்.

முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்த தருளென்னுங்—கத்தியினன்
மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கு
மேகக் கொடியெழுங்கா ணின்று.

(இ-ள்.) முத்தியைப்பெறுவதற்கு முதலான ஆன்மாவென்பதொரு கொடியிலே, அநாதியே மறைக்கத்தக்க ஆணவமலத்தின்காரியமான அஞ்ஞானமானகொடி வெகுவிதமாகப்படர்ந்து, இதனாலே இதாகிதங்கள் விளைந்து,இதுகாரணமாக மயக்கத்தைச்செய்கின்ற மாயையாலே பூதகாரியமான உடம்பு ஜநநந்தோறும் பலியாநிற்கும். இவை பக்குவப்பட்ட எல்லைகளையறிந்து,தம்பிரானுந் திருமேனிகொண்டெழுந்தருளிவந்து,அருளாலே சமைந்த அநேகதாரைப்பட்ட வாளாலே இந்தவாணவமல மூலத்தின் வேரறுக்க, அப்பொழுது எல்லா மலங்களின்முதலடங்கலுஞ் சோர்ந்துபோய், முத்தியானது வெகுபலமாகப் பலியாநிற்கும். இந்தப்பழக்கத்தினுடைய இரசத்தினாலே சிவமென்றும் ஆன்மாவென்றும் இரண்டல்லாதபடி அப்பொழுதே ஒரு நீர்மையான சுபாவந்தோன்றாநிற்கும் என்க. (௬௩)

இனி இந்தவர்த்தத்தைத் தமக்கருளிச்செய்து தம்மை இரக்ஷித்த ஆசாரியனையுந்,தீக்கைமுதலாக அவன்செய்தருளிய முறைமையையும் நின்ற ஏழுதிருவெண்பாவாலும் அருளிச்செய்கின்றார்.

அகளத்தி லாநந்தத் தாநந்தி யாயே
சகளத்திற் றையலுடன் றோன்றி—நிகளத்தைப்
போக்குவதுஞ் செய்தான்றன் பொன்னடியென் புன்றலைமே
லாக்குவதுஞ் செய்தா னவன்.

(இ-ள்.) அடியேனை ஈடேற்றுகைப்பொருட்டுச் சகளீகரித்த திருமேனியிலே தன்னுடைய காருண்ணிய சத்தியுடனே தோன்றி, குற்றமற்ற நிலத்திலுண்டாகிய ஆநந்தத்தில் ஆநந்தியாய்ச் சமைந்தெழுந்தருளியிருந்து, அநாதியே பிணித்தவிலங்காகிய மலமாயை கன்மங்களை அநேக சம்ஸ்காரங்களாலேபோக்குவதுஞ்செய்து,தன்னுடையபொலிவினையுடைத்தாகிய திருவடியை என்னுடைய பொல்லாத்தலையிலே வைப்பதுஞ்செய்தான் ஆசாரியன் என்க.

இது தீக்கைமுறைமையை அறிவித்தது. (௬௪)

குற்றமறுத் தென்னையாட் கொண்டருளித் தொண்டனே
னுற்ற தியானத் துடனுறைவர்—முற்றவரின்
மாட்சியுமாய் நிற்பரியான் மற்றொன்றைக் கண்டிடினக்
காட்சியுமாய் நிற்பார் கலந்து.

(இ-ள்.) (ஆசாரியர்) இப்படித் தம்முடைய அருளால் என்னுடைய மலமாயை கன்மங்களைப்போக்கி, என்னுடைய சுதந்திரத்தையும் அறுத்து, அடிமைகொண்டு, எனக்கு அநாதியே பிராணனாய்நிற்கின்ற தம்முடைய திருவடிஞானத்தையும் பிரகாசிப்பித்து, யானென்றும் அதுவென்றுஞ் சொல்லுகின்ற வேறுபாட்டையும் அறுத்து, தம்முடையவசத்திலே ஆக்கிக் கொண்ட அவசரத்திலே, நான் தியானிப்பானாய் நிற்கைக்கு வந்து அத் தியானமுந் தாமேயாய் நில்லாநிற்பர். இந்தநிலை முதிரவருகின்ற ஞேயத் தழுந்தலுந் தாமேயாகாநிற்பர். பிராரத்தத்தாலே நிலைதிரிந்து விசுவந்தோன் றுங் காலத்தும் அந்தவிசுவந் தோன்றாமல் காண்பானுங் காணப்படும் பொருளுந் தாமேயா யிராநிற்பர் என்க.

இது தீக்கைக்குப்பின்பு உண்மையிலே நிறுத்தின நிலைமையை அறிவித்த தெனக்கொள்க. (௯௫)

ஆளுடையா னெந்தரமு மாளுடையா னேயறியுந்
தாளுடையான் றொண்டர் தலைக்காவ—னாளுந்
திருவியலூ ராளுஞ் சிவயோகி யின்றென்
வருவிசையை மாற்றினான் வந்து.

(இ-ள்.) வந்து ஆளுடையான்-இப்படி எழுந்தருளிவந்து என்னை அரிதாக அடிமைகொள்ளுகையாலே ஆளுடையதேவனென்கின்ற திருநாமத்தையுமுடையான்,—எம்தரமும் ஆளுடையானே-என்னைப்போலுந்தளர்ந்த அடியாரையும் அடிமைகொள்ளுவானும் அவனே,—அறியும் தாளுடையான் - சர்வான்மாக்களின் பொருட்டும் பஞ்சகிருத்தியங்களையும் நடத்தி இவற்றிலே பக்குவப்பட்ட ஆன்மாக்களை அறிந்திரக்ஷிக்கவல்ல திருவடியுமுடையான்;—தொண்டர் தலைக்காவல் - உரிய அடியாரை மாயப்படை மேலிட்டு வினைசெய்யாது பாதுகாக்கைக்குத் தலைக்காவலாயுள்ளவன்,—நாளுந் திருவியலூர் ஆளுஞ் சிவயோகி - எக்காலமுந்திருவியலூரே திருப்படை வீடாகவுடைய சிவயோகி,—இன்று என் வருவிசையை மாற்றினான்-இப்பொழுது என்னுடைய அஞ்ஞானத்தாலே கன்மபலங் காரணமாக மாயையாகின்ற ஊசலிலே உழலாநிற்கின்ற ஜநந மரணங்களாகிய விசையை யொழித்து, அசைவற்றநிலமாகிய திருவடியிலே வைத்தான் என்க.

இது தம்முடைய ஆசாரியன் திருநாமமும் அவனது மகிமையும் அருளிச்செய்த தெனக்கொள்க. (௯௬)

தூலத் தடுத்த பளிங்கின் றுளக்கமெனத்
தூலத்தே நின்று துளங்காமற்—காலத்தாற்
ருளைத்தந் தென்பிறவித் தாளை யறவிழித்தார்க்
காளன்றி யென்மா றதற்கு.

(இ-ள்.) படிகக்கல், தன் பிரகாசத்தைத் தடுத்த வன்னங்களினுடைய ரூபங்களாலே தன்னுடைய சுத்தமான பிரகாசந் தோன்றாமல் அதுவது வாய் நின்றாற்போல, நானுந் தேகத்திலே பொருந்திநின்று ஜநந மரணங் களிலே மொத்துண்ணாமல், மலபாகமும் கன்மவொப்புஞ் சத்திநிபாதமும் உண்டான அவசரத்தே, அவதிகூடாமல் எழுந்தருளிவந்து, தம்முடைய பொன்னான திருவடியை என்தலையினும் இருதயத்தினும் நிற்கும்படி தந் தருளி, எனக்கு எழுவகையாய் எண்பத்துநான்குநூறாயிர யோனிபேதங் களில் உண்டான ஜநநங்கள் காலற்றுப்போம்படி திருக்கண்சாத்தியருளின தம்பிரானார்க்குக் கைம்மாறுசெய்ய எண்ணுமளவில், அவன் வேறொன்றுக் குங் குறைவிலனாகையால் என்னை அடிமையாகக் கொடுத்து நான் பரங் கெட்டு விடுவதொழிந்து, வேறொரு கைம்மாறுங்கண்டிலேன் என்க.

இது கைம்மாறு கருதாமல் எழுந்தருளிவந்து இரக்ஷித்த அதிசயம் அறிவித்த தெனக்கொள்க. (கூஎ)

இக்கணமே முத்தியினை யெய்திடினு மியானினைந்த
வக்கணமே யானந்தந் தந்திடினு—நற்கணத்தார்
நாயகற்கு நாயகிக்கு நானடிமை யெப்பொழுது
மாயிருத்த லன்றியிலே னியான்.

(இ-ள்.) பெறுதற்கரிய முத்தியினை இக்கணப்பொழுதிலேபெறினும், நான் கருதப்பட்ட பரமானந்தம் கருதின கருத்து மாறுவதன் முன்னே பெறினும், இவை ஒன்றையும் ஆசரிப்பதில்லை. இந்தப்பேற்றை அளிக்கைப் பொருட்டு அடியேனுக்காகத் திருமேனிகொண்டெழுந்தருளிவந்த சிவ யோகிகளாகிய தம்பிரானார்க்கும் அவருக்கு மனவாக்குக் காயங்களாய்நின்ற ஞானசத்திக்கும் நான் எப்பொழுதும் மீளா அடிமையா யிருப்பதொழிந்து, வேறொன்றுமில்லை என்க.

இது பேற்றின் அதிசயத்தால் அடிமை சாதித்ததென அறிக. (கூஅ)

என்னை யுடையவன்வந் தென்னுடனா யென்னளவி
லென்னையுந்தன் னுளாகக் கொள்ளுதலா—லென்னை
யறியப்பெற் றேனறிந்த வன்பருக்கே யாளாய்ச்
செறியப்பெற் றேன்குழுவிற் சென்று.

(இ-ள்.) எனக்குக் கர்த்தாவாகிய பரமேசுவரன் என்னுடைய அநாதி மயக்கத்தை நீக்குதற்பொருட்டு என்னைப்போல் எழுந்தருளிவந்து, உனக் குள்ளே பொருந்தி நிற்போமென்று என்னைத்தெளிய அறிவித்தவளவில் அந்தக்கருணையாலே நானும் அப்பொழுதே தம்முடைய வசமாய் என்னையும்

நாம்விரும்பின அடிமையாகக் கொள்ளுகையால், இப்படித் தம்பிரானர்க்கு மீளாஅடிமையானேமென்று என்னுடைய உண்மை அறியப்பெற்றேன். இப்படி முன்னே, அறிந்திருக்கின்ற சிவயோகிகளுக்கு ஏவற்பணி செய்து அவர்கள் திரட்சியிலே சென்றிருக்கவும் பெற்றேன். இனி என்ன பெறவேண்டும் என்க.

இது பேற்றாலுண்டான நிஷ்பல வேட்கையென அறிக. (கூகூ)

சிந்தையிலு மென்றன் சிரத்தினிலுஞ் சேரும்வகை
வந்தவனை மண்ணிடைநாம் வாராமற்—றந்தவனை
மாதினுட னெத்திறமும் வாழ்ந்திருக்க வென்பதலா
லேதுசொலி வாழ்த்துவே னின்று.

(இ-ள்.) தன்னுடைய திருவடியானது என்னுடைய தலையினும் இருதயத்தினும் பொருந்தும்படி திருமேனிகொண் டெழுந்தருளிவந்த தம்பிரானை, பூமியின்கண்ணே நான் பிறந்திறந்து திரியாதபடி பரமானந்தத்தை அளித்தவனை, எப்பொழுதும் வாழ்த்துமளவில் எல்லைப்படா தாகையால், தன்னைவிட்டு நீங்காத ஞானசத்தியுடனே எவ்விடத்தும் வாழ்ந்திருக்க வென்று சொல்லுவ தல்லால் அவனை எப்படி வாழ்த்துவேன் என்க.

இது சிவனைக் கூடப்பெற்றவர்கள் உரையுணர்விறந்து நின்று அநுபவிக்குமதொழிந்து, அவனுடைய வுண்மையறிந்து துதிக்கவெண்ணுமளவில், அவன் உரையுணர்வுக்கெட்டாதவனென்று அறிவித்தது. (க00)

## திருக்களிற்றுப்படியார்முற்றியது.

உய்யவந்ததேவர் திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

திருவெண்ணெய்நல்லூர்-மெய்கண்டதேவநாயனார்
அருளிச்செய்த

# சிவஞானபோதம்.

## உரைப்பாயிரம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி தழைக மாதோ.

## சிறப்புப்பாயிரம்.

சைவாகமங்களினுள்ளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞானபாதத்தோதிய பொருள்களை யாராயும் ஆராய்ச்சி இந்நூலின்கணெடுத்துக்கொள்ளப்பட்டது. இது கேட்டலுறுவார்க்கு இதனாற்போந்த பயன் யாதோவெனவும், இது கேட்டற்குரியார் யாவரொனவும், இதனானுதலப்படும் பொருள் யாதெனவும், இதனைப்பயப்பிக்குங் கருவியாய் இதற்குமுன் ஒருதலையானுணர்தற்பால தியாதெனவும், இதனை வழங்குதற்கிட்ட பெயர் யாதெனவும், இஃதியாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூல் யாதெனவும், இந்நூல் செய்தார் யாவரொனவும் பலவாற்றானுசங்கை நிகழுமன்றே; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட்டு இந்நூன்முகத்துரைக்கப்படுவதாகிய சிறப்புப்பாயிரம்:—

### நேரிசையாசிரியப்பா.

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் * வெண்ணைச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.—என வரும்.

(இதன்பொருள்.) மலர் தலை உலகின் மா யிருள் துமியப் பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்காண்டல் செல்லாக் கண்போல்-விரிந்தவிடத்தையுடையஞாலத்தின்கண்ணே துன்னிய பெரிய புறவிருள் கெடும்படி பல சமயத்தாரானும் புகழப்படுகின்ற பரிதியங்கடவுள் உதயகிரியினின்றும் போந்தாலன்றிக் காட்சியெய்த மாட்டாத கண்ணொளிபோல,—அருந்

* வெண்ணெய் வெண்ணையென மரீஇயிற்று.

துயர்க்குரம்பையின் ஆன்மா நாடி-பொறுத்தற்கரிய துயரங்களுக்கெல்லாம் ஒருநிலைக்களமாய்ச் * சத்ததாதுக்களாற்பொத்திய குரம்பையாகிய காணப் பட்ட உடம்பானே காணப்படாத ஆன்மாவையும் பரமான்மாவையும் அனுமானவளவையான் வைத்தாராய்ந்துஅவற்றது தடத்தலக்கணமெனப் படும் பொதுவியல்புணர்ந்து,—கண் இருள் தீர்ந்து - அவ்வுணர்ச்சியானே கருதியுணரப்படும் அகவிருளாகிய ஆணவமலத்தினின்று நீங்கி,—ஈண் டிய பெரும் பெயர்க் கடவுளிற்கண்டு - அது நீங்கிய வழி எல்லாநூல் களுந் தன்பொருளேயாகத் திரண்டு கூடிய பெரும்பெயரெனப்படும் ஒரு வார்த்தையாகிய மகாவாக்கியத்தான் எடுத்தோதப்படும் முதற்கடவுளது திருவருளானே அப்பொருள்களது சொரூபலக்கணமெனப்படுஞ் சிறப்பி யல்பை அநுபூதியிற்கண்டுணர்ந்து,—மயர்வு அற-இம்முறையானே மயக் கவாசனையற்றுச் சிவாநுபவம் பெறுதற்பொருட்டு,—நந்தி முனி கணத்து அளித்த-சீகண்டதேவர்பாற் கேட்டருளிய நந்திபெருமான் சனற்குமார முனிவன் முதலிய முனிவர்கணங்கட்கு முறையானே அளித்தருளப் பட்ட,—உயர் சிவஞானபோதம்-சரியை முதலிய மூன்று பாதப்பொருள் களை ஆராயுநூல்களின் மேற்பட்ட சிவஞானபோதமென்னும் வடநூலை,— உரைத்தோன் - மொழிபெயர்த்துக் கூறி வார்த்திகமெனப்படும் பொழிப் புரை செய்தோன்,—பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்- பெண்ணையாற்றுநீராலே சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரின் அவத ரித்தருளிய சுவேதவனப்பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமமுடை யான்,—பொய் கண்டு அகன்ற மெய்கண்டதேவன் - பொய்ச்சமயங்களின் பொருள் இதுவிதுவென்று கண்டு கழிப்பித்த காரணத்தாற் பெற்ற மெய் கண்டதேவனென்னுஞ் சிறப்புத்திருநாமமுடையான்,—பவம் நனி வன் பகை கடந்த தவர் அடி புனைந்த தலைமையோனே-பிறவியாகிய மிக்கவலிய பகையினை வென்ற தவத்தோர் தனது திருவடியைப் புனைந்துகோடற் கேதுவாகிய தலைமைப்பாட்டினையுடையோன் என்க.

படரிற் காண்டல்செல்லுங் கண்ணெனற்பாலதனை எதிர்மறைமுகத்தாற் கூறி னார், இன்றியமையாமை விளக்குதற்கு. இப்பொருள்பற்றிக் கண்மேல் வைத்துக் கூறினாரேனும், உவமேயப்பொருட்கேற்பக் காண்டல்சேறற்குப் படர்ந்த ஞாயிறு போலென்பது கருத்தாகக் கொள்க.

இருட்கேட்டிற்கும் நிருவிகற்பஞ் சவிகற்பமென்னும் இருவகைக்காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்றாயவாறுபோல, மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதியென்னும் இருவகையுணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாயது இந் நூலென்பார், துமியப் படரினல்லதைக் காண்டல் செல்லாக் கண்போ னுடித் தீர்ந்து கண்டு மயர்வறவளித்த சிவஞானபோதமென்றார்.

தலைமைபற்றி அருந்துயர்க்குரம்பையினென்றாரேனும், இனம்பற்றிக் கரணம் புவனமுதலியனவும் உடன் கொள்ளப்படும்.

அருந்துயர்க்குரம்பையி னுடப்படுவதாகிய பொதுவியல்பு முன்னூறு சூத்திரத் தானும், பெரும்பெயர்ப்பொருளிற் காணப்படுவதாகிய சிறப்பியல்பு பின்னூறுசூத் திரத்தானு மோதுப.

நாடியெனவே அநுமானவளவையானென்பதூஉம், கண்டெனவே அநுபூதியி லென்பதூஉம், தாமே போதரும்.

பொதுவியல்பு அளவைமுகத்தானும் இலக்கணமுகத்தானுங் கூறப்பட்டுக்கேட் டல்சிந்தித்தல் என்னும் இருதிறத்தானுணரப்படும்; சிறப்பியல்பு சாதனமுகத்தானும்,

* சத்ததாதுக்கள்—துவக்கு,உதிரம்,இறைச்சி,மேதை,என்பு,மச்சை,சுக்கிலம்என்க.

பதனுல் முன்னே மறத்தல் பெறப்பட்டது. * "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை-செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்னுங் கருத்துநோக்கிக் கூறியதூஉமாம்.

அலதுமெனப் பாடமோதி இது பிழையாதலன்றியு மென்றுரைப்பாரு முளர்.

ஏகாரம் முன்னையது அசைநிலை; பின்னையனதேற்றம்.

செய்தாலென்பது செய்தெனத் திரிந்தது.

உம்மை சிறப்பின்கண் வந்தது.

தான்ருனுச்செய்தல் எதனை யெதனைப் பற்றினும் அதுவதுவாமுயிர் தன்னை யறிந்தவழி எண்குணங்களானிறைந்து தன்வண்ணமாகச்செய்தல். அங்ஙனஞ்செய் தவழியும் † "உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்து" என்பார் தைவ மென்றுந் தைவமேயென்ருர். தைவமென்னுஞ் சொல்லியல்பு மேலே யுரைத்தாம்.

மாலையென்னும் இரண்டனுருபு விகாரத்தாற்ருெக்கது. மாலென்பது வட சொற்றிரிபு. சுட்டு வருவிக்க.

வலிதருவதனை வலியென் றுபசரித்தார்.

இவ்வுதாரணங்கண் மூன்ருனும், வழிபாட்டிற்கும் இடத்து நிகழ்பொருண்மாத் திரையேயன்றி இடவிசேடமும் பெறல் வேண்டுமென அதனை வலியுறுத்துமுகத் தானே, முறையே சிவலிங்கத்தையுஞ் சிவபத்தர் வேடத்தையுஞ் சிவதேசிகர்களையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்ருங் கண்வா சகத்திற்—சிவமுண்டா
மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந் நூன் மும்மை மலர்க்கு.

எ-து. செ-ள். இங்ஙனஞ் சிவாகமத்துண்ஞானபாதப்பொருளெல்லாவற்றை யும் பொது உண்மையென் றிருவகைப்படுத்துப் பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலென நான்கியலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞான போதநூலைக் கோடற்குரிய அதிகாரிகளாவார்இவரொன்பதுணர்த்துதற்கெழுந்தது.

(இ-ள்.) சிவம் என்னும் அந்த தர - தான்ருனுச்செய்தவாற்ருற் சீவ னென்னு மியல்பினீங்கிச் சிவமென்ருேதப்படும் வேதாந்தத்தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவகனே!—ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு- ஒன்றுமிரண்டுமாய மலங்களையுடைய விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர் க்கும்,—சிந்தை நேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்று ஆம் சிவம் உண்டாம் - முறையே அறிவின்கணின்று அருட்பார்வையா னேக்குதலா னும் தேவகுருவாய்முன்னின்று செய்யுந் திருநோக்கம் பரிசம் வாக்கெ னப்படுந் தீக்கையானும் பிறவிக்கேதுவாய பசுத்துவநீங்கிச் சிவத்துவம் விளங்குமாகலான்,—மும்மை மலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந் நூல்-அவரின் வேருகிய மும்மலமுடையவர்க்கே உரித்து இவ்வுலகத்தனு பவமுடைய தேசிகராற் போதிக்கப்படும் இச்சிவஞானபோதநூல் என்க.

---

* திருக்குறள், செய்ந்நன்றியறிதல். செ-க0.

† சிவஞானசித்தியார், பதினொன்ருஞ்சூத்திரம். செ-க0. செம்பிரத.

அந்தம் வேதாந்தம், அந்ததரஞ் சித்தாந்தமாகலின், அதனைப் பெற்றாரது பெருமை கூறுவார் சிவமென்னு மந்ததரவென்றார். என்னுமென்புழிப் படுசொற் றொக்குநின்றது.

சிந்தை அறிவு. கண்ணுருபு விரித்துரைக்க. நேர் நோக்குதல் முன்னை மருட் பார்வையை மாற்றி அருட்பார்வையானோக்குதல். நோக்க நோக்குதலாமெனக்க. கண் வாசகங்களைக் கூறவே இனம் பற்றிப் பரிசமும் உடன் கொள்ளப்படும்.

பவம் ஆகுபெயர்.

இந்நூல் அநுபவமுடைய தேசிகனாலன்றி விளங்காதென்பார் ஒண்குருவா லென்றார்.

போதிக்கப்படுமென்பது அவாய்நிலையான் வந்தது.

இன்றிந்நூலென்பது இந்நூலென்னும் பொருட்டு. இக்காலத்துரைக்கப்படு நூலெனினுமமையும். அது "தானுரைத்தானின்று" என வருகின்ற வெண்பாவாற் கூறியவாற்றானுமறிக.

மும்மையென்றது ஈண்டெண்ணின்மேனின்றது, "தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல.

உண்மையதிகாரமுடிந்தது.

---

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட் டாந்தத்தா வின்று.

[எ - து. செ - ள். இந்நூலாசிரியன் றிருவருட் சிறப்புணர்த்துதற் கெழுந்தது.

(இ-ள்.) எந்தை சனற் குமரன் - எந்தையாகிய சனற்குமாரமுநிவன் முதலிய முநிவர்கணங்கள்,—ஏத்தித்தொழ - துதித்துவணங்க,—நந்தி - ஸ்ரீகண்டதேவர்பாற் கேட்டருளிய நந்திபெருமான்,—இயல்பாய் - தான் கேட்டமுறையே,—உரைத்தருளும் - உபதேசித்தருளிய,—ஞானநூல் - சிவஞானபோதமாகிய வடநூலை,—சிந்தைசெய்து - பரஞ்சோதி முநிவன் பாற் கேட்டவாறே சிந்தித்து,—தாரணியோர் தாம் உணர - தமிழ் நாட்டார் அறிந்துய்தற்பொருட்டு,—ஏது திருட்டாந்தத்தால்-மேற்கோளோடு கூடிய ஏது திருட்டாந்தங்களுடன்,—இன்று - இக்காலத்தே,—மெய்கண் டான்றான் உரைத்தான்-மொழிபெயர்த்துக்கூறி வார்த்திகப்பொழிப்புரை செய்தருளினான் மெய்கண்டதேவன் என்க.]

சிவஞானபோதமுற்றியது.

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

கணபதி துணை.

# சிவஞானபோதச்சூர்ணிக்கொத்து.

## முதற் சூத்திரம்.

க.—சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்தொழிலையுடையது.

உ.—அது அரனாலே உடையது.

ங.—மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள்.

## இரண்டாஞ் சூத்திரம்.

க.—அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.

உ.—உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.

ங.—உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்.

ச—அரன் சருவ வியாபகன்.

## மூன்றாஞ் சூத்திரம்.

க.—இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.

உ.—எனது உடல் என்று பொருட்பிறிதின்கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிருண்டு.

ங.—ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு.

ச.—கனவுடலைவிட்டு நனவுடலிலே வருகையினாலே, அக்கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

ரு.—நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.

சு.—மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

எ.—எல்லாத்தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

## நான்காஞ் சூத்திரம்.

க.—அந்தக்கரணங்களுக்கு * உயிர் உட் கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

உ.—மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

ங.—உயிர் மூன்றவத்தைப்படும்.

* உயிருடனே கூடினாலன்றி என்றும் பாடம்.

ஐந்தாஞ் சூத்திரம்.

க.—உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில்செய்யும்.

உ.—அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

ஆறாஞ் சூத்திரம்.

க.—உயிரறிவினாலே அறியப்பட்டவெல்லாம் அழியும்.

உ.—அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

ஏழாஞ் சூத்திரம்.

க.—அரன் பாசத்தை அநுபவியான்.

உ.—பாசம் அரனை அநுபவியாது.

ந.—உயிர் * அவ்விரண்டனையும், அநுபவிக்கும்.

எட்டாஞ் சூத்திரம்.

க.—உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும்.

உ.—உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.

ந.—உயிர் பஞ்சேந்திரியங்களைப்பற்றுகையினாலே தன்னையும் அறிய மாட்டாது.

ச.—உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.

ஒன்பதாஞ் சூத்திரம்.

க.—உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக் காணும்.

உ.—உயிர் பாசத்திலே பற்றற்றால், அரன் வெளிப்படுவன்.

ந.—பஞ்சாக்ஷரசெபம் பண்ணினால், வாசனாமலம் போம்.

பத்தாஞ் சூத்திரம்.

க.—அரனுடன் ஒன்றாகி நில்.

உ.—உன்றொழிலெல்லாம் அரன் பணி என்றே கொள்.

பதினொன்றாஞ் சூத்திரம்.

க.—ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

உ.—அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கமாய்ப்போவன்.

பன்னிரண்டாஞ் சூத்திரம்.

க.—மும்மலங்களையும் களைக.

உ.—சிவஞானிகளுடனே கூடுக.

ந.—சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக.

ச.—வழிபடாமையை ஒழிக.

சூர்ணிக்கொத்துமுற்றியது.

திருச்சிற்றம்பலம்.

---

* அவ்வரனை அடையும்; அநுபவிக்கும் என்றும் பாடம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருத்துறையூர் - அருணந்திதேவநாயனார்

அருளிச்செய்த

# சிவஞானசித்தியார்பரபக்கம்.

## காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த னால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம்பிறையிதழித்தாழ்சடையான் றருமொருவாரணத்தின்றாள்க
ளுருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே யிரவுபக லுணர்வோர்சிந்தைத்
திருகோட்டுமயன்றிருமால்செல்வமுமொன்றோவென்னச்செய்யுந்தேவே.

(இதன்பொருள்.) கங்கையாறுங் கோணுதலைத்தரும் அழகியபிறை யுங் கொன்றைமாலையுமுடைத்தாய்த் தாழ்ந்தசடையினையுடைய சிவபெரு மான் பிள்ளையாகத்தந்த தேவன், ஒருகொம்பையும் இரண்டுசெவியையும் மூன்றுமதத்தையும் நான்றவாயையும் ஐந்துகரத்தையுமுடையோனாகிய ஒப்பற்ற யானையினது தாள்கள் உள்ளமுருகுதலைச் செய்வதாகிய அன் போடுகூடி வந்தித்து ஒழியாது இரவும் பகலு நினைப்போரது நெஞ்சிற்றிரு க்கை ஈண்டணுகாவண்ணம் துரக்கும். பிரமவிஷ்ணுக்கள் பதங்களும் ஒன் றல்லவென்ன மிக்க வீட்டின்பத்தையும் உண்டாக்கும் என்க.

கோடுஞ் செவியும் மதமும் வாயுங் கரமும் அஃறிணைப்பொருளாகிய யானையி னது சினைப்பெயர்களேனும் அவ்வியானைப்படிவத்தை யுடையான் தேவனாதல் பற்றிச் சினைதோறும் அன்னிறுதியடுக்கிக்கூறினார். (க)

## மங்கலவாழ்த்து.

### சிவபெருமான்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதிநடுவந்தமிலாவளவில்சோதியருண்ஞானமூர்த்தியாயகிலமீன்ற [றப்
மாதினையுமொருபாகத்தடக்கிவானோர்மகுடசூளாமணியாய்வையம்போற்
பாதிமதியணிபவளச்சடைகடாழப் படரொளியம்பலத்தாடும்பரனார்பாதத்
தாதுமலிதாமரைகள்சிரத்தேவைத்துத்தளராதபேரன்புவளராநிற்பாம்.

(இ-ள்.) முதனடுவிறுதியின்றி ஒருவராலுமறியப்படாத பரசொரூ பப் பிரகாசத்தையுடைய அருளாகியஞானமே திருமேனியாகக்கொண்டு

தனது காருண்யத்தினாலே சகளீகரித்துப் பிரபஞ்சத்தையுண்டாக்கிய அந் தப் பரமேசுவரியையுந் தன்னிடப்பாகமுழுதினும் அடக்கிப் பிரமன்மால் முதலாகிய தேவர்களது மகுடரத்திநம்போலு மிக்க சத்திசிவமாகிய சகள நிஷ்கள சொரூபமாய் உலகத்துள்ளார்துதிப்ப ஒற்றைக்கலையை அலங்கார மாகவணிந்த பவளம்போன்ற சடைகளைத்தாழவிட்டு விரிந்த ஒளியை யுடைய திருவம்பலத்தின்கண்ணே நிருத்தஞ்செய்தருளுகின்ற மேலான பரமனது சிபாதங்களாகிய தாதுக்கண்மிக்க தாமரைமலர்களைத் தலையின் மீதுவைத்துத் தளர்ச்சியில்லாத மிக்கவன்பு மிகவும் உண்டாம்படி நில்லா நின்றேம் என்க. (க)

சத்தி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்ப மிலயமொடு போகமதி கார மாகித், தேசருவ மருவுருவ முருவ மாகித் தேவியுமாய்த் தேசமொடு செல்வ மாகிப், பேசரிய வுயிரையெலாம் பெற்று நோக்கிப் பெரும்போக மவைய ளித்துப் பிறப்பினையு மொழித்திட், டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கு மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

(இ-ள்.) ஈசன் அருள் இச்சை அறிவு இயற்றல் இன்பம் இலயமொடு போகம் அதிகாரமாகி - கருத்தாவைவிட்டு நீங்காத சத்தியானது அவனது கருணையினால் பராசத்தியும் இச்சாசத்தியும் ஞானசத்தியும் கிரியாசத்தியும் திரோதானசத்தியும் இவையன்றி இலயபோக வதிகாரவவத்தைகளுமாய்,—தேசு அருவம் அருவுருவம் உருவமாகித் தேவியுமாய்த் தேசமொடு செல்வமாகி - அந்தப்பிரகாசமாகிய இறைவனுக்கு அரூபம் ரூபாரூபம் ரூபமெனப்பட்ட மூன்று முறைமைக்கும் அம்முறைமைகளாகிய வடிவுந் தானாய் இறைவன் அங்ஙனம் கொண்டருளுந் திருமேனிக்கு அந்தந்தச் சத்திகளுந்தானாய்ப் பிரபஞ்சங்களும் பதார்த்தங்களுந்தானாய்,—பேசரிய உயிரையெலாம் பெற்று நோக்கி - அவன் எடுத்துக்கொண்ட திருமேனிக் கேற்ற சத்தியாய்நின்று எண்ணுதற்கரிதாகிய எல்லாவான்மாக்களையும் படைத்து அளித்து,—பெரும்போகமவை அளித்துப் பிறப்பினையும் ஒழித் திட்டு - ஆன்மாக்கள்செய்த புண்ணியபாவங்கட்கீடாகச் சுவர்க்காதிபதங் களையுங்கொடுத்து சநநங்களையுங் கெடுத்து அவ்விறைவனோடுங் கூடிநிற்க முத்தியையுங்கொடுத்து,—ஆசு அகலும் அடியர் உளத்து அப்பனுடன் இருக் கும் அன்னை - அஞ்ஞான நீங்கின அடியார் இருதயத்திற் சிவபெருமானோடுங் கூடியிருக்கும் உலகமாதாவினுடைய,—அருட்பாதமலர் சென்னி வைப் பாம் - கிருபையாகிய திருவடித்தாமரைகளை எந்தலைமேல் வைத்துக்கொள் ளா நின்றேம் என்க.

அதிகாரமும் செல்வமும் தேசமும், பெற்றும் நோக்கியும் பெரும்போகமளித்து மென் உம்மைகள் தொக்கிநின்றன. (உ)

### விநாயகக்கடவுள்.

இயம்புநூ லிருந்தமிழின் செய்யு ளாற்ற லிடையூறு தீர்ந்தினிது முடிய வேண்டித், தயங்குபே ரொளியாகி யெங்கு நின்ற தலைவனார் மலைமாது தன்னோ டாடிப், பயந்தவைங் கரநாற்றோண் முக்கணிரு பாதப் பரிய தொரு நீள்கோட்டுப் பெரிய பண்டிக், கயந்தனடிக் கமலங்க ணயந்து போற்றிக் கருத்திலுற விருத்திமிகக் காதல் செய்வாம்.

(இ-ள்.) இயம்புநூல் - இப்பொழுது சொல்லுநூல்,—இருந்தமிழின் செய்யுள் ஆற்றல் இடையூறுதீர்ந்து இனிதுமுடியவேண்டி - பெரியதமிழினாற்செய்யுமிச்செய்யுள் பஞ்சாதிகாரங்கள் சொல்லும் வழியால் வருங்குற்றமொழிந்து இனிதுமுடிதலைவிரும்பி,—தயங்குபேரொளியாகி - விளங்கும் பெரிய ஒளியேயாகி,—எங்கு நின்ற தலைவனார் - எவ்விடத்தும் பூரணமாய் நின்ற இறைவர்,—மலைமாது தன்னோடு ஆடிப்பயந்த - அசுரரைக்கொல்லு நிமித்தமாக இமையமாதோடுங்கூடி உண்டாக்கப்பட்ட,—ஐங்கரம் நாற்றோள் முக்கண் இருபாதப்பரிய தொருநீள்கோட்டுப்பெரிய பண்டிக்கயம் தன் - ஐந்துகையினையும் நான்குதோளினையும் மூன்றுகண்ணினையும் இரண்டு பாதத்தினையும் பரியதாகி நீண்டதொரு கொம்பினையும் பெரியவயிற்றினையுமுடைய யானைமுகத்து விநாயகனது,—அடிக்கமலங்கள் நயந்து போற்றிக் கருத்தில் உற இருத்திமிகக் காதல்செய்வாம் - சீபாதகமலங்களை விரும்பித் துதித்துச் சித்தத்திலுமுறும்படிவைத்து மிக்கவிருப்பத்தைச் செய்யாநின்றேம் என்க. (௩)

### சுப்பிரமணியக்கடவுள்.

அருமறையா கமமங்க மருங்கலைநூ றெரிந்த வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருளை,திருமறைமா முனிவர்முனி தேவர்கடந்தேவன் சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர் தெய்வம், பொருமறையார் கழல்வீரர் வீரன் கையிற் பூநீர்கொண் டோவாது போற்றுமடி யார்கள், கருமறையா வகையருளிக் கதிவழங்குங் கந்தன் கழலிணைக ளெஞ்சிரத்திற் கருத்தில் வைப்பாம்.

(இ-ள்.) அருமறை ஆகமம் அங்கம் அருங்கலை நூல் தெரிந்த அகத்தியனுக்கு ஓத்து உரைக்கும் அருட்குருவாங் குருளை - தெரிதற்கரியவேதங்களும் ஆகமங்களும் ஆறங்கங்களும் அரிதாகிய கலைஞானங்களுமாகிய நூல்களை ஆராய்ந்த அகத்தியமாவிருடிக்கு வேதவியாக்கியானத்தை அருளிச்செய்த ஞானசாரியனாகிய இளையபிள்ளை,—திருமறைமாமுனிவர்முனி - அழகிய வேதத்தைக்கற்றுவல்ல மிக்கவிருடிகட்குத் தலைவனாகியவிருடி,—தேவர்கடந்தேவன் - தேவர்கட்குச்சுவாமி,—சிவன் அருள்சேர் திருமதலை - சிவனுக்குக் கிருபையாலுண்டாகிய புத்திரன்,—தவநிலையோர் தெய்வம் - தவத்தின்மிக்கோர்க்கு வழிபடுந்தெய்வம்,—பொரும் அறையார்கழல் வீரர் வீரன் - ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய பொருகின்ற வீரர்க்கு வீரன்,—கையிற் பூநீர்கொண்டு ஓவாதுபோற்றும் அடியார்கள் கருமறையாவகை அருளிக் கதிவழங்குங் கந்தன் - ஒழியாது கையின் மலருமஞ்சனமுங்

கொண்டு துதிக்கும் அடியார்கள் கருப்பத்தில் அழுந்தாதவகை அருள்செய்து மோக்ஷத்தைக்கொடுக்குங்கந்தசுவாமி,—கழலிணைகள் எஞ்சிரத்திற் கருத்தில் வைப்பாம் - அவனது சீபாதங்களிரண்டையும் எந்தலைமீதும் இருதயத்திலும் வைத்துக்கொள்ளாநின்றேம் என்க.

கழல்வீரனொன்றது அசுரனை. (ச)

மெய்கண்டதேவநாயனுர்.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம் பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக், கண்டவிரு தயகமல முகைக ளெல்லாங் கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன், விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன், புண்டரிக மலர் தாழச் சிரத்தே வாழும் பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.

(இ-ள்.) பழையதாகிய வேதவண்டுகள் ஒலிப்பப்பரஞானமாகியசெவ்வியதேன் சிநேகத்தோடும் புறப்படச் சிவமாகிய மணம்விரிந்து மணக்கச் சகலரிற் சத்திநிபாதம் பதிந்துதரிசித்தோரது இதயகமலங்கள் விட்டு விரியப் பூமியிடத்தெழுந்தருளிய விரிந்தமலர்களையுடைய பொழில்கள் பக்கங்களிலே சூழப்படாநின்ற திருவெண்ணெய்நல்லூரைத்திருப்பதியாகப்பொருந்தின சைவசித்தாந்தத்துக்கு ஆதியாகிய மெய்கண்டதேவனென்னுந் திருநாமத்தையுடைய ஞானசூரியனது அழகியசீபாதங்கள் தாமரைமலரும் ஒப்பழியும்படி எமது தலைமீதே எப்பொழுதும் வாழும் ஆதலால் அவற்றையே துதியாநின்றேம் என்க.

கண்டவிருதயகமலமுகைகள் கண்டிறந்தவிடத்து வண்டரற்றப் பசுந்தேனொழுகப் பரந்துமணக்கவெனக் கூட்டினும் அமையும். (ரு)

---

## அவையடக்கம்.

மாலயன்மா மறையறியா வாதி மார்க்கம் வையகத்தா கமம்வேத மற்று முள்ள, நூலையெலா முணர்ந்திறைவன் கழலே நோக்கு நோன்மை யருந் தவர்முன்யா னுவலு மாறு, வேலையுலா வுந்திரைகள் வீசி யேறி வேறேழு மொன்ருகி நின்ற போது, சாலவுமான் குளப்படியிற் றங்கி நின்ற சலமதுதா னேரென்னுந் தன்மைத் தாலோ.

(இ-ள்.) மால் அயன்மாமறை அறியா ஆதிமார்க்கம் - பிரமவிஷ்ணுக்களாலும் நான்குவேதங்களாலும் அறிதற்கரிதாகிய பரமேசுவரனது வழியை,—வையகத்து ஆகமம் வேதம் மற்றுமுள்ள நூலையெலாம் உணர்ந்து இறைவன்கழலேநோக்கும்நோன்மை அருந்தவர்முன் யான் நுவலுமாறு- பிரபஞ்சத்தின்கண்ணே ஆகமத்தையும் வேதத்தையும் அவற்றின்வழியுண்டாகிய சாத்திரங்களையும் கற்றறிந்து பரமேசுரனது சீபாதங்களையே பற்றுக்கோடாகவுடைய நோய்முதலியவற்றைப் பொறுக்கும் அருந்தவத்தினர்முன்னே யாதும் அறியாதயான் சொல்லுநெறி,—வேலை உலாவுந்திரைகள் வீசிஏறிவேறேழும் ஒன்ருகிநின்றபோது சாலவும் ஆன்குளப்படியில் தங்கிநின்ற சலமதுதான் நேரென்னுந்தன்மைத்தாலோ - உலாவுந் திரைகண் மிகுந்து வேற்றுமைப்பட்ட சமுத்திரமொன்றுபட நின்ற

விடத்து மிகவும் ஆன்குளப்படியிற் றங்கிநிற்கும் சலத்தை அப்பிரளயச லத்துக்கொப்பென்னுமுறைமை யுடைத்து என்க.

ஆலும் ஓவும் அசை. (சு)

நீடுபுக ழுலகுதனின் மைந்தர் மாதர்நேயமொடு தாம்பயந்த புதல்வர் வாயிற், கூடுமொழி மழலையொடு குழறி யொன்றுங் குறிப்பரிதா யிடினு மிகக் குலவிப் போற்றி, மாடுநமக் கிதுவென்று கொண்டு வாழ்வ ரதுபோல மன்னுதமிழ்ப் புலமை யோரொன்,பாடுகவிக் குற்றங்கள் பாரா ரிந்நூல் பாராட் டா நிற்பரருட் பரிசி னாலே.

(இ-ள்.) நீடுபுகழ் உலகுதனின் மைந்தர்மாதர் நேயமொடு தாம்பயந்த புதல்வர்வாயிற் கூடுமொழி மழலையொடு குழறி ஒன்றுங் குறிப்பரிதாயிடினு மிகக்குலவிப்போற்றி மாடுநமக்கிதுவென்று கொண்டுவாழ்வர் - நிலைபெற்ற புகழினையுடைய உலகின்கண் மாதராடவர் சிநேகத்தோடும் தாம் பெற்றமக்களிடத்துண்டாகியமொழி இளமையோடுதடுமாறி ஒன்றுந் தெரிதற் கரிதாயிருந்ததேனும் அதனை மிகவுங் கொண்டாடிப்போற்றி யாம் பெறும் பெருஞ்செல்வ மென்று மகிழ்ந்து வாழாநிற்பர்கள்,—அதுபோல மன்னுதமிழ்ப்புலமையோர் என்பாடுகவிக்குற்றங்கள்பாரார் இந்நூல் பாராட்டாநிற்பர் அருட்பரிசினாலே - அத்தன்மைபோல நிலைபெற்றதமிழ்ப்புலவராயினோர்என்னிடத்துண்டாகியகவியினது குற்றம்பாரார்,யான் சொன்ன இந்நூலைப் பாராட்டாநிற்பர் ஞானத்தின்முறைமைப்பாட்டினால் என்க.(எ)

---

## நூற்சிறப்பு.

சுத்தவடி வியல்பாக வுடைய சோதி சொல்லியவா கமங்களெலாஞ் சூழப் போயு, மொத்துமுடி யுங்கூட வோரி டத்தே யொருபதிக்குப் பல நெறிக ளுளவா னாற்போற், பித்தர்குண மதுபோல வொருகா லுண்டாய்ப் பின்னொருகா லறிவின்றிப் பேதை யோராய்க், கத்திடுமான் மாக்களுரைக் கட்டிற் பட்டோர் கனகவரை குறித்துப்போய்க் கடற்கே வீழ்வார்.

(இ-ள்.) சுத்தவடிவு இயல்பாக வுடையசோதி - ஞானமே தனக்குச் சுதந்திரவடிவாகவுடைய இறைவன்,—சொல்லிய ஆகமங்களெலாஞ் சூழப் போயும் ஒத்துமுடியுங்கூட ஓரிடத்தே - சமயபேதங்கடோறும் அவனருளிச்செய்த ஆகமங்களெல்லாம் பலபேதமாயினும் ஞானபாதம் எல்லாவாகமங்களினும் தம்முளொத்துச் சென்று ஒருபொருளையே நோக்கிமுடியும். அஃதென்போல வென்னில்,—ஒருபதிக்குப் பலநெறிகள் உளவானாற் போல் - ஒரூர்க்குண்டாகிய வழிகளெல்லாம் பலபேதப்பட்டதேனும் சேர அவ்வூரையேநோக்கிக்கிடந்தாற்போலும்,—பித்தர் குணமதுபோல ஒருகாலுண்டாய்ப் பின்னொருகால் அறிவின்றிப் பேதையோராய்க் கத்திடும் ஆன்மாக்கள் உரைக்கட்டிற்பட்டோர் - எல்லா ஆகமங்களிலும் ஞானபாதம் ஒக்குமென்றுகண்டு முத்தியடைந்திருக்கும் ஆன்மாக்கள்போலாகாமற்பித்தேறினோர்குணம்போல மருளுந்தெருளுமாய் முத்தியடையத்தக்க நெறியைக்காணமல் அந்நெறியைக் கண்டாற்போலக் கூப்பிட்டுத்திரியும் அறிவிலோரொன்னும் பரசமயிகளது பசுநூற்கட்டுக்குட்பட்டோர்,—கன

கவளை குறித்துப்போய்க் கடற்கேவிழ்வார் - மகாமேருவைக்குறித்து போக ஒருப்பட்டவன் அவ்வழி சென்றெய்தாமல் மறறொருதிசையே போய்க்கடற்கே விழ்ந்தாழுந்தன்மைபோலும் என்க. (அ)

## நூற்கதிகாரியும் நூல்வழியும் நூற்பெயரும்.

போதமிகுத்தோர்தொகுத்த பேதைமைக்கே பொருந்தினோ ரிவர்க் கன்றிக் கதிப்பாற் செல்ல, வேதுநெறி யெனுமவர்கட் கறிய முன்னா ளிறை வனருணந்திதனக் கியம்ப நந்தி,கோதிலருட் சனற்குமா ரற்குக் கூறக் குவ லயத்தி னவ்வழியெங் குருநாதன் கொண்டு, தீதகல வெமக்களித்த ஞான நூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி யென்றே.

(இ-ள்.) போத மிகுத்தோர் - சாத்திரஞானத்தான்மிக்கவர்கள்,—தொகுத்த பேதைமைக்கே பொருந்தினோர் - தொகுத்துச்சொல்லப்பட்ட அறியாமையைக் கூடினோர்,—இவர்க்கன்றி - இந்த விருவர்க்குமன்றி,—கதிப்பாற்செல்ல ஏதுநெறியெனுமவர்கட்கு அறிய முன்னாள்இறைவன் அருணந்தி தனக்கு இயம்ப - முத்தியின்வழிச்செல்ல யாது வழியென்று ஆராயுஞ்சத்திநிபாதத்தோர்க்கு அறியவேண்டி ஆதியிலே பரமேசுரன் தன்னளவிற் பத்திசெய்யு நந்திபெருமானுக்கு அருளிச்செய்ய,—நந்தி கோதில் அருட்சனற்குமாரற்குக்கூற - ஸ்ரீநந்திபெருமானுந் தம்மளவிற் குற்றமற்ற பத்திசெய்யுஞ் சனற்குமார பகவானுக்கு அருளிச்செய்ய,—குவலயத்தின் அவ்வழி எங்குருநாதன் கொண்டு தீதகல எமக்கு அளித்த ஞானநூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞானசித்தியென்றே - அம்முறைமை யாலே கேட்டருளிப் பிரபஞ்சத்திலெழுந்தருளிய எம்முடைய சுவாமி யாகிய மெய்கண்டதேவநாயனார் குற்றமற்றதமிழாகச்செய்து சிவஞான போதச் சிறப்புத்திருநாமந்தரித்து எமதஞ்ஞானநீங்க அருளிச்செய்த அந் நூலை ஒதியுணர்ந்து சொல்லாநின்றேன் இந் நூலை சிவஞானசித்தியென்னும் பெயரினால் என்க. (கூ)

## நூற்கருத்து.

இறைவனையு மிறைவனு லியம்பு நூலு மீண்டளவும் பொருளியல் பும் வேண்டுஞ் செய்தி, முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லா மு துலகி லெமக்கியன்ற முயற்சி யாலே, சிறையுலவும் புனனிலவித் தோன் றும் பேய்த்தேர்ச் செய்கைபோ லுண்டாய பொய்கொண் மார்க்கத், துறை பலவுங் கடாவிடையாற் சொல்லிப் போக்கித் துகடீர விந்நூலிற் சொல்ல கிற்பாம்.

(இ-ள்.) இறைவனையும் இறைவனால் இயம்புநூலும் - பரமேசுரனை யும் பரமேசுரனால் அருளிச்செய்யப்பட்ட வேதாகமபுராணப்பொருள்களை யும்,—ஈண்டு அளவும் - இவ்விடத்துண்டாகிய அளவையாகிய பிரமாணத் தையும்,—பொருளியல்பும் - அவ்வளவைகளால் அறியப்படும்பொருள்க ளின் இயல்பையும்,—வேண்டுஞ்செய்தி முறைமைகளும் - அப்பொருளியல்

பின் வழிநின்றோர் செய்யவேண்டும் ஆசாரங்களையும்,—பெத்தமொடு முத்தியெல்லாம் - பெத்தலக்ஷணத்துடனே முத்திலக்ஷணங்களெல்லாவற்றையும்,—முதுலகில் எமக்கு இயன்ற முயற்சியாலே - பழையதாய் வரும் பிரபஞ்சத்தில் எமக்குக்கூடினசெயலாலே,—சிறை உலவும் புனல் நிலவித் தோன்றும்பேய்த்தேர்ச் செய்கைபோல் உண்டாய பொய்கொண் மார்க்கத்துறை பலவுங் கடாவிடையாற் சொல்லிப்போக்கி - தடைப்பட்டு நிற்கும் நீரையொப்பத் தோன்றுகின்ற பேய்த்தேரினை மெய்யென்று நிரூபிக்குமிடத்துப் பொய்யானதன்மையேபோல நூல்களாகவும் வழிகளாகவும் கேட்டார்க்குப்பொருந்தத்தக்கதாகவுண்டாய்ப்பொய்மைக்கைக்கொண்ட வழிகளாகிய உலகாயதன்முதற் பாஞ்சராத்திரியீறாய சமயிகளுடைய பல துறைகளையுங் கடாவினுனும்விடையினுனுஞ் சொல்லிநீக்கி,—துகளற இந்நூலிற் சொல்லுகிற்பாம் - குற்றந்தீர ஞானபாதத்தை அறியவிந்நூலிற் சொல்லக்கடவேம் என்க. (க0)

மங்கலவாழ்த்துமுடிந்தது.
ஆகத்திருவிருத்தம்-கக.

---

# உலகாயதன்மதம்.

கலிவிருத்தம்.

இந்திர புரோகித னியம்புமொரு நூலின்
றந்திர மெனுதறிவி னோடருளி லாமற்
சந்தனை புயத்துமண மாலைகடயங்க
வுந்தியுல கத்திலுல காயத னுரைப்பான்.

(இ-ள்.) சந்தனமணிந்ததோளிடத்து நறுமலர் மாலைகள் விளங்கும்படி சுர்ப்பாசயநீங்காத உலகாயதன் இந்திரபுரோகிதனுகிய பிருகஸ்பதிபகவான் ஆன்மாக்கள் போகங்காரணமாக அருளியநூலை இப்பொழுது இடையூறென்று கொள்ளுதற்கு ஞானமுங்கிருபையுமில்லாமல் அந்தநூலையே உலகத்து மெய்யென்று சொல்லாநிற்பன் என்க.

இயம்புநூல் உலகாயதசித்தாந்தம். சந்தனைபுயத்து மணமாலைகடயங்கவென்பது போககாமியாகையாற் பல சுகந்தாதிகளை யுடையனென்பது நோக்கியென்க. உந்தியுலகத்திலுலகாயதனென்பது மாதர்போகமே மெய்யென்றநுபவிக்குமவன் ஜனனங்கைவிடானென்பது கருத்து. இத்திருவிருத்தத்தாற்சொல்லப்பட்டது இந்திரன்றவத்தினைப்புரியப் பிருகஸ்பதி அவனை மயக்கிவிடயத்தில் வீழ்வித்த சாத்திரமென்க. அஃதென்போலெனின் அருச்சுனன்றவத்தினைப்புரிய வாசுதேவன்றேரிலிருந்து கீதையென்னுஞ்சாத்திரத்தினன்மயக்கிக் கொல்லுவித்ததற்கொக்குமெனக்கொள்க. உலகாயதன் சார்வாகனென்றும் சொல்லப்படுவன். (க)

ஈண்டளவை காட்சிமன மாதியிரு மூன்றாய்
வேண்டுமனு மானமுத லானபல வேண்டா
பூண்டபொருள் பூதமவை புகழ்கடின சீதந்
தீண்டரிய வெம்மைசல னத்தினொடு சேர்வே.

(இ-ள்.) ஈண்டு அளவை காட்சி - இவ்விடத்து அளவையென்றுகொள்ளப்படுவது காட்சியே,—மனமாதி இருமூன்றாய் வேண்டும் - அக்காட்சி

யினை விகற்பித்துஐயக்காட்சிமுதல் ஆறுவகைக்காட்சியாய்க்கோடல்வேண்டும்,—அனுமானமுதலான பலவேண்டா-இக்காட்சியில் விகற்பமொழிந்து அனுமானம் உரைமுதலிய பலவேண்டுவதில்லை,—பூண்ட பொருள்பூதம்-அக்காட்சியானும் அதன்விகற்பத்தானுங் கண்டு கைக்கொண்டபொருள் பூதங்களுன்குமே,—அவை-அப்பூதங்களுன்கும்,—புகழ்கடின சீதந் தீண்டரிய வெம்மை சலநத்தினெடு சேர்வே - சொல்லப்பட்ட கடினம் சீதம் தொடுதற்கரியவெப்பம் சலநமென்னுஞ்சொரூபங்களோடுங்கூடும் என்க.

மனமென்றது ஐயக்காட்சி. பழுதையைப்பாம்பென்றையப்படுவது மனமாகலின் மனக்காட்சியென்ருர். இனிக்காட்சியிருமூன்ருவன—ஐயக்காட்சி, வாயிற்காட்சி, விகற்பக்காட்சி, அந்வயக்காட்சி, வெதிரேகக்காட்சி, திரிவுகாட்சியெனவிவை. இனி நிர்விகற்பக்காட்சியாவது இவ்வாறினேடுங்கூடாது குற்றமறக்காண்பது. ஐயக்காட்சியாவது இருளிற் பாம்போபழுதையோவென் றையுறுதல், அதுவே மனக்காட்சி. வாயிற்காட்சியாவது இந்திரியங்களாற்காண்பது. விகற்பக்காட்சியாவது பெயர் சாதி குணம் கன்மம் பொருளென்னுமைந்தினுலுங் காண்பது. அந்வயக்காட்சியாவது புகையினுல் அனலறிதல். வெதிரேகக்காட்சியாவது நாற்றத்தாற்பூவறிதல். திரிவுகாட்சியாவது பழுதையைப்பாம்பென்றுகொள்வது. (உ)

சாற்றுபெய ரானவை தலம்புனல் கனற்பின்
காற்றுமென லாமிவை கலந்தகுண மோதி
ஞற்றமிர தம்முருவ நற்பரிச மாகும்
போற்றுமிவை நித்தவியல் பாமிவை புணர்ப்பே.

(இ-ள்.) சாற்றுபெயரானவை - அப்பூதங்களுன்கும் அப்படிக்கூடினபின்பு அவையிற்றுக்குச்சொல்லும் பெயர்களானவை,—தலம் புனல் கனல்பின் காற்றும் எனலாம்-பிருதிவியும் அப்புவுந் தேயுவும் பின்வாயுவுமென்று சொல்லலாம்,—இவை கலந்த குணம் ஓதின் - இப்பூதங்கள் கூடிய குணங்களின் பெயரை முறையானே சொல்லின்,—நாற்றம் இரதம் உருவம் நற்பரிசம் ஆகும் - கந்தம் இரதம் உருவம் பரிசம் இவையாகும்,—போற்றும் இவை - தெய்வமாகத்தொழும் இப்பூதங்களுன்கும்,—நித்த இயல்பாம் - அழியாதவியல்புகளையுடையவாம்,—இவை புணர்ப்பே - இவை கூடுமிடத்து மேலானவாயு பூதத்திலேநின்று மூன்றுபூதங்களில் ஒன்றிலொன்றுக அடைவே கூடப்படும் என்க.

வாயுகண்ணுக்குத்தெரியாதாயினும் பரிசங்கொண்டுகொண்டலாற் பின்காற்றுமெனலாமென்ருரெனினுமமையும். (ங)

ஒத்துறு புணர்ச்சியி னுருக்கள்பல வாகும்
வைத்துறு கடாதிபல மண்ணின்வரு மாபோற்
புத்திகுண நற்பொறி புலன்களிவை யெல்லா
மித்தில்வரு நீரினி லெழுங்குமிழி யொத்தே.

(இ-ள்.) ஒத்துறு புணர்ச்சியின் உருக்கள் பலவாகும் - அப்பூதங்களின் சொரூபங்களுங்குணங்களுந் தம்மிலொத்துக்கூடுகிற கூட்டத்திலே வடிவுகள் பலவுண்டாம் (அஃதென்போலெனின்),—வைத்துறு கடாதிபல மண்ணின் வருமாபோல் - திரிகையிலேவைத்த மண்ணின்கண்ணே பல கடாதிகடோன்றுமாபோல,—புத்திகுணம் நற்பொறி புலன்கள் இவையெல்லாம் இத்தில்வரும் நீரினில் எழுங்குமிழி ஒத்தே-நீரினிற் கிளம்பிய குமி

ழியையொத்து,புத்தியுங்குணமும் ஞானேந்திரியமாகியபொறிபுலன்களும் இவையெல்லாம் இவ்வுருவின்கண்ணேயுண்டாம் என்க.

ஒத்துறுபுணர்ச்சியினுருக்கள்பலவுண்டாமெனவே ஒவ்வாமலுறும்புணர்ச்சியினுருக்களுங்குணமு மேறிக்குறைந்துவருமென்பதுகருத்தாயிற்று. உருக்கள் பலவாவன. எறும்புகடையானைமுதலாகவுள்ளன. (ச)

பூதமதி னொன் றுபிரி யப்புல னிறக்கும்
நீதியினி னிற்பன நடப்பனவு முற்போ
லோதும்வகை யாகியுறு காரிய முலந்தா
லாதியவை யாமிதனை யறிவதறி வாமே.

(இ-ள்.) பூதமதின் ஒன்று பிரியப் புலன் இறக்கும் - அப்பூதங்களில் வாயுப்பிரிய இந்திரியங்கள்கெடும். புலனிறக்குமெனவே புலன் காரணமாகிய பொறி குணம் புத்திமுதலியவுமிறக்கும்,—நீதியினின் நிற்பன நடப்பனவும் முற்போல்-இம்முறைமையாலே தாபரசங்கமங்களுமிறக்கப்படும்.—ஓதுமவை ஆகி உறு காரியம் உலந்தால் ஆதியவையாம் - சொன்னமுறைமையிற் கூடிப்போந்தகாரியமாகிய சொரூபகுணங்கள் இறந்தாற் காரணமாகிய பூதங்களேயாம்.—இதனை அறிவது அறிவாமே - இவையிற்றை இம்முறைமைப்பாட்டாலே அறிவதே ஞானமாவது என்க. (ரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இப்படி யன்றிக் கன்ம முயிரிறை வேறுண் டென்று
செப்பிடு மவர்க்கு மண்ணோர் செய்திடுங் குற்ற மென்னோ
வொப்பிலா மலடி பெற்ற மகனொரு முயற்கொம் பேறித்
தப்பிலா காயப் பூவைப் பறித்தமை சாற்றி னாரோ.

(இ-ள்.) இப்படி அன்றி - இப்படிப் பூதக்கூட்டத்தினால் உருக்கடோன்றி வாயுக்கெடக்கெடுதலன்றி,—கன்மம் உயிர் இறை வேறு உண்டென்று செப்பிடுமவர்க்கு மண்ணோர் செய்திடுங் குற்றம் என்னோ-முன்செய்தகன்மம் பின்றொடருமென்றும் இதனைப்புசிக்கத்தக்கதோர் ஆன்மாவுண்டென்றும் இவையிற்றைக்கூட்டுவான் ஒருகர்த்தாவுண்டென்றுஞ் சமயிகள் உலகத்தாரை மயக்க உலகத்தார் சமயிகளுக்குச்செய்த குற்றம்யாது,—ஒப்பிலா மலடி பெற்ற மகன் ஓரு முயற்கொம்பேறித் தப்பில் ஆகாயப் பூவைப் பறித்தமை சாற்றினாரோ - உலகத்தாரைமயக்கச் சமயிகள்கூறுமது, மலடிபெற்ற ஒப்பில்லாதமகன் ஒருமுயலின்கொம்பிலேயேறி ஆகாயத்திற்பூத்த பூவைத்தவறின்றிப்பறித்தானென்னுந் தன்மையோடொக்கும் என்க.

பூதமேதெய்வம், பூதக்கூட்டத்தின் மிகுதிகுறைவேகன்மம், பூதக்கூட்டத்தினிகழுமுணர்வே ஆன்மா இங்ஙனமன்றி வேறு தெய்வமுங்கன்மமும் ஆன்மாவுமில்லையென்பது கருத்து. (சு)

செய்திடுங் கன்ம மெல்லாஞ் செய்தவர் தம்மைப் பற்றி
யெய்திடு மென்னி னிங்கே மாய்ந்திடு மேய்வ தெங்ஙன்
மெய்தரு தூலங் கெட்டுச் சூக்கமாய் மேவு மென்னி
லையனே தீபம் போன லதனொளி யாவ துண்டோ.

(இ-ள்.) செய்திடும் கன்மம் எல்லாஞ் செய்தவர்தம்மைப்பற்றி எய்திடுமென்னின் - முற்பிறப்பில் ஆன்மாக்கள்செய்த கன்மமெல்லாங்கெடாமல்

ஆன்மாக்களைப் பொருந்திநின்று இப்பிறப்பிலே யூட்டுமென்று கூறின்,—இங்கே மாய்ந்திடும் எய்வதெங்ஙன் - இப்பிறப்பிற்செய்த புண்ணியபாவங்கள் இக்காயத்தோடு கெடுமாதலாற் பிற்பிறப்பிற் புக்குக் கூடுமாறெங்ஙனே,—மெய்தரு தூலங்கெட்டுச் சூக்கமாய் மேவுமென்னில் - பொருந்திய தூலவுடல்கெட்டுச் சூக்குமமாய்ப் பொருந்துமுறை எப்படியென்னில்,—ஐயனே தீபம் போனல் அதன் ஒளி ஆவதுண்டோ - திரியோடேகூடிநின்ற விளக்கொளி அத்திரியைநீங்கி வேறே நின்றொளிருமென்னுந் தன்மைத்து என்க.

ஐயனேயென்றது இழிவின்கண்வந்தது. (எ)

மாய்ந்துபின் வயலி லிட்ட வைதழை பலிக்கு மாபோ
லேய்ந்திடுங் கன்ம மென்னி லிட்டிடத் திசையு மேனி
யோய்ந்துவந் தவரை யுண்ணப் பண்ணுஞ்சோ றுதரத் தற்றால்
வாய்ந்திடும் பலம்வ யிற்றிற் கொண்டிடும் வழக்கு வைத்தாய்.

(இ-ள்.) மாய்க்துபின் வயலில் இட்டவை தழை பலிக்கு மாபோல் ஏய்ந்திடுங் கன்மமென்னில் - வயலினிட்ட வைக்கோலுந்தழையுங் கெட்டுப் பின்பு பயிர்க்குநன்மையைக் கொடுக்குமாறுபோலக் கன்மந்தோன்றுமற்றன்மைகெட்டுப் பொருந்துமென்றுகூறின்,—இட்டிடத்து இசையும் - நீ உவமைகூறிய வைக்கோலுந்தழையும் இட்டவிடத்திற் பயிர்க்கு நன்மையைக்கொடுக்கும் (அன்றிப் பிறவிடத்திற்கு நன்மையைக்கொடுக்கமாட்டா),—மேனி ஒய்ந்து வந்தவரை உண்ணப் பண்ணுஞ் சோறு உதரத்து அற்றால் வாய்ந்திடும் பலம் வயிற்றிற் கொண்டிடும் வழக்கு வைத்தாய் - காயந்தளர்ந்து பசித்துவந்தவரை உண்ணப்பண்ணுவித்தசோறு அவருதரத்து மாண்டாலுண்டாம் பிரயோசனம் அவர்வயிற்றின் மலங்கொள்வார் வழக்குக்கூறினாய் என்க.

இட்டதுகெட்டுப்பலித்தன் மலமெனக்கொள்க. (அ)

உருவமு முணர்வுஞ் செய்தி யொத்திரா கன்ம மென்னின்
மருவுகை விரல்க டம்மின் வளர்வுடன் குறைவுண் டாகி
வருவதிங் கென்ன கன்மஞ் செய்துமுன் மதியி லாதாய்
பெருகுபூ தங்க டம்மின் மிகுகுறைப் பெற்றி யாமே.

(இ-ள்.) உருவமும் உணர்வுஞ் செய்தி ஒத்திரா கன்மமென்னில் - ஒருகாயத்தின்செய்தியும் ஒருணர்வின்செய்தியும் ஒத்திராமற்பேதிக்கப்படுவது கன்மச்செய்தியென்று கூறின்,—மருவு கை விரல்கள் தம்மின் வளர்வுடன் குறைவு உண்டாகி வருவது இங்கென்ன கன்மஞ்செய்து முன்மதியிலாதாய் - அறிவிலாதாய் முன்பு எந்தக்கன்மஞ்செய்து பின்பு தொழிலை மருவினகைவிரல்கள் ஒன்றுக்கொன்று தம்மில் ஏறியுங் குறைந்துமிருப்பது,—பெருகு பூதங்கள் தம்மின் மிகுகுறைப் பெற்றியாமே - வளரும் பூதங்கள் தம்மின் மிக்குக் குறைதலாற் காயமுமுணர்வும் பேதிக்கப்பட்டதல்லது கன்மத்தினாலன்று என்க. (கூ)

இன்பொடு துன்ப மெல்லா மெய்துவ கன்ம மென்னி
னன்புனல் சந்த னாதி நணுகவு மணுக வொண்ணு
மின்பொலி யழலி னோடு மேவிலு நன்மை தீமை
யென்செய்த தியம்பி டாய்நீ யிவையெலா மியல்ப தாமே.

(இ-ள்.) இன்பொடு துன்பமெல்லாம் எய்துவ கன்மமென்னில் - ஒரு பொருட்கு இன்பத்துன்பங்களெல்லாங் கன்மத்தாற்பொருந்துமென்று கூறின்,—நன்புனல் சந்தனாதி நணுகவும் அணுக ஒண்ணு மின்பொலி அழலினோடு மேவிலும் நன்மை தீமை என்செய்தது இயம்பிடாய் நீ இவையெலாம் இயல்பதாமே - தெளிந்தபுனலானது சந்தனமுதலாகிய நறுநாற்றத்தோடுகூடவுங் கூடுதற்கரிதாகிய வொளிமிகுதியையுடைய அனலோடு கூடவும் எந்த நன்மை தீமைசெய்ததென்று நீ கூறாய், இவையெல்லாம் ஒரு பொருட்கு இயல்பாமாதலாற் பூதகுணமன்றிக்கன்மமில்லை என்க.

தோல்முதலானவை நெருப்பைக்கண்டாற்சுருண்டும் நீர்கூடினால் நெகிழ்ந்தும் வருவது பதார்த்தவியல்பொழிந்து வேறுகன்மத்தாலன்று. யாவும் பதார்த்தவியல்பென்றறிவாயாக. (௧0)

காயத்தின் குணம தன்றிக் கண்டதான் மாவுண் டாயின்
மாயத்திற் சொல்லி டாதே மனமுத லாறி னுக்கு
நேயத்த தாக வேண்டு மன்றியே நிகழ்த்து முண்மை
தேயத்தின் முயற்கொம் பெல்லை செப்புவோர் செய்தி யாமே.

(இ-ள்.) காயத்தின் குணமது அன்றி - நூறுகாய் அடைகூடவே ஒரு சிவப்புண்டாமாறுபோலப் பூதக்கூட்டத்தில் ஒருணர்வுண்டாம்.அஃதன்றி,—கண்டது ஆன்மா உண்டாயின்-மற்றோரான்மாவென்று தனியேகாணப்பட்டது உண்டாயின்,—மாயத்திற் சொல்லிடாதே - உன்மயக்கநூலிற் சொல்லாதே,—மனமுதல் ஆறினுக்கும் நேயத்தது ஆகவேண்டும் - மனக்காட்சிமுதலாய ஆறுகாட்சிக்கும் பொருந்தச்சொல்லவேண்டும்,—அன்றியே நிகழ்த்து முண்மை - காட்சி விகற்பத்தாலொழிந்து கருதலானும் உரையானுங் கூறுமது,—தேயத்தின் முயற்கொம்பு எல்லை செப்புவோர் செய்தியாமே - உலகத்திற் கோடில்லாத முயலுக்குக்கோடும் அதற்களவும் பெருமையுங் கூறுவோரது கூற்றும் என்க.

மனமென்பது ஐயக்காட்சியை. நேயமென்பது பொருத்தத்தை. (௧௧)

அருவமே யிறைவ னாகி லறிவின்று காய மாகு
முருவமே யென்னிற் பூதக் கூட்டத்தி லொருவ னாகு
மருவிய விரண்டுங் கூடி நிற்பவ னென்னின் மண்மே
லிருவிசும் பொருகல் லேந்தி நிற்குமோ வியம்பி டாயே.

(இ-ள்.) அருவமே இறைவனாகில் அறிவின்று ஆகாயமாகும் - கர்த்தா அருபியென்றுகூறில் அறிவுமில்லையாய் ஆகாயம்போலவாம்,—உருவமே யென்னிற் பூதக்கூட்டத்தில் ஒருவனாகும் - அந்தக்கர்த்தா உருவமுடையவனென்று கூறிற் பூதக்கூட்டத்திற்றோன்றுஞ் சரீரியாதல்வேண்டும்,—மருவிய இரண்டுங்கூடி நிற்பவனென்னில்-பொருந்திய ரூபாரூபத்தோடுங் கூடிநிற்பவ னென்றுகூறில்,—மண்மேல் இருவிசும்பு ஒருகல் ஏந்தி நிற்

குமோ இயம்பிடாயே - மிக்கவாகாயமாகிய அரூபத்திலே ரூபமாகியகல்லைவிட்டாற் றம்மிற்கூடிநிற்குமோ பிரபஞ்சத்தினில்லாதாகையால் ரூபாரூபங்கூடிநில்லாது என்க. (கஉ)

பூதத்தே யன்ன மாகி யன்னத்தா லுடம்பு புத்தி
பேதித்தே மனமு மாகிப் பிரிந்தமை திருந்த வின்று
வேதத்தே யுரைக்க வென்னோ மேதினி யோர்க ளெல்லாங்
கேதத்தே வீழ்ந்து வேறு நெறியல கேட்கு மாறே.

(இ-ள்.) பூதத்தே அன்னமாகி அன்னத்தால் உடம்பு புத்தி பேதித்தே மனமும் ஆகிப் பிரிந்தமை திருந்த இன்று வேதத்தே உரைக்க-பிருதிவி பூதத்தே உணவுதோன்றி அவ்வுணவால் உடலும் அவ்வுடலிலே புத்தியும் புத்தியிலே பேதிக்கப்பட்ட மனமுமுண்டாய் வேறுபட்டவற்றை இப்பொழுது தெரியத்தங்கள் வேதஞ்சொல்லும்வழியும்,—என்னோமேதினியோர்களெல்லாங் கேதத்தே வீழ்ந்து வேறு நெறியல கேட்குமாறே- தங்கள் வேதம் அப்படிச்சொல்லவும் பிரபஞ்சத்திலுள்ளோரெல்லாம் வருத்தத்திலே வீழ்ந்து வேறுவழியல்லாவகையைக்கேட்டு அதனை மேற்கொள்ளுமாறென்னோ என்க.

புத்தியுமெனவும்மைதொக்கது. பிரிதலென்பது வேறுபட்டிறத்தல். (கஙூ)

போகத்தை மண்ணிற் கண்டு விட்டுப்போய் விண்ணிற் கொள்ள
மோகத்த ராகி யல்லன் முயன்றுழன் மூட ரெல்லாந்
தாகத்திற் றண்ணீர் கண்டு விட்டுப்போய்த் தண்ணீர் கேட்டுச்
சோகித்தே யுண்ண வெண்ணித் துயருறு வார்க ளந்தோ.

(இ-ள்.) போகத்தை மண்ணிற்கண்டு விட்டுப் போய்-பூமியிலேமெய்யாக மாதர்போகத்தைக்கண்டிருந்தும் அதனையநுபவியாது கைவிட்டுப்போய்,—விண்ணிற்கொள்ள மோகத்தராகி அல்லல் முயன்று உழல் மூடர் எல்லாம்-சுவர்க்கத்திலே போகமுண்டென்று கேட்டு அதனைக்கைக்கொள்ளுதற்கு ஆசையுடையராய்த் தவமென்னுஞ்சிறையிலே முயன்று தடுமாறும் அறிவில்லாதவரெல்லாம்,—தாகத்தில் தண்ணீர் கண்டு விட்டுப் போய்த் தண்ணீர் கேட்டுச் சோகித்தே உண்ண எண்ணித் துயர் உறுவார்கள் அந்தோ - தாகித்தவிடத்தே தண்ணீரை மெய்யாகக்கண்டிருந்தும் அதனை யுண்ணுமற் கைவிட்டுப்போய் மற்றொரு தண்ணீரை ஒருவன் தூரத்திலே உண்டென்ன அதனைக்கேட்டுச் சோகித்து அத்தண்ணீரை உண்டு தாகந் தீரவேண்டுமென்று போய் வழியிலே துயரமுறுவோர் தன்மைபோலும், ஐயோ என்க.

அந்தோவென்பதிரக்கக்குறிப்பு. (கச)

வாழவே வல்லை வாமி வலக்கைதா வென்னு யிர்க்குத்
தோழனீ யுன்னை யொப்பார் சொல்லிடி னில்லை கண்டாய்
கோழைமா னுடர்தீ தென் னுங் கொலைகள வாதி கொண்டே
சூழும்வார் குழலார் மொய்ப்பச் சுடரொனத் தோன்றி னையே.

(இ-ள்.) வாழவே வல்லை வாமி வலக்கைதா - இவ்வுலகத்துள் எம்மைப்போல நீயும் வாழவல்லை வாமதந்திரியே உன்வலக்கையைத்தருவாயாக,—

என் உயிர்க்குத்தோழன் நீ உன்னை ஒப்பார் சொல்லிடின் இல்லை கண்டாய்-என்னுயிர்க்குத் தோழனீயேயன்றிச் சொல்லுமிடத்து உன்போல்வார் வேறில்லைகண்டாய்,—கோழை மானுடர் தீதென்னுங் கொலை களவு ஆதி கொண்டே-பயந்தமனுடர் பொல்லாங்கென்று சொல்லப்பட்ட கொலைகளவு முதலியவற்றை யாங்கைக்கொள்ளு முறைமைபோலக் கைக்கொண்டு,—சூழும் வார்குழலார் மொய்ப்பச் சுடரெனத் தோன்றினுயே-சுற்றுமொழுங்குநீண்ட குழலினையுடைய மடவார் சேவித்துப்போத விளக்குப்போலத் தோன்றினுயாதலாற் றோழனீயே என்க.

வலக்கைதா என்றது பிரியவசனஞ்சொல்லியது. கொலைகளவாதியாவது—கொலை, களவு, கள், காமம், பொய் இவையும், காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் முதலியபிறவுமாம். (கடு)

ஈசனு ரயனுர் மாலோ டிந்திரன் றெரிவை மார்பாற்
பேசொணு வகைக ளெல்லாஞ் செய்தன்றோ பெரியோ ராரு
ராசையா லவர்போ னுமு மாகவே வேண்டு மாயின்
வாசமார் குழலா ரோடும் வல்லவா கூடி வாழ்மின்.

(இ-ள்.) ஈசனுர் அயனுர் மாலோடு இந்திரன் தெரிவை மார்பாற் பேசொணுவகைகளெல்லாஞ்செய்தன்றோ பெரியோரானுர்-உருத்திரன்பிரமா விஷ்ணு இவருடன் இந்திரனும் மாதர்களிடத்துச்சொல்லவொண்ணுதபடி தலையிற்றரித்தும் நாவிற்றரித்தும் மார்பிற்றரித்துங் கௌதமர்சாபந்தரித்தும் மற்றுஞ்செய்துமன்றோ பெரியோரென்றெல்லாராலுஞ் சொல்லப்பட்டார்கள்; ஆகையால்,—ஆசையால் அவர்போல் நாமும் ஆகவே வேண்டுமாயின் வாசம் ஆர்குழலாரோடும்வல்லவா கூடி வாழ்மின் - அப்படி அவர்களைப்போல எல்லாராலும் பெரியோரென்று கொண்டாடப்படுதற்கு நமக்கும் ஆசையுண்டாயின் மணந்தங்கிய குழலினையுடைய மடவாரோடுவல்லவண்ணம் வருந்தியும் பொருந்திவாழ்மின் என்க. (கசு)

தையலா ரூட லாடத் தாமவ ரோடுங் கூடிச்
செய்யதா மரையை வென்ற சீறடி செம்பஞ் சூட்டி
மெய்யெலாம் பாதஞ் சூடும் வேடத்தார் மெய்யிற் கூடா
மையன்மா னுடர்பொய் மார்க்க வேடத்தே மாய்கின் றாரே.

(இ-ள்.) தையலார் ஊடலாடத் தாம் அவரோடுங்கூடி-மகளிர் ஊடினகாலத்து அவ்வூடலைநீக்கி அவரோடுங்கூடி,—செய்யதாமரையை வென்ற சீறடி செம்பஞ்சு ஊட்டி - தாமரையினது சிவப்பை ஒப்பழித்தபாதத்தைச் செம்பஞ்சூட்டி,—மெய்யெலாம் பாதஞ் சூடும் வேடத்தார் மெய்யிற்கூடா மையல்மானுடர் - அவாதடிகளாற் றமதுகாயமெங்கும்புனைந்துகொள்ளும் வேடத்தினிற்பவராகிய உலகாயத ருண்மையிற் கூடாதமயக்கத்தையுடையமானுடர்,—பொய்மார்க்க வேடத்தே மாய்கின்றாரோ- பொய்வழியாகிய தவவேடத்திற் புகுந்து மாயாநின்றார்கள் என்க. (கஎ)

வாசமார் குழலி னார்கண் மணியல்குற் றடத்தே மூழ்கி
நேசமார் குமுதச் செவ்வா யமுதினை நிறைய வுண்டு
தேசுலா மணிமென் றோண்மேற் சேர்ந்துவீற் றிருந்தி டாதே
மாசுலா மனத்தோ ரெல்லா மறுமைகொண் டழிவர் மன்னோ.

(இ-ள்.) வாசமார் குழலினார்கள் மணி அல்குற் றடத்தே மூழ்கி - மணம்தங்கிய குழலினையுடைய மடவார்களது இரத்தினத்தினால் அமைக்கப்பட்ட மேகலைபொருந்தின அல்குலென்னுந்துறையின் மூழ்கி,—நேசம் ஆர் குமுதச் செவ்வாய் அமுதினை நிறைய உண்டு - சிநேகமிகுதியையுடைய அவரதாம்பல் மலர்போலுஞ் சிவந்தவாயினினூறும் அமுதத்தை நிறையப் பருகி,—தேசு உலா மணிமென் தோள்மேற் சேர்ந்து வீற்றிருந்திடாதே - ஒளிவீசியமணியினையுடைய மெல்லியதோண்மீதணைந்து வாழ்ந்திருந்திடாதே,—மாசு உலாம் மனத்தோரெல்லாம் மறுமைகொண்டு அழிவர் மன்னோ - குற்றஞ்சேர்ந்த மனத்தையுடைய பரசமயிகளெல்லாம் மறுமைப் பயனுண்டென்று அழிவர் என்க.

மன்னும் ஓவும் அசை. (கரு)

மதிநிலா நுதலா ரோடு மணிநிலா முன்றி லேறி
முதிர்நிலா வெறிப்பச் செவ்வா யிளநிலா முகிழ்ப்ப மொய்த்த
கதிர்நிலா வடங்கொள் கொங்கைக் கண்கண்மார் பகல மூழ்கும்
புதுநிலா வியநன் போகம் விடுவர்புன் சமயத் தோரே.

(இ-ள்.) மதிநிலா நுதலாரோடு மணிநிலா முன்றில் ஏறி - மதிபோலும் விளங்கு நுதலினையுடைய மாதரோடுங்கூடி ஒளியையுடைய முன்றிலிற்சென்றேறி,—முதிர்நிலா எறிப்பச் செவ்வாய் இளநிலா முகிழ்ப்ப மொய்த்த கதிர்நிலா வடங்கொள் கொங்கைக் கண்கள்மார்பு அகலம் மூழ்கும் புதுநிலாவிய நன்போகம் விடுவர்புன் சமயத்தோரே - பூரணசந்திரன் ஒளிவிட்டுவிளங்க அவரது சிவந்தவாயில் நகையொளிதோன்றச் செறிந்த ஒளிமிக்க முத்துவடத்தைத் தாங்கிய முலைக்கண்கள் தமது மார்பகலத்தேமூழ்கும்படி அழுந்தியநுபவித்து நாடோறும் புதுமைதங்கிய நல்லவநுபோகத்தைக் கைவிடுவர், இவ்வழிநில்லாத அவமாயசமயத்தவர் என்க. ()

ஊடுவ துணர்வ துற்ற கல்விமங் கையரை யுள்கி
வாடுவ தடியில் வீழ்ந்து வருந்துவ தருந்த வம்பின்
கூடுவ துணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கை யேயாய்
நீடுவ தின்ப முத்தி யித்தினின் றோர்கண் முத்தர்.

(இ-ள்.) ஊடுவது உணர்வது உற்றகல்வி மங்கையரை உள்கி வாடுவது அடியில் வீழ்ந்து வருந்துவது அருந்தவம் - கல்விபொருந்தின (புதிதாகக் கூடிய) மாதரைநினைத்துத் தம்முடனூடுவதானால் அவரை ஊடறீர்ப்பது பொருட்டாகத் தளர்தலும் அவர்களடிகளில்வீழ்ந்து வருந்துதலுமே அரிதாகச்செய்யுந் தவமாம்,—பின் கூடுவது (முத்தி)உணர்வுகெட்டு-அப்படித் தவத்தினின்றபின் அம்மகளிரோடுந்தன்னறிவுகெட்டுக் கூடுவது முத்தியாம்,—குணமெலாம் வேட்கையேயாய் நீடுவது இன்பமுத்தி இத்தில் நின்

உணர்வு கெட்டுக் கூடுவது முத்தி - தன்வசமழிந்து அம்மகளிரோடுசேர்வது மோக்கமாம்;—குணம் எலாம் வேட்கையேயாய் நீடுவது இன்பம் - முக்குணங்களும் அவர் போகத்தின்மீதாரப்பட்ட காமக்குணமாய் நிலைபெறுவது பேரின்பமாம்;- இத்தில் - இப்பேரின்பத்தில்; நின்றோர்கள் - நிலையுற்று [illegible] முத்தர் - சீவன்முத்தர் என்க.

ஞர்கள் முத்தர்-இந்திரியங்களெல்லாம் ஒருமைப்பட விருப்பம் நிலைபெறுவது முத்தியின்பமாம்; இவ்வழியில் நின்றவர்களே முத்தராவர் என்க.

இன்பமுத்தியென்பதனை முத்தியின்பமெனமாறுக. (உ0)

வீட்டினை யுளதென் றோடி மெலிவதிங் கென்னை வீடு
காட்டினோர் கண்டோர் கேட்டோர் கரியவை யுண்டேற் காட்டீர்
நாட்டினி லரச னாணைக் கிசையவே நடந்து நாளு
மீட்டிய பொருள்கொண் டிங்கே யின்பத்து ளிசைந்தி டீரே.

(இ-ள்.) வீட்டினை உளதென்று ஓடி மெலிவது இங்கென்னை - காணப்பட்ட ஸ்திரீபோகத்தை அநுபவியாது வேறே வீட்டின்பமுளதென்றுதடுமாறி மெலியுந்தவத்தைச்செய்வதியாது,—வீடு காட்டினோர் கண்டோர் கேட்டோர் கரியவை உண்டேற் காட்டீர் - அந்தவீட்டினைக் காட்டினவர்களையும் கண்டவர்களையும் அதனைக்கேட்டவர்களையும் உண்டாகிற்சான்றுகாட்டீர்; அதுகாட்டமாட்டீராயின்,—நாட்டினில் அரசன் ஆணைக்கு இசையவே நடந்து நாளும் ஈட்டிய பொருள்கொண்டு இங்கே இன்பத்துள் இசைந்திடீரே - உலகத்தின்கண் அரசனுக்கிணைவழியில் நடந்து நாடோறுந்தேடியபொருள்கொண்டு இப்பிரத்தியட்சமான இன்பத்தை இவ்விடத்திற்பொருந்துவீர் என்க. (உக)

உலகாயதன்மதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௩௨.

---

## உலகாயதன்மதமறுதலை.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உள்ள தாவது கண்ட தென்றுரை கொண்ட தென்னுல கத்துநீ
பிள்ளை யாய்வளர் கின்ற நாளுனைப் பெற்ற தாயொடு தந்தையைக்
கள்ள மேபுரி கால னாருயி ருண்ண வின்றொரு காளையாய்
மெள்ள வேயுள தொன்று கொண்டு விரும்பு மாறு விளம்பிடே.

(இ-ள்.) உள்ளதாவது கண்டதென்று உரைகொண்டதென் உலகத்து- உலகாயதா! நீஉலகத்துக்காட்சியே மெய்யென்றும் அநுமானமுதலிய பொய்யென்றுங் கொள்ளப்பட்டது என்னை?—நீ பிள்ளையாய் வளர்கின்றநாள் உனைப்பெற்ற தாயொடு தந்தையைக் கள்ளமேபுரி காலனார் உயிர் உண்ண இன்றொரு காளையாய் மெள்ளவே உளதொன்றுகொண்டு விரும்புமாறு விளம்பிடே - நீபிறந்துவளர்கின்றநாளில் உன்மாதாவினுயிரையும் பிறப்பதன்முன் உன்பிதாவினுயிரையும் கட்புலனாற்காணாததொழிலைப்புரியும் எமன் கொண்டுபோக நீஇளமைநீங்கியபின் மாதாபிதாநமக்கு உண்டென்றுமெல்லக் கருதியநெறி நீகூறியகாட்சியன்று, அநுமானமே என்க.

உண்ணல் - கோடல். விரும்பல் - கருதல். (க)

இடித்து மின்னி யிருண்டு மேக மெழுந்த போதிது பெய்யுமென்
றடுத்த தும்மகில் சந்த முந்தி யலைத்து வார்புன லாறுகொண்
டெடுத்து வந்திட மால்வ ரைக்க ணிருந்து கொண்டல் சொரிந்த தென்று
முடித்த தும்மிவை காட்சி யன்றனு மான மென்று மொழிந்திடே.

(இ-ள்.) இடித்து மின்னி இருண்டு மேகம் எழுந்தபோது இது பெய்யுமென்று அடுத்ததும் - மேகம் முழங்கியும் மின்னியும் இருண்டும் பரந்தெழுந்தவிடத்து இதனால்மழைபெய்யுமென்று நினைப்புண்டானதும்,—அகில் சந்தம் உந்தி அலைத்து வார்புனல் ஆறுகொண்டெடுத்து வந்திட-ஆறு அகில் சந்தன முதலியவற்றைத்தள்ளி அலைத்தொழுகுநீரைக் கொண்டுவந்திட,—மால்வரைக்கண் இருந்து கொண்டல் சொரிந்ததென்று முடித்ததும் - அதனைக்கண்டு பெரியமலையின்கண் மேகமிருந்து பெய்ததென்று நினைந்து துணிந்ததும்,—இவை காட்சி அன்று அனுமானமென்று மொழிந்திடே - இவையிரண்டும் நீகூறிய காட்சியன்று அனுமானமென்று கூறுவாயாக என்க.

மேகத்தின்றோற்றமும் அதனுடைய விகற்பமுங் காரணாநுமானமென்றும், வெள்ளங்கண்டு மலைத்தலையில் வருடமுண்டென்று காண்கை காரியாநுமானமென்றுங்கொள்க. (உ)

காண்ட லோவநு மான மாவதுங் காட்சி முன்னதுங் காட்சியேற்
பூண்ட பூத வுடம்பி னுள்ளெழு போத மென்கொடு கண்டனை
மாண்ட வாயின் மனங்கொண் ஞான முணர்ந்த தும்மநு மானமென்
றீண்டு பூத மியைந்த திவ்வுட லென்ப தென்பிர மாணமே.

(இ-ள்.) காண்டலோ அநுமானமாவதும் காட்சி முன்னதும் காட்சியேல்-நீர் அநுமானமென்று கூறப்பட்டதுங் காட்சியே, அதுபூர்வக்காட்சியாகையால் பூர்வக்காட்சியுங் காட்சியென்று நீகூறில்,—பூண்ட பூதவுடம்பினுள் எழுபோதம் என்கொடு கண்டனை - பூதக்கூட்டத்தினுள் ஓரறிவெழுமென்று கூறியது அநுமானமன்றி யாதுகொண்டுகண்டனை அன்றியும்,—மாண்ட வாயில் மனம்கொள் ஞானம் உணர்ந்ததும் அநுமானமென்று-சத்தாதிகளை நல்லபொறியிடமாக நின்று அறியுமென்னு மறிவுங் காட்சியன்று அநுமானமென்று கொள்வாயாக;—ஈண்டு பூதம் இயைந்தது இவ்வுடல் என்பது என்பிரமாணமே - இஃதன்றிப் பிரமாணமுமில்லையென்று கூறுவை. அங்ஙனங்கூறிற், பூதக்கூட்டத்தின் உருத்தோன்றுமென்று கூறியது யாது உன்காட்சியும் அநுமானப்பிரமாணமேயென்று அறிவாயாக என்க.

இவ்விடத்துப் பூதங்களின்கூட்டத்து உடம்பாமென்றுசொல்லியது அநுமானத்தாலென்க. இலிங்கத்தைக்கொண்டு இலிங்கியையூகிக்கிறஞானம் அநுமானமெனப்படும். (௩)

பழுதி லாமறை கண்ட நூல்பழு தின்றி யுண்டது பாரின் மேன்
மொழிவர் சோதிட முன்னி யின்னது முடியு மென்பது முன்னமே
யழிவி லாதது கண்ட னம்மவை யன்றி யுஞ்சில வாகமங்களி
னெழுதி யோர்படி யேன்று கொண்டிரு நிதியெ டுப்பது மெண்ணிடே.

(இ-ள்.) பழுது இலா மறை கண்டநூல் பழுது இன்றி உண்டு அதுபாரின்மேல் மொழிவர் சோதிடம் முன்னி இன்னதும் முடியுமென்பது முன்

னமே அழிவிலாதது கண்டனம்-குற்றமில்லாத வேதமுதலாகிய நூல்கள் குற்றமின்றிச்சொல்வனவுள; அவையெங்ஙனமென்னிற்,பூமியின்கட் சோதிடநூலோர் கருதி நிகழ்காலத்தினின்றும் எதிர்காலத்துவினையை முன்பு கூறுநிற்பர்கள்.பின்பு அதுவும் அழிவில்லாததாகக் கண்டனம்,—அவையன்றியும் சில ஆகமங்களின் எழுதி யோர்படி என்று கொண்டு இருநிதி எடுப்பதும் எண்ணிடே-அவையொழிந்துஞ் சில நூற்பிரமாணத்தினுள்ளபடியை எடுத்துக்கொண்டு இறந்தகாலத்தில் வைக்கப்பட்டுப் பூமியின்கண் மறைந்துகிடக்கும் பொருள்களையுமெடுக்கப்படும். அவை நூற்பிரமாணமேயென்றறிவாயாக என்க. (ச)

பூத மானவை நித்த மென்று புகன்ற தென்னை யுருக்களா
யாத லோடழி வாகு மாதலி னுக்கு வோரவர் வேண்டிடுங்
காத லோடு கடாதி மண்கொ டியற்று வோருளர் கண்டனஞ்
சீத நீரி லெழுந்த கொப்பு ணிகழ்ந்த மாருதச் செய்கையே.

(இ-ள்.) பூதமானவை நித்தமென்று புகன்றது என்னை - பூதநான்கும் அழியாதவியல்புடைத்தென்று கூறியதென்னை?—உருக்களாய் ஆதலோடு அழிவாகும் ஆதலின் ஆக்குவோரவர் வேண்டிடும்-பூதக்கூட்டத்தில் உருத்தோன்றுதலுங் கெடுதலுமுண்டாதலால் இவை நித்தமன்றி இவை கூட்டுவான் ஒருகர்த்தாவேண்டும்; அஃதென்போலவென்னில்,—காதலோடு கடாதி மண்கொடு இயற்றுவோர் உளர் கண்டனம் - நீ உவமை கூறிய கடாதிகளையும் மண்ணைக்கொண்டு உண்டாக்குவானைக் காண்டலால்,—சீதநீரில் எழுந்த கொப்புள் நிகழ்ந்த மாருதச் செய்கையே - நீரிடமாகக் குமிழிதோன்றுமாபோல, மனமுதலாயின தோன்றுமென்று கூறினாய்;குமிழியும்வாயுவாலுண்டாம். ஆகையால், உருவிடத்திலு மனமுதலானவற்றைக் கூட்டுதற்கொரு கர்த்தாவேண்டுமென்றறிவாயாக என்க. (ரு)

நீரின் வந்தெழு கொப்பு ணீரது வாயெ ழுந்நிகழ் பூதமு
மோரின் வேறுணர் வாயெ ழாவவை பூத மாகி யுதித்திடுந்
தேரி னூறடை காய்செ றிந்தவை சேர வேறு சிவப்பெழும்
பாரி னிற்பிரி யாது புந்தி பழிப்பு டம்பு கிடக்கவே.

(இ-ள்.) நீரின்வந்து எழுகொப்புள் நீரதுவாய் எழும் நிகழ்பூதமும் ஓரின்வேறு உணர்வாய் எழா அவை பூதமாகி உதித்திடும்-நீரின்கண்ணே தோன்றுங் குமிழியும் நீராமாறுபோல, விளங்கியபூதங்களும் விசாரிக்குமிடத்து வேறாகவறியும் அறிவாகாது,அவை காயபூதமேயாம்,—தேரின் நூறு அடை காய்செறிந்து அவைசேர வேறு சிவப்பு எழும்-அன்றியும் ஆராயும்வழி நூறுங்காயும் அடையுங்கூடி அவைகலந்தவிடத்து ஒரு சிவப்புண்டாமாறுபோலப் பூதக்கூட்டத்தின் ஓரறிவெழுமெனக்கூறியது,—பாரினிற் பிரியாது-பூமியிடத்துச் சிவப்புச்சேர்வை நீங்காது,—புந்தி பழிப்பு உடம்பு கிடக்கவே-அச்சேர்வைபோலப் புத்தியும் அவ்வுடலைவிட்டு நீங்காதாகவேண்டும். அங்ஙனமன்றி உடல்கிடக்கப் புத்திநீங்குகையால் நீகூறியது பழிப்பாம் என்க.

பழிப்பென்பதனைப் பின்னேகூட்டுக. கொப்புள்-விகாரம். பிரியாதென்னுஞ் சொல்லைப் புந்தியுடனுங் கூட்டுக. (சா)

கூறு சேர்வையின் வந்த போது சிவப்பெ னுங்குண மொன்றுமே
வேறு வேறு புலன்கு ணங்க ளுடற்கண் வந்து விளைந்ததென்
னூறு காயடை கூடும் வேறொரு வன்ற னலென நோக்கிநீ
தேறு பூத செயற்கும் வேண்டு மொருத்த னென்று தெளிந்திடே.

(இ-ள்.) கூறு சேர்வையின் வந்தபோது சிவப்பெனுங் குணம் ஒன்று மே வேறுவேறு புலன் குணங்கள் உடற்கண் வந்து விளைந்தது என் - நூறுங் காயும் அடையுமென்று கூறப்பட்ட சேர்வையின்கண் வந்தவிடத்துச் சிவப்பெனு மொருதன்மையேகாணப்படும். அப்படி ஒருதன்மையேயா காது புலனென்றும் பொறியென்றும் குணங்களென்றும் தனித்தனி உடற் கண்வந்துண்டாகியதென்னை? அஃதன்றியும்,—நூறு காய் அடைகூடும் வேறு ஒருவன் றனலென நோக்கிநீ தேறுபூத செயற்கும் வேண்டும் ஒருத்த னென்று தெளிந்திடே - நூறுங் காயும் அடையுஞ் சிவப்பேறக் கூட்டுதற்கு ஒருவன் வேண்டுமென்பதனை நீகருதியதுபோலப் பூதச்செயற்கும் ஒருத் தன்வேண்டுமென்று நிச்சயமாகத் தெளிந்திடுவாயாக என்க.

தேறித்தெளிந்திடெனக் கூட்டுக. (எ)

ஆன வைம்பொறி யுண்டி நித்திரை யச்ச மைதுன மாதியா
யூனில் வந்திடு முன்பி லாதவை யென்று ரைக்கினு லூதைபோல்
வானின் வந்திடு மாத ராணலி யாகி மானுட ராதியா
யோனி பன்மையு மின்று பூத முறும்பு ணர்ச்சியொர் தன்மையே.

(இ-ள்.) ஆன ஐம்பொறி உண்டி நித்திரை அச்சம் மைதுனம் ஆதியாய் ஊனில் வந்திடும் முன்பு இலாதவை என்று உரைக்கின் உலூதைபோல்-சி லம்பியிடத்து நூல்தோன்றுமாபோல முன்பில்லாதவையான ஐம்பொறி உணவு துயில் பயம் மைதுனமுதலியவை காயத்தின்குணமாகஇப்போதுண் டாமென்று நீ சொல்லில்,—வானின் வந்திடும் மாதர் ஆண் அலியாகி மானு டர் ஆதியாய் - மாதர் ஆண் அலியாகியும் மானுடராதியாகியும் ஆகாயத்தி னின்றுந் தோன்றல்வேண்டும்.—யோனிபன்மையும் இன்று பூதம் உறும்பு ணர்ச்சி ஓர் தன்மையே - பூதக்கூட்டம் ஒருதன்மையாகலான் மிருகபசு பட்சி தாபராதிகளாகிய யோனிபேதமும் இல்லையாம்; ஆகையால், நீ கூறி யதுபொருளன்று என்க.

ஆனவைம்பொறியென்றது முன்பில்லவையாய் இப்பொழுதுண்டானவை யென்க. உலூதை - சிலம்பி. (அ)

ஐந்து நான்கொரு மூன்றி ரண்டுட னொன்ற தாயுட லங்களின்
வந்தி டாவுணர் விந்தி யங்களும் வன்ன பன்மையு மின்மையாம்
புந்தி யோடிய வன்ன போக குணங்கள் பூத புணர்ச்சிதான்
றந்தி டாதிவை பேத மாயிட வந்த வாவினை தந்தவா.

(இ-ள்.) ஐந்து நான்கு ஒருமூன்று இரண்டுடன் ஒன்றதாய் உடலங் களின் வந்திடா உணர்வு இந்தியங்களும் வன்ன பன்மையும் இன்மையாம் - நீ முன்பில்லையென்று கூறிய கன்மமில்லையாயின் யோநிபேதமுமில்லையாய் அவ்வியோநிபேதங்களின் உண்டாம் உடலங்களின் இந்திரியங்களும் ஐந்து

நான்கு மூன்று இரண்டு ஒன்றென்னும் அறிவுகளுமில்லையாம். அவையன்றியும்,—புந்தியோடிய வன்ன போக குணங்கள் பூத புணர்ச்சிதான் தந்திடாது - புந்தியால் அறியும் அக்ஷரங்களும் புசிப்புகளும் குணபேதங்களும் பூதக்கூட்டந் தரமாட்டா.—இவை பேதமாயிட வந்தவா வினைதந்தவா - இந்திரியமிகவாகவும் குறைவாகவும் சாதிபேதமாகவும் குணபேதமாகவும் பேதித்திடவந்தவாறு கன்மந்தந்தவாறென்று அறிவாயாக என்க.

முன்னர் வன்னம் ஜாதி, பின்னர் வன்னம் அக்ஷரம். (கூ)

அறிவு பூதம தென்னில் வேறு புறத்த றிந்தமை கண்டிலஞ்
செறிவு தானுட லத்தெ னிற்சவ மான போதுட றேருமோ
குறிகொ ளாதுடல் வாயு வானது கூடி டாமையி னென்னினீ
பிறித ராதுயிர் நிற்க ஞான முறக்க மென்பிற வாததே.

(இ-ள்.) அறிவு பூதமதென்னில் வேறுபுறத்து அறிந்தமை கண்டிலம்-பூதங்களே அறிவாமென்று நீ கூறில், புலப்படக்காணப்பட்ட மண்ணிலும் நீரிலும் நெருப்பிலும் காற்றிலும் அறிவு கண்டிலமன்றோ,—செறிவுதான் உடலத்தெனிற் சவமானபோது உடல் தேருமோ - உடலிலேசெறிந்தபோதுகாண் தோன்றுவதென்னிற், சவமாய்க்கிடந்தகாலத்தே அறிவுகண்டதில்லையே,—குறிகொளாது உடல் வாயுவானது கூடிடாமையின் என்னின் நீ - அறிவு குறிக்கமாட்டாது காண் உடலின் வாயுப்பிரிந்தவாறேயென்று நீ கூறில்,—பிறிதராது உயிர் நிற்க ஞானம் உறக்கமென் பிறவாததே - அந்தவாயுவானது உறக்கத்திலே பிரியாதுநிற்க அறியாமல் நிற்பானேன்? ஆகையாற் பூதக்கூட்டத்தே அறிவுதோன்றுது; வேறோரறிவுண்டென்றறிவாயாக என்க. (கo)

அறிவு டற்குண மென்னி லானைய தாதி யந்த மெறும்பதா
வுறுமு டற்பெரி தான வற்றி னுதித்தி டும்பெரி தாகவே
சிறுவு டற்செறி ஞான முஞ்சிறி தாயி டும்பரி ணுமமும்
பெறுமு டற்சிறி தாவ தென்பெரி தாவ தென்சில பேசிடே.

(இ-ள்.) அறிவு உடற்குணம் என்னில் - அறிவென்று வேறொருமுதலில்லை உடற்குணமேகாண் அறிவென்று நீ கூறின்.—ஆனையதாதி அந்தம் எறும்பதா உறும் உடற் பெரிதான வற்றின் உதித்திடும் பெரிதாகவே சிறு உடற்செறி ஞானமுஞ் சிறிதாயிடும்- ஆனைமுதல் எறும்பீறாக வெடுத்தவுடலிற் பெரிதானவற்றின் உதிக்குமறிவு பெரிதாயுஞ் சிறிதானவற்றின் உதிக்குமறிவு சிறிதாயுமிருக்கவேண்டும். அங்ஙனமன்றி,—பரிணுமமும் பெறும் உடற் சிறிதாவதென் பெரிதாவதென் சிலபேசிடே - பரிணுமத்தையுடைய யானையுடற்கு அறிவு சிறிதாயும் சிறியவுடலையுடைய மானுடற்கு அறிவுபெரிதாயுமிருப்பதென்? ஆகையால் அறிவு உடற்குணமன்று;வேறு நீ சொல்லத்தக்க துண்டாயிற்சொல் என்க.

சரீரம்வளருந்தோறும் அறிவுவளரவும் அதுகெடுந்தோறுங்கெடவுங் காண்டலானும் சரீரத்தைப்பிரிந்து சேதனநிற்கக்காணப்படாமையானும் சரீரகாரியமென்னிற் பிருதிவிசேடணமாகிய இந்தனம் பெருகுந்தோறும்பெருகிச் சுருங்குந்தோறுஞ்சுருங்கி அதனில்வேறுபடப்படாதாகி இந்தனமில்லாதவழியில்லையாகின்ற அக்கினி இந்தனகாரியமாகி இந்தனத்துடனென்றுகாவாறுபோல, அறிவு சரீரகாரியமாகிச் சரீரத்துடனென்றுகாது. அன்றியும் அறிவு மகாசரீரவானில் அற்பசரீரியா

யினன் சகலசாத்திர ஞானமுடையனுகக்காண்டலிற் சரீரவிருத்தியாற் சேதனத்
துக்கு விருத்தியில்லையெனக் கொள்க. (௧௧)

போத மும்மெலி வாகி யும்மலி பூத மானவை கூடலிற்
பேத மோடு பெருத்து டற்கள் சிறுத்த பெற்றிமை யென்றிடி
னோது டற்பெரி தான வுஞ்சிறி தாயி டாசிறி தானவு
நீதி யிற்பெரி தாயி டாமுன முள்ள தன்மையி னீடுமே.

(இ-ள்.) போதமும் மெலிவாகியும் மலிபூதமானவை கூடலிற் பேதமோ
டு பெருத்து உடற்கள் சிறுத்த பெற்றிமை யென்றிடின் - அற்றன்று, உட
ற்குணமேகாண் அறிவென்றது, பூதமானவை கூடுங்காலத்துப் போத
மெலிவாகியும் பூதமலிவாகியுங்கூடலில் அறிவுசிறுத்துக் காயம்பெருத்த
தென்றும், போதமலிவாகியும் பூதமெலிவாகியுங் கூடலில் அறிவுபெருத்
துக் காயஞ்சிறுத்ததென்றும் நீ கூறின்,—ஓது உடற் பெரிதானவுஞ் சிறிதா
யிடா சிறிதானவும் நீதியிற் பெரிதாயிடா முனம் உள்ள தன்மையின் நீடுமே-
பூதக்கூட்டத்தாற் றோன்றுமென்று நீ கூறியவுடல் பெரிதானவுடல் சிறி
தாயிடாது, சிறிதானவுடல் பெரிதாயிடாது, முன்னமுள்ள முறைமைப்பா
ட்டினிற்கவேண்டும். அங்ஙனமில்லாது பெரியவுடல் காலஞ்சென்றாற்சிறி
தாயுஞ் சிறியவுடல் காலஞ்சென்றாற் பெரிதாயுமிருத்தலாற் பூதக்கூட்டத்
தில் அறிவு தோன்றுவதன்று கன்மத்துக்கீடாக வடிவெடுத்துக் கோடலா
மென்று கருதுவாயாக என்க.

நீடுதல் - நிலைபெறுதல். (௧௨)

இயல்பு காணிவை யென்னின் வேறிசை பெண்ணொ டாணிரு தன்மை
செயல்கொ ளாவிவர் செய்தி காரண மாக வந்து செனிப்பதெ [யாஞ்
னியல்ப தாமுடல் பூத காரிய மாவ தும்மிலை யாகுமான்
மயல தாம்வினை யாலொ ருத்தன் வகுத்த தன்மையின் வந்ததே.

(இ-ள்.) இயல்புகாண் இவையென்னில் - கன்மம் உடலாகவெடுத்துக்
கோடற்கு அறிவில்லை; இவையெல்லாம் பூதவியல்பென்று நீ கூறின்,—
வேறு இசை பெண்ணொடு ஆண் இருதன்மையாஞ் செயல்கொளா-இயல்பு
ஒருதன்மைப்பட்டிருத்தலன்றி வேற்றுமைப்படப்பொருந்தி இரண்டு தன்
மையாகிய பெண்ணுணென்னு முறைமையைக்கொள்ளாது.—இவர் செய்
திகாரணமாகவந்து செனிப்பதென் - இஃதன்றியும், பூதகாரணமாகில் இர
ண்டுதன்மைப்படப் பெண்ணுணென்னு முறைமை காரணமாகப் பிறப்ப
தென்னை?—இயல்பதாம் உடல் பூதகாரியமாவதும் இல்லையாகுமால் - ஆகை
யால், இயல்பாமென்றவுடல் பூதவியல்புமன்றாய்ப் பூதகாரியமாவது மில்
லையாம். அதனால்,—மயலதாம் - நீ கூறியது மயக்கத்தை யுடைத்தாம்.—
வினையால் ஒருத்தன்வகுத்த தன்மையின் வந்ததே-கன்மத்துக்கீடாக ஒருத்
தனுண்டாக்கப்பட்ட தன்மையிலேவரும் உருக்களென் றறிவாயாக என்க.

காா ணம்மவை யென்ற தென்னை கடாதி போனிகழ் காரிய
நேர ணைந்து சமைந்து நின்றிடு மென்ப தும்மது நேர்கிலோம்
போர ணைந்திடு மொன்றொ டொன்று பொருந்து மாகில் வருந்தியு
நீர ணைந்தொரு தீயி னின்றது கண்ட தாயி னிகழ்த்திடே.

(இ-ள்.) காரணம் அவையென்றது என்னை கடாதிபோல் நிகழ்கா
ரியம் நேர் அணைந்து சமைந்து நின்றிடும் என்பதும் அதுநேர்கிலோம்-உருக்

கட்குப் பெண் ஆண் செய்திகாரணமென்று நீர்கூறியதென்னே? மண்ணின் கட்கடாதிகள் தோன்றுமாறுபோலப் பூதகாரணத்திற் பெண் ஆண் காரியப்பட்டுத் தம்மிற்கூடியகூட்டத்தே உருச்சமைந்திடுமென்று நீ சொல்லுகிறவிதனையாங் கொள்ளேம். அஃதெங்ஙனமெனின்,—போர் அணைந்திடும் ஒன்றொடு ஒன்று - நீகூறிய பூதங்களுள்ருந் தம்மின்மாறுபடும் ஆதலால்,—பொருந்தும் ஆகில் வருந்தியும் நீர் அணைந்து ஒருதீயின் நின்றது கண்டதாயின் நிகழ்த்திடே - அன்றி அவைமறுதலையாகாமற் கூடுமாயின் நீருந்தீயும் ஓரிடத்திற் கூடிநின்றதன்மையை உன்காட்சியளவையிற் கண்டதுண்டாயின் வருந்தியுஞ் சொல்வாயாக என்க. (க௪)

பூத மேவு புணர்ச்சி யேபுரி காய கார ண மாகுமேற்
காத லாணொடு பெண்ணு மேவு புணர்ச்சி கார ண மாவதென்
னாதி யேயுல கத்தி லாணொடு பெண்ணு மாயணை காரிய
நாத னாயகி யோடு கூடி நயந்த கார ண மென்பரே.

(இ-ள்.) பூதம்மேவு புணர்ச்சியே புரிகாயகாரணம் ஆகுமேல்-பூதக்கூட்டமே பொருந்தப்பட்ட காயத்துக்குக் காரணமாயின்,—காதல் ஆணொடு பெண்ணும் மேவுபுணர்ச்சி காரணம் ஆவதென்-பெண்ணாண்கள் காதலோடு புணரும் புணர்ச்சிகாரணமாக உருக்கள் காரியப்படுவானேன்? அங்ஙனமானது,—ஆதியே உலகத்தில் ஆணொடு பெண்ணுமாய் அணைகாரியம் நாதன் நாயகியோடுகூடி நயந்தகாரணம் என்பரே - அநாதியே கர்த்தா நாயகியோடுகூடிப் போகத்தைவிரும்ப அதுகாரணமாக ஆதியே உலகின்கண் ஆண் பெண் காரியப்பட்டு அதுகாரணமாக உருக்கள் காரியப்பட்டு வருதலன்றிப் பூதக்கூட்டங்காரணமெனப்படாது என்க. (க௫)

கந்தம் வெம்மை கலந்திடும்புனல் கன்ம மென்செய்த தென்றனை
சந்த னந்தழல் சார நீரிரு தன்மை யுற்றிடு மாறதோர்
தந்த கன்ம மிரண்ட ணைந்து தருஞ்சு கத்தொடு துக்கமுஞ்
சிந்தி யாவெழு சீவ னுற்றிடும் வேறு டற்கிலை தேறிடே.

(இ-ள்.) கந்தம் வெம்மை கலந்திடும் புனல் கன்மம் என்செய்தது என்றனை - புனலானது சந்தனாதிகளைக்கூடிக்குளிர்ந்தும் நெருப்பைக்கூடி வெப்பங்கலந்துமிருத்தலால் அஃதென்னகன்மஞ்செய்தது; ஆதலாற்கன்மமில்லையென்று கூறினாய்,—சந்தனம் தழல்சார நீர் இருதன்மை உற்றிடும் ஆறது ஓர் - நீ உவமங்கூறிய நீர் சந்தனத்தையுந்தழலையுஞ்சார அவ்வொருபொருட்கு இரண்டுதன்மையுண்டானவாறு விசாரிப்பாயாக,—தந்தகன்மம் இரண்டு அணைந்து தரும் சுகத்தொடு துக்கமும் - கன்மம் இரண்டுவகைப்படப்பொருந்திச் சுகதுக்கங்களைக்கொடுக்கும்,—சிந்தியா எழுசீவன் உற்றிடும் வேறு உடற்கு இலை தேறிடே - அந்தச்சுகதுக்கங்களை உற்றறிந்திடுவது சேதநமான உயிருக்கல்லது அசேதநமான உருக்கட்கில்லையென்றறிவாயாக என்க.

தந்தகன்மமாவது முன்ஜநநத்தில் அறிவுண்டாக்கிக் கொண்டதாய்ப் பின்ஜநநத்தில்வந்து கூடியகன்மம். சிந்தியாவெழுசீவனென்றது சுகதுக்கங்களுக்குப் பிரியாப்பிரியப்படுதலே. (க௬)

இன்ப மெய்தி யிருந்து நீவினை யில்லை யிங்கியல் பென்றிடிற்
றுன்ப மெய்திடு வானென் மற்றிது சொல்லி டாய்சொல வல்லையேன்
முன்பு செய்திடு கன்ம மென்றறி கன்ம மும்முதல் வன்னறிந்
தன்பி னுறு விக்கு மப்பய னுங்க மைப்பொ டநாதியே.

(இ-ள்.) இன்பம் எய்தி இருந்தும் நீவினை இல்லை இங்கு இயல்பு என்றிடில் - நீ ஸ்திரீகளுடன்கூடிப் போகவின்பத்தை அநுபவித்திருந்தும் அது இயல்பொழியக் கன்மமில்லையென்றுகூறில்,—துன்பம் எய்திடுவானென் - அந்த ஸ்திரீகணீங்கினவிடத்துத் துக்கப்படுவானேன்,—மற்று இதுசொல்லிடாய் சொலவல்லையேல் - இஃது எத்தால்வந்ததென்று சொல்லவல்லையாகிற் சொல்லுவாயாக,—முன்பு செய்திடு கன்மம் என்று அறி - ஸ்திரீகளுடன்கூடிப் போகத்தை அநுபவிப்பதும் அவரைநீங்கித் துன்பத்தை அநுபவிப்பதும் நீ முன்செய்த புண்ணியபாவங்களென்று அறிவாயாக,—கன்மமும் முதல்வன் அறிந்து அன்பினுல் உறுவிக்கும்-அந்தப்புண்ணிய பாவங்களுந்தாமாக அணைவதல்ல, கர்த்தாவானவன் அறிவுகள்செய்த கன்மத்துக்கீடாக அறிந்து அநுக்கிரகத்தாலே யூட்டுவன்.—அப்பயன் ஆங்கு அமைப்பொடு அநாதியே - அறிவுங்கன்மமும் அவற்றைக்கூட்டுதலும் அநாதியேயுள்ளன என்க.

மற்று - அசை. அறிவு அதிகாரமுறைமையால் வந்தது. பயன் - கன்மம். (௧எ)

அநாதி யேலமை வின்றெ னின்மல மாயை கன்ம மணுச்சிவ
னநாதி கன்ம மணுக்கள் செய்ய வறிந்து கன்ம முடற்செயா
வநாதி காரிய மாமு டற்க ளசேத னம்மணை யாவறிந்
தநாதி யாதி யமைக்க வேண்டு மமைப்பி னேடு மநாதியே.

(இ-ள்.) அநாதியேல் அமைவு இன்றெனின் - நீர்கூறியவை அநாதியேயாமாகில் ஒருவன் கூட்டுதலில்லையென்று கூறின்,—மலம் மாயை கன்மம் அணு சிவன் அநாதி - மலமும் மாயையுங் கன்மமும் ஆன்மாவுங் கர்த்தாவும் அநாதி,—கன்மம் அணுக்கள்செய்ய அறிந்து கன்மம் உடற்செயா - கன்மத்தை ஆன்மாக்கள்செய்ய அந்தக்கன்மந்தானுமறிந்து ஆன்மாக்களுக்கு உருவையெடுத்துக் கூட்டமாட்டாது,—அநாதிகாரியமாம் உடற்கள் அசேதனம் அணையா அறிந்து-அநாதியேகாரியப்பட்டு வருமுடல்கள் அசேதனமாகையால் ஆன்மாவையறிந்து கூடமாட்டாது,—அநாதி ஆதி அமைக்கவேண்டும் - ஆகையால் அநாதியாகிய கர்த்தா ஆன்மாவையும் கன்மத்தையும் அதற்குப்பொருந்தின வுருவையும் ஆதியாகக்கூட்டல்வேண்டும்,—அமைப்பினேடும் அநாதியே - அப்படி அவன் கூட்டினகூட்டரவும் அநாதியாகையால் இவையும் அநாதி தான் என்க. (௧அ)

காணெ ணுகர ணங்க ளுக்குயிர் கண்டி டாமையி னின்றெனிற்
காணு மோகடங் கண்ட கண்ணினைக் கண்டு நிற்பதுங் கண்ணதே
காணெ ணுதுயிர் தானு மிப்படி கண்டி டுங்கர ணங்களைக்
காணெ ணுகர ணங்க ளுக்குயி ருண்மை யாவதுங் கண்டிடே.

(இ-ள்.) காணெணு கரணங்களுக்கு உயிர் கண்டிடாமையின் இன்றெனின் - புறக்கரணங்களுக்கு உயிர்காணவொண்ணுதாகையாற் காட்சிக்

குப்புலப்படாமையின் ஆன்மாவென்றொன்றில்லை யென்றுகூறின்,—காணு மோ கடம் கண்ட கண்ணினைக்கண்டு நிற்பதும் கண்ணதே - சரீரமானது த ன்னைக்கண்ட கண்ணைத்தான் காணவற்றோ? அச்சரீரத்தைக் கண்டுநிற்ப துங் கண்ணுக்குள்ளதொழிலேயாம்,—காணொணாது உயிர் தானும் இப் படி - காட்சியளவையாகிய கண்ணுக்குக் காணவொண்ணாதென்ற உயிரும் இத்தன்மைத்து,—கண்டிடும் கரணங்களை-உயிர்சேதனமாகையாற் கரண ங்களைக் கண்டுநிற்கும்,—காணொணா கரணங்களுக்கு - கண்களைச்சரீரம் அ றியாதவாறுபோலக் கரணங்களும் அவ்வான்மாவைக்காணவொண்ணா,— உயிர் உண்மையாவதும் கண்டிடே - ஆகையால் ஆன்மாவையுண்மையாக உண்டெனவறிவாயாக என்க. (௧௯)

அங்கி யானது தானு மொன்றை யணைந்து நின்று நிகழ்ந்திடும்
பங்கி யாதுயிர் தானு மிப்படி பற்றி யல்லது நின்றிடா
தெங்கு மார்தயி லத்தை யுண்டெழு தீப மான தெரிந்திடு
மங்க தாமுட னின்று கன்ம மருந்தி யாருயி ராவதே.

(இ-ள்.) அங்கியானது தானும் ஒன்றை அணைந்து நின்று நிகழ்ந்திடும் பங்கியாது உயிர்தானும் இப்படி பற்றியல்லது நின்றிடாது - நெருப்பான து ஓரிந்தனத்தைப்பற்றிநின்று தன்வடிவைக்காட்டுந் தன்மையன்றித் தனித்துநின்று தன்வடிவைக்காட்டுந் தன்மையையுடைத்தன்று; அது போல், ஆன்மாவும் ஒருருவைக்கூடியன்றி நிற்கமாட்டாது,—எங்கும் ஆர் தயிலத்தை உண்டு எழு தீபமானது எரிந்திடும் - தகளியெங்குநிறைந்த எண்ணெயைப்பருகி ஓங்கியதீபமானது எரியாநிற்கும்,—அங்கதாம் உடல் நின்று கன்மம் அருந்தி ஆருயிராவதே - அப்படிக்கன்மத்தால் எடுத்துக் கொண்ட காயத்தினின்றுங் கன்மத்தைப்புசிப்பது ஆன்மாவாம் என்க.

திரி காயத்திற்கும், எண்ணெய் கன்மத்திற்கும், தீபம் ஆன்மாவிற்கும் உவமை. பங்கியாது - அழியாது. (௨0)

அறிவு தானுட லத்தின் வேறது வாயி றந்து பிறந்திடி
னறிவு முன்புள திங்கு வந்து மறிந்தி டாமைய தின்றெனி
னறிவை யோகன வத்து நீனன வத்தை யன்று தரத்திருந்
தறியு மவ்வறி வோம யக்கறி வாத லாலறி யாதுகாண்.

(இ-ள்.) அறிவுதான் உடலத்தின் வேறு அதுவாய் இறந்து பிறந்தி டின் அறிவு முன்பு உளது இங்கு வந்தும் அறிந்திடாமையது இன்றெனின் - அறிவானது இவ்வுடலத்தின் வேறுபட்டு இறந்தும் பிறந்துந் திரியுமாயின் அவ்வறிவு முன்புள்ளதாயின் இப்பிறப்பினும் அறியாமையின்றி அறிவே யாயிருக்கவேண்டும். அஃதில்லையேயென்று நீகூறின்,—அறிவையோ கன வத்து நீ நனவத்தை - நீ கனவுகாணுமிடத்தே அக்கனவை நனவென்பதன் றிக் கனவென்பதறிதியோ? அஃதன்றியும்,—அன்று உதரத்து இருந்து அறியும் அவ்வறிவோ மயக்க அறிவு - நீ மாதாவுதரத்தில் முன்னிருந்தறி ந்தவறிவோ பூததேகமானபின்பு மயங்கினவறிவு,—ஆதலால் அறியாது காண் - ஆகையால் இறந்தும் பிறந்துந்திரிகையால் ஆன்மாவுக் கறியா மையே குணமாம் என்க. (௨௧)

இறந்தி டும்மறி வேபி றந்திடு மென்ப திங்கிசை யாதெனி
னுறங்கி டும்பொழு தின்றி நின்றுணர் விங்கு தித்திடு மாறதோர்
பிறந்த விவ்வுடல் போக வேறுடல் பின்பு வந்தமை பேசிடின்
மறந்தி டுங்கன வத்தின் வேறுடல் வந்த வாறு மதித்திடே.

(இ-ள்.) இறந்திடும் அறிவே பிறந்திடு மென்பது இங்கு இசையாதெனின் - இறந்தவறிவே பிறக்குமென்று இவ்விடத்துக் கூறியது பொருத்தமுடைத்தன்றென்று நீகூறின்,—உறங்கிடும் பொழுது இன்றி நின்று உணர்வு இங்கு உதித்திடுமாறது ஓர் - நீ துயில்செய்யுமிடத்து முகத்திற் பாம்பேறவும் அறிவின்றிக்கிடந்து விழித்தவிடத்து உணர்வினின்று பாம்பைக் காணவும் பயப்படுமாறு விசாரிப்பாயாக,—பிறந்த இவ்வுடல் போக வேறு உடல் பின்பு வந்தமை பேசிடின் - இப்போதெடுத்துக்கொண்ட காயங் கெட்டாற் பின்பு மற்றொருகாயமுண்டாம்படி எப்படியென்று சொல்லின்,—மறந்திடுங் கனவத்தின் வேறு உடல் வந்தவாறு மதித்திடே - நனவை மறந்திடுங் கனவில் உன்னையெடுத்துக்கொண்டு திரியுமுடல் உன்னைக் கூடியவாறு எத்தன்மை அத்தன்மையாகவென்றறிவாயாக என்க. (உஉ)

கரணம் வாயு விடத்த டங்க வடங்கி வந்தெழு காரிய
மரண மான விடத்து மற்றிவை மாய்ந்து பின்பு வருஞ்செயல்
கிரண மார்கலை கெட்டு திப்ப விறப்பி னோடு பிறப்பையுந்
தரணி யோர்கண் மதிக்கு ரைப்ப ருயிர்க்கு மிப்படி சாற்றிடே.

(இ-ள்.) கரணம் வாயுவிடத்து அடங்க அடங்கி வந்தெழு காரியம் மரணமான விடத்து மற்றிவை மாய்ந்து பின்பு வருஞ்செயல் - ஒருவன் மரணமானவிடத்தே இந்திரியங்கள்கெட்டுப் பின்பு அவைவருமுறைமைப்பாடு எத்தன்மைத்தென்னில்? ஒருவன் மூர்ச்சித்தவிடத்துக் கரணங்கள் வாயுவிடத்தொடுங்க அவ்வாயுவுஞ்சேட்டைகெட்டுப் பின்பு அவன் மூர்ச்சை தீர்ந்தவிடத்து அக்கரணங்கள் சேட்டைப்பட்டாற்போலும். இஃதன்றியும்,—கிரணம் ஆர் கலைகெட்டு உதிப்ப இறப்பினோடு பிறப்பையும் தரணியோர்கள் மதிக்கு உரைப்பர் - மதியினது கிரணம்பொருந்தின கலைகள் கெட்டுத்தோன்றியும் வருகலை மதிக்கும் இறப்பும்பிறப்புமாகக் கூறுகிற்பர்கள் உலகத்தார்; அதுபோல,—உயிர்க்கும் இப்படி சாற்றிடே-ஆன்மாவுக்கும் இப்படிக் கூறுவாயாக என்க. (உரு)

பூத மானவை காரி யங்கள் பொலிந்து மன்னி யழிந்திடு
மாத லாலொரு நாத னிங்குள னென்ற றிந்துகொ ளையனே
பேத மான கடாதி மண்ணினில் வந்த வாறு பிடித்திடிற்
கோதி லாத குலால னல்வரு செய்கை யென்று குறிப்பரே.

(இ-ள்.) பூதமானவை காரியங்கள் பொலிந்து மன்னி அழிந்திடும் ஆதலால் ஒருநாதன் இங்கு உளனென்று அறிந்துகொள் ஐயனே - நீ கூறிய பூதங்கள் காரியப்பட்டுப் பொலிவினையுடைத்தாய்ப் புசிப்பளவு நிலைபெற்று மீளவும் அழியாநிற்கும்; ஆதலால், இவற்றை ஆக்கியும் அழித்துஞ் செய்வான் ஒரு கர்த்தாவுண்டென்று அறிவாயாக.—பேதமான கடாதி மண்ணினில் வந்தவாறு பிடித்திடில் - மண்ணினிடத்துக் கடாதிபேதம்

வந்தாற்போலப் பூதகாரியமே காயமென்னில்,—கோதிலாத குலாலனால் வருசெய்கை யென்று குறிப்பரோ - அம்மண்ணுங் குற்றமில்லாத குலாலனது செய்கையாற் காரியப்பட்டாற்போலக் கர்த்தாவினுடைய செய்கையாற் பூதமுங் காரியப்பட்டதென்று அறிவாயாக என்க.

ஐயனே என்றது இகழ்வின்கண்வந்தது. அசேதனமாகிய மண் சேதனனாகிய குலாலனாலே காரியப்படுமாபோலப் பிரபஞ்சம் ஈசுரனாலே காரியப்படுமென்று அறிவாயாக. (உசு)

வேத னாரண னார ணம்மறி யாவிழுப்பொருள் பேதைபாற்
றூத னாயிரு கான டந்திடு தோழன் வன்மைசெய் தொண்டனுக்
காத லாலடி யார்க ளுக்கெளி யான டிக்கம லங்கணீ
காத லாலணை யீண்டன் வேண்டின விம்மை யேதருங் கண்டிடே.

(இ-ள்.) வேதன் நாரணன் ஆரணம் அறியா விழுப்பொருள் - பிரமாவும் விஷ்ணுவும் இருக்கு யசு சாமம் அதர்வணமென்னு நாலுவேதமும் அறிதற்கரிதாகிய விழுமியபொருள்,—பேதைபால் தூதனாய் இருகால் நடந்திடு தோழன் வன்மைசெய் தொண்டனுக்கு - வலிந்தாட்கொண்ட சுந்தரமூர்த்திநாயனார்க்குத் தூதனாய்ப் பரவையாரிடத்தே இரவின்கண் இருகால் நடந்த துணைவன்,—ஆதலால் அடியார்களுக்கு எளியான-அப்படிப் பிரமவிஷ்ணுக்களுக்கு அரியனாயினும் அடியார்களுக்கெளியனாய் எண்ணியவை யிம்மையிலே கொடுக்கத்தக்கவனாகையால்,—அடிக்கமலங்கள் நீ காதலால் அணை - அவனது ஸ்ரீபாதகமலங்களை நீ விருப்பத்தோடும் வழிபடுவாயாக,—ஈண்டன் வேண்டின இம்மையேதரும் கண்டிடே - விரும்பிய போகத்தையும் இம்மையிலே தருவனாதலால் அவனைமெய்யாகக் காண்பாயாக என்க.

வன்மைசெய் தொண்டனென்பதற்கு கர்த்தாவை யேவல்கொள்ளுந் தொண்டனெனினுமமையும். (உஎ)

பொன்கு லாவு மணிக்க லன்கண் மலம்பு கிற்கை பொருந்திடா
மின்கு லாமிடை யார்க டாமுல கத்தின் வேட்கை விடும்பொருள்
புன்பு லான்மல மூத்தி ராதி பொசிந்து நாறு புலைக்கல
மென்கொ லாமிவர் மேல்வி ழுந்த திவற்றி னென்பெற வெண்ணியே.

(இ-ள்.) பொன்குலாவு மணிக்கலன்கள் மலம் புகில் கைபொருந்திடா-பொன்னால் விளங்கப்படாநின்ற மணிகள் அழுத்திய அணிகள் மலத்திடை விழுந்தால் அம்மலத்தின் அசுத்தத்தாற் கையாலெடுத்தல் பொருந்தாது,—மின்குலாம் இடையார்கடாம் உலகத்தின் வேட்கை விடும்பொருள் - அதுபோல,உலகத்து மின்போல நுடங்கின இடையையுடைய மகளிர்பால் மிக்கவிருப்பமும் செயற்கைமண நீங்கினாலுண்டாகிய அசுத்தமிகுதிகண்டு ஆசையை விடத்தக்க பொருளாம். அஃதென்போலவென்னில்,— புன்புலால் மலமூத்திராதி பொசிந்து நாறு புலைக்கலம் - புல்லிதாய இரத்தமலமூத்திராதிகண் முதலானவை கசிந்து மிகவுந் துர்க்கந்தத்தை யுடைத்தாகிய பொல்லாக்காயமாகையால்,—என்கொலாம் இவர்மேல் விழுந்தது இவற்றின் என்பெற எண்ணியே - இம்மலமூத்திராதிகளில் என்னபெறு

தற்கு விசாரித்து இவர்களிடத்து விருப்பமுண்டாயது இதனால் யாதுண்டாம் என்க. (உசு)

தோலி ரத்த மிறைச்சி மேதை யெலும்பு மச்சை சுவேதநீ
ராலெ டுத்த முடைக்கு ரம்பை யழுக்கி னேடு புழுக்குழா
நூலொ ழுக்கிடு கோழை யீர னுளைக்கு மூத்திர பாத்திரஞ்
சேல டர்த்த கண்ணார்க ளென்பது தேர்ம லத்திர டிண்ணமே.

(இ-ள்.) தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேத நீரால் எடுத்த முடைக்குரம்பை - துவக்கு உதிரம் மாம்சம் மேதை அத்தி மச்சை சுக்கிலஜலம் இவையிற்றினாலே எடுத்துக்கொண்ட துர்க்கந்தமாகியகாயம்,—அழுக்கினோடு புழுக்குழாம் நூலொழுக்கிடு கோழை ஈரல் நுளைக்கு மூத்திர பாத்திரம் - அன்றியும் ஊத்தையுடன் கிருமித்திரள் நூலொழுகுங் கோழை ஈரல் இவைகளாற்பொங்கி நுளைக்கு மூத்திரபாண்டமாதலால் அப்படிப்பட்ட காயத்தையுடைய மகளிர்,—சேல் அடர்த்த கண்ணார்களென்பது தேர்மலத்திரள் திண்ணமே - சேலிரண்டு அடுத்தாற்போலுங் கண்ணையுடையாரொன்று சொல்லுவது எதனாலென்று விசாரிப்பாயாக; விசாரிக்குமிடத்துச் சர்வமுநிச்சயமாக மலத்தொகுதியாம் என்க.

ஆசை யுற்றுழல் சூக ரங்க ளசுத்த மேவி யளைந்துதின்
றேசு கித்தன வாயி டுஞ்சுக மேழை யோடுறு மின்பநீ
மாச தற்றொளிர் நித்த சுத்த வளந்த ருஞ்சுக வாரிகா
ணீச னுக்கடி மைத்தி றத்தி னிசைந்து நாம்பெறு மின்பமே.

(இ-ள்.) ஆசை உற்று உழல் சூகரங்கள் அசுத்தம் மேவி அளைந்து தின்றே சுகித்தனவாயிடும் சுகம் ஏழையோடு உறும் இன்பம்நீ - அறிவின் மகளிரோடு நீ சுகமுறுவது ஆசைமிகுத்துத் தடுமாறும் பன்றிகள் மலத்திற்புக்கு அதனைப்புசித்து அதனிற்புரண்டு மிகவுஞ் சுகத்தையடைந்தனவாய் நிற்பனபோலும். அங்ஙனமன்றியும்,—மாசது அற்று ஒளிர் நித்த சுத்த வளம் தருஞ் சுகவாரிகாண் ஈசனுக்கு அடிமைத்திறத்தின் இசைந்து நாம் பெறும் இன்பமே - கர்த்தாவுக்கு அடிமைத்திறஞ்செய்து யாங்கள் பெறும் இன்பமாவது குற்றமற்று விளங்கும்படியாய் அழியாததாய் நின்மலமாயிருக்குஞ் சிறப்பினையுடைத்தாகிய இன்பசமுத்திரமாம் என்க.

குரோத மேகுண மாயி ருந்தவர் சாந்தி நன்மை குறிக்கொளார்
ராக மேயணை வார்க ளாசை யறுத்த வின்ப மறிந்திடார்
பராவு தேவர் பராவு தூய பராப ரன்னடி பற்றிநீ
விராவு மெய்யில் விடாத வின்பம் விளைந்தி டும்மிது மெய்ம்மையே.

(இ-ள்.) குரோதமே குணமாயிருந்தவர் சாந்தி நன்மை குறிக்கொளார் - கோபமிகுதியை இயல்பாகவுடையார் பொறையினாலுண்டாகிய நன்மையையறியமாட்டார்,—அராகமே அணைவார்கள் ஆசை அறுத்த இன்பம் அறிந்திடார் - ஆசையேதமக்குக் குணமாகவுடையவர்கள் அவ்வாசையை அறுத்தவர்களுக்குண்டாகிய சுகத்தை அறியமாட்டார்கள்; அவர்களைப்போல நீயுஞ்சிற்றின்பமாகிய ஸ்திரீபோகத்தைக் கைக்கொண்டு பேரின்பமாகிய பிரமாநந்தத்தை அறியாய் அஃதறியவிரும்பின்,—பராவு

தேவர் பராவு தூய பராபரன் அடிபற்றி நீ விராவு மெய்யில் விடாத இன்பம் விளைந்திடும் இது மெய்ம்மையே - இந்திராதிதேவர்களாற் பரவப்பட்ட பிரம விஷ்ணுக்களாற் போற்றிசெய்யப்படுஞ்சுத்தமான பரைக்கு மேலானவனது ஸ்ரீபாதங்களை நீ பற்றுக்கோடாகக்கொள்வாயாக; அதனால் அப்பொழுதே உன்னுடைய சரீரந்தன்னிலே ஒருக்காலுநீங்காத சுகம்பிரகாசிக்கும். இது சத்தியம் என்க.

பராவு விராவு என்றசொல் நீட்டும் வழி நீட்டலென்க. (உ௯)

காம மாதி குணங்க ளைச்சுக மென்று கொண்டனை காதலாற்
றூம மாரழ லங்கி சீத மலிந்த போது சுகந்தரு
நாம மார்தரு சீதம் வெம்மை நலிந்த போது தருஞ்சுகஞ்
சேம மாகிய வின்ப மாமிகு தெய்வ நன்னெறி சேரவே.

(இ-ள்.) காமமாதி குணங்களைச் சுகமென்று கொண்டனை - காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் இடும்பை அகங்காரம் என்கின்ற இவையிற்றைச் சுகமென்றுகொண்டாய் அஃதெதத்தன்மையென்னில்,—காதலால் தூமம் ஆர் அழல் அங்கி சீதம் மலிந்தபோது சுகம் தரும்- குளிர்மிக்ககாலத்து வெப்பவிருப்பத்தால் புகைபொருந்தின அழல்கின்ற அக்கினி சுகத்தைத்தருவதுபோலவும்,—நாமம் ஆர்தரு சீதம் வெம்மைநலிந்தபோது தரும் சுகம் - வெப்பமிகுத்தவிடத்துப் புனலென்று பெயரையுடைய நீரின்குளிர்ச்சியையடைந்தபோது சுகத்தைத்தருவதுபோலவுமாம்,—சேமமாகிய இன்பமாம் மிகுதெய்வ நல்நெறி சேரவே - கர்த்தாவினுடைய ஞானமார்க்கத்திலே கூடினால் ஒருக்காலும் விடாத இன்பமுண்டாம்; ஆதலால், அதனோடு கூடுவாயாக என்க.

காமமாதியென்றதனால், காமச்சுகம் சாங்கம் உபாங்கமென இருவகைத்து. சாங்கமாவது—ஆலிங்கனம்,முத்தம், மிடற்றிறுலுண்டாமொலிபேதம், நகக்குறி,பல்லிகுறி, அங்கதாடனம், அங்குலிமர்த்தநம், சும்பநமுதலியவுமாம். உபாங்கமாவது—அன்னம், வஸ்திரம், பூஷணம், சந்தனம், தாம்பூல முதலியவுமாம். (௩௦)

படிக்கு நூல்கள் சிவாக மம்பசு பாசமோடு பதித்திற
மெடுத்தி யம்புவ தீசன் வார்கழ லேத்தி டுந்தொழி லென்றுமே
விடுத்தி டும்பொருள் காம மாதிகள் வேண்டி டும்பொரு ளீண்டருண்
முடித்து மும்மலம் விட்டு நின்மல னோடு நின்றிடன் முத்தியே.

(இ-ள்.) படிக்கும் நூல்கள் சிவாகமம் - சிவநெறியாற் பேரின்பமெய்துவோர் படிக்கு நூல்களாவன வேதாகமங்கள்,—பசு பாசமோடு பதித்திறம் எடுத்தியம்புவது - அவைகளெடுத்துச் சொல்லுஞ் சொல்லாவன பதி பசு பாசத் திறங்கள்,—ஈசன் வார்கழல் ஏத்திடுந்தொழில் - அவர்கள் கிரியையாவன பரமேசுவரனுடைய ஸ்ரீபாதங்களைவணங்குகை,—என்றுமே விடுத்திடும் பொருள் காமமாதிகள்-எப்போதும் அவர்கள் கைவிடும்பொருளாவன காமக்குரோத முதலானவை,—வேண்டிடும் பொருள் ஈண்டு அருள்-அவர்கள் வேண்டும்பொருளாவது மிக்கவருள்,—முடித்து-ஆகையால் இப்படி மூன்றுபதார்த்தத்தையு முற்றுப்பெறநிறுத்தி,—மும்மலம் விட்டு நின்மலனோடு நின்றிடல்முத்தியே - மலத்திரயங்களையும்விட்டுக்

கர்த்தாவோடு கூடுதல் முத்தியின்பம்; ஆதலால், நீயும் இச்செயலிலே நிற்பாயாக என்க.

இதனுள் நாலுபாதமுமடங்கியவாறு கண்டுகொள்க. உலகாயதர்-மிச்சிரசார்வாகர், இரணியகர்ப்பசார்வாகர் என்றிருதிறத்தர். (ருக)

உலகாயதன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - சுரு.

---

# சௌத்திராந்திகன்மதம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நீதியார் வேத நூலி னெறியலா வறங்க ணாளு
மோதியோ ரைந்து சீல முடையரா யுடல மூடிப்
போதிநீண் மரத்தின் மேவும் புத்தர்நால் வரினும் வைத்துச்
சாதிதா னிலாத கொள்கைச் சௌத்திராந் திகன்முன் சாற்றும்.

(இ-ள்.) நீதிஆர் வேதநூலின் நெறியலா அறங்கள் நாளும் ஓதி-நீதிசாத்திரத்தைத் தனக்கங்கமாகப்பொருந்திய வேதநூனெறியல்லாத அறநெறியாகிய பிடகநூலை நாடோறுமோதி,—ஓர் ஐந்து சீலம் உடையராய் - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னும் ஐந்து கந்தங்களின் குணங்களை யுடையராய்,—உடலம் மூடி-உடலைத்துவராடையாற் போர்த்து,—போதிநீள் மரத்தின் மேவும் புத்தர் நால்வரினும் வைத்து - அரசினைத்தெய்வம்போலப்பேணி அதன்கீழ்ப் பொருந்தியிருக்கும் பௌத்தர் நால்வகையார்களையும் வைத்து அவர்களில்,—சாதிதான் இலாதகொள்கைச் சௌத்திராந்திகன்முன் சாற்றும் - வருணபேதமறக்காணுஞ் சௌத்திராந்திகன்முன்னே சொல்லாநின்றான் என்க.

புத்தர்நால்வரினும் வைத்தென்பது - பௌத்தர்நால்வரினு முட்கோளாகக் கொண்டென்க. நால்வராவார்—சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்திமிகன், வைபாடிகனென்போர். நீதியார் வேதமாவது—லௌகீகதன்மமாகிய சோதிடம், வியாகரணம், சிற்பம், பரதம், சிக்ஷை, சந்தசு என்க. நெறியலாவறங்களாவன—நிராத்மவாதமும், அகத்திருவாதமும், ஆகாசம் காலம் திக்கு காரணத்பாவமுமில்லையென்றும், குணியும் அவயவியுமில்லையென்றும் கொள்ளுங் கொள்கை. ஐந்துசீலமாவன—அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரமசரியம், சங்கிரகம் என்க. இவ்வைந்து சீலமும் சாரதற்கும், சாரணற்கும் தேசசீலம், உபசம்பன்னற்கு நூறுசீலம், சுவவீரருக்குக் கோடிசீலம், இப்படிநிலைதோறுஞ் சீலம்பலவாம். (க)

முழுதுணர்ந் துலகிற் கோறன் முதற்செயன் முனிந்து மற்றும்
பழுதிலா வருளி னாலே பரனுக்க நுங்க னாகித்
தொழுதுவா னவரும் போற்றத் தொல்பிட கங்க ளான
வழுவிலா கமங்கள் சொன்ன மாதவ னாத னவ்வான்.

(இ-ள்.) முழுது உணர்ந்து உலகில் கோறல் முதற்செயல் முனிந்து-சர்வத்தையுமறிந்து பிரபஞ்சத்திற் பொய் கொலை களவு கள் காமங்களை

வெறுத்து,—மற்றும் பழுதிலா அருளினாலே பரதுக்க துக்கனாகி - குற்ற மில்லாத கிருபையாலே எவ்வுயிர்த்துன்பமும் தன்னுயிர்த்துன்பம்போற் கொண்டு,—தொழுது வானவரும் போற்றத் தொல் பிடகங்களான வழு வில்ஆகமங்கள் சொன்ன மாதவன் நாதனாவான் - தேவர்களுந்தொழுது துதிக்கப்பட்டுவரும் பழையபிடகநூலாகிய இகழ்ச்சியில்லாத ஆகமங்களை யருளிய புத்தமுனியே கர்த்தாவாவான் என்க.

பழுதிலாவருளென்பது - இராச்சியத்தைக்கொடுத்தும், பிள்ளைகளைக்கொடுத்தும், தன் கண்ணைக்கொடுத்தும், உதிரமாம்சமுதலாயின புறவுக்கரிந்து கொடுத்தும், வைய்ங்காத்து வந்தவைமுதலியன. (உ)

மருவிய வளவை காட்சி மானமென் றிரண்டி வற்றாற்
கருதிய பொருள்கண் ஞான ஞேயமாய்க் கணத்திற் பங்கம்
வருமுரு வருவம் வீடு வழக்கென நான்க தாகித்
தருமவை யொன்றி ரண்டாய்த் தான்விரிந் தெட்டி னாமே.

(இ-ள்.) மருவிய அளவை காட்சி மானம் என்று இரண்டு - பிடக நூலிற் பொருந்திக்கொள்ளப்படும் அளவையாவன, காட்சியும் அநுமானமும் எனவிரண்டாம்,—இவற்றால் கருதிய பொருள்கள் ஞானம் ஞேயமாய்க்கணத்தில் பங்கம் வரும் - இக்காட்சியாலும் அநுமானத்தாலும் அறியப்படும் பொருள்கள் அறிவும் அறியப்படும் பொருளுமாய் ஒருமாத்திரையிற் கெட்டுவரும்,—உரு அருவம் வீடு வழக்கென நான்கதாகித் தருமவை ஒன்று இரண்டாய்த் தான்விரிந்து எட்டினாமே-ஞானஞேயங்களினால் உருவும் அருவும் வீடும் வழக்குமென நான்காகி அந்நான்கும் ஒன்றிரண்டாக விரிந்து எட்டாகத்தரும் என்க.

கணத்திற்கெடுகை நால்வகை, அவையாவன - கெட்டுவேர்த்தித்தலும், கெட்டு க்ஷயித்தலும், கெட்டொத்துநிற்றலும், கெட்டுக்கெட்டேபோதலுமாம். கணம் - தாமரையிதழைஅடுக்கி ஊசியிட்டடித்தால் எட்டிதழறுமெல்லை. (ஙு)

உருவியல் பூத மோடங் குபாதாய ரூப மாகு
மருவியல் சித்தங் கன்ம மென்றிரண் டாகும் வீட்டின்
மருவியல் குற்றங் கந்த மெனவழங் கிடும்வ ழக்கி
னிருவிய துள்ள தோடங் கில்லதா மியம்புங் காலே.

(இ-ள்.) உரு இயல் பூத மோடு அங்கு உபாதாய ரூபமாகும் - உருவினதியல்பு பூதவுருவத்துடனே உபாதாயரூபமென இரண்டாம்,—அரு இயல் சித்தம் கன்மம் என்று இரண்டாகும் - அருவியல்பு சித்தவருவென்றுங் கன்மவருவென்றும் இரண்டாகும்,—வீட்டின் மருவு இயல் குற்றம் கந்தம் எனவழங்கிடும்-வீட்டினது பொருந்தினவியல்பு குற்றவீடென்றும் கந்தவீடென்றும் இரண்டெனப்படும்,—வழக்கின் இரு இயல் உள்ளதோடு அங்கு இல்லதாம் இயம்பும் காலே-வழக்கு இரண்டியல்புள்ளது;அவை உள்வழக்கென்றும் இல்வழக்கென்றும் வழங்கப்படும் சொல்லுமிடத்து என்க.

இயல் - இயல்பு. உபாதாநம்-உபாதாயமென்றும்பேராம். உபாதாயம் - பற்றப்படுவது. உருவியல்பாவது-சைதன்னியரூபமென்றும் அசைதன்னியரூபமென்றும் இரண்டுவகைப்படும். சைதன்னியரூபம் பதினெட்டுக்கூடியது. அவை, பஞ்சேந்திரியங்களும் அவற்றின் விஷயங்களும் ஸ்திரீபும்ஸகமான பாவரூபமிரண்டும்

இருதயமொன்றும் ஆகாரரூபமும் பூதநாலுமாம். அசைதன்னியரூபம் முன்சொன்ன எட்டாம். (௪)

மண்புன லனல்கால் பூதம் வலிகந்த மிரதம் வன்ன
மெண்டரு முபாதா யந்தா னிவையிரு நான்குங் கூடி
யுண்டொரு பொருளு ரூப முறுபுல னுபாங்க மோடக்
கண்டது சித்தங் கன்ம நன்றுதீ தென்றல் காணே.

(இ-ள்.) மண் புனல் அனல் கால் பூதம்-பூதவுருவாவது பிருதிவி அப்பு தேயு வாயு எனநான்காம்,—வலி கந்தம் இரதம் வன்னம் எண்தரும் உபாதாயந்தான்-உபாதாயரூபமாவது கடினம் கந்தம் இரதம் வன்னம் என நான்காக வெண்ணத்தகும்,—இவை இருநான்கும் கூடி உண்டு ஒருபொருள் உரூபம்-இவை எட்டுங்கூடியவிடத்தில் யாதொருபொருளுண்டாயது அஃதுருவாம்,—உறுபுலன் உபாங்கம் ஓடக்கண்டது சித்தம் - புலன்கள் பொறிவழியோடியறிய அதனைக்கண்டது சித்தவருவாம்,—கன்மம் நன்று தீது என்றல் காணே-அப்படிக்கண்ட பொருளை நன்றென்றுந் தீதென்றுங் காண்டல் கன்மவருவாம் என்க.

கன்மம் - கன்மபலம். (௫)

குற்றவீ டராக மாதி குணங்களைக் குறைத்த லாகு
மற்றவீ டுருவ மாதி யைந்தையு மாய்த்த லாகுஞ்
சொற்றருந் தொகைதொ டர்ச்சி மிகுத்துரை யென்று மூன்று
யுற்றிடும் வழக்கி ரண்டு மொன்றுமூன் றாகி யாறும்.

(இ-ள்.) குற்றவீடு அராகமாதி குணங்களைக் குறைத்தல் ஆகும் - இராகாதிகுணங்கள் பொன்றக்கெட்டு முத்தியின்பமடையாது சேட்டை கெட முத்தியின்பமடைவது குற்றவீடாம்,—மற்றவீடு உருவமாதி ஐந்தையும் மாய்த்தல் ஆகும் - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞான மென்னும் ஐந்துகந்தங்களுஞ் சந்தானத்துப் பொன்றக்கெட்டடைவது கந்தவீடாம்,—சொல்தரும் தொகை தொடர்ச்சி மிகுத்துரை யென்று மூன்றாய் உற்றிடும் வழக்கு இரண்டும் ஒன்று மூன்றாகி ஆறும் - உள்வழக்கு இல்வழக்கென்று கூறப்பட்ட வழக்கிரண்டும், தொகையுண்மைவழக்கும் தொகையின்மைவழக்கும், தொடர்ச்சியுண்மைவழக்கும் தொடர்ச்சியின்மை வழக்கும், மிகுத்துரையுண்மைவழக்கும் மிகுத்துரையின்மைவழக்கு மென ஆறாகிவிரியும் என்க.

அராகாதி குணங்களைக்குறைத்தல் குற்றவீடெனமாறுக. உருவமாதியைந்தையு மாய்த்தல் மற்றவீடெனமாறுக. உருவமாதியைந்தாவது—உருவக்கந்தம், வேதனைக் கந்தம், சஞ்ஞானக்கந்தம், விஞ்ஞானக்கந்தம், வாசனைக்கந்தம் எனப்படும். தொகை-கூட்டம். தொடர்ச்சி-சந்தானத்தொடர்ச்சி. மிகுத்துரை - தோற்றநாசம். (௬)

ஒருவனென் றோதப் பட்டா னுருவாதி யைந்துங் கூடி
வருபவ னென்று ரைத்த றொகையுண்மை வழக்க தாகு
மொருவமங் காதி யாய வைந்தையு மொருவ னின்று
தருவது தொகையி னின்மை வழக்கதாஞ் சாற்றுங் காலே.

(இ-ள்.) ஒருவனென்று ஓதப்பட்டான் உருவாதி ஐந்துங்கூடி வருபவனென்று உரைத்தல் தொகையுண்மை வழக்கதாகும் - ஒரு கர்த்தா

வென்றுரைக்கப்பட்டவன் உருவமுதலிய வைந்தோடுங்கூடி வருபவனென்று கூறுதல் தொகையுண்மைவழக்காம்,—உருவம் அங்கு ஆதியாய ஐந்தையும் ஒருவன் இன்று தருவது தொகையினின்மை வழக்கதாஞ் சாற்றுங்காலே - உருவமுதலியவைந்தையும் ஒருகர்த்தா அவற்றோடுங்கூடாமனீங்கி நின்று உண்டாக்குவனென்பது தொகையின்மைவழக்காம்; சொல்லுங்காலத்து என்க. (எ)

காரண காரி யத்தின் றொடர்ச்சியாய்க் கால மூன்றின்
சோர்வறத் தோன்றுங் கெட்டு வழியென்கை தொடர்ச்சி யுண்மை
யோர்தரி னொருவ னேயெக் காலத்து முள்ளா னென்று
தேர்வது தொடர்ச்சி யின்மை வழக்கதாஞ் செப்புங் காலே.

(இ-ள்.) காரண காரியத்தின் தொடர்ச்சியாய்க் காலம் மூன்றின் சோர்வு அறத் தோன்றும் கெட்டு வழி என்கை தொடர்ச்சியுண்மை - காரணகாரிய மென்னுந் தொடர்ச்சியுடையவாய்க் காலமூன்றென்னும் மயக்கமறக் கெட்டுத்தோன்றும் என்னும்வழித் தொடர்ச்சியுண்மைவழக்காம்,—ஓர்தரின் ஒருவனே எக்காலத்தும் உள்ளானென்று தேர்வது தொடர்ச்சியின்மை வழக்கதாஞ் செப்புங்காலே - ஒரு கர்த்தாவே காரணகாரியத்தின் றொடர்ச்சியாய் எக்காலத்து முள்ளானென்று சொல்லுவது தொடர்ச்சியின்மை வழக்காம்; உணர்வினுற்சொல்லுமிடத்து என்க.

ஓர்தரிற் செப்புங்காலென்று கூட்டுக. (அ)

தோற்றிய பொருள்க ளெல்லா நாசமா மென்று சொல்லு
மாற்றமுன் னுரைத்தன் மற்றை மிகுத்துரை வழக்கி னுண்மை
போற்றிய பொருள்கண் கட்குப் போனது போன்மு திர்ந்து
வேற்றுமைப் பட்ட தென்கை மிகுத்துரை யில்வ ழக்கே.

(இ-ள்.) தோற்றிய பொருள்கள் எல்லாம் நாசமாம் என்று சொல்லும் மாற்றம் முன் உரைத்தல் மற்றை மிகுத்துரை வழக்கின் உண்மை-தோன்றப்பட்ட பொருள்களெல்லாங் கெடுமென்னுமுத்தரத்தை முன்னர்ச் சொல்லுமது மிகுத்துரையுண்மைவழக்காகும்,—போற்றிய பொருள் கண் கட்குப் போனது போல் முதிர்ந்து வேற்றுமைப் பட்டது என்கை மிகுத்துரையில்வழக்கே - தோற்றியிரக்ஷைப்பட்டபொருள்கள் காரியங்கெட்டுக் காரணமாய் நின்றதென்று கூறல் மிகுத்துரையின்மைவழக்காம் என்க.

கண்கட்குப் போனது போன்முதிர்ந்து வேற்றுமைப்படுகை - காரியமழிந்து காரணங்கிடக்கை. மிகுத்துரைமூன்றும் உள்வழக்கு இல்வழக்கு இரண்டினும் வழங்கும்வழியெனக்கொள்க. (கூ)

உள்வழக் கில்வ ழக்குள் ளதுசார்ந்த வுள்வ ழக்கோ
டுள்ளது சார்ந்த வின்மை வழக்குட னின்மை சார்ந்த
வுள்வழக் கின்மை சார்ந்த வில்வழக் கென்றோ ராறு
முள்வழக் குளதுண் டென்கை முயற்கோ டின் றில்வழக்கே.

(இ-ள்.) உள்வழக்கு இல்வழக்கு உள்ளது சார்ந்த வுள்வழக்கோடு உள்ளதுசார்ந்த வின்மை வழக்குடன் இன்மைசார்ந்த வுள்வழக்கு இன்

மைசார்ந்த வில்வழக்கென்று ஒராறும் - முற்கூறிய உள்வழக்கும் இல்வழக்கும் உள்ளதுசார்ந்த வுள்வழக்கும் உள்ளதுசார்ந்த வில்வழக்கும் இல்லதுசார்ந்த வுள்வழக்கும் இல்லது சார்ந்த வில்வழக்குமென்னு நான்கோடுங்கூடி ஆறுவகையாம்,—உள்வழக்கு உளது உண்டென்கை - அவற்றுள் உள்ளதையுண்டென்பது உள்வழக்காம்; அது யானைக்கோடுண்டென்கை.—முயற்கோடு இன்று இல்வழக்கே - இல்லதனையில்லையென்கை இல்வழக்காம்; அது முயற்குக்கொம்பில்லையென்கை என்க. (௧௦)

உணர்வுசார்ந் துணர்வு திக்கை யுள்ளது சார்ந்த வுண்மை
யுணர்வுபி னின்று மென்கை யுள்ளது சார்ந்த வின்மை
யுணர்வுமுன் பின்றித் தோன்ற வில்லது சார்ந்த வுண்மை
யுணரினில் லதுசா ரின்மை யுள்ளங்கை யுரோம நாணே.

(இ-ள்.) உணர்வு சார்ந்து உணர்வு உதிக்கை உள்ளது சார்ந்த வுண்மை - அறிவைச்சார்ந் தறிவுண்டாமென்கை உள்ளதுசார்ந்த வுள்வழக்கு,—உணர்வுபின் இன்றுமென்கை உள்ளது சார்ந்த வின்மை - அறிவு கெட்டாற் பின்பறிவுண்டாகாதென்பது உள்ளதுசார்ந்த வின்மைவழக்கு,—உணர்வு முன்பு இன்றித் தோன்றல் இல்லது சார்ந்தவுண்மை-அறிவு முன்புள்ளதன்றாய்ப் பின்புண்டாமென்பது இல்லதுசார்ந்தவுள்வழக்கு,—உணரின் இல்லது சார் இன்மை உள்ளங்கை உரோமம் நாணே - உள்ளங்கையின் மயிருண்டென்பதும் அம்மயிராற்செய்த கயிறுண்டென்பதும் இல்லதுசார்ந்த வில்வழக்கு ஆராயின் என்க.

இவையன்றிச் சார்புபன்னிரண்டுள. அவையாவன—பேதைமை, செய்கை, உணர்ச்சி, உருவருவவாயில், நுகர்ச்சி, வேட்கை, பற்று, கருமத்தொகுதி, முற்றோற்றம், பிணி, மூப்பு, சாக்காடு எனவிவை. (௧௧)

சொன்னநால் வகையு மின்றிச் சொல்லிடும் பொருள்க ளெல்லா
மென்னையோ வறிகி லோம்பித் தேறியோ வான மான்மா
மன்னுகா லங்கடிக்கு மனமுடன் வாக்கி றந்திட்
டுன்னுமோ ரிறையு முண்டென் றுரைப்பது நித்த மன்றே.

(இ-ள்.) முற்சொன்ன உரு அரு வீடு வழக்கு என்னுநான்கும் அவற்றின்விரிவுமன்றி வானமென்றும் ஆன்மாவென்றும் நிலைபெற்றகாலங்களென்றும் திக்குகளென்றும் மனவாக்கிறந்தறியும் ஒருகர்த்தா வுண்டென்றுஞ்சொல்லுவது நிலையுடைத்தன்றாகையால் இப்படிச்சொல்லும் பொருள்கள் பித்தேறியோ சொல்லாநின்றார்கள்,எப்படிச்சொல்லுகின்றார்களென்றறிகிலேம். அவைநிலைப்பட்டனவல்ல என்க.

பஞ்சகந்தங்களும் மற்றுள்ள விவகாரங்களும் இந்நால்வகையிலடங்கும். (௧௨)

ஈங்குவான் செயற்கு வாரா வியம்பிய பொருள்க ளெல்லாந்
தாங்குவா னுளதே யென்னிற் றரித்திடா தருவ மாத
லோங்குவா னேசைக் காதி யெனிலதங் குருவின் கூட்ட
நீங்குவா னின்றி யெங்கு நின்றதே லெங்கு மின்றே.

(இ-ள்.) ஈங்கு வான் செயற்குவாரா - இவ்விடத்துக் கூறப்பட்ட வானென்னும்பொருள் தொழிற்குவாராது,—இயம்பிய பொருள்களெல்லாம்

தாங்கு வான் உளதேயென்னில் தரித்திடாது அருவமாதல் - பூதநான்கு முதலாகச்சொல்லப்பட்ட பொருள்களெல்லாவற்றையும் தாங்குதற்பொருட்டு ஆகாசமுளதென்று கூறின் அஃதருவமாதலால் பொருள்களைத்தரிக்கற்பாற்றன்று,—ஓங்கு வான் ஓசைக்கு ஆதியெனில் அது அங்கு உருவின் கூட்டம் - பெரியவானனது சத்தத்துக்குமுதலென்றுகூறின் அவ்வோசையும் உருக்கூட்டத்தன்றித் தோன்றாது,—நீங்கு வான் இன்றி எங்கும் நின்றதேல் எங்கும் இன்றே - அந்த ஆகாயம் நீங்குதலின்றி எங்குநின்றதென்று கூறின் அஃதெங்குமில்லையாம்; ஆகையால், ஆகாயமென்றொரு பொருளில்லை என்க. (கரு)

போதமுண் டுயிர்கட் கென்னில் வாயிலைம் புலனு நூலு
மாய்தலின் றொட்டுத் தீட்டுக் கலப்பினி லறியு மென்னி
லேதமுண் டிரவிற் பச்சை சிவப்புட னேய்ந்த போது
கேதநின் றென்னோ வென்னு மையமுன் கிடத்த லாலே.

(இ-ள்.) போதம் உண்டு உயிர்கட்கென்னில் - உயிர்கட்கு அறிவுண்டென்று சொல்லின்,—வாயில் ஐம்புலனும் நூலும் ஆய்தல் இன்று - இந்திரியங்களும் விடயங்களுஞ் சாத்திரங்களுங் கொண்டு அறிவானேன்,—ஒட்டுத் தீட்டுக் கலப்பினில் அறியுமென்னில் - அப்படியன்று இந்திரியங்களைக்கலந்தும் புலன்களைப்பரிசித்துஞ் சாத்திரங்களைப்பொருந்திநின்றும் அறிவனென்பையாகில்,—ஏதம் உண்டு இரவில் பச்சை சிவப்புடன் ஏய்ந்த போது கேதம் நின்று என்னோ வென்னும் ஐயம் முன்கிடத்தலாலே-இருளினிடத்துப் பச்சைசிவப்பென்னும் வன்னங்கிடக்க அவற்றைத்தொட்டுந் தீண்டியுங் கலந்தும் அறியாமற் கிலேசமுற்று என்னோவென்னும் ஐயங்கிடத்தலாற் கூறியது குற்றமுண்டு என்க. (கச)

அறிந்திடா வாயி லின்றே லறிவின்று மைந்தும் பற்றி
யறிந்திடு மறிவுண் டென்னி லைந்தினு மறிவொன் றாக
வறிந்திட வேண்டுஞ் சார்பி னறிந்திடு மென்னி லுன்னை
யறிந்திலோம் புத்த னென்றிங் கழகிது சொன்ன வாறே.

(இ-ள்.) அறிந்திடா வாயில் இன்றேல் - இந்திரியங்களில்லையாயின் உயிர் ஒன்றையும் அறியமாட்டாது,—அறிவு இன்றாம் ஐந்தும் பற்றி அறிந்திடும் அறிவு உண்டென்னில் - இந்திரியங்கட்கறிவில்லையாதலால் அவ்விந்திரியங்களைந்தையும் பற்றிநின்று அறிந்திடுமறிவு உயிர்க்குண்டென்று கூறில்,—ஐந்தினும் அறிவு ஒன்றாக அறிந்திட வேண்டும்-உயிரறியுமாயிற் புலன்களைந்தாலும் அறியு மறிவை ஒருபுலனாலறியவேண்டும்,—சார்பின் அறிந்திடுமென்னில் - அற்றன்று, உயிரறியுமிடத்துப் பொறிகளின் வழிகளிலே நின்றும் அவ்வவற்றின் புலன்களாகிய குணங்களை அறியுமெனக் கூறின்,—உன்னை அறிந்திலோம் புத்தனென்று இங்கு அழகிது சொன்ன வாறே - உன்னை ஆன்மவாதியென்றறிந்தோம்; நீ சார்பிற்றோன்று மென்கையாற் புத்தனாய்; இஃதறிந்திலோம்? நீ உயிரறியுமென்று சொன்ன தழகிது என்க.

அழகிதென்றது - இகழ்ச்சிக்குறிப்பு. (கரு)

ஞானஞே யங்க ளன்றி ஞாதிரு வென்று சொல்ல
வானதிங் கறிவோ வன்றே வன்றெனி லவனி போலுந்
தானதிங் கறிவே யென்னிற் சமைந்திடு நன்ப ருப்புப்
போனக மதற்குத் தானே கறியெனப் புகன்ற தாமே.

(இ-ள்.) ஞான ஞேயங்கள் அன்றி ஞாதிரு வென்று சொல்ல ஆனது இங்கு அறிவோ அன்றே-அறிவும் அறியப்படும்பொருளும் அன்றி அறியும் பொருளுண்டென்று இவ்விடத்திற்கூறில் அதற்குண்டாயதறிவோ வறியாததோ,—அன்றெனில் அவனிபோலும் - அறிவில்லாததென்று சொல்லின் மண்போலும் அசேதநமாம்,—தான் அது இங்கு அறிவே யென்னில்-அறியும்பொருடான் அறிவென்றுகூறின்,—சமைந்திடு நன்பருப்புப் போனக மதற்குத் தானே கறியெனப் புகன்றதாமே - பருப்பாற் கூட்டிச்சமைத்த சோற்றுக்கு அப்பருப்புச் சோறுதானே கறியென்று கூறிய தன்மைத்தாகும் என்க.

இதனுட் பருப்புச்சோறென்று அதற்குப்பெயராயிருக்கக் கறியும் பருப்புச்சோறென்பது புனருத்தியாய தோடமாம். அதுபோல,ஞானமறிவாயிருக்க ஞாதிருவுமறிவாகலிற் றனித்துவேண்டா வென்பது கருத்து. (கசு)

உயிரினை யருவ தென்னி லுருவுட னுற்று நில்லா
துயிரினை யுருவ தென்னி லுடலினி லுடல டங்கா
துயிரினை யணுவ தென்னி லுடல்பல துவார மோடு
முயிரினை நித்த மென்னி லுணர்வுத யாந்த மின்றே.

(இ-ள்.) உயிரினை அருவதென்னில் உருவுடன் உற்றுநில்லாது - நீயுண்டென்று கூறியவான்மாவை அருவமென்றுசொல்லின் உருவமாகியவுடலோடு அருவமாகியவான்மாப் பொருந்திநில்லாது; ஆதலால், அருவமன்று,—உயிரினை உருவதென்னில் உடலினில் உடல் அடங்காது - அந்தவான்மாவுருவமென்று கூறின் ஓருருவினுேருருவடங்காது;ஆதலால், ஆன்மா உருவமன்று,—உயிரினை அணுவதென்னில் உடல்பல துவாரம் ஓடும்- அந்தவான்மாவை அணுவென்றுகூறின் உடலினில்லாது பலதுவாரத்தாற் போகவேண்டும்; ஆதலால், ஆன்மா அணுவன்று,—உயிரினை நித்தமென்னில் உணர்வு உதயம் அந்தம் இன்றே - அந்தவான்மாவை நித்தமென்றுகூறில் அறிவுதோற்றமும் கேடும் இல்லையாகவேண்டும்; இவையிற்றையுடைத்தாகையால், ஆன்மாநித்தமன்று என்க. (கஎ)

எங்குமாய் நின்ற தான்மா வென்றிடி னெங்கு மின்றுந்
தங்கிடு நிறைவு தத்தஞ் சரீரங்க டோறு மென்னின்
மங்கிடு முடலத் தோடே வடிவினி லோரி டத்தே
யங்கது நின்ற தென்னி லடிமுடி யறிவின் றாமே.

(இ-ள்.) எங்குமாய் நின்றது ஆன்மா வென்றிடின் எங்கும் இன்றும்- ஓரான்மா எங்குநிறைந்து நின்றதென்றுகூறின் உடறோறும் பலபேதப்படுமாகையால் ஓரான்மா எவ்விடத்துமுண்டாகாது,—தங்கிடு நிறைவு தத்தம் சரீரங்கடோறு மென்னின் மங்கிடும் உடலத்தோடே - அந்தவான்மா தத்தம் உடல்கடோறு நிறைந்து நிற்குமென்று கூறின் உடல்கெடு

மிடத்துத் தானுங் கூடக்கெடவேண்டும்,—வடிவினில் ஓரிடத்தே அங்கு அது நின்றதென்னில் அடிமுடி அறிவின்றாமே - அந்தவான்மா உறுப்பிலோரிடத்தைத் தனக்கிடமாகக்கொண்டு நின்றறியுமென்று கூறின் தானின்றவிடமன்றிப் பாதாதிகேசமளவாக வறியமாட்டாது; ஆதலால், அறியும்பொருளாகிய ஆன்மாவில்லை என்க. (௧௮)

சாற்றிய கால மிங்குத் தங்கிய வாறி தென்னை
தோற்றுவித் தளித்துப் போக்குந் தொழிலவை காலமென்னிற்
போற்றிய பொருளிற் புக்குப் பிணங்கிடும் பொருட்பி னின்றாந்
தேற்றிய வில்வ ழக்குத் திரவியத் தியல்பி னாமே.

(இ-ள்.) சாற்றிய காலம் இங்குத் தங்கியவாறு இது என்னை - முற்கூறியகாலம் இங்கு நின்றபடியெப்படி,—தோற்றுவித்து அளித்துப் போக்கும் தொழிலவை காலமென்னில் - பதார்த்தங்களைத் தோற்றுவித்தும் நிறுத்தியும் போக்கியும் நிற்பது காலமென்னில்,—போற்றிய பொருளில் புக்குப் பிணங்கிடும் - அந்தமூன்றுவிதப்பொருளுடன் காலங்கூடி மயங்கிடும்,—பொருட்பின் இன்றாம் - அப்பொருட்குக் கேடுவந்தாற் காலமுமின்றாம்,—தேற்றிய இல்வழக்குத் திரவியத்து இயல்பினாமே - பொருள் மூன்றுவிதப்பட்டதன்றிக் காலமூன்றுண்டென்று கூறப்பட்டது தெளிவையுடையவில்வழக்காம் என்க. (௧௯)

எனக்குநீ கிழக்கி ருந்தா யாகின்மேற் கென்று யென்பா
லெனக்குமேற் கிருந்தா னென்பாற் கிழக்கென வியம்புந் திக்குத்
தனக்குநாங் கொள்வ தெப்பாற் சாற்றிடா யில்வ ழக்குத்
தனக்குள தாகு முண்மை தானில தாகு மன்றே.

(இ-ள்.) எனக்குநீ கிழக்கு இருந்தாயாகில் மேற்கு என்றாய் என்பால் எனக்கு மேற்கு இருந்தான் என்பால் கிழக்கென இயம்பும்-நீ எனக்குக்கிழக்கிருந்தாயாகில் என்னை மேற்கிருந்தானென்று சொல்லுவை, என்மாட்டு எனக்கு மேற்கிருந்தானொருவன் என்னிடத்து யானிருந்தவிடத்தைக்கிழக்கென்று கூறுவன்,—திக்குத்தனக்கு நாம் கொள்வது எப்பால் சாற்றிடாய்-ஆதலால் திக்கிற்கு நாங்கொள்வதெப்பகுதி? நீ கூறியகிழக்கையோ அவன் கூறிய மேற்கையோ சொல்லாய்,—இல்வழக்குத்தனக்கு உளதாகும் உண்மைதான் இலதாகும் அன்றே - நீ கூறிய இல்வழக்கிற்கு உளதாம் உள்வழக்கு இல்லையாம் என்க. (௨௰)

உலகினைப் படைத்தா னென்று யொருவனிங் குள்ள தாயி
னுலகினைப் படைக்க வேண்டா வில்லையேற் படைக்க வொண்ணா
துலகினுக் குபாதா னந்தா னுள்ள தாய்க் காரி யத்தா
முலகினைப் படைக்கி லங்கு முளதில தாவ துண்டே.

(இ-ள்.) உலகினைப் படைத்தான் என்றாய் ஒருவன் - உலகத்தைப் படைத்தவன் ஒரு கர்த்தாவென்று நீ கூறினாய்,—இங்கு உள்ளதாயின் உலகினைப்படைக்க வேண்டா-இவ்வுலகம் முன்புள்ளதாய்ப் பின்பு படைத்தானாயின் முன்புள்ளதை ஒருவன் படைக்கவேண்டுவதில்லை,—இல்லையேல் படைக்க ஒண்ணாது-இவ்வுலகம் முன்பில்லையாயின் ஒருவன்படைக்க

வுள்ள தாகாது,—உலகினுக்கு உபாதானந்தான் உள்ளதாய்க் காரியத்தாம் உலகினைப் படைக்கில் - அவ்வுலகினுக்குக் காரணமுள்ளதாய்க் காரியங்கெடுமாதலாற் காரியப்படுமுலகினைப்படைத்தானென்றுகூறின்,—அங்கும் உளது இலது ஆவது உண்டே - யாதொருபொருள் உள்ளதுமில்லதுமாகவுண்டோ என்க.

அங்கு - சுட்டு. எகாரம் - வினா. (உக)

உள்ளது கடாதி போல வுதிப்பித்தா னென்று ரைக்கின்
மெள்ளவே யெங்கு நின்று விதித்தன னுலகின் மீது
வள்ளறு னின்று னென்னில் வந்ததா முலக முன்னே
தள்ளிடா தெங்கு நிற்கி னெங்குமுன் றந்த தாமே.

(இ-ள்.) உள்ளது கடாதிபோல உதிப்பித்தானென்று உரைக்கின் - மண்போல உலகிற்கு மூலமுள்ளதாய்க் கடாதிகளைக் குலாலன்றோற்றுவிக்குமாபோல இவ்வுலகங்களை ஒருவனுண்டாக்கினனென்று நீ கூறின்,—மெள்ளவே எங்கு நின்று விதித்தனன்-இவ்வுலகத்தை யுண்டாக்குமிடத்து மெல்ல எவ்விடத்து நின்றுண்டாக்கினன்,—உலகின்மீது வள்ளறுன் நின்றுனென்னில் வந்ததாம் உலகம் முன்னே-பிரபஞ்சத்திலேநின்று கர்த்தாவுண்டாக்கினனென்று கூறிற் பிரபஞ்சம் முன்னே உண்டானதாம்,—தள்ளிடாது எங்கும் நிற்கின் எங்கும் முன் தந்ததாமே-நீங்கப்படாமல் எங்கு நிறைந்து நின்று உண்டாக்கினனென்று நீ கூறின் எங்குமென்பதொரு முதலாய்க்கர்த்தாவைப் பின்புதந்ததாம் என்க. (உஉ)

இல்லது கருணை யாலே யியற்றின னிறைவ னென்னிற்
கொல்லரி யுழுவை நாகங் கூற்றமுங் கொண்டு தோற்ற
வல்லவன் கருணை யென்னு வலியினால் வேண்டிற் றெல்லாம்
பல்கவே படைத்தா னாயிற் பித்தனைப் பணிந்தி டாயே.

(இ-ள்.) இல்லது கருணையாலே இயற்றினன் இறைவனென்னில் - எல்லாவற்றிற்குங்கர்த்தாவானவன் இருக்குமிடம் நியமிக்கப்படாமையின் அப்படியந்நியமமானகர்த்தா காருண்ணியத்தினாலே இல்லாததொன்றைப் படைத்தானென்று கூறின்,—கொல் அரி உழுவை நாகம் கூற்றமுங் கொண்டு தோற்ற வல்லவன் கருணை என்னே - கொலைத்தொழிலைப் பொருந்தின சிங்கத்தையும் புலியையும் யானையையுங் கூற்றத்தையு முண்டாக்கிக் கொண்டு தோற்றவல்லவனுக்குக் காருண்ணிய மென்னே,—வலியினால் வேண்டிற்றெல்லாம் பல்கவே படைத்தானாயிற் பித்தனைப்பணிந்திடாயே-கர்த்தாவல்லவனாகையாலே எல்லாவான்மாக்களும் வர்த்திக்கும்படி படைத்தானென்று கூறின் அஃதோர் காரணகாரியப்படாமற் பித்தர்செய்யுங் குணமாதலாற்பித்தனையே கர்த்தாவாக வணங்குவாயாக என்க. (உ௩)

பெறுவதிங் கென்ப டைத்துப் பெற்றது விளையாட் டென்னிற்
சிறுமழ விறைய தாகுஞ் செய்திடுங் கன்மத் தென்னி
னுறுபெருங் கன்மஞ் செய்வோர் முன்புள ராவ ருண்மை
யறிவுறின் ஞால மெல்லா மநாதியென் றறிந்தி டாயே.

(இ-ள்.) பெறுவது இங்கு என்படைத்துப் பெற்றது விளையாட்டென்னில் - சர்வான்மாக்களையும் இவ்விடத்துப்படைத்துப் பெறும்பேறென்

னென்று கேட்டவிடத்துப் பெறும்பேறு விளையாட்டென்று கூறின்,—சிறுமழவு இறையதாகும் - உன்கர்த்தா இளவறிவினனாய்ச் சிறுபிள்ளையாக வேண்டும்,—செய்திடும் கன்மத்தென்னின் உறுபெருங் கன்மம் செய்வோர் முன்பு உளராவர் - கன்மத்துக்கீடாகப் படைத்தானென்றுகூறின், கன்மஞ்செய்வோர் அநாதியாவர்,—உண்மை அறிவு உறின்-இதனைமெய்யாக வறியின்,—ஞாலமெல்லாம் அநாதியென்று அறிந்திடாயே-பிரபஞ்சமெல்லாம் அநாதியே யுள்ளதென் றறிவாயாக என்க. (உச)

உருவொடு நின்றா னென்னி னுருவமுன் படைத்தார் வேண்டு
முருவவ னிச்சை யென்னி னுலகெலா மிச்சை யாகு
முருவுல கத்து ளோர்கட் குறுவது கன்மா லென்னி
னுருவுடை யோர்கட் கெல்லா முற்றது கன்மத் தாமே.

(இ-ள்.) உருவொடு நின்றானென்னின் உருவம் முன்படைத்தார் வேண்டும் - உன்கர்த்தா உரூபியென்று சொல்லின் அவ்வுருவத்தை முன்புண்டாக்கினர் வேண்டும்,—உருவு அவன் இச்சை யென்னின் உலகெலாம் இச்சையாகும் - அவனதிச்சையாலே உருவத்தையெடுத்துக்கொண்டானென்னின் உலகத்துள்ளோருந் தமதிச்சையாலே உருவெடுத்துக்கொண்டாராவார்,—உரு உலகத்துளோர்கட்கு உறுவது கன்மாலென்னின் உருவுடையோர்கட்கெல்லாம் உற்றது கன்மத்தாமே-உருவம் உலகத்திலுள்ளவர்க்கு வருவது அவரவர் கன்மத்தாலென்று நீ சொல்லின் உருவமுடையவர்களெல்லார்க்கும் உருவமுறுவது கன்மத்தாலேயே யாகவேண்டும் என்க.

கன்மத்தாலென்பது - கன்மாலெனவிகாரப்பட்டது. (உரு)

அருவெனிற் பவத்தி னின்று மெடுத்திடா னாகா சம்போன்
மருவின னிழல்போ லென்னின் மருவினோர்க் காகு மாட்சி
பெருகிய வறிவுண் டென்று பேசிடி னேசத் தோடுங்
கருதிட வுருவம் வேண்டு மில்லையேற் கருத லின்றே.

(இ-ள்.) அருவெனில் பவத்தினின்றும் எடுத்திடான் ஆகாசம்போல்-உன்கர்த்தா அரூபியென்றுகூறில் ஆகாசம்போலச் சேட்டையிலனாகையால் ஆன்மாக்களைப் பிறவிக்கடலினின்றும் எடுத்திடமாட்டாதவனாவன்,—மருவினன் நிழல்போலென்னின் மருவினோர்க்கு ஆகும் மாட்சி - யாவருஞ்சென்றடையத்தக்க நிழல்போல்வனென்னின், அந்நிழல் தன்னிடத்து வந்து மருவினோர்க்கே நன்மையைக்கொடுத்தலால் அவனும் வியாபியல்லன்,—பெருகிய அறிவு உண்டென்று பேசிடின் நேசத்தோடும் கருதிட உருவம் வேண்டும்-ஏகதேசியாயினும் நிறைந்த அறிவினையுடையனென்று கூறின் விருப்போடுஞ் சிந்தித்தறியத்தக்கதோருருவுண்டாதல் வேண்டும்,—இல்லையேல் கருதல் இன்றே - அப்படியறியத்தக்க உருவில்லையாயின் அறிவுமில்லையாம் என்க. (உசு)

எங்கணூ லநாதி யாக விறைவனுண் டென்னு மென்னி
னுங்கணூ லுரைப்பா ரின்றி யோதுவ தழகி தாகு
மங்கவன் றன்னை நூல்கொண் டறிந்தன மவனைக் கொண்டே
யிங்குநூ லறிந்தோ மென்னி லீதோராச் சரிய மாமே.

(இ-ள்.) எங்கள் நூல் அநாதியாக இறைவன் உண்டென்னுமென்னின் உங்கள் நூல் உரைப்பார் இன்றி ஓதுவது அழகிதாகும் - எங்கள்

நூலாகிய வேதாகமங்கள் அநாதியுமாகிக் கர்த்தாவுண்டென்று சொல்லு மென்று கூறின் உங்கள் நூலாகியவேதாகமங்கள் சொல்லுவாருமின்றித் தோன்றுமென்பது அழகிதாயிருக்கும்,—அங்கவன்றன்னை நூல்கொண்டு அறிந்தனம் அவனைக்கொண்டே இங்குநூல் அறிந்தோமென்னில் ஈதோர் ஆச்சரியமாமே - அவ்விடத்துக் கர்த்தா வுண்டென்று வேதங்கொண்டு அறிந்தனமென்றும் அந்தக்கர்த்தாவைக்கொண்டே வேதங்கேட்கப்பட்ட தென்றுங் கூறின் ஈதிங்ஙனமே மயங்கினது இதனை முன் கேட்டுங்கண்டும் அறிந்தனவல்லவாம் என்க.

ஆச்சரியமென்பது - இகழ்ச்சிக்குறிப்பு. (உஎ)

உற்றெழு மரங்க ளாதி யுயிரின்றிப் பூத ரூபம்
பற்றியிப் பாரின் மீது பாங்கினாற் பலவு மாகிப்
புற்றொடு மயிர்கொம் பாதி போலவே தோன்றி மாயு
மற்றுள யோனி கட்குப் பயனென வழங்கு மன்றே.

(இ-ள்.) உற்று எழு மரங்கள் ஆதி உயிர் இன்றிப் பூதரூபம் பற்றி இப் பாரின்மீது பாங்கினல் பலவும் ஆகிப் புற்றொடு மயிர் கொம்பு ஆதிபோல வே தோன்றி மாயும்-பூமியினிடமாகநின்று வளருமரங்கண்முதற் புல்லீறு கவுள்ளன தாவரங்களாம்; அவை உயிர் வர்க்கமல்லவாய்ப் பிருதிவி யப்புத் தேயு வாயுவென்னும் பூதரூபத்தைப் பொருந்தியபகுதிகளாகப் பலபேதப் பட்டுப் புற்றுப்போலவும் மயிர்போலவுங் கொம்புபோலவு முண்டாய்வளர் ந்து மீளவுந் தோன்றினமுறைமைப்பாட்டிலேகெடும். இஃதியாது காரண மாயுண்டாயதென்னின்,—மற்றுளயோனிகட்குப் பயனென வழங்கும் அ ன்றே - அண்டசஞ் சுவேதசஞ் சராயுசமென்னு மூன்றுபேதத்திலுண்டா கிய ஆன்மாக்களுக்குப் பிரயோசன காரணத்தால் அநாதியேயுண்டாய் வழங்கும் என்க. (உஅ)

கொன்றிட லாகா தென்றுங் கொன்றவை கொண்டு நாளுந்
தின்றிட லாகு மண்ணோ டொத்திடுஞ் செத்த வெல்லா
மொன்றிய வாச மூட்டி யுண்ணுநீர் வைத்த வர்க்கோ
சென்றுநின் றுண்ட வர்க்கோ புண்ணியஞ் செப்பி டாயே.

(இ-ள்.) கொன்றிடல் ஆகாது என்றும் - தானேரான்மாவைக்கோ றல் ஒருக்காலுநியாயமன்று,—கொன்றவை கொண்டு நாளும் தின்றிடல் ஆகும் மண்ணோடு ஒத்திடும் செத்தவெல்லாம் - மாண்டவெல்லாம் மண் ணோடொக்குமாதலால் ஒருவர் கொல்லப்பட்டவற்றைக் கைக்கொண்டு எப்பொழுதும் புசிக்கலாம்? அதனாற்றோடமுண்டாகாது,—ஒன்றிய வாசம் ஊட்டி உண்ணுநீர் வைத்த வர்க்கோ சென்றுநின்று உண்டவர்க்கோ புண் ணியம் செப்பிடாயே - மணங்களாற்கட்டுப்பட்ட நீர் அருமையான வழிக ளிலே உண்டாக்கிவைத்தவர்க்குப் புண்ணியமுண்டாயதோ? வழிநடந்து தாகித்துக்குடித்தவர்க்குப் புண்ணியமுண்டாயதோ? சொல்லாய். வைத்த வர்க்கே புண்ணியமுண்டாமாதலாற் கொன்றவர்க்கேபாவமுண்டாவது, தின்றவர்க்குப்பாவமில்லையாம் என்க. (உகூ)

ஓங்கிய வுருவ மோடும் வேதனை குறிப்பி னோடுந்
தாங்குபா வனைவிஞ் ஞானந் தாமிவை யைந்துங் கூடிப்
பாங்கினாற் சந்தா னத்திற் கெடுவது பந்த துக்க
மாங்கவை பொன்றக் கேடா யழிவது முத்தி யின்பம்.

(இ-ள்.) ஓங்கிய உருவமோடும் வேதனை குறிப்பினோடும் தாங்கு பாவனை விஞ்ஞானம் தாம் இவை ஐந்துங்கூடிப் பாங்கினால் சந்தானத்தில் கெடுவது பந்ததுக்கம் - மிக்க உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னும் ஐந்துகந்தமும் ஒருமைப்பட்டு ஒழுங்கிலே காரியங்கெடக் காரணங்கிடக்குமென்பது மிகுத்துரையில்வழக்குமாய்ப் பந்ததுக்கமுமாம்.—ஆங்கு அவை பொன்றக்கேடாய் அழிவது முத்தியின்பம் - அவ்விடத்துச் சொல்லப்பட்ட கந்தங்களைந்தும் நேராகக்கெட்டு வீட்டையடையுமென்பது முத்தியின்பமாம் என்க.

இனி உருவமாவதெட்டு. அவை பூதவுருநாலு, உபாதானவுருநாலு. அவை வருமாறு—பிருதிவி, அப்பு, தேயு, வாயுவெனுநாலும் பூதவுரு. வலி, கந்தம், இரதம், வன்னமெனுநாலும் உபாதானவுரு. ஆக-அ. வேதனையாவது மூன்று. அவை வருமாறு—குசலாவேதனை, அகுசலாவேதனை, குசலாகுசலாவேதனை. ஆக-ங. குறிப்பாவது ஆறு—சோத்திரம், துவக்கு, சக்ஷு, சிகுவை, ஆக்கிராணம், மனம். ஆக-சூ. பாவனை இருபது—தீக்குணம்-கo. நற்குணம்-கo. தீக்குணங்களாவன—பொய்சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச்சொல்லல், பயனிலசொல்லல் எனவாக்கின்குணம் ச. களவிற்குப்போகுதல், வறிதேதொழில்செய்தல், கொலைசெய்தல் எனக்காயத்தின்குணம் ங. கொலைநினைக்கை, காமப்பற்று, ஆசை எனமனத்தின்குணம் ங. ஆக - கo. நற்குணங்களாவன—மெய்யுரை, நல்வார்த்தை, இனியனகூறல், பயன்படுசொல் எனவாக்கின்குணம் ச. பள்ளிவலம்வரல், தவம்புரிதல், தானஞ்செய்தல் எனக்காயத்தின்குணம் ங. அருணினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என மனத்தின்குணம் ங. ஆக-கo. ஆகப்பாவனை-உo. இவை, மானசவாசிககாயங்களான் வருவனவாம். விஞ்ஞானம் ஆறு. அவையாவன—சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், சித்தம். ஆக - சூ. ஆகப்பஞ்சகந்தபேதம்-சங. இதற்கு அவன் வசனம்—"எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞான-மொட்டிய குறிப்போ ராறு செய்கையு மிருப தாகக் - கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்க மாகுந் - தொட்டநாற் பத்து மூன்றுஞ் சுகதநூற் றுணிவு தானே." என்பதாம். சந்தானமாவது—தொடர்ச்சி. அந்தத்தொடர்ச்சி நால்வகையாம். அவை—வாயு சந்தானம், தீபசந்தானம், தாராசந்தானம், பிபீலிகாசந்தானம் என்பனவாம். (ஙo)

அழித்திடு மராக மாதி யகற்றிநல் லறங்கள் பூரித்
திழித்திடும் புலன்கள் போக்கி யின்பொடு துன்பம்வாட்டிப்
பழித்திடாப் பழுதில் வாழ்க்கை யெட்டையும் பாரித் தெல்லா
மொழித்திடு ஞான சீலஞ் சமாதியி னுறுதி யாமே.

(இ-ள்.) அழித்திடும் அராகம் ஆதி அகற்றி-நன்மையைக் கெடுக்குங் காமக்குரோதலோபமோகமதமாற்சரியங்களைநீக்கி,—நல் அறங்கள் பூரித்து-நன்றானதன்மங்களை நிறையச்செய்து,—இழித்திடும் புலன்கள் போக்கி - பொல்லாங்கைச்செய்யும் புலன்வழிச்சேறலைக் கைவிட்டு,—இன்பொடு துன்பம் வாட்டி-துன்பவின்பங்களையொழித்துப் புண்ணியபாவங்களைக்கெடுத்து,—பழித்திடாப் பழுது இல் வாழ்க்கை எட்டையும் பாரித்து-

பிறராற்பழிக்கப்படாத குற்றமில்லாத நல்வாழ்க்கையெட்டையும் விரித்து,—எல்லாம் ஒழித்திடும் ஞான சீலம் சமாதியின் உறுதியாமே - மற்றுந்தோஷங்களானவை யெல்லாமொழித்திடும் ஞானகுணமாவது சமாதியின் உறுதியாம் என்க.

பழுதிலாவாழ்க்கையெட்டாவன—நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர்தலைப்பாடு என்க. தீவாழ்க்கையெட்டாவன—நற்காட்சி முதலாயின்வற்றை மாறிக்கொள்க. சமாதியினுறுதிவாழ்க்கை இவையெட்டுங்கெடவிருத்தல். இதற்கவன்வசநம்—"சகலமுமான்மாவுங்காரணனுமில்லை, சகலமுமாமநித்தஞ்சார்பாற்பிறவி, வகைவினையுண்டெதிபொன்றமாய்தல், சுகதனூன்முத்தித்துணிவு." என்பதாம். (௩௧)

சௌத்திராந்திகன்மதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௬௪.

---

# சௌத்திராந்திகன்மதமறுதலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அனைத்தினையு முணர்ந்தானெம் மிறைவ னென்றிங் கறியாது புத்த நீ யறைந்தா யென்று, மனைத்தினையு மறிந்திடா னளவி லாமை யொன்றொன்றா வனைத்தினையு மறிந்தா னென்னி, னனைத்தினையு மளவிறந்த தென்ன வேண்டா வளவிலா ஞானத்தா லறியின் ஞான, மனைத்தினையு மறியாது கணத்திற் றோன்றி யழிதலா லறிந்தமையின் றாகு மன்றே.

(இ-ள்.) அனைத்தினையும் உணர்ந்தான் எம் இறைவனென்று இங்கு அறியாது புத்தநீ அறைந்தாய் - புத்த நீ முழுவதையுமுணர்ந்தான் எம்முடைய கடவுளென்று அறியாமற் கூறினாய்,—என்றும் அனைத்தினையும் அறிந்திடான் அளவிலாமை - எப்போதும் சர்வத்தையு முணர்ந்து அறியமாட்டான் பிரபஞ்சபேதம் அளவிடவரிதாகையால்,—ஒன்றொன்றா அனைத்தினையும் அறிந்தானென்னின் அனைத்தினையும் அளவிறந்தது என்னவேண்டா - முழுதையும் ஒரொன்றாக அறிந்தானென்று நீகூறின் அப்படியறியுமிடத்துச் செலவு கலப்பு நீக்கத்தால் அறியவேண்டும்; ஆதலால், அதனையளவிறந்ததென்று கூறவேண்டாம்,—அளவிலா ஞானத்தால் அறியின் ஞானம் அனைத்தினையும் அறியாது - எல்லையில்லாதஞானத்தால் அறிந்தானென்று நீகூறின் உனதுஞானம் அனைத்தினையுமறியமாட்டாது. அஃதியாங்ஙனமென்னில்,—கணத்தில் தோன்றி அழிதலால் அறிந்தமையின்றாகும் அன்றே - ஒருமாத்திரையில் அறிவுதோன்றிக் கெடுமென்றும் நீ கூறுகையால் அனைத்தினையும் அறிந்தானென்கையில்லையாம் என்க. (௧)

சிலபொருளை யறிந்தவற்றின் றிறத்தே யொட்டிச் சிந்திப்ப னெப்பொருளு மென்னிற் சென்று, பலபொருளா யொன்றுபல பேத மாகிப் பயின்றுவரு மாதலாற் பார்க்கு மாறென், னுலகுதனி லொருபொருளங் குணரும் போதி னுற்றுணர்த லாராய்த றெளித லுண்டாய், நிலவுமத னுணர்வு பன்மை மூன்பி னின்றிடா தென்பையெல்லா நினைப்ப தெங்கே.

(இ-ள்.) சிலபொருளை அறிந்து அவற்றின் நிறத்தே ஒட்டிச் சிந்திப்பன் எப்பொருளுமென்னில் - பிரபஞ்சபேதத்திற் சிலபொருள்களை அறிந்து அவற்றின் பகுதியிலே எல்லாப்பொருள்களையுமொட்டிச் சிந்திப்பனென்றுபுத்த நீகூறின்,—சென்று பல பொருளாய் ஒன்று பலபேதமாகிப் பயின்றுவரும் ஆதலால் பார்க்குமாறு என் - அறிவாலறியும்பொருள் பலவாகச்சென்று அவற்றின்பலபகுதியாகிப் பொருந்திவருமாகையால், ஒன்றைக்கொண்டு அவற்றின்பேதமறியுமாறெங்ஙனம்? அன்றியும்,—உலகுதனில் ஒருபொருள் அங்கு உணரும் போதின் உற்று உணர்தல் ஆராய்தல் தெளிதல் உண்டாய் நிலவும் அதனால் உணர்வு பன்மை முன்பின் நின்றிடாது என்னை எல்லாம் நினைப்பது எங்கே - பிரபஞ்சத்தில் ஒருபொருளை யறியுமிடத்துக் கூடியறிந்தாராய்ந்து தெளிதல்வேண்டுமாதலால் ஒன்றையறியும்போது பலபேதப்படுகையாலும் நீமுன்புண்டானவறிவு பின்பில்லையென்று சொல்லுவையாகையாலும் ஒருபொருளையறிந்து அதனோடுமற்றொருபொருளைச் சேர்த்தறியுநெறியாண்டுள்ளது என்க. (உ)

முத்திநிலங் கண்டறங்கண் மொழிந்தா னாயின் முதன்முழுதும் பொன்றிப்பின் மொழிந்த வண்ண, மொத்திடுந்தே னெய்கூட்டி யுண்டிறந் தோ னொருவ னுலகினில்வந் திதுதீதென் றுரைத்தா லொக்குஞ், செத்ததுபின் னென்றுரைக்கிற் கதியிற் செல்லாத் தேரனுரை நீர்பெருகிச் சென்றாறாகு, மத்தினள வறியாதிக் கரையோர் தம்மை யக்கரைக்கே செல்லவிடு மாசை யாமே.

(இ-ள்.) முத்திநிலம் கண்டு அறங்கள் மொழிந்தானாயின் முதல் முழுதும் பொன்றிப்பின் மொழிந்தவண்ணம் ஒத்திடும் - வீட்டிடத்தைக்கண்டு பின்பு அறமுதலியவற்றைச் சொன்னானென்று புத்தநீகூறின் ஒருமுதல் சேரக்கெட்டுப்போய்ப் பின்புவந்து சொன்னதென்னு முறைமையொக்கும். அஃதென்போலவென்னில்,—தேன்நெய் கூட்டி உண்டு இறந்தோன் ஒருவன் உலகினில்வந்து இது தீதென்று உரைத்தால் ஒக்கும் - தேனையு நெய்யையுங்கூட்டிக் குடித்துச் செத்தோனொருவன் மீளவுமுலகின்கண் வந்து தேனுநெய்யுங்கூடினது விஷமென்று சொன்னதன்மைத்து,—செத்ததுபின் என்று உரைக்கில் கதியில் செல்லா - அறமுதலியவற்றைக்கூறி வீட்டிடத்தைப்பின்பு அடைந்தானென்னில் அவன் முத்தியையறிந்தவனல்லன் ஆதலால் அவன் கூறியவறமுங் கதியிற்செலுத்தமாட்டாது,—தேரன் உரை நீர் பெருகிச் சென்று ஆறாகும் அத்தின் அளவு அறியாது இக்கரையோர் தம்மை அக்கரைக்கே செல்லவிடும் ஆசையாமே - புத்தனுரையானது ஜலமானதுபெருகிச் சென்றோடும்ஆற்றி னளவறியாதானொருவன் இக்கரையினின்றோரை அக்கரையிலே செலுத்திவிடுவேனென்று ஆசைப்படுதல்போலும் என்க. (ங)

நீர்போல நின்றுயிர்கட் களித்தி டாதே நெருப்பாய துயர்ப்பிறப்பினிகழ்ந்து நின்று, பாரோருக் களித்தபடி வலையிற் பட்ட பலகலைமான் கண்டொருநீள் கலைபாய்ந் தோடி, நேரேசென் றவ்வலைக்கே நேர்ந்தா லொக்கு நீள்பாவக் குழியில்விழு நீர்மை யாகு, மாரோவிங் கவனைப்பா ரறத்தை யாக்கப் பிறந்தறமாக் கினனென்னி லடங்க வாமே.

(இ-ள்.) நீர்போலநின்று உயிர்கட்கு அளித்திடாதே நெருப்பாயதுய ர்ப்பிறப்பின் நிகழ்ந்து நின்று பாரோருக்கு அளித்தபடி வலையிற்பட்ட பலகலைமான் கண்டு ஒருநீள்கலைபாய்ந்து ஓடி நேரேசென்று அவ்வலைக்கே நேர்ந்தால் ஒக்கும் - கர்த்தா ஜலமும் அதனிரதமும்போலச் சர்வான்மாக் களிடத்திலும் நீங்காமனின்று இரட்சிப்பனென்னுதே, கொடிதாகிய தீத் தன்மையையுடைய துன்பப்பிறவியின்கண்ணே தோன்றிநின்று பிரபஞ்ச த்தார்க்கு அருள்செய்வனென்னுமது, வலையிற்பட்ட பலமான்களையுங்க லைகளையுங்கண்டு அப்பாற்பட்டுநின்ற ஓர்கலையானது இவற்றை யிரக்ஷிக் கவோடித் தவறுமறச்சென்று அந்தவலைக்குள்ளே தானுமகப்பட்ட தன் மைபோலும்,—நீள் பாவக் குழியில் விழும் நீர்மையாகும் - மிக்க நர கத்திற்செல்லும் வழியாமிதனை,—ஆரோ இங்கு அவன் ஒப்பார்-மெய்யே யிரக்ஷிக்கும் வழியென்றுசொல்லுகிற புத்தனையொப்பார்யாவர்,—அறத் தை ஆக்கப் பிறந்து அறம் ஆக்கின னென்னில் - அறமுதலியனவற்றை யுண்டாக்க வேண்டித் தான்பிறந்து அறத்தையுண்டாக்கினனென்னில்,— அடங்க ஆமே - சர்வான்மாக்களுந் தருமத்தையுண்டாக்கவேண்டிப் பிறந் தார்களாம் என்க.

ஆரோவென்பது - இகழ்ச்சிக்குறிப்பு. (௪)

அலகிறந்த யோனிகளிற் புகுந்த தெல்லா மறத்தையளித் திடவெ ன்னி லவற்றி னெல்லா, நிலவுவது கன்மத்தா லாகு மன்றி நினைந்ததோ ரிச்சையினு னிகழ்ந்தா னுகி, லுலகுதனி லுள்ளோர்க்கு மதுவே யாகு மொ ருத்திவயிற் றினிலிருந்தங் குதரந் தள்ளித், தலமதில்வந் தானென்னிற் றாயைக் கொன்றான் றருமத்தை யின்றெனக்குச் சாற்றி டேலே.

(இ-ள்.) அலகு இறந்த யோனிகளில் புகுந்ததெல்லாம் அறத்தை அளித்திட வென்னில் - எண்ணிறந்தயோனிகளிற் சாதனனுனதெல்லாந் தன்மத்தையுண்டாக்கவேண்டியென்று புத்தநீகூறின்,—அவற்றினெல்லா ம் நிலவுவது கன்மத்தால் ஆகும் - அங்ஙனம் பலயோனிசாதனனுனதுகன் மத்தாலாகவேண்டும்,—அன்றி நினைந்ததோர் இச்சையினுல் நிகழ்ந்தானு கில் - அற்றன்று, தான்கருதிய விருப்புக்காரணத்தாற் காயமெடுத்துக்கொ ண்டானென்றுகூறின்,—உலகுதனில் உள்ளோர்க்கும் அதுவேயாகும் - பி ரபஞ்சத்திலுள்ளோர் காயமெடுத்துக்கொண்டதுந் தன்மஞ்செய்யவிரும்பி யெடுத்துக் கொண்டதேயாம்,—ஒருத்தி வயிற்றினில் இருந்து அங்கு உத ரம் தள்ளித் தலமதில் வந்தானென்னில்-அங்ஙனம் ஆன்மாக்கள்போல யோ னிசாதனனுனதில்லை, மாதாவினுதரத்தேயிருந்து அவ்வுதரத்தைப்பிளந்து பூமியின்கண்ணே வந்து அறத்தையுண்டாக்கின னென்று நீ கூறின்,—தா யைக் கொன்றான் தருமத்தை இன்று எனக்குச் சாற்றிடேலே - அங்ஙனம் மாதாவைக்கொன்று அறத்தையுண்டாக்கினுனென்னில், அத்தாயைக்கொ ன்றான் கூறியதன்மத்தை இப்போதெனக்குக் கூறுவாயல்லை என்க.

புத்தன் பிறக்கிறகாலத்து மாதாவினுடைய வலமருங்குலாற்பிறந்தான். அவ ளும் ஆறுநாள் குற்றுயிரோடே கிடந்து ஏழாநாளிறந்தாள். இது புத்தர்மாதாக்க ளிருபத்துநால்வர்க்கு மொக்கும். இதனை—"உலும்பிலிவனத்து ளொண்குழைத்தே வி-வலம்படுமருங்குல் வடுநோயுறும - லான்றோனவ்வழித் தோன்றினனுதலி-னீன்

ரேளேழாநா ளின்னுயிர்வதைத்தான்." என்னும் விம்பசாரகதையாற்றெளிக. — "முத்தராம்புத்தர்தோன்றித்தாய்பழுவைமுறித்தேவிட்டார் - கொத்துவாழ்குழலாளாகுங்குண்டலகேசிதானுங் - கத்திருவாங்கணவனக்காடணையுங்கொன்றிட்டா - ரித்துணையாரிருவரும்வந்திங்ஙனேதவமுரைப்பார்." இது சித்தாந்த வசனம். (ரு)

அரியினொடு நரியுழுவை யாதி யாக வானபோ தறந்திரிந்து கோற லாதி, பரிவினொடுஞ் செய்தனனு மில்லை யாகிற் பசிதனக்குத் தின்பதவன் பழுதை யோதான், கருதிலவன் பரதுக்க துக்க னாகிற் கணவனிழந் தோர் கட்குங் கண்ணி குத்தித், திரியுமவர் துயரினுக்கு மிரங்கு வோன்றன் செய லறத்துக் கழகியதாஞ் செப்புங் காலே.

(இ-ள்.) அரியினொடு நரி உழுவை ஆதியாக ஆனபோது அறந்திரிந்து கோறல் ஆதி பரிவினொடுஞ் செய்தனனும் - உன் ஆதிபுத்தன் அலகிறந்தயோனிகளிற் பிறந்தானென்றும் அப்படிப்பிறந்தது கொலைமுதலியபாவங்களை நீங்கித் தன்மத்தைப் பரிபாலிக்க விரும்பி யென்றுங்கூறினாய் அங்ஙனமாயின் புத்தன், சிங்கம் நரி புலிமுதலிய யோனிகளிலே சாதனானவிடத்துத் தன்மத்தை விட்டுக் கொலையை விரும்பிப் பலவான்மாக்களையுங் கொன்றுதின்ற விதுபிரியத்தோடுஞ்செய்தானாகவேண்டும், — இல்லையாகில் பசிதனக்குத் தின்பது அவன் பழுதையோதான் - அப்படிக்கொன்று தின்றானில்லையென்று சொல்லுவையாயின் அந்தயோனிசாதனாய்த் திரிந்த விடத்துண்டான பசிக்குப் புத்தன்றின்பது பழுதையோ? அன்றேன் மாமிசமன்றோ? ஈதன்றியும், — கருதில் அவன் பரதுக்க துக்கனாகில் கணவன் இழந்தோர்கட்கும் கண்ணிகுத்தித் திரியுமவர் துயரினுக்கும் இரங்குவோன்றன்செயல் அறத்துக்கு அழகியதாம் செப்புங்காலே - பரதுக்கதுக்கனென்று நீ சொல்லின் பூகேதனைப் பலவான்மாக்களைக் கோறலால் பொல்லாதவனனதன்றியும், கணவனைநீங்கிச் சோரத்திற்செல்லுமகளிர் உறுந்துயரத்தினுக்கும், கண்ணிமுதலியகொண்டு கொலைத்தொழில் புரிவோர் துயரத்தினுக்கும் இரங்குவனென்னில் அச்செய்தி அவன்றன்மத்துக்கு அழகிதாம் சொல்லுங்காலத்துங் கருதுங்காலத்தும் என்க.

ஆதி. என்பதனை - ஆதிபுத்தனென்று முன்னேகூட்டுக. கருதிலென்பதனை - கருதுங்காலத்தென்று பின்னேகூட்டுக. ஆமென்பதனை - அன்றெனக்கொள்க. அழகிதாமென்பது - இகழ்ச்சிக்குறிப்பு. (சு)

ஒருபொருளைத் தேடியதற் குரையுந் தேடி யுரைப்பதன்முன் னுணர்விறக்கு முனக்கு நூலென், மருவிவருஞ் சந்தான வழியி லென்னில் வாயுரைத்த தேயுரைத்து வழங்கு மாகும், பெருகுவது கெட்டென்னி லது போலாம்பின் பித்துரைத்த தறியாது பேதைசொல்லுந், கருவதுநூ லெப்பரிசு முதனடுவோ டிறுதி தான்விருத்த மின்றியது சாற்றி டாயே.

(இ-ள்.) ஒரு பொருளைத்தேடி அதற்கு உரையுந்தேடி உரைப்பதன் முன் உணர்வு இறக்கும் உனக்கு நூல் என் - ஒருபொருளைத்தேடி அதற்கேற்றதோர் சொல்லையுந்தேடிச் சொல்லொடுபொருளைக்கூட்டி நூலாகக் கூறுதன்முன்னே உன்ஞானங்கெடுமாதலால் உனக்கு நூலுண்டாம்படியென். அற்றன்று, — மருவிவருஞ் சந்தான வழியிலென்னில் வாய் உரைத்ததே

உரைத்து வழங்குமாகும்-அவ்வறிவுபொருந்தி வருந்தொடர்ச்சி வழித்தோன்றின நூலாமென்று புத்தநீகூறின், முன்சொன்ன அக்கரமொன்றையே பின்சொல்லி நிற்கவேண்டும். அற்றன்று,—பெருகுவது கெட்டென்னில் அதுபோலாம்பின் - முன்னறிவுகெட்டுப் பின்றோன்றுமறிவு மிக்கவறிவாமென்று கூறின் அங்ஙனம் பின்றோன்று மறிவுங்கணத்திற் கெடுகையாலே முன்னறிவேயாம்,—பித்து உரைத்தது அறியாது பேதைசொல்லும் தருவது நூல் - உனது நூல் பித்தர்சொல்லுஞ்சொல்லும் அறியாதார்சொல்லுஞ்சொல்லுஞ் சொல்லிற்றும்,—எப்பரிசு முதல் நடுவோடு இறுதி தான் விருத்தம் இன்றி அது சாற்றிடாயே - நூலாவது முதனடுவிறுதி மாறுபாடில்லாததலால் எப்பெற்றியதுனது நூல், உன்னுடைய பழுதுநூலையென்னுடன்சொல்வாயல்லை என்க.

பித்துரையும் என உம்மைவிரிக்க. சந்தானவழியாவன—தீபசந்தானம், வாயுசந்தானம், தாராசந்தானம், பிபீலிகாசந்தானம் என நால்வகைப்படும். பெருகுவது கெட்டென்பது - கெடுதல் நால்வகையில்கெட்டுவர்த்தித்தல். (எ)

முன்னாகப் பலவறங்கள் பூரித்தெம் மிறைவன் முழுதுணர்ந்திங் கருளினா லுயிர்கண்முத்தி யடையப், பின்னாகப் பிடகநூ லுரைத்தானென்று பேசினா யிவன்முன்பு பேரறங்கள் புரிநூல், சொன்னா ரிவனைப்போன் முன்னொருவ னென்னி லவனுக்குச் சொன்னா ரானத்தொடர்ச்சி யாகி, யன்னாய்பி னனவத்தைப் படுமொருவ னின்றா மாரோவுன் பாழியிருப் பாரிதனை யறையே.

(இ-ள்.) முன்னாகப்பல அறங்கள் பூரித்து எம் இறைவன் முழுது உணர்ந்து இங்கு அருளினால் உயிர்கள் முத்தி அடையப் பின்னாகப் பிடகநூல் உரைத்தானென்று பேசினாய்-ஆதியிலே எம்முடைய கடவுள் பலதருமங்களைச்செய்து நிறைந்து சருவஞ்ஞனாய் கிருபையாலே ஆன்மாக்கள் வீட்டின்பமடைதற்கும் பின்பு அறஞ்செய்தற்கும் வழியாகிய பிடகநூலை அருளினானென்று புத்தநீசொன்னாய்,—இவன் முன்பு பேரறங்கள் புரிநூல்சொன்னார் ஆர் இவனைப்போன் முன் ஒருவனென்னில் - பெரியவறங்களையுண்டாக்க இவனுக்கு முன்புநூல்சொன்னவரார் அவனுக்கு முன்பு அவனாசாரியன் சொன்னானென்று கூறின்,—அவனுக்குச்சொன்னார் ஆரானத்தொடர்ச்சியாகி அன்னாய்பின் அனவத்தைப் படும் ஒருவன் இன்றாம் - அவனாசாரியன்றனக்குச்சொன்னார் ஆரான மேன்மேற்றொடர்ச்சிப்பட்டுப் பின்சொற்கு உத்தரமின்றி முட்டுப்படுமாகையாற் கர்த்தாவுமில்லையாம். இஃதன்றியும்,—ஆரோ உன்பாழி இருப்பார் இதனை அறையே - உன்பள்ளியுள் நீதெய்வமென்றேத்த விருப்பாராரோ கூறுவாயாக என்க.

அனவத்தைப்படு மொருவனென்றாய், அனவத்தையென்பதொரு தோடங்கொண்டு நின்றுசொன்னா னொருவனென்றா யென்பது. அநவத்தை-தலைகாணாதது அல்லது, முடிவுகாணாதது. அன்னாய்-அசை. (அ)

இந்நூலைச் சொன்னவன்றா னிங்கிருந்தா னென்னி லிவனிருத்தியேத்துமவ னெங்கிருந்தா னெவனே, வந்நூலோ குருவந்த வடைவுமுனக்கில்லை யடைவுதரின் முடிவின்க ணாதி போதன், சொன்னானு மவைவே

தா கமங்க ளாகுஞ் சுருக்கியூண் டவம்புரியச் சொல்லுவதெல் லோரு;முன் னூல்கண் கழுவாதே யுதிப்பதன்முன் புலாலோ டுண்பானோ ருன்பிரிய னுரைத்ததொரு நூலே.

(இ-ள்.) இந்நூலைச் சொன்னவன்றான் இங்கு இருந்தானென்னில் - இந்தப் பிடகசாத்திரஞ்சொன்ன புத்தாசாரியன் இப்பள்ளியிலிருந்தானு கில்,—இவன் இருத்தி எத்தனமவன் எங்கு இருந்தான் எவனோ அந்நூலோ குருவந்த அடைவும் உனக்கு இல்லை - இவன் ஆசாரியனுக வேத்தப்பட்ட வனுவான் எவ்விடத்தான், கடவுளாவான் எவன், அவனுற்சொல்லப்பட்ட நூலெவ்விடத்தது, அவைகாணப்படாமையாற் குருசந்தான அடைவுமு னக்கில்லையாம்,—அடைவுதரின் முடிவின்கண் அநாதிபோதன் சொன்னு னும் அவைவேதாகமங்கள் ஆகும்-நூலடைவுசொல்லப்புகின் சங்காரத்தி ன்கண் அழிவில்லாத பரமேசுவரன் சொல்லப்பட்டனவாம். அவை வேதா கமங்களென்பர்,—சுருக்கியூண் தவம்புரியச் சொல்லுவது எல்லோரும்- இவ்வாகமங்களின் சார்வுளார் சொல்லுவது உணவைச்சுருக்கித் தவத்தை ப்புரிதலே. இங்ஙனமன்றி,—உன் நூல் கண்கழுவாதே உதிப்பதன்முன் புலாலோடு உண்பான் ஓர் ஊன்பிரியன் உரைத்தது ஒருநூலே - உன்னு டைய பிடகநூல் கண்கழுவாது சூரியனுதிக்குமுன்னே புலாலுடனுண்பா னெருபோசனப்பிரியன் சொல்லப்பட்டநூலாம் என்க. (கூ)

மூன்னூலும் வழிநூலுஞ் சார்பு நூலு மூன்றுகு முலகத்து மொழி ந்த நூல்க ளிந்நூலி லுன்னூலிங் கெந்நூ லென்னி லிந்நூல்கா ணென் னூலென் றியம்ப மாட்டா, யுன்னூலு மொருநூலா யுரைப்ப தென்னே யுலட்டுநூல் பருத்திநூல் சிலம்பி நூல்க ளந்நூலு மல்லாதே பொய்ந் நூல் கொண்டிங் கறநோற்றுத் திரிந்தவா றழகி தாமே.

(இ-ள்.) முன்னூலும் வழிநூலும் சார்புநூலும் மூன்றுகும் உல கத்து மொழிந்த நூல்கள் - இவ்வுலகின்கண் வழங்குநூல்கள் முதனூலும் வழிநூலும் சார்புநூலுமென மூன்றுவிதமாம்,—இந்நூலில் உன்நூல் இங்கு எந்நூலென்னில் இந்நூல்காண் என் நூலென்று இயம்பமாட்டாய்-இங் ஙனமூன்றுவிதமான நூல்களில் உன்னூல் எந்தநூலென்று கேட்டால் இந்த நூல்களில் என்னுடையநூல் இந்நூலென்று சொல்லவல்லாயல்லை. ஆதலால்,—உன் நூலும் ஒருநூலாய் உரைப்பது என்னே - உன்னூலை ஒருநூலாய்ச் சொல்வதெப்படி,—உலட்டுநூல் பருத்திநூல் சிலம்பி நூல்கள் அந்நூலும் அல்லாதே பொய்நூல்கொண்டு இங்கு அறம் நோற் றுத் திரிந்த வாறு அழகிதாமே - உலண்டாற்செய்தநூல் பருத்தியாற்செ ய்தநூல் சிலம்பியாற்செய்தநூலென்று சொல்லப்பட்டநூல்களின் தகு தியுமல்லாத உனதுபொய்யாகியநூலைக் கொண்டு இங்கே அறத்தையுண் டாக்கி நடந்தது ஆச்சரியம் என்க. (கo)

புத்தனவன் பொன்றக்கெட் டுப்போனு னென்று போற்றுவதிங் கா ரைநீ பொய்த்தவஞ்செய் புத்தா, செத்தவர்க்குச் சிலகிரியை செய்ய விங் குச் செய்தவர்க்கும் புண்ணியமா மென்று செப்பி, னித்தமுயி ராதலாற்

பலிக்குஞ் செய்தி நினைந்துதரு வானுமுள னுனக்கிவ்வா றில்லை, வைத்த சுடர்த் தீபமற மாய்ந்தக்கா லதற்கு மருவுதிரி நெய்கூட்டு மதிகேடுன் வழக்கே.

(இ-ள்.) புத்தனவன் பொன்றக் கெட்டுப்போனனென்று போற்று வது இங்கு ஆரைநீ பொய்த்தவஞ்செய் புத்தா - பொய்த்தவத்தைச் செய்யும்புத்தா நீ உன்னுசாரியன் முதலறக்கெட்டுப் போயினனென்றுசொல்லி இவ்விடத்துப்போற்றுவதியாவரை,—செத்தவர்க்குச் சிலகிரியை செய்ய இங்குச் செய்தவர்க்கும் புண்ணியமாமென்று செப்பின் - இறந்தோரைநோக்கிச்செய்த சிலநன்மை இருந்தோர்க்கும்புண்ணியமாமென்று கூறின்,—நித்தம் உயிர் - உயிர்கள் நித்தமாதல்வேண்டும்,—ஆதலால் பலிக்குஞ் செய்தி நினைந்து தருவானும் உளன் உனக்கு இவ்வாறு இல்லை - ஆகையால் கொடுக்கும் பலியாலுண்டாகிய புண்ணியம் இத்தன்மையென்று நினைந்து அப்புண்ணியபலமருளுவானாகிய ஒருகர்த்தாவு முண்டாகவேண்டும். இந்நெறி உன்னூனெறியன்று,—வைத்தசுடர்த் தீபம் அறமாய்ந்தக்கால் அதற்கு மருவுதிரிநெய்கூட்டும் மதிகேடு உன்வழக்கே - பொன்றக்கெட்டவர்க்குச் செய்யுஞ்சிறப்பாகிய உனதுவழக்கு தீபம் பொன்றக்கெட்டவிடத்து இறந்ததீபத்துக்குபகாரமென்று கருதி நெய்யுந்திரியுங்கூட்டும் அறிவின்மைபோலும் என்க. (௧௧)

நூலுரைத்தா னொருவனுள னென்றநுமா னத்தா னூல்கொண்டிங் கறிந்தாற்போ னூலா நூலின், பாலுரைத்த பொருள்களெல்லா மநுமானமென்னிற் பரலோக பாதாள லோகங்க ளொருசொல், லாலுரைத்த நூலின்றி யறையா யின்றே லவையறிந்த படியெனுன தநுமான மன்றே,மேலுரைக்கும் பிரமாண முனக்கில்லை காட்சி யநுமானம் விட்டபொருள் விளக்குவதா கமமே.

(இ-ள்.) நூலுரைத்தான் ஒருவன் உளனென்று அநுமானத்தால் நூல்கொண்டு இங்கு அறிந்தாற்போல் நூலா நூலின்பால் உரைத்தபொருள்களெல்லாம் அநுமானமென்னில் - நூலைச்சொன்னவனொருவனுண்டென்று நூலைக்கொண்டநுமித்தாற்போலச் சிறந்தநூலின் பகுதியிற்சொன்ன பொருள்களெல்லாமறிகை அநுமானமென்று புத்தநீகூறின்,—பரலோக பாதாளலோகங்கள் ஒருசொல்லால் உரைத்தநூல் இன்றி அறையாய்-பூமிக்குமேலான வுலகங்களின் செய்தியுங் கீழானவுலகங்களின்செய்தியும் நூல்கொண்டுசொல்லுவதின்று அநுமித்துச்சொல்லலாமாயிற்சொல்லாய்,—இன்றேல் அவை அறிந்தபடி என் உனது அநுமானமன்றே - அந்தநூலில்லையாயின் அந்தவுலகங்களின்செய்தியறிந்தபடியென் உனதநுமானத்தாலறியும்பகுதியன்றே? ஆகையால்,—மேல் உரைக்கும் பிரமாணம் உனக்கு இல்லை காட்சி அநுமானம் விட்டபொருள் விளக்குவது ஆகமமே - காட்சியானும் அநுமானத்தானுமறியாத பொருளை அறிவிப்பதுநூல்; அந்நூற்பிரமாணமுனக்கில்லையென்று கூறின், நீ முன்சொன்ன பிடகநூற்பிரமாணமும் உனக்கில்லையாம் என்க.

நூலுண்டேலறையாய் என்றும் பாடம். (௧௨)

எப்பொருளு மநித்தமென வியம்பிடுவை யநித்த மில்லதற்கோ வுள்ளதற்கோ வுளதிலதா னதற்கோ, செப்பிடினில் லதற்கில்ல தென்று மில்லை சென்றடைவ துள்ளதற்கே யுள்ளதென்று முண்டா, மப்படிதா னுளதிலதா மப்பொருளுக் கென்னி லுளதிலதா காதிலது முள்ள தாகா, திப்பொருளுக் கநித்தமிலை யென்றென்றைக் காட்டா யெனிற்றோன்றும் பொருணின்றிங் கிறுதி யாமே.

(இ-ள்.) எப்பொருளும் அநித்தமென இயம்பிடுவை - எல்லாப்பொருளுநித்தமில்லை அநித்தமென்று புத்தா நீசொல்லாநிற்பை,—அநித்தம் இல்லதற்கோ உள்ளதற்கோ உளதிலதானதற்கோ - நீகூறிய அநித்தம் இல்லாதபொருளுக்கோ உள்ளபொருளுக்கோ உளதிலதானபொருளுக்கோ,—செப்பிடின் இல்லதற்கு இல்லது என்றும் இல்லை சென்றுடைவது உள்ளதற்கேல் உள்ளது என்றும் உண்டாம் அப்படிதான் உளதிலதாம் அப்பொருளுக்கு என்னில் உளது இலதாகாது இலதும் உள்ளதாகாது - அநித்தம் இல்லாததற்கென்று நீகூறின் இல்லாதது என்றுமில்லையாம்; ஆகையால், இல்லாததற்கு உண்டாவதில்லை. உள்ளதற்கென்றுகூறின் உள்ளதில்லையாகாது என்றுமுண்டாகவேண்டும். உளதிலதாம்பொருட்கென்று கூறின் அதுவுமுளதிலதாகையால், உள்ளதில்லையாகாது இல்லாததுண்டாகாது. அதனால் இவையநித்தியமன்று,—இப்பொருளுக்கு அநித்தம் இலை யென்று ஒன்றைக் காட்டாயெனில் - தோன்றும்பொருள்களின் இப்பொருள் அநித்தமல்லாத நித்தமென்றென்றைக் காட்டாயென்று கூறின்,—தோன்றும் பொருள் நின்று இங்கு இறுதியாமே-தோன்றும்பொருளாகிய தூலவுடல் தோன்றிநின்று கெடுதலையுடைத்தாம் என்க.

ஆதலாற்சூக்குமவுடலுக்கு அநித்தமில்லையென்பதுகருத்து. அன்றியுந்தோன்றியிடுந்தூலதேகமும் வன்னபேதமும் ஒருக்காலுமிடையறாமல் தொன்றுதொட்டு வருதலால் அதுவு நித்தியமென்னுங் கருத்தாகக்கொள்ளினுமமையும். (௧௩)

அங்குரம்வித் தின்கேட்டிற் றோன்றுமது போல வனைத்துருவுங் கெட்டுவழி யாகு மென்னி, னங்கவற்றுக் காக்கக்கே டறைந்தா யெல்லா மநித்தமெனு முரைமறந்தா யருகனும்மா னாய்நீ, யிங்குமுளை யிலைமரமா யெழுந் தீண்டிச் செல்லா திறந்ததே யெழுந்தபடி நில்லா தென்னின், மங்கியிடா தேபால தருணவிருத் தையாய் வரும்வடிவு திரிந்துநின்று மாயுங் காணே.

(இ-ள்.) அங்குரம் வித்தின் கேட்டில் தோன்றும் அதுபோல அனைத்து உருவுங்கெட்டு வழி ஆகுமென்னின் - முளையானது வித்துக்கெடத்தோன்றும் அதுபோல எல்லா வுருவங்களுங்கெட்டுப் பின்பு அவ்வழியே தோன்றுமென்று புத்தநீகூறின்,—அங்கு அவற்றுக்கு ஆக்கக் கேடு அறைந்தாய் எல்லாம் அநித்தமெனும்உரைமறந்தாய் அருகனும் ஆனாய்நீ-எல்லாம் அநித்தமெனுஞ்சொல்லைமறந்து உருக்களுக்கு ஆக்கக்கேடுகூறினாய். அதனால் நீயும் க்ஷமணன்மதவழியிலேயாயினாய். அற்றன்று,—இங்கு முளை இலை மரமாய் எழுந்து ஈண்டிச் செல்லாது இறந்ததே எழுந்தபடி நில்லாதென்னின் - இவ்விடத்து அம்முளை இலையுமரமுமாய்வளர்ந்து செல்லாத வளர்ச்சியைக் கைவிடுவானேன்; ஆதலால், எழுந்தபடி நில்லாதென்று நீகூறின்

—மங்கியிடாதே பால தருண விருத்தையாய் வரும் வடிவு திரிந்து நின்று மாயுங்காணே - தோன்றினவுருவங்கெடாமனின்று பால தருண விருத்த அவத்தைகளைப்பொருந்தி அவ்வவத்தைகடோறும் பேதப்பட்டுப் பின்பு தூலவுடல்கெட்டுப்போம் என்க. (கச)

உடல்பூத மெனினொன்றுக் கொன்றுபகை யொன்றா வுதிரசுக் கிலமென்னின் மரத்தினுளுக் கல்லி, னிடமாகத் தவளையுரு வந்தவா றியம்பா யிருவினைகா ணெனின்வினைக ளிரண்டுருவாய் நிற்குந், திடமாக வன்னமுரு வெனினுண்ண வுண்ணச் சென்றுவள ருங்காயந் தேயுமுணர் வென்னின், மடவோனே யருவுணர்விங் கசேதனமா யுருவாய் வளராது வருமில்லா தெனின்மலர்வான் வருமே.

(இ-ள்.) உடல் பூதமெனின் ஒன்றுக்கொன்று பகை ஒன்றா - புத்த நீ உருக்கள் பூதரூபமென்றுகூறின் பூதங்களொன்றோடொன்று பகையாதலால் அவைதம்மிற்கூடி யுருவாகாது,—உதிர சுக்கில மென்னின் மரத்தின் உளு கல்லினிடமாகத் தவளை உருவந்தவாறு இயம்பாய் - சுக்கிலசுரோணிதங்கள்கூடி உருவாமென்றுநீகூறின், மரமிடமாகத்தோன்றுமுளுவுங் கல்லினிடமாகத்தோன்றுந் தவளையும் உருப்பெற்றதற்குச் சுக்கிலசுரோணிதங்கள் கூடிவந்தவாறுசொல்லாய்,—இருவினை காணெனின் வினைகள் இரண்டு உருவாய் நிற்கும் - புண்ணியபாவங்கடாமே உருவமாமென்றுகூறிற் புண்ணியம் பாவ மிரண்டுந் தம்மிற்கூடி யோருருவந்திரண்டதாக வேண்டும்; அதுகூடாது.—திடமாக அன்னம் உருவெனின் உண்ண உண்ணச் சென்று வளரும் காயம் தேயும் - நிச்சயமாகவே அன்னசாரமேயுருவாமென்றுகூறிற் போஜனத்தால்வளருங்காயம் விருத்தாவத்தையில்வளராது தேய்தல்காண்டும். அதனால் அன்னசாரமுமன்று,—உணர்வென்னின் மடவோனே அருவுணர்வு இங்கு அசேதனமாய் உருவாய் வளராது - உணர்வுதானே யுருவமெடுத்துக்கொண்டதென்றுகூறின் அறியாதவனே அருவமாயிருக்குமறிவு அசேதநமாயிருக்குமுருவமா யிவ்விடத்து வளராது,—வரும் இல்லாதெனின் மலர்வான் வருமே - இல்லாததொன்று உருவமாய் வருமென்று கூறின் இல்லையாயதில்லையேயாம்; ஆகையால், நீ கூறிய இது ஆகாயப்பூப்போலப் பொய்யாகவரும் என்க. (கரு)

என்றுமிலா தொன்றின்றாய் வருமுருவம் வித்தி னெழுமரம்போ லெனின்வித்தி னுண்டாய்நின் றெழுங்கா, ணின்றதேல் வித்தின்மரங் கண்டதில்லை யென்னி னெற்கமுகாய் நீளாது நெல்லாயே நீறா, மொன்றிலொன் றங்கிலாமையினா லுதியாகா ரணம்பெற் றுதிப்பதுகா ரியமதுவு முள்ள தாகு, மன்றமதிக் கலைபோலக் கந்த மைந்து மருவியுள தெனுமுரையு மறந்தனையோ வின்றே.

(இ-ள்.) என்றுமிலாது ஒன்று இன்றாய் வரும் உருவம் வித்தின் எழு மரம்போலெனின் - யான்கூறிய பொய்யன்று என்றுமில்லாததொன்றுண்டாய்வரும்; அஃதெங்ஙனென்னின், வித்தினிடத்திலே மரந்தோன்றுமா போலவென்று புத்தநீகூறின்,—வித்தின் உண்டாய் நின்று எழுங்காண் - அம்மரம் வித்தினிடத்திலேயுண்டாய்நின்று எழுதலன்றியில்லையாய் நின்று

எழாதுகாண்,—நின்றதேல் வித்தின் மரம் கண்டதில்லை என்னின் நெல்கமு காய் நீளாது நெல்லாயே நீளும் - அப்படி வித்திலே மரமுண்டாமாயின் வித் தினிடத்திலே காணவேண்டும். வித்தினிடத்தின் மரங்கண்டதில்லையென்று கூறின் நெல்வித்துக்கமுகாய்வளராது நெல்லேயாம்,—ஒன்றில் ஒன்று அங்கு இலாமையினால் உதியா - ஒருமரத்திலொருமரமுண்டாகா தாகையால் இல்லாததுண்டாகாது,—காரணம் பெற்று உதிப்பது காரியமதுவும் உள்ள தாகும்-வித்துக்காரணமாக மரங்காரியப்படுதல் உள்ளதாம்,—மன்ற மதிக் கலைபோலக் கந்தம் ஐந்தும் மருவி உளதெனும் உரையும் மறந்தனையோ இன்றே - நிச்சயமாக மதியுங்கலையும்போலக் கந்தங்களைந்தும் பொருந்தி உருவுண்டாமென்னுஞ் சொல்லும் இன்றுமறந்தாயோ என்க.

மதியுங்கலையுமென்ற வும்மைதொக்கது. அதுகாரணத்திலேகாரியந்தோன்று மென்றறிவித்தது. உதியாதென்றது - ஈறுகெட்டது. (கசு)

உருவமெலாம் பூதவுபா தாய சுத்தாட் டகவுருவ மென்னினீ யுலவத் துக்கு, மருவுமன லோடுநீர் மண்கந்த மிரதம் வன்னமிலை வன்னிக்கு வளி நீர்மண் வாசம், தருமிரத மிலைநீர்க்குத் தழல்கால்மண் கந்தந் தானில்லைத் தலத்தினுக்குச் சலமனல்கால் கூடி, வருவதிலை யிந்திரிய விடயமான மாபூ தங் களுமறியாய் மதிகெட் டாயே.

(இ-ள்.) உருவமெலாம் பூத உபாதாய சுத்தாட்டக உருவமென்னின் நீ - புத்த நீ சுத்த உருவமெல்லாம் பூதவுருநான்கும் உபாதானவுருநான்கு மாகிய வெட்டுங்கூடியே வருமென்றுகூறின்,—உலவத்துக்கு மருவும் அன லோடு நீர் மண் கந்தம் இரதம் வன்னம் இலை - அவையெட்டும் ஒன்றோ டொன்றுகூடாது. அஃதெங்ஙனமென்னில், காற்றுக்குத் தன்குணமாகிய சலித்தலொழிந்து அனலும் நீரும் மண்ணும் என்பவற்றின் குணமாகிய உருவம் இரதங் கந்தங்கள் கூடுவதில்லையாம்,—வன்னிக்கு வளி நீர் மண் வாசம் தரும் இரதம் இலை - அக்கினிக்குத் தன்குணமாகிய வுருவமொழிந்து வாயுவும் நீரும் மண்ணும் என்பவற்றின் குணமாகிய பரிசரசகந்தங்கள் கூடு வதில்லையாம்,—நீர்க்குத் தழல் கால் மண் கந்தந் தான் இல்லை-அப்புவுக்குத் தன்குணமாகிய விரதமொழிந்து அக்கினியும் வாயுவும் பிரிதிவும் என்பவ ற்றின் குணமாகிய ரூபசலகந்தங்கள் கூடுவதில்லையாம்,—தலத்தினுக்குச் சலம் அனல் கால் கூடி வருவது இலை-பூமிக்குத் தன்குணமாகிய கந்தமொ ழிந்து ஜலமும் அக்கினியும் வாயுவும் என்பவற்றின்குணமாகிய விரதமுமு ருவமுஞ்சலித்தலுங்கூடுவதில்லையாம். ஆகையால் இவையெட்டுங் கூடியுரு வாகாது,—இந்திரிய விடயமான மாபூதங்களும் அறியாய் மதிகெட்டாயே- அந்தமகா பூதமுங் குணமும் இந்திரியவிடயங்களென்பதும் அறியாய் புத்தியில்லாதாய் என்க.

நீருக்குப்பரிசமில்லையென்பது - நெருப்புக்கேபரிசமென்று நீ சொன்னநூ லிலே கண்டுகொள்க. கூடிவருவது - கடைநிலைத்தீபகம். (கஎ)

மருத்தெண்ணெய் தனின்மருந்து நின்றாற் போல மறைந்தெட்டுஞ் சூக்குமமாய் பருவு மென்னிற், றிருத்துமவன் மருந்தெண்ணெய் சேர்த் தாற் போலச் சேர்ப்பவன்வே றுண்டெல்லா வுருவு மெட்டும், பொருத்தி யதே லொருதன்மை யாம்பொருள்க ளொன்றின் குணமொன்றிற் புகாத

றைகை பொருளறியாய் பூத வுருப்பொருள்வே றுபாதாயப் பொருள் வேறு காட்டா யுபாதாயம பூதகுணங் குணகுணியா முலகே.

(இ-ள்.) மருத்தெண்ணெய் தனின் மருந்து நின்றாற்போல மறைந்து எட்டுஞ் சூக்குமமாய் மருவுமென்னின் - மருத்தெண்ணெயின் மருந்துதோன்றாமற் கரந்துநின்று நன்மையைத்தருமாபோல, பூதவுருவுமுபாதாயவுருவுமாகிய வெண்வகையுந் தூலங்கெட்டுச் சூக்குமவுருப்பெற்று நிற்குமென்று புத்தநீகூறின்,—திருத்துமவன் மருந்து எண்ணெய் சேர்த்தாற் போலச் சேர்ப்பவன் வேறு உண்டு - வியாதியைத்தீர்க்கு மருத்துவன் அவ்வெண்ணெயையும் மருந்தையுஞ் சேர்த்தாற்போல, பூதவுருவையும் உபாதாயவுருவையுங்கூட்டி உண்டாக்குவான் ஒரு கர்த்தாவேண்டும்,—எல்லா உருவும் எட்டும் பொருத்தியதேல் ஒருதன்மையாம் பொருள்கள் - எல்லா வுருவத்தையும் இவ்வெட்டுமே யுண்டாக்குகின்றனவென்று கூறின் அப்பொருள்களெல்லாம் ஒருதன்மைப்படவேண்டும்,—ஒன்றின்குணம் ஒன்றிற்புகாது அறைகைபொருள் அறியாய்-அவ்வுருக்களின்குணங்களில் ஒன்றின்குணம் ஒன்றிற்கூடாது; ஆகையாற் சொல்லுகைக்குப்பொருள் அறியாய்,—பூதவுருப்பொருள் வேறு உபாதாயப்பொருள் வேறு காட்டாய் உபாதாயம் பூதகுணம் குணகுணியாம் உலகே-அன்றிப் பூதவுருப்பொருளையும் உபாதாயவுருப்பொருளையும் வேறுகாட்டவல்லையாயிற் காட்டாய்; உபாதாயமாவது பூதகுணமாம்; அந்தக்குணத்தையுடையது பிரபஞ்சமாம் என்க. ()

அழிந்துணர்வை யுணர்வுதரு மெனினழிந்த தாக்கா தாமுணர்விற் பொருள்வினைக ளணையா வாகு, மழிந்திடுவ தாக்கியெனின் முன்னொருகாலத்தே யறிவிரண்டு நில்லாதங் கறக்கே டின்றி, யழிந்துணர்வை யுணர்வு தரு மெ[illegible]ித்தா நித்த மடையுமுணர் வுக்கநித்த மாயே செல்லா, தழிந் தெரு[illegible] பாக்குவது போலாக்கு மென்னி னும்பொருள்வே றழிந்துசத்தி கிடந்தாக்கு மவையே.

(இ-ள்.) அழிந்து உணர்வை உணர்வு தருமெனின் - தோன்றியவறிவு கெட்டுப் பின்னோரறிவையுண்டாக்குமென்று புத்தநீகூறின்,—அழிந்தது ஆக்காதாம் உணர்விற்பொருள் வினைகள் அணையா வாகும் - கெட்டவறிவு மற்றோரறிவையுண்டாக்கமாட்டாது; அன்றியும் ஆகிறவறிவும் முன்னறிவு கெடுதலாற் கெட்டவறிவும் அறியும்பொருளையுஞ் செய்யும்வினையையும் அறிந்துஞ்செய்யவுமாட்டாது,—அழிந்திடுவது ஆக்கியெனின் முன் ஒருகாலத்தே அறிவு இரண்டும் நில்லாது-முன்னையறிவு பின்னையறிவையுண்டாக்கிக் கெடுமென்றுகூறின் ஒருகாலத்தே இரண்டறிவு தோன்றிநில்லாது,—அங்கு அறக்கேடு இன்றி அழிந்து உணர்வை உணர்வு தருமெனின் நித்தாநித்தம் அடையும் உணர்வுக்கு அநித்தமாயே செல்லாது - அவ்விடத்து முன் அறிவு முற்றக்கெடாது சிறிதுநின்று மேலோரறிவையுண்டாக்கிப் பின்னிறந்திடுமென்று நீகூறின், உணர்வுக்குச்சுபாவம் நித்தாநித்தமாதலால் உணர்வு அநித்தமென்றுகூறியது பொருந்தாதாம்,—அழிந்து எருவை ஆக்குவதுபோல் ஆக்குமென்னின் ஆம்பொருள் வேறு அழிந்து சத்தி கிடந்து ஆக்கும் அவையே - [illegible]இருக்கிடும் எருவும் வைக்கோலுந் தாங்கெட்டுப்

பயிருக்கு நன்மைகொடுப்பதுபோல, முன்னையறிவுகெட்டுப் பின்னையறிவையு முண்டாக்குமென்றுகூறின், அவ்வெருவும்வைக்கோலுந் தூலங்கெட்டுச் சூக்குமமாகிய வீரியங்கிடந்து பயிர்க்கு நன்மைகொடுக்கும்; அதுபோல, உன்னறிவுசேரக்கெடாதென்ன வேண்டுமாகையால், நீ கூறியவதற்கு நித்தியமில்லையென்னவேண்டா என்க.

ஆம்பொருள்வேறென்றதனால் எருவால் நன்மைபெறும் பயிர்வேறானாற்போல அறிவாலாம்பொருளும் வேறென்க. (கக)

கேடிலாச் சந்தானத் தேபலிக்கு மென்று கிளக்குநீ சந்தான நித்த மாகு, மோடுநீர் போலழிந்தா முணர்வொழுக்க மென்னி னொழுகுநீ ரிட்ட தெல்லா முடன்கழிதல் போலத், தேடுபொருள் சீலம்பா வனைகுறிவிஞ் ஞானஞ் சென்றவுணர் வோடேகு நின்றுணர்வி னேயா, நீடுநீர் முன்னொ ழுகிக் கெடாதுநிறைந் தோடு நிகழுணர்வுங் கேடின்றி நிறைந்துசெலுங் காணே.

(இ-ள்.) கேடிலாச் சந்தானத்தே பலிக்குமென்று கிளக்கும் நீ சந்தானம் நித்தமாகும் - உணர்வுகெடாத தொடர்ச்சியாலே உணர்வுதோன்றுமென்று புத்தநீகூறின் அந்தத்தொடர்ச்சிதான் நித்தமாகவேண்டும்,—ஓடு நீர்போல் அழிந்து ஆம் உணர்வு ஒழுக்கமென்னின் - ஆற்றின்கண்ணோடு நீர் முன்சென்றது வற்றப் பின்சென்றது அவ்வெல்லையினிறந்துபோமாறு போல,முன்னையறிவுகெடப் பின்னையுண்டாகியவறிவு மிக்கவறிவாமென்று நீகூறின்,—ஒழுகுநீர் இட்டது எல்லாம் உடன்கழிதல் போலத் தேடுபொருள் சீலம் பாவனை குறி விஞ்ஞானஞ் சென்ற உணர்வோடு ஏகும் நின்று உணர்வின் ஏயா-ஓடுகின்ற நீரின்கண் உண்டானவையெல்லாம் அந்நீரோடு கூடக்கழிந்துபோகப் பின்னர்ச்செல்லுநீர் அவற்றைக்கூடமாட்டா; அதுபோல, முந்தையறிவாற்றேடும் பொருள்கள் சீலம் பாவனை குறி விஞ்ஞானம் இவையெல்லாம் முன்னையறிவோடுகெடுமாகையாற் பின்னையுண்டாமறிவிற் கூடமாட்டா,—நீடு நீர் முன் ஒழுகிக்கெடாது நிறைந்து ஓடும் நிகழ் உணர்வுங் கேடு இன்றி நிறைந்து செலுங்காணே - விடாமலோடுநீர் முன்னொழுகிய தன்மைகெடாமல் நிறைந்தோடியவாறுபோல,அறிவிடையறாமற்றோன்றுமென்று நீகூறின், அப்படியுண்டாமறிவு அநித்தியமன்று; நித்தமாய்நிறைவுபெற்றுச் செல்லவேண்டும் என்க. (உ0)

சந்தானங் காரணமோ காரியமோ விரண்டின் றன்மையதோ காரணமுங் காரியமு நித்தம், வந்தாருஞ் சந்தானத் தொடர்ச்சியெனி னதற்கும் வருநித்தந் தோற்றக்கே டடைதலின்மற் றொன்றே, லேந்தான கந்தங்க ளன்றாய் நித்த மடைபொருளா மறிவுமறி வடைவு மின்றிச், சிந்தாமுன் பின்னாகிப் பின்முன் னாகித் திரிந்துவருந் திரிவறிந்து தேரா தேரோ.

(இ-ள்.) சந்தானம் காரணமோ காரியமோ இரண்டின் தன்மையதோ-நீ தொடர்ச்சியென்றது காரணமாய்நின்றதோ, காரியமாய்நின்றதோ, காரணகாரியமாய்நின்றதோ,—காரணமுங் காரியமும் நித்தம்-காரணமென்னில் என்றுங் காரணப்பட்டுவருகையால் நித்தமாம்; காரியமென்னின் என்றுங்காரியப்பட்டுவருகையால் அதுவும் நித்தமாம்.—வந்து ஆருஞ் சந்தானத்

தொடர்ச்சியெனின் அதற்கும் வரும் நித்தம் தோற்றக்கேடு அடைதலின்- காரணகாரியமாகிய தொடர்ச்சி மீளவந்துபொருந்துமென்று நீகூறின் அப் படிக்காரணகாரியப்படுதலுமாய்த் தோன்றுதலுங்கெடுதலுமாய்த் தொன் றுதொட்டுவருதலால் அதற்கும் நித்தியத்துவமுண்டாம்,—மற்று ஒன் றேல் ஐந்தான கந்தங்கள் அன்றாய் நித்தம் அடைபொருளாம் - மற்றோ ரறிவென்னில் அப்படிக்காரணகாரியப்படுதற்கு இந்திரியங்களோ டொரு பொருளாகாமல் அவ்வறிவு வேறொருபொருளாகலானும் இந்திரியங்கள் அவ்வறிவுக்கு மூலமல்லவாகையானும் அவ்வறிவு நித்தியமாக அடையும் பொருளாம். அங்ஙனமாயின்,—அறிவும் அறிவு அடைவும் இன்றிச் சிந்தா முன்பின்னாகிப் பின்முன்னாகித் திரிந்துவரும் திரிவு அறிந்து தேரா தேமோ- ஆன்மாவும் ஆன்மாவால் அடையும்பொருளுமாக அறிதலின்றி முறையே கெட்டு இந்திரியங்களறிவாகவும் அறிவு இந்திரியங்களாகவும் முறைபிறழ் ந்துவரும்; இவற்றின்றிரிவையறிந்து விசாரியாய்; புத்தனே என்க. (உக)

ஒருகாலத் துணர்வுகெட்டா மெனினுதிப்பீ றொன்று மொருபொரு ளின் றிரிவுனக்குக் காலமானல், வருகால நிகழ்காலங் கழிகால மென்று வழங்குவதென் பொருள்வரவு நிலைகழிவா லின்றேற், றிரிகாலஞ் செப்பி டாய் பொருட்செயலு மொன்றாஞ் செயன்மூன்று மொருகணத்தே சேரு மென்னிற், றருகால மூன்றுகுந் தாமரைநூ றிதழிற் றள்ளூசி யுங்கால மூன்றினையுந் தருமே.

(இ-ள்.) ஒருகாலத்து உணர்வுகெட்டு ஆமெனின் உதிப்பு ஈறு ஒன் றாம் - காலம்பேதப்படாது ஒருகாலத்திலே அறிவுகெடுதலும் உண்டா தலுஞ் செய்யுமென்று புத்தநீகூறின் சங்காரமுஞ் சிருஷ்டியும் ஒரு தொழி லாகவேண்டும்,—ஒருபொருளின் திரிவு உனக்குக் காலமானல் - ஒருபொருளின் திரிவே உனக்குக் காலமென்றுசொல்வையானல்,—வரு காலம் நிகழ்காலம் கழிகாலமென்று வழங்குவது என் - எதிர்காலமெ ன்றும் நிகழ்காலமென்றும் கழிகாலமென்றும் வழங்குவானேன்,—பொ ருள் வரவு நிலை கழிவால் இன்றேல் - அப்படிவழங்கியது பொருள்களா னது வருதலுநிற்றலுங் கழிதலுமாதலாற் காலமில்லையென்றுசொல்லுவை யாயின்,—திரிகாலம் செப்பிடாய் பொருட்செயலும் ஒன்றாம் - மூன்று விதமான காலத்தின் பெயரை நீசொல்வாயல்லை. அங்ஙனங் காலபேதமில் லையாயின் இருதுபேதாதிகளுங் குணபேதாதிகளுமில்லையாய்ப் பொருள் களெல்லாம் ஒருசெயலாகவேண்டும்,—செயல் மூன்றும் ஒருகணத்தே சே ருமென்னில் - அப்படிப்பேதித்த மூன்றுசெயலும் ஒருகணத்திலே சேரு மென்னில்,—தருகாலம் மூன்றுகும் தாமரை நூறு இதழில் தள் ஊசியும் கா லம் மூன்றினையுந் தருமே-அப்படிக்கணத்திலே யுண்டாயதுவுங் காலமூன் றினையுமுடைத்தாம்; அஃதெங்ஙனமென்னில், தாமரையிதழ் நூறடுக்கிற் செலுத்தின வூசியும் இதழ்தோறும்பற்றுகையும் உருவுகையுங் கழிகையு மாய் மூன்றுகாலத்தைத்தருமாதலாற் பொருட்செயலன்று காலமுண்டா மென்றறிவாயாக என்க. (உஉ)

உணர்வுகா ரணமுணர்வுக் கென்னி னித்த முணர்வுக்குண் டாகினின் றுணர்வையுதிப் பியாதிங், குணர்வுசந் தானவிடத் தொழிந்தாற் பின்னை

யுண்டாகா துடலுணர்வுக் குபாதாக மென்னி, னுணர்வுடலி னிடையறு துதிக்கவேண்டு முடலுணர்வின் வினையினா லுணர்வுதிக்கு மென்னி, லுணர்வுவினை யுளதொடுங்கா துணர்வுதருஞ் செய்தி யுணர்வைவினை தரினொருவன் செயல்வினையின் றாமே.

(இ-ள்.) உணர்வு காரணம் உணர்வுக்கென்னின் - அறிவுகாரணமாக மற்றோரறிவுண்டாமென்று புத்தநீகூறின்,—நித்தம் உணர்வுக்கு உண்டாகி நின்று உணர்வை உதிப்பியாது இங்கு - நீயநித்தியமென்று கூறுகையால் அறிவுக்கு நித்தியமுண்டாகி நின்று மற்றோரறிவையுண்டாக்கமாட்டாது. அன்றியும்,—உணர்வு சந்தான இடத்து ஒழிந்தால் பின்னை உண்டாகாது- அவ்வறிவுதான் வருகிறதொடர்ச்சியிலே கெட்டாற் பின்னையறிவுதோன்றாது,—உடல் உணர்வுக்கு உபாதானமென்னின் - உணர்வுக்கு மூலகாரணமாகி நின்று உடலந்தோற்றுவிக்குமென்னில்,—உணர்வு உடலின் இடையறாது உதிக்க வேண்டும்-அவ்வறிவு உடலினுறக்கத்தின் கண்ணும் இடையறாமலுண்டாகவேண்டும்,—உடல் உணர்வின் வினையினால் உணர்வு உதிக்குமென்னில் - உடலுணர்வின் வினையாலே உணர்வுதோற்றுமென்று கூறின்,—உணர்வு வினை உளது ஒடுங்காது - இந்திரியங்கள் எப்பொழுதுங் கன்மத்தையுடைத்தாதலால் அதனாலுண்டாமறிவு அழியப்படாது,—உணர்வு தரும் செய்தி உணர்வை வினை தரின் ஒருவன் செயல்வினை இன்றாமே- அதுவன்றி உணர்வுவினையைத்தருமென்றும் வினை உணர்வைத்தருமென்றும் நீ கூறின் ஒருவர்க்குச்செய்யப்பட்ட கன்மமென்பதன்றே என்க. (உ௩)

வினையுணர்வு தரும்வினையை யுணர்வுதரு மென்றும் விளம்பினீ யுணர்வுபோல் வினையி னுக்கு, நினைவுவரு மொன்றையொன்று நிகழ்த்தி டாபின் னிலையின்மை யானிகழ்த்திக் கெடுதல் செய்யா, கனல்விறகிற் பிறந்ததனைப் பொடிசெய் தாற்போற் கருத்துவினை யிற்றோன்றிக் கழிக்கும்வினை யென்னின், முனமுணர்வு பிறந்தளவே வினைகெடுக்கு முன்பி னுதியாது முகிழ்நெருப்பின் விறகுதியா வாறே.

(இ-ள்.) வினை உணர்வு தரும் வினையை உணர்வு தருமென்றும் விளம்பின் நீ கன்மம் அறிவையுண்டாக்குமென்றுங் கன்மத்தை அறிவுண்டாக்குமென்றும் புத்தநீகூறின்,—உணர்வுபோல் வினையினுக்கு நினைவுவரும் - அறிவுக்கு நினைவுண்டானாற்போலக் கன்மத்துக்கு நினைவுண்டாகவேண்டும்,—ஒன்றை ஒன்று நிகழ்த்திடாபின் - அப்படிக்கன்மத்துக் கறிவில்லையாகையால் ஒன்றையொன்றுண்டாக்க மாட்டாது,—நிலை யின்மையான் நிகழ்த்திக் கெடுதல் செய்யா - அவை அநித்தியமென்று சொல்லுகையால் ஒன்றை யொன்றுண்டாக்கிக் கெடமாட்டாது,—கனல் விறகில் பிறந்து அதனைப் பொடி செய்தாற்போல் கருத்து வினையில் தோன்றிக் கழிக்கும் வினையென்னின் - காட்டத்திலே அக்கினிதோன்றி அந்தக்காட்டத்தைத்தகித்தாற்போல, அறிவு கன்மத்திலேபிறந்து மீளவும் அக்கன்மத்தையே கெடுக்குமென்று நீகூறின்,—முனம் உணர்வு பிறந்த அளவே வினை கெடுக்கும் முன்பின் உதியாது முகிழ் நெருப்பின் விறகு உதியா வாறே - முன்பிறந்தவறிவு பிறந்தபோதே கன்மத்தைக்கெடுக்கும். பின்னைக்

கன்மமறிவையுதிப்பிக்கமாட்டாது. அறிவும் பின்னர்க்கன்மத்தை யுதிப்பிக்கமாட்டாது. அஃதென்போல வென்னில், காட்டத்திலுண்டாமக்நி அக்காட்டத்தைச்சுட்டான் மீண்டொருகாட்டத்தை யுண்டாக்கமாட்டாதுபோல் என்க. (உ௪)

பேயுநர கருஞ்சுரரும் பிரமருமா யுலகிற் பிதாமாதா வாதார மொன்று மின்றிக், காயமொடு தாம்வருவ ரென்றுரைப்பை காயங் காரியமாய் வருதலினாற் காரணமுண் டாகு, மாயுமுணர் வோசுத்த வட்டகமோ கன்மம் வடித்ததோ வடிவுசெய்து வைத்தாரு முண்டோ, வாயுமுணர் வுண்டாகி லறைந்திடா யுலகுக் காதிதுணை நிமித்தகா ரணமறிவ தறிவே.

(இ-ள்.) பேயும் நரகரும் சுரரும் பிரமருமாய் உலகில் பிதா மாதா ஆதாரம் ஒன்றும் இன்றிக் காயமொடுதாம் வருவரென்று உரைப்பை - பேயென்றும் நரகரென்றுஞ் சுரரென்றும் பிரமாமுதலாயினரென்றுஞ் சொல்லப்படுவார் உலகின் மாதா பிதாக்களுமின்றி இருப்புமின்றிக் காயத்தோடுகூடின வடிவமுடையராய் வருவரென்று புத்தநீகூறுவை,—காயம் காரியமாய் வருதலினால் காரணம் உண்டாகும் - அக்காயங்காரியப்பட்டு வருகையினால் ஒருகாரணத்தானன்றி யுண்டாகாது. அக்காரணகாரியங்களை அறியாய் அறிவையாகில்,—ஆயும் உணர்வோ சுத்த அட்டகமோ கன்மம் வடித்ததோ வடிவுசெய்து வைத்தாருமுண்டோ ஆயும் உணர்வு உண்டாகில் அறைந்திடாய் - அக்காயங்கள் நீயாராய்ந்தவுணர்வுதானோ, சுத்தாட்டகமோ, அன்றிக்கன்மமுண்டாக்கியதோ, அன்றி அவ்வடிவையுண்டாக்கினரொருவருண்டோ, உனக்காராயத்தக்க அறிவுண்டாயிற் சொல்லாய்,—உலகுக்கு ஆதிதுணை நிமித்த காரணம் அறிவது அறிவே - அவற்றை உண்மையாக வறியுங்காலத்துப் பிரபஞ்சவுற்பத்திக்கு ஆதிகாரணமென்றுந் துணைக்காரணமென்றும் நிமித்தகாரணமென்றும் உண்டாம் அதனை யறிவதுகாண் அறிவு என்க. (உ௫)

உருவாதி கந்தங்க ளைந்துங் கூடி யொருவன்வே றொருவனிலை யென்றுரைக்கும் புத்தா, வுருவாதி யைந்தினையு முணர்பவன்வே றென்ன வுணரும்விஞ் ஞானமென்றா யஞ்ஞான முணர்ந்தவரா, ருருவாதி பொருள்காட்டித் தனைக்காட்டுஞ் சுடர்போ லுணர்வுபிறி தினையுணர்த்தித் தனையுணர்த்து மென்னி, னுருவாதி பொருளினையுஞ் சுடரினையுங் காணு முலோசனம்போ லுணர்வுபொரு ளுணர்வதுவே றுண்டே.

(இ-ள்.) உரு ஆதி கந்தங்கள் ஐந்துங்கூடி ஒருவன் வேறு ஒருவன் இலை யென்று உரைக்கும் புத்தா - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்கின்ற கந்தங்களைந்துங்கூடி ஆன்மாவன்றித் தனித்தோரான்மாவில்லையென்று கூறும்புத்தா,—உரு ஆதி ஐந்தினையும் உணர்பவன் வேறென்ன உணரும் விஞ்ஞான மென்றாய் - அவ்வுருவமுதலிய கந்தங்களைந்தையும் அறிவானொருவனுளனென்று நாங்கூறுவதன்று அவற்றை யறிவது சித்தமேயென்று கூறினாய்,—அஞ்ஞானம் உணர்ந்தவர் ஆர் - அந்தச் சித்தத்தை யுணர்ந்தவர் ஆரென்று வினாயவிடத்து,—உரு ஆதி பொருள்காட்டித் தனைக்காட்டுஞ் சுடர்போல் உணர்வு பிறிதினைஉணர்த்தித்

தனை உணர்த்தும் என்னின் - உருவங்கண்முதலாய பொருள்களையுங்காட்டித் தன்னையுங்காட்டும் விளக்குப்போல, சித்தமும் பிறிதுண்டாகியவற்றையுமறிவித்துத் தன்னையுமறிவித்து நிற்குமென்று கூறின்,—உரு ஆதி பொருளினையும் சுடரினையும் காணும் உலோசனம்போல்உணர்வு பொருள் உணர்வது வேறு உண்டே-உருவங்கள்முதலாகிய பொருள்களையும் அவற்றைக்காட்டி நிற்கும் விளக்கையுங் கண்டுநிற்குங்கண்போல,சித்தத்தையும் விடயத்தாலறியுமிந்திரியங்களையும் உணர்வானொருவன் வேறுண்டென்று அறிவாயாக என்க. (உசு)

காயமுட னிந்திரிய மனநா னென்று கதறுவாய் காயமுறக் கத்தறியாவாகும், வாயில்களு மப்படியி லொன்றையொன்றங் கறியா மனங்கணத்திற் கெடுங்கால மூன்றின்வர வறியா, தாயுமறி வாகியுடல் பொறிமனமூன்றறிந்தாங் கவைநானல் லேனென்று மறிந்துமனத் தாலே,யேயுமொரு பொருள்கருதி யிந்திரியப் பாலே யிசைவித்துக் காயத்தா லியற்றுவதான் மாவே.

(இ-ள்.) காயமுடன் இந்திரியம் மனம் நானென்று கதறுவாய் - உடம்புடன் இந்திரியங்களும் மனமுமே ஆன்மா, வேறே ஆன்மா வென்றொன்றில்லையென்று கூப்பிடும் புத்தா,—காயம் உறக்கத்து அறியாவாகும் - அக்காயம் உறக்கத்தினிடத்தறியாமையையுடைத்தாம்,—வாயில்களும் அப்படியில் ஒன்றை ஒன்று அங்கு அறியா - இந்திரியங்களும் அக்காயம்போல் உறக்கத்திலும் வியாத்தியிலும் ஒன்றறிந்த விடயத்தை யொன்றறியமாட்டா,—மனம் கணத்தில் கெடும் காலம் மூன்றின் வரவு அறியாது - மனமுங் கணத்திற்கெடும் காலமூன்றின்செய்தியையுமறியமாட்டாது; ஆகையால், இவை ஆன்மாவல்ல,—ஆயும் அறிவாகி உடல் பொறி மனம் மூன்று அறிந்து ஆங்குஅவைநான் அல்லேனென்றும் அறிந்தும் மனத்தாலே ஏயும் ஒரு பொருள் கருதி இந்திரியப்பாலே இசைவித்துக் காயத்தால் இயற்றுவது ஆன்மாவே-உடல்முதலாயின மூன்றினையும் ஆராயத்தக்கவறிவாய் அவற்றின்குணங்களை யறிந்தும் அவற்றை என்னுடல் என்பொறி என்மனமென்று சொல்லியும் அவை நானல்லே னென்றறிந்தும் மனத்தாற் பொருந்தத்தக்கதொரு பொருளைக்கருதி இந்திரியங்களின்பகுதி காட்டக்கண்டு காயத்தாலே தொழிலைச்செய்வது ஆன்மாவென்று அறிவாயாக என்க.

காலமூன்றாவன—பூத பௌஷ்ய வர்த்தமானமாம். (உஎ)

கழிந்தவுணர் வேபின்னு மியானறிந்தே னென்று கருதலினவ் வுணர்வறிந்த தென்னின் முன்னே, மொழிந்தமொழி நான்மொழிந்தே னென்றால் வாய்தான் மொழிந்ததோ மொழிந்தவன்வே றானாற் போல, வெழுந்தவுணர் வெல்லாங்கொண் டியானறிந்தே னென்ற தெதுவதுகா னுயிருணர்வால் வாக்கான் மற்றை, யொழிந்தகா யந்தன்னா லுணர்ந்துரைத்துச் செய்தங் குணர்வினுக்கு மாதார மாய்நிற்கு முயிரே.

(இ-ள்.) கழிந்த உணர்வே பின்னும் யான் அறிந்தேனென்று கருதலின் அவ்வுணர்வு அறிந்ததென்னின் - முன்னொருபொருளை யடுத்துக்கெட்டவறிவுதானே பின்புண்டாகியவற்றை யான் அறிந்தேனென்று விசாரிக்கையாலே அவ்வறிவேகாணு மறிவதன்றி ஆன்மா வென்றொன்றில்லை

யென்று புத்தநீகூறின்,—முன்னே மொழிந்தமொழி நான்மொழிந்தேனென்றால் வாய்தான்மொழிந்ததோ மொழிந்தவன் வேறுளதுபோல-முன்னே சொன்ன சொல்லும் நான்சொன்னேனென்று சொல்லுதல் வாயாற்பிறத்தலால் வாய்சொன்னதோ அன்றே, அச்சொல்லைச்சொன்னவன் ஒருவனுண்டானாற்போல,—எழுந்த உணர்வெல்லாங் கொண்டு யான் அறிந்தேனென்றது எது அதுகாண் உயிர் - உண்டாய அறிவுகளெல்லாவற்றையுங்கொண்டறிந்து அதனை யான் அறிந்தேனென்றது எது அதுகாண் ஆன்மா,—உணர்வால் வாக்கால் மற்றை ஒழிந்த காயந்தன்னால் உணர்ந்து உரைத்துச் செய்து அங்கு உணர்வினுக்கும் ஆதாரமாய் நிற்கும் உயிரோ - மனத்தாலும் வாக்காலும் ஒழிந்ததாகச்சொல்லப்பட்ட காயத்தாலும் அறிந்துஞ்சொல்லியுந் தொழில்செய்தும் அம்மனத்திற்குப் பற்றுக்கோடாய்நிற்கும் ஆன்மா என்க.

ஈண்டுணர்வென்றது - மனத்தை. (உஅ)

இந்திரிய வீதியெழுஞ் சித்த நெஞ்சத் தெழுஞ்சித்த மென்றிரண்டு மொன்றுகெட்டே யொன்று, வந்தெழுவ தெனிற்கனவிற் கண்டபடி நனவின் வாய்திறவார் நனவுகண்ட படிகனவிற் காணா, ரந்தனுரு வன்னங்களறிந்திடா னின்றே லறிகனவு மிறந்துணர்வு மழிந்துறக்க மடைந்தா, லுந்துவதோர் சந்தான மில்லையுணர் வுதிப்ப வுயிர்கனவு நனவினையு முணருங் காணே.

(இ-ள்.) இந்திரியவீதி எழுஞ்சித்தம் நெஞ்சத்து எழுஞ்சித்தமென்று இரண்டும் ஒன்று கெட்டே ஒன்றுவந்து எழுவதெனில் - இந்திரியவியாபாரத்தால் உண்டாமறிவென்றும் மனத்திலுண்டாமறிவென்றும் இரண்டாய் ஒன்றுகெட்டொன்று தோன்றுமென்று புத்தநீகூறின்,—கனவிற் கண்டபடி நனவின் வாய்திறவார் நனவு கண்டபடி கனவிற் காணார் - கனவிற்கண்டதெல்லாம் நனவிற் சொல்லமாட்டார்; நனவிற்கண்டதெல்லாங் கனவிற் சொல்லமாட்டார். அன்றியும்,—அந்தன் உரு வன்னங்கள் அறிந்திடான் - பிறவிக்குருடன் பிறர்வடிவத்தையும் வன்னத்தையும் அறியமாட்டான்,—இன்றேல் - இந்திரியக்குறைவாலே அறிவுதோன்றிற்றில்லையென்று நீ கூறின்,—அறிகனவும் இறந்து உணர்வும் அழிந்து உறக்கம் அடைந்தால் உந்துவதோர் சந்தானம் இல்லை - அறியத்தக்ககனவுமழிந்து உணர்வுமழிந்து உறக்கத்தையுமடைந்தால் உண்டாகத்தக்க தொடர்ச்சியில்லை,—உணர்வு உதிப்ப உயிர் கனவும் நனவினையும் உணருங்காணே - ஆன்மாக்களுக்கு இச்சா ஞானக்கிரியைகளுண்டாகக் கனவினையும் நனவினையு மறியாநிற்கும் என்க.

இன்றேலெனவே - இந்திரியங்களறிவிக்குமென்பது புலப்பட்டது. வீதி - நேரே செல்லுதல். அந்தன் - அந்தகன். (உகூ)

ஒருகாலத் தோரிடத்தி லோருணர்வேற் செவிதானுன்றுணரா திருசெவியு முணரு மோசை, யொருகாலத் திருகண்ணு மிருசெவியு மனமு மொருவனைக்கண் டவனுரைகேட் டுணர்ந்திடுமைம் பொறியு, மொருகாலு முணராவுள் ளுணர்வின்றிப் பொறிக ளொன்றென்று வுணர்வதுள்ளுணர் வைந்து முணரா, வொருகாலும் பொறிவிகற்பித் துணராவுள் ளுணர்வுக்குள்ளதுகாண் விகற்பமிரண் டும்முணர்வ துயிரோ.

(இ-ள்.) ஒருகாலத்து ஓரிடத்தில் ஒருணர்வேல்-ஒருகாலத்திலே ஒருபொறியிடத்திலே ஒருணர்வாகவறியுமென்று புத்தநீகூறினுய். அப்படியாயின்,—செவிதான் ஒன்று உணராது இருசெவியும் உணரும் ஓசை - இரண்டுசெவியுமறியுமோசையை ஒருசெவியறியமாட்டாது; இரண்டுசெவியாலும் அறியவேண்டும். அஃதன்றியும்,—ஒருகாலத்து இருகண்ணும் இருசெவியும் மனமும் ஒருவனைக்கண்டு அவன் உரைகேட்டு உணர்ந்திடும் - ஒருகாலத்தே இரண்டுகண்ணும் இரண்டுசெவியும் மனமுங்கூடி ஒருவனைக் கண்டு அவன்வார்த்தைகேட்டு அதனையறியாநிற்கும்.—ஐம்பொறியும் ஒருகாலும் உணரா உள்ளுணர்வு இன்றி - ஐம்பொறிகளும் மனங்கூடாமல் தனித்தொருக்காலுமறியமாட்டா.—பொறிகள் ஒன்றொன்று உணர்வது - பொறிகளோரோவொன்றாகத் தாமறியும்விஷயத்தை யறியும்அத்தனையே.—உள்ளுணர்வு ஐந்தும் உணரா - அம்மனமும் ஏககாலத்து ஐம்பொறியின்விஷயவறிவுகளைந்துங்கூடி யறியமாட்டா. அதுவுமன்றி;—ஒருகாலும் பொறிவிகற்பித்து உணரா - பொறிகள் ஒருகாலுந் தாமறியுமறிவன்றி விகற்பித்தறியமாட்டா.—உள்ளுணர்வுக்கு உள்ளதுகாண் விகற்பம் - அந்தப்பொறிகளுடனே கூடிநின்று விகற்பித்தறிவது மனத்துக்குள்ள குணங்காண்,—இரண்டும் உணர்வது உயிரே - இப்பொறிகளையு மனத்தையுங்கொண்டறிவது ஆன்மாவாம் என்க. (௩௰)

அருவுணர்வு மாயாறு மாறி மாறி யங்கங்கே தோன்றியிடி னகத்துநிலை யின்றி, யுருவினொடு பாலதரு ணவிருத்தா வத்தை யுண்டாகா துறக்கத்தி னுடறட்ட வழைப்ப, வருவதுணர் வெங்கிருந்து நெஞ்சிலிருந்தென்னில் வாயில்வினை யறிந்தெழுப்ப வாயுவறி யாதாந், திரியொழிய விடிஞ்சிறொடத்தீபமெழா வடக்கஞ்சென்றபொழு தாலுணர்வு நின்றநிலை செப்பே.

(இ-ள்.) அரு உணர்வுமாய் ஆறும் மாறிமாறி அங்கங்கே தோன்றியிடின் அகத்துநிலை இன்றி உருவினொடு பால தருண விருத்தாவத்தை உண்டாகாது - மனமானது அருவுமாய் உணர்வுமாய்ப் பொறிகளைந்தோடுங்கூடி ஆறுவிதமாய் மாறிமாறித் தோன்றியிடுவதென்று புத்தநீகூறின், மனம் அருவமாகையால் உருவினிலையுடையதுமன்றாய்க் காயத்தோடுகூடிப் பாலதருணவிருத்தாவத்தையு முண்டாகாதாதல்வேண்டும். அஃதன்றியும்,—உறக்கத்தின் உடல் தட்ட அழைப்ப வருவது உணர்வு எங்கிருந்து நெஞ்சிலிருந் தென்னில் - அவத்தைப்பட்ட விடத்து உடலிற்றட்டவும் அழைப்பவும் அறிந்து வருமறிவு எவ்விடத்திருந்தென்று சொல்லாய்; நெஞ்சிலிருந்தென்று நீகூறின்,—வாயில் வினை அறிந்து எழுப்ப ஆயு அறியாதாம் - சத்தாதிவிடயங்களிலே செல்லுந்தொழிலையறிந்து செலுத்தமனமறியாதாம்; அஃதென்போலென்னில்,—திரி ஒழிய இடிஞ்சில் தொடத் தீபம் எழா - திரியைப்பற்றி நின்றவொளி அத்திரிமாய்ந்தால் உடன்மாய்தலன்றி இடிஞ்சிலைப்பற்றித் தோன்றாதாகையால்,—அடக்கம் சென்ற பொழுது ஆல் உணர்வு நின்றநிலை செப்பே - உணர்வுக்கு மூர்ச்சைவந்த பொழுது அறிவு நின்றநிலை சொல்வாயாக என்க.

ஆயு - மனம். உரு - தேகம். ஆல் - அசை. இடிஞ்சில் - அகல். (௩௧)

இச்சைவெறுப் பியற்றலின்பத் துன்ப ஞான மிவையணுவின் குறி யாகு மிவற்றி லிச்சை, நச்சிநுகர்ந் தொருபழத்தி னினங்கண்டு முன்பு நா னுகர்ந்த கனியினின மென்று நச்சல் பின்பு, மெச்சவெறுப் பாதிகளு மிப் படியே யாகு மிவைமுன்பும் பின்புமுணர்ந் திடுத லாலே, நிச்சயகர்த் தா வொருவ னுளனென்று நல்லோர் நிறுத்திடுவர் வெறுத்திடுவர் நின்னுடைய பொருளே.

(இ-ள்.) இச்சை வெறுப்பு இயற்றல் இன்பத் துன்பம் ஞானம் இவை அணுவின் குறியாகும் - ஆசை வெறுத்தல் தொழில்செய்தல் சுகதுக்கப் படுதல் அறிவு இவைமுதலியவெல்லாம் ஆன்மாவின் குணங்களாம்,—இவ ற்றில் இச்சை நச்சி நுகர்ந்து ஒருபழத்தின் இனம் கண்டு முன்பு நான் நுகர் ந்த கனியின் இனமென்று நச்சல் பின்பும் - இவற்றில் ஆசையாவது முன் னொருபழத்தை ஆசைப்பட்டு நுகர்ந்து பின்பு அதனையொப்பதொரு கனி யைக்கண்டு முன்புநானுகர்ந்த கனியினினமீதென்றுபின்பும் அதனையாசை ப்படுதல்,—எச்ச வெறுப்பு ஆதிகளும் இப்படியேயாகும் - ஒழிந்த வெறு ப்பு முதலாயினவும் இத்தன்மையேயாகும்,—இவை முன்பும் பின்பும் உணர்ந்திடுதலாலே நிச்சயகர்த்தா ஒருவன் உளனென்று நல்லோர் நிறுத் திடுவர் வெறுத்திடுவர் நின்னுடைய பொருளே - அவ்விச்சாஞானக்கிரியை முதலாயினவற்றை ஆன்மா முன்பும் பின்பும் அறிகையாலே நிச்சயமாக ஆன்மா வொருவனுளனென்று சொல்லுவர் பெரியோர். நீ ஆன்மாவில்லை யென்று சொல்லுஞ்சொல்லை அப்பெரியோர் தள்ளாநிற்பர் என்க.

இங்கே கர்த்தாவென்பது-ஆன்மாவை. கன்மத்துக்குக்கர்த்தாவென்றபடி.(௩௨)

எப்பொருட்கு மிரந்தரமா யிடங்கொடுத்து நீங்கா திருளொளிதா னன் றியிரண் டினுக்குமிட வகையா, யொப்பில்குணஞ் சத்தமதாய் வாயு வாதி யுதித்தொடுங்க நிற்கும்வா னுயிர்முன்னே சொன்னேஞ், செப்பிடுங்கா லம்பொழுது நாளாதி யாகித் திரிவிதமாய்த் தீமைநன்மை செய்யுந் திக்குத், தப்பில்குணக் குக்குடக்குத் தெற்குவடக் காதி தானுகித் திரியாதே நின் றுபலந் தருமே.

(இ-ள்.) எப்பொருட்கும் இரந்தரமாய் இடங்கொடுத்து நீங்காது இருள் ஒளிதான் அன்றி இரண்டினுக்கும் இடவகையாய் ஒப்பில் குணம் சத்தமதாய் வாயு ஆதி உதித்து ஒடுங்க நிற்கும் வான் - முன்னர் வானமும் ஆன்மாவுங்காலமுந் திக்கும் இல்லை யென்ற புத்தனே நீ கேட்பாயாக, எல் லாப்பொருளுஞ் செல்லுதற்கு வழியாய் இடங்கொடுத்து நீக்கமின்றி இரு ளும் ஒளியுமன்றாய் இரண்டும் நிற்கத்தக்கவிடமாய் உவமையில்லாதகுண ம் சத்தமாய் வாயுமுதலிய பூதங்களுளுந் தோன்றியொடுங்குதற்குத்தாரக மாய் நிற்கும்வானம்,—உயிர் முன்னே சொன்னேம் - ஆன்மாவுண்டென் று முன்னமேசொன்னேம்,—செப்பிடுங் காலம் பொழுது நாள் ஆதியா கித் திரிவிதமாய்த் தீமை நன்மை செய்யும் - சொல்லத்தக்க காலமானது காலையும் உச்சியும் மாலையுமென்னும் பொழுதாயும் நெருநல் இன்று நாளை யென்னுநாளாயும் மற்றுமுள்ளனவாயும், இத்தன்மையிலே மூன்றுவிதமா ய்வேற்றுமைப்படநன்மைதீமைகளைச்செய்யும்,—திக்கு தப்பில் குணக்கு

குடக்கு தெற்கு வடக்கு ஆதி தானுகித் திரியாதே நின்று பலந்தருமே-திக்கானது கிழக்கு மேற்கு தெற்கு வடக்கென்று தவறில்லாததாய் அநாதியிலும் ஆதியிலு முள்ளதாய்ப் பிறழாமல் அத்திசைகளை நோக்கிக் கன்மஞ் செய்தோர்க்குக் கன்மபலத்தைக் கொடுக்கும். ஆகையால்,ஆகாசமும் ஆன்மாவுங் காலமுந் திக்கு முண்டென் றறிவாயாக என்க.

நெருநல் இன்று நாளை - இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம். (கூ௩)

காரியமா யுலகமெலா மிருத்த லாலே கடாதிகள்போற் காரியகர்த் தாவொருவன் வேண்டு, மாரியமா யறம்பொருளோ டின்பவீ டெல்லா மறைந்துயிர்கட் கறிவுசெய லளிப்பதுநூ லந்நூல்,கூரியரா யுள்ளவர்க ளோத வோதிக் கொண்டுவர லான்முன்னே குற்ற மின்றிச்,சீரியபே ரறிவுடையோன் செப்ப வேண்டுஞ் செயலினுக்குங் கரிவேண்டுஞ் சிவனுளனென் றறியே.

(இ-ள்.) காரியமாய் உலகமெலாம் இருத்தலாலே கடாதிகள் போல் காரியகர்த்தா ஒருவன் வேண்டும் - கர்த்தாவும் நூலுமில்லையென்று கூறிய புத்தனே, பிரபஞ்சமெல்லாங் கடாதிகள்போலக் காரியப்பட்டுவருதலாலே இதனைச்செய்வானொருகர்த்தாவேண்டும்,—ஆரியமாய் அறம்பொருளோடு இன்பவீடு எல்லாம் அறைந்து உயிர்கட்கு அறிவுசெயல் அளிப்பது நூல்-வடமொழியாய் அறம்பொருள் இன்பம் வீடென்னு நான்குகாரியமுஞ்சொல்லி ஆன்மாவுக்கறிவையுஞ் செயலையுங் கொடுப்பது வேதாகமங்கள் காண்,—அந்நூல் கூரியராய் உள்ளவர்கள் ஓத ஓதிக்கொண்டு வரலால் முன்னே குற்றம் இன்றிச் சீரிய பேரறிவுடையோன் செப்பவேண்டும் செயலினுக்குங் கரிவேண்டும் சிவன் உளனென்று அறியே - அவ்வேதாகமங்கள் குசலராயுள்ளபிரமாதிகள் ஓதுவிக்க மகாவிருடிகளாலே ஓதப்பட்டு அவர்கள் வழியாகத் தொன்றுதொட்டுவருதலால் ஆதியிலே தவறின்றி மிக்க பெரியவறிவைபுடையோனாலே சொல்லப்படவேண்டும். அவ்வேதாகமங்களாற் சொல்லப்பட்ட கன்மத்துக்குக் காண்பானொரு சாட்சியும்வேண்டும். ஆகையாலே சிவனாலே நூல்சொல்லப்பட்டதென்றும் அவனே கர்த்தாவென்றும் அறிவாயாக என்க. (கூ௪)

மரங்களுயி ரல்லவென்று மறுத்துச் சொன்னாய் வாடுதல்பூ ரித்தலான் மரங்களுயி ராகுந், திரங்குநீர் பெறுதொழியிற் பெறிற்சிரத்தை சேருஞ் சீவனல வெனினுலகிற் சீவ னெல்லா, முரங்கொள்வ தூண்பெறிற்சோருமூண்பெ றாவே லுலர்ந்தமர நீர்பெற்று துய்யாதுள் ளுயிர்கள், கரந்தசினை முட்டைகட்கு வாயிலின்று வாயில் கண்டிலதேற் பூத்துக்காய்த்தெழன்மரங்க ளுயிரே.

(இ-ள்.) மரங்கள் உயிரல்லவென்று மறுத்துச் சொன்னாய் வாடுதல் பூரித்தலான் மாங்கள் உயிராகும் - மரமுதலியன உயிருள்ளனவல்லவென்று புத்தனேசொன்னாய், அவைமெலிதலாலும் பருத்தலாலும் அம்மரமுதலியவை உயிருள்ளனவாகும்,—திரங்கும் நீர் பெறுது ஒழியின் பெறின் சிரத்தைசேரும் சீவன் அலவெனின் - மரமுதலியன நீர்பெறுதொழியில் வாடு

தலும் அந்நீர்பெற்றாற் பூரித்தலும் இயல்பு, சிரத்தைபெற்ற ஆன்மாவல்ல வென்று நீகூறில்,—உலகில் சீவனெல்லாம் உரங்கொள்வது ஊண்பெறில் சோரும் ஊண்பெறுவேல் உலர்ந்தமரம் நீர்பெற்றால் உய்யாது - உயிருள்ளவற்றுக்கெல்லாம் ஊண்பெற்றாற் பருத்தலும் ஊண்குறைந்தால் மெலிதலுங் குணமாகையால் உலர்ந்தமரத்துக்கு நீரைவிட்டாற் பரிணமமில்லையாதலான் மரமுதலியவுயிருடையவாம். அற்றன்று, மரமுதலியனவற்றுக்கு இந்திரியங்களில்லையாகையால் உயிரல்லவென்று கூறின்,—உள் உயிர்கள் கரந்த சினைமுட்டை கட்கு வாயில் இன்று-ஆன்மாவையுள்ளடக்கிநிற்கு முட்டைசினைமுதலியவற்றிற்கு வாயில் தோன்றுவாறுபோல மரமுதலியவற்றுக்கும்வாயில்தோன்று,—வாயில்கண்டிலசேல்-அம்முட்டைசினைமுதலியவற்றுக்கு வாயில் பின்புதோன்றக்கண்டனம் இவற்றிற்கு வாயில் தோன்றக் கண்டதில்லையென்று கூறில்,—பூத்துக் காய்த்து எழல் மரங்கள் உயிரே - அம்மரமுதலியனவற்றுக்கு இந்திரியங் கட்புலனாகாதாயினும் பூத்துக்காய்த்து வளர்தலுங் காண்டலால் இந்திரியமும் உயிரும் மரமுதலியனவற்றுக்குண்டென்று அறிவாயாக என்க.

மரமுதலியன்வென்வேபுல்லீறுயினகொள்க. (௩௫)

ஒருமரத்தி னுயிரொன்றேற் கொம்பொசித்து நட்டா லுய்யுமுயி ரொன்றுபல வாமோ வென்னிற், கருமரத்தின் வித்துவேர் கொம்புகொடி கிழங்கு கண்கலந்து கொள்ளுமுயி ரண்டம் வேர்ப்புத், தருபிறப்புச் சராயுசங்கள் சநநமும்பெற் றாற்போற் றானடையு முற்பிச்சந் தலநடவா வென்னிற், பெருநிலத்திற் காலிலார் நடப்பரோ பேதாய் பிறப்பின்வித மநேகங் காண் பேசுங் காலே.

(இ-ள்.) ஒருமரத்தின் உயிர் ஒன்றேல் கொம்பு ஒசித்து நட்டால் உய்யும் உயிர் ஒன்று பல ஆமோவென்னில் - மரத்துக்கு ஆன்மாவுண்டாமாயின் ஒருமரத்தின்கொம்பை முறித்துநட்டால் அதனைப்போல வளர்தலால், ஒருயிர்பலவுயிராமோவென்று புத்த நீகூறில்,—கரு மரத்தின் வித்து வேர் கொம்பு கொடி கிழங்கு கண்கலந்துகொள்ளும் உயிர் - மரத்தினுண்டாகிய வித்துவேர் கொம்பு இவற்றையும் பிறவற்றிற் கொடிகிழங்குகணுக்கள் இவற்றையுங் கருப்பமாகக்கொண்டு ஆன்மாக்கள் தோன்றும்,—அண்டம் வேர்ப்புத் தருபிறப்புச் சராயுசங்கள் சநநமும் பெற்றாற்போல் தான் அடையும் உற்பிச்சம் தலம் நடவாவென்னில்-முட்டையிலுங்கசிவிலுந்தோன்றிய ஆன்மாக்கள் பையிற்றோன்றும் ஆன்மாக்கள்போல நடைபெற்று வித்திற்றோன்று மரமுதலியன பூமியிடத்து நடைபெறுவாகையால் ஆன்மாவன்றென்று நீகூறில்,—பெருநிலத்தில் காலிலார் நடப்பரோ பேதாய் பிறப்பின்விதம் அநேகங்காண் பேசுங்காலே - சொல்லுங்காலத்துக் காலிலார் பெரியபூமியிடத்து நடக்கவல்லரோ அப்படியே இந்திரியக்குறைவான் ஆன்மபேதம் அநேகமாகவுண்டு பேதையே என்க.

கண் - கணு. (௩௬)

தின்னுமது குற்றமிலை செத்ததெனும் புத்தா தின்பையெனக் கொன்றுனக்குத் தீற்றினர்க்குப் பாவ, மன்னுவதுன் காரணத்தாற் றின்னுதா

ர்க்கு வதைத்தொன்றை யிடாமையினால் வதைத்தவர்க்கே பாவ, மென்னி லுனை யூட்டினர்க்குப் பாவஞ் சேர வென்னதவம் புரிகின்றாய் புலால்கட வுட் கிடாயோ, வுன்னுடல மசுசியென நாணி வேறோ ருடலுண்ணி லசுசி யென வுணர்ந்திலைகா ணீயே.

(இ-ள்.) தின்னுமது குற்றமிலை செத்ததெனும் புத்தா - தான் கொல்லுமதுகுற்றமுடைத்து; செத்ததுதின்னுமது குற்றமில்லையென்று கூறும்புத்தா,—தின்பையெனக் கொன்று உனக்குத் தீற்றினர்க்குப் பாவம் மன்னுவது உன்காரணத்தால் தின்னாதார்க்கு வதைத்து ஒன்றை இடாமையினால் - நீதின்பையென்றுகருதி உனக்கு ஒன்றைக்கொன்றூட்டினர்க்குப்பாவம் உன்காரணத்தாலுண்டாம். அஃதெங்ஙனமென்னில், தின்னாதார்க்குக் கொன்றூட்டுவாரில்லை யாகையால்,—வதைத்தவர்க்கே பாவமென்னில் - என்காரணத்தாற் பாவமுண்டாகாது கொன்றவர்க்கே பாவமுண்டென்றுகூறின்,—உனை ஊட்டினர்க்குப்பாவம் சேர என்ன தவம் புரிகின்றாய் - உன்னைப்பரிந்தூட்டினர்க்குப் பாவமுண்டாக நீ என்னதவத்தைச் செய்கின்றாய். அஃதன்றியும்,—புலால் கடவுட்கு இடாயோ - நீ புலால்நுகருங்காலத்தே உன்கடவுளுக்கும் புலாலையூட்டுவை. அஃதன்றியும்,—உன் உடலம் அசுசியென நாணி வேறு ஓர் உடல் உண்ணில் அசுசியென உணர்ந்திலைகாண் நீயே - உன்னுடம்பு சுத்தமில்லையென்று வெட்கி நீ பிறவூனை நுகருமது சுத்தமில்லையென்று அறிந்தாயில்லை என்க. (கூஎ)

குடைநிழலுங் கண்ணாடிச் சாயையும்போற் பிறப்புக் கொள்ளுமுணர் வென்னிற்கா ரணமழிய வழியு, மடைநிழல்போற் கந்தமைந்து மழியுமுனக் கிங்கே யவையழிந்தா லருங்கதியி னணையுமுணர் வின்றா, மிடைகனவி லெழுமுணர்வு நனவுணர்வா னாற்போ லெழுமுணர்வு கன்மத்தா னினைந்துகதி யென்னின், மிடைசினையு மந்தனுமுட் டையுமுயிர்விட் டக்கான் மேவுவதென் பிறப்பினுடல் விடாதுகன்ம வுணர்வே.

(இ-ள்.) குடை நிழலும் கண்ணாடிச் சாயையும்போல் பிறப்புக் கொள்ளும் உணர்வென்னில்-குடையின்கட் குடைபோல நிழல்தோன்றுந்தன்மையும் கண்ணாடியிற் காட்டின வுருப்போல உருத்தோன்றுந்தன்மையும் போல இக்காயம்விட மற்றொருகாயத்தை எடுத்துக்கொள்ளுமென்று புத்தநீகூறின்,—காரணம் அழிய அழியும் அடை நிழல் போல் கந்தம் ஐந்தும் அழியும் உனக்கு இங்கே - குடையுங் கண்ணாடியுமாகிய காரணங்கெட அவற்றிற்பொருந்திய நிழலாகிய காரியங்கெட்டாற்போல, கந்தங்களைந்தும் உனக்கிவ்விடத்தேகெடும்; அவைகெடவே இந்திரியங்காரணமாகக்காரியப்படுமறிவும் இங்கேயழியுமாகையால்,—அவை அழிந்தால் அருங்கதியின் அணையும் உணர்வு இன்றாம்-காரணமாகிய கந்தங்களைந்து மழிந்தால் அரியகதியையடையுமறிவில்லையாம்,—இடைகனவில் எழும் உணர்வு நனவுஉணர்வு ஆனாற்போல் எழும் உணர்வு கன்மத்தால் நினைந்து கதியென்னில் - கனவிடையெழுமறிவு மெய்யறிவாய்ப்பரிணமித்தாற்போல,கன்மங்கட்டீடாக நினைந்துண்டாமுணர்வு கதியிற்கூடுமென்று நீ கூறின்,—மிடைசினையும் அந்தனும் முட்டையும் உயிர்விட்டக்கான் மேவுவது என் - இந்திரியவறிவுகெட்டாற் றம்மினெருங்கிய சினையும் பிறவிக்குருடனும் முட்

டையும் உயிர்போனுற்பெறுங்கதியாது. அதனுல்,—பிறப்பின் உடல்விடாது கன்ம உணர்வே - பிறப்பினுடலைக்கன்மவுணர்வு விடாது என்க.

கன்மவுணர்வென்பது-ஆன்மஞானம். சினையும் அந்தகனும் முட்டையும் பூர்வகன்மத்துக்கீடாகத் தொழின்மறந்து கிடக்கையாற் கதியடையாவென்பதாயிற்று. கதியென்றது - நற்பிறப்பு. (௩அ)

ஐந்துகந்தஞ் சந்தானத் தழிதல்பந்த துக்க மறக்கெடுகை முத்தியின்ப மென்றறைந்தாய் கந்த, மைந்துமழிந் தான்முத்தி யணைபவர்யா ரென்ன வணைபவர்வே றில்லையென்று யார்க்குமுத்தி யின்ப, மைந்தினுணர் வினுக்கென்னி லழியாத வுணர்வுண் டாகவே யவ்விடத்து முருவாதி கந்த, மைந்துமுள வாமதுவும் பந்த மாகி யரந்தைதரு முத்தியின்ப மறிந்திலைகா ணீயே.

(இ-ள்.) ஐந்துகந்தம் சந்தானத்து அழிதல் பந்ததுக்கம் அறக்கெடுகை முத்தியின்ப மென்று அறைந்தாய் - கந்தங்களைந்துந் தொடர்ச்சியிலே சேட்டைகெடுதல் பந்ததுக்கமென்றும் அவை கர்ப்பூரதீபம்போலச்சேரக்கெடுகை முத்தியின்பமென்றும் புத்தநீகூறினுய்,—கந்தம் ஐந்தும் அழிந்தால் முத்திஅணைபவர்யார் என்ன அணைபவர்வேறு இல்லை என்றுய் - கந்தமைந்துங்கெட்டால் முத்தியிற்செல்வார் யாரொன்றுழிச் செல்வாரொருவருமில்லையென்றுகூறினுய்,—ஆர்க்கு முத்தியின்பம் - முத்திபெறுவாரில்லையாயின் முத்தியின்பம்யாவர்க்கு,—ஐந்தின் உணர்வினுக்கு என்னில் - கந்தங்களைந்திற்றேன்றும் அறிவிற்கென்று கூறின்,—அழியாத உணர்வு உண்டாகவே அவ்விடத்தும் உருவாதி கந்தம் ஐந்தும் உளவாம் அதுவும் பந்தம்ஆகி அரந்தைதரும் முத்தியின்பம் அறிந்திலைகாண் நீயே - மனத்தால் அறியுமறிவுகெடாதிருக்குமாயின் அவ்விடத்திலும் உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னுங் கந்தங்களைந்து முண்டாதல்வேண்டும். அவையுண்டாகவே முத்தியிடத்திலும் பந்ததுக்கமுண்டாய்க் கிலேசத்தையுந்தரும்; ஆதலால், நீமோக்ஷசுகத்தை அறிந்திலை அதனைக்கேட்பாயாக என்க.

கேட்பாயாகவென்ற தொடர்ச்சி பின்னர்வருஞ்செய்யுளின் கருத்துப்பற்றி.

அநாதிமுத்த னுய்ப்பரனு யசலனு யெல்லா வறிவுதொழி லநுக்கிரக முடையவரன் கன்ம, நுனுதிகமற் றொத்தவிடத் தேசத்தி நிபாத நுழைவித்து மலங்களெல்லா நுங்க நோக்கி, மனுதிகர ணங்களெல்லா மடக்கித் தன்னை வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையா, வினைதபிறப் பினினின்று மெடுத்து மாறு வின்பமுத்திக் கேவைப்ப னெங்கண் முத்தி யிதுவே.

(இ-ள்.) அநாதியிலே மலரகிதனுய் எப்பொருட்குமேலாய்ச் சலனமில்லாதவனுமாய்ச் சர்வஞ்ஞத்துவமுஞ் சர்வகிருத்தியமுஞ் சர்வாநுக்கிரகமுமுடையனுகிய பரமேசுவரன் ஆன்மாக்கள்செய்த புண்ணியபாவமிகுதி குறைவறத் துலையொத்தவிடத்து அருட்சத்திபதிவித்துக் குருமூர்த்தியாயெழுந்தருளி மலங்கள்கெடத் திருக்கண்சாத்தியருளி மநமுதலாகிய வுட்கரணங்களையும் இந்திரியமுதலாகிய புறக்கரணங்களையுங் கெடுத்துத் தன்னைவழிபடு நால்வகையாகிய வழிபாட்டையுமருளி மிகுத்த காருண்ணியக்

கையாலே பொல்லாப்பிறவிக்கடலில் வீழாமலெடுத்து ஒழியாதவின்ப முத்திக்கரையிலே வைத்தருளுவன்; இதுவே எங்கண் முத்தியாகையால், நீயும் இவ்வழியினின்று முத்தியின்பத்தை அநுபவிப்பாயாக என்க.

ஆறுதிகம் - றுனுதிகமென விகாரப்பட்டது. (௪0)

சௌத்திராந்திகன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கங௪.

## யோகாசாரன்மதம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

போதமே பொருளாய்த் தோன்றும் பொருளதா யெழலாற் போதம்
வாதனை யதனாற் கூடி வருதலால் வடிவி லாமை
யாதலாற் கனவே போலுஞ் சகமுள தறிவே யாமென்
ரேதினு னோதா னுய வுணர்வினுல் யோகா சாரன்.

(இ-ள்.) போதமே பொருளாய்த் தோன்றும் பொருளதாய் எழலால் போதம் வாதனையதனுல் கூடி வருதலால் வடிவு இலாமையாதலாற் கனவே போலும் சகம் - அறிவே இந்திரியங்களுமாய்த் தோன்றப்பட்ட உருக்களுமாய் வருதலானும் அவ்வறிவு இந்திரியவாதனையினுலே கூடி வருதலானும் அவ்வறிவு அருபமாதலானும் அநித்தியரூபமாகிய பிரபஞ்சம் சொப்பனம் போலும்,—உளது அறிவே ஆமென்று ஓதினுன் ஓதானுய உணர்வினுல் யோகாசாரன் - யோகாசாரன் சாத்திரத்தையுணராதவறிவினுலே சௌத்திராந்திகளில் வேறுபட்டு இந்திரியவாதனையால் அறிவுண்டாமென்றும் பிரபஞ்சங் கனவேபோலுமென்றும் அறிவேயுள்ளதென்றுங் கூறினுன் என்க.

யோ[illegible]சாரன்மதமுடிந்தது.

[illegible]த்திருவிருத்தம் - கங௫.

## [illegible]ாகாசாரன்மதமறுதலை.

போதமுந் தவிர வேறோர் வாதனை புகன்ருய் போதம்
வாதனை யிரண்டுண் டென்னுய் போதம்வா தனையு மென்னிற்
காதலாற் பொருளி னேடு கலந்தபி னெழுங்க ருத்தாம்
வாதனை கனவு கண்ட பொருளின்மேல் வருங்க ருத்தே.

(இ-ள்.) போதமுந் தவிர வேறோர் வாதனை புகன்ருய் - யோகாசார நீ அறிவொழிய வேறொரு வாதனையுண்டென்று சொன்னுய். அப்படியாயின்,—போதம் வாதனை இரண்டு உண்டு என்னுய் - போதமென்றும் வாதனையென்றும் இரண்டுண்டென்றுகூறுய்,—போதம் வாதனையும் என்னில்-வாதனைதானும் அறிவேயென்றுகூறின்,—காதலாற் பொருளினேடு கலந்தபின் எழுங்கருத்தாம் வாதனை - அறிவு சத்தாதிவிடயத்திலே கலக்க வேண்டுமென்னுமிராகத்தாற் கலக்க அக்கலப்பிலே பலகாற்கருத்தைச் செலுத்துதலே வாதனை; ஆகையால், வாதனை அறிவன்று,—கனவு கண்ட பொருளின்மேல் வரும் கருத்தே - கனவானது நனவிற்கண்ட பொருளின்

மேற் கருத்தை செலுத்துவதாதலாற் பிரபஞ்சங் கனவுமன்று; அதனால், நீ கூறியது மித்தையேயாம் என்க.

அறிவதே பொருள தாயி னகஞ்சட மென்ன வேண்டும்
பிறிபொரு ளாகும் பேதித் திதம்பிர பஞ்ச மென்னி
லுறுபொரு ளுருவந் தோய்ந்தா லுணர்வுமவ் வுருவாய் நிற்குஞ்
செறிபொரு ளதுவாய் நிற்குந் தெளிபளிங் கதுவே போல.

(இ-ள்.) அறிவதே பொருளதாயின் - யோகாசார நீ கூறிய வறிவுதானே பிரபஞ்சரூபமென்று கூறின்,—அகம் சடம் என்ன வேண்டும் - நான் உடம்பென்றுசொல்லவேண்டும்,—பிறி பொருளாகும் - அறிவும் உருவும் வேறுபாட்டையுடைத்து,—பேதித்து இதம் பிரபஞ்ச மென்னில் - அறிவு முருவும் வேறுபாட்டையுடைத்தாமென்னில் உருவைநீங்கிநின்ற அறிவு தானே நான்பொருளென்றுகூறும் பகுதியாம்,—உறு பொருள் உருவம் தோய்ந்தால் உணர்வும் அவ்வுருவாய் நிற்கும் - அறிவு உருவத்தோடுகூடினால் அவ்வறிவு உருவந்தானாய் நிற்கும்; அஃதென்போல வென்னில்,—செறி பொருளதுவாய் நிற்குந் தெளிபளிங்கதுவே போல - அடுத்தவன்னத்தோடு கூடிய பளிங்கு அவ்வன்னந்தானாகத் தோன்றுமாபோல என்க.

யோகாசாரன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கஈஎ.

## மாத்தியமிகன்மதம்.

அவயவம் பொருளாய்த் தோன்று மவயவ மொழிந்தாற் பின்னை
யிவைபொரு ளென்ன வேறொன் றிலாமையாற் பொருள்க ளின்று
மவைபொரு ளிலாமை யாலே யறிவுமின் றாகு மென்று
நவைதரு மொழியி னாலே நவிலுமாத் தியமி[illegible]றான்.

(இ-ள்.) அவயவம் பொருளாய்த் தோன்றும் - [illegible]ரியம்பத்தும் பொருளாய்த்தோன்றும்,—அவயவம் ஒழிந்தால்பின்னை [illegible]பொருளென்ன வேறொன்று இலாமையால் பொருள்கள் இன்றும் - இ[illegible]ரியங்கள் கெட்டாற் பின்பொருள் இவையென்றறிதற்கு ஒன்றுமில்லாமையாற் பொருளுமில்லையாம்,—அவை பொருள் இலாமையாலே அறிவும் இன்றாகும் - அந்தப் பொருள்களில்லாமையினாலே பொருளைக்கூடிநின்றறியுமறிவுமில்லையாம்,—என்று நவைதரு மொழியினாலே நவிலும் மாத்தியமிகன்றான் - என்றிப்படிக் குற்றத்தைத்தருஞ்சொல்லாலேமாத்தியமிகன்சொல்லுவான் என்க.

பொருள் - சரீரம். அவயவியில்லையென்பது கருத்து. (க)

மாத்தியமிகன்மதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கஈஅ.

## மாத்தியமிகன்மதமறுதலை.

கடத்தினி லவய வங்கள் படத்தினிற் புகாமற் காத்தும்
படத்தினி லவய வங்கள் கடத்தினிற் புகாமற் கொண்டு

மிடத்தினி னிற்கு மாகு மவயவி யிரண்டுங் கூடி
யுடைத்தொரு பொருளுண் டாகப் பொருளுமுண் டுணர்வு முண்டே.

(இ-ள்.) கடத்தினில் அவயவங்கள் படத்தினிற் புகாமற் காத்தும் படத்தினில் அவயவங்கள் கடத்தினிற் புகாமற் கொண்டும் இடத்தினின் நிற்கும் ஆகும் அவயவி - மாத்தியமிக நீ அவயவமேபொருளாவது அவயவி யில்லையென்றுகூறினாய்; கடாதிகளின் அவயவங்கள் படாதிகளிற் செல்லா மை நீக்கிக்கொண்டும், படாதிகளின் அவயவங்கள் கடாதியிற்செல்லாமை நீக்கிக்கொண்டும், அவ்வவ்வவயவங்களிலே அவ்வவ்வவயவிநிற்குமாகை யால்,—இரண்டுங்கூடி உடைத்து ஒருபொருள் - அவயவமும் அவயவியுங் கூடியே ஒருபொருளாகவுண்டாவது,—உண்டாகப் பொருளும் உண்டு உணர்வும் உண்டே-அப்படியுண்டாகவே அதுபோலப் பொருளாகிய சரீர மும் உண்டு உணர்வும் உண்டென்றறிவாயாக என்க.

கடாதிகட்கு அவயவி மண். படாதிகட்கு அவயவி நூல். பொருள் - அவயவம். உணர்வு - அவயவியாகிய ஆன்மா. (க)

கருவியு மொளியும் வேறு கருதிடுங் கருத்து நிற்கப்
பொருள்புண ராமை யாலே போதம்வந் தெழுவ தின்று
மருவிடும் பொருளுண் டாக வந்தெழும் புந்தி யானுற்
பொருளுள தாகு மாகப் போதமு முள்ள தாமே.

(இ-ள்.) கருவியும் ஒளியும் வேறு கருதிடும் கருத்தும் நிற்கப் பொருள் புணராமையாலே போதம் வந்தெழுவது இன்றும் - இந்திரியங்களும் இந்தி ரியவிடயமாகிய சத்தாதிகளும் அவற்றாற்காணப்படும்பொருள்களை வேறு பட ஆராயும் அந்தக்கரணங்களுமுணடாய் நிற்கவும் ஆன்மாவந்துகூடாதது கொண்டு ஒருபொருளையுந் துணிந்தறியுமறிவில்லையாம்,—மருவிடும் பொ ருள் உண்டாக வந்தெழும் புந்தியானல் - இந்திரியவிடயங்களோடும் அந் தக்கரணங்களோடுங் கூடிநின்றறியும் ஆன்மாவுண்டாக அறிவுமுண்டாமா கையால்,—பொருள் உளதாகும் ஆகப் போதமும் உள்ளதாமே - ஆன்மா வுண்டாகும். அஃதுண்டாகவே அறிவுமுள்ளதாம் என்க.

இவ்விடத்துப் பொருளென்றது - ஆன்மாவை. (உ)

மாத்தியமிகன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கசo.

---

## வைபாடிகன்மதம்.

அரிசன நூறு கூட வருணம்வந் தெழுந்தாற் போல
விரிசகம் பொருள்கண் ஞானம் விரவிட மேவித் தோன்றுந்
தெரிசன மிதுவே யென்று தெளிந்திடுந் தேரர் வீடு
பரிவொடு மடைவீ ரென்று பகரும்வை பாடி கன்றான்.

(இ-ள்.) அரிசனம் நூறு கூட வருணம் வந்து எழுந்தாற் போல-மஞ்சளுஞ் சுண்ணும்புங் கூட ஓர்சிவப்புநிறந் தோன்றுமாபோல,—விரிசகம் பொருள்கள் ஞானம் விரவிட மேவித்தோன்றும் - காணப்பட்டபொருள்களும் இந்திரியவிடயமானவறிவுங் கூடினபோது பிரபஞ்சப்பொருள்கள் பொருந்தித்தோன்றும்,—தெரிசனம் இதுவே யென்று தெளிந்திடும் - இதுவே ஞானதரிசனமென்று தேறுவீராக,—தேரர் வீடு பரிவொடும் அடைவீரொன்று பகரும் வைபாடிகன்றான் - அப்படித்தெளிந்தீராயின், புத்தர் வீடுதருமின்பத்தை அடைவீரென்று பரிவோடுஞ் சொல்லாநிற்பன் வைபாடிகன் என்க. (க)

வைபாடிகன்மதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கசுக.

## வைபாடிகன்மதமறுதலை.

பொருளது புறம்ப தாகும் போதமந் தரம தாகுந்
தெருளிடி னிரண்டுஞ் சென்று சேர்ந்திடு மாற தின்றா
மருவுணர் வுருவ ஞேய மாதலி னானுங் கூடா
வுருவரு வுடைய வைபா டிகற்கினி மாற்ற மின்றே.

(இ-ள்.) பொருளது புறம்பதாகும் போதம் அந்தரமதாகும் தெருளிடின் இரண்டுஞ் சென்று சேர்ந்திடுமாறது இன்றாம்-அறியப்படும்பொருள் புறத்ததாகும்; அறியுமறிவு அகத்ததாகும்; ஆதலால், தெளியவறியுமிடத்து இரண்டுஞ்சென்று கூடுந்தொழிலில்லையாம்,—அரு உணர்வு உருவம் ஞேயம் ஆதலினானுங் கூடா - அன்றியும் ஞானமாகிய வறிவு அரூபமாகையாலும், ஞேயமாகியபொருள் உருவமாகையாலுங்கூடா,—உரு அருவுடைய வைபாடிகற்கு இனி மாற்றம் இன்றே - உருவும் அருவுங் கூடுமென்ற வைபாடிகனுக்கு இனிச்சொல்லுமுத்தரமில்லையாம் என்க.

பொருள் - பிரபஞ்சம், ஞேயமுமது. (க)

வைபாடிகன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கசுஉ.

## நிகண்டவாதிமதம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வாசமாமல ரசோகு பேணிமறை நீதி யோடுமலை யுந்தவத்
தாசை யாலுடை யகன்று மாசினை யடைந்தில் வாழ்தரு மறத்தினிற்
பாச மானது தவிர்ந்து பண்டிபட வுண்டு பாயினொடு பீலிமே
னேச மாயவை தரித்து ளோர்களி னிகண்ட வாதியை நிகழ்த்துவாம்.

(இ-ள்.) மணமும் வண்டும் பொருந்திய மலர்களையுடைய அசோகவிருட்சத்தைத் தெய்வம்போலப்பேணி வேதமார்க்கத்தோடு மறுதலைப்பட்டொக்குந்தவத்தினை ஆசைப்பட்டு உடுக்கையைக்கைவிட்டுக் குளிக்குந் தன்மையின்மையின் அழுக்கடைந்து பிரமசரியமுதலாகிய ஆச்சிரம மூன்றுக்கும் பற்றுயிருக்கிற கிருகத்தாச்சிரமத்தைவிட்டு வயிறுபெருக்கவுண்டு பாயுடுத்துப் பீலி கைப்பிடித்து இங்ஙனஞ்சொல்லியவற்றிலே சிநேகமாய் அவற்றைத் தரித்துளோர்களின் நிகண்டவாதிமதத்தைச் சொல்லுகின்றேம் என்க.

கண்டம் - உடை. நிகண்டம் - உடையின்மை. அஃது க்ஷமணரில் நிகண்டவாதிகளைக்கொள்க. ஆசீவகர்க்கு உடையுளதாம். மறைநீதியோடுமலையுந்தவம் - எக்கியாதிகர்மம், கர்த்திருவாதம், பஸ்மருத்திராக்ஷம் முதலியவைகளை நீக்கியகன்மம். (க)

ஈறி லாதன வநந்த ஞானமுத லெண்கு ணங்களெ னு மொண்குண
மாறி லாதமதி மேவு சீதமென மன்னி வானவர் வணங்கவே
வேறு லாவுகுண ஞான வாவரணி யாதி யெட்டினையும் விட்டசீ
ரேறு பான்மையுடை நீடு வாழருக னெங்க ளுக்கிறைவ னென்றனன்.

(இ-ள்.) ஈறிலாதன அநந்த ஞானமுதல் எண்குணங்களெனும் ஒண்குணம் மாறு இலாத மதிமேவு சீதமென மன்னி - கேடில்லாதனவான அநந்தஞானமுதலிய நற்குணமெட்டையும் கோணுத மதிக்குக் குளிர்ச்சி தன்னிடத்திலே தோன்றினுலொப்பத் தோற்றுவித்து,—வேறு உலாவு குணம் ஞானம் ஆவரணி ஆதி எட்டினையும் விட்டசீர் - அந்தநற்குணங்களோடு கூடாது பரந்த தீக்குணங்களென்று சொல்லப்பட்ட ஞானுவரணியமாதியாகிய எட்டுக்குணங்களையும் விட்ட அழகினையும்,—வானவர் வணங்கவே ஏறு பான்மையுடை நீடுவாழ் அருகன் எங்களுக்கு இறைவனென்றனன் - இந்திராதிதேவர்கள் போற்ற மிக்க பான்மையையுடைத்தாய் நெடிது வாழ்கின்ற அருகபரமன் எங்கள் கர்த்தாவென்று கூறினன் என்க.

நற்குணமெட்டாவன—அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷியம், சம்மியதாபாவம் என்பன. சம்மியதாபாவம்-அழிவின்மை. ஞானுவர்ணியமெட்டாவன—ஞானுவர்ணியம், தரிசனுவர்ணியம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷியநாமம், கோத்திரநாமம், ஆயுவந்தராயம்,காயவந்தராயம் என்பன. இவையே தீக்குணங்களென்றும் பெயர்பெறும். சீரேறுபான்மை யென்பது - நின்மலத்துவ முதலியன. (உ)

கருவி கண்படு தொடக்கொ ழிந்துவரு கால மூன்றினிகழ் காரியம்
பெருக நின்றொரு கணத்தி லேயுணர் பெருந்த வக்கடவுள் பீடினன்
மருவி நின்றுவழி பட்ட வர்க்குமலை வுற்ற வர்க்குமன மொத்திடுங்
குரிசி லெங்களிறை யென்று பின்னுநிகழ் குற்ற மின்மையது கூறுவான்.

(இ-ள்.) கருவி கண்படு தொடக்கு ஒழிந்து வருகாலம் மூன்றின் நிகழ் காரியம் பெருக நின்று ஒருகணத்திலே உணர் பெருந்தவக் கடவுள்-இந்திரியவிடயத்தால்வருந் தொடக்கைத் தன்னிடத்துநின்றுங் கைவிட்டுப் பெருங் காலமுதலாக மூன்றுகாலத்திலு முள்ளகாரியங்களை மிகவுமொருகணமாத்திரத்திலே அநந்தஞானத்தாலே அறியத்தக்க பெரிய தவத்தையுடைய

தேவன்,—பீடினால் மருவி நின்று வழிபட்டவர்க்கும் மலைவு உற்றவர்க்கும் மனம் ஒத்திடுங் குரிசில் - தனது பெருமையினாலே பொருந்தநின்று வழிபாடு செய்தவர்க்கும மாறுபட்டவர்க்கும் ஒருநீர்மையான தலைவன்,—எங்கள் இறையென்று பின்னும் நிகழ் குற்றம் இன்மையது கூறுவான் - எங்கள் சுவாமியென்றுகூறி அவனுக்குக் குற்றமில்லாத தன்மையைப் பின்னுஞ் சொல்லுவான் என்க.

மனமொத்திடுகை - சமதரிசனமாகை. (ரு)

பசித்த றாகபய செற்ற மோடுவகை மோக சிந்தனை பழித்தநோய்
நசித்தல் வேர்வினொடு கேத மோடுமதம் வேண்ட லீண்டதி சயித்தலும்
புசிப்பு வந்திடு பிறப்பு றக்கமிவை விட்டொ ரட்டகுண பூதனாய்
வசித்த வன்னுலகின் மேலி ருந்தொருசொ லிகல னுக்கருளு மென்றனன்.

(இ-ள்.) பசித்தல் - பசித்தல்,—தாகம் - ஆசை,—பயம் - அச்சம்,—செற்றமோடு - மாற்சரியம் ஆகிய இவற்றுடனே,—உவகை - ஒன்றன்மேற் பிரியப்படுதல்,—மோகம் - மயக்கம்,—சிந்தனை - ஒன்றைச்சிந்தித்தல்,—பழித்தல் - ஒன்றைநிந்தித்தல்,—நோய் - வாதபித்தசிலேஷ்மம்,—நசித்தல் - சாதல்,—வேர்வினொடு - வியர்வோடும்,—கேதமோடு - கிலேசப்படுதலோடும்,—மதம் வேண்டல் - கர்வத்தைவிரும்பல்,—ஈண்டு அதிசயித்தலும் - இவ்விடத்ததிசயப்படுதலும்,—புசிப்பு - உணவு,—வந்திடு பிறப்பு - ஜநித்தல்,—உறக்கம் - மூவகைநித்திரை,—இவைவிட்டு - ஆகிய இவை பதினெட்டையு முற்றக்கைவிட்டு,—ஓரட்டகுண பூதனாய் - அநந்த ஞானமாதியாகச் சொல்லப்பட்ட எட்டுக்குணங்களையுடையனாய்,—வசித்தவன் உலகின்மேல் இருந்து ஒருசொல் இகலனுக்கு அருளுமென்றனன் - உலகத்துக்குமேலாகிய பொன்னெயில்வட்டத்திருந்து சித்தபரமேட்டிகள் கேட்டதொரு சொல்லினுக்கு உத்தரமருளுமென்று கூறினான் என்க.

ஓடு - எண்ணின்வந்தது. ஈண்டென்பதனை எல்லாவற்றோடுங்கூட்டுக. வசித்தல் - சொல்லுதல். பிறப்பு - தேவமநுஷியநரகவிலங்கென நால்வகை. மூவகைநித்திரையாவன—நித்திராநித்திரை, பிரசலாப்பிரசலை, நிக்கிரககதி அனுக்கிரககதியென்க. இதற்கருகன்கூறியசொல்லாவது—பொன்னெயில்வட்டத்திருக்கிறசித்தபரமேட்டி என்னும் சகலாத்தரை இகலாத்தர் "தன்மம்பகவ" என்றுகேட்க, முரசுதாக்கச் சத்தங் கிளம்பினாற்போல வொருசொல் "பஞ்சாஸ்தமயம்" என்றுசகலாத்தர் சொல்ல, இது கொண்டு விசாரித்தானெனக்கொள்க. (சு)

அந்த வாய்மொழியி னால வன்சரண மாதி யோகமுத லானநூ
லிந்த மாநில மயங்கி டாதவகை யிங்கி யம்பின னிதன்பொருள்
வந்த காலமுயிர் தன்ம தன்மியற மற்றும் விண்மருவு புற்கலம்
பந்தம் வீட்டினொ டாதி யாயிவை படைப்ப தின்றியுள பத்துமே.

(இ-ள்.) அந்தவாய் மொழியினால் அவன் சரணமாதி யோக முதலான நூல் இந்தமாநிலம் மயங்கிடாத வகை இங்கு இயம்பினன் - அந்தப் பஞ்சாஸ்தமயமாகிய வாக்கியத்தினாலே அந்தச்சித்தபரமேட்டி சரணமாதியாகிய யோகமுதனூலை இப்பெரியநிலத்துள்ளோர் மயங்காதவகை இவ்விடத்துச் சொன்னான்,—இதன்பொருள் - இந்தநூலிற்கூறியபொருள்,—வந்த காலம் உயிர் தன்மதன்மி அறம் மற்றும் விண்மருவு புற்கலம் பந்தம் வீட்டினொடு

அநாதியாய் இவை படைப்பதன்றி உள பத்துமே - உண்டானகாலம் ஆன்மா தன்மம் அதன்மம் புண்ணியம் பாவம் ஆகாசம் அணுவாய்த்திரண்டான் மத்தன்மை பொருந்தின புற்கலம் பந்தம் வீட்டோடுகூடப்பத்தும் ஒருவராற் படைக்கப்படாததாய்அநாதியே யுள்ளனவாம் என்க.

தன்மமென்பது - தன்மாத்திகாயத்தை. தன்மியென்பது-அதன்மாத்திகாயத்தை. சரணம்—ஆதிசரணம், சித்தசரணம், ஆசரியசரணம், தன்மசரணம் என நான்கு. மற்றுள்ளனவுங்கொள்க. (ரு)

நிற்ற லோடுதலை போத லன்மையை நிகழ்த்து நீடுவெதி ரேகமு
முற்ற தாமிவை கணத்தி லேமருவி யுள்ள வாபுரியு மாறுதான்
கற்ற காலமள வெய்தி வாழுமுயிர் காய மேவிநிறை வானதே
பெற்று வேறுவரு தன்மை நேரறிவு பெற்ற தாகியுள பேசிலே.

(இ-ள்.) நிற்றலோடு தலை போதல் அன்மையை நிகழ்த்து நீடு வெதிரேகமும் உற்றதாம் - அநாதிப்பொருள் பத்திலே காலமானது நிகழ்காலமும் இறந்தகாலமும் இவையல்லாமையை விளக்காநின்ற நிலைபெற்ற எதிர்காலமுமாகிய மூன்றையும் பொருந்தியதாம்,—இவை கணத்திலே மருவி உள்ளவா புரியுமாறுதான் கற்றகாலம் - அன்றியும் இம்மூன்றுகாலத்தையும் ஒருகணப்பொழுதிலே பொருந்தியுண்டான தகுதியைச்செய்யுந்தொழிலையும் அந்தக்காலங்கற்றதாம்,—அளவு எய்தி வாழும் உயிர் காயம் மேவி நிறைவானதே பெற்று வேறு வருதன்மை நேர் அறிவு பெற்றதாகி உளபேசிலே - அக்காலத்தெல்லையைப்பொருந்திவாழும் ஆன்மாவானது சரீரியாய் அந்தச்சரீரமுழுது நிறைந்த தன்மையைப்பொருந்திப் பால தருண விருத்த அவத்தைகளினும் வேறுவேறாகவருந் தன்மையோடு பொருந்தின அறிவு பெற்றதாகியுள்ளதாம் சொல்லுங்காலத்து என்க. (சு)

பரந்து மீறுதரு மாத்தி காயமழி வித்த நித்தமது பண்ணிடு
நிரந்து கீழதரு மாத்தி காயமது நித்த மாய்மிக நிறுத்திடும்
புரந்த புண்ணிய மிதற்கு நன்மைபுகல் பாவ மானவது தீமையே
தரும்பொ ருட்கிடம தாகும் வானமிகு புற்க லன்களவை சாற்றுவாம்.

(இ-ள்.) பரந்து மீறு தருமாத்தி காயம் அழிவித்து அநித்தமது பண்ணிடும் - விரிந்துமேலாகிய தன்மாத்திகாயமானது பூதகாயத்தை மேலுமெடாதபடி அழிவித்து அதனை அநித்தியத்தைச் செய்யும்,—நிரந்து கீழ் அதருமாத்திகாயமது நித்தமாய் மிக நிறுத்திடும் - நிரைபட்டுக் கீழாகிய அதன்மாத்திகாயமானது பூதகாயத்தோடு கூடி நித்தமாய் மிகவுநிலைபெறுவித்திடும்,—புரந்த புண்ணியம் இதற்கு நன்மை - மனவாக்குக்காயங்களாற் செய்யப்பட்ட புண்ணியமானது இத்தன்மாத்திகாயத்தைத் தருவதற்கு நன்மையாம்,—புகல் பாவமானவது தீமையே தரும் - சொல்லப்பட்ட பாவமானது தீமையேதரும் அதன்மாத்திகாயத்துக் கேதுவாம்,—பொருட்கு இடமதாகும் வானம் - எல்லாப்பொருட்கும் இடங்கொடுத்துநிற்கும் ஆகாயம்,—மிகு புற்கலன்களவை சாற்றுவாம் - இதனிடத்திற்றோன்றும் புற்கலப்பொருளை மேலேசொல்லுவாம் என்க.

தன்மாத்திகாயமாவது - புண்ணியத்தாலெடுக்குந்தேகம். அதன்மாத்திகாயமாவது - பாவத்தாலெடுக்குந்தேகம். (எ)

ஏனு மொன் றுடைய வாகி யெங்குமணு வாயி ரும்புகன் மரங்களும்
பூணு மங்குருவெ லாமு மாகுமிவை புற்க லப்பொருள்க ளென்னலாங்
காணு மங்கறு வகைத்தொ ழில்களவை கட்டு விட்டநெறி கன்மமேன்
மாண நின்றுவரு மாறி மாறிமுன் வகைந்த துண்டுவிட மாட்சியே.

(இ-ள்.) ஏனும் ஒன்று உடையவாகி எங்கும் அணுவாய் இரும்பு கல் மரங்களும் பூணும் அங்கு உருவெலாமும் ஆகும் இவை புற்கலப் பொருள்கள் என்னலாம் - ஓர்வலியுமுடையவாய் எவ்விடத்திலு முருவமாய்த்திரண்டு இரும்புகன்மரங்கண் முதலியனவுமாய் இவை யொழிந்தெடுத்துக் கொள்ளப்பட்ட உருக்களெல்லாமுமாய்த் திரியக்கணுபூர்வமென்னு மான்மப் பெயரையுமுடையவாய் நிற்கும்; அவற்றைப் புற்கலப் பொருளென்று சொல்லலாம்.—காணும் அங்கு அறுவகைத் தொழில் களவை கட்டு-பொல்லாங்காய்க் காணப்பட்டுள்ள அறுவகைத்தொழில்களே பந்தம்,—விட்ட நெறி கன்மம்- அப்பந்தத்தைவிட்ட ஒழுங்கே தவம்,—மேல் மாண நின்று வரும் - அத்தவந்தான் உடல் மேன்மேல்வருந் தவமாட்சிமையுண்டாய் நிலைபெற்றுவர்த்திக்கும்,—மாறிமாறி முன்வகைந்தது உண்டு விட மாட்சியே - ஆன்மாவுக்கு முன்பே புசிப்பதாக வுண்டாகப்பட்ட புண்ணியபாவங்கள் தொலையப்புசித்து விட்டமாட்சிமையே வீட்டைத்தரும் என்க.

அணுபூர்வமாவன—தெய்வகதியாவைபூர்வம், மனுஷியகதியாவைபூர்வம், நரககதியாவைபூர்வம், பக்ஷிமிருககதியாவைபூர்வம், திரியக்காதியாவைபூர்வம் எனவிவை. இவற்றுள் திரியக்காதியாவைபூர்வம் - புற்கலப்பொருள். அறுவகைத்தொழிலாவன—கந்தம், ரசம், ரூபம், பரிசம், சத்தம், பரிணமம் எனவிவை. காமாதியறுவகையுமாம். (அ)

நிகண்டவாதிமதமுடிந்தது.
ஆகத்திருவிருத்தம்-கரு০.

---

# நிகண்டவாதிமதமறுதலை.

வேறு.

அருக னுக்க னந்த ஞான மாதி யாதி யாகவே
பெருக நிற்றல் சீத மாம திக்க டைந்த பெற்றியே
லொருவு மிட்ட வொப்ப வன்னு யிர்த்தி றத்தி னுள்ளபின்
மருவு மிக்க குற்ற மேல றத்தின் மன்னி னனெனில்.

(இ-ள்.) அருகனுக்கு அனந்த ஞானமாதி ஆதியாகவே பெருக நிற்றல் சீதம் மாமதிக்கு அடைந்த பெற்றியேல் - அருகபரமனுக்கு ஞானவரணியமாதியாகிய தீக்குணங்களெட்டு நீங்கப்பட்டு, அனந்தஞானமாதியாகிய நற்குணங்களெட்டுஞ் சந்திரனுக்குச் சைத்தியம்போல இடையேயுண்டாமென்று கூறினாய்; அதுவே முறையாயின்,—ஒருவும் இட்ட ஒப்பு - நீகூறியவுவமையினீங்கப்படும்; அஃதெங்ஙனமென்னில்,—அவன் உயிர்த்திறத்தின் உள்ளபின் மருவு மிக்க குற்றம் - கர்த்திருகுணமின்றியே சிலகுணத்தைவிட்டுச் சிலகுணம்வந்து கூடிற்றென்பது ஆன்மகுணமாகையால், அவனும் ஆன்மகுணத்தையுடையவனவன்; ஆகவே விடப்பட்ட தீக்குணங்களெட்டும் முன்புண்டாய்விட்டவாம்,—மேல் அறத்தின் மன்னினனெனில் - அற்றன்று, அவன் ஞானவரணியமாதியாகிய குணங்களைநீங்கி அநந்த ஞானமாதியாகிய குணங்களைக் கூடுதன்மேலான வறத்தின்கண்ணே பொருந்தினனாகையாலெனில் என்க. (க)

அறத்தின் மன்னு வித்த வன்னொ ருத்த னாய வன்னறத்
திறத்தி னிற்றன் மற்றொ ருத்த னால்வி ளைந்த செய்தியா
மறத்தி னற்ற வர்க்கெ லாம்வ ணக்க முன்னி றைக்குமேற்
பிறக்கு மிங்க வத்தை கொண்ட தாரை யின்று பேசிடே.

(இ-ள்.) அறத்தின் மன்னுவித்தவன் ஒருத்தன் ஆய் அவன் அறத்திறத்தின் நிற்றல் மற்றொருத்தனால் விளைந்த செய்தியாம் - அவன் அத்தருமத்தினாலே பொருந்தினனாயின் அத்தன்மத்திலே நிலைபெறுவித்தவன் ஒருவனுளனாய் அவனாற்கூறப்பட்ட தன்மநெறியிலே நிற்குந்தகுதி ஒருவன் கற்பித்ததொழிலை ஒருவன்செய்த செய்தியாம்,—மறத்தின் அற்றவர்க்கெலாம் வணக்கம் உன் இறைக்கு மேற் பிறக்கும் இங்கு அவத்தை-கொலையை நீங்கினவர்க்கெல்லாம் வணக்கமாகப்பட்ட உன்கர்த்தாவுக்கு மேலுமொருவனுளனென்பதோர் எல்லையுண்டாமாகையால்,—கொண்டது ஆரை இன்று பேசிடே - முன்னர்க்கூறியவனையோ, அவன்கீழ்நின்றிந்திரியத்தொடக்குப்படாமற் றவஞ்செய்தவனையோ, நீ கர்த்தாவாகக்கொண்டது யாவரையென்று இப்போது சொல்வாயாக என்க.

மறத்தினற்றவர் - கொலைத்தொழிலைக் கைவிட்டவர். (உ)

கருவி தன்றொ டக்கொ ழிந்து கண்டு வாழு மென்றியே
லுருவு கொண்டு நின்ற தென்னி லுண்டு தான்ம னாதிக
ளொருவி நின்ற தென்னி லத்த மொன்றை யுமு ணர்ந்திடான்
பொருடெ ரிந்து போகை கால மொன்றி லேபு ணர்ந்திடான்.

(இ-ள்.) கருவிதன் தொடக்கு ஒழிந்து கண்டு வாழும் என்றியேல்-உன்கர்த்தாவாகிய அருகபரமன் மனாதிகளாகிய கருவிகளினின்றறியுமறிவை நீங்கிச் சர்வமுங் கண்டிருக்குமென்று கூறினாய். அப்படியாயின்,—உருவு கொண்டு நின்றதென்னில் உண்டுதான் மனாதிகள் - அவனைச்சரீரம் பொருந்தி நின்றதென்றுகூறின் மனமுதலாகிய கருவிகளுண்டாம். அவையொழிந்து காண்டற்கு வழியுமில்லை,—ஒருவி நின்றதென்னில் அத்தம் ஒன்றையும் உணர்ந்திடான் - அவனைச் சரீரநீங்கிநின்றதென்று கூறின், அவன் எல்லாவற்றையுங்கண்டு வாழுமென்று சொல்லுதலும் மித்தியாவாதமாய் மற்றொன்றையு முணர்ந்ததில்லையாவன்,—பொருள் தெரிந்து போகை காலம் ஒன்றிலே புணர்ந்திடான் - ஒருபொருளை அறிதற்குக் கருவியானமூன்றுகாலத்தையும் ஒருகாலத்திலே உணருந்தன்மையனு மல்லன் என்க.

ஆர்வ கோப மான வைய டைந்தொ றுப்ப வர்க்கெலாஞ்
சேர்வ தின்மை செப்பி லின்று சீவன் மேவு காயமா
லோரு மன்னர் போல வேயு யிர்க்க ளித்த லென்றியே
லேர்கொள் பொன்னெ யிலிடத்தி ருத்தல் பெற்ற தென்கொலோ.

(இ-ள்.) ஆர்வ கோபமானவை அடைந்து ஒறுப்பவர்க்கெலாஞ் சேர்வது இன்மை செப்பில் இன்று சீவன் மேவு காயமால்-காமக்குரோதமுதலியவற்றோடுங்கூடி அக்கூட்டரவு தீதென்றறிந்து நீக்கப்படுவோர்க்கெல்லாம் இன்று முத்தியடைதலில்லையாம்; சொல்லுமிடத்து உன்னருகபரமனுஞ் சீவனோடுகூடின காயமுடைமையால். அற்றன்று,—ஒருமன்னர் போலவே

உயிர்க்கு அளித்தலென்றியெல் - க்ஷத்திரியதன்மமான சாத்திரத்தை ஆராய்ந்த ஒப்பற்ற அரசனைப்போல உயிர்க்குத் தலையளிசெய்தலே அருகபரமனுக்கு முறைமையென்று கூறுவையாயின், அவ்வரசனைப்போலத் துஷ்டநிக்கிரகமுஞ் சிஷ்டபரிபாலனமுஞ் செய்யவேண்டும்,—எர்கொள் பொன்னெயிலிடத்து இருத்தல் பெற்றது என்கொலோ-அவ்வரசனைப்போல ஒருநிலத்திலிருந்து துஷ்டநிக்கிரகமுஞ் சிஷ்டபரிபாலனமுஞ் செய்யாது அழகிய பொன்னெயில்வட்டத் திருக்கப்பெற்றதியாது. அதுவுமன்றி "மருவி நின்று வழிபட்டவர்க்கு மலைவுற்றவர்க்கு மனமொத்திடுங் குரிசில்" என்று நீ முன்னர்க்கூறுகையாலும் அரசர் இவ்வுலகத்திருத்தலாலும் உன்னருகபரமன் அரசனையொக்குந் தன்மையுமுடையனல்லன் என்க. (ச)

சொல்ல தொன்று கொண்டி கலி னாத்த னாட வேசொலி
னில்லை யாம நாதி தானி யம்பு மாற தெங்ஙனே
நல்ல வாம நாதி தான வர்க்கு நாட வேயிலை
யொல்லை யூம ரூம ருக்கு ரைத்த வாற தொக்குமே.

(இ-ள்.) சொல்லது ஒன்று கொண்டு இகலின் ஆத்தன் நாடவே சொலின் உன் அநாதியருகபரமனாகிய சகலாத்தன் ஒருசொல்லைக்கொண்டு ஆதியருகபரமனாகிய இகலாத்தன்கேட்க மாறுபாடில்லாத பொருளைச் சொன்னானென்று கூறின்,—இல்லையாம் மநாதிதான் இயம்பு மாறது எங்ஙனே - உன்னாதியருகபரமனுக்கு மநாதிகளில்லையென்று நீ கூறுகையால் அநாதியருகபரமனுடன் ஒருசொற்கேட்டுப் பலவிதமாக நூல்சொன்னபடி எப்படி? அஃதன்றியும்,—நல்லவாம் மநாதிதான் அவர்க்கு நாடவே இலை-உன்னாதியருகபரமனுக்கு நன்றாகியமநமுதலாகிய கருவியும் அறிதற்கில்லையாகையால் அவன் கேட்டபடி எப்படி,—ஒல்லை ஊமர் ஊமருக்கு உரைத்த வாறது ஒக்குமே - அநாதியருகபரமனொருசொற்சொல்ல அதனையாதியருகபரமன்கேட்டுப் பலவிதமாக நூல்செய்தானென்று நீசொல்லுமது, ஊமர்சொல்ல வூமர்கேட்டு நூல்செய்தாரென்னுந் தன்மையையொக்கும் என்க.

ஒல்லை-விரைவு, ஒருமாத்திரை. சொல்லதொன்றென்பது-பஞ்சாத்திமயம்.(ரு)

இன்ப பூமி சேரி கலி னாத னிவ்வி ருநிலத்
துன்ப மங்கு ணர்ந்தி டாமை யிங்கு வந்த சொல்லிடா
னின்ப பூமி யில்லி ருந்தி ருந்தி யாவு மெய்திடிற்
றுன்ப பூமி யாமு ணர்ந்து சொல்ல வல்ல தில்லையே.

(இ-ள்.) இன்ப பூமி சேர் இகலில் நாதன் இவ்விருநிலத் துன்பம் அங்கு உணர்ந்திடாமை இங்கு வந்த சொல்லிடான் - புண்ணியபூமியாகிய பொன்னெயில்வட்டத்திருக்கிற மாறுபாடில்லாத அநாதியருகபரமன் இப்பெரிய பூமியிடத்துண்டாகிய துன்பங்களை அறியானாகையாலும் மநாதிகளில்லையாதலாலும் இப்பூமியிலுண்டானவற்றை இப்படிச் சொல்லென்று சொல்லமாட்டான்,—இன்ப பூமியில் இருந்திருந்து யாவும் எய்திடில்-புண்ணியபூமிப் பொன்னெயில்வட்டத்திருந்து அநாதியருகபரமன் பூமியிற்றுன்பமியாவையுமறிந்து சாத்திரஞ்செய்யச் சொன்னானென்று சொலின்;—துன்பபூமி யாம் உணர்ந்து சொல்ல வல்லது இல்லையே - புண்ணியபூமியாகிய

பொன்னெயில்வட்டமுந் தான்பபூமியாகையால் நீ தலைமயங்கச் சொல்லுஞ் சொல்லுக்கு யாமறிந்துசொல்லுஞ் சொல்லில்லையாம் என்க.

சொல்லவல்லதில்லையென்பது - அருகன்றலைமயங்கிக் கூறுகையால் அவனை யிகழ்ந்து கூறியது. இருந்திருந்தென்றது - விரைவுச்சொல். சகலாத்தர் - ஆநந்தபூமியராதலால் அறிந்ததெங்ஙனமென்றாயிற்று. (சு)

நிறைந்து காய மோடு சீவ னின்ற தாகி லிவ்வுடல்
குறைந்த போது தானு மித்தொ டொக்க வேகு றைந்திடு
மிறந்து போகு மிக்க டமி றந்த போது நீர்குடத்
துறைந்து டைந்தி டக்கு டமு லர்ந்த வாற தொக்குமே.

(இ-ள்.) நிறைந்து காயமோடு சீவன் நின்றதாகில் இவ்வுடல் குறைந்தபோது தானும் இத்தொடு ஒக்கவே குறைந்திடும் - இச்சரீரத்தோடு ஆன்மாவானது நிறைந்து நிற்குமென்று கூறினாய்; அங்ஙனநிறைந்துநின்றதாகில் ஆன்மாநின்றகாயங் குறைந்தபோது ஆன்மாவுங்குறைந்து அறிவு குறையவேண்டும். அன்றியும்,—இறந்து போகும் இக்கடம்-கெட்டுப்போகின்ற இச்சரீரமானது,—இறந்தபோது - கெட்டபோது,—நீர் குடத்து உறைந்து உடைந்திடக் குடம் உலர்ந்தவாறது ஒக்குமே-குடத்தின்கணிறைந்துநின்றநீர் குடமுடைய அந்நீருங்கெட்டாற்போல, ஆன்மாவுங்கூடக் கெடவேண்டுமாகையால் ஆன்மா சரீரமுழுது நிறைந்து நிற்குமென்று சொலவாயல்லை என்க. (எ)

கண்ட நூற ருந்தன் மாத்தி காய மோட தன்மமு
முண்டு மீது கீழு லாவி யுற்று நின்றி டப்பொருள்
கொண்ட தென்னி லத்த மிவ்வி ரண்டு தன்மை கூடிடா
வண்டு புட்கள் போலெ னின்வ ழங்கி டாக ணத்திலே.

(இ-ள்.) கண்டநூல் தருந் தன்மாத்தி காயமோடு அதன்மமும் உண்டு மீது கீழ் உலாவி உற்று நின்றிடப் பொருள் கொண்டதென்னில்-ஆன்மாவானது தான்செய்த புண்ணியத்தாலே தன்மாத்திகாயத்தை யெடுத்துக்கொண்டு மேலாகப்பொருந்தி நன்மையைப்புசித்து அதிலே பரந்திடுமென்றும், தான்செய்தபாவத்தாலே அதன்மாத்திகாயத்தை யெடுத்துக்கொண்டு கீழாகப்பொருந்தித் தீமையைப்புசித்து அதிலே பரந்திடுமென்றும் இப்படியிரண்டுகாயத்தை ஒருகாலத்திலே மாறிமாறிக் கைக்கொண்டதென்று அருகபரமன் அருளியநூல் சொல்லிற்றென்னின்,—அத்தம் இவ்விரண்டு தன்மை கூடிடா - ஆன்மா ஒருகாலத்திலே நின்று இரண்டுரு வெடுத்துக் கொள்ளமாட்டாது,—வண்டு புட்கள் போலெனின் - மயிர்க்குட்டிப்புழு வண்டானாற்போலவும் மற்றொருபுழு வேட்டுவாளியானாற்போலவும் வேறுபடக் காயமெடுத்துக்கொள்ளுமென்று நீகூறின்,—வழங்கிடா கணத்திலே-அந்தஜந்துக்களுங் கணப்பொழுதிற் பேதித்தனவில்லையாம். ஆகையால், ஆன்மா வேற்றுருவத்தை விரையவெடுத்துக்கொள்ளமாட்டாது என்க.

ஆன்மா தானின்ற தூலகாயத்தை விட்டுப்போய்ச் சூக்குமகாயத்துடனே நின்று நன்மைதீமைப்பயனை அநுபவிக்குமதொழிந்து நின்ற தூலகாயத்திலே பேதப்பட்டு வேற்றுருவெடாதென்பது கருத்து. அதன்மம் - அதன்மாத்திகாயத்தை. பொருள் - அத்தம் - இரண்டும் ஆன்மா. புட்களென்றது - விகாரம். (அ)

நீடு பாவ புண்ணி யங்க ளானி ரய வானகங்
கூடு வோர்க ளின்று நின்று கூட்டு வோர்க ளின்மையி
னோடு மாக ணைத்தி றத்தி னுற்ற வாறு ணாத்தியேல்
வீடு மாக ணைக்கு நாடும் வில்லி போல வேண்டுமே.

(இ-ள்.) நீடு பாவ புண்ணியங்களால் நிரய வானகம் கூடுவோர்கள் இன்று நின்று கூட்டுவோர்கள் இன்மையின் - ஆன்மாக்கள்செய்த புண்ணியபாவங்களை அறிந்துநின்று அவற்றிலே செலுத்துவிப்போன் ஒருகர்த்தாவில்லையென்று நீசொல்லின் மிக்கபாவங்களால் நரகங்களையும் மிக்கபுண்ணியங்களாற் சுவர்க்கங்களையும் பொருந்திநின்று அநுபவிப்பாரில்லையாம்,—ஓடு மாகணைத் திறத்தின் உற்றவாறு உணாத்தியேல் - விரைந்த செலவையுடைய பெரிய அம்பு இலக்கிலேபட்டாற்போலச் செய்யப்பட்ட புண்ணியபாவங்கள் செய்தவனிடத்தே விரையத்தானேசென்று பற்றுமென்று நீ சொல்லுகின்றாயாயின்,—வீடு மா கணைக்கு நாடும் வில்லி போல வேண்டுமே - அப்படிவிடப்பட்ட பெரியகணைக்கும் இலக்கைநாடி யெய்வானொரு வில்லிபோல வேண்டுமாதலால், ஆன்மாக்கள்செய்த கன்மங்களை அநுபவிக்கும்படி கூட்டுவான் ஒருகர்த்தாவேண்டும் என்க.

கூட்டுவோருமின்றென உம்மை தொக்கது. வீடுமாகணை - விகாரம். (கூ)

ஏண தொன்று புற்க லத்தி னெய்து மென்னி னாசமே
காண லாகு மக்க டங்க ழிந்த தன்மை யில்லவை
பூண வேண்டு மேலு றும்பொ ருத்த மின்மை யொன்றினின்
மாண வேய ணுப்பொ ருணி கண்ட வாதி வைத்ததே.

(இ-ள்.) ஏணது ஒன்று புற்கலத்தின் எய்துமென்னின் - நீ கூறிய புற்கலப்பொருளாகிய கல்லுமிரும்புமரமும் ஓரறிவையுடையவென்று நீ கூறின்,—நாசமே காணலாகும் அக்கடம் கழிந்த தன்மை இல் அவை-ஓரறிவையுடைய வெல்லாந்தானே கெடுதல்காணலாகும்; அக்கல்லிரும்புகள் தானே வடிவுகெடுமுறைமை காண்டலில்லை. அன்றியும்,—பூண வேண்டும் மேல் உறும் பொருத்தம் இன்மை - பொருந்த ஓரறிவுண்டாயிற் கல் இரும்பு மேல் நரகசுவர்க்கம் பொருந்தவேண்டும் அதுபொருந்தாமையுங் காணலாகும்—ஒன்றினின் மாணவே அணுப்பொருள் நிகண்டவாதி வைத்ததே- ஒன்றினும் ஓரறிவுடைத்தென்று சொல்லப்படாத கல்லிரும்புகள் அணுப்பொருளாக மாட்சிமைப்படவைத்து நிகண்டவாதி நீசொன்னாய் இதனை வேறு சொல்வாரில்லை என்க.

காணலாகுமென்பதனை இரண்டிடத்தினுங்கூட்டுக. பொருத்தமு மென்னுமும்மை தொக்கின்றது. மாணவேயென்றது - இகழ்ச்சிக்குறிப்பு. ஏணதொன்று - பற்றினால் வலியுள்ளது. (கo)

ஆறு காரி யங்கண் மாற வேத வங்க ளாமெனின்
மாறி வாணி கஞ்செ யாதி ருக்க வந்தி டாதன
மீறி லாத வூழ தென்னி னெங்கு முள்ள தூழதே
பேறு காரி யம்வி டப்பி றப்ப தில்லை பேசிலே.

(இ-ள்.) ஆறு காரியங்கள் மாறவே தவங்கள் ஆமெனின் - அறுவகை யுவர்ப்புக்களுநீங்கவே தவமாமென்று நீகூறின்,—மாறி வாணிகம் செயாது இருக்க வந்திடா தனம் - பொருள்களைப் பரிவர்த்தனைசெய்து வாணிகஞ் செய்யாதிருப்பப் பொருள்வந்தடையாது. அதுபோல, உவர்ப்பு மாறி ஒரு தவஞ் செய்யா திருந்தாற் றவம்வந்து கூடாது,—ஈறிலாத ஊழதென்னின் எங்கும் உள்ளது ஊழதே-கேடில்லாத முன்னைவினைப்பயனாலே தவமுண் டாமென்று சொல்லின் உவர்ப்பைக்கைவிடுதன் முதலாயினவும் முன்னை வினைப்பயனுமாதலால்,—பேறு காரியம் விடப் பிறப்பது இல்லை பேசிலே- தவமாகியபேறு தவஞ்செய்தலாகிய காரியத்தைவிட்டால் உண்டாகாது சொல்லுங்காலத்து என்க.

கந்த ரச ரூப பரிச சத்த பரிணாமம் ஆறும் உவர்ப்புக்கள். தவவொழுக்கங்க ளினின்று தவஞ்செய்தாலல்லது ஆறுகாரியத்தை விடுதலினாலே தவஞ்சித்தியாதெ ன்பது கருத்து. ஆறுகாரியம்—உழவு, தொழில், வரைவு, வாணிகம், சிக்ஷை, சிற் பம் என்பாருமுளர். (கக)

உடல்வ ருந்தல் மாத வங்க ளுறுதி யென்று ரைத்திடிற்
படவ ருந்து நோயி னோர்கள் படர்வர் பொன்னெ யிலெனாய்
திடவ ருந்த வின்ப மிச்சை செய்தல் செய்தல் செய்தியேற்
கெடவ ரிந்தி டாயு னாசி கேடி லின்ப முன்னியே.

(இ-ள்.) உடல் வருந்தல் மாதவங்கள் உறுதி யென்று உரைத்திடில்- சரீரம்வருந்துதலே பெரியதவத்திற்கு உறுதியென்று நீசொல்லின்,—பட வருந்து நோயினோர்கள் படர்வர் பொன்னெயில் எனாய் - துக்கமாகவுடல் வருந்தச் சரீரவின்பத்துக்கு மாறுபாடுசெய்தலைச் செய்வதுவே கேடில்லா தமோக்ஷத்தின் செய்தியென்றமையான் நோயினான் மனோதுக்கிகளாய் மெலிவோர் பொன்னெயில்வட்டஞ் சேர்குவரென்று நீசொல்லாய்,—திட வருந்த இன்பம் இச்சை செய்தல் செய்தல் செய்தியேல் - முத்தியின்பத் தை ஆசை செய்தல் சரீரம்வருந்தச் செய்தற்றன்மையே யென்னின்,— கெட அரிந்திடாய் உன் நாசி கேடில் இன்பம் உன்னியே - அந்தமுத்தியின் பத்தைக்கருதி உன்மூக்கைக் கெடுக்கும்படி அறுத்திடுவாயாக என்க.

திடமென்பது - திடவெனநின்றது. வருந்தவென்பது - உடல்வருந்தவென் றுயிற்று. செய்தி - தன்மை. (கஉ)

பூர்வ கன்ம மற்றி டப்பு சித்த பின்பு பொன்னெயி
னேர்வ தென்னி னக்கன் மத்து நிச்ச யமிலா மையிற்
றீர்வ தின்மை தீரின் வாயில் சேர்வ தின்மை தெண்கட
னீர்வ றந்த பின்பு பூனை மீன ருந்த நின்றதே.

(இ-ள்.) பூர்வ கன்மம் அற்றிடப் புசித்த பின்பு பொன்னெயில் நேர்வ தென்னின் - முன்ஜநநங்களிலுள்ள கருமந்தொலைய இந்தஜநநத்திலே புசி த்தபின்பு பொன்னெயில்வட்டத்தைச் சென்று பொருந்துமென்று நீசொ ல்லின்,—அக்கன்மத்து நிச்சயம் இலாமையில் தீர்வது இன்மை - அக்கன் மத்துக்களவின்மையால் நியமிக்க அறிவது இல்லையாய்ப் புசித்துத்தொலை யாதாம்,—தீரின் வாயில் சேர்வது இன்மை - கன்மம்புசித்துத் தொலைவு

பெற்றால் இந்திரியங்களுடன் சத்தாதிகூடுவதின்மையாம்; அவைகூடாதொழியவே மோக்ஷவுபாயமான தவஞ்செய்தலுமில்லையாம்; ஆதலால், கன்மத்தைத் தொலையப்புசித்துப் பொன்னெயில்வட்டத்தை அடைவோமென்று நீகருதியிருத்தல்,—தெண்கடல்நீர்வறந்த பின்பு பூஞைமீன் அருந்தநின்றதே - பூனை தெளிந்தசமுத்திரத்து நீர்வற்றினவுடனே மீன்றின்னக்கடவோமென்றுகருதி அதுவற்றுமளவும் பார்த்திருந்ததன்மையை ஒக்கும் என்க.

ஏகாரம்-தேற்றம். தெண்கடலென்றதனுற் கன்மமளவில்லையென்பது கருத்து.

கூறு கூவன் மன்னு மக்கு டங்கு றித்து நீள்கரை
யேற லுற்ற தன்மை நீயொ ருத்த ரின்றி யேறுதல்
வேறொ ருத்த னக்கு டத்தை மீது நின்றெ டுக்கவே
யேற லுற்ற தன்மை யிற்சி வன்றி றத்து நின்றிடே.

(இ-ள்.) கூறு கூவல் மன்னும் அக்குடம் குறித்து நீள் கரை ஏறல் உற்ற தன்மை நீ ஒருத்தர் இன்றி ஏறுதல் - சொல்லப்பட்ட கிணற்றினுட்கிடக்குங்குடம் கரையைநோக்கித் தானேயேறினாற்போலும் ஒருகர்த்தாவின்றிப் பொன்னெயில் வட்டத்தை நீசேர்குவமென்னுந்தன்மை,—வேறு ஒருத்தன் அக்குடத்தை மீது நின்று எடுக்கவே ஏறல் உற்ற தன்மையில் சிவன் திறத்து நின்றிடே - ஒருத்தன் அந்தக்கிணற்றிற்கிடந்த குடத்தை மேலேநின்றெடுக்க அக்குடங்கரையேறிய தன்மைபோலக், கர்த்தாநின்று கன்மத்தைத்தொலைவித்து மேலாகிய வீடுபேற்றைக்கொடுக்கவேண்டும்; அப்படிக்கொடுப்பான் சிவன் ஆகையால் அந்தச்சிவனையே தெய்வமாகக்கொண்டு அவனருளிய வேதாகமங்களின்றிறமாகிய சரியைகிரியாயோகஞானங்களிலே நீயுநிற்பாயாக என்க. (கச)

நிகண்டவாதிமதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கசுச.

---

## ஆசீவகன்மதம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்னுயி ரதற்குப் போல வெவர்க்குமொத் திருப்ப னென்று
தன்னுயிர் வருந்தத் தானுந் தலையினைப் பறித்துப் பார்மேன்
மன்னுயி ரெவற்றி னுக்கும் வருந்தவே யறங்கள் சொல்லு
மன்னதோர் வாய்மை யாசீ வகனம ணர்களிற் கூறும்.

(இ-ள்.) என் உயிரதற்குப் போல எவர்க்கும் ஒத்து இருப்பனென்று-எனதான்மாவுக்கு யான்கிருபைசெய்யுந் தன்மைபோல எல்லாவான்மாக்களுக்கும் யான்கிருபைசெய்திருப்பனென்று சொல்லின்,—தன் உயிர் வருந்தத் தானும் தலையினைப் பறித்து - தன்னுடையவான்மா வருத்தப்படத் தன்றலைமயிரைப்பறித்து,—பார்மேல் மன் உயிர் எவற்றினுக்கும் வருந்தவே அறங்கள் சொல்லும் அன்னதோர் வாய்மை ஆசீவகன் அமணர்களில் கூறும் - உலகின்கணிலைபெற்ற ஆன்மாக்களெல்லாவற்றினுக்கும் வருத்த

முறுவதுவே அறங்களாகச் சொல்லுமென்னுந் தன்மையாகிய சொல்லை அமணர் இருவகையாரில் ஆசீவகன் சொல்லும் என்க.

ஓர் - அசை. தலை - ஆகுபெயர். சினையுமுதலுமயங்கிற்று. (க)

வரம்பிலா வறிவ னாதி வைத்தநூற் பொருள்க டாமு
நிரம்பவே யணுக்க ளைந்து நிலம்புன றீகால் சீவன்
பரந்திவை நின்ற பான்மை பாரது கடினஞ் சீதந்
தரும்புனல் சுடுந்தீ வாயுச் சலித்திடு முயிர்போ தத்தாம்.

(இ-ள்.) வரம்பிலா அறிவன் ஆதி வைத்தநூற் பொருள்கடாமும் நிரம்பவே அணுக்கள் ஐந்து - அநந்தஞானனாகிய அருகபரமன் ஆதியிலே யுண்டாக்கப்பட்ட நூலிற் பொருள்கடாமும் பூரணமாக ஆன்மாக்களைந்தென்றுகூறும்; அவையாவன,—நிலம் புனல் தீ கால் சீவன்-பிருதிவி அப்பு தேயு வாயு ஆன்மா,—பரந்து இவை நின்ற பான்மை பாரது கடினம் சீதம் தரும் புனல் சுடும் தீ வாயுச் சலித்திடும் உயிர் போதத்தாம்-அவ்வான்மாக்களைந்தும் விரிந்துநின்ற முறைமைசொல்லிற் பிருதிவி கடினமாம், அப்பு சைத்தியமாம், அக்கினி உஷ்ணமாம், வாயு சலநமாம், ஆன்மா போதத்தையுடைத்தாம் என்க.

ஈற்றில் நூல் கூறுமென வொருசொல் வருவித்துரைக்க. ஆமென்பதனை ஐந்தினோடுங்கூட்டுக. (உ)

பார்புனல் பரக்குங் கீழ்மேற் படர்ந்திடுந் தேயு வாயுச்
சேர்வது விலங்கி னுள்ள மவற்றொடுஞ் சேரும் வேறு
சார்வது பெற்ற போது சார்ந்தவப் பொருளின் றன்மை
நேர்வது மாகி நிற்கு மிதுபொரு ணிகழ்த்து மாறே.

(இ-ள்.) பார் புனல் பரக்கும் கீழ் - பிருதிவியும் அப்புவும் கீழேவிரிவையுடைத்தாய்நிற்கும்,—மேற் படர்ந்திடும் தேயு வாயு - தேயுவும் வாயுவுமேலே விரிவையுடைத்தாய் நிற்கும்,—சேர்வது விலங்கின் உள்ளம் அவற்றொடுஞ் சேரும் - ஆன்மாவானது காயத்தோடுஞ்சேருஞ் சேர்வையை நீங்கினாற் பிருதிவி அப்புத் தேயு வாயுவாகிய நாலான்மாக்களோடுங் கூடிநிற்கும்,—வேறு சார்வது பெற்ற போது சார்ந்த அப்பொருளின் தன்மை நேர்வதும் ஆகி நிற்கும்-இவற்றை வேறுபடக் காயத்தைச் செறிவாகப்பெற்றவிடத்துக்காயத்தையிடமாகக்கொண்டு அதனது தன்மை தானாகப்பொருந்தி நிற்கும்,—இது பொருள் நிகழ்த்தும் ஆறே - இது பஞ்சான்மாக்கள் செய்தியைச் சொல்லும்வழி என்க. (ங)

உணர்தரா வணுக்க ணான்கு மொன்றுகெட் டொன்ற தாகா
புணர்தரா வொன்றிற் புக்கொன் றுயினும் பொருந்தி வாழு
மணைதரா புதிய வந்திங் கழிதரா பழைய வான
விணைதரா வொன்றொன் றாகி மாறுத லொன்று மின்றே.

(இ-ள்.) உணர்தரா அணுக்கள் நான்கும் - ஜீவனையொழிந்த நான்கான்மாக்களும் ஒன்றையொன்றறியுந் தன்மையல்லவாம்,—ஒன்று கெட்டு ஒன்றது ஆகா - அவ்வான்மாக்கணான்கும் ஒன்றுகெட்டொன்றுமாகா,—

புணர்தரா ஒன்றில் புக்கு ஒன்று - ஓரான்மாவினிடத்திலே புக்கு ஓரான்மாகூடிநில்லாது,—ஆயினும் பொருந்தி வாழும் - அப்படிக் கூடாதாயினுங் காயமாமிடத்துபபொருந்திநிற்கும்,—அணைதரா புதிய வந்து இங்கு - அவ்வான்மாக்கள் அநாதியிற்கூட்டமன்றி இவ்விடத்துப் புதிதாகவந்து கூடுவதுஞ்செய்யா,—அழிதரா பழைய வான - பழையவான்மாத்தன்மைகழிதலு முண்டாகாது,—இணைதரா ஒன்றொன்றாகி-அவ்வான்மாக்கள் கூடுமிடத்துச் சேரக்கூடுவதொழிந்து ஓரொன்றாகக் கூடுவதுஞ்செய்யா,—மாறுதல் ஒன்றும் இன்றே - இவையிற்றின்செய்தி ஒருக்காலும் ஒழிவதில்லை என்க. (ச)

கொண்டுமுன் விரித்த னீட்டல் குறுக்குதல் குவித்த லூன்ற
லுண்டுதின் றுலர்த்தன் மீட்ட லுடைத்திட லொன்று மொண்ணு
விண்டுபின் புறம்பும் போகும் வேறுநின் றுள்ளு மேவும்
பண்டுமின் றென்று மெங்கும் பரந்தொரு தன்மைப் பாலே.

(இ-ள்.) கொண்டு முன் விரித்தல் நீட்டல் குறுக்குதல் குவித்தல் ஊன்றல் உண்டு தின்று உலர்த்தல் மீட்டல் உடைத்திடல் ஒன்றும் ஒண்ணு-முன்கூறியவான்மாக்களை முன்னே யுண்டாக்கிக்கொண்டு பரப்புதலும் அதனைவர்த்திப்பித்தலும் அதனை எல்லையிலே குறுக்குதலும் சேரவொடுக்குதலும் அவற்றிலே யுற்றுநிற்றலும் அதனை உண்டு தின்று கெடுத்தலும் மீளவுண்டாக்குதலும் அவற்றைப் பிளந்திடுதலுமென்னு மிவற்றின் ஒன்றுஞ் செய்யவொண்ணாது,—விண்டு பின் புறம்பும் போகும் - விரிந்த அண்டகோளகைக் கப்புறத்தும் போகும்,—வேறு நின்று உள்ளும் மேவும் - அதற்கு வேற்றுமைப்பட்டு உருக்களுள்ளும் பொருந்தும்,—பண்டும் இன்று என்றும் எங்கும் பரந்து ஒருதன்மைப் பாலே - முற்காலத்தும் இக்காலத்தும் எக்காலத்தும் எவ்விடத்தும் நிறைந்து ஒருதன்மைப்பகுதியாயிருக்கும் என்க.

விரிதல் - பரப்புதல், அஃதாவது சிருஷ்டி. நீட்டல் - வர்த்திப்பித்தல், அஃதாவது திதி. குறுக்கல் - ஒடுக்குதல், அஃதாவது சங்காரம். குவித்தல்-ஒன்றினுட்செறித்தல், அஃதாவது சருவசங்காரம். ஊன்றல் - உற்றுநிற்றல், அஃதாவது முத்தியின்கட்சேறல். உண்டுதின்றுலர்த்தல்-உண்டுதின்றுகெடுதல், தின்றபகுதியு முணவாகலின் உண்டுதின்றென்றுகூறிற்று. மீட்டல் - மீளவிடுதல், அஃது உமிழ்தல். உடைத்திடல் - சின்னப்படுத்தல், அஃதண்டங்களைக்கெடுத்தல். இவ்வணுக்கள் ஒருவரால் நியமிக்கப்பட்டனவல்ல. (ரு)

கண்ணினிற் காண வொண்ணா சனித்தந்தக் கன்மத் தாலே
நண்ணிடு முருக்க ளாகி நின்றபின் நரரோ காண்பார்
விண்ணினிற் றேவர் காண்ப ரோரணு மிக்க நான்கா
யெண்ணிய பொருள்க ளெல்லா மிசைவதென் றியம்பு மின்னே.

(இ-ள்.) கண்ணினில் காண ஒண்ணா சனித்து அந்தக் கன்மத்தாலே நண்ணிடும் உருக்களாகி - முற்கூறிய அணுக்களிந்தில் ஆன்மாவென்னுமணுப்பொருள் கண்ணிற்காண்டற்கரிதாகி அக்கன்மத்தாலே ஜநித்து உருக்களாகப் பொருந்திநின்றிடும்,—நின்றபின் நரரோ காண்பார் - அக்

கன்மவுருவொடு நின்றபின் நரரோ காண்பார்,—விண்ணினில் தேவர் காண்பார் - விண்ணாகிய பொன்னெயில்வட்டத்திற் றேவனாகிய அருகபரமனேகாணவல்லான்,—ஓர் அணு மிக்க நான்காய் எண்ணிய பொருள்களெல்லாம் இசைவதென்று இயம்பும் இன்னே- ஆன்மவணுவொன்றும் தன்னையொழிந்த வணுக்கணான்குமாய் எண்ணப்பட்ட வுருக்களெல்லாவற்றுள்ளும் இப்படிச்சென்று பொருந்தும் என்று கண்டநூல்சொல்லும் என்க.

நான்காயென்பதனை நான்குமாயென வும்மைவிரிக்க. (சு)

ஒன்றினை யொருவி மூன்றங் குற்றிடா திரண்டு விட்டு
நின்றிடா திரண்டு கூடு நெறிநில நான்கு நீர்மூன்
றின்றிரண் டழல்கா லொன்று யிசைந்திடும் பூமி யிவ்வா
றென்றுநீர் தீகா லாகி யீண்டுவ தென்றி யம்பும்.

(இ-ள்.) ஒன்றினை ஒருவி மூன்று அங்கு உற்றிடாது-ஆன்மாவொழிந்து நிலனாதியானஅணுக்கணான்கும் தம்மிற் கூடுமிடத்து ஓரணுவைவிட்டு மூன்றணுத்தம்மிற்கூடி நில்லாது,—இரண்டு விட்டு நின்றிடாது இரண்டு-இரண்டணுவை விட்டு இரண்டணுக்கூடாது, (எனவே கூடுமிடத்திவை நான்குங்கூடி நிற்குமென்பது கருத்து.)—கூடு நெறி - இவை நான்கும் தம்மிற் கூடிநிற்கு மென்று சொல்லுமுறைமையாவது எங்ஙனமென்னில்,—நிலம் நான்கு நீர் மூன்று இன்று இரண்டு அழல் கால் ஒன்றாய் இசைந்திடும் - இப்பொழுது பிருதிவியில் கந்தரசரூபபரிச நான்கும், அப்புவில் இரசரூபபரிச மூன்றும், அக்கினியில் ரூபபரிசமிரண்டும், வாயுவிற் பரிசமொன்றுமாகிய குணங்கள் பொருந்தியிருக்கும்,—பூமி இவ்வாறென்று நீர் தீ காலாகி ஈண்டுவதென்று இயம்பும் - இந்தமுறைமையிலே பிருதிவியப்புத்தேயுவாயுவென்று கூறும் அணுக்களின் குணங்கள் கூடிநிற்கு மென்று சொல்லும் நூல்கள் என்க. (எ)

வெண்மைநன் பொன்மை செம்மை நீல்கழி வெண்மை பச்சை
யுண்மையிவ் வாறி னுள்ளுங் கழிவெண்மை யோங்கு வீட்டின்
வண்மைய தாகச் சேரு மற்றவை யுருவம் பற்றி
யுண்மையவ் வொட்டுத் தீட்டுக் கலப்பினி லுணரு மென்றான்.

(இ-ள்.) வெண்மை நன்பொன்மை செம்மை நீல் கழிவெண்மை பச்சை உண்மை இவ்வாறின் உள்ளும் - வெண்மையும் நன்றாகிய பொன்மையும் சிவப்பும் நீலமும் மிக்கவெண்மையும் பச்சையுமாகிய ஆறுவன்னமுள; இவ்வாறுவன்னத்தினுள்ளும்,—கழி வெண்மை ஓங்கு வீட்டின் வண்மையதாகச் சேரும்-மிக்கவெண்மையென்று கூறிய வன்னமே பெரிய பொன்னெயில் வட்டத்துக்குச் சிறப்புடைத்தான வன்னமாகச்சேரும்,—மற்றவை உருவம் பற்றி - ஒழிந்த வெண்மை பொன்மை சிவப்பு நீலம் பச்சை யென்னுமைந்து வன்னமும் மற்றை அணுக்கணான்கினுன வடிவுகளைக்கூடிநிற்க,—உண்மை அவ்வொட்டுத் தீட்டுக் கலப்பினில் உணருமென்றான் - அந்தவான்மாவானது இவ்வுருக்களைப்பற்றுதல் இழிதல் கூடுதல் இவையிற்றால் அறியுமென்றான் என்க.

உண்மையென்றது - ஆன்மா. அவ்வென்றது - சுட்டு. அவ்வுண்மையெனக் கூட்டுக. இன் - ஐந்தனுருபு, ஏதுப்பொருண்மைக்கண் வந்தது. (அ)

பேறிழ விடையூ றின்பம் பிரிவிலா திருக்கை மற்றும்
வேறொரு நாட்டிற் சேறல் விளைந்திடு மூப்புச் சாதல்
கூறிய வெட்டு முன்னே கருவினுட் கொண்ட தாகுந்
தேறிய வூழிற் பட்டுச் செல்வதிவ் வுலக மென்றான்.

(இ-ள்.) பேறு இழவு இடையூறு இன்பம் பிரிவிலாதிருக்கை மற்றும் வேறொரு நாட்டிற் சேறல் விளைந்திடு மூப்புச் சாதல் கூறிய எட்டும் முன்னே கருவினுட் கொண்ட தாகும் - செல்வமுதலிய கூடுதலும் அவை நீங்குதலும் துக்கமுறுதலும் சுகமுறுதலும் உடலொடுநீங்காமையும் வேற்று நாட்டுச்சேறலும் விருத்தாவத்தையும் மரணமுமென்று சொல்லப்பட்ட எட்டும் முற்பிறப்பின் வினையினுள்ளதாய்க் கர்ப்பகோளகையிலே கைக்கொள்ளப்பட்டுள்ளதாம்.—தேறிய ஊழிற்பட்டுச் செல்வது இவ்வுலகமென்றான் - ஆதலால், தெளிவாக முற்பிறப்பிற்செய்த வினையிலகப்பட்டு இம்முறைமையிலே நடந்து செல்வது இவ்வுலகமென்றான் என்க. (கூ)

புண்ணிய பாவ மென்னு மிரண்டணுப் பொருந்த வைத்தே
யெண்ணிய விவற்றி னோடு மேழென வெங்க ளோடு
நண்ணிய வொருவன் கூறு ஞானமிவ் வாற தென்று
கண்ணிய கருத்தி னோர்கள் கதியினைக் காண்ப ரென்றான்.

(இ-ள்.) புண்ணிய பாவமென்னும் இரண்டு அணுப் பொருந்த வைத்தே எண்ணிய இவற்றினோடும் ஏழென - புண்ணியபாவமென்னும் இரண்டினோடும் அணுக்களைந்தையுங் கூடவைத்து இவற்றோடும் ஏழெனவெண்ணி,—எங்களோடு நண்ணிய ஒருவன் கூறும் ஞானம் இவ்வாறதென்று கண்ணிய கருத்தினோர்கள் கதியினைக் காண்பரென்றான் - எங்கள் சமயத்தினோடுபொருந்திய கர்த்தாவான ஒப்பற்ற அருகபரமனருளிய ஞானம் இத்தன்மைத்தென்று அதனைக்கூடக் கருதுங்கருத்தை யுடையவர்களே நற்கதியாகிய பொன்னெயில்வட்டத்தைக் காணலுறுவார் என்றான் என்க.

ஏழென வொருவன் கூறுமென்க. ஊழென்பதனை ஏழாம்வேற்றுமையாக்கியுரைப்பினுமமையும். எண்ணியவென்பது - வினையெச்சம். (கo)

ஆசிவகன் மதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கஎச.

---

# ஆசீவகன்மதமறுதலிப.

கலிவிருத்தம்.

வாராநெறி வீடானபின் மண்மேலவன் வந்து
தாராமையி னாலானது தானேவுள தின்றாந்
சேராமையி லணுவானவை யைந்தும்மொரு தேயத்
தோராநொரு காலத்தினி லொன்றாமுணர் வின்றாம்.

(இ-ள்.) வாரா நெறி வீடு - மோக்ஷமென்பது மீண்டுகார்யமெடுத்துவாராவழியால் அடையத்தக்கதாம்,—ஆனபின் - அப்படியானவிடத்து,—

மண்மேல் அவன் வந்து தாராமையின் நூலானது தானே உளது இன்றாம்- வீட்டுலகத்திருந்த அருகபரமன் பூமியிடத்துவந்து நூல்தருமுறைமை யில்லையாகையால் நூலானதுதானுண்டாம்வழியில்லையாம்,—சேராமையில் அணுவானவை ஐந்தும் ஒருதேயத்து - ஒப்பற்றதேசமாகிய பொன்னெயில்வட்டத்தில் ஐவகை அணுவுஞ்சேராதாகையால் சரீரியாந்தன்மையில்லையாகும். அதனால்,—ஓரான் ஒருகாலத்தினில் - ஒன்றையுமொருகாலத்தில் விசாரிக்கமாட்டானும்,—ஒன்றும் உணர்வு இன்றாம் - அன்றியும் கீழான வணுக்களிரண்டின்செய்தியை அறியவுமாட்டான்; ஆகையால், அணுக்களெல்லாவற்றையுங் கூட்டி ஒன்றாகவு முணரு முணர்வு முடையனல்லன் என்க.

பின்னென்றது - ஏழாம்வேற்றுமை யிடப்பொருள். ஒகாரம் - தெரிநிலை. உணர்வுமின்றாம் எனவும்மைவிரிக்க. (க)

இருபான்மைய ரிவர்மண்டலர் செம்போதக ரென்றே
வருபான்மைய ரிவர்மண்டலர் மண்மேல்வரு நூலுந்
தருபான்மைய ரெனினீதல மதில்வாழ்பவர் தம்போ
லொருபான்மையி னுளராகுவ ருணராதுரை செய்தாய்.

(இ-ள்.) இரு பான்மையர் இவர் - இவ்வருகபரமர் இரண்டுபகுதியராயிருப்பர்,—மண்டலர் செம்போதக ரென்றே-மண்டலரென்றும் செம்போதகரென்றும்; அவ்விருவரின்,—வருபான்மையர் இவர் மண்டலர் - இப்படி வரும் பகுதியையுடைய விவர்மண்டலர்,—மண்மேல் வரு நூலும் தருபான்மையரெனினீ - மண்டலராகிய இவர் உலகத்தின்கண்ணே வந்து அணுக்களைந்தின் செய்தியும் ஒருங்கேயறிந்து உலகத்தின்கண்ணே நடக்கும நூல் செய்த பகுதியையுடையரென்று நீ சொல்லுகின்றாயாயின்,—தலமதில் வாழ்பவர்தம்போல் ஒரு பான்மையின் உளராகுவர் - அம்மண்டலர் பூமியில் வாழும் ஆன்மாக்களைப்போல் ஒரு பகுதியிலேயாகுவர்; ஆகவே ஒருநு விரண்டுபேதப்பட்ட அவற்றில் ஒன்று மானுடத்தன்மையும் ஒன்று தெய்வத்தன்மையும் பெறுதலில்லையாம்; ஆதலால்,—உணராது உரை செய்தாய் - விசாரியாமற்சொன்னாய் என்க.

இவர் - ஒருவரைக்கூறும்பன்மை. இவரிருபான்மையரெனமாறுக. மண்டலரிவரெனவுமாறுக. மண்டலர் - பூமியிலுள்ளார். செம்போதகர் - மிக்கவறிவுடையார். (உ)

உயிரானவை யுடறீண்டிட லொட்டுக்கலப் பெய்தும்
பயில்வாலுணர் வெய்துமெனு மொழியானவை பழுதாந்
துயிலார்தரு மவர்பாலகர் தொடராரறி வினைநீ
செயிரார்தரு முரையேதரு மதுவோவுன செயலே.

(இ-ள்.) உயிரானவை உடல் தீண்டிடல் ஒட்டுக்கலப்பு எய்தும் பயில்வால் உணர்வு எய்தும் எனும் மொழியானவை பழுதாம் - ஆன்மாக்களானவை உடலைப்பற்றியும் உற்றும் கலந்தும் செய்யுந்தொழிலாலே அறிவைப் பொருந்துமென்று நீ சொல்லுஞ்சொல் குற்றமுடைத்தாகும். அஃதெங்ஙனமென்னில்,—துயில் ஆர்தருமவர் பாலகர் தொடரார் அறிவினை-மிக்க

வுறக்கம்பொருந்தினவரும் பாலவவத்தையடைந்தவரும் பற்றியும் உற்றும் கலந்தும் அறிவினை யறியமாட்டார்,—நீ செயிர் ஆர்தரும் உரையே தரும்-நீ சொல்லுஞ் சொற்றானே குற்றத்தை மிகவுந்தரும்,—அதுவோ உனசெயலே - உன்றொழிலும் அத்தனையோ என்க. (௩)

அணுவானவை கீழ்மேலுள வானாலவ யவமு
நணுகாவென லாமேவரி னாசம்மவை யெய்து
மணுகாவெனி னிவைதொள்ளைகொ ளாகம்முள வாகுந்
துணிவாலிவை கலவாபல தொகையாம்வகை யிலவாம்.

(இ-ள்.) அணுவானவை கீழ் மேல் உளவானால் - ஆன்மா வொழிந்து அணுக்களென்று கூறப்பட்ட பிருதிவிமுதலான நான்கிலே கீழே யிரண்டுளவாயும் மேலேயிரண்டுளவாயும் நிற்குமாயின்,—அவயவமும் நணுகா வெனலாமே - அவைகாரணமான சரீரவவயவங்களுங் கூடாவாய்க் கீழுமேலுமாய் வேறுபட்டு நிற்குமென்று சொல்லலாமே. அஃதன்றியும்,—வரின்- அவ்வணுக்கணான்குஞ் சரீரவவயவத்திற் கூடிவருமாயின்,—நாசம் அவை யெய்தும் - அவ்வணுக்களை நித்தியமென்று நீ முன்னர்க்கூறியது மித்தியையாம்,—அணுகா வெனின்-அவை சரீரவவயவங்களிலே பொருந்தாதென்று நீ கூறின்,—இவை தொள்ளைகொள் ஆகம் உளவாகுந் துணிவால் இவை கலவா பலதொகையாம் வகை இலவாம் - அவ்வணுக்களின் குணங்களாகிய உதிரமாமிசாதிகளுங் கலந்துநில்லாததுமாய் அணுக்கணான்கின் கூறுபலவுங் கூடிய திரட்சியுங் காயத்திற்கில்லையுமாய்த் துணிந்தறியுமிடத்துச் சரீரமுறைமையாகாததுமாய்ப் புரைபட்டு நிகழ்ந்ததில்லையாம் என்க.

எயும் ஓவும் வினா. வகையுமிலவாம் என்றவும்மை தொக்குநின்றது. (௪)

மிகையாமணு வுளவாகையி னவையாமிக வென்னிற்
றொகைநாலிடை யறலாலவை தொகுமாறில வாகும
பகையாகையின் மிசைதாழ்மையி னிலையாவகை பண்ணு
நகையாமுரை கழியாயிர மவைதூணென நண்ணு.

(இ-ள்.) மிகையாம் அணு உள ஆகையின் அவையாம் மிகவென்னில்- இவ்வணுக்கணான்குமன்றி வேறே அறியத்தக்கதொரு மிக்க வணுவுண்டாகையினாலே மிகவும் யோனிபேதங்களாகிய வுருக்களாமென்று நீ கூறின்,—தொகை நால் இடை அறலால் அவைதொகுமாறு இலவாகும் - அணுக்கணாலின் கூட்டம் மிகவும்பொருந்தாமல் நடுநீங்கிக்கிடக்கையால் அறியுமணு இவற்றைக்கூட்ட அவை கூடிநிற்கும் வழியில்லையாம். அஃதன்றியும்,—பகை ஆகையின் மிசை தாழ்மையின் நிலையா வகை பண்ணும்-அவ்வணுக்கணாலும் மேலுங்கீழுமாய் நிற்கையாலுந் தம்மிற்பகையாகையாலும் ஆன்மாவோரிடத்துக் கூடாவகையைச் செய்யாநிற்கும்,—நகையாம் உரை கழி ஆயிரமவைதூணென நண்ணு - கோல் ஆயிரங்கூடினாலும் தூணாகாத தன்மைபோல அணுக்கள் கூடியதுகொண்டே உருக்களாகாதாகையால் நீ கூறியது நகையாம் என்க. (௫)

கூடாவணு வறியாமையின் வளிகூட்டு தல்கூறி
னூடா வளி யணுவானவை நணுகச்செயு மவரை
நீடாவினை தன்னாலெனி னினைவின்றது வின்றாந்
தேடாயொரு வனைநீயிவை செய்வானுள னென்றே.

(இ-ள்.) கூடா அணு அறியாமையின் - நீகூறிய ஐவகையணுக்களும் தமக்கென அறிவில்லாவாகையால் அவ்வடிவெடுத்துக்கொள்ள வல்லன வல்ல,—வளி கூட்டுதல் கூறின்-வாயுவணு ஒழிந்தவணுக்கள் மூன்றையும் ஆன்மாவாகிய வணுக்கூடும்படிக்குக் கூட்டுமென்று நீ கூறின்,—நாடா வளி அணுவானவை நணுகச் செயுமவரை - வாயுவானது அவ்வணுக்களைக்கூட்டு தற்குக் கன்மஞ்செய்யும் ஆன்மாக்களை அறியமாட்டாது,—நீடா வினை தன்னாலெனின் - பழைய கன்மத்தினாலே வாயுக்கூட்டுமென்னில்,—நினைவின்று அது இன்றாம் - அந்தக்கன்மமும் அறிவையுடைய தன்று ஆகையாற் றானுங்கூடமாட்டாது; வாயுவைக்கொண்டு கூட்டுவிக்கவுமாட்டாது,—தேடாய் ஒருவனை நீ இவை செய்வான் உளனென்றே - இவ்வணுக்களெல்லாவற்றையுங் கன்மத்தையுங்கூட்டிக் காயமுண்டாக்குவான் ஒரு கர்த்தாவுளனென்பதனை ஆராய்வாய் என்க.

சம்சாரரோகந்தீர்ப்பது ஞானமே கன்மத்தால் தீராதென்பது கருத்து. (கூ)

ஆசீவகன்மதமறுதலை முடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கஅo.

---

# பட்டாசாரியன்மதம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வேதமே யோதி நாத னிலையென்று விண்ணி லேறச்
சேதமாங் கன்மஞ் செய்யச் சைமினி செப்பு நூலி
னீதியே கொண்டு பட்டா சாரிய னிகழ்த்து நீர்மை
யோதநீர் ஞாலத் துள்ளே யுள்ளவா றுரைக்க லுற்றாம்.

(இ-ள்.) இருக்கு யசு சாமம் அதர்வணம் என்னு நாலுவேதத்தையுமே ஓதி அவ்வேதமொழியக் கர்த்தாவில்லையென்று சுவர்க்கம்புகுதற்குத் தனச் சேதமாம்படி சோமயாக முதலாகிய கன்மங்களைச்செய்தற்குச் சைமினி பகவானாலே அருளப்பட்ட சூத்திரத்தின் வழியைக்கொண்டு பட்டாசாரிய னென்பான் பாட்டமாகச்சொல்லுமுறைமையை ஒலிபொருந்தின சமுத்திரத்தாற் சூழப்பட்டபூமியிடத்தே உள்ளபடியேசொல்லாநின்றேம் என்க.

உற்றிடுங் காம மாதி குணங்கடா முயிர்கட் குண்டா
மற்றிவை தருமே யாகின் மறைமொழி வாய்மை யின்றாங்
கற்றநூ லளவாற் போதங் கலப்பது கல்வி யின்றேற்
பெற்றிடு மழவு மூங்கை யென்னவே பேச லாமே.

(இ-ள்.) உற்றிடும் காமம் ஆதி குணங்கள் தாம் உயிர்கட்கு உண்டாம்- ஆன்மாக்களுக்கு அநாதியே பொருந்திய காமம் குரோதம் உலோபம் மோகம் மதம்மாற்சரியம் அகங்காரம் இடும்பையாகியகுணங்கள் கூடிநிற்கும்,—

மற்று இவை தருமேயாகில் மறைமொழிவாய்மை இன்றும்-இக்குணங்களே ஆன்மாவுக்கு அறிவைத் தருமாகில் வேதவசனத்தால் ஒரு நன்மையுமில்லையாம். ஆகையால்,—கற்றநூல் அளவால் போதம் கலப்பது-ஆன்மாக்கள் கற்றநூல்எவ்வளவோ அவ்வளவே அறிவுண்டாம்,—கல்வியின்றேல் பெற்றிடும்மழவுமூங்கை என்னவே பேசலாமே-நூல் கற்றவில்லாத ஆன்மாக்களைப்பிறந்து முதிராத பாலரென்றும் ஊமையென்றுஞ்சொல்லலாம் என்க.

உண்டொரு கடவுள் வேத முரைத்திட வுயிரின் றன்மை
கொண்டவ னல்ல னென்றுங் கூறிடி னுருவங் கூடிற்
பண்டைய வுயிரோ யாகும் படித்தநூ லளவு ஞானங்
கண்டிடு முருவ மின்றேற் கருதுவ தில்லை யென்றான்.

(இ-ள்.) உண்டு ஒருகடவுள் வேதம் உரைத்திட உயிரின்றன்மை கொண்டவன் அல்லனென்றுங் கூறிடின் - சுயம்புவாகிய வேதத்தைக் கூறுதற்கு ஒரு கர்த்தாவுண்டென்றும் அக்கர்த்தா ஆன்மதன்மையன் அல்லனென்றுஞ் சொல்லின்,—உருவம் கூடில் பண்டைய உயிரோயாகும் - வேதத்தைச்சொன்னனென்ற கர்த்தாவானவன் வேதஞ்சொல்லுமிடத்துச் சரீரியாய்ச்சொல்லவேண்டும்;ஆகையால்,அப்படிச்சரீரியாகில் ஆன்மதன்மையனவன்,—படித்தநூல் அளவும் ஞானம் கண்டிடும் - அப்படிச் சரீரியான ஆன்மா தான் கற்றநூல் அளவேஅறிவையுடைத்தாம் அத்தனையே,—உருவம் இன்றேல் கருதுவது இல்லையென்றான் - வடிவில்லையாயின் நூலைக்கருதிச்சொல்லுக் தன்மையுமில்லையாம்.ஆதலால்வேதஞ் சுயம்புவேயாம்என்க.

தேவரு முனிவர் தாமுஞ் சித்தரு நரரு மற்று
மியாவரு முரைப்பர் வேத மியம்பின ரின்ன ரென்னப்
போவதன் றென்று நாளும் பரம்பரை புகல்வ தாகுங்
கூவனீ ரென்னிற் கொள்ளே மறுமையைக் குறித்த லாலே.

(இ-ள்.) தேவரும் முனிவர்தாமுஞ் சித்தரும் நரரும் மற்றும் யாவரும் உரைப்பர் வேதம் இயம்பினர் இன்னர் என்னப்போவது அன்றென்று-பிரமவிஷ்ணுக்கண்முதலாகிய தேவர்களும் அகத்தியர் வசிட்டராதி இருடிகளும் சித்தர்களும் ஒழிந்த வித்தியாதரர் கந்தருவர் கின்னரர் கிம்புருடர் பைசாசர் இயக்கர் முதலாயினோரும் நரர்களும் வேதம் இன்னார் சொன்னாரென்று தம்மாலறியப்படுவதன்றென்று சொல்லாநிற்பர்; ஆகையால்,—நாளும் பரம்பரை புகல்வதாகும் - காலந்தோறும் பழையதாக வருமென்றே சொல்லப்படுவதாம்,—கூவல் நீரென்னில் கொள்ளேம் மறுமையைக் குறித்தலாலே - கூவலினீர்போலத் தானே வந்துதோன்றப்பட்டதென்று சொல்லுமுவமையும் கொள்ளேம், அஃதொருவனாற் செய்யப்படுதலானும் மறுமையெய்தத் தக்கதாயிருத்தலானும் என்க. (௪)

உன்னிய வங்க மாறு மூன்றுப வேதந் தானுந்
தன்னுளே யடக்கி வேறு தங்கிடா வகையைச் சார்ந்து
முன்னமோர் தோற்ற மின்றி முடிவின்றி நித்த மாகி
மன்னியோ ரியல்பே யாகி வழங்கிடு மறைய தென்றான்.

(இ-ள்.) உன்னிய அங்கமாறும் மூன்று உபவேதந்தானும் தன்னுளே அடக்கி - வேதமானது கருதப்பட்ட ஆறங்கங்களையும் மூன்றுபவேதங்

களையும் தனக்குளடக்கி,—வேறு தங்கிடா வகையைச் சார்ந்து-அர்த்தங்க ளெல்லாம் தன்னிடத்தடங்குவதொழிந்து வேறொரு நூலினர்த்தந் தன்னி டத் தில்லையென்னுமையைப்பொருந்தி,—முன்னம் ஓர் தோற்றம் இன்றி - ஆதியிலும் ஓரிடத்திற்றோன்றிற்றென்னு முறைமையுமின்றி,—முடிவு இ ன்றி நித்தமாகி - ஒருகாலத்திலுங்கேடின்றி நித்தமுமாய்,—மன்னி ஓர் இயல்பே ஆகி - ஒரு தன்மையாய் நிலைபெற்றுப் பேதிக்கப்படாததாய்,— வழங்கிடும் மறையதென்றான் - இப்படி வழங்காநிற்கும் அவ்வேதமெனறு கூறினன் என்க.

ஆறங்கமாவன—சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சோதிடம், சந் தோவிசிதி என்க. மூன்றுபவேதமாவன—ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தர்வவேதம் என்க. முடிவின்றி - அளவிறந்து. (ரு)

செய்தியு நெறியு மேவுந் தேவரும் பொருளு மெல்லா
மெய்திய பன்மை யாலே யோரியல் பியம்பா தாகு
மையமில் கால மூன்று மறிந்தபின் னெஞ்ச கத்தாய்
மெய்யதாய் வந்து தோன்றி விளங்கிடும் வேத நூலே.

(இ-ள்.) செய்தியும் நெறியும் மேவுந் தேவரும் பொருளுமெல்லாம் எ ய்திய பன்மையாலே ஓரியல்பு இயம்பாதாகும்-படைத்தல் காத்தல் அழித்த லென்னும் பலசெய்திகளுஞ் செய்திசெய்யும்வழியும் அவ்வழியிலே மேவுந் தேவரும் அவர்களாற் கொடுக்கப்பட்ட இகலோகபரலோக சாத்தியமான வர்த்தங்களும் இவையெல்லாம் பன்மையாகப் பொருந்தி நின்றனவாகை யாலும் இவற்றைச் சொல்லவேண்டுகையாலும் வேதமுமொரு நெறிப்ப டச்சொல்லாதாம்,—ஐயம் இல் காலம் மூன்றும் அறிந்தபின் - அம்மூன்று தொழிலாலே மூன்றுவிதப்பட்டு இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமெ ன்று எல்லாராலுமறியப்பட்டபின்,—நெஞ்சகத்தாய் மெய்யதாய் வந்து தோன்றி விளங்கிடும் வேதநூலே - வேதமானது ஒருவடிவைப்பொருந்தி அவ்வடிவின் நெஞ்சகத்தேபொருந்தி உலகத்திலே விளங்காநிற்கும் என்க.

காலமூன்றுமறிந்தபின் வேதமுருவாமென்பதனால் அநாதியில் அருவாமென் னும் பொருள்பயந்தது. செய்தியும் - கன்மங்களும். ஐயமில்காலம் - சந்தேகமற்றகா லம். வெஞ்சகத்தாய் எனப்பாடமாகில் விளக்கத்தை யுடைத்தாய் என்க. (சு)

தப்பிலா வாகுந் தாது பிரத்தியந் தன்னி னோடே
யொப்பிலா தாம்பி ராதி பதிகமா முறுப்புங் கொண்டு
செப்புமாம் வேதஞ் சொன்ன விதிப்படி செய்யச் சேம
வைப்பதாம் வீடு பாச மருவலா மொருவ லாமே.

(இ-ள்.)தப்பிலா வாகுந் தாது பிரத்தியந் தன்னி னோடே ஒப்பிலா தாம் பிராதி பதிகமாம் உறுப்புங்கொண்டு செப்புமாம் வேதம் - வேதமானது தவ றில்லாதனவாகிய பகுதி விகுதிகளோடு உவமையில்லாததாகிய பெயர்ப்ப காப்பதமென்னும் அவயவங்களையுந் தன்னிடத்திலே அடக்கிக்கொண்டு சொல்லுவதாம்,—சொன்ன விதிப்படி செய்யச் சேம வைப்பதாம் வீடு பா சம் மருவலாம் ஒருவலாமே - அந்தவேதஞ்சொன்ன விதிப்படி கன்மத் தைச்செய்யப் பாசக்கட்டுவிட்டு நீங்கலாம் அது நீங்கவே வீட்டின்பமும் ஆப்ததநமாகக்கூடும் என்க.

சேமவைப்பதாமென்றது - அறத்திணுகியவர்த்தம் ஆப்ததரமாகக்கூடுமென்பது கருதியென்க. (எ)

போக்கொடு வரவு கால மொன்றினிற் புணர்வ தின்றி
யாக்கவே றொருவ ரின்றி யநாதியா யணுக்க ளாகி
நீக்கிடா வினையிற் கூடி நிலமுத லாக நீடி
யூக்கமா ருலக மென்று முள்ளதென் றுரைக்க லாமே.

(இ-ள்.) ஊக்கம் ஆர் உலகம் போக்கொடு வரவு காலம் ஒன்றினில் புணர்வது இன்றி - வலிமைபெற்ற பிரபஞ்சமானது சங்காரமுஞ் சிருட்டியும் ஒருகாலத்திலுமுண்டாகாததாய்,—ஆக்க வேறு ஒருவர் இன்றி - இரக்ஷிக்க ஒரு கர்த்தாவுமில்லையாய்,—அநாதியாய் - அநாதியே யுள்ளதாய்,—அணுக்களாகி - ஆன்ம சம்பந்தியாய்,—நீக்கிடா வினையிற்கூடி - நீக்கப்படாத புண்ணியபாவங்களோடுகூடி,—நிலமுதல்ஆக நீடி - பிருதிவிமுதலாகிய தத்துவங்களாக நிலைபெற்று,—என்றும் உள்ளதென்று உரைக்கலாமே - என்று முள்ளதென்று சொல்லலாம் என்க. (அ)

நித்தமா யெங்கு முண்டாய் நீடுயி ரறிவு தானாய்ப்
புத்திதா னாதி யாய கருவியின் புறத்த தாகிச்
சுத்தமா யருவ மாகித் தொல்லைவல் வினையின் றன்மைக்
கொத்ததோ ருருவம் பற்றிப் புலன்வழி யுணர்ந்து நிற்கும்.

(இ-ள்.) நித்தமாய் எங்கும் உண்டாய் நீடு உயிர் - பிரபஞ்சத்திலே நிலைபெற்ற ஆன்மாவானது அழிவில்லாததாய் நிறைவையுடைத்தாய்,—அறிவுதானாய்-அறிவே தனக்குவடிவமாய்,—புத்திதான் ஆதியாயகருவியின் புறத்ததாகி - புத்திமுதலாகிய தத்துவங்களிடத்துக் கலவாது நிற்பதாய்,—சுத்தமாய் - தத்துவங்கள் நீங்கின விடத்தே அழுக்கற்று நிற்பதாய்,—அருவமாகித் தொல்லை வல்வினையின் றன்மைக்கு ஒத்ததோர் உருவம் பற்றிப் புலன்வழி உணர்ந்து நிற்கும்-அருவமாய்ப் பழையதாய்வரும் புண்ணியபாவங்களினது முறைமைக்கீடான காயத்துடனே கூடி இந்திரியங்கள் வழியாகக் கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியாநிற்கும் என்க.

புத்திதானாதியாயகருவிகளாவன - இந்திரிய முதற் பிரகிருதியீறாய தத்துவமிருபத்துநாலும். புறம் - ஏழாம்வேற்றுமை யிடப்பொருள். ஒத்ததோருருவம் - வினைகளுக்கேற்ற வடிவம். சுத்தமாகிறதூ கன்மவசமாயுழலுமோவென்னில் சுத்தமாகாதாகின் முத்தியிலுஞ் சுத்தனுகான், சத்காரியவாதமுங்கெடுமென்பதுகருத்து, இஃது ஆன்ம லக்ஷணம். (கூ)

செயறரு வினைகண் மாய்ந்து சிந்தையிற் சேர்ந்து நின்று
பயனொடு பலியா நிற்கும் பலாலமுந் தழையு மெல்லாம்
வயறனின் மருவி நாசம் வந்தபின் பலத்தை வந்திங்
கியல்பொடுந் தந்தாற் போல வென்றும்பி னியம்புகின்றான்.

(இ-ள்.) செயல்தரு வினைகள் மாய்ந்து சிந்தையில் சேர்ந்து நின்று பயனொடு பலியாநிற்கும்-முற்சநநத்தின் மனவாக்குக் காயங்களின் றொழில்களாலே யுண்டாகிய புண்ணியபாவங்கள் அக்காயத்துடனே தூலங்கெட்டுச்சூக்குமமாக ஆன்மாவோடும்பொருந்தி இந்தச் சநநத்திற் பிரயோசநத்

தோடு ஆன்மாவுக்குண்டாகாநிற்கும். அஃதென்போலவென்னின்,—பலாலமும் தழையும் எல்லாம் வயல் தனின் மருவி நாசம் வந்தபின் பலத்தை வந்து இங்கு இயல்பொடும் தந்தாற்போல என்றும் பின் இயம்புகின்றான் - வைக்கோல் தழை முதலானவைகளெல்லாங் கழனியைப்பொருந்திநின்று வடிவுக்கேடு வந்தபின்பு அவ்வயலின் பயிருக்கு நன்மையைக்கொடுத்தாற் போலவென்றும் கூறி வேறுஞ்சில சொல்லாநின்றான் என்க. (கo)

நீதியா நித்த கன்ம நிகழ்த்திடச் சுபத்தை நீங்கார்
தீதிலா விச்சா கன்மஞ் செந்தழ லோம்பிச் செய்ய
வேதுதான் வேண்டிற் றெல்லா மெய்தலாஞ் சோம யாக
மாதிதா னாசை வீசி யமைத்திட வீட தாமே.

(இ-ள்.) நீதியா நித்த கன்மம் நிகழ்த்திடச் சுபத்தை நீங்கார்-அவரவர் சூத்திரமுறைமையிலே சந்தியாவநுஷ்டானம் காயத்திரி செபமுதலிய பிராமணர்செய்ப எனையவருணத்தாருந் தமக்குக்கற்பித்த விதிவழாமற் செய்யவே நன்மையை எப்பொழுது நீங்கார்,—தீதிலா இச்சாகன்மஞ் செந்தழல் ஓம்பிச்செய்ய ஏதுதான் வேண்டிற்று எல்லாம் எய்தலாம் - குற்றமில்லாத இச்சாகன்மமாகிய வைசுவதேவபலிகரணாதிகளும், தக்ஷிணாக்நி காருகபத்தியம் ஆகவநீயமுதலிய அக்கினிகளுஞ் செய்யத் தான்விரும்பியது யாது அவையெல்லா மெய்தலாம்,—சோமயாகமாதிதான் ஆசை வீசி அமைத்திட வீடதாமே - சோமயாகமுதலிய யாகங்களைச் செய்யுமிடத்து அர்த்தத்தைமிகவுஞ் செலவழித்துச்செய்ய வீட்டின்பமுண்டாகும் என்க. (கக)

கருதிய கன்ம ஞான மிரண்டுங்கா லாகக் கொண்டு
மருவிட லாகும் வீடு மதிதனை மதித்துச் செய்தி
யொருவிடிற் பதித னாகும் பதிதனைக் கதியி னுய்க்கத்
தருவதோர் நெறிதா னில்லை யென்னவுஞ் சாற்றி னானே.

(இ-ள்.) கருதிய கன்மம் ஞானம் இரண்டும் காலாகக்கொண்டு மருவிடலாகும் வீடு - சூத்திரவிதிகளாலே கருதப்பட்ட கன்மமும் வேதஞ் சுயம்புவென்னு ஞானமும் ஆகிய இரண்டையும் இடமாகக்கொண்டு வீட்டின்பத்தைப்பொருந்தலாகும்,—மதிதனை மதித்துச் செய்தி ஒருவிடில் பதிதனாகும் - வேதம் சுயம்புவென்றறியுஞானமே அமையுமென்று நிச்சயித்துக் கன்மத்தைக்கைவிடிற் கன்ம சண்டாளனாகும்,—பதிதனைக் கதியின் உய்க்கத் தருவதோர் நெறிதான் இல்லை என்னவும் சாற்றினானே - அக்கன்மசண்டாளனை மீளநல்லநெறியிலே யேறவிடுவதற்கு உண்டாவதோர் வழி வேதத்திலுமில்லையென்று சொன்னான் என்க.

கால் - ஏழாம்வேற்றுமை யிடப்பொருள். (கஉ)

பசுப்படுத் தியாகம் பண்ணப் புண்ணிய மாவ தென்று
வசிப்பினன் மறைகள் சொன்ன வழக்கினால் வாய்மை யாக
நசிப்பிலா மந்தி ரங்க ணவிற்றலி னின்ப மாகும்
பசிப்புளா னொருவ னுண்ணப் பசியது தீர்ந்த பண்பே.

(இ-ள்.) பசுப்படுத்து யாகம்பண்ணப் புண்ணியம் ஆவதென்று - எப்பொழுதும் பசுபந்தனஞ்செய்து யாகங்களைச்செய்வது புண்ணியமா

மென்று,—வசிப்பினால் மறைகள் சொன்ன வழக்கினால் வாய்மையாக நசிப்பிலா மந்திரங்கள் நவிற்றலின் இன்பம் ஆகும் - குற்றமில்லாத இருக்கு யசு சாமம் அதர்வணம் என்னு நாலுவேதங்களுஞ் சொன்னவிதிப்படி உண்மையாகக்கொண்டு கேடில்லாத மந்திரங்களைச் சொல்லுதலாற் போகமோக்ஷமாகிய இன்பத்தைத்தரும். அஃதென்போல வென்னில்,—பசிப்புளான் ஒருவன் உண்ணப் பசியது தீர்ந்த பண்பே - மிகவும் பசிப்புளானொருவன் உண்டல்செய்தாற் பசிதீர்ந்தின்பமுற்ற தன்மையாம் என்க. (கரு)

பட்டாசாரியன்மதமுடிந்தது.

ஆசத்திருவிருத்தம் - ககரு.

## பட்டாசாரியன்மதமறுதலை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வேதஞ்சுயம்புவென வேதந்த வாய்மொழியில் வேறும்ப்ர மாண முளதே
னீதந்து காணிங்கு மாதுங்க பாரதமு நேர்கண்ட தாகு மதுபோ
லோதுஞ் சொலாய்வருத லானுங்க டாதிபட மோவந்தி டாவொ ருவரா
லேதந்த தாமறைக ளாய்வந்த வாய்மொழியும் வேறிந்து சேக ரனதே.

(இ-ள்.) வேதம் சுயம்புவெனவே தந்த வாய்மொழி இல் - வேதஞ் சுயம்புவென்று பட்டாசாரிய நீ கூறியவுண்மை யொழிய நான் சுயம்புவென்று அவ்வேதந்தான் கூறிற்றில்லையாம். அஃதன்றியும்,—வேறும் ப்ரமாணம் உளதேல் நீ தந்துகாண் இங்கு - வேதம் அநாதி யென்பதற்கு வேறு பிரமாணமில்லை, உண்டாயின் நீ சொல்லிக்காண் இவ்விடத்தே,—மாதுங்க பாரதமும் நேர்கண்டதாகும் - மிகவும் பெருமையுடைய மகாபாரதம் பிரமாணமென்று நீ சொல்லின் அதுவும் வியாசராலே சொல்லப்பட்டு வேதத்திற் கொப்பாய் ஐந்தாம்வேதமென்று வழங்கப்படுவதாம்; அதனாலும்,—அதுபோல் - அந்தமகாபாரதம் போல,—ஓதும் சொலாய் வருதலானும் - ஒருத்தனாலே சொல்லுஞ் சொல்லாய் வருதலானும்,—கடாதிபடமோ வந்திடா - மண்பாவையுங் கிழிப்பாவையும் செய்வா ரொருவரின்றிவந்துதோன்றுமையானும்,—ஒருவராலே தந்ததாம் - அவ்வேதமும் ஒருவனாலே சொல்லப்பட்டதேயாம்,—மறைகளாய் வந்த வாய்மொழியும் வேறு இந்து சேகரனதே - வேதம் ஒருவன் சொன்னானென்று சொல்லப்பட்டு வேறு இரகசியங்களாய்வருகிற சத்தியவசநமும் சந்திரசேகரனிடத்ததே என்க.

எனவே பரமேசுவரனே வேதமருளிச்செய்தானென்பதாயிற்று. அதனாலும் என்பது தொக்குநின்றது. ஏகாரம் தேற்றம். கடாதி எனவே மண் பாவைமுதலியவும் படாதி எனவே கிழியிடத்துண்டாகிய பாவை முதலியவும் கொள்க. (க)

உரைதந்தி டானொருவ னெனிலிந்த வானினிடை யொலிகொண்டு
மேவி யுளதாம், புரைதந்த வாமறைக ளபிவெஞ்ச மாயொளிர்கை பொருடந்த தீப மதுவேல், வரைதந்த தாலிவுரை கபிலன்சொ லாகுமது மறைகின்ற வாறும் வரவும், விரைவின்சொ லாயிதனை யெதுகொண்டு மேவுவது விடைகொண்ட தாலு னுரையே.

(இ-ள்.) உரை தந்திடான் ஒருவனெனில் - வேதம் தானே யுண்டான தன்றி ஒருவன் சொல்லானென்று நீ சொல்லின்,—இந்த வானினிடை ஒலி கொண்டு மேவி உளதாம் - இவ்வாகாசத்தின்கண்ணே பொருந்திய ஓசையைக்கொண்டு உண்டானதாகவேண்டும்; ஆகையால்,—புரை தந்தவாம் மறைகள் - வேதங்களுஞ் சொல்லும்பொருளும் விளங்காமற் குற்றத்தையுடையவாம்,—அபிவெஞ்சமாய் ஒளிர்கை பொருள் தந்த தீபமதுவேல் - அற்றன்று, வேதஞ்சர்வத்தையும் விளக்குவித்துத் தானு நின்று விளங்குகை விளக்கு பொருளைக்காட்டித் தானு நின்று பிரகாசித்தாற்போல வென்றுகூறின்,—வரை தந்ததால் இவுரை கபிலன் சொல் ஆகும் - வேதத்தின் பெருமை இல்லையாய் ஒரெல்லைக்குள்ளகப்பட்டதாம்; ஆகவே நீ யுவமை கூறல் நிரீசுரசாங்கியன் சொல்லுஞ் சொல்லாம்,—அது மறைகின்ற வாறும் வரவும் - அவ்வேதம் அருவாமுறைமையும் உருவாய்த்தோன்று முறைமையும் இங்ஙனமென்று,—விரைவின் சொலாய் - விரைவிலே சொல்லுவாயாக,—இதனை எதுகொண்டு மேவுவது - வேதமுன் அருவாய்ப்பின் உருவாய்த்தோன்றிச் சொல்லும் பொருளும் விளங்கச்சொல்லுமென்று நீ சொல்லுகின்றவிதனை யாது பிரமாணமாகக்கொள்வது,—விடை கொண்டதால் உன் உரையே - ஆதலால், நீ சொல்லுகின்ற சொல் பயனற்றுப் போனதாம் என்க.

புரை - குற்றம். அபிவியஞ்சகம் - அபிவெஞ்சமென நின்றது. அது பொருளை விளக்கித் தானும் விளங்கிநிற்பது; ஆதலால் விளக்கிற்குவமையாயிற்று. விரைவிற் சொலாயென்பது - விரைவின்சொலாயென மெலிந்து நின்றது. (உ)

உருவின் கணே மருவி வரிலின்று தேரையுரை யுளதுங்க ணூலின் மறையுந்
தருகின்ற நாதரவ ரிவனொன்று நாமமது தரவந்தி டாமை யதனால்
வருமென்று நேடியெனில் வளர்கின்ற தீவதனில் வருகின்ற வாடை பலவா
லொருதந்து வாயனவ னிவனென்ற போதிலிவை யுளதென்று நீடிய வையே.

(இ-ள்.) உருவின்கணே மருவிவரில் - வேதமானது யாதோருருவைப் பற்றி மனத்திடத்ததாய்ப் பிரகாசிக்குமென்று நீ சொல்லில்,—இன்று தேரை உரை உளது உங்கள் நூல் இன் மறையும் - ஒருருவைப்பற்றி வருமென்னு நியமமில்லாதபடியாலே இப்பொழுது தேரையிடத்துண்டாகிய சத்தத்திலும் உங்கணூலாகிய இனிய வேதம் உண்டாகும்,—தருகின்றநாதரவர் இவனொன்று நாமமது தரவந்திடாமையதனால் வருமென்று நேடியெனில் - வேதத்தையுண்டாக்கியவன் இன்னானென்று பேர்குறித்து வேதஞ்சொல்லாதாகையால் தானேதன்னை ஓதத்தக்க வுருவைத்தேடி அஃதிடமாகத் தோன்றுமென்று நீசொல்லில்,—வளர்கின்ற தீவதனில் வருகின்ற ஆடை பலவால் - பலவளங்களும் வளர்கின்ற தீவின்கண்ணின்று வருகின்றபுடைவை பலபேதங்களையுடைத்து; ஆகையால்,—ஒரு தந்துவாயனவன் இவனென்றபோதில் இவை உளதென்று நீடியவையே - பலபேதப்பட்ட புடைவைகளைக் கண்டபொழுதே தந்துவாயனென்று சொல்லப்பட்டவனாலே இப்புடவை யுண்டானதென்று அறிந்தாற்போல வேதமுஞ் சத்தார்த்தமாகையால் ஒருவனாலே செய்யப்பட்டதென்றறிவாயாக என்க. (ந.)

மறைநின்று நாலுதிசை யவரொன்ற தாகவரு முரைதந்த வாய்மை யதனு, னிறைவென்று நீடுமெனில் வனையுங்க டாதிபல சொலவொன்றி நீடியு ளதாங், குறைவின்றி நாடுமொழி யவைசென்று கூடுவதொர் குண முண்ட தாகு மலர்தா, னுறைகின்ற மாலைதனி லுளதென்ற தாகுமெனி னுணர்வின்ற தாழி யொலியே.

(இ-ள்.) மறைநின்று நாலு திசையவர் ஒன்றதாக வரும் உரை தந்த வாய்மையதனுல் நிறைவென்று நீடுமெனில் - நான்கு திக்கிலும் பாஷை பேதிக்கப்பட்ட ஜாதிபேதங்களும் மற்றொரு நூல்போலாகாமல் ஒருமைப் படவோதிவருமுண்மையாலே வேதம் அநாதியாய் நிறைவையுடையதாய் நிலைபெறுமென்றுகூறின்,—வனையும் கடாதி பலசொல ஒன்றி நீடி உளதாம் குறைவு இன்றி நாடும்மொழி அவை சென்று கூடுவதொர் குணம் உண்டதா கும் - குலாலனுலுண்டாக்கப்படுங்கடாதிகள் பலபேதம் பொருந்தி அநாதி யிலே உள்ளதாகிறதுபோலக், குற்றமின்றியறியப்படுஞ் சொல்லும்பொரு ளுங்கூடும்படிக்குக் கூட்டுவதோர் கர்த்தாவுண்டாகவேண்டும்; அற்றன்று, —மலர்தான் உறைகின்ற மாலைதனில் உளதென்ற தாகுமெனின் - மாலையி னுறையும் பூவுமணமும் அந்தமாலையினிடத்தினுள்ள வல்லவாய் முன்பே யுண்டாயவற்றைப்பின்பு மாலையாகக்கூட்டினுற்போலச் சத்தமுமர்த்தமு முன்பேயுள்ளவாய்ப் பின்பு மூர்த்திகளாலே கூட்டப்பட்டவென்றுகூறின், —உணர்வு இன்று அது ஆழி ஒலியே - அம்மூர்த்திகள் சத்தத்தை அறிந்து கூட்டப்பட்டார்கள் அன்றாகில் உன்வேதம் ஆழியினோசையை ஒக்கும் என்க.

எனவே வேதம் சத்தார்த்தமாகையாற், சத்தம் தந்ததாலோஷ்டங்களாலே உண்டாகவேண்டுமாகலின் அவ்வேதம் சுயம்புவன்றென்பதுகருத்து. (ச)

உடனின்று நாமுணரு மதுகண்ட வாறொருவ னுலகங்க ளேயு ருவ மா, யிடைநின்று மாமறைக ளவையன்று வாய்மொழிய விவைகொண்டு லோக நெறியின், கடனின்று வாழுமது கருதும்பி னாணைவழி கருமஞ்செய் காசினி யுளோர், திடமென்று சீரச னுரைதங்கு மோலைதிரு முகமென்று சூடு செயலே.

(இ-ள்.) உடல் நின்று நாம் உணருமது கண்டவாறு ஒருவன் உலகங் களே உருவமாய் இடைநின்று - சரீரத்தினின்று நாமுணருமது கண்டபடி யாலே, ஒரு கர்த்தாவானவன் பிரபஞ்சமே திருமேனியாய்ப் பிரபஞ்சத்தி டையிலே யெழுந்தருளிநின்று,—மாமறைகளவை அன்று வாய்மொழிய - மகிமையுடையவேதங்களை அநாதியிலே திருவாய்மலர்ந்தருள,—பின் இ வைகொண்டு உலோகம் நெறியின்கடனின்று வாழுமது கருதும் - பின்பு அவ்வநாதியைக்கொண்டு பிரபஞ்சமானது அவ்வேதங்களின் முறையிலே நின்று வாழுமதனைக்கருதி அநாதியென்றுஞ் சுயம்புவென்றுஞ் சொல்லா நிற்கும்; அஃதென்போலவென்னின்,—ஆணைவழி கருமம் செய் காசினி உளோர் திடமென்று சீர் அரசன் உரைதங்கும் ஓலை திருமுகமென்று சூடு செயலே - உலகநாயகனுகிய வோரரசன் ஆணைவழியொழுகும் உலகத்தினு ள்ளார்க்குத்திடமாக அவ்வரசனுரைவரைந்த வோலையைத் திருமுகமென்று

மங்கலமரபினாற்கூறித் தலையிற்றரித்து அவ்வரசனைப்போலச் சிறப்புச் செய்கையாம் என்க.

சுயம்புவாலே கூறப்பட்ட வேதத்தைச் சுயம்புவென்றுகொண்ட முறைமை, மாகனாற் சொல்லப்பட்டது மாகமானாற்போலவும், தொல்காப்பியனாற் சொல்லப் பட்டது தொல்காப்பியமானாற்போலவும் கொள்க. (ரு)

முடிவின்றி வேதியர்கண் முதல்வந்த மூவர்களு மொழியுஞ்சொ லாரிய மெனிற், கடிவின்றி யேகணித ரவர்கண்ட வாறதுவென் வடகண்ட சாதி கடியா, தொடிவின்றி யோதுவதெ னுரைதங்கு வேதமொழி யுளதெ ன்று கூறு மவர்தா, மடியின்று தானெனும தறிவின்றி யீனுமவ ரிலையெ ன்ற வாத ரவதே.

(இ-ள்.) முடிவு இன்றி வேதியர்கள் முதல்வந்த மூவர்களும் மொழியும் சொல் ஆரியமெனில் - ஆரியமாகியவேதமே கேடில்லாத பிரமக்ஷத்திரிய வைசியனென்னு மூன்றுசாதியும் ஓதுஞ்சொல்லென்று நீசொல்லின்,—கடிவின்றியே கணிதரவர் கண்டவாறதுவென் - ஏனையவருணத்துள்ளாராய்ச்சோதிடஞ்சொல்லுமவர்கள் வேதத்துக்கங்கமாகிய சாத்திரத்தையோதாமலறியும்படி யெங்ஙனம்? அஃதன்றியும்,—வடகண்ட சாதிகடியாது ஒடிவு இன்றி ஓதுவதென் - இந்தத்தீவின் வடகூற்றினுள்ளார் மற்றவருணத்தார் வேதத்தையோதத்தகாரென்று நீக்கப்படாமல் எல்லாராலுமோதப் படுவானேன்? ஆதலானீக்கப்படாதாயிற்று,—உரைதங்கு வேதம் மொழி உளதென்று கூறுமவர்தாம் - எல்லார்சொல்லுந் தன்னிடத்திலேயுடைத் தானவேதம் சத்தமாகவுள்ளதென்று கூறுமவர்தாமும்,—அடி இன்று தானெனுமது - வேதத்துக்கு மூலகர்த்தாவில்லையென்று சொல்லுமது,—அறிவு இன்றி ஈனுமவர் இலையென்ற ஆதரவதே - பிறந்தபிள்ளைக்குப்பெற்றவர் இல்லையென்று அறிவிலாது விரும்பிக்கூறுதல்போலும் என்க.

கடிவின்றி - நீக்கமின்றி. ஒடிவின்றி - தவிர்தலின்றி. ஈனுமவர் - உண்டாக்குமவர். ஆதரவு - இலக்கணை. முடிவின்றிவேதியர்கள் - அளவிறந்தபிராமணர்கள். முதல்வந்த மூவர்களும் - பழைய பிரம விட்டுணு ருத்திரர்களும். கடிவின்றியே கணிதரவர்கண்டவாறதுவென் - கடியாதுகணிதநூல்களுமொருவர் சொல்லாமல்வந்ததாம். வடகண்ட சாதிகடியா - வடபூமியிலுள்ளாருங் குறைபடாமல் வேதஞ்சுயம்புவென்றே சொல்லாநின்றார்கள் என்றலுமாம். (சு)

அறிகின்ற பான்மையவ யவநின்ற தாகிலணு வழியுங்க டாதி யெனவே செறிகின்ற வாறதிலை யெனின்வந்து சேருமது திடமன்று கூட வொருவன் குறிகொண்டு காரின்முளை வருகின்ற பீசமவை குலையொன்றி வேனி லழியு முறுகின்ற காலமவை யுடனின்று போயழியு முலகென்று நீடி யிலதே.

(இ-ள்.) அறிகின்ற பான்மை அவயவம் நின்றதாகில் அணு அழியும் கடாதி யெனவே - ஆன்மாவானது பேதப்பட்டுச்சரீரவவயவத்தைத்தானறியும் பகுதியிலே கூடிநின்றதாயின் அழியுந்தகுதியையுடையசரீராதிபோல ஆன்மாவும் அழிந்துபோம்,—செறிகின்றவாறது இலையெனின் வந்துசேரும் அது - ஆன்மா அந்தச்சரீரவவயவத்தைச்சேராது சரீரவவயவந்தானே சென்று ஆன்மாவைச்சேருமென்றுகூறின்,—திடம் அன்று கூட ஒருவன்

குறிகொண்டு - சரீரவவயவந்தானே ஆன்மாவைக்கூடு நிலைமையுடைத்தன்று; கர்த்தாவொருவன் குறிகோளாகக்கூட்டுகையாலே ஆன்மாவுஞ் சரீரமுங் கூடிவரும்,—பீசமவை காரின் முளை வருகின்ற வேனில் குலையொன்றி அழியும் - முளைகளானவை கார்காலத்து விதையினின்று முளைத்துவரும் வேனிற் காலத்துத் தகுதி வேறுபட்டழியும்; அங்ஙனம்போல்,—உறுகின்ற காலமவை உடன் நின்று போய்அழியும் உலகு என்றும் நீடி இலதே - பிரபஞ்சமானது சிருஷ்டிதிதிசங்காரமென்று கூறப்பட்ட மூவகைத்தொழிலுற்றகாலத்துடனே கூடித்தோன்றி நின்று கெடுமாகையாற், காலத்தோடுங்கூடிவரும்பிரபஞ்சமானது எந்நாளு நிலைபேற்றையுடையதன்றாம் என்க.

நிறைவெங்கு மாகிலுயிர் நெறிநின்று போய்வருத லணைவின்ற தாமுடலிலே, குறைவின்றெ லாமுமுள குடகந்த மாகிலவை விடநின்ற வாறு குறியா, வுறைகின்ற மாதவர்க ளுடனின்று போய்வறிதோ ருடல்கொண்டு மீள்வ துணராய், மறைதந்த வாய்மைதனி னிறைவின்றி யேயுலகின் மலைகின்ற தாலு னுரையே.

(இ-ள்.) நிறைவு எங்கும் ஆகில் உயிர் - ஆன்மாவானது பிரபஞ்சமெங்கும் நிறைந்து நிற்குமாயின்,—நெறிநின்று போய்வருதல் அணைவு இன்ற தாம் - ஆன்மாவானது நித்தியகன்மமுதலாகிய நெறிகளிலே பொருந்தி நின்று அந்தநெறிக்குத்தக்கசுவர்க்காதிபதங்களிலேசென்றுபுண்ணியப்பயனைபுசித்துப் புண்ணியகன்மந்தொலைந்தால் மீளவும் வருமென்னும் வேதவாய்மையில்லையாம்; அற்றன்று,—எலாமும் உடலிலே குடகந்தம் குறைவு இன்று உள ஆகில் - எல்லாவான்மாக்களும் சரீரத்திலே குடத்திற்கட்டின பூமணம்போல நிறைந்துநிற்குமென்று கூறுகின்றாயாயின்,—அவை விடநின்றவாறுகுறியா - அவ்வான்மாக்கள் சரீரங்கெட்டபோது தாங்கெடாமல் உடலைவிட்டு நிற்கிறவழியைக் குறிக்கொள்ள மாட்டா,—உறைகின்ற மாதவர்கள் உடல்நின்றுபோய்வறிது ஓர் உடல் கொண்டு மீள்வது உணராய் - உடலின்கணுறைகின்ற மகாயோகிகள் அவ்வுடலைவிட்டுப் பரகாயப்பிரவேசஞ்செய்வதும் வருவதும் அறியாய்,—மறைதந்த வாய்மைதனில் நிறைவு இன்றியே உலகின் மலைகின்றதால் உன் உரையே - வேதஞ்சொன்னசத்தியமான அர்த்தத்தில் உனக்கு நிறைவில்லையாதலால் நீ சொல்லுகின்றசொல்லும் உலகத்தின்கண் மாறுபாடுபொருந்திற்று என்க.

குடகந்தமாகில் என்பதற்குப் போலவென்பதோருவமைச்சொல் வருவித்துரைக்க. வறிதோருடல் - உயிர்போன மற்றோருடல். (அ)

அழிகின்ற தால்வினைக ளாகின்ற வாறெனெரு வதுமங்கி யான பரிசே, லொழிவின்றி யோதநமு மறவுண்ண நாம்வினைக ளுறுகின்ற வாறதெனலாங், கழிகின்ற தாலறிவு வினைதந்தி டாவினைஞர் கருமங்க ணுடியுறுவோர், பழுதின்றி யேயுதவு மதுபண்ப தாகவருள் பரமன்க ணுகும் வினையே.

(இ-ள்.) அழிகின்றதால் வினைகள் ஆகின்றவாறு என் - ஒருவன் செய்தகன்மங்கள் இக்காயங்கெடக் கூடக்கெடுமாகையாற் கன்மம் மேலைக்கு

வந்துண்டாம்படி எங்ஙனம்,—எருவது மங்கியான பரிசேல் - வயலுக்கிட்ட எருதனது தூலமுறைமைகெட்டுச் சூக்குமமுறைமையாகிவீரியங்கிடந்து பயிருக்குநன்மைகொடுக்குமாறுபோலச் செய்தகன்மமும் உடலோடு தூல முறைமைகெட்டு ஆன்மாவோடு சூக்குமமுறைமையாகிப் பொருந்துமென்று நீசொல்லின்,—ஒழிவு இன்றி ஓதநமும் அற உண்ண நாம் வினைகள் உறுகின்றவாறது எனலாம் - நாம் நாடோறு முண்ணுமுணவு செரிக்கக் கழிந்தமலம் பயனை அனுபவிக்க வினைவருகின்றவாறு மீளவு நமக்கு நன்மையைத்தருமென்பார் கூறுங்கூற்றெனலாம்,—வினை கழிகின்றதால் அறிவு தந்திடா - காயத்தோடுஞ்செய்த வினைகெடுகையால் அவ்வினை ஆன்மாவையறிந்து கூடமாட்டாது; அதுகூடும்படி,—வினைஞர்கருமங்கள்நாடி உழுவோர் பழுது இன்றியே உதவும் அது பண்பதாக - தொழில்செய்தோர்க்குச் செய்ததொழில்கண்டு தொழில்கொள்வோர் அவ்வவர்தொழிற்குத் தக்ககொத்துப் பழுதறக்கொடுக்குந் தன்மைபோல,—அருள் பரமன் கண் ஆகும் வினையே-ஆன்மாக்கள்செய்த புண்ணியபாவங்களையறிந்து அப்புண்ணியபாவங்களுக்கீடான புசிப்புக்களைக் கொடுத்தருளிப் புசிப்பிக்குந்தொழில் பரமேசுவரனதாகும் என்க. (௯)

கருமங்கண் ஞானமது வுடனின்ற லான்மருவு கதிதங்க லாகு மெனினீ
தருமங்க ராகமுத லவைதங்க மேலறிவு தவிரும்பின் வீடு மணையா
பொருணின்று தேடிவரு பயனுண்டு போகவினை புரிகின்ற வாற தெனவே
திருநின்ற போகம்வள ரவிசென்று மேவியது செலவுண்டு சூழ்வ செயலே.

(இ-ள்.) கருமங்கள் ஞானமதுவுடன் நின்றலால் மருவு கதி தங்கலாகு மெனின்நீ - நித்தியகன்மமுதலியகன்மங்களை ஞானங்கூடிநிற்றலாலே அழிவில்லாமையைப் பொருந்தின வீட்டின்பத்தைப் பொருந்தலாம் என்று நீ கூறின்,—தரும் அங்கு அராகமுதல் - கன்மங்கள்செய்யுமிடத்துத் திரவியார்ஜிதம் வேண்டுகையாலே ஆசைமுதலியனவுண்டாம்,—அவை தங்க மேல் அறிவு தவிரும் - அவ்வாசைமுதலியவுண்டாகவே ஆன்மாப்பாசஞானமாய்நிற்கும்,—பின்வீடும் அணையா - அந்தப்பாசஞானத்தாலே மோக்ஷமுமடையாது,—பொருள் நின்று தேடிவருபயன் உண்டு போகவினை புரிகின்றவாறது எனவே - ஒருவன்பொருளைத்தேடி அதனாலுண்டாயபயனை அதிலேநின்று புசித்து அந்தப்பொருண்மாளவே மீளவும் பொருள்தேடுதற்கு முயல்கின்றதனையொப்ப,—திருநின்ற போகம்வளர் அவிசென்று மேவி அதுசெல உண்டு சூழ்வசெயலே - வெகுவானவாகுதி செய்கையினாலே அவ்வாகுதிசென்றபுண்ணியத்தால் மிக்கசுவர்க்கபோகங்களைப் பொருந்தி அப்புண்ணியந்தொலையுமளவும் புசித்துத்தொலைய மீளவும் புண்ணியகன்மஞ்செய்ய நினைக்கின்ற செயல் உன்செயல் என்க. (௧௦)

பட்டாசாரியன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௨௦௫.

---

# பிரபாகரன்மதம்.

கொச்சகக்கலிப்பா.

அருந்தவனாஞ் சைமினிபண் டாரணநூ லாய்ந்தானாய்த்
திருந்துமுல கினிற்கொண்டு செப்பியநூற் றிறமதனைப்
பரிந்துபிர பாகரன்பட் டாசானில் வேறாகிப்
புரிந்துரைசெய் நெறியதனைப் புவனிமிசைப் புகன்றிடுவாம்.

(இ-ள்.) அரியதவத்தினையுடையனாகிய சைமினிமுநிவன் முன்வேத நூலையாராய்ந்தானாய் நல்லவுலகின்கண்ணே தான்சொல்லுகின்றவழிக்குப் பொருந்தத்தக்கவற்றை வேதத்திலேநின்றெடுத்துக்கொண்டு சொல்லப்பட்ட அவனது சூத்திரமுறைமையினைப்பொருந்திப் பிரபாகரன் பட்டாசாரியனாற் சொல்லப்பட்ட பாட்டத்தினெறியிலே வந்து அதிற் சிறிது வேறுபடச்சொன்னவழியதனை யெடுத்து நாமும் பூமியின்கண்ணே சொல்லாநின்றேம் என்க. (௧)

அருஞ்செயலி னபாவத்தே யபூர்வமெனு மதுதோன்றித்
தருஞ்செயனின் றழியிற்பின் பலிப்பிப்ப தாகுமது
வருஞ்செயலொன் றின்றியே மண்சிலைபோ லாமுத்தித்
தருஞ்செயலீ தெனவுணர்ந்து தாரணிமே லவன்சாற்றும்.

(இ-ள்.) அருஞ்செயலின் அபாவத்தே அபூர்வமெனுமது தோன்றி - அரிதாகச்செய்யுங் கன்மத்தை யொழிந்தவிடத்திலே அபூர்வமென்பதொன்றுண்டாய்,—தருஞ்செயல் நின்று அழியில்-அந்தக்கன்மத்திலே அறிவு கூடிநின்று தொழிற்பட்டுக் கன்மமுடிந்தபொழுது,—பின் பலிப்பிப்பதாகும் அது - பின்புதானின்று பிரயோஜநப் படுப்பிப்பதாம்,—வருஞ்செயல் ஒன்று இன்றியே - அவ்வறிவுங் கன்மமுங்கூடி வருந்தொழிலொன்று மின்றியே,—மண் சிலை போலாம் முத்தித் தருஞ்செயல் - வீட்டுநெறியைத் தருகிற செய்தியாவது மண்போலவுங் கல்லுப்போலவும் அறிவுந்தொழிலும் அற்றிருத்தலாம்,—ஈதென உணர்ந்து தாரணிமேல் அவன் சாற்றும்- மண்போலவுங் கல்லுப்போலவும் அறிவுஞ்செயலுமற்றிருப்பதே முத்தியெனவறிந்து பூமியின்கண்ணே இத்தன்மைத்தென்று பிரபாகரன் சொல்வான் என்க.

அருஞ்செயல் - செய்தற்கரிய சோதிஷ்டோம முதலியன. (௨)

பிரபாகரன்மதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௨௦௫.

# பிரபாகரன்மதமறுதலி.

வேறுபலந் தருவதுதான் வினையென்று வேதங்கள்
கூறவோ ரபூர்வந்தான் கொடுக்குமெனக் கொண்டவுரை
மாறுதரு மறையோடு முன்பின்றி வந்ததாற்
றேறியவிண் பூமுடிமேற் சேர்ந்துமணந் திகழ்ந்ததுவாம்.

(இ-ள்.) வேறுபலந் தருவதுதான் வினையென்று வேதங்கள் கூற - முன் ஜநநத்திற்செய்த விருவினையும் இந்த ஜநநத்திலே பலபேதப்பட்டுச் சுகதுக்கங்களைக் கொடுக்குமென்று உன் வேதங்கள் சொல்லாநிற்கவும்,—ஓர் அபூர்வந்தான் கொடுக்குமெனக்கொண்ட உரை - முன் ஜநநத்திற்செய்தவினைக்கு இந்த ஜநநத்திலே பலத்தைக்கொடுப்பது அபூர்வமென்பதொன்றென்று பிரபாகரா நீ மெய்யாகக்கொண்டு சொல்லப்பட்ட சாத்திரம்,—மாறுதரும் மறையோடு - வேதத்தோடு மறுதலைப்படும்,—முன்பு இன்றி வந்ததால் - செய்தகன்மத்தினுடைய பலம் அநாதியிலில்லையாய்ப் பின்பு அபூர்வமென்பதொன்றினாலே வந்ததாயின்,—தேறிய விண்பூமுடிமேற்சேர்ந்து மணம் திகழ்ந்ததுவாம் - வாட்டமில்லாத குளிர்ந்த ஆகாயப் பூவுக்கு முன்பு மணமில்லாமற் றலையிலே சேர்ந்தபின்பு மணமுண்டானதென்று சொல்லுந்தன்மைபோலும் என்க. (க)

ஆநந்தங் கதியென்ன வறிவழிகை வீடென்கை
யூனம்பின் னுணர்விழந்தோர்க் குளதாகு முயர்முத்தி
தானிங்குச் சிவப்பொழியத் தழனிற்கு மாறில்லை
ஞானங்கெட் டுயிர்நிற்கு மெனுமுரைதா னண்ணுதால்.

(இ-ள்.) ஆநந்தம் கதியென்ன அறிவு அழிகை வீடென்கை ஊனம்-பரமாநந்தமே வீடென்று வேதங்கள் சொல்லவும் நீ ஆன்மாவினதறிவுகெட்டு மண்போலவுங் கல்லுப்போலவு மாதல் வீட்டின்பமென்று கூறியது குற்றமுடைத்து; அப்படி அறிவுகெட்ட ஆன்மா முத்தியடைவானாயின்,—பின் உணர்வு இழந்தோர்க்கு உளதாகும் உயர்முத்தி - மூர்ச்சைவந்தறிவுகெட்டவர்களுக்கும் மிக்க வீட்டின்பமுண்டாகவேண்டும்; அஃதன்றியும்,—தான் இங்குச் சிவப்பு ஒழியத் தழல் நிற்குமாறு இல்லை - இவ்விடத்து நெருப்பானது தன்சொரூபமாகிய சிவப்புக்கெட்டால் தானுங்கூடக் கெடுதலன்றி அந்நெருப்பு நிற்கும் வழியில்லையாம்; அதுபோல,—ஞானம் கெட்டு உயிர்நிற்குமெனும் உரைதான் நண்ணுதால் - ஆன்மாவானது தன்சொரூபமாகிய வறிவுகெட்டால் தானுங்கூடக்கெடுதலன்றி ஆன்மாநின்று வீட்டின்பத்தை அநுபவிக்குமென்று சொல்லுஞ் சொற்பொருந்தாது; ஆகையால், அறிவுகெட்டுக் கல்லுப்போலவு மண்போலவுமாய் முத்தியடையுமென்னுமது குற்றமுடைத்து என்க.

உணர்விழந்தோர்-மூர்ச்சித்தோர். உணர்விழந்தோர்க்கும் என உம்மை விரிக்க. ஊனமென்பதனை கடையிலுங்கூட்டுக. (உ)

பிரபாகரன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - உ௦எ.

---

## சத்தப்பிரமவாதிமதம்.

கலிவிருத்தம்.

உரையா னதுமை யலினு லுலகாம்
புரையோ ருணரும் பொருள்பொய் யிதனை
வினையா துணரும் மதுவீ டெனவே
வரையா துரைவா திவருத் தனனே.

(இ-ள்.) உரையானது மையலினால் உலகாம் - சத்தமானது மயக்கத்தினாலே பிரபஞ்சமாம்,—புரையோர் உணரும் பொருள் பொய் - அறியாதார் அர்த்தமுஞ் சத்தத்துக்கு உண்டென்று விசாரிப்பது மெய்யன்றாம்,—இதனை விரையாது உணரும்மது வீடெனவே - சத்தமே பிரமமாவது, அர்த்தமில்லையென்றறியுமறிவே வீட்டின்பமாவதென்று,—வரையாது உரைவாதி வகுத்தனனே - சத்தப்பிரமவாதி பிரபஞ்சபேதத்தையெல்லைப் படவறியாது சத்தமேயுள்ளதென்று வகுத்துச்சொன்னான் என்க. (க)

பரிணா மம்விவர்த் தகமா யமதிற்
றருமா முலகுள் ளதுசத் தமதே
பொருளா வதுசொன் னலமல் லவெனின்
மருவா துபொருட் டிறமற் றிலையே.

(இ-ள்.) பரிணாமம் விவர்த்தகம் மாயம் - சத்தத்தாலே பரிணமித்து மிகவுமுண்டாதலே மயக்கமாம்,—அதில் தருமாம் உலகு-அந்த மயக்கத்திலே உலகத்தை யுண்டாக்கப்படுவது மாகையால்,—உள்ளது சத்தமதே-உள்ளதாகக் காணப்பட்டது சத்தமொன்றுமே,—பொருளாவது சொல் நலம்-சத்தத்துக்கு அர்த்தமென்று சொல்லப்பட்டது அச்சத்தத்தினன்மையேயாகும்,—அல்லவெனில்-சத்தத்தினன்மையன்று அர்த்தம் அர்த்தத்தினன்மையே சத்தமென்றுகூறின்,—மருவாது பொருட்டிறம் மற்றிலையே-சத்தங்கூடா தொருபொருளுண்டாவதில்லை; ஆதலாற் சத்தத்தினன்மையே அர்த்தமாம் என்க.

மற்று - வினைமாற்று. சொன்னலம் - பொன்னேபணி என்கை. (உ)

பூமா வெனவே யுரையும் பொருளு
மாமாம் பொருளொன் றிலணைந் திலதா
ஞமா தரவெய் துசொனன் கருவாய்த்
தாமாம் பொருணெற் பொரிதா னெனவே.

(இ-ள்.) பூமா வெனவே உரையும் பொருளும் ஆம் - பூவெனவும் மாவெனவும் இரண்டுசொல்லுளவாய் அவற்றிற்குப் பொருள் கூறுமிடத்துப் புட்பமென்றும் இலக்குமியென்றுங் கூறப்படும்,—ஆம்பொருள் ஒன்றில் அணைந்திலதால் - அப்படிக் கூறப்படும் பொருளொன்றிலே சத்தமடங்காமற் பூமியெனவும் விலங்கெனவுஞ் சொல்லப்பட்ட பொருளையுங் கொள்ளப்படுமாதலால்,—நாம் ஆதரவு எய்து சொல் நன் கருவாய்த்தாம் ஆம் பொருள் - நாம்விருப்பத்தைக்கொண்டு சொல்லுஞ்சொல்லே நல்லகருப்பமாகக்கொண்டு பலபொருள்களுமுண்டாம்; அஃதென்போலவென்னில்,—நெற்பொரி தானெனவே - நெல்லிற்றோன்றும் பொரிக்கு நெல்லேகருப்பமானாற்போல அர்த்தத்துக்குச்சத்தமே கர்ப்பமாம் என்க.

பொரிக்கு வன்னபேதமும் நாமபேதமுமுண்டாயினும் நெல்லே அதற்குக் கருப்பமானாற்போல அர்த்தம் பலபேதப்படினுஞ் சத்தமேகருப்பமாமென்பதுகருத்து.()

சொல்வந் தெழலும் பொருடோன் றுதலாற்
சொல்லே பொருளென் றுதுணிந் திடுநீ

சொல்லும் பொருளும் முடனின் றதெனிற்
சொல்லும் பொருளின் றுசொனின் றதுவே.

(இ-ள்.) சொல்வந்து எழலும் பொருள் தோன்றுதலால் சொல்லே பொருளென்று துணிந்திடு நீ-யாதொருசொல் தந்ததாலோட்டங்களாலே யுண்டாக அந்தச்சொல்லிலே பொருளுமுண்டாமாதலாற் சொல்லே பிரதானமென்று நீ தெளிந்திடுவாயாக; அற்றன்று,—சொல்லும் பொருளும் உடன் நின்றதெனின் - சொல்லும்பொருளு முடனிற்கையாற் பொருளுந் தனியே யொருமுதலென்றுகூறின்,—சொல்லும்பொருள் இன்று சொல் நின்றதுவே - ஒருசொற்குப் பொருளுளைக்குமிடக்துப் பொருளுஞ்சொல் லாமாதலாற் சொல்லொழிந்து பொருளென்றொன்றுண்டாவதில்லை; அதனாற் சத்தமே பிரமமென்று கொள்வாயாக என்க. (௪)

சத்தப்பிரமவாதிமதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௨௧௧.

---

## சத்தப்பிரமவாதிமதமறுதலை.

உரையா னதுமை யலினு லுலகே
லுரையா யொருமை யலுமுள் ளதென்
வரையா துணரும் மதுவண் கதியேல்
வரையா மறையோ டுமலைந் தனையே.

(இ-ள்.) உரையானது மையலினுல் உலகேல் - சத்தமானது பரிணும விவர்த்தனமாகிய மயக்கத்தினுலே பிரபஞ்சமாமென்று கூறினுய்; அங்ஙனமாயின்,—உரையாய் ஒருமையலும் உள்ளதென-சத்தமே சர்வமுமாமென்பதன்றிச் சத்தத்திலேநின்றுண்டாகத்தக்கதொரு மயக்கமு முண்டென்று சொல்லாய்,—வரையாது உணரும்மது வண் கதியேல் - அஃதன்றியும் பொருளைவரையாமல் சத்தத்தைப்பிரமமென்று குறித்துணர்தலே நல்லமுத்தியென்று கூறினுய்; அங்ஙனமாயின்,—வரையா மறையோடு மலைந்தனையே - வேதத்திற்சொல்லப்பட்ட கன்மத்தையும் ஞானத்தையும் செய்வதும் உணர்வதுஞ் செய்யாமன் முத்தியடையலாமென்று வேதத்தோடு மறுதலைப்பட்டுக்கூறினுய் என்க.

வேதஞ்சொன்னபடி கன்மஞ்செய்தானுயினும் ஞானமுணராதார்க்கு முத்தியில்லையென்று வேதாகமசாத்திரபுராணங்கள் சொல்லவுஞ் சத்தமேபிரமமென் றறியுமறிவால் முத்தியடையலாமென்பது மாறுபாடு. (௧)

அருவம் முரையா தலினவ் வுருவாய்
மருவும் பரிணு மமறந் திடுமாம்
பருகுந் ததியா னதுபா லதெனி
லுருவம் மதுவா யழியும் முரையே.

(இ-ள்.) அருவம் உரையாதலின் அவ்வுருவாய் மருவும் பரிணுமம் மறந்திடுமாம் - அந்தச்சத்தமானது அருபமாதலாற் பிரபஞ்சரூபமாய்ப்

பரிணமித்துப் பொருந்துதலை நினைக்கமாட்டாதாம்; அற்றன்று,—பருகும் ததியானது பாலதெனில்-குடிக்கும் பகுதியான பாலானது தின்னும் பகுதியாகியதயிரா யுருப்பெற்றாற்போல அருவமாகிய சத்தம் உருவமாகிய பிரபஞ்சமா யுருப்பெறுமென்று நீகூறின்,—உருவம் அதுவாய் அழியும் உரையே-அத்தயிர் மீளவும் பாலாகுந் தன்மையின்றித் தயிராய்நின்றழியுந் தன்மைபோல, சத்தமும் பிரபஞ்சமாயுருப்பெற்றான் மீளவுஞ் சத்தமாகுந் தன்மையின்றிப் பிரபஞ்சமேயாய் நின்றழியும் என்க. (உ)

ஆயம் முடனந் தவிவர்த் தநமு
மாயவ் வுளதென் றுசொலெவ் விடமு
மாய்நின் றமையின் னுரையின் னலமு
மாயும் பொருளுக் கறிநா மமதே.

(இ-ள்.) ஆயம் உடன் அந்த விவர்த்தநமும் மாய உளதென்றுசொல்-சத்தத்தின்வரவு பிரபஞ்சமாய்வருதலும் பலரூபங்களாய்ப் பரிணமித்து வருதலுஞ் செய்கையால் சத்தத்துக்கு இப்போதழிவுண்டாதல் வேண்டுமென்றுசொல்லாய்; அஃதன்றியும்,—எவ்விடமுமாய் நின்றமையின் உரையின் நலமும் ஆயும் பொருளுக்கு அறி நாமமதே - சத்தத்துக்கு நன்மையென்றபொருள் எவ்விடமுமாய் நின்றமையின் அப்பொருளை யாராயுமிடத்து அப்பொருளுக்குப் பெயர்ச்சொல்லாய்நின்று பொருளைவிளக்குவதே நன்மையென்றறிவாயாக என்க.

எனவே சத்தத்தினும் அர்த்தமே சிறப்பையு நிலைபேற்றையு முடைத்தென்பது கருத்து. பரிணாமமாகின் நெருப்பென்றபோது நெருப்பா யெழுந்திருக்க வேண்டும்; விருத்தியாகின் நெருப்பென்றபோது வாய்வேகவேண்டும்; ஆதலால் தாதான்மியமுமன்று ததுற்பத்தியுமன்று இடுகுறிப்பெயரா மென்றதெனக்கொள்க.

உரைபோற் பொருளுக் குருவின் மையினவ்
வுரையே போருளென் றனையின் றரியென்
னுரையே கவிமா லவனுக் குளதா
முரையாய் கவியா கவொர்மா லினையே.

(இ-ள்.) உரைபோல் பொருளுக்கு உரு இன்மையின் அவ்வுரையே பொருளென்றனை - சத்தத்தைப்போல அர்த்தத்திற்கும் உருவமில்லாமையினால் அச்சத்தமே அர்த்தமென்று கூறினாய்,—இன்று அரியென் உரையே கவி மாலவனுக்கு உளதாம் உரையாய் கவியாக ஓர் மாலினையே - இன்று அரியென்று சொல்லப்பட்ட சத்தம் திருமாலினுக்குங் குரங்குக்கும் மற்றும் பலபொருட்கும் பெயராகச்சொல்லலாம்; அதனைப் பொருட்டன்மையிலே நின்றுஞ் சத்தங்கொள்ளாமற் சத்தத்தின்றன்மையிலேநின்றும் பொருள் கொள்ளலாமாகில், திருமாலைக் குரங்காகச்சொல்வாயாக என்க.

எனவே சொல்வேற்றுமையும் பொருள்வேற்றுமையும் உண்டென்பதாயிற்று. இதனால், சத்தமும் பொருளு மொன்றுபட்டிருந்தாலும் இரண்டும் வேறென்றே காண்க என்றதாம். (ச)

நெல்லிற் பொரியா வதுநீ டழலிற்
சொல்லிற் பொருளொன் றுதொக் கிடலாற்

கல்வித் திறமா முரைகாட் சியினுன்
மல்லற் பொருள்சா லவளந் தருமே.

(இ-ள்.) நெல்லில் பொரியாவது நீடு அழலில் - பொரிக்கு நெல்லே கர்ப்பமானாற்போலப் பொருட்கெல்லாஞ் சொல்லே கர்ப்பமென்று கூறினுய்; அங்ஙனமாயின்,நெல்லு மிக்கநெருப்பினைச்சேர்ந்தாற் பொரியாவதாதலால் நீகூறியது உவமையன்று,—சொல்லில் பொருள் ஒன்றொடு தொக்கிடலால் கல்வித்திறமாம் உரை காட்சியினுல் மல்லற் பொருள் சால வளந் தருமே - பூமா முதலிய வொருசொல்லிலே பலபொருள் கூடி நிற்றலால் அதனையறியக்கற்பதே சத்தம்; அப்பொருளைப்பிரித்தறியப்பட்டால் நல்ல வளப்பத்தினையுடைய பொருடானே நின்று மிகவு நன்மையைத் தருமாதலால் நீ கூறிய சத்தத்திலும் அர்த்தமே சிறப்புடைத்து என்க. (௫)

முன்கண் டபொருட் பெயரா தலினுற்
பின்கண் டபிழம் புணரும் பெயரா
னன்கண் டபொருட் கொருநா சமதின்
றென்கண் டனைகா ரணமின் றழிவே.

(இ-ள்.) முன் கண்ட பொருள் பெயராதலினுல் - முன் அறிவினுற் காணப்பட்ட அர்த்தமே சத்தமான பெயராய் நிற்கையாலும்,— பின்கண்ட பிழம்பு உணரும் பெயரால் - பின்காணப்பட்ட உருக்களைச் சத்தமான பெயரைக்கொண் டறிகையினுலும்,—நன்கண்ட பொருட்கு ஒரு நாசமது இன்று - நன்றாகக் காணப்பட்ட அர்த்தத்துக்குக் கேடில்லையாம்; எனவே சத்தத்துக்குக் கேடுண்டாம்,—என் கண்டனை காரணம் இன்று அழிவே - காரியமாகிய சத்தமழிதலே யன்றிக் காரணமாகிய அர்த்தமழியுமென்று சொல்லுகை எப்படி யறிந்தாய் என்க.

எனவே அர்த்தங் காரணமென்றும் பிரதானமென்றுமாயிற்று. என்கண்டனை யென்பது - எதுகொண்டு கண்டாயென வினவியது. (௬)

பொருளிந் திரியம் முணர்வோ டுபுமா
னிருளின் றியிடும் மொளியித் தனையு
மருவும் பொழுதில் வருஞா னமதி
னொருவும் பெயரர்த் தமுதித் திடுமே.

(இ-ள்.) பொருள் இந்திரியம் உணர்வோடு புமான் இருள் இன்றியிடும் ஒளி இத்தனையும் மருவும் பொழுதில் வரும் ஞானம் - ஆன்மா ஒரு விடயத்தை யறியும்போது, அறியப்படுபொருளும் அதனைக்காட்டும் இந்திரியமும் அதனோடுகூடியுணரு மந்தக் கரணங்களும் அவற்றிற்கு மூலமாகிய பிரகிருதியும் அவற்றை வெளியாகத் தோற்றுவிக்கிற திரோதான சத்தியுமாக வித்தனையுங் கூடுமளவில் ஆன்மாவுக்கறிவுண்டாம்,—அதின் ஒருவும் பெயர் அர்த்தம் உதித்திடுமே - அவ்விடத்திற் பெயர் நீங்கப்படும் பொருள் தோன்றப்படுமாதலால் அர்த்தமே பிரதானம் என்க.

இருளின்றியிடும் ஒளியென்பது-கன்மத்துக்கீடானபுசிப்பிற் செலுத்துகையால் திரோதாயி ஒளியென்றாயிற்று. ஒருவும்-நீங்கும். ஆண்பனையிற் குரும்பை தோன்றி

னது பெரியோர் வசனமாகிய சத்தத்திலே யன்றோவென்னில், அவர் சிவோகம் பாவனை பலத்தினலுண்டான தொழியக் கேவலஞ் சத்தத்திலுண்டானதன்று; உண்டாகில் எல்லா வசநங்களிலு முண்டாக வேண்டுமெனக் கொள்க. (எ)

அத்தந் தெளிதற் கொளியா னதுபோற்
சத்தம் பொருடா னறிதற் குளதா
நித்தம் மதுவன் றுரைநின் றழியுஞ்
சித்தன் னெருவன் னுரைசெய் தனனே.

(இ-ள்.) அத்தம் தெளிதற்கு ஒளி ஆனது போல் - இருளின்கட்கிடக்கும் பலபொருள்களைத் தெரிதற்குக் கைவிளக்குண்டான தன்மையைப் போல,—சத்தம் பொருடான் அறிதற்கு உளதாம்-பலபேதப்பட்ட பொருள்களையு மறிதற்குச் சத்தமுண்டானதாம்,—நித்தம் அது அன்று உரைநின்று அழியும் - அந்தச்சத்தம் நிலைபேறுடைத்தன்றாய்ப் பொருளாகிய காரணமில்லையாயிற் றானுங்காரியப்படாதழியுமாகையால்,—சித்தன் ஒருவன் உரை செய்தனனே-இந்தச்சத்தஞ் சித்தனாகிய பரமேசுவரனாலே யுண்டாகப்பட்டதாதலால், அதனைப் பிரமமென்று சொல்லக்கடவையன்று என்க.

சத்தப்பிரமவாதிமதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௨௧௧.

---

## மாயாவாதிமதம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நானே பிரம மென்றுரைத்து ஞாலம் பேய்த்தே ரெனவெண்ணி
யூனே புகுந்து நின்றுயிர்கட் குபதே சங்க ளுரைத்துவரு
மானு மதிகே டனுமாய மாயா வர்தி பேயாகித்
தானே யுரைக்கு மந்நூலி னுண்மை தன்னைச் சாற்றுவாம்.

(இ-ள்.) ஆன்மாவுஞ் சிவமுமென்னுது அகம்பிரமமென்று சொல்லிப் பிரபஞ்சமெல்லாம் கானற்சலம்போலப் பொய்யெனக்கருதிக் கருப்பாசயம் நீங்காமனின்று தான் மற்றுள்ள ஆன்மாக்களுக்கு உபதேசங்கள் சொல்லித்திரிகின்ற நாணமில்லாத அறிவீனனாகிய மாயாவாதி பித்தேறி வேதாகமங்களுக்குப் பொருந்தாமற் றனக்குப் பொருந்தத்தானே சொல்லிக்கொள்ளு மந்தநூலினது உண்மையின் றன்மையைச் சாற்றுவாம் என்க.

ஊனே புகுந்துநின்றென்பது - தான் பிரமமாயின் ஊனிற்புகுதல் வேண்டாவென்பது கருதியென்க. உயிர்கட்குபதேசங்களுரைத்து வருமென்பது - சர்வ ஆன்மாக்களுந் தன்னைப்போலப் பிரமமாகையால் உபதேசஞ் சொல்லவேண்டாவென்பது கருதியென்க. (க)

அறிவா யகில காரணமா யநந்தா நந்த மாயருவாய்ச்
செறிவா யெங்கு நித்தமாய்த் திகழ்ந்த சத்தாய்ச் சுத்தமாய்க்
குறிதான் குணங்க ளொன்றின்றிக் கூறும் வேதந் தனக்களவாய்ப்
பிறியா வநுபூ திகந்தனக்காய் நின்ற தந்தப் பிரமந்தான்.

(இ-ள்.) அறிவாய் அகிலகாரணமாய் அநந்தாநந்தமாய் அருவாய்ச் செறிவாய் எங்கும் நித்தமாய்த் திகழ்ந்த சத்தாய்ச் சுத்தமாய் - ஞானமே சொரூபமாய்ப் பிரபஞ்சத்துக்குக் காரணமாய் எல்லையில்லாத ஆனந்தமாய் உருவமின்றி அருவமாய் எங்கு நிறைந்து நிற்பதாய்க் கேடிலாதாய் விளங்குஞ்சத்தாய் அசுத்தத்துடன் கூடாது சுத்தமேயாய்,— குறிதான் குணங்கள் ஒன்று இன்றிக் கூறும் வேதந் தனக்கு அளவாய்ப் பிரியா அநுபூதிகந்தனக்காய் நின்றது அந்தப் பிரமந்தான்-ஓரடையாளமும் ஓர்குணமுமில்லையாய்ச் சொல்லத்தக்க வேதங்கட்கு வரம்பாய் நீக்கமில்லாத அநுபூதி தனக்கே யுடைத்தாய் நின்றது உயர்ந்த பிரமம் என்க.

பிறியாவநுபூதிகந்தனக்காய் என்றதனுல், ஞாதிருஞான பேதமில்லை என்பதாயிற்று. (உ)

ஒன்று மிரவி பலபாண்டத் துண்டா முதகத் தங்கங்கே
நின்றாற் போல வுடறோறு நிகழ்ந்து நிற்கும் பொருண்மேற்கண்
சென்றாற் போலப் புலன்களுக்குஞ் சிந்தை தனக்குந் தெரிவரிதா
மென்றாற் காட்சி முதலாய விருமூன் றளவைக் கெட்டாதால்.

(இ-ள்.) ஒன்றும் இரவி பலபாண்டத்து உண்டாம் உதகத்து அங்கு அங்கே நின்றாற்போல - ஓராதித்தன் ஆகாசத்திலே நிற்கப் பலபாத்திரங்களிலு முண்டாகிய ஜலங்களிலே தனித்தனியே தோன்று மாறுபோல,— உடல் தோறும் நிகழ்ந்து நிற்கும் பொருள் - ஏகமாகிய பிரமம் உடல்கடோறுந் தனித்தனியே தோன்றப்பட்டு நிற்கும்,— மேற்கண் சென்றாற் போலப் புலன்களுக்குஞ் சிந்தைதனக்குந் தெரிவு அரிதாம்-அவ்வாதித்தன் பாத்திர வுதங்களிலகப்படாமல் மேற்பட வியங்குகின்றாற்போல, அந்தப் பிரமமுடலி லகப்படாது மேற்பட்டு இந்திரியங்களுக்கும் கரணங்களுக்கும் அறிதற்கரிதாய் நிற்கும்,—என்றால் காட்சிமுதலாய இருமூன்று அளவைக்கெட்டாதால் - இப்படிச் சொல்லப்படுகையாலே காட்சிமுதலாய ஆறளவைக்குந் தெரிதற் கரிதாம் என்க.

ஆல் - அசை. பொருண்மேற்கண் பாத்திரத்திடத்துக் கண்ணை தோடிக் கண்டாற்போல அறிவுகளுக் கிராவணன் பலதலையுங்கொண்டு வியாபரித்தாற் போலவும் ஆயிரம் பணமுடியையுடைய அநந்தனைப்போலவும் ஒருவனுமே பலமுகமாய் வழங்காநின்றான். இருமூன்றளவை—பிரத்தியக்ஷம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தாபத்தி, அபாவம். (௩)

இருளிற் பழுதை யரவெனவே யிசைந்து நிற்கு மிருங்கதிர்க
ளருளப் பழுதை மெய்யாகி யரவும் பொய்யா மதுவேபோ
லருளிற் சகமுஞ் சத்தாகி மருவித்தோன்று மாசில்லாத்
தெருளிற் சித்தே சத்தாகும் பித்தாஞ் சகத்தின் செயலெல்லாம்.

(இ-ள்.) இருளில் பழுதை அரவெனவே இசைந்து நிற்கும் இருங்கதிர்கள் அருளப் பழுதை மெய்யாகி அரவும் பொய்யாம் அதுவேபோல் - இருளின்கட் புற்றருகே ஒரு பழுதை கிடப்ப அதனைக்கண்டோர் பாம்பெனவே பொருந்திநிற்கும் அளவில் ஆதித்த கிரணங்கடோன்றப் பழுதை

மெய்யாய்ப் பாம்பு பொய்யாம் அதுபோல்,—மருளில் சகமுஞ் சத்தாகி மருவித்தோன்றும் - பொய்யாகிய பிரபஞ்சத்தினுடைய செயலும் மயக்கத்தாலே மெய்யாகப் பொருந்தித் தோன்றும்,—மாசு இல்லாத் தெருளில் சித்தே சத்தாகும் பித்தாம் சகத்தின் செயலெல்லாம் - மயக்கமற்ற பிரமஞானம் விளங்கின காலத்துப் பிரமமே யுண்மையாகப் பிரபஞ்சத்தின் செயலெல்லாம் பொய்யாம் என்க. (௪)

உலகந் தானு நிருவசநத் துண்டா மின்றே லுதியாது
நிலவி யுண்டே லழியாது நிற்ப தாகு மித்தையா
லிலகு சுத்தி கனல்சேர வின்றும் வெள்ளி நின்றதாங்
குலவு சகமு மவிகாரம் பரமார்த் தத்திற் கொள்ளாதால்.

(இ-ள்.) உலகந்தானும் நிருவசநத்து உண்டாம் - பிரபஞ்சமானது வசநரகிதமான பிரமத்திலே நின்றுந் தோன்றும்,—இன்றேல் உதியாது- அந்தப் பிரமத்தினின்றுந் தோன்றாதாகில் வேறோருபாதாந முண்டாய்ப் பிரபஞ்சந் தோன்றுவதுமில்லை,— நிலவி உண்டேல் அழியாது நிற்பதாகும் - பிரபஞ்சத்தை ஒருவர் தோற்றுவிக்காமற் றானே யுண்டாமாகில் அதுவு மொருமுதலா யழியாது நிற்கத்தகும்; அஃதன்றி அழியப்படுவதி யாங்ஙனமெனின்,— மித்தையால் - பிரபஞ்சம் மெய்போலத் தோன்றினும் பொய்யாகை நிச்சயமாகையால்; அஃதன்றிப் பிரபஞ்ச மெய்போலத் தோன்றிப் பிரகாசிக்கிறபடியும் பாரமார்த்தத்திற் பொய்யாகிறபடியும் எங்ஙனமெனின்,—இலகு சுத்தி கனல் சேர இன்றும் வெள்ளி நின்றதாம் குலவு சகமும் அவிகாரம் பரமார்த்தத்தில் கொள்ளாதால் - வெள்ளிபோலப் பிரகாசிக்கு மிப்பியையும் வெள்ளியையுங் கனலிலிட்டால் இப்பிகெட்டு வெள்ளிநின்றாற்போல மெய்போலத் தோன்றும் பிரபஞ்சமும் அவிகாரமாகிய பிரமமும் பரமார்த்தத்தில் நிரூபணஞ்செய்தால் அவிகாரமாகிய பிரமமே மெய்யாய்ப் பிரபஞ்சம் பொய்யாகக் கொள்ளப்படும் என்க.

அவிகாரமும் எனவும்மைவிரிக்க. நிருவசநம் அவிகாரம் என்பன பிரமத்துக்கோராகுபெயர். சுத்தி - இப்பி, கிளிஞ்சில். (௫)

தாங்கு முலகுக் குபாதாநஞ் சத்தாஞ் சிலம்பி நூறன்பால்
வாங்கி வைத்துக் காப்பதுபோல் வையமெல்லாந் தன்பக்க
லோங்க வுதிப்பித் துளதாக்கி நிறுத்தி யொடுக்கத் திலதாக்கு
மாங்கு வந்த வாறதனுற் சத்தாஞ் சகத்தி னமைவெல்லாம்.

(இ-ள்.) தாங்கும் உலகுக்கு உபாதாநம் சத்தாம் - ஆதாரமாகிய பிரபஞ்சத்துக்கு உபாதாநம் சத்தாகிய பிரமமேயாம்; அஃதென்போல வெனில்,— சிலம்பிநூல் தன்பால் வாங்கிவைத்துக் காப்பதுபோல் வையமெல்லாந் தன்பக்கல் ஓங்க உதிப்பித்து உளதாக்கி நிறுத்தி ஒடுக்கத்து இலதாக்கும் - சிலம்பியானது நூலைத்தன்னிடத்திலே நின்றுந் தோற்றுவித்து அந்தநூலை ஓரிடத்திலே யுண்டாக்கிவைத்துப் பாதுகாத்துப் பின் பந்த நூலழியும்படி தானீங்குந் தன்மைபோலப் பிரமமும் பிரபஞ்ச பேதமெல்லாவற்றையுந் தன்னிடத்திலே நின்றும்,விளங்கத் தோற்றுவித்தும்

அவற்றை உளதாக இரக்ஷித்தும் பின்னில்லையாம்படி சங்கரித்திடும்,— ஆங்கு வந்தவாறதனாற் சத்தாம் சகத்தினமையெல்லாம் - அப்படிப் பிரமத்திலே தோன்றிநின்று கெடுகையாற் பிரமத்தினுடைய நியமமே பிரபஞ்சத்தின் செயலெல்லாம் என்க. (சு)

மன்னும் பிரமந் தனின்வானாய் வானின் வளியா யந்தவளி
தன்னி னழலா யழலின்பாற் சலமாய்ச் சலத்திற் றாரணியாய்ச்
சொன்ன விதனின் மருந்தாகித் தோற்று மருந்தி லன்னமா
யன்ன மதனிற் றுவக்காதி யாறு தாது வாயினவால்.

(இ-ள்.) மன்னும் பிரமந்தனின் வானாய் வானின் வளியாய் அந்த வளி தன்னின் அழலாய் அழலின்பால் சலமாய்ச் சலத்தில் தாரணியாய்-கேடில்லாத பிரமத்திலே ஆகாசந்தோன்றி ஆகாசத்திலே வாயுத்தோன்றி அவ்வாயுவிலே அக்கினிதோன்றி அக்கினியிலே ஜலந்தோன்றி ஜலத்திலே பிருதிவி தோன்றி,— சொன்ன இதனின் மருந்தாகித் தோற்றும் மருந்தில் அன்னமாய் அன்னமதனில் துவக்காதி ஆறுதாது ஆயினவால் - கூறிய இப் பிருதிவியிலே ஔஷதியாய்த் தோற்றிய வோஷதியிலே உணவாய் அவ்வுணவிலே காயப்பகுதிப்பட்ட தாதுக்களாறு முண்டாயின என்க.

தாதுக்களாறுவன—தோல், எலும்பு, நரம்பு, மச்சை, சோரி, சுக்கிலம், என்பவை. இவை காயத்தின் பகுதிக்கோர் பொதுப்பெயர். (எ)

ஆறு தாதுக் களுங்கூடி வந்த கோச மன்னமய
மாறில் பிராண கோசமய மன்னு மதனின் மனோமயந்தான்
வேறு வரும்விஞ் ஞானமய மேவு மதனி னதுதன்னிற்
கூறி வருமா நந்தமயங் கோச மயம்பின் கூடியதால்.

(இ-ள்.) ஆறு தாதுக்களுங் கூடி வந்த கோசம் அன்னமயம் - அவ்வாறுதாதுக்களுங்கூடி யுண்டாகியது அன்னமயகோசம்,—மாறு இல் பிராணகோசமயம் மன்னுமதனில் - பொருந்திய அந்தவன்னமய கோசத்திலே மாறில்லாது வாயுப்பரந்து துடிப்புண்டானது பிராணமயகோசம்,— மனோமயந்தான் - அந்தப்பிராணமயகோசத்திலே மயக்கநீங்கிப் பழைய மனங்கூடுவது மனோமயகோசம்,—வேறு வரும் விஞ்ஞானமயம் மேவும் அதனின்-பொருந்திய அந்தமனோமயகோசத்திலே வேறாகவருஞ் சோத்திராதிகள்கூடி அறிவாயிருப்பது விஞ்ஞானமயகோசம்,—அது தன்னில் கூறிவரும் ஆநந்தமயம் - அந்தவிஞ்ஞானமய கோசத்திலே கூறுகின்றவாக்காதிகள்கூடி ஆநந்தமாயிருப்பது ஆநந்தமயகோசம்,—கோசமயம் பின் கூடியதால் - மயமென்னுஞ்சொல்லின் பின்னே கோசமென்னுஞ் சொற் கூடியதாம் என்க.

மயமென்னுஞ் சொல்லின்பின் கோசமென்னுஞ் சொற்பெயர்கூறாது பின்கோசமெனக்கூடியதெனத் தொகுத்தொருசொல்லாகக்கூறினார். கோசம் - உறுப்பு. இவற்றின்விவரங்களை ஞானாவரணச்செய்யுளிற்காண்க. (அ)

கோச வுருவிற் பிரமந்தான் கூடித் தோன்று நீடுமொரு
காச மருவுங் கடந்தோறு நின்றாற் போலக் கதிரவன்றன்

வீசு கிரண முருவின்கண் வெளிப்பட் டிடுவ ததிற்பற்றும்
பாச மதனுக் கின்றாகு மென்றாற் பரத்திற் பற்றுண்டோ.

(இ-ள்.) கோச உருவில் பிரமந்தான் கூடித் தோன்றும் - பஞ்சகோசமாகிய வுருவின்கண்ணே பிரமமானது கூடிப் பிரகாசிக்கும்; அஃதென் போலவென்னில்,—நீடும் ஒரு காசம் மருவுங் கடந்தோறும் நின்றாற்போலக் கதிரவன்றன் வீசுகிரணம் - எட்டுதற்கரிதாய ஒப்பற்ற ஆகாயத்தின் கண்ணே பொருந்திநிற்கும் ஆதித்தனது மிகுந்த கிரணமானது பூமியின் கண்வைத்த கடந்தோறுந் தனித்தனியே தோன்றுமாபோல,—உருவின் கண் வெளிப்பட்டிடுவது - அந்தப்பிரமமும் ஆதித்தனைப்போல எட்டாதாயினும் உருக்கடோறுந் தனித்தனியாய்நிற்கும்,—அதில் பற்றும் பாசம் அதனுக்கு இன்றாகும் - பிரமம் அப்படிப் பாசத்தோடுகூடி நின்றதாயினும் பிரமத்தைப் பாசஞ்சென்று பற்றுவதில்லையாம்,—என்றால் பரத்தில் பற்று உண்டோ - பிரமத்தைப் பாசம்பற்றாதாகையால் அந்தப்பிரமத்துக்குப் பாசத்தோடு பற்றில்லை என்க.

ஆகாசம் - காசமெனத் தலைகுறைந்து நின்றது. ஓ - எதிர்மறை. (௯)

அலகின் மணிக ளவைகோவை யடைந்த பொழுதி னங்கங்கே
நிலவு மொருநூல் பலநிறமாய் நின்றாற் போல நீடுருவம்
பலவு மருவு பேதத்தாற் பன்மை யாகும் பிரமந்தான்
குலவு போக போக்கியங்கள் கொள்ளும் போன்று கொள்ளாதால்.

(இ-ள்.) அலகில் மணிகளவை கோவை அடைந்த பொழுதில் அங்கு அங்கே நிலவும் ஒருநூல் பலநிறமாய் நின்றாற்போல நீடு உருவம் பலவும் மருவுபேதத்தால்பன்மையாகும்பிரமந்தான்-எண்ணிறந்த பலவன்னமாகிய மணிகளைக் கோவையாகக்கோத்தவிடத்தே ஒருநிறப்பட்டநூல் அம்மணிகளாலே பலநிறமாய் நின்றாற்போல, பிரபஞ்சத்திற்றோன்றப்பட்ட யோனிகள் பலவாகப் பேதிக்கப்படுகையால் அவற்றோடுங்கூடிய பிரமமும் பலபேதப்பட்டாற்போல அங்கங்கேதோன்றும்,—குலவு போக போக்கியங்கள் கொள்ளும் போன்று கொள்ளாதால் - ஆகையால் மணிகளிற்பொருந்தினநூலுந் தன்றன்மைகெடாது நின்றாற்போலப் பிரமமும் போகபோக்கியங்கள் கொள்வாரைப்போன்று கொள்ளாதாய்நிற்கும் என்க. (௧௦)

போற்றுஞ் செயலாற் பலநாமம் புனைந்து போக போக்கியத்திற்
றோற்று நனவு கனவினுடன் சுழுத்தி துரிய மெய்துமிதற்
கேற்ற கரண நிரைநிரையே யீரேழ் நாலொன் றெல்லாமு
மாற்றி நிற்குங் கேடின்றி வந்த போக மாய்ந்திடவே.

(இ-ள்.) போற்றுஞ் செயலாற் பலநாமம் புனைந்து - பிரபஞ்சத்தார் துதிக்குந்தொழிலாலே பரமான்மாவென்றும் ஜீவான்மாவென்றும் அந்தரான்மாவென்றும் நரகான்மாவென்றுந் திரியக்கான்மாவென்றும் பலபெயர்களையும்பொருந்தி,—போக போக்கியத்தில் தோற்றும் - போகத்திலும் போக்கியத்திலுங் கூடியநுபவிப்பாரைப்போலத் தோன்றும்,—நனவு கனவினுடன் சுழுத்தி துரியம் எய்தும் - சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியமென்னு நாலவத்தையும்பொருந்தும்,—இதற்கேற்ற கரணம் நிரை

நிரையே ஈரேழ் நால் ஒன்று எல்லாமும் மாற்றிநிற்கும் கேடு இன்றி வந்த போகம் மாய்ந்திடவே - அவ்வவத்தை நாலிற்குங்கூடி நிற்குங்கரணம் அடைவே நிரைநிரையாகக்கொள்ளுமிடத்துச் சாக்கிரத்துக்குப்பதினாலும், சொப்பனத்துக்குநாலும், சுழுத்திக்கொன்றும், துரியத்துக்குக்கேடில்லாத வந்தப் புண்ணியபாவங்கள்கெடும்படி எல்லாவற்றையு நீங்கிநிற்கு மிடமு மாகநிற்கும் என்க.

சாக்கிரத்திற் பதினன்கு கருவியாவன—சோத்திராதி யைந்து, சத்தாதியைந்து, அந்தக்கரணநான்கு ஆகப்பதினன்காம். சொப்பனத்தினலாவன— அந்தக்கரணங்கள். சுழுத்தியிலொன்ருவது - உள்ளம், இதனையே சித்தமெனக்கூறுவர். பிரகிருதி புமான் மகான் புருடன் அவித்தை அவ்வியத்தம் மூலப்பிரகிருதி என்பன ஒருபொருட்கிளவி. பிரமமொழிய வெல்லாநீங்கி நின்றவிடந்துரியம். போகம் - புண்ணியபாவம். போக்கியம் - மனம். இவை யிரண்டிற்குஞ் சாட்சிபூதம் பிரமமென்பது கருத்து. அவத்தை யென்பது - பிரமமுபாதிகளோடுங்கூடினுற் பேதிக்குமவசரம். சாக்கிரம் - விழிப்பு. சொப்பனம் - பிரகிருதியவசரம். சுழுத்தி - பிரகிருதிரூபம். போகபோக்கியமென்பது - புசிப்பும் புசிப்புக்கிடமாகிய பதார்த்தங்களும். துரியமாவது கருவிநீங்கின விடமெனக்கொள்க. (கக)

கருவி யெல்லா நானெனவே கருதல் பந்த மக்கருத்தை
யொருவ முத்தி யுண்டாகு முள்ளம் வித்தாஞ் செய்தியினுன்
மருவு மாயா காரியங்க ளவித்தை மாய வேமாயை
பிரியும் பிரிய ஞானமது பிறக்கும் பிறவர் பேதமே.

(இ-ள்.) கருவியெல்லாம் நானெனவே கருதல் பந்தம்-கருவிகள் பதினுலோடுங்கூடி அவற்றைநானென்றுகருதி நிற்பது பந்தமாம்,—அக்கருத்தை ஒருவ முத்தி உண்டாகும் - அக்கருவிகள் பதினுலோடுங் கூடாம னீங்கித் துரியத்துநிற்கவே தற்சொரூபமாகிய சிவோகம் பாவம்பிறந்து முத்தியுண்டாம்,—உள்ளம் வித்தாம் - பந்தத்துக்கு வித்தாவது மூலப்பிரகிருதி,—செய்தியினுல் மருவும் மாயா காரியங்கள் - அந்தமூலப்பிரகிருதியின்செயலாலே மாயாகாரியங்களாகிய சுகதுக்கங்கள் பொருந்தும்,—அவித்தை மாயவே மாயை பிரியும் - அவித்தையாகிய மூலப்பிரகிருதியின்செயல்கெடவே மாயைநீங்கும்,— பிரிய ஞானமது பிறக்கும் பிறவா பேதமே - அம்மாயை நீங்கவே ஞானமுண்டாம்; அந்த ஞானமுண்டாகிய விடத்தே அந்தஞானம் பநதந்தோன்ருமற்சிவோகம்பாவம்பிறக்கும் என்க.

கருவியெல்லாம் என்றது - தொண்ணூற்ருறு கருவிகளும். உள்ளம் வித்தாஞ் செய்தியினுல் மருவுமென்பது - அவித்தையாகிய வறியாமையின் காரியத்திலே பொருந்துமென்க. (கஉ)

ஆன கன்ம வநுட்டயங்க ளந்தக் கரண சுத்திதரு
மூன மின்றி யச்சுத்தி ஞான மதனை யுண்டாக்கு
ஞான மதுதான் பிரமத்தை நானென் றுணர்த்து நான்பிறந்தால்
வான மதிநீர்த் துளக்கமெனக் காணுந் தன்னை மாயையிலே.

(இ-ள்.) ஆனகன்ம அநுட்டயங்கள் அந்தக்கரண சுத்தி தரும் - உண்டானகன்மாநுஷ்டானங்களாகிய வாகிய சுத்தியாலே அந்தக்கரணத்துக்குச்சுத்தியுண்டாம்,—ஊனம் இன்றி அச்சுத்தி ஞானமதனை உண்டாக்கும் - குற்றமின்றி அச்சுத்தியானது ஞானத்தையுண்டாக்கும்,—ஞானமதுதான் பிரமத்தை நானென்று உணர்த்தும் - அந்தஞானந்தானே அகம்பிரமமென்

பதனை அறிவிக்கும்,—நான் பிறந்தால் வான மதிநீர்த் துளக்கமெனக் காணும் தன்னை மாயையிலே - அங்ஙனந்தானான தன்மையிலே கருத்துமுறறினால் ஆகாசத்திலுண்டாகிய சந்திரன் சலத்தின்கண்ணே நின்று விளங்கித் தோன்றுமுருவம்போல மாயையிலே தற்சொரூபமுந்தெரியும் என்க.

துளக்கப்பாடு, சலத்துக்கொழியச் சந்திரபிரதிபிம்பத்துக் கில்லாமைபோல், அலைவு கருவிகளுக்கொழியப் பிரமத்திற்கில்லை என்க. (கரு)

தானே தானு யநுபோகந் தன்னிற் றன்னை யநுபவித்திட்
டூனே யுயிரோ யுணர்வேயென் றொன்று மின்றி யுரையிறந்து
வானே முதலாம் பூதங்கண் மாய மாயா தேமன்னி
நானே பிரம மெனத்தெளியு ஞானம் பிரம ஞானமே.

(இ-ள்.) தானே தானாய் அநுபோகம் தன்னில் தன்னை அநுபவித்திட்டு - அகம்பிரமமாய் அநுபூதியுந் தன்னிலேதன்னை அநுபவித்து,—ஊனே உணர்வே உயிரோ யென்று ஒன்றும் இன்றி உரை இறந்து-காயமென்றுங் கரணமென்றும் வாயுவென்று மொருபேதமுமின்றி இன்னபடியென்றுசொல்லுதற்கோர் சொல்லு மின்றி,—வானே முதலாம் பூதங்கள் மாய மாயாதே மன்னி - ஆகாசமுதலாகிய பூதங்கள்கெடவுந் தானொருக்காலுங்கெடாதே நிலைபெற்று,—நானே பிரம மெனத்தெளியும் ஞானம் பிரம ஞானமே - அகம்பிரமமெனத்தெளியுஞானமே பிரமஞானம் என்க.

தானே தானாய் - கருவிகரணாதிகளை நீங்கி. (கச)

சாற்று மறைதத் துவமசிமா வாக்கி யங்க டமையுணர்ந்தாற்
போற்றி யதுநீ யானுயென் றறைவ தல்லாற் பொருளின்றே
தேற்று மிதனைத் தெளியாதார் தெளியப் பஞ்ச வாதநமே
லேற்ற வியம நியமாதி யோக மிருநான் கியற்றுவரால்.

(இ-ள்.) சாற்றும்மறை தத்துவமசி மாவாக்கியங்கடமை யுணர்ந்தால் போற்றி அதுநீ ஆனுயென்று அறைவதல்லால் பொருள் இன்றே - சொல்லப்படும் வேதத்தின் முடிவாகிய தத்துவமசிமுதலாகிய மகாவாக்கியங்கள் சொல்லும் பகுதியையுணருங்காலத்து விரும்பி அது நீ யானுய் என்பதல்லாது மற்றொருபொருள் சொல்லுதற்கில்லையாம்; ஆதலால்,—தேற்றும் இதனைத் தெளியாதார் தெளியப் பஞ்ச ஆதநம் மேல் ஏற்ற இயமநியமாதி யோகம் இருநான்கு இயற்றுவரால்-இப்படித்துணியச்சொல்லு மகாவாக்கியங்களி• னுண்மையைக்கொண்டு சோகம்பாவகமாகவறியாதார் அந்த முறையைத்தெளியவேண்டிப் பஞ்சவாதனமுதலாகிய பூசிக்குங்கிரியையும் மேலாகிய இயமமுதலாகிய அட்டாங்கயோகமுஞ் செய்துதிரிவார் என்க.

எனவே சரியை கிரியை யோகமாகியவை பிரமஞானங் கூடவேண்டிச் செய்யுந் தவமென்பது கருத்து. பஞ்சவாதனமாவன—கூர்மாசனம், அநந்தாசனம், சிங்காசனம்,பத்மாசனம்,யோகாசனமாம். அஷ்டாங்கயோகமாவன—இயமம், நியமம்,ஆசநம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியாநம், சமாதி எனவிவை. பஞ்சசாதனம் எனப்பாடமாயின் ஆசநமும் யோகபட்டமும் தண்டும் கமண்டலமும் செபமாலையும் எனப்பொருள் கொள்க. (கடு)

மாயாவாதிமதமுடிந்தது.

ஆசத்திருவிருத்தம் - உருச.

# மாயாவாதிமதமறுதலை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏக நானெனவி யம்பி யிப்படிய றிந்து முத்தியடை மின்னென
மோக மானவுரை சோக மின்பொடுமு டிந்தி டாதுமல டாகிய
காக மானதுக ருங்க லின்றசைப றித்த ழுங்கரிய குஞ்சியின்
றாக மார்பசி தவிர்க்க வாயிடை கொடுத்ததென் றுரைசெய் தன்மையே.

(இ-ள்.) ஏகம் நானென இயம்பி இப்படி அறிந்து முத்தி அடைமின்னென மோகமான உரை சோகம் இன்பொடு முடிந்திடாது - மாயாவாதி நீ நான் ஏகப்பிரமமென்றுசொல்லிப் பின்புகருவிகளை நீங்கி இப்படித்தரிசித்து முத்தி யடையுங்களென்று மயங்கிச் சொல்லுஞ்சொல் நீ எடுத்துக்காட்டின சோகம்பாவனையேல், அங்ஙனங்கூறும் இனிய ஆன்மவாக்கியத்தோடு கூடிமுடியாது; அஃதெங்ஙனமெனில், அவ்வாக்கியம் அதுநானானேன் என்கையால் இரண்டுபட்டு [illegible]வானும் பேறுமாயொன்றுகையால். அஃதன்றியும் பிரமத்தை விகாரமற்றதாகவுங்கூறி மீளவுமயங்கி அந்தப்பிரமஞ் சீவான்மாவாகப்பேதித்ததாகவுங் கூறினாய்; அதற்குக்கன்மமென்றொருமுதலின்றி இல்லாததனையுமுண்டாக்கி அதனைக்கூடிற்றென்றுங்கூறியது மயக்கம். அஃதென்போலவென்னில்,—மலடாகிய காகமானது கருங்கலின் தசைபறித்து அழுங் கரியகுஞ்சியின் தாகம் ஆர் பசிதவிர்க்க வாயிடை கொடுத்ததென்று உரைசெய் தன்மையே - ஒரு மலட்டுக் காகமானது அழுகின்ற தனது கரியநிறத்தையுடைய குஞ்சுக்கு மிக்க பசியைத்தணிப்பான் கரியகல்லினுண்டான விறைச்சியைவாங்கிக் குஞ்சியின்வாயிலேகொண்டுவந்துகொடுத்ததென்றுசொல்லுந்தன்மையாமென்க

எனவே நிர்விகற்பமாகிய பிரமத்திற்குவமை மலட்டுக்காகம். அப்பிரமத்திலே சீவான்மாவாகப் பேதித்ததென்றதற்குவமை அக்குஞ்சி. அந்த ஜீவான்மாவுக்குக் கன்மாதிகளுண்டாக்கிக் கொடுத்தற்குவமை கல்லின்மாம்சம். (௧)

நீடு வேதமள வாக வேகமெனு நீதி தானிகழ்வ தாகுமே
னாடி ஞாதிருவ் ஞான ஞேயமுட னாளு நான்மறையு மோதலா
லோடு மாகுமுன தேக மோதுமிவை யூன மாகியுரை மாறுகோள்
கூடு மாகுமநு பூதி தானுமது கூடி டாதறிவி லாமையால்.

(இ-ள்.) நீடு வேதம் அளவாக ஏகமெனும் நீதிதான் நிகழ்வதாகுமேல் - அநாதியேயுண்டாகிய வேதம் வரையறையாகப் பிரமமொன்றேயென்று சொல்லுவதாக நீ சொன்னாய் அப்படியாயின்,—நாடி ஞாதிருவும் ஞானம் ஞேயமுடன் நாளும் நான்மறையும் ஓதலால் - அந்தவேதத்தில் ஞாதிருஞானஞேய மாகியமூன்று முதலுமுண்டெனவே தெரித்து நாடோறுஞ்சொல்லுதலால்,—ஓடுமாகும் உனது ஏகம் - நீ ஒன்றென்றுசொல்லுஞ்சொல் அவ்வேதவாக்கியங்கொண்டே பின்னிடாநிற்கும்,—ஓதும் இவை ஊனமாகி உரைமாறுகோள் கூடுமாகும் - இன்னும் நீ பிரமம் ஒன்றேயென்றும் அகம்பிரமமென்றுஞ் சொல்லுஞ்சொற்கள் குற்றப்பட்டுத்

தத்துவமசியென்னும்வாக்கியத்தோடு மாறுகோடலைப்பொருந்தும்,—அநுபூதிதானுமது கூடிடாது அறிவு இலாமையால் - உனக்கான்மாவில்லை யாகையாலே அநுபூதிதானுமுண்டாக மாட்டாது என்க.

நான்மறையுமென்கையால் ஆகமத்துணிவும்பெற்றது. உரை - மகாவாக்கியம். அறிவு - ஆன்மா. ஞாதிரு - ஆன்மா. ஞானம் - ஆன்மாவிற்குச் சகாயபூதமான சிவசத்தி. ஞேயம் - அந்தச்சத்தியாலறியப்படும் பிரமேயமானசிவம். (உ)

நீதி யாலொளிகொள் பானு வானதக னீரி லேநிகழு மாறுபோ
லாதி தானுருவ மாய காயமதின் மேவி யாவதிலை யாகுமாந்
தீதி லாவருவ மாத லானிழல்கள் சேர வேறிடமி லாமையா
லோதி லோரகலி னீரி லேயொருவர் காண லாலிலது னேகமே.

(இ-ள்.) நீதியால் ஒளிகொள் பானுவானது அகனீரிலே நிகழும் ஆறுபோல் - கிரணங்களையுடையவாதித் தனதுசாயை பாத்திரோதகங்கள் தோறும்றைமையாலே விளங்குமாபோல,—ஆதிதான் உருவமாய காயமதின் மேவி ஆவதிலையாகுமாம் தீதிலா அருவமாதலால் - சர்வத்துக்கு முதலாயிருக்கிற பிரமங்குற்றமில்லாத வரூபமாகையால் உபாதிகளோடுங்கூடி யுருபமாகியகாயத்திலேபொருந்தி உண்டாவதில்லையாம்;அன்றியும்,—நிழல்கள் சேர வேறு இடம் இலாமையால் - பாத்திரோதகம் நிழலின்கணிருந்தால் ஆதித்தகிரணஞ் செல்லாதாற்போலப் பிரமங்கூடாதகாயமுமுண்டாக வேண்டும்; ஆகையாலும்,—ஓதில் ஓர் அகலின் நீரிலே ஒருவர் காணலால் இலது உன் ஏகமே - பாத்திரோதகத்திலே ஆதித்தனைக் காண்பாளொருவனைப்போலக் காயத்திலே பிரமத்தைக்காண்பா ஞோரான்மாவுண்டாகையாற் சொல்லுங்காலத்து உனது அகம்பிரமமென்பதில்லையாம் என்க.

அருவமாதலானும், இடமில்லாமையாலும், ஒருவர்காணலாலும் என்வும்மை கூட்டுக. நிழல்சேர வேறிடமிலாமையாலென்பது - பிரமமருவமாதலானிழல் சேர்தற்கிடமில்லையாமென்க. (௩)

**வே**று வாயில்புல னோடு மேன்மனமு மேவி டாதுபிர மாணமுங்
கூறி டாதறிவு தானெ னாவுணர்தல் கோடு நீமுயலி னாடினு
மீறி லாதபர மேக மேயெனவி யம்பு நீயிசையு ஞானமும்
பேற தாவதிலை பேத மானவிது பேண வேயுளது பேசிலே.

(இ-ள்.) வேறு வாயில் புலனோடு மேல் மனமும் மேவிடாது பிரமாணமும் கூறிடாது அறிவுதானெனா உணர்தல் கோடு நீ முயலின் நாடினும்- ஒன்றோடொன்றுகூடாமலுணரும்பொறிகளும் புலன்களும் அவற்றின்மேலுண்டாகிய மனமுங்கூடாமல் உடலில் ஓரறிவுதனித்து நின்றறியாதிருக்கவும், அறியுமென்று சாத்திரப்பிரமாணங்களுஞ்சொல்லாதனவாயிருக்கவும், நீபிரமங் காயத்தோடுங்கூடித்தானே தானாய்நின்றறியுமென்று சொல்லியவறிவு கோடில்லாதமுயலுக்குக் கோடுண்டென்றறிந்த வறிவிற்கொக்கும்; அன்றியும்,—ஈறிலாத பரம் ஏகமேயென இயம்பு நீ இசையும் ஞானமும் பேறதாவதிலை - கேடில்லாதபிரமம் ஏகமாயே நிற்குமென்று சொல்லுகிற நீ பொருந்துஞானத்தால் உனக்குப்பயனுண்டாவதில்லையாம். அஃதெங்ஙனமென்னில், பரப்பிரமமே சீவான்மாவுமென நீ சொல்லுகையால்,—

பேதமான இது பேணவே உளது பேசிலே-நீயிங்ஙனஞ் சொல்லுமுறைமை யின்றிப் பரமான்மாவும் அதனையறியப்படுஞ் சிவான்மாவுமென விரண்டு முதலுண்டென்று சொல்லுமுறைமையே போற்றவுளது என்க.

நாடினாய் - ஆக்ஷேபம். (௪)

இலகு சோதிமணி யெனவு மேகமெனி னிதனி லேகமது விலகினாய்
குலவு காசுமொளி யதுவு நீடிவளர் குணமு நாடுவதொர் குணியுமாம்
பலவு மானகுண மொருவு மேகமது வெனவு நீபகரி னிகரிலா
வுலக மானதனை யுதவு மாறதிலை யுணர்வு தானுமிலை யுணரிலே.

(இ-ள்.) இலகு சோதிமணி யெனவும் ஏகமெனில் - மிக்கவொளியு மணியும்போல ஒன்றாயிருக்குமென்று நீசொல்லின்,—இதனில் ஏகமது விலகினாய் - இந்தவுவமையாலே ஒன்றென்பதனைமறுத்துக்கூறினாய்; அஃதி யாங்ஙனமெனின்,— குலவு காசும் ஒளியதுவும் நீடிவளர் குணமும் நாடுவ தொர் குணியுமாம் - விளங்குகின்றமணியும் பிரகாசமும் மிகவுண்டாகின்ற குணமும் ஆராய்ந்தறியத்தக்க குணியுமாகையால்,—பலவுமான குணம் ஒருவும் ஏகமதுவெனவும் நீபகரில் - அன்றியும் ஒன்றானபிரமமானது இச் சாஞானக்கிரியைகளாகிய பலகுணங்களை நீங்கி நிற்குமென்று நீசொல்லின்,—நிகரிலா உலகமானதனை உதவுமாறது இலை உணர்வுதானும் இலை உண ரிலே-அந்தப்பிரமத்துக்கு இச்சாஞானக்கிரியைகளாகிய பல குணங்களில் லையாகில் ஒப்பில்லாத பிரபஞ்சத்தை உண்டாக்குந்தொழிலில்லையாய் அத னைக்காக்கவேண்டுமென்னு மறிவுமில்லையாம் விசாரிக்குங்காலத்து என்க.

மணியுமொளியுங் குணமுங்குணியுமாகையால், இரண்டுபடுமென்பதுகருத்து. இச்சாஞானக்கிரியைகளை நீங்கிய நிர்விகற்பமென்னில், இச்சாஞானக்கிரியையோ டுங்கூடியே பிரபஞ்சத்தின் சிருஷ்டி திதி சங்காரங்கண்டு நடத்தவேண்டுகையால், அவைநீங்கி நிற்குமென்னில்,அறிவுமில்லையாய்க் கர்த்தாவு மன்றாமென்பதுகருத்து. இராவணனையும் சகத்திரவாகுவையு மொன்று பலவானதுக்குவமையிட்டாய், இரா வணனொருமுகத்தாற் கண்ட தொருமுகத்தாற் சொல்லுமாபோல, உலகத்திலொருத் தன்கண்ட தொருத்தனறிந்து சொல்லக்கண்டதில்லை. சகத்திரவாகுவும் பலகரங் களாலுமியற்றப்பட்ட வில்லுமம்பும் வலிக்குங்காலத்து வேறுபடுகைவழங்கலும் வினையொன்றின்மேலாம் இது அப்படியன்றென்றுகண்டுகொள்க. (௫)

புற்றி னோர்பழுதை தொக்க போதுமயிர் புளக மாகவா விரவிலே
யுற்ற தாமதனை யொக்க வேயுலகு திக்கு மாறுமொரு சத்திலே
பெற்ற தாகுமெனி னப்பி ராந்தியுடை யோரு மப்பிரம பேதமாய்
நிற்பர் நீபகரின் முற்று மையநிலை பெற்று மின்பமதி லாததாம்.

(இ-ள்.) புற்றினோர் பழுதை தொக்கபோது மயிர் புளகமாக அரவு இரவிலே உற்றதாம் அதனை ஒக்கவே உலகு உதிக்குமாறும் ஒருசத்தி லே பெற்றதாகுமெனின் - புற்றின்கண்ணே பழுதைகிடப்ப இருளிடத் தே அந்தப்பழுதையைக்கண்டவர்க்குப் பயத்தாலே மயிர்புளகித்துப் பாம் பெனவே நினைக்கப்படுவதாம் அதுபோல, பிரபஞ்சமும் ஒப்பற்றதாகிய பிரமத்திலே தோன்றுமாறும் அதனதயிக்கியத்தாலே அப்பிரபஞ்சமு மெய்போலத்தோன்றுமுறைமையும் பெற்றதென்று நீசொல்லின்,— அப்

பிராந்தியுடையோரும் அப்பிரமபேதமாய்நிற்பர்-அங்ஙனமயங்கினவறிவை யுடைய வான்மாக்களும் இச்சாஞானக்கிரியையுண்டாய்ப் பிரபஞ்சகிருத் தியஞ் செய்வதில்லையென்று நீகூறும் பிரமத்தின் பேதமாய்நிற்பராம்,—நீ பகரில் முற்றும் ஐயநிலை பெற்றும் இன்பமது இலாததாம் - இப்படி நீ சொல்லின் நினக்கு மிக்கமயக்க வறிவேயுண்டாய்ப் பிரமமாமின்ப முண்டாகாது என்க.

பெற்றும் - உம்மையசை. முற்றுமையநிலைபெற்று நின்மலமிலாததாம் எனப் பாடமாயின், முற்றுமயக்கநிலைபெற்றுநின்மலமாகையில்லையாம் எனக்கொள்க. பழு தையைப் பாம்பென்றுபிரமித்தது பிரமமாகவேண்டும் அதுதான் விகாரமென்னில், கரணங்களுக் கறிவில்லையாம். பிரமத்தின் சந்நிதிமாத்திரத்திலே சலிக்குமென்னில் தெளிந்தகாலத்திற் சந்நிதியிற்சேட்டித்தலில்லையாகவேண்டும் அதுபின் சலித்துத் தத்துவமுங் கூடாதெனக்கொள்க. (௬)

ஓதி யேயுலக மதனை நீயுநிரு வசந மாகவுரை செய்வதென்
பேதை யோயுளது மிலது மல்லபொருள் பேசு வாருமுள ரோசொலாய்
யாதி யேயுளது வருத லாலிலதி லாவ தின்மைய தழிந்துபோம்
நீதி யாலுளதி லாமை நேர்வதெனி னேர்மை யாகியது நின்றதே.

(இ-ள்.) ஓதியே உலகமதனை நீயும் நிருவசநமாக உரை செய்வதென்-நீ வேதத்தை ஓதியிருந்தும் பிரபஞ்சத்தை முன்பில்லையென்றும் பின்பு நிருவசநமாகிய பிரமத்திலே தோன்றப்பட்டதென்றுஞ் சொல்லுதலுண் டானதென்,—பேதையோய் உளதும் இலதும் அல்லபொருள் பேசுவாரும் உளரோ சொலாய் - ஒருபொருள் இல்லதுமன்று உள்ளதுமன்று என்று சொல்லுவாருமுள[illegible]? ஆகையால் அறியாதவனேசொலாய்; அற்றன்று,—ஆதியே வ[illegible] இலதில் ஆவது இன்மையது உளது அழி ந்துபோம் - ஆதிதோ[illegible]ன்றிவருதலால் இல்லையென்ப தில்லையாய் உள்ளதான[illegible]ழிந்துபோ[illegible]ந்தியால் உளது இலாமை - பின்னில்லாமை யாம் படியழிந்துபோ முறைமையாலே இல்லாமையுண்டானது; ஆகையா ல்,—நேர்வதெனின் - உள்ளதுமில்லாததும் பிரபஞ்சத்துக்குப்பொருந்திற் றென்று நீகூறின்,— நேர்மையாகியது நின்றதே - அப்படி யழிந்துபோம் பிரபஞ்சம் மீளவும் பிரமத்திலே யுண்டாமிடத்து முன்புபோலத்தோன்று கையால் அதற்கு மூலகாரணங்கிடந்தழியாமனிற்கும் என்க. (எ)

வேற தாகியது போலி ருந்தமையில் வெள்ளி சுத்தியெனி லையமே
கூற லாமொருப ரத்தொ டொத்தபொருள் கொண்டு விண்டநிலை கண்டன
மாறி டாதுநில நீர தாகியனல் வாயு வாகியவை மாறியுஞ்
சேறி லாதுவிவ கார மன்றுபர மார்த்த மாயவை செறிந்ததே.

(இ-ள்.) வேறதாகியதுபோல் இருந்தமையில் வெள்ளி சுத்தி யெனில்-மித்தையாகிய பிரபஞ்சம் பிரமம்போல மெய்யாகத் தோன்றினமை யால் இப்பியானது வெள்ளியையொக்கப் பிரகாசித்தாற்போலுமென்று கூறின்,—ஐயமே கூறலாம்-அந்தவிப்பியை வெள்ளியென்றையப்பட்டாற் போலப் பிரபஞ்சத்தையும் பிரம்மமோ மித்தியையோவென் றையப்பட் டேசொல்லலாம்,—ஒருபரத்தொடொத்த பொருள் கொண்டு விண்டநிலை

கண்டனம் - முன்பிந்தப்பிரபஞ்சம் ஒப்பற்றபிரமத்தோடொத்தபொருளாகக் கைக்கொள்ளப்பட்டு இப்பொழுது மித்தியையாக மாறிக்கண்டனமென்னில்,—மாறிலாது நிலம் நீரதாகி அனல் வாயுவாகி - நிலம் நீராகியும் அனல்வாயுவாகியும் மாறிநில்லாது,—அவை மாறியுஞ் சேறிலாது - நீர் நிலனாகியும் வாயுவு அக்கினியாகியும் மாறியுஞ்செல்லாது,—விவகாரம் அன்று பரமார்த்தமாய் அது செறிந்ததே - ஆதலால், இப்பிரபஞ்சம் விவகாரத்திலே மெய்யாதலன்றிப் பரமார்த்தத்திலு மெய்யாகச்செறிந்தது என்க. (அ)

மாய நூலதுசி லம்பி வாயினிடை வந்த வாறதனை மானவே
யாய தேயுலக மான தும்பிரம மதனி லேயெனில டங்கிநின்
றேயு மாகுமொரு சித்து மத்துடனி லாத தென்றுபி னியம்பினீ
பேய னேகடமி ருத்தில் வந்ததுபி றப்ப தாவதிலை பேசிலே.

(இ-ள்.) மாயநூலது சிலம்பி வாயினிடை வந்தவாறதனை மானவே ஆயதே உலகமானதும் பிரமமதனிலே யெனில்-பொய்நூலானது சிலம்பியின் வாயிடத்தேநின்று தோன்றிநின்று கெட்டவிடத்து மீளவுமதனிடத்தே யிந்த நூலாகத்தோன்றி வந்தாற்போல, உலகமானதும் பிரமத்திலே தோன்றிநின்று கெட்டபின் மீளவும் பிரமத்திலே முன்புபோலே தோன்றி வருமென்று நீகூறின்,—அடங்கி நின்று ஏயுமாகும் ஒரு சித்தும் - அரூபமா யவிகாரமாகிய பிரமமும் பிரபஞ்சத்திலே யகப்பட்டு மயங்கவுமாகுமாதலால் நீ கூறியது உவமையன்று,—அத்துடன் நிலாததென்று பின் இயம்பின் நீ - அந்த நூலாகிய சடத்துக்குள் அச்சிலம்பியகப்படாது நின்றாற்போலப் பிரபஞ்சமாகிய சடத்துக்குள்ளும் பிரமங்கூடிநில்லாது காரணமாய் நிற்குமென்று கூறின்,—பேயனே கடம் மிருத்தில் வந்தது பிறப்பதாவதிலை பேசிலே - அறியாதவனே கடத்துக்கு மண்காரணமாயிருக்கவுங் காரணமாகிய மண்ணிற் கடந்தானேதோன்றாது; தோன்றுமிடத்தே ஆதிகாரணமாகிய மண்ணும் நிமித்தகாரணமாகிய குலாலனும் துணைக்காரணமாகிய திரிகையுங்கூடித் தொழில் செய்யக் கடந்தோன்றுமாபோல, பிரபஞ்சத்துக்கும் ஆதிகாரணமுண்டாய்த் தோன்றவேண்டும் என்க.

எனவே ஆதிகாரணமின்றிப் பிரமமே யாதிகாரணமாகத் தோன்றுமென்னிற் சித்திலே யசித்துத்தானே தோன்றாதென்பது கருத்து. மிருத்து - மண். மாயநூலென்பது - இல்லாதொன்று தோன்றுவது. மாயையென்பதவன் கருத்தாதலினால் மாயநூலென்றான். பேயனேபடமென்பது பாடமாயின், புடைவையானது மண்ணினிடத்துண்டாகாதெனப் பொருள்கொள்க. அஃதாவது ஒன்றின்காரணத்திலொன்றின் காரியமுண்டாகாதென்பதாம். (க)

வேற தாகுமுரு வத்தி லேபரம்வெ ளிப்ப டும்மென விளம்பினீ
யூறி லாவுருவ சத்தி லேபிரம முண்டு தானுணர்வி லாததென்
மாறி வாயுவும தூதி யானவையும் வந்தி டாமையினி லின்றெனி
லீறு தானுடைய தாய தோபிரம மென்கொ லோவிவையி றப்பதே.

(இ-ள்.) வேறதாகும் உருவத்திலே பரம் வெளிப்படும்மென விளம்பில் நீ - வன்னபேதமாகிய வேற்றுமைப்பட்ட வுருவத்திலே பிரமம் வெளிப்பட்டு நிற்குமென்று நீ கூறின்,—ஊறிலா உரு அசத்திலே பிரமம்

உண்டுதான் உணர்விலாததென் - குற்றமில்லாத ஜடத்தினிடத்திலே பிரம முண்டாயிருக்க அந்த ஜடமவத்தைப்பட்ட விடத்தறிவின்றிக் கிடப்பானேன்,—மாறி வாயுவும் மனுதி யானவையும் வந்திடாமையினில் இன்றெனில் - வாயுவும் அந்தக்கரணங்களும் நீங்கி வந்து கூடாமையினுலே அறிவில்லையானதென்று கூறின்,—ஈறு தான் உடையதாயதோ பிரமம் என்கொலோ இவை இறப்பதே - பிரமத்தினறிவு கெடத்தக்கதாயிற்றே? அதுவுமன்றிப் பிரமம் நிற்க வாயுவுமந்தக்கரணங்களு நீங்கிய வாயினவோ? ஆதலால், பிரமம் அறிவுமறியாமையுமாகி உருக்களிலே நில்லாது என்க.()

பற்ற தின்றியுட னின்றி டும்பரமெ னப்ப கர்ந்தனைப ரிந்துட
னுற்று டம்புநரை திரைக ணோய்சிறை யுறுப்ப ழிந்திவையு முள்ளபின்
குற்ற மென்றிதனை விட்டி டாதுவிட வென்ற லுங்குலைவு கொண்டிடும்
பெற்றி கண்டுமொரு பற்ற றும்பரிசு பேச வேயுளது னாசையே.

(இ-ள்.) பற்றது இன்றி உடல் நின்றிடும் பரமெனப் பகர்ந்தனை - பிரமமானது காயத்திலே நின்றதாயினும் அக்காயத்தோடு பற்றில்லாமல் நிற்குமென்று கூறினுய்; அங்ஙனமாயின்,—பரிந்து உடன் உற்று உடம்பு நரை திரைகள் நோய் சிறை உறுப்பு அழிந்து இவையும் உள்ளபின் குற்றமென்று இதனை விட்டிடாது - பிரமம் ஆர்வத்துடனே கூடிநின்ற வுடம்பு நரை திரை நோய் சிறை இவற்றினுல் உறுப்பழிவுண்டானபின்பும் இவ்வுடம்பைப் பொல்லாததென்று நீங்கி நிற்கமாட்டாது,—விடவென்றலும் குலைவு கொண்டிடும் - அவ்வுடனீங்கப்படுமென்னுமிடத்து மிகவும் வியாகுலப்பட்டு நடுநடுங்காநிற்கும்; ஆகையால்,—பெற்றி கண்டும் ஒருபற்று அறும் பரிசு பேசவே உளது உன் ஆசையே - இப்படிக்காயத்தோடும்பற்றி நிற்குமுறைமையை எவ்விடத்திலுங் கண்டிருந்துங் காயத்தோடு பிரமத்துக்குப் பற்றில்லையென்று உன்னுசையாற் சொல்ல வுள்ளதன்றிப் பற்றுவிட்டதில்லை என்க. (௧௧)

சோதி மாமணிக ளூடு போனதொரு நூலு மானநிலை சொல்லிடு
நீதி யான்மணிகள் பேத மாகியொரு நூலி னின்றமைநி கழ்த்தினு
யாதி தானெருவ னுகி யேபலவ நந்த யோனியில மர்ந்தவன்
பேதி யாதநிலை பேசி னுயுலகு பேத மேயிலத பேதமே.

(இ-ள்.) சோதி மாமணிகள் ஊடு போனது ஒரு நூலும் ஆனநிலை சொல்லிடும் நீதியால் மணிகள் பேதமாகி ஒருநூலின் நின்றமை நிகழ்த்தினுய் - பிரகாசத்தையுடைய மிக்க பலமணிகளுக்குள்ளே உருவியொன்றாய் நின்றநூலுஞ் சொல்லத்தக்க முறைமையிலே கோத்த மணிகள் பலநிறமாகப் பேதித்து ஒரு நூலிலே நின்றமையும்போலப் பிரமத்துக்கும் பிரபஞ்சத்துக்கு முவமைகூறினுய்; அங்ஙனங்கூறிய வுவமையால்,—ஆதி தான் ஒருவனுகியே பல அநந்த யோனியில் அமர்ந்தவன் பேதியாத நிலை பேசினுய்,—கர்த்தாவானவன் ஒருவனுய்ப் பலபேதப்பட்டு எண்ணிறந்த யோனிகடோறு நின்றவன் பேதியாத நிலையே கூறினுயாகையால்,—உலகு பேதமே இலது அபேதமே - மணிகள் பேதம்போலப் பிரபஞ்சம் பேதமாகவுள்ளது பிரமத்துக்குப் பேதமிலதாம் என்க.

எனவே பிரமஞ்சீவான்மாவாகவும் பரமான்மாவாகவும் பேதிக்குமெனவுங்கூறி இவ்விடத்துப்பிரமம் பேதியாதெனவுங் கூறியது வழுவாம். உலகானது பேதமென்றபடியோ இல்லையாகில் அபேதமென்றபடியோ சொல்லாய். இதனால் நீ அபேதமென்றது விருத்தமாம். பேதமே யுள்ளதென்க. (கஉ)

ஒத்து நின்றுடலி னின்ப துன்பமவை யுற்று முற்றிடுவ தின்றெனும்
பித்த வுன்னுரையி னுற்ற தேயிலது பெற்ற தின்றிலது பெற்றதேற்
றுய்த்த லென்னுறுதல்சீவ பாவமது சொல்லினொன்றினுந்தோய்விலாமைநீ
வைத்து நித்தமன வாக்கி றந்தபர மென்ன மானமிலை யின்னமே.

(இ-ள்.) ஒத்து நின்று உடலின் இன்ப துன்பமவை உற்றும் உற்றிடுவது இன்றெனும் பித்த - அஞ்ஞானமாகிய காயத்தோடுகூடிப் பிரமமும் அஞ்ஞானமாய்ச் சுகதுக்கங்களை அநுபவித்து நிற்கவும் பிரமங்காயத்தோடு கூடுவதில்லையென்று சொல்லும் பேயனே நீ அநுபவமில்லையென்னும் வார்த்தை,—உன் உரையின் உற்றதே - உன் சாத்திரத்திலேயும் பொருந்தினதே,—இலது பெற்றது இன்று இலது - சாத்திரத்தினன்றி அநுபவத்தினுமன்றி உண்டானதன்று; அஃதன்றியும்,—பெற்றதேல் - அநுபவத்தினுமின்றி உண்டானதாயின்,—துய்த்தலென் உறுதல்-பிரத்தியக்ஷத்திலே நீ அநுபவத்தை யுறுவானேன்,—சீவபாவமது சொல்லின் - பரமான்மா அநுபவிப்பதில்லை ஜீவான்மாவினுடைய பாவனையென்று நீ கூறின்,—ஒன்றினுந் தோய்வு இலாமை நீவைத்து நித்தம் மனவாக்கு இறந்தபர மென்ன மானம் இலை இன்னமே - இப்படி அநுபவிக்கிற ஜீவான்மாவை ஒன்றினுந் தோய்விலாத பரமான்மாவாகக்கொண்டு நித்தமாய் மனவாக்கிறந்ததென்றும் அகம்பிரமமென்றுஞ் சொல்ல உனக்கு இன்னமும் நாணமில்லை என்க.

எங்கு நின்றிடில வத்தை யின்றிடுமி சைந்தி டுங்கரண மென்னினீ
யங்கு நின்றபர மெங்கொ ளித்ததது நின்ற தேலவைய டங்கிடா
விங்கு நின்றதொரு காந்த மானகலி ரும்பு சந்நிதியி யங்குநேர்
தங்கி நின்றதெனி னீங்கி மீளும்வகை தங்கி டாதுனுரை தப்பதே.

(இ-ள்.) எங்கும் நின்றிடில் அவத்தை இன்றிடும் - பிரமம் ஜீவான்மாவாய்க் காயந்தோறுநிறைந்து நிற்குமென்று கூறின் நீ கூறிய அவத்தையிலகப்பட்டு அடங்குவதில்லையாம்,—இசைந்திடும் கரணமென்னின் நீ - அப்படி யவத்தைப்படுவது ஜீவான்மாவன்று அந்தக்கரணங்களினது சம்பந்தமென்று நீ கூறின்,—அங்கு நின்றபரம் எங்கு ஒளித்தது - கரணங்கள் அவத்தையைப் பொருந்தினவிடத்தே அவ்விடத்துநின்ற ஜீவான்மா எங்கே மறைந்துநின்றது,—அது நின்றதேல் அவை அடங்கிடா - அந்தக்கரணம் நாயகனாகிய ஜீவான்மா அவ்விடத்து நின்றதாயின் அவன் வழித்தாய கரணங்களும் அடங்கமாட்டா,—இங்கு நின்றது ஒரு காந்தமான கல் இரும்பு சந்நிதி இயங்குநேர் தங்கி நின்றதெனில் - அற்றன்று, இவ்விடத்துண்டானதொரு காந்தக்கல்லின் சந்நிதியிலே இரும்பு அசைந்தடங்குந்தன்மைபோல, ஜீவான்மாவின்சந்நிதியிலே அந்தக்கரணங்களுஞ் சேட்டைப்பட்டடங்கின வென்று நீகூறின்,—நீங்கி மீளும் வகை தங்கிடாது உன் உரை தப்பதே-நீ கூறியவிரும்பு காந்தத்தோடுகூடிநின்ற காந்தத்தை

யிரும்பு நீங்கமாட்டாத தன்மைபோல, அந்தக்கரணங்களும் ஜீவான்மாவோடு கூடினால் நீங்கப்படாதாகையால், நீ கூறியவுவமையும் பிறழ்ந்ததாம் என்க. (கச)

இருள்பொ திந்ததொரு பரிதி யிவ்வுலகி லிசையி லின்றுடல நானெனு
மருள்பொ திந்ததொரு பிரம மிங்குளது மருவி நின்றவுரு வொருவியே
தெருள்பொ திந்துபர நானெ னுந்தெளிவு சென்ற போதுகதி யென்றிடும்
பொருள்பொ திந்ததெனி லமல னுக்குமலம் வருத லாலுளது புன்மையே.

(இ-ள்.) இருள் பொதிந்த தொருபரிதி இவ்வுலகில் இசையில் இன்று உடலம் நானெனும் மருள் பொதிந்த தொருபிரமம் இங்கு உளது - இருளான் மூடப்பட்டதோராதித்தன் இந்தவுலகின்கண்ணுண்டாகி நின்றதனையொக்கும் காயங்கடோறு நானென்று மருட்சியாலே மூடப்பட்ட பிரமம் இவ்விடத்துண்டாய் நின்றது,—மருவி நின்ற உரு ஒருவியே - அப்படிமருட்சிபொருந்தி நின்ற காயம்நீங்கி,—தெருள்பொதிந்து பரம் நானெனுந் தெளிவு சென்றபோது கதியென்றிடும் பொருள் பொதிந்ததெனில் - அறிவு சூழப்பட்டுப் பரப்பிரமம் நானேயென்னுந் தெளிவுண்டானபொழுது முத்தியாய் நிற்கும்பொருளுந் தானுமென்று கூறின்,—அமலனுக்கு மலம் வருதலால் உளது புன்மையே - மலரகிதமாகிய பிரமத்துக்கு மலங்கூடுதலு நீங்குதலு முண்டாகையாமென்று நீ கூறியவுரைவெளிற்றுரை என்க.

உளதுபுன்மையே என்பது - நின்மலமாயிருக்கிற பிரமத்துக்கு மலமான்து கூடுதலால் ஆபாசமாகை யுண்டாமென்க. இது கூடாதென்பது கருத்து. (கரு)

சுத்த மானதுப ரத்தி னுக்கணைவ தின்று சுத்தமத நாதிநீ
வைத்த மாயமுறு சித்த சுத்தமுற மற்ற தற்குமலம் வைத்தனை
யொத்த சீவன்மல கன்ம மாயையுறு கின்ற காரணமு ணர்ந்திடாய்
பித்த னேவிறகி னிற்பி றப்பெரி யென்னில்வே றுபொருள் பெற்றதே.

(இ-ள்.) சுத்தமானது பரத்தினுக்கு அணைவது இன்று சுத்தமது அநாதி - பரப்பிரமத்துக்குப் புதிதாகச் சுத்தமுண்டாயதன்று அநாதியே சுத்தமுள்ளது,—நீவைத்த மாயம் உறு சித்து அசுத்தம் உற மற்றதற்கு மலம் வைத்தனை - நீ ஜீவான்மாவென்று பிரமத்திலே பேதித்துச்சொல்லப்பட்ட சித்தானது மயக்கமுற்று அசுத்தத்தைப்பொருந்தவே அதன் பேதமாகிய பரப்பிரமத்துக்கு மலமுண்டென்று தோற்றுவித்தனை,—ஒத்த சீவன் மலகன்மமாயை உறுகின்ற காரணம் உணர்ந்திடாய் பித்தனே - காயத்தோடு பொருந்தின ஆன்மா மலமுங் கன்மமு மாயையுங்கூடி அநுபவிக்குங்காரியத்துக்குக் காரணமாகியமுதலை அறியாயாதலால், நீ பேயனே. அற்றன்று,—விறகினில் பிறப்பது எரியென்னில் - காட்டத்திலே அக்கினி மறைப்புண்டுநின்று பிரகாசித்தாற்போல, காயத்திலே மறைப்புண்டு நிற்கும்பொழுது ஜீவான்மாவென்று நின்று பிரகாசிக்கும்பொழுது பரப்பிரமமாகநின்று பிரகாசிக்குமென்று கூறின்,—வேறு பொருள் பெற்றதே - ஓரக்கினி யிரண்டாகப்பிரிந்து காட்டத்திலே நிற்பதன்றி வேறொரு பொருளாய்த் தோன்றுமாபோல ஜீவான்மாவும் வேறொரு முதலென்றறிவாயாக என்க.

வேறு பொருள்பெற்றதே என்பதற்கு - விறகினெருப்புத்தோன்றுந்தன்மை யென்பையாகில் அந்நியப்பொருளைக் காட்டிநிற்கும். (௧௬)

உன்னி னீயுமநு போக மென்றபொழு துற்றி டும்துவித மற்றதிங்
கென்னி னில்லையெனி னில்லை நீயுமறி வின்மை கண்டவிட முண்மையேன்
மன்னு மோருணர்வு வந்தி டும்முணர்வெ லாமு மாயையெனின் மாயையே
சொன்ன தோர்பிரம மாயி டும்பிரம மாயை யாயறிவு சோருமே.

(இ-ள்.) உன்னின் நீயும் அநுபோக மென்றபொழுது உற்றிடும் துவிதம்-நானே நானு யநுபவிப்பனென்னுமிடத்துப் பெறுவானும் அநுபவிப்பதுமுண்டாய் இரண்டாம்,—மற்றது இங்கு என்னில் இல்லையெனில் இல்லை நீயும் - பெறுவானாகை என்னிடத்திற் கண்டதில்லையென்னிற் பேறுகிய நீயுமில்லையாம்,—அறிவு இன்மை கண்ட இடம் உண்மையேல் மன்னும் ஓர் உணர்வு வந்திடும் - அஞ்ஞாநங்கெட்டவிடமே உண்மையென்று நீகூறின் அந்தமயக்கவறிவுகெட்டுக் கூடுமிடத்தே ஆன்மவறிவு சிறிதுண்டாயிருக்கும். அற்றன்று,—உணர்வெலாமும் மாயையெனில் - அப்படி அறியு மறிவெல்லா மாயையறிவா மென்றுகூறின்,—மாயையே சொன்ன தோர் பிரமம் ஆயிடும் - மாயைநீங்கினவிடத்திற்றோன்று மறிவும் மாயையறிவென்னின் அந்தப்பிரமம் மாயையாகவேண்டும்,— பிரமம் மாயையாய் அறிவு சோருமே - ஆகையால் பிரமமுமாயையாய் அம்மாயையாலே அறிவுங் கெடுமென்பதேயாம் என்க. (௧௭)

ஆர ணங்கடரு தத்து வம்மசிப தங்க ளின்பொருள றிந்திடாய்
கார ணம்மதுவு நீயு மென்றிருமை கண்டு வேறதின்மை கருதிடாய்
நார ணன்பிரம னூநு நாடரிய நாய கன்கழல்க ணண்ணிநீ
யேர ணைந்துபொலி சாத நங்கள்கொடு யோக ஞானமுமி யற்றிடே.

(இ-ள்.) ஆரணங்கள் தரு தத்துவம் அசி பதங்களின் பொருள் அறிந்திடாய் - வேதமுடிவிலே சொல்லப்பட்ட தத்துவமசி யென்னு மகாவாக்கியத்தையும் அதனூற்றரிசிக்கப்பட்ட பதபதார்த்தங்களையும் அறியாய்,—காரணம் மதுவும் நீயும் என்று இருமை கண்டு வேறது இன்மை கருதிடாய்-காரணமாகிய கர்த்தாவுங் காரியமாகிய ஆன்மாவும் இரண்டுபட்டு நின்றமையுங்கண்டு கூடிநிற்குமதுவும் அறிந்திடாய். ஆகையால்,—நாரணன் பிரமனூலும் நாட அரிய நாயகன் கழல்கள் நண்ணி நீ ஏர் அணைந்து பொலி சாதநங்கள்கொடு யோக ஞானமும் இயற்றிடே - பிரமவிஷ்ணுக்களாலு நாடுதற்கரிய கர்த்தாவினுடைய திருவடிகளைப் பொருந்துதற்கு அழகுபொருந்திப் பொலிவினையுடைத்தாகிய சிவசாதநங்களையும் பொருந்திக்கொண்டு யோகஞானங்களை யறிந்துசெய்வாயாக என்க.

எனவே யோகத்தாலே மனத்தைப்பிரித்து ஞானத்தாலே திருவடியைச்சேர்க வென்பது கருத்தாம். (௧௮)

மாயாவாதிமதமறுதலை முடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௨௫௨.

---

# பார்க்கரியன் மதம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மன்னு மறையின் முடிவென்று மாயா வாதி யுடன்மலேந்து
பின்ன மாகிப் பிரமத்தைப் பேதா பேதஞ் சாதித்துப்
பன்னு மொருநூ லதுவாகப் பாரின் மீது பாற்கரியன்
சொன்ன விதனே யிந்நூலி னகத்தே தோன்றச் சொல்லுவாம்.

(இ-ள்.) மன்னும் மறையின் முடிவென்று மாயாவாதி யுடன் மலேந்து பின்னமாகி - சுவயம்புவாக நிலேபெற்ற வேதம் இத்தன்மைத்தென்று மாயாவாதியோடு மாறுபட்டுநீங்கி,—பிரமத்தைப் பேதாபேதஞ் சாதித்து - மாயாவாதிகூறிய பிரமத்தைப் பேதமாகவும் அபேதமாக நிலேநிறுத்தி,—பன்னும் ஒருநூல் அதுவாகப் பாரின்மீது பாற்கரியன் சொன்ன இதனே இந்நூலினகத்தே தோன்றச் சொல்லுவாம் - ஓது நூலும் வேதமுமாயிருக்க அதனுண்மையையறியாது பூமிமீதே பாற்கரியன் சொன்னமதத்தை இச்சிவஞானசித்தியாரிடத்தே தெளியச்சொல்லுவாம் என்க.

பாற்கரியனென்பான் ஒரிருடி. பாற்கரியம் எனினும் பரிணமமாயாவாதமெனினுமொக்கும். (௧)

சித்தே யுலகாய்ப் பரிணமித்துச் சீவ னுகித் திகழ்ந்தமையாற்
சத்தே யெல்லா முத்தியினேச் சாரக் கண்ட ஞானங்கள்
வைத்தே மொழியு மாமறைகள் சொன்ன மரபே வந்தக்கா [னே.
லொத்தே கெட்டுப் பிரமத்தோ டொன்ருய்ப் போமென் றுரைத்தன

(இ-ள்.) சித்தே உலகாய்ப் பரிணமித்துச் சீவனுகித் திகழ்ந்தமையால் சத்தே யெல்லாம் - அறிவாகிய பிரமமே பிரபஞ்சபேதமாய்த்தோன்றி வளர்ந்து ஆன்மாக்களுமாய் விளங்குந்தன்மையால், சர்வமும் அந்தப்பிரமமேயாம்,— முத்தியினேச் சாரக் கண்ட ஞானங்கள் மொழியும் மாமறைகள் - வீட்டின்பத்தைச்சேர அறியுஞானங்களே வேதவாக்கியங்கள்சொல்லும்,—சொன்னமரபே வைத்தே வந்தக்கால் ஒத்தேகெட்டுப் பிரமத்தோடு ஒன்ருய்ப் போமென்று உரைத்தனனே - அந்தவாக்கியங்களே சொன்னபடியேவைத்துத் தத்துவமசி பதபதார்த்தங்கண்டால் அந்தப்பிரமத்தோடே ஆன்மாகூடி ஆன்மத்தன்மைகெட்டொன்றிப் பிரமமாயேபோமென்று பாற்கரியன் கூறினன் என்க.

வாக்கியம் - தத்துவமசி. சத்து - நிலேநின்றது. அசத்து - நிலேயில்லாதது. ஆதலாற் சத்தேசர்வமுமாமென்பதவன் கருத்து. (௨)

பார்க்கரியன் மதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - உ௬௪.

# பார்க்கரியன் மதமறுதலே.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இயம்பு கின்றதுல காயி டாதுசட மின்றி நின்றுசட மாகியே
முயங்கு கின்றமையி லிலவ ணத்திரத முழுதுமே கனதை முயல்கைபோற்
பயந்த தென்னிலறி யப்ப டும்பொருளு மறிவு மென்றுபல வாகுமோ
தியங்கு கின்றதெனு ரைத்தி டாய்கடின மாதி யாகிவரு சித்தனே.

(இ-ள்.) இயம்புகின்றது உலகாயிடாது - நீசொல்லுகின்ற பிரமம் பிரபஞ்சபேதமாயிடமாட்டாது. ஆகையாலே,—சடம் இன்றி நின்று சடமாகியே முயங்குகின்றமை இல் - பிரமம் ஜடத்தை நீங்கிநின்றது ஜடந்தானுந் தானுகவே கூடிநின்றலமை உண்டாகாது. அற்றன்று,—இலவணத்து இரதமுழுதுமே கனதை முயல்கைபோல் பயந்ததென்னில் - உப்பானது ஜலத்தோடுகூடி ஒருதன்மைப்பட்டாற்போல, வத்துவுமொன்றுய் நின்றதென்னில்,—அறியப்படும் பொருளும் அறிவுமென்று பலவாகுமோ-ஜலத்தோடு கூடிய இலவணம்பேதியாது ஏகத்துவமாய் நின்றுற்போல, பிரமமுமொன்றுய்நிற்கையின்றி அறியப்படும்பொருளாகிய ஜடமும் அறிவாகிய ஞானமுமாகப்பேதித்து நிற்குமோ,—தியங்குகின்றது என் உரைத்திடாய் கடினம் ஆதியாகி வருசித்தனே - இப்படி மயங்குவானேன் சொல்லாய் மாபூதங்கள் முதலானவையும் நானேயாவேனென்றுவருமறிவனே என்க.

கடினம் - பூதகுணம். அது குணிமேனின்றது. இலவணத்திரதமுழுதுமேகனதைமுயல்கைபோலென்றது - மண்ணின்சாரமானதை ஜலமானதுகொண்டு உப்பானதொழியச் சிற்சொரூபந்திரண்டு பரிணமியாதென்பது நோக்கியாம். (க)

உன்னு கின்றபிர மத்தி லேசிறிதிவ் வுலக மானதென வோதினீ
மன்னு கின்றசில கால மோட்டழியு மழிய வந்துதவு மாயையாற்
றன்னி லொன்றுமெனில் வருத லோடிறுதி தருத லாலதுச டத்ததா
முன்னெ டச்சகமு முண்மை யன்றுசட மென்ன வேயுறுதி மன்னுமே.

(இ-ள்.) உன்னுகின்ற பிரமத்திலே சிறிது இவ்வுலகமானதென ஓதின் நீ-யாவருநினைக்கப்படாநின்ற பிரமஞ்சேரப் பிரபஞ்சமாகாது சிறிது பேதித்துப் பிரபஞ்சமானதென்று நீ சொல்லுகின்றுயாகில்,—மன்னுகின்ற சிலகாலமோடு அழியும் - அங்ஙனமாயிற் பிரபஞ்சஞ்சிறிதுகாலநிலைபெற்றுநின்று அழியாநிற்கும்,—அழிய வந்து உதவும் மாயையால் - அப்படியழிந்து மீளவுமாயையிலே தோன்றிவருகையால் மாயையிலே ஒடுங்கி மாயையிலேதோன்றும். அற்றன்று,—தன்னில் ஒன்றுமெனில் - ஒடுங்குங் காலத்திலும் பிரமத்திலேயொடுங்கித் தோன்றுங்காலத்திலும் பிரமத்திலே தோன்றுமென்னில்,—வருதலோடு இறுதி தருதலால் அது சடத்ததாம்- இப்படித்தோன்றி யொடுங்குவதாகிய பிரபஞ்சம் பிரமத்திலே பேதமாயில் பிரமமும் அசேதநமாகவேண்டுமாகையால்,—உன்னெடு அச்சகமும் உண்மை அன்று சடமென்னவே உறுதி மன்னுமே-அகம்பிரமமென்கிறவுன்னுடனே பிரபஞ்சமுந் தோன்றுகையு மொடுங்குகையுஞ் செய்கையால் மெய்யன்று ஜடமென்றேசொல்லுதலே மெய்யாகவுடைத்து என்க.

வந்துவந்துதவுமாயையால் எனவும்பாடம். (உ)

வித்தெ ழுந்துமர மாய்வி ளைந்தமை விளம்பி னுயுவமை வேறுநீ
நித்த மென்றவுரை பொய்த்து நீடுசட மாயெ ழுந்தழியு நின்பர
மொத்தெ ழும்பொழுது வித்தி னுக்கவனி யுண்டு தாரகமு னக்கெனு
பித்த னென்றுல குரைத்தி டும்பிர மமாயி னுயிவைபி தற்றிலே.

(இ-ள்.) வித்து எழுந்து மரமாய் விளைந்தமை விளம்பினுய் உவமை - மரங்கெட்டவிடத்து வித்திலேநின்று மரமுண்டானுற்போல பிரபஞ்ச

மழிந்தவிடத்தும் பிரமத்திலேநின்று பிரபஞ்சமுண்டாமென்று உவமை கூறினாய். அங்ஙனமாயின்,—வேறு நீ நித்தமென்ற உரை பொய்த்து நீடுசெடமாய் எழுந்து அழியும் நின்பரம் - அந்தவித்து மாத்திலேயுள்ளதுமாய்ப் பின்பு தானே பரிணமிக்குங்காலத்து மரந்தோன்றத் தான்கெட்டுத்தோன்றினதற்குப் பரிணாமமுண்டாய் அந்தமரம் மீளவும் வித்தையுண்டாக்கினாற்போல, பிரமமும் பிரபஞ்சத்துக்குவேறாய் நித்தமாய் நிற்குமென்றவுரையும் பொய்யாய்ப் பிரமமும் பிரபஞ்சத்தையுண்டாக்கியும் பிரபஞ்சமும் பிரமத்தையுண்டாக்கியும் சடத்தின்பகுதியாய்த்தோன்றிக்கெடும் நின்பிரமம். அதுவுமன்றி,— ஒத்து எழும் பொழுது வித்தினுக்கு அவனி உண்டு தாரகம் உனக்கெனை - அந்தவித்து மரமாம்பொழுது பூமிதரிப்பாகத்தோன்றும் அதுபோல, உன்னுடைய பிரமம் பிரபஞ்சமாம்பொழுது தரிப்பதியாது,—பித்தனென்று உலகு உரைத்திடும் பிரமமாயினாய் இவை பிதற்றிலே - பிரமமாயினாய் இப்படி மயங்கக்கூறுவையாயின் உன்னைப் பேயனென்று மிக்கோர்சொல்லாநிற்பார் என்க.

பிரமமாயினாயென்பது - இழிவு. உலகமென்பது - உயர்ந்தோரை. உலகமென்னும் வாய்பாடு உரைத்திடுமென்னும் வாய்பாடுபெற்றது. (௩)

சூட கங்கடக மோதி ரஞ்சவடி தொடரொ டாரமுடி தோடுநா
ணாட கந்தருவ தாகு மப்படிய னைத்து மப்பிரம மாகுமே
னீடு மப்பணிகள் செய்து ளோரவைபு னைந்து ளோர்களை நிகழ்த்திடும்
நாடி டுஞ்சகமி யற்று வோர்கொடு நடத்து வோருளர்ந விற்றிலே.

(இ-ள்.) சூடகம் கடகம் மோதிரம் சவடி தொடரொடு ஆரம் முடிதோடு நாண் ஆடகந்தருவதாகும் - சூடகமுதல் நாணீறாகச்சொல்லப்பட்ட பேதமான பணிகளைப் பொன்னொருமுதலாக நின்று பேதித்தாற்போல, பிரமமும் பிரபஞ்சபேதமெல்லாமாகப் பேதித்து முதல்கெடாமல் நிற்குமென்று கூறின்,—அப்படி அனைத்தும் பிரமமாகுமேல் - அப்பணிபோலப்பேதித்து எல்லாம் பிரமமாய் நிற்குமாகில்,—நீடும் அப்பணிகள் செய்துளோர் அவைபுனைந்துளோர்களை நிகழ்த்திடும் - அப்பணிபேதஞ் செய்தோரையும் அப்பணியணிந்தோரையும் அப்பணிதானேயுண்டாக்கி நிற்றலால் அதுபோல,—நாடிடும் சகம் இயற்றுவோர்கொடு நடத்துவோர் உளர் நவிற்றிலே - ஒருமுதலைக்கொண்டு சகத்தையுண்டாக்குவோரையும் அதனை நடத்துவோரையுஞ் சங்கரிப்போரையுஞ் சொல்லுங்காலத்து அறிந்திடுந் தன்மையையுடைத்து என்க. (௪)

அறிவி னோடுசெயன் மாறில் வீடதனை யணுகொ ணாதவையி ரண்டினா
லுறுதி யானபிர மத்தி னோடழிய வொன்ற லாமெனவு ரைத்திகா
ணிறுதி யேலதனெ டிசைவ தின்றிசைவ துள்ள தாயிடினவ் வின்பமே
பெறுதி நீயுடலொ டுயிர்க ளாயறிவு பிரியு மாறுசெயல் பெறுவதென்.

(இ-ள்.) அறிவினோடு செயல்மாறில் வீடதனை அணுகொணாது அவை இரண்டினால் உறுதியான பிரமத்தினோடு அழிய ஒன்றலாமென உரைத்தி காண்-ஞானக்கிரியைகள்மாறினால் வீட்டின்பம் அணைதற்கு அரிது; ஞானக்கிரியைகள் இரண்டினாலுஞ்சென்று அவற்றிற்காதாரமாகிய பிரமத்திலே

அழியக் கூடலாமென்று கூறினாய்,—இறுதியேல் அதனொடு இசைவது இன்று - ஞானக்கிரியைகணிற்கப் பிரமத்தைச்சென்று கூடுதலுமில்லை அக்தஞானக்கிரியைகள் கெட்டாற் பிரமத்தோடு கூடுதற்கு ஒருமுதலும் இல்லையாம்; அன்றி,—இசைவது உள்ளதாயிடின் - அந்தஞானக்கிரியைகள்கெடாமலொன்றுவதுள்ளவாமாயின்,—அவ்வின்பமே பெறுதி நீ உடலொடு உயிர்கள் ஆய் அறிவு பிரியுமாறு செயல் பெறுவது என் - நீ எப்பொழுதும் அந்தச்சுகத்தை அநுபவிப்பதன்றிக் காயத்தோடு உயிர்களின் மிக்கவறிவு நீங்கும்படி அவத்தையின் செய்தியைப்பெறுவானேன்; ஆதலால், ஆன்மாவென்று ஒன்றுண்டு என்க.

உடலோடுயிர்களாயதுபிறக்குமாறுசெயல்பெற்றியால் எனப் பாடமாயின், இன்பத்தைப் பெற்றுநிற்றலன்றி நீயும் உடலோடு உயிர்களாய்வந்து பிறக்குமரபுபெற்றாயெனப்பொருள் கொள்க. இதனால் உலகமுமுயிருமாய்ப் பிறந்திறந்துழலுமவனன்றோ நீயென்றதெனக் கொள்க. (ரு)

பாற்கரியன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - உருகூ.

---

# நிரீச்சுரசாங்கியன்மதம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மூலம் புரியட் டகம்விகிர்தி யாகி மூன்றாய்ப் பிரகிருதி
தூல சூக்கம் பரமாயச் சுத்த புருடன் சந்நிதியிற்
பாலன் சேட்டை புரிந்துலகம் யோனி பலவாய்ப் பரந்தொடுங்குஞ்
சால வென்று நிரீச்சுவர சாங்கி யன்றான் சாற்றிடுமே.

(இ-ள்.) மூலம் புரியட்டகம் விகிர்தியாகி மூன்றாய்ப் பிரகிருதி - பிரகிருதி புமானென்னும் இரண்டில், பிரகிருதியானது மூலமென்றும் புரியட்டகமென்றும் விகிர்தியென்றும் மூன்று பெயரையுடைத்தாய்,—தூலம் சூக்கம் பரமாய் - தூலமாயும் சூக்குமமாயுஞ் பரமாயுநிற்கும்,—சுத்தபுருடன் சந்நிதியில் பாலன் சேட்டை புரிந்து உலகம் யோனி பலவாய்ப்பரந்து-புமானாகிய சுத்தபுருடன் பிரகிருதியின் சந்நிதியிலே மழவின்செய்தியைப்போல அறியாமையைப்பொருந்திப் பிரபஞ்சமும் யோநிபேதங்களும் நானெனவிரிந்து நின்றவிடத்து,—ஒடுங்கும் சாலவென்று - தனக்குவிவேகஞானம்வந்து சர்வமும் பிரகிருதிக்குள்ளது தனக்குள்ளதன்றென்று காணவே பிரபஞ்சவியாபாரம் நன்றாக நீங்குமென்று,—நிரீச்சுவர சாங்கியன்றான் சாற்றிடுமே - நிரீச்சுவரசாங்கியன் சொன்னான் என்க.

மூலம் - சித்தம். புரியட்டகம் - சத்தாதிகளைந்து மனம் புத்தி அகங்கார மூன்று ஆக வெட்டாம். விகிர்தி - தூலதேகமும் பிரபஞ்சமும். இம்மூன்றுவகையாகப் பிரகிருதி பேதிக்க இதனைப் புமான்றனதென்று கொண்டுநிற்பன். இந்தப்பதினாறு கருவிகளோடுங்கூடிப் பிரபஞ்சத்தைப் பிரகிருதிக்குள்ளதென்று நீங்கப் புமானென்றும் புருடனென்றும் வேறற்றுநிற்பன் அதுவே முத்தியாமென்பதுகருத்து. நிரீச்சுர சாங்கியம் - கபிலன்மதம். இதில் விகிர்தியென்றமையால், ஆங்காரபேதத்திற்றோன்றிய ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் சத்தாதிகளிற்றோன்றிய பூதங்களும்

இருபத்துநாலு தத்துவங்களும் மற்றும் பேதமுமெனக்கொள்க. இதில் ஈசுரசாங்கியன் என்றும் நிரீச்சுரசாங்கியனென்றும் இரண்டுவகையர். இதிலே சிவ சாங்கியனையும் விஷ்ணு சாங்கியனையும் ஈச்சுரசாங்கியனெனக்கொள்க. (௧)

நிரீச்சுரசாங்கியன் மதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - உ௬௦.

---

## நிரீச்சுரசாங்கியன்மதமறுதலை.

சுத்த னறிவன் புருடனெனிற் சூழா தாகும் பிரகிருதி
பெத்த நீங்கி னாலும்பின் பெத்த னாவன் பேரறிவாற்
கத்த மேவும் பிரகிருதி கண்டு கழிக்க மாட்டானேன்
முத்த னாகான் சுத்தனுக்கு மூலப் பிரகி ருதியிலையாம்.

(இ-ள்.) சுத்தன் அறிவன் புருடனெனில் சூழாதாகும் பிரகிருதி - ஆன்மபுருடன் சுத்தமான அறிவையுடையனுமாகில் அவனை அசுத்தமாகிய பிரகிருதிவளையாதாகும். அன்றியும்,— பெத்தம் நீங்கினாலும் பின்பெத்தனாவன் - பெத்தனாய் நின்றவிடத்திலும் இவனைப்பந்தியாது அஞ்ஞானம் அது பிரகிருதிக்குள்ளதாய் நிற்குமென்னில், பெத்தநீங்கினவிடத்திலும் அறியாமனின்றானகையால்,பெத்தத்தைப்பொருந்தினவனாவன்,—பேரறிவால் கத்தமேவும் பிரகிருதி கண்டு கழிக்கமாட்டானேல் - மிக்கவறிவாகிய பரையோடுகூடிநின்றும் பொல்லாங்கைப்பொருந்தின பிரகிருதியின் செயலைத்தரிசித்து நீங்கமாட்டானாயின் அஞ்ஞானம் பிரகிருதிக்குள்ளதென்று காணுந்தகுதியையுடையனல்லனாகையால்,—முத்தனாகான் - பரையுடனே கூடிநின்று பிரகிருதியை நீங்கானாயின் முத்தியடையுமான்மாவாகான்,— சுத்தனுக்கு மூலப்பிரகிருதி இலையாம் - சுத்தனாயிருக்கிற பிரமத்துக்கு மூலப்பிரகிருதியுண்டாகாது. மூலப்பிரகிருதி கூடுவதும் நீங்குவதும் ஆன்மாவுக்கென்றறிவாயாக என்க.

கத்தம் - பொல்லாங்கு. (௧)

புருடன் பிரகி ருதிபெற்றாற் போதஞ் சிறிதங் குண்டாகிக்
குருடன் முதுகின் முடவனிருந் தூர்ந்தாற் போலப் பிரகிருதி
யிருட னிடத்தே யிருந்தியங்குங் கன்மா லிறையன் றிரண்டினையு
மருட னுருவாய்ச் சேட்டிப்பித் தறியு மமல னரனேயாம்.

(இ-ள்.) புருடன் பிரகிருதி பெற்றால் போதம் சிறிது அங்கு உண்டாகி - சுத்தபுருடனென்ற ஆன்மபுருடன் பிரகிருதியைக் கூடினவிடத்துப் பிரகிருதியாலே சிறிது அஞ்ஞானவறிவுண்டாய்,—குருடன் முதுகில் முடவன் இருந்து ஊர்ந்தாற்போலப் பிரகிருதி இருடனிடத்தே இருந்து இயங்குங் கன்மால்-அந்தகன் முதுகிலே முடவனிருந்து அந்தகனை நடாத்தினாற்போல, கன்மத்துக்கீடான பிரகிருதியாலே சிறிது அஞ்ஞானம்பெற்றபுருடனைப் பிரகிருதிகூடி அவனிடத்தேயிருந்து கன்மத்துக்கீடானதொழிலை நடாத்தும்,—இறை அன்று-ஆகையாற் பிரகிருதியுடன்கூடி நிற்பான் ஆன்மாவேயாம். கர்த்தாவன்று,—இரண்டினையும் மருடன் உருவாய்ச் சேட்டிப்பித்து அறியும் அமலன் அரனேயாம் - அந்தவான்மபுருடனையும் அவ

னைக்கூடிநிற்கிற பிரகிருதியையுங்கூட்டி அஞ்ஞானமே தனக்கு உருவமாகக் கொண்டுநடக்கும்படியாக நடாத்துவித்து ஆன்மாக்கள்செய்த கன்மத்தையு மறிந்து அதற்குத்தக்கபயனையுங்கொடுப்பான் மலரகிதனாகிய அரனே என்க.

பிரகிருதிக்கு அஞ்ஞானமே சொரூபமாகையால் அவ்வஞ்ஞானத்தைப் பொருந்திநின்ற புருடனை மருடனென்று கூறப்பட்டது. அமலனென்கையால் கர்த்தாமலரகிதனென்பது கருத்து. புருடனாவான் பிரகிருதிகூடினாற் சிறிதறிவுண்டாய்க் குருடனுடையமுதுகிலே முடவனிருந்து நடாத்தினாற்போலப் பிரகிருதியாகிய விருடனிடத்தே புருடனிருந்துவழங்குங்கன்மத்தாலே வேறுகர்த்தாவாலன்றென்றெனில், அப்பிரகிருதிபுருடனாகிய இரண்டையு மருடனுருவாய்நின்று சேட்டிப்பித்தறியாநிற்கும் அமலனாகிய பரமேசுவரனென்க. குருடன்முதுகில் முடவனிருந்தூர்கையாவது ஒன்றுக்குள்ள குணமொன்றுக்கில்லாமல் சேட்டைகூடாதாம். (௨)

அறியான் புருடன் பிரகிருதி யசேத நங்கா ரியத்தினுக்குக்
குறியாய் நாத னுளனென்று கூறு முத்தி விவேகமெனிற்
செறிவாந் தளைபோ காதறியிற் சேர்த்தோன் வேண்டுஞ்செயலிற்போ
நெறியாற் பணிசெய் துடற்பாச நீக்கிக் கொண்ணீ நின்மலனால்.

(இ-ள்.) அறியான் புருடன் - ஆன்மபுருடன் தானாயொன்றையும் அறியமாட்டான்,—பிரகிருதி அசேதநம் - பிரகிருதியுஞ்சடம்; ஆதலால்,—காரியத்தினுக்குக் குறியாய் நாதன் உளனென்று - இவைகாரியப்படுதற்குக் காரணமாகிய கர்த்தா ஒருவனுளனென்று குறிப்பாயாக,—கூறு முத்தி விவேகமெனில் - நீ முத்தியென்று சொல்லப்பட்டது பந்தம் நமக்குள்ள தன்றென்றறியும் விவேகஞானமென்னில்,— செறிவாந் தளைபோகாது அறியில் - எல்லாவற்றையுமறியுமிடத்துப் பாசஞானமும் பசுஞானமுங் கூடி அறியவேண்டுமாகையாற் பாசபந்தம் நீங்காதாம்,—சேர்த்தோன் வேண்டும் - அந்தப்பாசம் நீங்குமிடத்து முன்புகூட்டினோனே நீக்கவேண்டும்,—செயலிற்போம் - அந்தப்பாசத்தைக் கூட்டினகர்த்தாவின் காருண்ணியத்தாலே பாசபந்தம் நீங்கும் அதுநீங்கும்படிக்கு,—நெறியால் பணிசெய்து உடற்பாசம் நீக்கிக்கொள் நீ நின்மலனால் - சரியைகிரியாயோகஞானங்களாகிய வழிகளிலேநின்று தொண்டுசெய்து நீ கர்த்தாவினாலே உன் பாசபந்தத்தை நீக்கிக்கொள்வாயாக என்க. (௩.)

நிரீச்சுரசாங்கியன்மதமறுதலைமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௨௬௫.

---

# பாஞ்சராத்திரிமதம்.

வேறு.

ஆதியா யருவ மாகி யகண்டபூ ரணமாய் ஞானச்
சோதியாய் நின்ற மாயன் சுவேச்சையா லுருவு கொண்டு
நீதியார் கருணை யாலே நீள்கடற் றுயின்று நூலு
மோதினா னென்று பாஞ்ச ராத்திரி யுரைப்ப னுற்றே.

(இ-ள்.) ஆதியாய் அருவமாகி அகண்ட பூரணமாய் ஞானச் சோதியாய் நின்ற மாயன் - ஆதிபூதனாய் அரூபியாய் எவ்விடத்தினு நிறைந்து நிற்

பவனாய் ஞானசொரூபியாய் நின்ற விஷ்ணுவானவன்,—சுவேச்சையால் உருவுகொண்டு - ஆன்மாக்களை இரக்ஷிக்கவேண்டித் தனதிச்சையாலே மீன் முதலான திருமேனிகளையெடுத்துக்கொண்டும்,—நீதி ஆர் கருணையாலே நீள்கடல் துயின்று - இரக்ஷிக்கவேண்டு முறைமையாகப் பொருந்தின கருணையாலே நெடியதிருப்பாற்கடலிலே யோகநித்திரைசெய்தும்,—நாலும் ஓதினனென்று - அநாதியாகிய வேதத்தையும் அருளினனென்று,—பாஞ்சராத்திரி உரைப்பன் உற்றே - பாஞ்சராத்திரி யென்னுஞ் சமயி சொல்லுவன் என்க.

உருவுகொண்டும் துயின்றும் எனவும்மை விரிக்க. ஆதி - எல்லார்க்குமுதல்.()

உந்தியி லயனை யீன்று மவனைக்கொண் டுலகுண் டாக்கி
யந்தநல் லுலக ழிக்க வரனையு மாக்கு வித்துத்
தந்திடுஞ் சகத்தி னுக்குத் திதிகர்த்தா தானே யாகி
வந்திடுந் தோற்ற மீறு நிலைமையும் பண்ணு மாயன்.

(இ-ள்.) உந்தியில் அயனை ஈன்றும் அவனைக்கொண்டு உலகு உண்டாக்கி அந்த நல்லுலகு அழிக்க அரனையும் ஆக்குவித்து - வைகுண்டத்திலே யிருக்கும் பரமபுருடன், சிருட்டிகாரணமாகத் தனது திருவுந்தித் தாமரையிலே பிரமாவை யுண்டாக்கி அவனாலே பிரபஞ்சத்தை உண்டாக்குவித்தும் அப்படி அழகு பெறப்படைத்த பிரபஞ்சத்தைச் சங்கரித்தற்குப் பிரமாவினிடத்திலே நின்றும் உருத்திரனை உண்டாக்கி அவனைக்கொண்டு சங்கரிப்பித்தும்,—தந்திடும் சகத்தினுக்குத் திதிகர்த்தா தானேயாகி-தன்னாலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சத்துக்கு இரக்ஷிக்குங் கர்த்தாவுந் தானேயாகி,—வந்திடும் தோற்றம் ஈறு நிலைமையும் பண்ணும் மாயன் - இப்படிவரப்பட்ட சிருஷ்டி திதி சங்காரங்களையுஞ் செய்பவன் பரமபுருஷோத்தமனென்று பாஞ்சராத்திரி சொல்லுவன் என்க.

பஞ்சராத்திரியில் நூல்செய்கையால், பாஞ்சராத்திரியென்று பெயராயிற்று. அரனையு மாக்குவித்தென்றது - பிரமாவின் முகத்திலே அரனைத்தோற்றுவித்தது.()

மீனாமை கேழ னார சிங்கம்வா மனனாய் வென்றி
யானாத விராமர் மூவ ராயனா யளித்தான் கற்கி
தானும் வருவ னின்ன மென்றவன் சாற்றித் தேவர்
கோனாயு நிற்ப னென்று கூறுவன் குறிப்பி னோடே.

(இ-ள்.) மீன் ஆமை கேழல் நாரசிங்கம் வாமனனாய் - பிரபஞ்சத்தை இரக்ஷிக்கவேண்டி மீனாகியும் ஆமையாகியும் பன்றியாகியும் நாரசிங்கமாகியும் வாமனனாகியும்,—வென்றி ஆனாத இராமர் மூவர் ஆயனாய் அளித்தான் - வெற்றிகெடாத பரசுராமனாகியும் பலபத்திராமனாகியும் சீராமனாகியும் கிருஷ்ணனாகியும் இரட்சித்தான்,—கற்கி தானும் வருவன் இன்னமென்று அவன் சாற்றி - மேற்குதிரையாகியும் வந்திரக்ஷிப்பனென்று பாஞ்சராத்திரி சொல்லி,—தேவர்கோனாயும் நிற்பனென்று கூறுவன் குறிப்பினோடே - இப்படித் தசாவதாரங் கொள்ளும்போதும் முத்திதேவன் தேவர்களுக்குக் கர்த்தாவுமாயிருப்பனென்று அறிவோடுஞ் சொல்லாநிற்பன் என்க.

குறிப்பினோடே என்பது - இழித்துக்கூறியது. (௩)

ஏழ்கடல் செலுவி லேற்று மிருங்கிரி முதுகி லேற்றுந்
தாழ்தல முழுதுங் கண்டுந் தபநிய னுடல்பி ளந்தும்
வாழுல களந்து மன்னாய் மன்னர்க்கு மன்ன ராயும்
பாழ்பட வுழறிப் பாரு நோக்கும்பின் பரியு மாயே.

(இ-ள்.) ஏழ்கடல் செலுவில் ஏற்றும் இருங்கிரி முதுகில் ஏற்றும் தாழ்தலம் முழுதுங் கண்டும் தபநியன் உடல் பிளந்தும் வாழ் உலகுஅளந்தும் - மச்சரூபமாய்ச் சத்தசமுத்திரங்களையும் ஓர் செலுவிலே அடக்கியும் அமுதமர்த்தநத்திற் கூர்மரூபமாய் மகாமேருவை முதுகிலே தாங்கியும் பிரளயத்திலே தாழ்ந்துபோன பூமியை வராகரூபமாய்ப் புகுந்தெடுத்தும் நாரசிங்கரூபமாயிரணியவதை செய்தும் வாமனரூபமாய் வாழ்கின்றவுலகளந்தும்,—மன்னாய் மன்னர்க்கு மன்னராயும் பாழ்பட உழறிப்பாரும் நோக்கும் - இருபத்தொருகால் க்ஷத்திரியரைச் சங்கரித்து மண்டலகாபியாய்ப் பரசுராமனும் இராமனு யிராவணனை வதைசெய்தும் பலபத்திராமனாய் லோகரக்ஷார்த்த மாயோகத்தினின்றும் வாசுதேவனாய் அசுரர் மாயை பாழ்படச் சிதறியும் பிரபஞ்சத்தை இரக்ஷிக்கும்,—பின் பரியுமாயே - இனிவரும் பிரளயகாலத்துக்குக் குதிரையாய் வந்திரக்ஷிக்கு மாயன் என்க.

மன்னர்க்கு மன்னராயு மென்றது - இராமாவதார மூன்றிலும் பொருந்தாத இராசாக்களை வென்று அவர்களுக்கு இராசாவாயும் இருந்ததென்க. (சு)

பொய்கைவாய் முதலை வாயிற் போதகம் போத மாட்டா
தையனே நாதா வாதி மூலமே யென்ற ழைப்ப
வுய்யயாம் பணிமா லோல வோலவென் றோடிச் சென்று
வெய்யவாய் முதலை வீட்டிக் கரிக்கும்வீ டருளி னானே.

(இ-ள்.) பொய்கைவாய் முதலைவாயில் போதகம் போத மாட்டாது - பொய்கையிடத்திற்றங்கிய யானை அப்பொய்கையின்கணுண்டாகிய முதலைவாயிலே அகப்பட்டுக் கரையேறமாட்டாமல்,—ஐயனே நாதா ஆதி மூலமே யென்று அழைப்ப - சுவாமியே கர்த்தாவே ஆதியே மூலமே யென்று நொந்து கூப்பிட்டழைப்ப,—உய்ய யாம் பணிமால் ஓல ஓல வென்று ஓடிச்சென்று வெய்யவாய் முதலை வீட்டி - யாம் ஈடேறும்படி வணங்கப்பட்ட பரமபுருடன் கிருபைசெய்தோடிச்சென்று கொடியவாயினையுடைய முதலைவாயினின்றும் விடுவித்து,—கரிக்கும் வீடு அருளினானே - அந்த யானைக்கும் முதலைக்கும் வைகுண்டபதம் அளித்தருளினான் என்க.

ஓல ஓல என்றது - விரைவுச்சொல். கரிக்கும் என்றவும்மையால் முதலைக்கு மென்றதாயிற்று. (ரு)

அலைகடல் கடைந்தும் வானோர்க் கமுதினை யளித்துந் தீய
கொலைபுரி யசுரர் தம்மைக் கொன்றுல கங்கள் காத்துங்
கலைமலி பொருளன் பர்க்குக் கருணையா லுரைத்து மிக்க
தலைமையி னிற்பன் மாய னென்றும்பின் சாற்றி னானே.

(இ-ள்.) அலைகடல் கடைந்தும் வானோர்க்கு அமுதினை அளித்தும் - தேவர்களுக்கு நித்தியத்துவ முண்டாகவேண்டி மகாமேரு மதாகவும்

வாசுகிநாணாகவும் சமுத்திரத்திலே அமுதமர்த்தனஞ்செய்து தேவர்களுக்கு அமுதங்கொடுத்தும்,—தீய கொலைபுரி அசுரர் தம்மைக் கொன்று உலகங்கள் காத்தும் - பிரபஞ்சத்திலே கொடிய கொலைத்தொழிலைப்பொருந்தின அசுரரைக்கெடுத்துத் தேவர்கள் முதலாகிய ஆன்மாக்களை யிரட்சித்தும், —கலைமலிபொருள் அன்பர்க்குக் கருணையால் உரைத்தும் - சர்வகலைகளும் பொருந்தின அர்த்தத்தைத் தனது கருணையாலே அடியவர்களுக் கருளியும்,—மிக்க தலைமையில் நிற்பன் மாயனென்றும் பின் சாற்றினனே - இப்படி மிக்ககர்த்திருத்துவங் குன்றாமனிற்பவன் பரமபுருடனென்று சொன்னான் பின்னும் பாஞ்சராத்திரி என்க. (௬)

மாயையா யுயிராய் மாயா காரிய மாகி மன்னி
மாயையாற் பந்தஞ் செய்து வாங்கிடு மவனா லன்றி
மாயைபோ காதென் றெண்ணி மாயனை வணங்கப் பின்னை
மாயைபோம் போனால் மாயன் வைகுண்டம் வைப்ப னன்றே.

(இ-ள்.) மாயையாய் உயிராய் மாயா காரியமாகி மன்னி - பரமபுருடன் பிரபஞ்ச சிருஷ்டி காலத்தில் மாயாசொரூபியாய்த் தன்வழி மயங்கும் ஆன்மாக்களுமாய் அவ்வான்மாக்களைப் பந்திக்குந் தத்துவ ஜாலங்களுந் தானேயாய் நிலைபெற்று,—மாயையாற் பந்தஞ்செய்து வாங்கிடும் அவனால் அன்றி மாயை போகாதென்று எண்ணி - அம்மாயையாலே ஆன்மாக்களைப் பந்தித்து மீளவு நீக்குவன் மாயனாகையால் அவனாலன்றி மாயைநீங்காதெனவிசாரித்து,—மாயனை வணங்கப் பின்னை மாயைபோம் - பதிவிரதையைப்போல மற்றொரு தெய்வத்தை நினையாமற் பரமபுருடனையே வணங்கி வழிபாடுசெய்யவே அந்தப் பந்தமாகிய மாயைநீங்கும்,—போனால் மாயன் வைகுண்டம் வைப்பன் அன்றே - அம்மாயை நீங்கவே பரமபுருடன் விரசையாற்றினிடத்ததாகிய நன்னீராலே ஆன்மாவைச் சுத்தமாக்கி வைகுண்டத்திலே சாரூப்பியமாக வைப்பனென்று பாஞ்சராத்திரி கூறினான் என்க. (௭)

பாஞ்சராத்திரிமதமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௨௭௦.

---

## பாஞ்சராத்திரிமதமறுதலை.

ஆதித்தா னாகி லாதிக் கந்தமுண் டாகு மந்தக்
கோதிலா னிறைவ னென்று கூறிடும் வேத ஞானச்
சோதியாய் நின்றா னாகிற் றோய்ந்திடான் மாயை ஞானத்
தீதிலா வுருவ மென்னிற் சேர்ந்திடான் றாதுச் சென்றே.

(இ-ள்.) ஆதிதானாகில் ஆதிக்கு அந்தம் உண்டாகும் - பாஞ்சராத்திரீ நீ உன் கர்த்தாவை ஆதியென்று கூறினாய்; அங்ஙனம் ஆதியாயின் ஆதிக்கு முடிவுண்டாய்க் கர்த்தாவு மல்லனாவன். அஃதெவ்வாறெனில்,—அந்தக் கோதிலான் இறைவனென்று கூறிடும் வேதம் - வேதநூலும் ஆதியும் அந்தமுமில்லாதவனே கர்த்தாவென்று சொல்லாநிற்கு மாத

லால்,—ஞானச் சோதியாய் நின்றானாகில் தோய்ந்திடான் மாயை - ஞானப்பிரகாசமாயும் அரூபியாயும் பரிபூரணமாயு நின்றானாயின், மாயையினகப்பட்டு மாயாரூபமாகான். அற்றன்று,—ஞானத் தீதிலா உருவமென்னில் - அப்படி யெடுத்துக்கொண்ட திருமேனிகளும் குற்றமில்லாத ஞானசொரூபமே யென்னில்,—சேர்ந்திடான் தாதுச்சென்றே - அவன் ஞானசொரூபியாயின் அந்தஞானஸ்வரூபத்துக்குத் தாதுக்களுண்டாகா; இவனெடுத்துக்கொண்ட வடிவெல்லாந் தாதுக்களுண்டாய்ச் சங்காரப்படுகையாற் கர்த்தாவல்லன் என்க. (௧)

தாதுவா னதுவே தென்னிற் சங்கரன் பலிக்குச் செல்லச்
தீதிலாக் கோதண் டத்தைத் திறந்தவன் விட்ட போது
போதுவ துதிர மன்றோ போந்துமூர்ச் சித்து வீழ்ந்தா
னாதனா ரெழுப்பப் பின்னே நடந்தனன் கிடந்த வன்றான்.

(இ-ள்.) அவனுக்குத் தாதுக்களுண்டானபடி எங்ஙனமென்னில், பரமேசுவரன் விஷ்ணுவினகந்தையைக் கெடுப்பது காரணமாகப் பிக்ஷாபாத்திரம் வாங்கிப் பிக்ஷைசெய்ய அநேகம் பலிகளாற் பாத்திர நிறையாததால் அவ்விடத்துப் புருடோத்தமன் கருவத்தாலே யானிதனை நிறைப்பேனென்று நெற்றியினரம்பினைத் திறந்துவிடப் புறப்பட்டது இரத்தமன்றோ அந்த விரத்தம் போதுகையாலே விஷ்ணுமூர்ச்சித்துக் கிடப்பப் பிரமாதிகள் தோத்திரஞ்செய்யப் பரமேசுவரன் அருளிச்செய்தெழுப்ப வெழுந்திருந்து பரமேசுவரன் பிறகே நடந்துசென்றான்; திருப்பாற்கடலிலே பள்ளிகொண்ட மூர்த்தியாகையாற் றாதுக்கள் பரமேசுவரனா லுண்டென்றறிவாயாக என்க.

பரமேசுவரன் பிக்ஷைக்கெழுந்தருள விஷ்ணுவினம்ஸமாகிய விண்டுசேனன் துவாரத்தேநின்று தகையப் பரமேசுவரனோடுபோந்த காலவேகர் என்கிறபூதர் அந்த விண்டுசேனனைப் பிடித்தடித்துத் திரிசூலத்தே ஏற்றினார் அந்த ஆரவாரத்திலே விஷ்ணுவெழுந்திருந்து ஈசுவரனை நமஸ்கரித்து இலலாடத்தைத்திறந்து கபாலம் பூரணமாக்கக்கடவேனென்று உதிரம்விட, அவ்வுதிரம் பாதிக்கபாலமும் நிறைக்கப் பெறாமலே மூர்ச்சித்து வீழ்ந்தான்; பின்பு ஈசுவரன் அவன் பத்திகண்டு பிரியப்பட்டுப் பலங்கொடுக்க வெழுந்திருந்து பின்னே சென்றானென்பது நூல்வரலாறு. ௨)

இச்சையா லுருவங் கொள்வ னரியெனி லிகழ்வேள் விக்க
ணெச்சனா யுண்ணப் புக்கங் கிருந்தவன் றீச னாலே
யச்சமார் தலைய றுப்புண் டான்றலை யாக்கிக் கொள்ளா
னச்சினார் போற்ற நாத னாரணன் றலைகொ டுத்தான்.

(இ-ள்.) இச்சையால் உருவங் கொள்வன் அரியெனில் - புருஷோத்தமன் சுவேச்சையாலே உருவெடுத்துக் கொண்டானென்னில்,—இகழ் வேள்விக்கண் எச்சனாய் உண்ணப்புக்கு அங்கிருந்த அன்று ஈசனாலே அச்சம் ஆர்தலை அறுப்புண்டான் தலை ஆக்கிக் கொள்ளான் - பரமேசுவரியை யிகழப்பட்ட வேள்வியிடத்தே எக்கியமூர்த்தியாய் அவிகொள்ள விருந்தஞான்று, வீரபத்திர தேவர் அச்சமுண்டாம்படி தலையறுப்ப அந்தத்தலையிழந்த விடத்துத் தலையுண்டாக்கிக் கொள்ளாதவனானான்,—நச்சினார்

போற்ற நாதன் நாரணன் றலைகொடுத்தான் - பின்பு பத்தராகிய தேவர்கள் புகழ நாரணனுக்கு மீளவும் பரமேசுவரனே தலையையுண்டாக்கினனாதலால் சுவேச்சையா லுருவ்வடுத்தானென்று சொல்வாயல்லை என்க. (௩)

நூலினை யுரைத்து வேத நூலினை நுவலும் வண்ண
மாலருள் செய்தா னென்றாய் மறைநீதி யுலகி யற்கை
சாலவே தெரியா தாகிக் கிடந்தநாட் சகத்தி யார்க்கு
மாலின்கீ ழிருந்து வேத மருளினு னறைந்தா னூலே.

(இ-ள்.) நூலினை உரைத்து வேத நூலினை நுவலும் வண்ணம் மால் அருள் செய்தானென்றாய் - புருஷோத்தமன் வேதத்தையும் அருளிச்செய்து அந்தவேதநூலில் ஆராயும் பொருள்களையும் அருளிச்செய்தானென்று கூறினாய்,—மறை நீதி உலகு இயற்கை சாலவே தெரியாதாகிக் கிடந்தநாள் சகத்து யார்க்கும் ஆலின்கீழ் இருந்து வேதம் அருளினன் அறைந்தான் நூலே - வேதநூலொழுங்கும் உலக வியற்கையுந் தெரியாதாகித் தலைமயங் கிக்கிடப்பப் பிரபஞ்சத்துள்ளோர் யாவர்க்கும் பெரிதுந் தெரியவேண்டி வடவிருக்ஷத்தின்கீழிருந்து வேதநூலை அருளிச்செய்து அதன்பொருள் தெளியவேண்டி ஆகமநூலுமருளினன் ஆதலால், பரமேசுவரனாலே உண் டாக்கப்பட்டன வேதாகமபுராணங்களாம் என்க. (௪)

அயன்றனைப் பயந்தா னென்று யரியயன் சிரஞ்சே திப்பப்
பயந்திடான் றலைமா றுனும் படைத்திடான் சிரத்தைக் கிள்ளுஞ்
சயந்தரு மரனைத் தந்தா னயனென்கை தப்பே யன்றோ
தியங்கிடா துணரா யெல்லாஞ் சிவன்செய லென்று தேர்ந்தே.

(இ-ள்.) அயன்றனைப் பயந்தானென்றாய் அரி - பிரமாவைப்புருஷோ த்தமன் படைத்தானென்று கூறினாய்,—அயன் சிரஞ் சேதிப்பப் பயந்தி டான் தலை மால்தானும் படைத்திடான் - பிரமாவைப்புருஷோத்தமன் படை த்தானென்று கூறின் அஞ்சுமுகமுடையமாதலாலே நாமும்பரமேசுவரனுக் கொப்போமென்று கருவித்தவிடத்துப் பிரமாவினுடைய நடுத்தலையைப் பரமேசுவரன் அறுக்கக்கண்டு நின்ற பிதாவாகிய விஷ்ணு பயப்படானாய்ப் பிரமாவின்றலையை உண்டாக்கமாட்டுகிலன்,—சிரத்தைக் கிள்ளுஞ் சயந்த ரும் அரனைத் தந்தான் அயனென்கை தப்பே அன்றோ - பிரமாவின் றலை யைக்கிள்ளத்தக்க வெற்றிபெற்ற பரமேசுவரன் கர்த்தாவல்லனாய்த் தலை யிழந்த பிரமா பரமேசுவரனைப்படைத்தானென்பது தவறன்றோ,—தியங்கி டாது உணராய் எல்லாஞ் சிவன்செயலென்று தேர்ந்தே - ஆதலால், எல் லாம் பரமேசுவரன் செயலேயென்று விசாரித்து மயங்காமல் அறிவாயாக அதற்குக்காரணம் மேலேசொல்லாநின்றோம் என்க. (௫)

சீவன்கள் சங்கம் போலச் சிலர்வயிற் றுதித்த மாலைத்
தேவென்றே யுலகங் காக்கச் சுவேச்சையாற் சனித்தா னென்பீர்
பூவன்பின் படைக்க மாட்டா தரனடி போற்ற வேதக்
கோவந்து முகத்திற் றோன்றிச் சிருட்டியைக் கொடுத்தல் கூறும்.

(இ-ள்.) சீவன்கள் சநகம் போலச் சிலர்வயிற்று உதித்த மாலைத் தேவென்றே உலகங்காக்கச் சுவேச்சையால் சனித்தானென்பீர் - ஆன்மாக்

களதுபிறப்புப்போல யோனிசாதனை புருஷோத்தமனைப் பிரபஞ்சத்தை யிரட்சிக்கவேண்டிச் சுவேச்சையாலே உருவெடுத்துக் கொண்டானென் றும் அவனிடத்திலே பிரமாதோன்றிப் பிரமாவாலே பிரபஞ்சந் தோன்றிற் றென்றுங்கூறுவீர்,—பூவன்பின் படைக்க மாட்டாது அரனடிபோற்ற வேதக்கோவந்து முகத்தில் தோன்றிச் சிருட்டியைக் கொடுத்தல் கூறும் - சர்வசங்காரஞ்செய்து பரமேசுவரன் மீளவும் பிரமாமுதலான காரணேசுவரரையுண்டாக்கிப் பிரபஞ்சசிருஷ்டிசெய்விக்கப் பிரமாவும் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கவறியாமல் மயங்கிப் பரமேசுவரனைநோக்கித் துதிக்கவே வேதகர்த்தாவான பரமேசுவரன் பஞ்சகிருத்திய நடப்பிப்பது காரணமாகப் பிரமாவினெற்றியிலே தோன்றிப் பிரமாவுக்குச் சிருஷ்டியையுண்டாக்கிக் கொடுத்தலைச் சர்வபுராணங்களுஞ்சொல்லும் ஆதலால் பரமேசுவரன் பிரமாவாலே தோற்றப்பட்டவனல்லன் என்றறிவாயாக என்க. (௬)

நாரண னயனை யீன்று மயனுநா ரணனை யீன்றுங்
காரண மொருவ ருக்கங் கொருவர்தா மிருவ ருக்கும்
வாரண முரித்த வள்ளல் காரண னென்று மன்ற
வாரண முரைக்கும் பக்கத் தவர்களு மடைந்தா ரன்றே.

(இ-ள்.) நாரணன் அயனை ஈன்றும் - நாரணன் பிரமாவையுண்டாக்கியும்,—அயனும் நாரணனை ஈன்றும் - பிரமாநாரணனையுண்டாக்கியும்,—காரணம் ஒருவருக்கு அங்கு ஒருவர்தாம் - ஒருவருக்கொருவர் காரணமாய்க் காரியப்பட்டுவருவர்,—இருவருக்கும் வாரணம் உரித்தவள்ளல் காரணனென்றுமன்ற ஆரணம் உரைக்கும் - அப்படி ஒருவருக்கொருவர் காரியப்பட்டு வருவதற்கு முதற்காரணமாவான் யானையை யுரித்துப்போர்த்த பரமேசுவரனென்றே தெளிய வேதஞ் சொல்லாநிற்கும்,—பக்கத்தவர்களும் அடைந்தார் அன்றே - பரமேசுவரன் காரணமாகையாலே விஷ்ணு வலப்பாகமும் பிரமா இடப்பாகமுமாக அடங்குவார்கள் அநாதியே என்க. (எ)

அழிப்பரி யேவ லென்று யரிதனை யழிக்கு மன்றங்
கழிப்பது தவிர்க்க மாட்டா னங்கமு மழித்தே பூண்டா
னழிப்பரி யேவ லென்றங் கறைந்தது மழிந்த தன்றோ
வழித்திடு மரனே யாக்க நோக்கமு மாக்கு வானே.

(இ-ள்.) அழிப்பு அரி ஏவலென்றாய் - சங்காரம் புருஷோத்தமன் ஆக்கினையென்றாய் அப்படியாயின்,—அரிதனை அழிக்கும் அன்று அங்கு அழிப்பது தவிர்க்க மாட்டான் - சர்வசங்காரத்துப் பிரமவிஷ்ணுக்கள் முதலாகச் சங்காரப்பட விஷ்ணு தன்மேல்வாராமல் நீக்கிக்கொள்ளமாட்டான். அஃதன்றியும்,—அங்கமும் அழித்தே பூண்டான் - பிரமவிஷ்ணுக்களைச்சங்கரித்த அவதாரங்களின் மீன்சேல் பன்றிக்கோடு சிங்கப்பல் ஆமையோடு கொக்கிறகு அன்னத்தூவி முதலியன வணிகையாற் புருஷோத்தமனுக்கினையாற் சங்கரித்ததின்றித் தான் கர்த்தாவாய்ச் சங்கரித்தவனும்,—அழிப்பு அரி ஏவலென்று அங்கு அறைந்ததும் அழிந்தது அன்றோ - ஆதலால் சங்காரம் விஷ்ணுவினுடைய ஆக்கினையென்று கூறியதும் அழிந்ததாம்,—அழித்திடும் அரனே ஆக்கம் நோக்கமும் ஆக்குவானே - சங்கரிப்பிப்பதும்

பரமேசுவரனே யாகையாற் சிருட்டி திதிகளும் அவனாலே யுண்டாமென் றறிவாயாக என்க. (௮)

வானங்கீழ் மண்ணு மெல்லா மாயனே காப்பா னென்றாய்
தானஞ்சுஞ் சலந்த ரன்றன் னுடல்கீண்ட சக்க ரத்தை
யானஞ்சு மாடு வான்பாற் பெற்றுல களித்த வார்த்தை
தானெங்கு மாகு மெல்லாஞ் சங்கரன் காப்பே யாமே.

(இ-ள்.) வானம் கீழ் மண்ணும் எல்லாம் மாயனே காப்பானென்றாய் - ஆகாசமுதற் கீழ்ப்பிருதிவியீறாகவுள்ள பிரபஞ்சமெல்லாம் புருஷோத்தமனே இரக்ஷிப்பனென்று கூறினாய்,—தான் அஞ்சுஞ் சலந்தரன்றன் உடல் கீண்ட சக்கரத்தை ஆன் அஞ்சும் ஆடுவான்பாற் பெற்று உலகு அளித்த வார்த்தைதான் எங்கும் ஆகும் - சலந்தராசுரனுக்கு விஷ்ணு பயப்பட்டுப் பரமேசுவரனைநோக்கித்தவஞ்செய்ய அவ்விஷ்ணு தவத்தைக்கெடுக்கவந்த சலந்தரனைச் சக்கரத்தாலேபிளந்த பரமேசுவரனிடத்தில் அச்சக்கரத்தைப் பெறவேண்டிப் பரமேசுவரனைநெடுங்காலம் அர்ச்சித்தும் அவன் அநுக்கிரகஞ்செய்யாமையாற் பின்பு விஷ்ணு கண்ணை இடந்துமலராக அர்ச்சிக்கப் பஞ்சகவ்வியத்தில் மூழ்கும் பரமேசுவரன் மாட்டுச்சக்கரம்பெற்று அதனைக் கொண்டு மாலி சுமாலி மாலியவான் முதலாகிய அசுரரைவென்று பிரபஞ்சத்தை இரக்ஷித்தானென்னும்புராணம் பிரமாவாலே சொல்லப்பட்டுப் பிரபஞ்சமெங்கு முண்டாயதாகையால்,—எல்லாம் சங்கரன் காப்பே ஆமே - பிரபஞ்சத்தை விஷ்ணு இரட்சிப்பது பரமேசுவரன் இரக்ஷையேயென்றறிவாயாக என்க. (௯)

மாலினர் சேலி னாராய் வாரிக ளடக்கிக் கொண்டன்
றாலியா வுலக மெல்லா மழிப்பவ னானே யென்னச்
சேலினர் தமைப்பி டித்துச் செலுவினை யிடந்து கண்ணைச்
சூலியார் மேல ணிந்தான் சூலிதா னாகு மன்றே.

(இ-ள்.) மாலினர் சேலினராய் வாரிகள் அடக்கிக்கொண்டு அன்று ஆலியா உலகமெல்லாம் அழிப்பவன் நானே என்ன - பிரளயகாலத்திலே பிரபஞ்சத்தை இரக்ஷிக்கவேண்டி மச்சவடிவுகொண்டு சத்தசமுத்திரங்களையும் ஒருசெலுவிலே யடக்கினனானென்று கருவித்துப் பிரபஞ்சத்துக்குச் சங்காரகர்த்தாவும் நானேயென்றுசொல்ல,—சேலினர் தமைப்பிடித்துச் செலுவினை இடந்து கண்ணைச் சூலி ஆர் மேல் அணிந்தான் சூலிதான் ஆகும் அன்றே-விஷ்ணுவின் கருவத்தை யடக்கவேண்டி அந்த மச்சத்தைப் பிடித்துச் செலுவினையுங்கண்ணினையுமிடந்து கூரிய திரிசூலத்தின் மேலே அணியாகவணிந்தான் சூலபாணியாகிய பரமேசுவரனாவான் என்க. (௧௦)

ஆமையாய் மேருத் தாங்கி யடைகலாய்க் கிடந்த போது
நாமெனா வுலகா தார நாதனென் றகந்தை பண்ண
வாமெனா ரன்று மென்னா ரமரரு மானார் பார்த்துத்
தாமநா ளாமை யாதைத் தகர்த்தோடு தரித்தா ரன்றே.

(இ-ள்.) ஆமையாய் மேருத்தாங்கி அடைகலாய்க் கிடந்தபோது நாமெனா உலக ஆதார நாதனென்று அகந்தை பண்ண - ஒருகாலத்துப் பிரளயம் வந்து பிரபஞ்சத்துக்கு ஆதாரமாகிய மேருமலை சலித்தபோது புரு

ஷோத்தமன் கூர்மரூபமாய் அம்மலையைத்தாங்கி ஆதாரசிலைபோற்கிடந்து பிரபஞ்சத்துக்கு ஆதாரமும் அதற்குக்கர்த்தாவும் நாமேயென்று அகங்கரித்தவிடத்து,—ஆமென்னூர் அன்றுமென்னூர் அமரரும் ஆனூர்பார்த்துத்தாம் அநாள் ஆமையாரைத் தகர்த்து ஓடு தரித்தார் அன்றே - விஷ்ணுவின் கருவத்தைப்பார்த்தருளிக் கர்த்தாவாமென்றும் அன்றென்றுஞ்சொல்லாராய் அந்தநாளிலே ஆமையைத்தகர்த்து அந்தவோட்டை என்புமாலையோடணிந்தார். தேவரூபருமாய் அல்லருமாகிய பரமேசுவரர் ஆதலால் இவரே கர்த்தாவென்றறிவாயாக என்க. (௧௧)

எழுதல மிடந்து பன்றி யாயிருங் கொம்பி லேற்றுத்
தொழுதுல கிறைஞ்ச நின்ற சோதிநா னென்ற போதன்
றழுதல மந்து வீழ வருங்கோடு பறித்த ணிந்தான்
கழுதல மந்து காட்டி லாடிடுங் கடவு ளன்றே.

(இ-ள்.) எழுதலம் இடந்து பன்றியாய் இருங்கொம்பில் ஏற்றுத் தொழுது உலகு இறைஞ்ச நின்ற சோதி நானென்றபோது - ஒரு பிரளயத்து விஷ்ணு வராகமூர்த்தியாய் அதல விதல சுதல தராதல இரசாதல மகாதல பாதாள மென்னப்பட்ட ஏழு பூமிகளையுங்கிண்டு பெரியகொம்பிலே யேற்றுக்கொண்டு நின்றபராக்கிரமத்தினலே பிரபஞ்சத்தார் புகழ்ந்து வணங்க நின்றகர்த்தா யானல்லது வேறில்லையென்று கர்வித்தபோது,—அன்று அழுது அலமந்து வீழ அருங்கோடு பறித்து அணிந்தான் கழுது அலமந்து காட்டில் ஆடிடுங் கடவுள் அன்றே - உடனே சோகத்தினுற்றுக்கித்துப் பூமியிலேவிழும்படி அப்பன்றிக்கோட்டைப்பறித்து அணியாகவணிந்துகொண்டான் பேய் சுழன்றுடுங் காட்டில் ஆடலைவிரும்பினகர்த்தா என்க. (௧௨)

இங்கடா வுளனே மாலென் றிரணியன் றூணை யெற்ற
வுங்கடா மோத ரன்று னுருநர சிங்க மாகி
யெங்கடா போவ தென்ன வுடல்பிளந் திறையா னென்ன
வங்கடா சிம்பு ளாகி யெடுத்தடர்த் தான ரன்றான்.

(இ-ள்.) இங்கு அடா உளனே மாலென்று இரணியன் தூணை எற்ற உங்கள் தாமோதரன்றான் உரு நரசிங்கமாகி எங்கு அடா போவதென்ன உடல்பிளந்து இறை யானென்ன - ஒருகாலத்திலே இரணியனுகிய அசுரன் இவ்விடத்தில் உங்கள் புருஷோத்தமன் உளனேவென்று தூணைத்தட்டிக் காட்ட உங்கள் தாமோதரனுகிய புருஷோத்தமன் அந்தத்தூணிலே நாரசிங்கரூபமாகித்தோன்றி இரணியனை ஏட இனி எங்கே போவாயென்றுபிடித்து உடலைப்பிளந்தமையாலுண்டான கருவத்தாலே, பிரபஞ்சத்துக்கு நாமே கர்த்தாவென்ன,—அங்கு அடா சிம்புளாகி எடுத்து அடர்த்தான் அரன்றான் - அவ்விடத்துச் சிம்புளென்னும் வடிவுகொண்டு நாரசிங்கத்தை எளிதாகத் தூக்கிச் சங்கரித்துத் தோலையாசனமாகக் கொண்டான் பரமேசுவரன் என்க. (௧௩)

தானமென் றிரந்து செல்லத் தனக்குமூ வடிகொடுப்ப
வானமு மளந்து கொண்டு மாபலி தன்னைப் பின்னை
யீனமாஞ் சிறையி லிட்டா னிறையன்றென் றீங்தோர் தங்கட்
கூனஞ்செய் திடுவோர் தாங்க ளுத்தம ரல்ல ராகும்.

(இ-ள்.) தானமென்று இரந்து செல்லத் தனக்கு மூவடி கொடுப்ப - ஒருகாலத்திலே புருஷோத்தமன் வாமனவடிவுகொண்டு மாபலியிடத்திலே தானங்கொடுக்க வேண்டுமென்று இரந்துசெல்ல அவனுக்கு அவ்வரசன் தானமாக மூவடிமண் கொடுப்ப,—வானமும் அளந்து கொண்டு மாபலி தன்னைப் பின்னை ஈனமாஞ் சிறையில் இட்டான் இறை அன்று - தானம்பெற்றுப் பூமியந்தரசுவர்க்கங்களை ஓரடியாலே யளந்துகொண்டு மற்றையடிக்கு இடமில்லாமைபற்றி மாபலியைக் குற்றமான சிறையிலிட்டானாதலால் அவன் கர்த்தாவல்லன். அஃதியாங்ஙனமென்னில்,—ஒன்று ஈந்தோர் தங்கட்கு ஊனஞ் செய்திடுவோர் தாங்கள் உத்தமர் அல்லராகும் - ஒருவர் ஒன்றனைத் தானஞ்செய்தால் அதனை யேற்றுக்கொண்டவர் தானஞ்செய்தவருக்கு நன்மைசெய்தலன்றித் தீமைசெய்வோர் உத்தமரல்லராதலால் என்க. (கச)

மாயமான் றன்னைப் பொய்ம்மா னென்னவறி யாத ரக்கன்
மாயையி லகப்பட் டுத்தன் மனைவியைக் கொடுத்தான் றன்னை
மாயைக்குக் கர்த்தா வென்பை மதிகெட்டங் கவனைக் கொன்று
நாயனார் தமைப்பூ சித்தான் கொலைப்பாவ நணுகி டாதே.

(இ-ள்.) மாயமான்றன்னைப் பொய்ம்மானென்ன அறியாது அரக்கன் மாயையில் அகப்பட்டுத் தன்மனைவியைக் கொடுத்தான்றன்னை மாயைக்குக் கர்த்தா என்பை - ஒருகாலத்திலே இராமனாயவதரித்து இலக்குமியுந் தானும் வனசரிதராயுள்ளநாளில் இராவணன் இராமனைநீக்கி இலக்குமியை அபகரித்துக் கொள்வான் ஓர் பொய்மானை ஏவ அந்தமானை இராக்ஷத மாயை யென்றறியாமல் அம்மானின் பின்னேபோய்த் தன்மனைவியைப் பிடிகொடுத்தானை மாயைக்குக் கர்த்தாவென்று கூறுவீர்,—மதிகெட்டு அங்கு அவனை கொன்று நாயனார்தமைப் பூசித்தான் கொலைப்பாவம் நணுகிடாதே - இலக்குமி நீங்குகையாலே மயக்கத்தையுடையனாய் இலங்கையிற்சென்று இராவணனையும் அவன்சேனையையுங் கொன்று கொன்றபாவ நீங்கச் சேதுவிலேவந்து பரமேசுவரனை அருச்சித்து வினையைக்கெடுத்துக் கொண்டான் கர்த்தாவல்லன் என்க. (கரு)

பரசுடன் பிறந்தான் றானும் பத்தனாய்ப் பரசி னாலே
யரசறுத் தரனை நோக்கி யருந்தவம் புரிந்தா னன்று
பரசிய பரசு ராமன் பலதேவ னுலக மெல்லா
முரைசெயு முமையாள் கோனை யுண்ணினைந் தியோகி னின்றான்.

(இ-ள்.) பரசுடன் பிறந்தான்றானும் பரசுராமன் பத்தனாய்ப் பரசினாலே அரசு அறுத்து அரனை நோக்கி அருந்தவம் புரிந்தான் அன்று - ஒருகாலத்திலே விஷ்ணு மழுவுடன்பிறந்து பரசுராமனெனப் பெயரையுடையனாய்ச் சிவபத்தனாய் மழுவைக்கொண்டு அரசர்களையறுத்து அவ்விரத்தத்திலே ஸ்நானஞ்செய்து அந்தத்தோஷந்தீரப் பரமேசுவரனைநோக்கி அருந்தவம் புரிந்தான் அந்நாளில்,—பரசிய பலதேவன் உலகமெல்லாம் உரைசெயும் உமையாள் கோனை உள் நினைந்து யோகினின்றான் - பிரபஞ்சம் போற்றத்தக்க பலபத்திரராமன் உயர்ந்தோரெல்லாம் வழிபாடுசெய்யும் உமையவண்மணாளனை ஞானக்கண்ணாலேகண்டு யோகத்தில் இருந்தே இராச்சியஞ்செய்தான் என்க. (கசூ)

ஓதிய வாசு தேவர் தமையுப மனியு தேவர்
தீதிலா நோக்கஞ் செய்து சிவகரஞ் சிரத்திற் சேர்த்தி
யாதிபா லடிமை யாக்க வரியுடல் பிராண னத்த
மீதெலாங் கொண் ணீ யென்றங் கிறைஞ்சினா ரறிந்தி டாயே.

(இ-ள்.) ஓதிய வாசுதேவர் தமை உபமனியுதேவர் தீது இலா நோக்கஞ்செய்து சிவகரம் சிரத்திற் சேர்த்தி ஆதிபால் அடிமை யாக்க - புருஷோத்தமன் வாசுதேவராய்த் துவாரகாபுரியிலேயிருக்க வியாக்கிரபாத முனிவர்புத்திரராகிய உபமன்னியுமகாமுநிவர் கயிலாயத்துக்கெழுந்தருள அவரை வாசுதேவர்கண்டு எங்கே யெழுந்தருளுகின்றீரென்று கேட்ப அவர் கயிலாயத்துக்குப் போகிறேமென்ன வாசுதேவர் கயிலாயத்திற்குச் செல்லாமல் இங்கே யாங்கள் தரிசித்துக்கொண்டிருப்ப அருள்செய்ய வேண்டுமென்று வணங்க உபமன்னியுமகாமுநிவர் குற்றமற்ற ஞானக்கண்ணாலே தீக்ஷிப்பித்து சிவஹஸ்தம் சிரத்தில்வைத்துத் தரிசிப்பித்து அவரைச் சிவபத்தராக்க,—அரி உடல் பிராணன் அத்தம் ஈதெலாங் கொள் நீ என்று அங்கு இறைஞ்சினார் அறிந்திடாயே - வாசுதேவர் ஞானபூரணராய் என் சரீரம் அர்த்தம் பிராணன் இவையெல்லாங்கொண்டருள வேண்டுமென்று தோத்திரஞ்செய்து வணங்கிக்கொடுத்துச் சிவபத்தராயிருந்தாரென்றறிவாயாக என்க. (௧௭)

பின்வரும் பரிதா னாகி யரியென்றாய் பின்பு வந்தா
லென்வரு மீச னாலென் றறிகிலோ மிவுளி யார்க்கு
முன்வரு மவதா ரங்கண் முடிந்தமை யறிந்தா யன்றே
பொன்வருஞ் சடையி னான்றன் புகழெங்கும் புக்க தன்றே.

(இ-ள்.) பின்வரும் பரிதானாகி அரி என்றாய் பின்பு வந்தால் என் வரும் ஈசனால் என்று அறிகிலோம் இவுளியார்க்கு - அந்தவிஷ்ணு வருகிற யுகத்துக் குதிரையாக வருவனென்றாய் அப்படி வந்தாற் பரமேசுவரனாலே அக்குதிரைக்கு யாதுவருமோ என்றறிகிலோம்,—முன்வரும் அவதாரங்கள் முடிந்தமை அறிந்தாய் அன்றே பொன்வருஞ் சடையினான்றன் புகழ் எங்கும் புக்கது அன்றே - முன்புவந்த அவதாரங்களிலுண்டானமை நீ கேட்டறிந்தாய்; யாம் இங்ஙனஞ்சொன்ன முறைமையாற் பொன்போன்ற கொன்றைப்பூத்தரித்த திருச்சடாபாரத்தை யுடையவன் கீர்த்தியே எங்கும் விளங்கிற்று என்க. (௧௮)

கைவரை மூல மேயோ வெனக்கரிக் குதவுங் காட்டின்
மொய்வரை யெடுத்தான் மூல மாயிட வேண்டு மோதா
னையனே முறையோ வென்று லரசனே வங்குச் செல்வான்
வையகங் காப்பான் செய்கை வழக்கன்றோ வூர்காப் பான்போல்.

(இ-ள்.) கைவரை மூலமேயோ எனக்கரிக்கு உதவுங் காட்டின் மொய்வரை எடுத்தான் மூலம் ஆயிட வேண்டுமோதான்-ஒரு யானை மடுவின்கண் முதலைவாயின் அகப்பட்டுமூலமேயென்று கூப்பிட ஓடிச்சென்று அவ்வியானையினிடரைக்கெடுத்தது கொண்டே வனத்தில் வரையையெடுத்து ஆனிரையைக்காத்தவிஷ்ணு கர்த்தாவாயிடவேண்டுமோ? அவன் கர்த்தாவல்லன்,

—ஐயனே முறையோ என்றால் அரசனே அங்குச்செல்வான் வையகங் காப்பான் செல்கை வழக்கு அன்றோ ஊர்காப்பான்போல் - இராஜாவைநோக்கி ஒருவன் முறையோவென்று கூப்பிட்டால்,அம்முறைகேட்கச்செல்வோன் இராஜாவோ அன்றே? பிரபஞ்சத்தைப் பரமேசுவரனுக்கிணையினாலே இரக்ஷிப்பானாகிய விஷ்ணு ஓரான்மாவுக்கிடர்வந்தால் அதனைச்சென்றொழிக்கு முறைமை,அரசனதாக்கினையாலே ஊர்காப்போன் ஒருவர்க்குத் தீமைவந்தவழி அதனைச் சென்று தீர்ப்பதுபோலாம் என்க. அன்றோ - அசை. (௧௯)

அன்றியு மானை மாலுக் கடிமையாய் மூல மேயோ
வென்றிடு மதனுன் மாறு னிறைவனென் றியம்ப வேண்டா
வுன்றனக் கடிமை யானு ருன்னையெம் பெருமா னென்று
லின்றுநீ வணங்கு முன்ற னெம்பெரு மானே நீயே.

(இ-ள்.) அன்றியும் ஆனைமாலுக்கு அடிமையாய் மூலமேயோ என்றிடுமதனால் மாறன் இறைவனென்று இயம்பவேண்டா-அன்றியும் விஷ்ணுவுக்கு யானை அடிமையானபடியாலே தன்கர்த்தாவை மூலமேயென்று கூப்பிட்டதாயின் அதுகொண்டு விஷ்ணுவை மூலமாகிய கர்த்தாவென்று சொல்லவேண்டா,—உன்றனக்கு அடிமை ஆனார் உன்னை எம்பெருமான் என்றால் இன்று நீ வணங்கும் உன்றன் எம்பெருமானே நீயே - உன்னடியான் உன்னை எம்பெருமானென்றழைத்தால் இப்பொழுது நீ வணங்குகிற உன்னுடைய புருஷோத்தமனுவையோ நீ அன்றே? ஆதலால் யாவர்க்கு மூலமென்பது பரமேசுவரனே யாம் என்க. (௨௦)

ஞாலமுண் டவனு லுண்டார் நல்லமு தமர ரென்றாய்
வேலைநஞ் செழமா லாதி விண்ணவர் வெந்து சென்ற
காலமின் றெம்க்குக் காவாய் கடவுளே யென்ன நாத
னாலமுண் டிலனேற் றேவ ரமுதமுண் டிடுவ தெங்கே.

(இ-ள்.) ஞாலம் உண்டவனால் உண்டார் நல்ல அமுது அமரர் என்றாய் வேலைநஞ்சு எழமால் ஆதி விண்ணவர் வெந்து சென்று அகாலம் இன்று எமக்குக் காவாய் கடவுளே என்ன - பூமியை விழுங்கிய சாமர்த்தியத்தையுடையவனாலே தேவர்கள் நல்ல அமுதத்தைப் புசித்தார்களென்றாய்; சமுத்திரமர்த்தநத்திலே விஷம் பிறக்க விஷ்ணுமுதலாகிய தேவர்களெல்லாம் உஷ்ணம் பொறுக்கமாட்டாமல் ஓடிவந்து அகாலமரணம் எங்களுக்கு இன்று சம்பவித்திருக்கிறது எங்களை யிரட்சித்தருள வேண்டுங்கர்த்தாவேயென்ன,—நாதன் ஆலம் உண்டிலனேல் தேவர் அமுதம் உண்டிடுவது எங்கே-பரமேசுவரன் கிருபைபண்ணி அவ்விடத்தைஅமுதுசெய்திலனாயின் விஷ்ணுமுதலிய தேவர்களெல்லாம் பிழைத்துப்பின்பு அமுதத்தையுண்டாக்கி அதனை யுண்பது எங்ஙனஞ்சொல்வாய் என்க. (௨௧)

அஞ்சியன் றரிதா னோட வசுரனைக் குமர னாலே
துஞ்சுவித் தொருபெண் ணாலே தாரக னுடறு ணிப்பித்
தஞ்சிடப் புரந்தீ யூட்டிச் சலந்தர னுடல்கீண் டோத
நஞ்சினை யுண்டு மன்றோ நாயக னுலகங் காத்தான்.

(இ-ள்.) அஞ்சி அன்று ஓட அரிதான் அசுரனைக் குமரனாலே துஞ்சுவித்து - சூரபத்மாவுக்குப் பயப்பட்டு விஷ்ணு திருப்பாற்கடலை நீங்கி

யோடிப் பரமேசுவரன்பால் முறையிடச் சுப்பிரமணியக்கடவுளை யுண்டாக்கி அக்கடவுளாலே சூரபத்மாவைச் சங்கரிப்பித்தும்,—ஒரு பெண்ணாலே தாரகன் உடல் துணிப்பித்து - தாரகனென்னுமசுரனுக்கு விஷ்ணுமுதலாகிய தேவர்களெல்லாம் பயப்பட்டுப்போய்ப் பரமேசுவரன்பால் முறையிட அப்போது காளியென்னுஞ் சத்தியைக்கொண்டு தாரகனுடலைச்சேதிப்பித்தும்,—அஞ்சிடப் புரம் தீ ஊட்டி - திரிபுரத்தசுரர்க்குப்பயப்பட்டு விஷ்ணுமுதலாகிய தேவர்களெல்லாரும் பரமேசுவரன்பால் முறையிடத் திரிபுரத்தைச்சுட்டும்,—சலந்தரன் உடல் கீண்டு - சலந்தரனென்னு மசுரன் விஷ்ணுவைத்திருப்பாற்கடலிற்பள்ளிகொள்ளவொட்டாமலோட்டித்திரிய விஷ்ணு சலந்தரனுக்குப்பயப்பட்டுப்போய்ப் பரமேசுவரன்பால் முறையிடச் சக்கரத்தாலே சலந்தரனுடலைப்பிளந்தும்,—ஓத நஞ்சினை உண்டும் - சமுத்திரமர்த்தநத்திலே பிறந்தவிடம் பதினாலுலகத்தையுஞ்சுட அந்தவிடத்தை அமுதுசெய்தும்,—அன்றோ நாயகன் உலகம் காத்தான்-அன்றோ பரமேசுவரன் பிரபஞ்சத்தை யிரக்ஷித்தான் என்க. (௨௨)

பார்த்தனு ரிரதமேறிப் படைதனைப் பார்த்துச் சார்பைக்
கூர்த்தவம் பாலே யெய்து கொன்றர சாளே னென்னத்
தேர்த்தனி லிருந்து மாயை செய்துமால் கொல்லச் செப்பும்
வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய் புரங்கொ னூன் மதித்தி டாயே.

(இ-ள்.) பார்த்தனார் இரதம் ஏறிப் படைதனைப் பார்த்துச் சார்பைக் கூர்த்த அம்பாலே எய்து கொன்று அரசு ஆளேன் என்ன - அருச்சுனன் யுத்தஞ் செய்வதாகத் தேரிலேறி நின்று சத்துருக்களைப்பார்த்துச் சத்துருக்களாகத் தோன்றினொல்லாம் என்னுடைய மித்துருக்களாக விருத்தலால் இவர்களைக் கூரிய அம்பாலே கொன்று இராச்சியஞ்செய்வதில்லையென்று சொல்ல,—தேர்த்தனில் இருந்து மாயை செய்துமால் கொல்லச்செப்பும் வார்த்தை நூல் ஆக்கிக்கொண்டாய் புரங்கொல் நூல் மதித்திடாயே - அவனுக்குத்தேர்ப்பாகனாகிய கிருஷ்ணன் அவன் மனத்தேறிடக்கொல்வது காரணமாகச் சர்வமுநாமே கொல்லுவோம் நீ யன்றென்று மயங்கச்சொன்ன சொல்லையே நூலாக்கிக்கொண்டாயாயின், திரிபுரத்துள்ளார் சிவலிங்கத்தைக்கைவிடும்பொருட்டு, விஷ்ணுபுத்தமுனியாக விருந்து தெய்வமொன்றில்லையென்று மயக்குவித்துச் சிவலிங்கத்தைக்கைவிடுவித்த நூலையும் நீ நூலாகக்கொள்வாயாக என்க. (௨௩)

மாயைதா னுயிர்க ளாகா துயிர்கடா மாயை யாகா
மாயவ னிவைதா னுகா னிவைதானு மாய னுகா
வேயுமா மநாதி யாக விறைபசு பாச மென்றே
தூயவன் கலப்பி னலே யெல்லாமாய்த் தோன்று வன்காண்.

(இ-ள்.) மாயைதான் உயிர்கள் ஆகாது - மாயையானது ஜடமாகையால் ஆன்மாக்களாகாது,—உயிர்கள்தாம் மாயை ஆகா - ஆன்மாக்கள் இச்சாஞானக்கிரியைகளை யுடையன வாகையால் ஜடமாகிய மாயையாகா,—மாயவன் இவை தான் ஆகான் - புருடோத்தமன் ஞானசொரூபியென்று நீ கூறுகையால், ஜடமாகிய மாயையும் சுத்தாசுத்தமாகிய ஆன்மாவுமாகிநில்லான்,—இவைதானும் மாயன் ஆகா - மாயையும் ஆன்மாவுஞ்

கூடிப்புருடோத்தமனாகமாட்டா,—ஏயுமாம் அநாதியாக இறைபசுபாசமென்றே - மாயையாகிய பாசமும் ஆன்மாவாகிய பசுவும் இவையிற்றை நடத்துவானாகிய பதியும் அநாதியிலே பொருந்தின வாகையால்,—தூயவன் கலப்பினாலே எல்லாமாய்த் தோன்றுவன்காண் - நின்மலனாகிய கர்த்தா சம்பூரணனாகையாலே சர்வமுந்தானாகித் தோன்றுவனல்லது ஜடமுமான் மாவுமாய்ப் பிரிந்துநில்லான் என்க.

சித்து அசித்தாகாது, அசித்துச் சித்தாகாது, சித்திற் சேஷ்டிதனே கர்த்தா. மாயவன் ஆன்மவர்க்கமென்க. (௨௪)

பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை யடைய முத்தி
யாசற்ற வாக மங்க ளறைந்திட வறிவின் றிங்கே
மாசற்ற மான்மா சாகி மாயையு முறுவ னென்னிற்
கூசிப்பின் கொள்ளார் நல்லோ ருனக்காமிக் குழப்பு நூலே.

(இ-ள்.) பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடைய முத்தி ஆசு அற்ற ஆகமங்கள் அறைந்திட - பாசமாகிய அஞ்ஞானத்தைப் பசுக்களாகிய ஆன்மாக்கள் கைவிட்டுப் பதியாகிய கர்த்தாவைக்கூடுதலே முத்தியென்று குற்றமில்லாத ஆகமங்கள்சொல்லாநிற்ப,—அறிவின்று இங்கே மாசு அற்ற மால் மாசு ஆகி மாயையும் உறுவன் என்னில் - இங்கே மாலாகிய புருஷோத்தமன் அஞ்ஞானமுமாய் அஞ்ஞானத்தோடுகூடிய ஆன்மாவுமாய் நிற்பனென்று நீ அறிவின்றியே சொல்லின்,—கூசிப்பின் கொள்ளார் நல்லோர் உனக்கு ஆம் இக்குழப்பு நூலே - இப்படி வேதாகமங்களுக்கு விருத்தமான மயக்கநூல் உனக்கேயாம் உயர்ந்தோர் இதனை நூலென்று சொல்ல நாணிப் பின்பு அதன் அர்த்தமுங்கொள்ளார் என்க. (௨௫)

பிரமநா னென்ற போது பிரமனோ டரியுங் கூடிப்
பரமனா ரிகலி டாமே பார்த்திடர் பண்ணி நின்ற
வுரமன ரழலு ருபந் தன்னையு முணர மாட்டான்
கரமன்னா டிகிரி யேற்றான் கடவுளென் றறைவ தென்னே.

(இ-ள்.) பிரமம் நான் என்ற போது பிரமனோடு அரியுங் கூடி - ஒரு காலத்துப் பிரமாவும் விஷ்ணுவுங்கூடித் தங்களில் மாறுபட்டுச் சிருஷ்டிக்கையாலே நானே கர்த்தாவென்றும் இரக்ஷிக்கையாலே நானே கர்த்தாவென்றுஞ் சொல்லியகாலத்து,—பரமனார் இகலிடாமே பார்த்து - அப்பிரம விஷ்ணுக்கள் தம்மில் மாறுபடாமல் இவர்கள் அகந்தையைக்கெடுப்பான் பரமேசுவரன் திருவுளம்பற்றி,—இடர் பண்ணி நின்ற உரம் அனார் அழல் உருபந் தன்னையும் உணர மாட்டான் - உங்களில் நம்முடைய அடிமுடியறிந்தவன் கர்த்தாவென் றருளி ஒருதழற்பிழம்பாய்நிற்கப் பிரமா திருமுடியைக்கண்டு வருவேனென்று அன்னமாகப்பறந்துதேடியும் விஷ்ணு சீர்பாதங்காண்பேனென்று பன்றியாய்ப்பாதாளத்தைக்கீண்டுங் காணாமல் இருவருக்கும் வியாகுலத்தை யுண்டாக்கிநின்ற உரத்தையுடைய பரமேசுவரனது திருவுரு இன்னபடியென்றும் விஷ்ணுவும் அறியமாட்டானானான்,—கரம் மன் ஆள் திகிரி ஏற்றான் கடவுளென்று அறைவது என்னே - சக்கரத்தைக் கையிலே ஆட்சி நிலைபெறவேந்தின விஷ்ணுவைக் கர்த்தாவென்று சொல்லுவது என்னையோ என்க. (௨௬)

தோன்றி அணைந்தாங்கு அகறல் வேண்டும் - அந்த நஞ்சு புசித்தவர் களை மறைத்து மேலிட்டு நின்று மீளவும் விட்டுப்போனாற்போல இந்த மலங்களுமாக வேண்டும் அப்படிக்கண்டோ மில்லையே, அன்றியும்,—

குணங்களும் பன்மை இன்றாகும் - இந்தமலங்களுக் குவமையாகச் சொல்லப்பட்ட நஞ்சுகளுக்கு இந்த மலங்களைப்போலப் பலகுணங்கள் கண்டதில்லை, ஆகையால் அது திருட்டாந்த விரோதமாம், அன்றியும் அந்த மலங்கள்தான்,—

எம்மைவந் தணைதரத் தானோ மாட்டாது - சடமேயானால் எம்மைவந்து பொருந்தமாட்டாது,—

யானோ செய்கிலன் - அடியேனுக்குக் குற்றமாயுள்ளது வேண்டு மென்று அடியேன் தானே யுண்டாக்கிக் கொள்வதுமில்லை,—

நீயோ செய்யாய் நின்மலனாயிட்டு - தேவரீர் மலரகிதரா யிருக்கை யால் அஞ்ஞானமாகிய மலங்களை யடியேனுக் குண்டாக்கப்போகிறதில்லை; இவை மூன்றுவகையுமன்றி,—

இயல்பெனில் - அந்தமலங்கள் ஆன்மாவுள்ளவன்றே சுபாவமாக வுள் ளவென் றருளிச்செய்யில்,—

போகாது என்றும் - பாலில்வெளுப்புங் கரியிற்கறுப்பும்போல வியல் பாயுள்ளவற்றுக் கொருகாலத்திலு மழிவில்லையாம்,—

மயல்கெட - அடியேனுக் கிந்தச் சந்தேகந் தீரத்தக்கதாக,—

பந்தம் வந்தவாறு இங்கு அந்தம் ஆதி இல்லாய் அருளே - முடிவுமுத லு மில்லாத தம்பிரானே இந்தப் பாசங்கள் அடியேனோடு வந்து பொருந் தின முறையெப்படியென் றருளிச்செய்யவேண்டும் என்க.

இதனானே, பாசம் நெல்லுக்குமிபோலவும் செம்பிற்காளிதம்போலவும் ஆன் மாக்களைப்பற்றி நிற்குமென்பது பெறப்பட்டது.

இவை மூன்றுசெய்யுளும் கர்த்தாவறிவிப்போனென்றும் ஆன்மா அறிவித் தாலறிகின்றவனென்றும் பாசமறிவித்தாலு மறியாதென்றுங்கூறியது. (சு)

இங்ஙனம் பதியிலக்கணம் பசுவிலக்கணம் பாசவிலக்கணஞ்சொல்லிப் பாச தரிசனஞ்சொன்னபின் ஆன்மதரிசனஞ் சொல்லவேண்டுகையாலும் மலதரிசனம் வேறே சொல்லாதபடியினாலுந் தேவரீ ரருள்முன்னே பாசநில்லாது, அடியேனுக்குச் சுதந்திரமாய்க் காண வறிவுமில்லை. இந்த மலத்தைக் கண்டமுறைமை யெப்படி யென்னும் வினா மேலருளிச் செய்கின்றார்.

நேரிசைவெண்பா.

அருண்முன்பு நில்லா தடியேற்குக் கண்ணின்
றிருள்கண்ட வாறென்கொ லெந்தாய்—மருள்கொண்ட
மாலையா வெண்ணெய்வாழ் மன்னவா வென்னுடைய
மாலையா மாற்ற மதி.

(இ-ள்.) அருள்முன்பு நில்லாது - அந்தமலங்கள் அஞ்ஞானமாகை யாலே தேவரீர் சந்நிதியிலே நில்லா,—அடியேற்குக் கண் இன்று - அடி யேனுக்குச் சுதந்திரமாகக் காணும் அறிவுமில்லையாம்; அப்படியிருக்க,—

இருள் கண்டவாறு என்கொல் எந்தாய் - என்னுடைய பிதாவே அடியேன் அம்மலமாகிய வஞ்ஞானத்தை அறிந்தபடி யெப்படி,—மருள் கொண்ட மாலையா - மருளாகிய பண்ணை வண்டுகளிருந்து பாடப்பட்ட மாலையினை யுடையவரே,—வெண்ணெய் வாழ் மன்னவா - திருவெண்ணெய்நல்லூரிலே யெழுந்தருளியிருக்கின்ற அரசரே,—என்னுடைய மால் - அடியேனுக்குண்டான மயக்கத்தை,—ஐயா - ஐயரே,—மாற்ற மதி - போக்கத்தக்கதாகத் திருவுள்ளத்திலே அடைத்தருளும் என்க.

இதனானே, ஆன்மா பரமசுகத்திலே அழுந்துமிடத்தே இதுவரையும் மலசம்பந்தத்தினாலேயன்றோ சுகத்தைப் பெறாதிருந்தோமென் றனுமானித் தறிந்தது பெறப்பட்டது. (௫)

இங்ஙனம் பாசதரிசனஞ் சொல்லிப் பசுதரிசன மெப்படியென்னும் வினா மேலருளிச்செய்கின்றார்.

நேரிசையாசிரியப்பா.

மதிநுதல் பாக னாகி கதிதர
வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்தென்
னுளம்வெளி செய்துன் னளவில் காட்சி
காட்டியெற் காட்டினை யெனினே நாட்டியெ
னுண்மையும் பெருமையு நுவலி னண்ணல்
பாதாள சத்தி பரியந்த மாக
வோதி யுணர்ந்த யானே யேக
முழுதுநின் றனனே முதல்வ முழுதும்
புலன்கடைப் பூழை நுழைந்தனன் கலங்கி
யாங்கைந் தவத்தையு மடைந்தன னீங்கிப்
போக்கு வரவு புரிந்தனன் றூக்கி
யெவ்விடத் துண்மையு மிவ்விடத் தார்தலுஞ்
செல்லிடத் தெய்தலுந் தெரித்த மூன்றினு
ளொன்றெனக் கருளல் வேண்டு மென்று
மில்ல திலதா யுள்ள துளதெனுஞ்
சொல்லே சொல்லாய்ச் சொல்லுங் காலைச்
சிறுத்தலும் பெருத்தலு மிலவே நிறுத்தி
யானை யெறும்பி னனது போலெனின்
ஞான மன்றவை காய வாழ்க்கை
மற்றவை யடைந்தன வுளவெனி னற்றன்று
விட்ட குறையி னறிந்து தொன்று
தொட்டு வந்தனவென வேண்டு நட்ட
பெரியதிற் பெருமையுஞ் சிறியதிற் சிறுமையு
முரியது நினக்கே யுண்மை பெரியோ
யெனக்கின் றாகு மென்று
மனக்கினி யாயினி மற்றது மொழியே.

(இ-ள்.) மதிநுதல் பாகனாகி - சந்திரனைப்போலத் திருநெற்றியினையுடைய பரமேசுவரியை யொருபாகத்திலே வைத்த தேவரீர்,—

கதிர வெண்ணெய்த் தோன்றி - அடியேனுக்கு வீடுபேறு தருதற் பொருட்டுத் திருவெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளி,—

நண்ணி உள் புகுந்து - அடியேனிடத்திலே வந்துபொருந்தி,—

என் னுளம் வெளிசெய்து-அடியேனிடத்துண்டாகிய அஞ்ஞானத்தை நீக்கிச் சிவஞானத்தைப் பிரகாசிப்பித்து,—

உன் அளவில் காட்சி காட்டி - ஆன்மபோதத்தான் அளவுபடுத்த வொண்ணாத உன்னுடை வியல்பினையும் அடியேனுக்குத்தரிசனப்படுத்தி,—

என் காட்டினை எனினே - அடியேனுடைய வியல்பினையுந் தரிசனப் படுத்தினையானாலும்,—

நாட்டி என் நுண்மையும் பெருமையும் நுவலின் - தேவரீ ரறுதிப்படு த்தி யருளிய அடியேனுடைய நேர்மையையும் மிகுந்த வியாத்தத்தையுஞ் சொல்லுமிடத்து,—

அண்ணல் பாதாளசத்தி பரியந்தமாக - பெருமையிற்சிறந்தவரே பாதாளசத்தி முடிவாக,—

ஓதி உணர்ந்த யானே ஏக முழுதும் நின்றனனே - நூல்களைக் கற் றறிந்த அடியே னறிவுசென்றறியப்பட்ட விடமெல்லாம் அடியேன்றானே முழுவதும் வியாத்தமாய் நின்ற துண்டே,—

முதல்வ - சர்வான்மாக்களுக்கும் ஒருமுதலாக நின்றுணர்த்துகிற கர்த்தாவே,—

முழுதும் - அப்படி யோதியுணர்ந்த விடமெங்கும் அடியேன் வியாத் தமா யிருக்கச் செய்தேயும்,—

புலன்கடைப் பூழை நுழைந்தனன்-ஒன்றை யுணருமிடத்துச் சோத் திராதிகளாயுள்ள அற்பத் துவாரங்களாகிய புலன்களோடுங் கூடி அறிந் தேன். அன்றியும்,—

கலங்கி ஆங்கு ஐந்தவத்தையும் அடைந்தனன் - அடியேனறிகிற வறி வையும் விட்டு மயங்கிய விடத்தே சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீத மென்னப்பட்ட வைந்தவத்தையும் அடைந்து நின்றேன். அன்றியும்,—

நீங்கிப் போக்கு வரவு புரிந்தனன் - அப்படிக்கூடி வாதனைசெய்து நிற்கின்ற சரீரத்தையும்விட்டு நீங்கி மீளவுமொவ்வொரு சரீரத்தையும் வந் தெடுப்பதுஞ் செய்தேன்,—

தூக்கி - இவையிற்றைத் திருவுள்ளத்திலே ஆராய்ந்தருளி,—

எவ்விடத்து உண்மையும் - அடியே னோதியுணர்ந்த விடமெங்கும் அடியேன் வியாத்தமாயிருப்பதும்,—

இவ்விடத்து ஆர்தலும் - இப்பொழுதிந்தச் சரீரத்தோடுங் கூடிநின்று சீவிப்பதும் அவத்தைப்படுவதும்,—

செல்லிடத்து எய்தலும் - இச் சரீரதொந்தனைவிட்டுப் புண்ணியபா வங்களுக் கீடாகச் சுவர்க்க நரகங்களிற் சென்றநுபவிப்பதும்,—

தெரித்த மூன்றினுள் ஒன்று எனக்கு அருளல் வேண்டும் - தேவரீர் இவை மூன்று பகுதியினும் அதுவாயிருக்கும் ஆன்மாவி னுண்மையென்று ஒன்றனை யடியேனுக்கு விளங்க வருளிச்செய்யவேண்டும். அப்படியொன்றனைக் கூறுவதென்ன அவை மூன்றுபகுதியு மான்மாவுக்குடைய தன்றோ வென்று அருளுவீரானால்,—

என்றும் இல்லது இலதாய் உள்ளது உளதெனுஞ் சொல்லே சொல்லாய்ச் சொல்லுங்காலே - எக்காலத்தும் ஒவ்வொன்றினியல்புகளைக் கூறுமிடத்து இல்லாத தில்லாததே உள்ளதுள்ளதேயென்று எடுத்துக்கூறுகின்ற சொல்லே அறுதிப்பட்ட சொல்லாகக் கூறுமிடத்து,—

சிறுத்தலும் பெருத்தலும் இலவே - ஒரு முதலாயிருக்கப்பட்ட வான்மா ஓரவதாரத்தி லணுவாகச் சிறுத்தும் ஓரவதரத்தில் மகத்தாகப் பெருத்தும்வர வழக்கில்லையே. அதுநிற்க,—

நிறுத்தி யானை எறும்பி னுனதுபோல் - அப்படிச் சிறுத்தும் பெருத்தும் வாரா தெஞ்ஞான்று மொருதன்மையாகிய வியாத்தமாய் நிற்கச்செய்தேயும் யோனிசம்பந்தஞ்செய்து அதுவதுவாய் யானையாய்நின்ற வான்மா வெறும்பானுற்போலிருக்கும்,—

எனின் - என்று தேவரீ ரருளிச்செய்யில்,—

ஞானம் அன்று அவை காய வாழ்க்கை - தேவரீ ரருளிச்செய்தது அடியேன்கேட்ட வறிவன்று சரீரத்தின் வழக்கைச் சொல்லலாம்,—

மற்றவை அடைந்தன உள - அதனை நாமவ்வாறு கூறியதும் அறிவாயுள்ள வான்மாக்கள் கன்மத்துக்கேற்ற வொவ்வொரு சரீரங்களோடுங்கூடினுல்அவ்வவற்றிற்குத்தக்கதாகஅறிவுசீவித்துநிற்குமென்றேசொன்னேம்,—

எனின் - என்றருளிச்செய்யில்,—

அற்றன்று - அத்தன்மைத்தன்று,—

விட்ட குறையின் அறிந்து தொன்றுதொட்டு வந்தன என வேண்டும் - அவ்வாறு கூடின யோனிக்குத்தக்க வறிவாயிருக்குமேயாயின் முன்னேயெடுத்து விட்ட யோனிகளை இன்னதின்னதென்றடியேனறியவேண்டும்; அப்படியன்று கூடினயோனிக்குத் தக்கதாக ஆன்மா வறிந்து சீவிக்குமென்று நாங்கூறியது அவ்வவ்வவதரந்தோறு மெடுக்கப்பட்ட சிறிய யோனிக்கும் பெரியயோனிக்குந்தக்க வறிவாக வறிந்து சீவிப்பதா யிருக்குமென்று தேவரீ ரருளிச்செய்யில்,—

நட்ட பெரியதிற் பெருமையுஞ் சிறியதிற் சிறுமையும் உரியது நினக்கே உண்மை - தேவரீர் கூடினதின்றன்மையென்று நாட்டப்பட்ட பெரிய யோனிக்குத் தக்கதாகப் பெரியவறிவுஞ் சிறிய யோனிக்குத் தக்கதாகச் சிறியவறிவும் வருகிற சுதந்திரம் அணுவுக்கணுவும் மகத்துக்கு மகத்துமா யிருக்கின்ற தேவரீருக்கே யுள்ளது,—

பெரியோய் - மகத்தாயிருக்கப்பட்டவரே,—

எனக்கு இன்றாகும் - அந்த வழக்கு அடியேனுக்கில்லையாம்,—

என்றும் மனக்கினியாய் - எஞ்ஞான்று மென்மனத்துக் கினியையாக வுள்ளவரே,—

இனி மற்றது மொழியே - இனியாகிலும் அடியேன் முன்னேவினய வினவுக்கு விடையருளிச் செய்யவேண்டும் என்க.

இதனானே, ஆன்மாவினியல்பு படிகம்போலடுத்ததின்றன்மையாய் இருக்குமென்பதும் வசிப்பைப்பற்றின வியாபகமென்பதும் அதுவதுவாய் நிற்பதென்பதும் பெறப்பட்டன. (௬)

இங்ஙனஞ் சொல்லப்பட்ட வான்மா வவத்தைப்படுமிடத்து ஓரவத்தையைக் கண்டதொழிய மற்றுள்ளவவத்தைநான்கு மறியப்பட்ட தில்லையேயென்னும் வினா மேலருளிச்செய்கின்றார்.

நேரிசைவெண்பா.

மொழிந்த வவத்தை முதலடியே னின்றாங்
கொழிந்தன நான்கு முணர—விழிந்தறிந்
தேறிற்றிங் கில்லை யெழில்வெண்ணெய் மெய்த்தேவே
தேறிற்றென் கொண்டு தெரித்து.

(இ-ள்.) மொழிந்த அவத்தை - சொல்லப்பட்ட அவத்தைகளில்,—முதல் அடியேன் நின்று - முதலவத்தையாகிய சாக்கிரத்திலே அடியேனின்றும்,—ஆங்கு ஒழிந்தன நான்கும் - மற்றுண்டான சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீத மென்னப்பட்ட நான்கவத்தையிலும்,—உணர இழிந்து அறிந்து ஏறிற்று இங்கு இல்லை - அடியேனறியும்படி ஒவ்வொன்றில் இறங்கினதுமில்லை பின்னும் அறிந்து இவ்விடத்தில் ஏறியதுங் கண்டதில்லை,—எழில் வெண்ணெய் மெய்த்தேவே - அழகிய திருவெண்ணெய் நல்லூரையுடைய மெய்கண்டநாதரே,—தேறிற்று என்கொண்டு தெரித்து - அவ்வவத்தை நான்கு முண்டென்று எந்தப்பிரமாணங் கொண்டறிந்து தெளிந்தது (அருளும்) என்க.

இதனானே, ஆன்மா பிறிந்திடவைந்தவத்தை பெருகியமலத்தாற் பேணியுறு மாகையாலே சுத்ததத்துவங்க ணீங்கினவிடத்திலே ஐந்தவத்தையும் படுமென்பது பெறப்பட்டது. (௭)

இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஆன்மா வொன்றுண்டென்பதைத்தரிசித்த வழியேதென்னும் வினா மேலருளிச்செய்கின்றார்.

நிலைமண்டலவாசிரியப்பா.

தெரித்ததென் கொண்டெனை யுருத்திர பசுபதி
செடிய னேனையு மடிமை செய்யப்
படிவங் கொண்டு வடிவுகாட் டில்லாப்
பெண்ணை யாளும் வெண்ணை மெய்ய
வவத்தையிற் றெரித்தன ஞயி னவத்தை
தெரித்தாங் கிருத்தலு மிலனே திருத்துங்
கால முதலிய கருவி யாயின்
மாலும் பிரமனும் வந்தெனை யடையா
ரோதுங் காலை யொன்றையொன் றுணரா
சேதந மன்றவை பேதைச் செயலிச்
சேதந வானாற் செயல்கொள வேண்டுநற்
போத மிவற்றைப் புணர்வதை யறியேன்

கருவித் திரளினுங் காண்பதோ றொன்று
யொருவுவ தறியே னுணர்வில னுதலி
னிற்கொடு கண்டன னாயி னெற்குக்
கருவி யாயினை பெருமையு மிலவே
யானே பிரமங் கோனே வேண்டா
வின்னுங் கேண்மோ மன்ன நின்னின்
முன்ன மென்ற னுணர்வில னுதலி
னென்னைக் காண்பினுங் காண்பல காணு
துன்னைக் காண்பினுங் காண்பல வுன்னோ
டொருங்கு காண்பினுங் காண்பல வருந்துணை
கண்ட வாறே தென்னது கண்ணே
யண்ட வாண வருட்பெருங் கடலே.

(இ-ள்.) உருத்திர பசுபதி - உருத்திரமூர்த்தியே பசுவுக்குப்பதியாய் நிற்பவரே,—

செடியனேனையும் - முடலை யாக்கையோடுங்கூடிச் சநநமரண துக்கத்திற் கிடந்தழுந்துகின்ற வென்னையும்,—

அடிமைசெய்யப் படிவங்கொண்டு - தேவரீர் திருவடிக் குரித்தாக்கிக் கொள்ளவேண்டி அடியேனைப்போல வடிவெடுத்துக்கொண்டு,—

வடிவு காட்டில்லாப் பெண்ணை யாளும் வெண்ணை மெய்ய - தேவரீருக்குள்ள வுண்மைவடிவை யொருவருக்குங் காட்டாது பெண்ணையாற்றை யாட்சியாகவுடைய திருவெண்ணெய்நல்லூரிலே யெழுந்தருளிய மெய்கண்டதேவரே,—

தெரித்தது என்கொண்டு எனை - அடியேனென்று ஒரு முதலுண்டென்பதை யறியப்பட்டது ஏது பிரகாரமென் றருளிச்செய்யவேண்டும்,—

அவத்தையில் தெரித்தனன் ஆயின் - சாக்கிராதி பஞ்சாவத்தைப்பட்டுவருகையினாலே அதுகொண்டே அடியேனென்றொரு முதலை யறியப்பட்டாயென்றருளிச் செய்வீராகில்,—

அவத்தை தெரித்தாங்கு இருத்தலும் இலனே - அவ்வவத்தையும் இன்னதென்று கண்டு நீக்கிக்கொண்டேனுமில்லை,—

திருத்துங் காலமுதலிய கருவியாயின் - அவ்வாறு அவ்வவத்தையின் மறைப்பை நீக்குவது காலநியதி முதலிய கருவிகளென் றருளிச் செய்வீராகில்,—

மாலும் பிரமனும் வந்து எனை அடையார் - அப்பொழுது சிருட்டிக்குந் திதிக்குங் கர்த்தாவாகிய பிரமாவும் விஷ்ணுவும் அடியேனைக்கூடி நின்றுணர்த்துவதில்லையாம். அன்றியும்,—

ஓதுங்காலை ஒன்றை ஒன்று உணரா - அக்கருவிகளினியல்பைக் கூறுமிடத்து ஒருகருவியை மற்றொருகருவி யறியாது. அன்றியும்,—

சேதனம் அன்று அவை பேதைச்செயல் - அக்கருவிகள் அறிவுள்ளதல்ல அறியாமையாயிருப்பதோர்செயல் அப்படியன்று ஆன்மா அறிவா

யிருப்பதுகொண்டு அக்கருவிகளோடுங்கூடில் அவை சேட்டைப்படுமென்றருளிச்செய்யில்,—

இச்சேதனவானுற் செயல்கொள வேண்டும் நற்போதம் இவற்றைப் புணர்வதை அறியேன் - அவ்வாறு அடியேன், அறியும் பகுதிக்குரியவனுமாய் அக்கருவிகளின் பயனைக் கொள்ளத்தக்கவனுமா யிருக்கில் அடியேனுடைய வறிவு அக்கருவிகள் கூடுவதை யறிகின்றதில்லை. அன்றியும்,—

கருவித்திரளினுங் காண்பது ஒன்ருய் - அக்கருவிகளெல்லாங்கூடின சாக்கிரத்தானத்திலுஞ் சத்தாதிவிடயங்களை யறியுமிடத்து ஒவ்வொன்ருக வறிவதொழிந்து ஐந்தையு மொக்கவறிவதில்லை. அன்றியும்,—

ஒருவுவது அறியேன் உணர்விலனுதலின் -அவ்வாறு நின்று சீவிக்கின்றவவதரத்து அக்கருவிக ணீங்குவதையு மறிகின்றேனில்லை அறிவில்லாதவனுகையாலே, அவ்வாறு ஒரோவொன்றினை யறியுமிடத்தும் நீயாகத் தனித்தொன்றையுமறியமாட்டாய்நாமறிவித்தாலறிவையென்றருளிச்செய்யில்,—

நின்கொடு கண்டனுயின் எற்குக் கருவியாயினை பெருமையும் இலவே - அவ்வாறு அடியேனறிவதெல்லாந் தேவரீ ரறிவித்தா லறிவேனுமாகில் அப்பொழுது தேவரீரை யடியேனுக்குக் கருவியென்று சொல்லப்படும் கர்த்தாவென்கின்ற பெருமையுந் தேவரீருக்கில்லையாம். ஆகையாலே,—

யானே பிரமங் கோனே வேண்டா - அடியேன்றானே கர்த்தாவென்று சொல்லப்படும், தேவரீரை யடியேனுக்குக் கர்த்தாவென்ன வேண்டுவதுமில்லை; அதுவன்றியும்,—

இன்னுங் கேண்மோ மன்ன - அரசரே அடியேன் விண்ணப்பஞ்செய்யத்தக்க தின்னமு மொன்றுண்டு அதுவேதென்று தேவரீர் கேட்டருளுவீராகில்,—

நின்னின் முன்னம் என்றன் உணர்விலன் ஆதலின் - அப்படித்தேவரீரறிவிக்க அடியேனறிந்தேனுமாகில் அங்ஙனநின்றறிவிக்கின்ற தேவரீரையெதிர்ப்பட்டுநின்று இதுவன்றோ நம்மை யறிவிக்கின்ற முதலென்று அறியமாட்டுகிறே னில்லை, அடியே னறிவில்லாதவனுகையினுலே ; என்னவேயிரண்டாய் நிற்கலாகாதென்பது கருத்து,—

என்னைக் காண்பினுங் காண்பு அல காணுது உன்னைக் காண்பினுங் காண்பு அல உன்னேடு ஒருங்கு காண்பினுங் காண்பு அல - இரண்டாய் நின்றடியேனை அறியவென்றுலும் அறியப்படும் பகுதியுமில்லை. தேவரீரை அறியவென்றுலும் அறியப்படும் பகுதியுமில்லை. தேவரீரோடு அடியேனுங் கூடி அறியவேண்டுமென்றுலும் அறியப்படும் பகுதியுமில்லை,—

அருந்துணை கண்டவாறு ஏது எனது கண்ணே அண்டவாண அருட்பெருங்கடலே - அடியேனுக்கு அரியதுணையாயிருப்பவரோ, அடியேனுக்கு அறிவாகிய கண்ணுயிருப்பவரோ, தேவர்கட்கும் கர்த்தாவா யிருப்பவரோ, அருளமுத வெள்ளத்தை நின்னடியவர்க்குக் கொடுத்தருளுகிற சமுத்திரமாயிருப்பவரோ, என்னைத் தரிசித்தது ஏது பிரகாரங்கொண்டு என்க.

இதனுனே, ஆன்மா கிருபையே தாற்பரியமாய்த் திருமேனிகொண்டு தனக்குச் சுதந்திரமில்லையென்பதை அறிந்து தான் அந்த ஞானமாய் நிற்கவே தன்னைத்தரிசிக்கலாமென்பது பெறப்பட்டது. (அ)

இங்ஙனஞ் சொல்லப்பட்டு வருகின்ற வான்மா மூலாதாரத்திலே யொடுங்கி யதீதப்பட்டுக் கிடக்கு மவதரத்து உணரு முறைமை எப்படியென்னும் வினு மேலருளிச்செய்கின்ருர்.

நேரிசைவெண்பா.

கடலமுதே வெண்ணெய்க் கரும்பேயென் கண்ணே
யுடலகத்து மூலத் தொடுங்கச்—சடலக்
கருவியா தாங்குணர்த்தக் காண்பதுதா னென்னை
மருவியா தென்றுரைக்க மன்.

(இ-ள்.) கடல் அமுதே வெண்ணெய்க் கரும்பே-சமுத்திரத்திலுண்டாக்கப்பட்டவமுதம்போலவு மினியவரே திருவெண்ணெய்நல்லூரையுடைய கரும்புபோலவு மினியவரோ,—என் கண்ணே - அடியேனுக்குக் காட்டாயிருக்கப்பட்ட கண்போன்றவரோ,—உடலகத்து மூலத்து ஒடுங்க - அடியேன் சரீரத்துக்குள்ளே மூலாதாரத்திலே யொருகருவிகளுங் கூடாமல் அதீதப்பட்டுக் கிடக்கின்றவவதரத்து,—சடலக் கருவியாது ஆங்கு உணர்த்த-உணரும்படி சரீரத்திலேகூட்டமாக நின்றுணர்த்தின கருவி எது,—காண்பது தான் என்னை மருவி - அடியேன் எதனைக்கூடி எப்படி அறிகின்றது,—யாதென்று உரைக்கமன் - தேவரீர் அடியேனுக்கு இதுவென்றுவிளங்க வருளிச்செய்யவேண்டும் என்க.

இதனுனே, ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் வித்தியாதத்துவம் ஏழும் சிவதத்துவம் ஐந்தும் முறையே போககாண்டமென்றும் போக்கியகாண்டமென்றும் பிரேரககாண்டமென்றும் பெயர்பெற்று ஆன்மதத்துவம் உட்கருவியும் புறக்கருவியுமாய்த் தேகமாய்ப்பொருந்தச் சிவதத்துவங்கள் கலாதிகளைப்பிரேரித்து அறிவிக்குமென்பது பெறப்பட்டது. (கூ)

இங்ஙனஞ் சரீரதொந்தனைப்பட்டு நிற்கும் அடியேனுக்குத் தேவரீர் தீக்ஷாக்கிரமங்களினுலே பாசக்ஷயம் பண்ணியிருக்கவும் அடியேன் மீள மலமாயை கன்மங்களோடு தொந்தித்து நிற்கைக்கு வழியேதென்னும் வினு மேலருளிச்செய்கின்ருர்.

நேரிசையாசிரியப்பா.

மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை
யங்கிய மாக்கி யருள்வழி யதனு
லென்னுட் புகுந்தனை யெனினே முன்னைத்
திரிமலந் தீர்த்த தேசிக நின்னே
டொருவுத லின்றி யுடங்கையே யாகும்
பெருநிலை யாகல் வேண்டு மருவிடு
மும்மல மதனு லெம்முனின் றிலையெனி
னம்மலத் திரிவுஞ் செம்மலர்த் தாணிழற்
சேர்தனு மிலவாய்ச் சார்பவை பற்றிப்
பெயர்வில னுகும் பெரும தீர்வின்
றமைந்த கருமத் தியைந்தவை யல்லது
சமைந்தன விலவெனச் சாற்றின மைந்த
மாயையங் கன்ம மாமல மூன்று
மாயா தாகவே யார்ச்சக மாயையி

னுற்பவந் தீரா தொழுகுமொன் றென்றி
னிற்சம மாயி னல்லது நிற்பெற
லில்லென மொழிந்த தொல்லறந் தனக்கு
மேயா தாகு நாயே னுளத்து
நின்றனை யென்பனோ நின்றிலை யென்பனோ
பொன்றிய பொன்றிற் றிலமல மென்பனோ
வொன்றினை யுரைத்தருண் மன்ற குன்றாப்
பெண்ணைப் புனல்வயல் வெண்ணெக் கதிபதி
கைகண் டலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண் டென்வினை வேரறப் பறித்த
மெய்கண்ட தேவே வினையிலி
ம்மைகொண்ட கண்ட வழுவிலென் மதியே.

(இ-ள்.) மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை அந்நியமாக்கி - அநாதியே அடியேனோடுங்கூடி நிலைபெற்றுவரும் கன்மமாகிய புண்ணியபாவங்கள் சமமாகத் துலையொத்தவவதரத்து அடியேனோடுங் கூடிய மலங்களைத் தேவரீர் தீக்ஷாக்கிரமங்களினாலே வேறுபடுத்தி,—

அருள்வழி யதனால் என் னுள் புகுந்தனை யெனினே-தேவரீர் அநுக்கிரகத்தின் முறைமையாலே அடியேனுள்ளத்திலே யெழுந்தருளினீராகில்,—

முன்னைத் திரிமலந் தீர்த்ததேசிக நின்னோடு ஒருவுதலின்றி உடந்தையேயாகும் பெருநிலை ஆகல் வேண்டும் - குருமூர்த்தியே அடியேனுக் காதியாயுள்ள மும்மலங்களையு நீக்கின தேவரீரோடு நீங்காமலொற்றித்துக் கலந்துநிற்கும் பேரின்பமாகிய திருவருட்பிரகாசமுண்டாக வேண்டும்; அது நிற்க, முன்னேயென்னிடத்தில் தேவரீரில்லையாம்,—

மருவிடு மும்மலமதனால் எம்முனின் றிலையெனின்-ஆணவமாயை காமியமென்னு மும்மலங்களினோடும் வாதனைசெய்து நிற்கையினால் அடியேனுள்ளத்திலே தேவரீரெழுந்தருளி யிருப்பதில்லையாமாகில்,—

அம்மலத் திரிவுஞ் செம்மலர்த்தாள் நிழல் சேர்தலும் இலவாய்ச் சார்பவைபற்றிப் பெயர்விலனாகும் பெரும தீர்வு - அம்மலங்களைத் தேவரீர் போக்கினதுமில்லையாய் அடியேனுஞ் சிவந்ததாமரைமலர்போன்ற சீபாதத்திலே வந்து பொருந்தினது மில்லையாய்ப் பிரபஞ்ச வாதனையாலே வந்து பொருந்திய கன்மங்களைப் புசித்து அதனாலே புண்ணியபாவங்களிற் கட்டுப்பட்டுச் சநநமரண துக்கத்தை விட்டு நீங்குகைக்கு வழியில்லாதவனாகும். எம்பிரானே இது நிச்சயம்; அப்படியன்று,—

இன்று அமைந்த கருமத்து இயைந்தவை யல்லது சமைந்தன இலவெனச்சாற்றின் - இப்பொழுது அடியேனெடுத்தவுடலுக் கடுத்த பிராரத்த மநுபவிப்பதொழிய மேலுடலெடுக்கைக்கு ஆகாமியகன்மம் ஏறாதென்றருளிச்செய்யில்,—

அமைந்த மாயேயங் கன்ம மாமல மூன்றும் மாயாது - அடியேனுக்கமைந்த பிராரத்தத்துக்கீடாக வெடுத்தமாயேயமாகிய வுடலுள்ளளவும் அதன் காரணமாகிய மாயை போகாது, மாயையுண்டாகவே கன்மமும் போகாது, அவ்வாறு மாயையுங் கன்மமுமுண்டாகவே ஆணவமல முண்டெனப்படும்,—

ஆக்வே ஆர்ச்சகம் மாயையின் உற்பவந் தீராது ஒழுகும் - ஆக இம் மூன்று மலங்களுமுண்டாகவே ஆகாமியத்தை யார்ச்சித்து மாயையின் தோற்றமாயுள்ள சரீரதொந்தனேவிடாமல் மேன்மேலுந் தொடர்ந்துவரும். அன்றியும்,—

ஒன்றொன்றினிற் சமமாயின் அல்லது நிற்பெறல் இல்லெனல் மொழிந்த தொல் அறந் தனக்கும் ஏயாதாகும் - இருவினையாகிய புண்ணியபாவங்களொன்றுக்கொன்று தம்மிற்சமமாகத் துலையொத்தாலொழியத் தேவரீரை அடியார் பெறுவதில்லையென்று கூறப்பட்டதாகிய சிவசாத்திரத்துத் தன்மமாகிய திருவாக்கும் பொருந்தாது. ஆகையால்,—

நாயேன் உளத்து நின்றனே யென்பனோ நின்றிலே யென்பனோ பொன்றிய பொன்றிற்றில மலமென்பனோ ஒன்றினே உரைத்தருள் மன்ற - அடியேனுள்ளத்துத் தேவரீர் கூடி நின்றீரென்று விண்ணப்பஞ்செய்வனோ கூடி நின்றிலீரென்று விண்ணப்பஞ்செய்வனோ அம்மலங்கள் கெட்டுப்போயினவென்று விண்ணப்பஞ்செய்வனோ கெடாமல் நின்றனவென்று விண்ணப்பஞ்செய்வனோ இவையிற்றிலொன்றைத் தெளிவாக அருளிச்செய்யும்,—

குன்றாப் பெண்ணைப் புனல் வயல் வெண்ணெக்கு அதிபதி - வளப்பம் குறைவுபடாத பெண்ணையாற்றுநீர் பாயப்பட்ட வயல்களையுடைய திருவெண்ணெய்நல்லூருக்குக் கர்த்தாவாயிருக்கப்பட்டவரோ,—

கை கண் தலை வாய் கால் செவி மூக்கு உயர் மெய்கொண்டு என்வினை வேரறப் பறித்த மெய்கண்டதேவே - கரசரணாதி அவயவங்களோடுங்கூடிய திருமேனிகொண்டு அடியேனுக்குண்டாகிய கன்மங்களைக் கிளைப்பறப் பறித்த மெய்கண்டதேவரோ,—

வினையிலி - அவ்வாறு ரூபீகரித்திருக்கச் செய்தேயுங் கன்மதொந்தனையில்லாதவரோ,—

மைகொண்டகண்ட - நஞ்சமாகிய கறுப்பினைத்தரித்த மிடற்றரோ,—

வழுவில் என்மதியே - அடியேனுக்குக் குற்றமற்ற அறிவாயிருக்கப்பட்டவரோ என்க.

இதனுனே, ஒருவருக்கிருவழி தோன்றினவிடத்துச் செல்வானுக்குத்திகைப்புண்டானதுபோலக் கன்மத்துலையொப்பிலே சத்திக்குத் திகைப்புவரும் அதுவே சத்தி தன்தொழில் செலுத்தாதிருத்தலாமென்பது பெறப்பட்டது. (௧௦)

அடியேனறியப்பட்டவெல்லாந் தேவரீர் கூடிநின்றறிவிக்கின்றதாக விருக்கவும் அடியேன் இவ்வஞ்ஞானத்தோடுங் கூடிமயங்கிநிற்கைக்கு வழியேதென்னும் வினு மேலருளிச்செய்கின்றார்.

நேரிசைவெண்பா.

மதிநின்பா லிந்த மலத்தின்பா னிற்க
விதியென்கொல் வெண்ணெய்வாழ் மெய்ய—பதிநின்பால்
வந்தா லிதில்வரத்தில் வந்திரண்டும் பற்றுகிலே
னெந்தா யிரண்டாமா றென்.

(இ-ள்.) மதி நின்பால் - அடியேனுக்குண்டானவறிவு தேவரீர் பகுதியிலே யுண்டானது, அப்படியிருக்கவும்,—இந்த மலத்தின்பால் நிற்க விதி என்கொல் - அடியேன் இம்மலத்தின்பகுதியிலே கூடி மயங்கிநிற்கைக்கு முறைமையேது,—வெண்ணெய்வாழ் மெய்ய-திருவெண்ணெய்நல்லூரிலே யெழுந்தருளிய மெய்கண்டநாதரோ,—பதி நின்பால் வந்தால். - கர்த்தாவா

கியதேவரீரை அடியேன்வந்து கூடினல்,—இதில் வரத்து இல் - இம்மலத்திலேமீளவருகைக்கு வழக்கில்லை,—வந்து இரண்டும் பற்றுகிலேன் - தேவரீரைவந்து கூடினல் அவ்வருளோடும் இம்மலத்தோடும் ஒக்கநிற்றல் அடியேனுக்குண்டாகாது,—எந்தாய் இரண்டு ஆமாறு என் - எந்தையே அடியேனொருவன் தேவரீரோடுங்கூடியறிந்தும் இம்மலத்தோடுங்கூடி யறியாமலுமா யிரண்டோடுங்கூடி அதுவதுவாய் நிற்கைக்கு வழக்கேது என்க.

இதனுனே, அறிவுமிகுத்தவனுமாகாமல் அஃதில்லாத மூடனுமாகாமல் கதிபெற வேண்டுமென்கின்ற நடுவொர்தன்மையாகியவன் தான் பாசத்திடத்தும் பரத்தினிடத்தும் ஆசைபற்றியபொழுது இரண்டிலுமன்றிப் பற்றியவதுவாய் நிற்பனென்பது பெறப்பட்டது. (கக)

தேவரீர் அனவரதமும் உயிர்க்குயிராய்நின் றறிவிக்குமென் றிருக்கையிலே அடியேனேடுமொருகாற்கூடியு மொருகானீங்கியும் வருகைக்கு வழியேதென்று மாணவகன்கேட்கும் வினு மேலருளிச்செய்கின்றர்.

நேரிசையாசிரியப்பா.

எண்டிசை விளங்க விருட்படாம் போக்கி
முண்டக மலர்த்தி மூதறிவருளு
மேதினி யுதய மெய்கண்ட தேவ
கோதி லமுத குணப்பெருங் குன்ற
வென்னி னுர்தனு மகறனு மென்னைகொ
லுன்னி லுன்னி யுனுவிடிற் பெயர்குவ
மென்னு மதுவே நின்னியல் பெனினே
வியங்கோ ளாளனு மாகி யியங்கலு
முண்டெனப் படுவை யெண்டோண் முக்கண்
யாங்கணும் பிரியா தோங்கு நின்னிலையின்
யான்வந் தணைந்து மீள்குவ னுயி
னுற்றுத்துய ருற்றே ரணிநிழ னசைஇ
வீற்று வீற்றெழுதர வேண்டலும் வெறுத்தலு
மின்றிச் சாயைக்கு நன்றுமன் னியல்பே
யனையை யாகுவை நினைவருங் காலை
யிங்கிலை யதனி னேழையேற் கிரங்கி
நின்னை வெளிப்படுத் தொளிப்பை நீயே
லருண்மா றுகும் பெருமவஃ தன்றியு
நிற்பெற் றவர்க்கு முற்பவ முண்டெனுஞ்
சொற்பெறு மஃதித் தொல்லுல கில்லை
யவ்வவ் வமைவுஞ் சோர்வு மயர்வறச்
சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே.

(இ-ள்.) எண்டிசை விளங்க இருட்படாம் போக்கி முண்டகம் மலர்த்தி மூதறிவு அருளும் - எட்டுத்திக்கிலுமுள்ள அந்தகாரத்தைநீக்கி விளக்கஞ்செய்து தாமரைமுகிழையுமலர்த்தும் ஆதித்தனைப்போல, அடியேனை மறைக்கப்பட்ட வஞ்ஞானமாகிய போர்வையைநீக்கி அடியேனிதயகமலத்தையு மலர்வித்து அநாதியாகிய திருவருளையும் அடியேனுக்குக்கடாக்ஷித்தருள,—

மேதினி உதய - பூமியிலே தோன்றியருளின ஞானுதித்தனே,—

மெய்கண்டதேவ - மெய்கண்டதேவரே,—

கோதில் அமுத - குற்றமற்ற அமுதமாயிருக்கின்றவரே,—

குணப்பெருங் குன்ற - குணங்களெல்லாந் திரண்டபெரியமலையே,—

என்னின் ஆர்தலும் அகறலும் என்னைகொல் - எங்கும் பூரணமாயிருக்கின்ற தேவரீர் அடியேனோடும் ஓரவதரத்திலே கூடியும் ஓரவதரத்திலே நீங்கியும் நிற்பதேதது,—

கொல் - ஐயம்,—

உன்னில் உன்னி உறுவிடிற் பெயர்குவம் என்னுமதுவே நின் இயல்புளனினே - அப்படித்தேவரீர் கூடியும் பிரிந்தும் நிற்பது அடியேனினைக்கும் பொழுது கூடியும் நினையாதபொழுது நீங்கியுமிருப்பதே தேவரீருக்கு முறைமையாமென்றருளிச்செய்யில்,—

வியங்கோளாளனுமாகி இயங்கலும் உண்டெனப் படுவை - அப்பொழுது தேவரீர் அடியேனுக்கு ஏவற்றொழில் செய்கிறவருமாய்ப் பூரணமில்லாதபோக்குவரவு செய்யப்பட்ட ஏகதேசியுமாவீரொன்று சொல்லவும்படுவீர்; அப்படியன்று நாம் அசைவறநிற்க நீதானேகூடியும் பிரிந்தும் வருகுவை யென்னில்,—

எண்டோள் முக்கண் யாங்கணும் பிரியாது ஒங்கு நின்னிலையின் யான் வந்து அணைந்து மீள்குவனாயின் - எட்டுத்திருப்புயமு மூன்றுதிருநயனமுமுடைத்தாயெவ்விடமு நீங்காமலுயர்ந்த உம்முடைய பூரணநிலையிலே அடியேன் வந்துகூடி மீளவும் பிரிவேனாகில்,—

ஆற்றுத்துயர் உற்றோர் அணிநிழல் நசைஇ வீற்றுவீற்று எழுதர வேண்டலும் வெறுத்தலும் இன்றிச் சாயைக்கு நன்றுமன் இயல்பே - வழிநடப்பவர் பொடிச்சூட்டினால் வருத்தப்பட்டவவதரத்து அழகிதாகக்குளிர்ந்த நிழலுக்கு ஆசைப்பட்டுச்சென்று வேண்டத்தக்கவிடங்களிலே இருந்திருந்துபோமிடத்து இவர்கள் இங்ஙனம் வந்திருக்கப்பெற்றோமென்கிற பிரியமும் நம்மைவிட்டுப் போயினரொன்கிற அப்பிரியமும் அவ்விருக்ஷத்திற்கு இல்லையானாற்போல, தேவரீருக்குண்டான முறைமையும் நன்று,—

அனையை ஆகுவை நினைவருங்காலை - சர்வஞ்ஞராகிய தேவரீர் இருக்குமவதரத்தும் அங்ஙனமருளிச்செய்தது ஏதாம். விசாரிக்குமிடத்தே அப்படியன்று,நீயுநாமும் போக்குவரவின்றி நின்றநிலையிலே நீ நினைக்கும்பொழுது நாம் பிரகாசித்தும் நீ நினையாதபொழுது மறைந்தும் நிற்போமென்னில்,—

இந்நிலையதனின் எழையேற்கு இரங்கி நின்னை வெளிப்படுத்து ஒளிப்பை நீயேல் - இப்பொழுது இங்ஙன நின்ற நிலைதன்னிற் கொச்சையாகிய அடியேனுக்காகக் கருணைதோன்றித் தேவரீர் எழுந்தருளி மீளவுமறைந்து நிற்பதாயின்,—

அருள் மாறுகும் பெரும - எம்பிரானே தேவரீர் அநுக்கிரகமென்பதற்கு மாறுபாடுண்டாம்,—

அஃதன்றியும் - அதுவன்றியும்,—

நிற்பெற்றவர்க்கும் உற்பவம் உண்டெனுஞ் சொற்பெறும் - தேவரீர் சிபாதத்தை யடைந்தவர்களுக்கும் மீளவும் சநநமுண்டென்கின்ற சொல்லுமுடைத்தாம்,—

அஃது இத்தொல் உலகு இல்லை - அவ்வாறு அநாதிதொட்டுங்கித் தேவரீர் திருவடியைப் பெற்ற பெரியோரொன்று சிலருண்டாகப்போவதுமில்லை; ஆகையால்,—

அவ்வவ் அமைவும் - அந்தந்த நிறைவும்,—

சோர்வும் மயர்வு அற - மிக்கமயக்கமுந் தீரத்தக்கதாக,—

சொல்லில் - தேவரீரருளிச்செய்யில்,—

சொல் எதிர் சொல்லாச் சொல்லே சொல்லுக - அடியேன் மறுத்து விண்ணப்பஞ்செய்யாதபடி அருளிச்செய்தல்வேண்டும்,—

சொல் இறந்தோயே - வாக்குக்கு எட்டாதவரே என்க.

இதனானே, அவ்வவ்விடங்களிலே சிவபிரானிறைந்திருப்பதும் ஆன்மாபொருந்தியிருப்பதும் எப்படியென்ற வினாவுக்கு உடலுமுயிரும் கண்ணுமாதித்தனும் ஆன்மபோதமுங்கண்ணொளியும் போல என்றவிடை பெறப்பட்டது. (கஉ)

இங்ஙனந் தத்துவாதீதராகிய தேவரீர் அடியேனுக்கு இம்மாயா கருவிகளையுண்டாக்கி அடியேன் அவற்றோடுங் கூடியிருந்துங் கூடாமல் நின்றும் வருகைக்கு வினா மேலருளிச்செய்கின்றார்.

நேரிசைவெண்பா.

இறந்தோய் கரணங்க ளெல்லா மெனக்குச்
சிறந்தோ யெனினுமெய்த் தேவே—பிறந்துடனாங்
காயங் கொளவுங் கொளாமனுங் கண்டதுநீ
யாயன்கொல் பாதவத் தற்று.

(இ-ள்.) இறந்தோய் கரணங்களெல்லாம் - கரணாதிகளுக்கெட்டாமல் நிற்கிறவரே,—எனக்குச் சிறந்தோய் எனினும் - எனக்குச்சிறந்தவரோயாயினும்,—மெய்த்தேவே பிறந்து உடனாங் காயங்கொளவுங் கொளாமனுங் கண்டதுநீ - மெய்கண்டதேவரே அடியேன் பிறந்துடனாய் சரீரத்தை மெய்யென்று பொருந்தியிருக்கவும் அதுபொய்யென்றுபொருந்தாமலிருக்கவும்பண்ணினது தேவரீர்,—ஆயன்கொல் பாதவத்து அற்று - இடையன்வெட்டின மரம் பாதிபச்சையும் பாதியுலர்ந்ததும்போல மெய்யாயிருந்தசரீரம் பொய்யென்றறிவித்து நீங்கியு நீங்காமலிருந்ததன்மைத்து என்க.

இதனானே, சரீரத்திலே பொருந்தியிருக்கையிலே காயநீக்கமெப்படி யென்ற வினாவுக்குப் பரமசிவன் சரீரம் பொய்யென்றறிவித்துத் தீக்ஷாக்கிரமங்களினாலே மலங்களைப்போக்கி அருளிலே பொருந்தினபடியால் என்றவிடை பெறப்பட்டது. (கங)

அடியேனுக்குப் புண்ணியபாவங்க ளுண்டென்பதற்கு வழியேதென்னும் வினா மேலருளிச்செய்கின்றார்.

நேரிசையாசிரியப்பா.

அற்றதென் பாச முற்றதுன் கழலே
யருட்டுறை யுறையும் பொருட்சுவை நாத
வேறென் றிருந்த வென்னை யான்பெற
வேறின்மை கண்ட மெய்கண்ட தேவ
ரு விருவினை யென்ப தென்னைகொ லருளிய
மனமே காயம் வாக்கெனு மூன்றி
னிதமே யகித மெனுமிவை யாயிற்
கணத்திடை யழியுந் தினைத்துணை யாகா
காரணஞ் சடமதன் காரிய மஃதா

லாரணங் காம்வழி யடியேற் கென்னைகொல்
செயலென தாயினுஞ் செயலே வாரா
தியமன் செய்திய தற்கெனி னமைவும்
பின்னையின் றுகு மன்னது மிங்குச்
செய்திக் குள்ள செயலவை யருத்தின்
மையலிரி யமற்கு வழக்கில்லை மன்ன
வொருவரோ யமையு மொருவா வொருவற்
கிருவரும் வேண்டா விறைவனு நின்றனை
நின்னது கருணை சொல்லள வின்றே
யமைத்தது துய்ப்பி னெமக்கணை வின்று
முள்ளது போகா தில்லது வாரா
துள்ளதே யுள்ள தெனுமுறை யதனாற்
கொள்ளும் வகையாற் கொளுத்திடு மாயின்
வள்ளன் மையெலா முன்னிட வமையு
மீய வேண்டு மெனும்விதி யின்று
மாயினு மென்னை யருந்துயர்ப் படுத்த
நாயி னேற்கு நன்றுமன் மாயக்
கருமமுங் கரும பந்தமுந்
தெருள வருளு சிவபெரு மானே.

(இ-ள்.) அற்றது என்பாசம் உற்றது உன்கழலே - தேவரீரநுக்கிரகத்தினாலே அடியேனுக்குள்ள பாசம் நீங்கினதும் உமது திருவடியிலே யான் கூடினதுந்தப்பாது,—

அருட்டுறை உறையும் பொருட்சுவை நாத - திருவருட்டுறையாகிய திருவெண்ணெய்நல்லூரிலே யெழுந்தருளி அடியேனுக்கினிய பயனாயுள்ள தலைவரே,—

வேறென்று இருந்த என்னை யான்பெற வேறின்மை கண்ட மெய்கண்டதேவ - தேவரீரைவிட்டு அந்நியமாயிருப்பனென்று கண்டிருந்த வடியேனை அடிமையென்கிற முதலுங்கெடாமற் றேவரீரைவிட்டு அந்நியமாகாத முறைமையுங் கடாக்ஷித்தருளின மெய்கண்டநாதரே,—

இருவினை யென்பது என்னைகொல் - அடியேனுக்குப் புண்ணியபாவமுண்டென்பது ஏது,—

அருளிய மனமே காயம் வாக்கெனும் மூன்றின் இதமே அகிதமெனும் இவையாயில் - தேவரீரருளிச்செய்யப்பட்ட மனத்தினினைவாலும் வாக்கின் சொல்லாலுங் காயத்தின் றொழிலாலு முண்டாகப்பட்ட விருப்பு வெறுப்பினாலே இருவினையாகிய புண்ணியபாவங்களுண்டாமாகில்,—

கணத்திடை அழியுந் தினைத்துணை ஆகா - அப்படியுண்டாகும் நினைவுஞ் சொல்லுந் தொழிலுந் தோன்றினவுடனே அழிந்துபோம் அவையிற் றுக் கொருதினையளவு கண்டிப்பும் இல்லையாம்; அன்றியும்,—

காரணஞ் சடம் அதன் காரியம் அஃதால் - அம்மனவாக்குக்காயங்களாகிய காரணஞ் சடமாயிருப்பதுபோல; அவற்றின் காரியங்களும் சடமேயானால்,—

ஆர் அணங்காம் வழி அடியேற்கு என்னைகொல் - அப்படிச் சடமாருக்குங் காரியங்கள் அடியேன் மேலெடுக்கிற சநநங்களிலேவந்து பொருந்தி

வருந்துகைக்குச் செயலுண்டாம் வழி ஏது அவ்வாறு அக்கன்மங்கள் சடமாயிருந்தாலும் நீ அறிவாயுள்ளவனுகையாலே உன்னோடுகூடுமவதரத்திற் செயலுண்டாயிருக்கும்,—

செயல் எனதாயினுஞ் செயலே வாராது - அவ்வாறு அடியேனுக்குச் செயலுண்டாமாகிலும் அடியேனிச்சைப்படியே முடியக் கண்டதுமில்லை; அன்றியும்,—

இயமன் செய்தி அதற்கு என் - அடியேனுக்குச் செயலுண்டாமாகில் அதற்கு இயமதண்டமுண்டாகச்செய்வதில்லை; அதுவுமன்றி,—

நின் அமைவும் பின்னை இன்றாகும் - அடியேனுக்குச் செயலுண்டாமாயிகில் பின்புதேவரீர் செய்விக்கிறதுமில்லையாய்முடியும்,—

அன்னதும் இங்குச் செய்திக்கு உள்ள செயலவை அருத்தின் - அப்படித்தேவரீர் செய்விக்கிறதும் இப்பொழுது அடியேன்செய்த கன்மத்துக்குத் தக்கபடி மேலைக்குப் புசிப்புமாகில்,—

மையல் இரியமற்கு வழக்கு இல்லை மன்ன - நாயகரே மயக்கமற்ற வியமன் அடியேனைத் தண்டப்படுத்துகைக்கு வழக்கில்லையாம், அப்படியானுலும் நீசெய்ததற்குத்தக்கபடி நாமுஞ்செய்விப்போம் இயமனுந் தண்டப்படுத்துவன் என்னில்,—

ஒருவரோ அமையும் ஒருவா ஒருவற்கு இருவரும் வேண்டா - ஒப்பற்றவரே அடியேனொருவனுக்கு ஒருவரோ அமையும் தேவரீரு மியமனுங்கூடித் தண்டிக்கவேண்டுவதில்லை; ஆகையால்,—

இறைவனும் நின்றனை - தேவரீர் சர்வகர்த்தாவென்கிறதும் இன்றே நின்றது; அதுவேனென்று கேட்டருளுவீராகில்,—

நின்னது கருணை சொல் அளவு இன்றே - தேவரீர் காருண்ணியத்தின் பகுதியை அடியேனுல் அளவுபடுத்தத் தக்கதன்றே, அப்படியிருக்க,—

உள்ளதுபோகாது இல்லதுவாராது உள்ளதே உள்ளதெனும் உரையதனுல் அமைத்தது துய்ப்பின் எமக்கு அணைவு இன்றாம் - அடியேனுக்குண்டாகியகன்மம் போகாது இல்லாதகன்மம் வாராது ஆகையால், ஊழிலே அமைக்கப்பட்டதே யிப்பொழுது முண்டாமென்று தேவரீரருளிச்செய்த திருவாக்கினுல் அடியேனுக் குண்டான பிராரத்தம் புசிப்பதொழிய மேலைக்கு உற்பத்தியாக ஆகாமிய முண்டாகைக்கு வழக்கில்லையே,—

கொள்ளும் வகையாற் கொளுத்திடுமாயின் - பிராரத்தம் புசிக்குமிடத்து ஆகாமிய முண்டாமென் றருளிச்செய்யில்,—

வள்ளன்மையெலாம் உன்னிட அமையும் - தேவரீருக் குண்டாகிய வளப்பாடுகளெல்லாம் நினைந்திருந்தாற் போதும்; அன்றியும்,—

ஈயவேண்டுமெனும் விதி இன்றாம் - அவ்வாறு பிராரத்தம் புசிக்குமிடத்து ஆகாமிய மேறுமாகில், கொடுத்துப் புண்ணியம்பெற வேண்டுமென்று நூல்களை விதிக்கவேண்டுவதில்லையாம்,—

ஆயினும் - அங்ஙனமாயினும்,—

என்னை அருந்துயர்ப் படுத்தக் கருமமுங் கருமபந்தமும் நன்றுமன் [illegible] நா [illegible]ற்றுத் தெருள அருளு சிவபெருமானே-அடியேனுக்கு அரிய துக்கங்களை யுண்டாக்கப்பட்ட கருமமாகிய பண்ணியபாவங்க ளுண்டா

வதும் அப்புண்ணியபாவங்கள் அநுபவிக்கு மிடத்து சநநத்திற் கேதுவாகிய வாகாமிய கருமங்களுண்டாவதும் முற்றுங்கெட நாய்போன்ற வடியேனுக்கு விளங்கவருளிச்செய்தல் வேண்டும் சிவபெருமானே என்க.

இதனானே, புண்ணியபாவங்களின்பகுதி இதுவென்பது பெறப்பட்டது. (௧௪)

இவ்வாறு கூறப்பட்ட கன்மங்களு மடியேனுங் கூடுகைக்கு வழியேதென்று கேட்கும் வினா மேலருளிச்செய்கின்றார்.

நேரிசைவெண்பா.

மானமருஞ் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன
போனவினை தானே பொருந்துமோ—யானதனி
லாவனோ வாக்கா யமலனு நின்னருடான்
றேவனே யாதுக்கோ தேர்.

(இ-ள்.) மான் அமருஞ் செங்கை மதில் வெண்ணெய் வாழ் மன்ன-சீ அத்தத்திலே மறியை ஏந்திய திருமதில் சூழ்ந்த திருவெண்ணெல்நல்லூரிலே யெழுந்தருளியிருக்கின்ற மன்னரே,—போனவினை தானே பொருந்துமோ - முன்சநநத்திலே செய்த புண்ணிய பாவவினை தானேவந்து அடியேனைக் கூடுமோ,—யான் அதனில் ஆவனோ - அடியேனே அவ்வினையைக் கூடுவேனோ,—ஆக்காய்-இவையிரண்டும் இன்றித் தேவரீர் கூட்டிமுடியாத பொழுது,—அமலனும் நின் அருள்தான் தேவனே யாதுக்கோ தேர் - மெய்கண்டதேவரோ நின்மலராகிய வும்முடைய வருள்தான் யாதுக்குண்டானது திருவுள்ளத்திலே கொண்டருளும் என்க.

இதனானே, கன்மமும் ஆன்மாவும் சிவமும் அநாதியென்பதும் அவரவரார்ச்சித்தகன்மத்தைக் கர்த்தாவே கூட்டிமுடிப்பனென்பதும் பெறப்பட்டது. (௧௫)

இவ்வாறு கூறப்பட்ட கன்மங்கள் தேவரீர் தீக்ஷைகளினாலே சுத்திபண்ணியிருக்கவு மீளவும் புசிக்கைக்கு வழியேதென்னும் வினா மேலருளிச்செய்கின்றார்.

நேரிசையாசிரியப்பா.

தேரா துரைப்பன் றெருமா வுளத்தொடு
போரா தருளுதல் பெரியோர் கடனே
நின்னைக் கலப்ப தென்னுண் மையெனின்
நின்னது நேர்மை சொன்மனத் தின்றே
யெழுவகைத் தாதுவி னெழுதுளை யிரண்டும்
பெருமுழைக் குரம்பையிற் பெய்தகத் தடக்கி
நீக்கி யென்றனைப் போக்கற நிறுத்தி
யிச்சை முதலிய வெழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்பது நிற்க
வாக்கு மனமும் போக்குள தறுவுஞ்
சொல்லு நினைவுஞ் செய்யுஞ் செயலு
நல்லவுந் தீயவு மெல்லா மறிந்து
முறைபிற ழாமற் குறைவுநிறை வின்றாய்க்
காலமுந் தேசமு மாலற வகுத்து
நடுவுநின் றருத்தலி னடுவனு குதியே
சான்றோர் செய்தி மான்றிருப் பின்றே
சாலார் செயலே மாலா குவதே
யத்துவா மெத்தி யடங்கா வினைகளுஞ்

சுத்திசெய் தனையே யொத்தகன் மத்திடை
நீங்கின தென்னை யூங்கூழ் வினைகளு
மாங்கவை யருத்துவ தாரைகொ லதனாற்
கரும மருத்துங் கடனது வின்றாந்
தருமம் புரத்தல் பெருமைய தன்றே
கண்ணினுண் மணிய கருத்தினுட் கருத்த
வெண்ணெய் வேந்த மெய்கண்ட தேவ
விடர்ப்படு குரம்பையு ளிருத்தித்
துடைப்பதில் லாவரு டோன்றிடச் சொல்லே.

(இ-ள்.) தோராது உரைப்பன் தெருமரல் உளத்தொடு - மயங்கிய மனத்தோடு சந்நிதியில் ஒருவினா விசாரியாமல் அடியேன் விண்ணப்பஞ் செய்கின்றேன்,—

போராது அருளுதல் பெரியோர்கடனே - பேதையர் விரும்பியதொன்றை விண்ணப்பஞ் செய்தாலுஞ் தள்ளாது விடை கடாக்ஷித்தருளுவது பெரியோர்களுக்குமுறைமையாம் அதுயாதென்றுகேட்டருளுவீராகில்,—

நின்னைக் கலப்பது என் உண்மை யெனின் - தேவரீனாக்கூடி யநுபவிப்பது அடியேனுடைய அற்பபோதமாமென்று தேவரீர் அருளினால்,—

நின்னது நேர்மை சொல் மனத்து இன்றே - தேவரீருடைய நுட்பம் விசாரிக்குமிடத்து வாக்கு மனத்துக்கு எட்டப்பட்டதன்றே,—

எழுவகைத் தாதுவின் எழுதுளை இரண்டும் பெருமுழைக் குரம்பையிற் பெய்துஅகத்து அடக்கி-தோல் இரத்தம் தசை மேதை என்பு மச்சை சுக்கிலம் என்னும் தாதுக்களேழும், கண் மூக்கு செவி உபத்தமென்னும் அற்பத்துவாரங்களேழும், வாய் அபானமென்னும் பெரிய துவார மிரண்டும் ஆகத் துவார மொன்பதுமாயிருக்கின்ற சரீரத்திலே யிட்டு உள்ளே யொடுக்கி வைத்து,—

என்றனைப் போக்கு அற நிறுத்தி நீக்கி - அடியேனை அச்சரீரத்தைவிட்டுப் போகாமல் நிறுத்தியும் அதனை விட்டுப்போ மவதரத்து விடுவிப்பதுஞ் செய்து,—

இச்சை முதலிய எழுப்பி நடத்திடும் விச்சை சாலவும் வியப்பு - அடியேனுடைய இச்சாஞானக்கிரியைகளையும் பிரேரிப்பித்துக்காரியப்படுத்துகின்ற வித்தைபெரிதும் வியக்கற்பாலதாம்,—

அதுநிற்க - அதுநிற்க,—

வாக்கும் மனமும் போக்கு உள தநுவுஞ் சொல்லும் நினைவுஞ் செய்யுஞ்செயலும் நல்லவுந் தீயவும் எல்லாம் அறிந்து - அடியேன் வாக்காற்சொல்வதனாலும் மனத்தானினைவதனாலும் காயத்தாற்செய்வதனாலு முண்டாகப்பட்ட புண்ணியபாவங்களெல்லாந் தேவரீர் திருவுளத்தடைத்தருளி,—

முறை பிறழாமற் குறைவு நிறைவு இன்றாய்க் காலமுந் தேசமும் மால் அற வகுத்து நடுவுநின்று அருத்தலின் நடுவன் ஆகுதியே - அடியேன் செய்துவந்த அடைவுக்குத் தவறுவாராமல் அதற்கு ஏற்றக் குறைவறப் புண்ணியபாவ பலங்களை அநுபவிக்கத்தக்க காலங்களையும் அவையிற்றைப் புசிக்கைக் கிருப்பிடமான தேசங்களையும் மயக்கமற வகுத்துத் தேவரீர் நடுவராகநின்று புசிப்பிக்கையினாலே தேவரீனா நடுவனென்பது முண்டே. ஆகையாலே,—

சான்றோர் செய்தி மான்று இருப்பு இன்றே - நடுவேர்கிய பெரியோர்க ளியல்புக்கு மயக்கமுண்டாகாதே,—

சாலார் செயலே மால் ஆகுவதே - சான்றோரல்லாத அறிவீனர் செயல்களே மயக்கமுண்டாவது. அவ்வாறிருக்க,—

அத்துவா மெத்தி அடங்கா வினைகளுஞ் சுத்தி செய்தனையே - மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகளென்று சொல்லப்பட்ட ஆறுவழியாலு நிரம்பி எஞ்சிக்கிடக்கின்ற கன்மங்களையெல்லாந் தீக்ஷையினாலே தேவரீர் சோதனைசெய்து சுத்திவருவித்ததுண்டே அதுவுண்டென் றருளிச்செய்யில்,—

ஒத்த கன்மத்திடை நீங்கினது என்னை - அடியேனுக்கு இருவினையொப்பிலே போனது யாது,—

ஊங்கு ஊழ்வினைகளும் ஆங்கவை அருத்துவது ஆமாகொல் அதனால் - இவ்விடத்துண்டான வூழ்வினைகள் தேவரீர்செய்யுந் தீக்ஷையினாலே சுத்திசெய்தவிடத்து அக்கன்மங்கள் புசிப்பிக்கையாமா, அதனால்,—

கருமம் அருத்துங் கடனது இன்றும் - மீளவுங் கன்மங்கள் நின்று புசிப்பிக்கைக்கு முறையில்லையாம்; அவ்வாறு புசிப்பிக்குமென் றருளிச்செய்யில்,—

தருமம் புரத்தல் பெருமையதன்றே - தேவரீர் தருமத்தைக் காத்தலென்னும் பெருமை யில்லையென்று விண்ணப்பஞ் செய்யப்படும்,—

கண்ணினுள் மணிய - கண்ணுக்கு மணிபோலக் காட்டாக வுள்ளவரோ,—

கருத்தினுட் கருத்த - அறிவுக்கறிவாக வுள்ளவரோ,—

வெண்ணெய் வேந்த - திருவெண்ணெய்நல்லூருக்குக் கர்த்தாவாக வுள்ளவரோ,—

மெய்கண்ட தேவ - மெய்கண்டநாதரோ,—

இடர்ப்படு குரம்பையுள் இருத்தித் துடைப்பது இல்லா அருள் தோன்றிடச் சொல்லே - துக்கத்துக் கேதுவாயுள்ள சரீரத்துள்ளே அடியேனையிருத்திவைத்து அடியேனுக்குண்டான கன்மங்களைத் துய்ப்பித்துப் போக்காத அநுக்கிரகத்தை விளங்க அருளிச்செய்யும் என்க.

இதனானே, சிவனும் ஆன்மாவும் எக்காலமும் இடைவிடாம லிருக்கையிலேயும் ஆன்மா மலத்திலே பற்றினபடியினாலே சிவனிடத்திலே கூடிநின்றும் பற்றில்லையாகையால் அச்சிவன் பெத்தத்திலும் ஒத்திருப்பனென்பது பெறப்பட்டது. (கசு)

சர்வான்மாக்களுந் தேவரீருக்கடிமையா யிருக்கையிலேயுஞ் சிலர்க்குத் திருவருள் கடாக்ஷித்தும் சிலர்க்குக் கடாக்ஷியாமலு மிருப்பானேனென்று கேட்கும் வினா மேலருளிச்செய்கின்றார்.

நேரிசைவெண்பா.

சொற்றொழும்பு கொள்ளநீ சூழ்ந்ததுவு நிற்செயல்கண்  
மற்றவர்க ணின்னோக்கின் மாய்ந்தவுயிர்க்—குற்றங்  
கொளித்தியாங் கைய வுயர்வெண்ணெய் நல்லூர்க்  
குளித்தமதுக் கொன்றையெங் கோ.

(இ-ள்.) சொல் தொழும்பு கொள்ளநீ சூழ்ந்ததுவும் - சர்வான்மாக்களுந் தேவரீருக்கடிமையாக விருக்கவுஞ் சிலர் தேவரீர் திருவருளைப் பெறத்

தக்க வடிமைத் திறங்கள் செய்துவருமுபாயங் கொடுத்தருளினீர்,—நின் செயல்கள் மற்றவர்கள் - அவரை ஒழிந்த பெத்தான்மாக்களையுந் தேவரீர் சேட்டைப்படுத்துகையினாலே செயற்பட்டு வருபவர்களே; இவ்வாறிரண்டு வகைப்பட்ட ஆன்மாக்களுந் தேவரீராலே செயற்பட்டு வருமிடத்தும்,—நின் நோக்கின் மாய்ந்த உயிர்க்கு உற்று அங்கு - தேவரீர் திருக்கண் சாத்துதலினாலே செயலறுகைவந்த ஆன்மாக்களுக்கு அங்கே அநுக்கிரகஞ்செய்து பிரகாசித்துநின்றும்,—ஒளித்தி ஆங்கு - மற்றுள்ள பெத்தரிடத்திலே கூடிநிற்குமிடத்து மறைந்துநின்றும் இவ்வாறு வருமுறைமையை,—ஐய - ஐயரோ,—உயர் வெண்ணெய் நல்லூர்க் குளித்தமதுக் கொன்றை எங்கோ - சிறப்பினாலுயர்ந்திருக்கப்பட்ட திருவெண்ணெய்நல்லூரிலே மதுக்களினால் முழுகப்பட்ட கொன்றைமாலையைச் சாத்தி யெழுந்தருளியிருக்கின்ற எந்தலைவரோ,—சொல் - அருளிச்செய்யும் என்க.

இதனானே, சிறப்புவகையாற் கர்த்தாவை ஆண்டவனென்றறிந்து இரண்டற்றவன்பினாலே வழிபடுகின்ற ஞானவான்களுக்குத் தயிரினெய்போற்றோன்றியும் ஆண்டவனடிமை யென்றறியாத பெத்தான்மாக்களுக்குப் பாலினெய்போலத் தோன்றாதும் நிற்பனென்பது பெறப்பட்டது. (௧எ)

இவ்வாறு உயிர்க்குயிராய்நின்று காரியப்படுத்துஞ் சிவன் பெத்தத்தில் மறைந்துநின்று காரியப்படுத்து முறைமையும் முத்தியிற் பிரகாசித்துத் தாம் மேலிட்டுநின்று உபகரிக்குமுறைமையும் மேலருளிச்செய்கின்றார்.

நேரிசையாசிரியப்பா.

கோலங் கொண்ட வாறுண ராதே
ஞாலங் காவல னியானெனக் கொளீஇப்
பொய்யை மெய்யெனப் புகன்று வையத்
தோடாப் பூட்கை நாடி நாடா
வென்னுட் கரந்தென் பின்வந் தருளி
யென்னையுந் தன்னையு மறிவின் றியற்று
மென்னதி யானெனு மகந்தை யுங்கண்
டியாவரி யாவையு மியாங்கணுஞ் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்த்து
மிக்க போகம் விதியால் விளைத்திங்
கெற்பணி யாளா யெனைப் பிரியாதே
யோடி மீள்கென வாடல் பார்த்திட்
டென்வழி நின்றன னெந்தை யன்னோ
வருண்மிக வுடைமையி னருட்டுறை வந்து
பொருண்மிக வருடலும் பொய்ப்பகை யாதலுங்
கைகண்டு கொள்ளெனக் கடலுல கறிய
மெய்கண்ட தேவ னெனப்பெயர் விரீஇத்
தன்னுட் கரந்து தான்முன் னாகித்
தன்னதுந் தானுமா யென்னையின் றாக்கித்
தன்னையு மென்னையுந் தந்து தனது
செய்யா மையு மெனதுசெய லின்மையு
மெம்மான் காட்டி யெய்த
லம்மா வெனக்கே யதிசயந் தருமே.

(இ-ள்.) கோலங் கொண்ட ஆறு உணராதே ஞாலங் காவலன் யானெனக் கொளீஇ - துக்கத்துக் கேதுவாயிருக்கப்பட்ட சரீரத்தை யெடுத்

தோமே யென்பதை விசாரியாமல் பூமிக்கு அரசனாயிருப்பவனா மென்று கருதிக்கொண்டு,—

பொய்யை மெய்யெனப் புகன்று - அசத்தியமா யிருக்கப்பட்ட தேகாதிப் பிரபஞ்சத்தைச் சத்தியமென்று சொல்லிக்கொண்டு,—

வையத்து ஓடாப் பூட்கை நாடி நாடா என்னுட் கரந்து - பிரபஞ்ச வியாத்திபண்ணுவதே மேற்கோளாகச் செய்து நமக்கொரு கர்த்தா வுண்டென்று விசாரியாத எனக்குள்ளே மறைந்துநின்று,—

என்பின் வந்தருளி - நான்செய்யுஞ் செயலுக்கெல்லாம் ஒத்தொழுகி நின்று,—

என்னையுந் தன்னையும் அறிவின்று இயற்றும் என்னது யானெனும் அகந்தையுங்கண்டு - நாம் ஓரடிமையென்றும் தாமொரு நாயனென்றும் அறியாமற் செய்யும் யானெனதென்னும் அகந்தையுங்கண்டு,—

யாவர் யாவையும் யாங்கணுஞ் சென்று - உயர்திணை அஃறிணையாகிய யோனிபேதங்களினும் பூமியந்தரசுவர்க்கமென்னும் உலகங்களினும் என்னோடொக்கச்சென்று,—

புக்குழிப் புக்கு - நான் சென்று சநிக்கிற விடங்களிலே தானுமொக்கப்புகுந்து,—

பெயர்த்துழிப் பெயர்த்து - நான் விட்டுப்போகு மிடத்துத் தாமுமொக்கப்பேர்ந்து,—

மிக்க போகம் விதியால் விளைத்து - வெகுவித போகங்களையும் எனக்குள்ள முறைமையின்படி யுண்டாக்கி,—

இங்கு எற்பணி ஆளாய் - இவ்விடத்தென்னை யூட்டி யுறக்கிநிற்கும் பண்ணையாளுமாய்,—

எனைப் பிரியாதே - என்னைவிட்டு நீங்குவதுஞ் செய்யாமல்,—

ஓடிமீள்க என ஆடல் பார்த்திட்டு என்வழி நின்றனன் எந்தை அன்னோ - நான் சநநமரணப்பட்டுப் போக்குவரவுசெய்யும் நாடகத்தையும் பார்த்துத் தம்முதன்மையும் விட்டு என்வசத்திலே நின்றார் என்னுடைய பிதாவாயுள்ளவர்; இஃதாச்சரியம். இந்நிலைபெத்தம். மேல்முத்தி,—

அருள் மிக உடைமையின் - தமக்குக் கிருபைமிகுந் திருக்கையினாலே,—

அருட்டுறை வந்து - திருவெண்ணெய்நல்லூராகிய திருப்படைவீட்டில் எழுந்தருளி,—

பொருள் மிக அருடலும் - சிவாநுபவப்பொருள் மிகுதியாக அநுக்கிரகித்தலையும்,—

பொய்ப்பகை ஆதலும் - அப்பொருட்பிரபஞ்சமாகிய பொய்யைக் கடிந்து தீர்த்தலையும்,—

கைகண்டு கொள்ளென - பிரத்தியக்ஷமாகக் கண்டுகொள்ளெனக் காட்டியருளி,—

கடல் உலகு அறிய மெய்கண்ட தேவனெனப் பெயர்விரீஇ - சமுத்திரஞ்சூழ்ந்த வையகத்தா ரறியத்தக்கதாக மெய்கண்டதேவனென்கிற திருநாமத்தினையும் பரப்பியருளி,—

தன்னுட் கரந்து தான் முன்னாகி - தம்முடைய பேரறிவினுள்ளே என்னுடைய சிற்றறிவை யடக்கிக்கொண்டு தஞ்செயலே மேலீடாக,—

தன்னதுந் தானுமாய் என்னை இன்றாக்கி - தம்முடைய அருளுந் தாமுமாய் என்னையு மென்னுடைய ஞானத்தோற்றத்தையு மடக்கி,—

தன்னையும் என்னையுந் தந்து - தாமொரு முதலுண்டென்பதுங் கெடாமல் யானொரு முதலுண்டென்பதுங் கெடாமல் எனக்குப் புலப்படவறிவித்து,—

தனது செய்யாமையும் எனது செயல் இன்மையும் - தாஞ் சர்வமுங் காரியப்படுத்தி நிற்குமிடத்துந் தாமொன்றிலுஞ் சுட்டி யறியாமற் றோய்வறநிற்கு முறைமையினையும் நான் சர்வமுஞ் செய்து நிற்குமிடத்தும் என்னாலொன்று முடியாதென்னும் செயலறுதியையும்,—

எம்மான் காட்டி யெய்தல் - எம்முடைய பெரியர் எனக்குத் தரிசனப்படுத்தி நின்ற முறைமையைப் பார்த்தவிடத்து,—

அம்மா எனக்கே அதிசயந் தருமே - மிகவும் எனக்குத்தானே ஆச்சரியத்தையுந் தராநிற்கும் என்க.

இதனானே, பரமசிவன் பெத்தத்தில்மறைந்துநின்று காரியப்படுத்துகின்ற முறைமையும் முத்தியிற்பிரகாசித்துநின்று உபகரிக்கின்றமுறைமையும் பெறப்பட்டது. ()

இவ்வாறு பாசக்ஷயம்பண்ணின ஆச்சரியத்தை மேலருளிச்செய் கின்றார்.

நேரிசைவெண்பா.

தருமா தருமத் தலைநின்றாழ் வேனைக்
கருமா கடல்விடமுண் கண்டப்—பெருமான்
திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேத வனத்தா
னுருவென்ன வந்தெடுத்தா னுற்று.

(இ-ள்.) தரும அதருமத் தலைநின்று ஆழ்வேனை - புண்ணியத்தையும் பாவத்தையுஞ் செய்து பிறவிப் பெருங்கடலிலே கிடந்தழுந்திய வென்னை,—கரு மா கடல் விடம் உண் கண்டப் பெருமான் - கருமைபொருந்திய பெரிய சமுத்திரத்திலே யுண்டாகிய நஞ்சினை அமுதுசெய்தடக்கிய கண்டத்தினையுடைய சிவபிரானே,—திருவெண்ணெய்நல்லூர்ச் சுவேதவனத்தான் - திருவெண்ணெய்நல்லூரிலே சுவேதனப்பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமத்தையுடையவராய்,—உருவென்ன வந்து எடுத்தான் உற்று-பொருந்தி என்னுருவைப்போலத் திருமேனிகொண்டு எழுந்தருளிக் கருணைக்கையால் எடுத்துத் தமது திருவடியாகிய முத்திக்கரையில் வைத்தருளினார் என்க.

இதனானே, பரமசிவன் பாசநிக்கிரகஞ் செய்தருளினமை பெறப்பட்டது. ()

கர்த்தா இவ்வாறு ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளிப் பாசக்ஷயம்பண்ணித் தமது காருண்ணியமாகிய வுண்மைஞானத்தைக் கடாக்ஷித்த முறைமையை வியந்து மேலருளிச்செய்கின்றார்.

நேரிசையாசிரியப்பா.

உற்றவர் பெற்றவர் மற்றவை முற்று
மற்றவர்க் கற்றவ னல்லவர்க் கல்லவ
னந்த மாதி யில்லவன் வந்து
குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்
டிருள்வெளி யாகு மருளினை யறுத்து
வந்து புகுதலுஞ் சென்று நீங்கலு
மின்றி யொன்றாய் நின்றவந் நிலையி
லொன்றா காம விரண்டா காம
லொன்று மிரண்டு மின்றா காமற்
றன்னது பெருமை தாக்கா தாயினு
மென்னது பெருமை யெல்லா மெய்தித்
தன்னை யெனக்குத் தருவதை யன்றியு
மென்னையு மெனக்கே தந்து தன்னது
பேரா னந்தப் பெருங்கட லதனு
ளாரா வின்ப மளித்துத் தீரா
வுள்ளும் புறம்பு மொழிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி யருளிய
மன்ன னெங்கோன் வார்புனற் பெண்ணை
வெண்ணை காவலன் மெய்கண்ட தேவ
னண்ண லருளா லயத்த னண்ணிய
மலமுத லாயின மாய்க்கு
முலக வுயிர்க்கெல் லாமொரு கண்ணே.

(இ-ள்.) உற்றவர் பெற்றவர் மற்றவை முற்றும் அற்றவர்க்கு அற்றவன் - மனைவிமுதலிய சுற்றத்தாரையும் மாதாபிதாக்களையும் தேகாதிகளையும் முற்ற துறந்தவர்க்கு பிரிவற நிற்கப்பட்டவர்,—

அல்லவர்க்கு அல்லவன் - அப்படிச் சர்வவுபாதிகளையும் நீங்காதவர்களுக்கு வேறாய்நிற்கப்பட்டவர்,—

அந்தம் ஆதி இல்லவன் - முடிவுமுதலுமில்லாதவர்,—

வந்து - ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளி,—

குரக்குமனத்துக்கொடியேன் பரக்கும் பரப்பைக் குவித்து - குரக்குப் போதம்போல ஒன்றிலுந் தரிப்பில்லாமலெழுந்துதிரியும் பாவியாகியவென்னைப் பிரபஞ்சப்பரப்பிலே திரியும் வியாத்தியை யொடுக்குவித்து,—

நிறுத்திப் பிடித்திட்டு இருள் வெளியாகும் மருளினை அறுத்து - தனது திருவடிஞானத்திலே நிறுத்திப் பழைய பிரபஞ்சவாதனையிலே போகாமற் பிடித்துக் கேவலசகலமென்னு மயக்கத்தையுநீக்கி,—

வந்து புகுதலுஞ் சென்று நீங்கலும் இன்றி - தாம்வந்தென்னுள்ளத்திற்புகுவதும் நான்சென்று தம்மோடுகூடி யெனக்குண்டான பாசங்களை நீக்குவதுமல்லாமல்,—

ஒன்றாய் நின்ற அந்நிலையில் - அநாதியே தாமும் நானு நீங்காமல் நின்ற நிலையிலே,—

ஒன்றாகாமல் இரண்டாகாமல் - தாமும் நானும் ஒன்றுபடுவதுஞ் செய்யாமல் இரண்டுபடுவதுஞ் செய்யாமல்,—

ஒன்றும் இரண்டும் இன்றாகாமல் - தாமும் யானும் ஒன்றுபட்டு நிற்பதும் பெறுவானும் பேறுமாயிரண்டுபட்டு நிற்பது மில்லையாகாமல்,—

தன்னது பெருமை தாக்காதாயினும் என்னது பெருமை எல்லாம் எய்தி - தமக்குண்டான சர்வஞ்ஞத்துவமும் பஞ்சகிருத்தியமும் எனக்குண்டாக்கினாரில்லையாயினும் எனக்குண்டாகிய இச்சாஞானக்கிரியைகளையும் வியாத்தி வியாபகங்களாகிய பெருமையையுந் தம்முடைய பூரணத்திலே யடக்கிக்கொண்டு,—

தன்னை எனக்குத் தருவதை யன்றியும் என்னையும் எனக்கேதந்து - தம்முடையவாநந்த சொரூபத்தை யெனக்குக் கடாக்ஷித்ததுமன்றி அப்பேரின்பத்தோடுங்கூடி அநுபவிக்கு மான்மபோதங்கெடாமற் கெட்டு நிற்குமுறைமையும் எனக்குக் கடாக்ஷித்தருளி,—

தன்னது பேரானந்தப் பெருங்கடலதனுள் ஆரா இன்பம் அளித்து - தம்முடைய பரிபூரண வாநந்தவெள்ளவருட்பெருங்கடலிலே விளையப்பட்ட வொருகாலத்தினு முவட்டாத வின்பத்தையும் எனக்குக் கடாக்ஷித்தருளி,—

தீரா உள்ளும் புறம்பும் ஒழிவின்றி நின்ற வள்ளன்மை காட்டி - ஒருகாலத்தினும் விடப்படாமல் அகம்புறமெங்கும் பூரணமாய்நின்று அனவரதமு மறிவித்துநிற்கும் வளப்பாட்டையுந் தரிசிப்பித்து,—

மலர் அடி அருளிய மன்னன் - தாமரை மலர்போன்ற சீபாதத்தைக் கடாக்ஷித்தருளின மன்னரே,—

எங்கோன் - எமக்குக் கர்த்தாவாயுள்ளவர்,—

வார் புனற் பெண்ணை வெண்ணை காவலன் - பெருகும்புனலுள்ள பெண்ணையாற்றையுடைய திருவெண்ணெய்நல்லூருக்குக் காவலர்,—

மெய்கண்ட தேவன் - மெய்கண்டதேவரென்கிற திருநாமத்தினையுடையவர்,—

அண்ணல் - பெருமையிற்சிறந்தவர்,—

அருளாலயத்தன் - தனதருளே கோயிலாகக்கொண்டருளியவர்,—

நண்ணிய மலமுதலாயின மாய்க்கும் உலக உயிர்க்கெல்லாம் ஒரு கண்ணே - பொருந்திய ஆணவமலமுதலிய மலங்களையெல்லாஞ் சேதனம் பண்ணிச் சர்வலோகங்களினுமுள்ள ஆன்மாக்களுக்கெல்லாம் ஓரறிவாக நின்றநுக்கிரகஞ் செய்தருளுகிறவர் என்க.

இதனானே, பரமசிவன் ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளி வந்திரக்ஷித்தமை பெறப்பட்டது. (உ0)

## இருபாவிருபது முற்றியது.

அருணந்திதேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

திருவதிகை-மனவாசகங்கடந்ததேவநாயனார்

அருளிச்செய்த

# உண்மைவிளக்கம்.

நேரிசைவெண்பா.

வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
வுண்மை விளக்க முரைசெய்யத்—திண்மதஞ்சே
ரந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள்வைப் பாம்.

(இதன்பொருள்.) வண்மை தரும் ஆகமநூல் - வளப்பத்தைத்தருகின்ற ஆகமநூலிலே,—வைத்தபொருள் வழுவா உண்மைவிளக்கம் உரைசெய்ய - பரமேசுவரன் அருளிச்செய்துவைத்த பதிபசுபாசங்களாகிய முப்பொருளின் உண்மைவழுவாமல் இவ்வுண்மைவிளக்கநூலிலே விளக்குதற்பொருட்டும்,—பந்தம் அற - பாசங்கள் நீங்குதற்பொருட்டும்,—திண்மதஞ்சேர் - திண்ணிய மும்மதமும் பொருந்திய,—அந்தி நிறம் - செக்கர்வானம்போன்ற திருமேனியினையும்,—தந்தி முகம் - யானைமுகத்தினையும்,—தொந்தி வயிற்று - தொந்திவயிற்றினையும்,—ஐங்கரனை - ஐந்து கரங்களையுமுடைய விநாயகக்கடவுளை,—புந்தியுள் வைப்பாம் - சித்தத்தில் வைத்துத் தியானஞ்செய்வாம் என்க.

---

பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதாநந் தப்பொருளா
மெய்காட்டு மெய்கண்டாய் விண்ணப்பம்—பொய்காட்டா
மெய்யா திருவெண்ணெய் வித்தகா சுத்தவினா
வையாநீ தான்கேட் டருள்.

(இ-ள்.) பொய் காட்டி - பக்குவர்க்குத் தேகாதிப் பிரபஞ்சத்தைப் பொய்யென விளக்கி,—பொய் அகற்றி - அப்பொய்யை நீக்கி,—போதாநந்தப்பொருளாம் மெய் காட்டும் மெய்கண்டாய் - அறிவிலே ஆநந்தசொரூபமாயிருக்கிற வுண்மையை விளக்கு மெய்கண்டநாதனே,—பொய்காட்டா மெய்யா-அபக்குவர்க்குப் பொய்யைவிளக்காத சத்தியத்தை யுடையவனே,—திருவெண்ணெய் வித்தகா - திருவெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளியிருக்கின்ற ஞானாசாரியனே,—ஐயா - ஐயனே,—சுத்தவினா விண்ணப்பம் நீதான் கேட்டருள் - அடியேனது சுத்தவினாவாகிய விண்ணப்பத்தினை நீ திருச்செவி சாத்தியருளவேண்டும் என்க. (க)

ஆறாறு தத்துவமே தாணவமே தன்றேதான்
மாறா வினையேது மற்றிவற்றின்—வேறாகா
நானேது நீயேது நாதனட மஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று.

(இ-ள்.) ஆறாறு தத்துவம் ஏது - முப்பத்தாறுதத்துவம்யாது,—அன்றேதான் மாறா ஆணவம் ஏது - அநாதியேவிட்டுநீங்காத ஆணவமலம்யாது,—வினை ஏது - வினையாது,—மற்று இவற்றின் வேறாகா நான் ஏது - இம்மலங்களுக்கு வேறாகாமல் ஒன்றுபட்டிருக்கும் என்னுடைய சொரூபம் யாது,—நீ ஏது - உன்னுடைய சொரூபம்யாது,—நாதன் நடம் (ஏது) - பரமேசுவரனுடைய திருநடம்யாது,—அஞ்செழுத்துத் தான் ஏது - பஞ்சக்கரத்தின் உண்மையாது,—தேசிகனே சாற்று - குருமூர்த்தியே நீ அருளவேண்டும் என்க. (௨)

உள்ளபடி யித்தை யுரைக்கக்கே ளுன்றனக்கு
வள்ளலரு ளாலன்று வாய்மலர்ந்து—தெள்ளியசீ
ராகமங்கள் சொன்ன வடைவிலே யாநந்த
யோக நிகழ்புதல்வா வுற்று.

(இ-ள்.) ஆநந்தயோகம் நிகழ்புதல்வா - விளங்குகின்ற ஆநந்தயோகத்திலே (அடங்கிநிற்கும்) மாணவகனே,—வள்ளல் அருளால் அன்று வாய் மலர்ந்து சொன்ன சீர் ஆகமங்கள் உள்ளபடி தெள்ளிய அடைவிலே-பரமசிவன் கருணையினாலே அநாதியே திருவாய்மலர்ந்தருளிய சிறந்த ஆகமங்களிலே யுள்ளபடி செவ்விய முறையாக,—உன்றனக்கு-உனக்கு,—இத்தை உரைக்க உற்றுக்கேள் - இதனையாஞ்சொல்ல நீ நன்குகேட்பாய் என்க. ()

நாற்கோணம் பூமிபுனனண்ணுமதி யின்பாதி
யேற்குமனன் முக்கோணமெப்போது—மார்க்கு
மறுகோணங் கால்வட்ட மாகாய மான்மா
வுறுகாய மாமிவற்றா லுற்று.

(இ-ள்.) பூமி நாற்கோணம் - பிருதிவியானது நாலுகோணமாயிருக்கும்,—புனல் மதியின்பாதி நண்ணும் - அப்புவானது அர்த்தசந்திரனைப் போன்றதாயிருக்கும்,—அனல் முக்கோணம் ஏற்கும் - தேயுவானது மூன்றுகோணமாயிருக்கும்,—கால் எப்போதும் அறுகோணம் ஆர்க்கும் - வாயுவானது எக்காலமும் அறுகோணமாயிருக்கும்,—ஆகாயம் வட்டம் - ஆகாயமானது வட்டமாயிருக்கும்,—ஆன்மா உற்று உறு காயம் இவற்றால் ஆம் - ஆன்மாவுக்குப் பரிணாமமாய்ப் பொருந்துவதால் சரீரம் இத்தூல பஞ்சபூதங்களினின்றும் உண்டாம் என்க. (௪)

பொன்பார் புனல்வெண்மை பொங்குமனல் சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்றூம—மென்பார்
எழுத்து லவரயவப் பாராதிக் கென்று
மழுத்தமதாய் நிற்கு மது.

(இ-ள்.) பார் பொன் - பிருதிவியானது பொன்னிறமாயிருக்கும்,—புனல் வெண்மை - அப்புவானது வெள்ளைநிறமாயிருக்கும்,—பொங்கும்

அனல் சிவப்பு - மிகுகின்ற தேயுவானது சிவந்தநிறமாய் நிற்கும்,—வன் கால் கருமை - வலிய வாயுவானது கருமைநிறமா யிருக்கும்,—வளர் வான் தூமம் - மிகுந்த ஆகாயமானது புகைநிறமா யிருக்கும்,—என்பார் - என்று பெரியோர் சொல்லுவார்,—பாராதிக்கு ல வ ர ய அ எழுத்து - பிருதிவி முதலியவற்றிற்கு (முறையே) லகாரமும் வகாரமும் ரகாரமும் யகாரமும் அகாரமும் ஆகிய எழுத்து,—என்றும் அழுத்தமதாய் நிற்குமது - எப்போதும் பலமாய்ப்பொருந்தி நிற்கும் என்க. (௫)

குறிகுலிசங் கோகநதங் கொள்சுவத்தி குன்றா
வறுபுள்ளி யாரமுத விந்துப்—பிறிவின்றி
மண்புனறீக் கால்வான மன்னுமடை வேயென்
றொண்புதல்வா வாகமமோ தும்.

(இ-ள்.) ஒண் புதல்வா - நல்ல மாணவகனே,—மண் புனல் தீ கால் வானம் - பிருதிவு அப்பு தேயு வாயு ஆகாயம் ஆகிய இவற்றிற்கு,—அடைவே - முறையே,—குறி குலிசம் கோகநதம் கொள் சுவத்தி குன்றா அறுபுள்ளி ஆர் அமுத விந்து - அடையாளம் வச்சிரமும் தாமரைப்பூவும் பொருந்திய சுவத்திகமும் குறையாத அறுபுள்ளியும் பொருந்திய அமுதவிந்துவும்,—பிறிவின்றி மன்னும் என்று ஆகமம் ஓதும் - நீங்காது நிலைபெறுமென்று சிவாகமஞ் செப்பும் என்க. (௬)

பாராதி யைந்துக்கும் பன்னுமதி தெய்வங்க
ளாரா ரயனாதி யைவரா—மோரோர்
தொழிலவர்க்குச் சொல்லுங்காற் றோற்றமுத லைந்தும்
பழுதறவே பண்ணுவர்காண் பார்.

(இ-ள்.) பாராதி ஐந்துக்கும் பன்னும் அதிதெய்வங்கள் ஆர் ஆர் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் ஐந்துக்குஞ் சொல்லப்பட்ட அதிதேவதைகள் பொருந்திய யாவர் எனின்,—அயனாதி ஐவராம் - (முறையே) பிரமாவும் விஷ்ணுவும் உருத்திரரும் மகேசுவரரும் சதாசிவரும் என ஐந்து பேராம்,—சொல்லுங்கால் அவர்க்கு ஓரோர் தொழில் - சொல்லுமிடத்து அவருக்கு ஒவ்வொரு தொழிலேயாம்,—தோற்ற முதல் ஐந்தும் பழுது அறவே பண்ணுவர் காண் பார் - (அவர்) சிருஷ்டி திதி சங்காரந் திரோபவம் அநுக்கிரகமாகிய ஐந்தும் குற்றமறச் செய்வார்களென்று அறிவாயாக என்க. (௭)

படைப்ப னயனளிப்பன் பங்கயக்கண் மாயன்
றுடைப்ப னுருத்திரனுஞ் சொல்லிற்—றிடப்பெறவே
யென்றுந் திரோபவிப்ப ரீசர் சதாசிவரு
மன்றே யநுக்கிரக ராம்.

(இ-ள்.) அயன் படைப்பன் - பிரமா சிருஷ்டிப்பன்,—பங்கயக்கண் மாயன் அளிப்பன் - செந்தாமரை மலர்போலுங் கண்ணையுடைய விஷ்ணு இரக்ஷிப்பன்,—சொல்லில் உருத்திரனுந் துடைப்பன் - சொல்லுமிடத்து உருத்திரமூர்த்தி சங்கரிப்பர்,—திடப்பெறவே ஈசர் என்றுந் திரோபவிப்பர் - நிச்சயமாக மகேசுவரமூர்த்தி எக்காலமுந் திரோபவம் பண்ணுவர்,

—அன்றே சதாசிவரும் அநுக்கிரகராம் - அநாதிதொடங்கிச் சதாசிவ மூர்த்தி அநுக்கிரகம் பண்ணுபவராம் என்க. (அ)

மண்கடின மாய்த்தரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமா
மொண்கனல்சுட் டொன்றுவிக்கு மோவாமல்—வண்கால்
பரந்துசலித் துத்திரட்டும் பார்க்கிலா காயம்
நிரந்தரமாய் நிற்கு நிறைந்து.

(இ-ள்.) மண் கடினமாய்த் தரிக்கும் - பிருதிவியானது விடயங்களிலே கடினகுணத்தைக் கொடுத்துக்கொண்டு நிற்கும்,—வாரி குளிர்ந்தே பதமாம் - அப்புவானது விடயங்களிலே நெகிழ்ந்த குணத்தைக் கொடுத்துக்கொண்டு நிற்கும்,—ஒண் கனல் சுட்டொன்றுவிக்கும்-ஒள்ளிய தேயுவானது விடயங்களிலே சுட்டொன்றுதலைப் பண்ணிக்கொண்டுநிற்கும்,—வண் கால் ஓவாமற் பரந்து சலித்துத் திரட்டும் - வளப்பத்தையுடைய வாயுவானது நீங்காது பரந்துசலித்து விடயங்களைத்திரட்டும்,—பார்க்கில் ஆகாயம் நிரந்தரமாய் நிறைந்து நிற்கும் - விசாரிக்குமிடத்து ஆகாயம் நிரந்தரமாய்நிறைந்துவிடயங்களுக்கெல்லாம் இடங்கொடுத்துக்கொண்டு நிற்கும் என்க. (கூ)

உள்ளபடி மாபூத மோதினோ முன்றனக்குக்
கள்ளமிகு மைம்புலனுங் கட்டுரைக்கின்—மெள்ளவே
யோசை பரிச முருவஞ் சுவைநாற்ற
மாசைதரு மைம்புலனே யாம்.

(இ-ள்.) உன்றனக்கு உள்ளபடி மா பூதம் ஓதினோம் - உனக்கு உண்மையாகப் பஞ்சமகா பூதங்களுஞ் சொன்னோம்,—கள்ளமிகும் ஐம்புலனும் மெள்ளவே கட்டுரைக்கில் - கள்ளமிகுந்த பஞ்சவிடயங்களை மெல்லச் சொல்லுமிடத்து,—ஓசை பரிசம் உருவஞ் சுவை நாற்றம் ஆசைதரும் ஐம்புலனேயாம் - சத்தம் பரிசம் உரூபம் இரதம் கந்தம் ஆகிய இவை ஆசையைத் தருகின்ற அவ்வைம்புலன்களாம் என்க. (கo)

ஞானேந் திரியங்க ணன்று வுரைக்கக்கே
ளூன மிகுபூத முற்றிடமா—வீனமாஞ்
சத்தாதி யையறியுந் தானஞ் செவிதோல்கண்
ணத்தாலு மூக்கென் றறி.

(இ-ள்.) ஞானேந்திரியங்கள் நன்று உரைக்கக்கேள் - ஞானேந்திரியங்களை நன்றாகச் சொல்லுகிறோங்கேள்,—ஊனம் உற்று மிகுபூதம் இடமா - குறைவு பொருந்தி மிகுகின்ற பஞ்சபூதங்களிடமாக நின்று,—ஈனமாஞ் சத்தாதியை அறியும் - (அவை) தாழ்வாகிய சத்தாதி விடயங்களை அறியும்,—தானம் செவி தோல் கண் அத்தாலு மூக்கென்று அறி - (அவற்றிற்குத்) தானம் சுரோத்திரம் துவக்கு சட்சு அந்தச்சிகுவை ஆக்கிராணமென்று அறிவாய் என்க. (கக)

வானிடமா நின்றுசெவி மன்னு மொலியதனை
யீனமிகுந் தோல்கா லிடமாக—வூனப்

பரிசந் தனையறியும் பார்வையிற்கண் ணங்கி
விரவியுரு வங்காணு மே.

(இ-ள்.) வானிடமா நின்று செவி மன்னும் ஒலியதனை (அறியும்) - ஆகாயத்தினிடமாக நின்று சுரோத்திரம் பொருந்திய சத்தத்தையறியும்,—காலிடமாக (நின்று) ஊனமிகுந் தோல் ஊனப்பரிசந்தனை அறியும் - வாயுவினிடமாகநின்று ஊனத்துவமிக்க தொக்கு குறைவுடைய பரிசத்தையறியும்,—அங்கி விரவிப் பார்வையிற்கண் உருவங்காணுமே - தேயுவினிடமாக நின்று பார்வையினையுடைய சட்சு உருவத்தை யறியும் என்க.

நன்றாக நீரிடமா நாவிரதந் தானறியும்
பொன்றா மணமூக்குப் பூவிடமா—நின்றறியு
மென்றோது மன்றே யிறையா கமமிதனை
வென்றார்சென் றாரின்ப வீடு.

(இ-ள்.) நன்றாக நீரிடமா (நின்று) நா இரதந்தான் அறியும் - நன்மையாக அப்புவினிடமாக நின்று சிகுவை இரசத்தையறியும்,—பொன்றாப் பூவிடமா நின்று மூக்கு மணம் அறியும் - கெடாத பிருதிவியினிடமாகநின்று ஆக்கிராணங் கந்தத்தையறியும்,—என்று இறை ஆகமம் அன்றே ஓதும் - என்று சிவாகமங்களிலே அநாதியே சொல்லும்,—இதனை வென்றார் இன்பவீடு சென்றார் - இந்தப் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம் பண்ணினவர்களே ஆநந்தவீட்டினை அடைந்தார் என்க. (௧௬)

கண்ணுதனூ லோதியிடுங் கன்மேந் திரியங்க
ளெண்ணும்வச னாதிக் கிடமாக—நண்ணியிடும்
வாக்குப்பா தம்பாணி மன்னு குதமுபத்த
மாக்கருதுந் நாளு மது.

(இ-ள்.) வாக்குப் பாதம் பாணி மன்னு குதம் உபத்தமாக்கருதும் கன்மேந்திரியங்கள் - வாக்குப் பாதம் பாணி பொருந்திய பாயு உபத்தமாகக் கருதுகின்ற கன்மேந்திரியங்கள் ஐந்தும்,—எண்ணும் வசனாதிக்கு இடமாக நாளுமது நண்ணியிடும் - மதிக்கின்ற வசனமும் கமனமும் தானமும் விசர்க்கமும் ஆனந்தமுமாகியவற்றிற்கு இடமாக நாடோறும் பொருந்தும் என்று,—கண்ணுதல் நூல் ஓதியிடும் - சிவாகமம் செப்பும் என்க. ()

வாக்காகா யம்மிடமா வந்துவச னிக்குங்கால்
போக்காருங் காற்றிடமாப் புல்கியன—லேற்கு
மிடுங்கை குதநீ ரிடமா மலாதி
விடும்பா ரிடமுபத்தம் விந்து.

(இ-ள்.) ஆகாயம் இடமா வாக்கு வந்து வசனிக்கும் - ஆகாயமிடமாக நின்று வாக்குப்பொருந்தி வார்த்தை சொல்லும்,—காற்று இடமாக் கால் போக்கு ஆரும் - வாயுவினிடமாக நின்று பாதம் கமனஞ்செய்யும்,—அனல் புல்கி கை இடும் ஏற்கும் - தேயுவினிடமாக நின்று பாணி இடுதல் ஏற்றல் செய்யும்,—நீரிடமாக் குதம் மலாதி விடும் - அப்புவினிடமாக நின்று பாயு மலசலங்களைப்பிரித்தல் செய்யும்,—பாரிடம் உபத்தம் விந்து

(விடும்) - பிருதிவியினிடமாக நின்று உபத்தம் விந்துவைவிடுத்து ஆனந்தஞ் செய்விக்கும் என்க. (கரு)

அந்தக் கரண மடைவே யுரைக்கக்கே
ளந்தமனம் புத்தியுட ஞங்காரஞ்—சிந்தையிவை
பற்றியது நிச்சயித்துப் பல்கா லெழுந்திருந்தங்
குற்றதுசிந் திக்கு முணர்.

(இ-ள்.) அந்தக்கரணம் அடைவே உரைக்கக்கேள் - அந்தக்கரணங்களை முறையே சொல்லக்கேள்,—அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் சிந்தை இவை - அம்மனமும் புத்தியும் அகங்காரமும் சித்தமுமாகிய இவையாம்,—பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்து அங்கு உற்றது சிந்திக்கும் உணர் - (அவற்றுள் மனம்) பற்றியதனை (ப்புத்தி) நிச்சயித்து (அகங்காரம்) பலமுறை (அபிமானித்து) எழுந்து (சித்தம்) அங்கே யுற்றதனைச் சிந்திக்குமென்று அறிவாய் என்க. (கசூ)

ஓதியிடு நாலாறு முற்றான்ம தத்துவமென்
றாதி யருணூ லறையுங்காண்—ஊதறவே
வித்தியா தத்துவங்க டம்மை விளம்பக்கே
ளுத்தமனே நன்று வுனக்கு.

(இ-ள்.) ஓதியிடும் நாலாறும் உற்று ஆன்ம தத்துவமென்று ஆதி அருள்நூல் அறையுங்காண் - சொல்லப்பெற்ற இருபத்துநாலும் பொருந்தி ஆன்ம தத்துவமாமென்று சிவாகமநூல் சொல்லும்,—உத்தமனே வித்தியாதத்துவங்கள்தம்மை உனக்கு நீது அறவே நன்று விளம்பக் கேள் - உத்தம மாணுக்கனே வித்தியாதத்துவங்களை உனக்குக் குற்றமற நன்றாகச் சொல்லக்கேளாய் என்க. (கஎ)

கால நியதி கருதுங் கலைவித்தை
யேலவிரா கம்புருட னேமாயை—மாலறவே
சொன்னே மடைவாக்ச் சொன்னவிவை தன்னுண்மை
யுன்னி யுரைக்குநா முற்று.

(இ-ள்.) காலம் நியதி கருதுங் கலை வித்தை ஏல இராகம் புருடனே மாயை - காலமும் நியதியும் கருதுகின்ற கலையும் வித்தையும் பொருந்த இராகமும் புருடனும் மாயையுமாம்,—மால் அறவே அடைவாகச்சொன்னேம் - (இவற்றை) மயக்கமற முறையாக (உனக்கு)ச் சொன்னேம்,—சொன்ன இவைதன் உண்மை உற்று உன்னி நாம் உரைக்கும்-கூறிய இவற்றின் உண்மையை உற்றுநோக்கி (இனி) நாம் சொல்லுவோம்என்க.(கஅ)

எல்லை பலம்புதுமை யெப்போது நிச்சயித்த
லல்ல றருங்கிரியை யான்மாவுக்—கொல்லை
யறிவாசை யைம்புலனு மாரவருங் காலங்
குறியாய் மயக்கென்று கொள்.

(இ-ள்.) எல்லை பலம் புதுமை - காலதத்துவமானது கழிகாலத்தெல்லையையும் நிகழ்காலத்துப் பலத்தையும் எதிர்காலத்துப் புதுமையையும் பொருத்துவிக்கும்,—எப்போதும் நிச்சயித்தல் - நியதி தத்துவமானது எந்தக்காலமும் கன்மத்தை இவ்வளவென்று நிச்சயம்பண்ணி நிறுத்தும்,

—அல்லல் தரும் கிரியை - கலையானது ஆணவத்தைச்சிறிது நீக்கி ஆன்மாவுக்குக் கிரியையை யெழுப்பும்,—ஆன்மாவுக்கு ஒல்லை அறிவு - வித்தியா தத்துவமானது ஆன்மாவுக்குச் சீக்கிரத்திலே அறிவையெழுப்பும், —ஆசை - இராகதத்துவமானது பெற்ற பதார்த்தங்களைச் சிறிதாக்கிப் பெருததிலே இச்சையை யுண்டாக்கும்,—ஐம்புலனும் ஆரவருங் காலம்- ஆன்மா பஞ்சேந்திரியங்களிடமாகச் சத்தாதிவிடயங்களைப்புசிக்க வருகின்ற அவதரத்தில் புருடதத்துவமானது விடயத்திலே யழுத்துவிக்கும், —குறியாப் மயக்கென்று கொள் - மாயையானது ஒன்றை நினைக்கவொட்டாமல் மயக்கத்தைச் செய்யுமென்றறிவாயாக என்க. (கக)

வித்தியா தத்துவங்க ளேழும் விளம்பினோஞ்
சுத்தமாந் தத்துவங்கள் சொல்லக்கேள்—நித்தமாஞ்
சுத்தவித்தை யீசுரம்பின் சொல்லுஞ் சதாசிவநற்
சத்திசிவங் காணவைக டாம்.

(இ-ள்.) வித்தியாதத்துவங்கள் ஏழும் விளம்பினோம் - வித்தியாதத்துவங்கள் ஏழுஞ்சொன்னோம்,—சுத்தமாந் தத்துவங்கள் சொல்லக்கேள் - சுத்தமாயிருக்கிற சிவதத்துவங்கள் ஐந்தையுஞ் சொல்லுகிறேங்கேள்,— அவைகடாம் நித்தமாஞ் சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம் நற்சத்தி சிவங்காண் - அவை நித்தியமாயிருக்கிற சுத்தவித்தை ஈசுரம் பின்கூறும் சாதாக்கியம்நன்மையாகிய சத்தி சிவம் என்றறிவாயாகஎன்க.

சுத்தவித்தை ஞானமிகுந் தொன்மையா மீசுரந்தா
னத்தன் றொழில்திக மாக்கியிடு—மொத்தலிவை
சாதாக் கியமென்றுஞ் சத்தி சிவங்கிரியை
யாதார ஞானவுரு வாம்.

(இ-ள்.) சுத்தவித்தை ஞானமிகும் - சுத்தவித்தை ஞானமேறிக்கிரியை குறைந்திருக்கும்,—தொன்மையாம் ஈசுரந்தான் அத்தன் தொழில் அதிகமாக்கிடும் - பழைமையாகிய ஈசுவரதத்துவமானது சிவன் ஞானங் குறைந்து கிரியையேறியிருக்கும்,—சாதாக்கியம் இவை ஒத்தல் - சாதாக்கிய தத்துவம் ஞானமுங்கிரியையும் ஒத்திருக்கும்,—என்றும் சத்தி கிரியை சிவம் ஆதார ஞானவுருவாம் - எப்போதும் சத்தி தத்துவம் கிரியையாயிருக்கும் சிவதத்துவம் ஆதாரஞானமாயிருக்கும் என்க. (உக)

ஆறாறு தத்துவமுஞ் சொன்னோ மடைவாக
மாறா மலமிரண்டும் வாசொல்லக்—கூறி
லறியாமை யாணவநீ யான்சுக துக்கங்
குறியா வினையென்று கொள்.

(இ-ள்.) ஆறாறு தத்துவமுஞ் அடைவாகச் சொன்னோம் - முப்பத்தாறு தத்துவங்களையும் முறையாகச்சொன்னோம்,—மாறா மலம் இரண்டும் சொல்லவா - விட்டுநீங்காமலிருக்கின்ற ஆணவமலத்தையும் கன்ம மலத்தையுஞ் சொல்லுகிறேங்கேள்,—கூறில் அறியாமை ஆணவம் - சொல்லுமிடத்து அறியாமையைப் பண்ணிக்கொண்டு நிற்பது ஆணவ மலம்,—சுகதுக்கங் குறியா நீயான வினையென்று கொள் - சுகதுக்க

மொன்றையும் நினையாமல் நீதானுயிருப்பது தானே கன்ம மலமென்றறி வாயாக என்க. (உஉ)

ஆறாறு தத்துவமு மாணவமும் வல்வினையு
மாறா வருளால் வகுத்துரைத்தீர்—வேறாகா
வென்னை யெனக்கறியக் காட்டீ ரிவைகண்டே
னுன்னரிய தேசிகரே யுற்று.

(இ-ள்.) உன்னரிய தேசிகரே - நினைத்தற்கரிய ஆசாரியரே,—ஆறாறுதத்துவமும் - முப்பத்தாறுதத்துவத்தையும்,—ஆணவமும் - ஆணவமலத்தையும்,—வல்வினையும் - வலிய கன்மமலத்தையும்,—மாறா அருளால் வகுத்து உரைத்தீர் - விட்டு நீங்காத கிருபையினாலே வகுத்தருளிச் செய்தீர்,—இவை கண்டேன் - இம்மலங்களைத் தரிசித்தேன்,—வேறாகா என்னை எனக்கு அறியக்காட்டீர் - (இனி) இந்தமலங்களுக்கு வேறாகாமல் ஒன்றுபட்டிருக்கின்ற என்னுடைய சொரூபத்தையும் அருளிச் செய்யவேண்டும் என்க. (உ௩)

நன்றா வுரைக்கக்கேள் நல்லசித்தின் முன்னசித்திங்
கொன்றாது சித்தசித்தை யோராது—நின்றிவற்றை
யன்றே பகுத்தறிவ தான்மாவே யென்றுமறை
குன்றாம லோதுங் குறித்து.

(இ-ள்.) நன்றா உரைக்கக்கேள் - நீகேட்ட ஆன்மதரிசனத்தை நன்றாகச் சொல்லுகிறோங்கேள்,—நல்ல சித்தின் முன் அசித்து இங்கு ஒன்றாது - நல்லசித்தாகிய சிவத்தின்முன்னே அசித்தாகிய பாசம் நில்லாது,—சித்து அசித்தை ஓராது - சித்தாகிய சிவத்துக்கு அசித்தாகிய பாசத்தை அறியவேண்டுவதில்லை,—இவற்றை அன்றே நின்று பகுத்தறிவது ஆன்மாவே - சித்தாகிய சிவத்தையும் அசித்தாகிய பாசத்தையும் அநாதியிலே பொருந்தி விசாரித்தறிவது ஆன்மாவே,—என்று மறை குன்றாமல் குறித்து ஓதும் - என்று சிவாகமங்களிலே குன்றாது சுட்டிச் சொல்லும் என்க. (உச)

தத்துவங்க ளாறாறுந் தம்மைத்தா மென்றறியா
வெத்தன்மை யென்னி லியம்பக்கேள்—சுத்தமா
மாறு சுவையு மறியாது தன்னைத்தான்
கூறி லவையிவைபோற் கொள்.

(இ-ள்) தத்துவங்கள் ஆறாறுந் தம்மைத்தாமென்று அறியா - முப்பத்தாறுதத்துவங்களும் ஜடமாகையினாலே தம்முடைய சொரூபத்தைத் தாமறியா,—எத்தன்மையென்னில் இயம்பக்கேள் - எந்தமுறைமையென்று கேட்கிறாயானால் சொல்லுகிறோங்கேள்,—சுத்தமாம் ஆறு சுவையும் தன்னைத்தான் அறியாது - சுத்தமாயிருக்கிற அறுவகைச்சுவையுந் தன்னுடைய சொரூபத்தைத் தானறியாது,—கூறில் - சொல்லுமிடத்து,—அவை இவைபோற் கொள் - முப்பத்தாறு தத்துவங்களுஞ் சுவைகளைப் போலத் தம்முடைய சொரூபத்தைத் தாமறியா என்க, (உரு)

ஆறு சுவையு மருந்தி யவைதம்மை
வேறொருவன் கூறியிடு மேன்மைபோ—லாறாறு

மொன்றொன்று நாடியுணர்ந் தோதிலதி லுற்றறிவாய்
நின்றபொரு டானேகா ணீ.

(இ-ள்.) ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை வேறொருவன் கூறி யிடு மேன்மைபோல் - அறுவகைச்சுவையும் புசித்துக் கைக்கிறது கார்க்கிறது கூர்க்கிறது துவர்க்கிறது புளிக்கிறது இனிக்கிறதெனக் கண்டுணர்ந்து ஒருவன் சொல்லுகிற முறைமைபோல,—ஆறும் ஒன்றொன்று நாடி உணர்ந்து - முப்பத்தாறு தத்துவங்களையும் ஒன்றொன்றாக விசாரித்தறிந்து,—ஓதில் - சொல்லுமிடத்து,—அதில் உற்று அறிவாய் நின்ற பொருடானே காண் நீ - அம்முப்பத்தாறு தத்துவங்களிலும் பொருந்தி அறிந்துவருகிற அறிவுகாண் நீயாகிய ஆன்மா என்க. (உசு)

குன்றா வருளாலே கூறினீ ரென்வடிவு
பொன்றாத நும்முருவம் போதியீர்—நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமா போலே யுனதறிவி
னண்ணியறி வித்திடுவோ நாம்.

(இ-ள்.) குன்றா அருளாலே என்வடிவு கூறினீர் - கெடாதகிருபையினாலே அடியேனுடைய சொரூபத்தை அருளிச்செய்தீர்,—பொன்றாத நும் உருவம் போதியீர் - கெடாத தேவரீருடைய சொரூபத்தையும் அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும்,—நின்று அருக்கன் கண்ணுக்குக் காட்டுமாபோலே - ஆதித்தப் பிரகாசமானது கண்ணுக்குப் பதார்த்தங்களைக் காட்டிக்கொண்டு நிற்பதுபோல,—நாம் உனது அறிவின் நண்ணி அறிவித்திடுவோம் - நாம் உனதறிவிலே பொருந்திநின்று அறிவித்து வருவோம் என்க. (உஎ)

அன்றியுங்கே ளான்மாவா லாய்ந்தறியு மைம்பொறிக
ளின்றி யறியா விவையென்ன—நின்றதுபோ
லோவாம லுன்னை யுணர்த்துவோ முன்னறிவின்
மேவாமன் மேவிநா மே.

(இ-ள்.) அன்றியுங் கேள் - அல்லாமலுஞ் சொல்லுகிறேங் கேள்,—ஆன்மாவால் ஆய்ந்தறியும் ஐம்பொறிகள் இன்றி அறியா இவையென்ன - ஆன்மாவினாலே நன்றாக அறிந்து காரியப்பட்டுவருகிற பஞ்சேந்திரியங்களும் ஆன்மாவினாலேயறிந்து காரியப்பட்டு வருகிறேமென்றறியா,—நின்றதுபோல் - அங்ஙனநின்ற பஞ்சேந்திரியங்கள்போல்,—நாமே உன்னறிவில் மேவாமல் மேவி - நாம் உன்னறிவிலே பொருந்தாமற் பொருந்தி நின்று,—ஓவாமல் உன்னை உணர்த்துவோம் - விட்டுநீங்காமல் உனக்கறிவிப்போம் (அதனை நீ அறியாய்) என்க. (உஅ)

அக்கரங்கட் கெல்லா மகரவுயிர் நின்றாற்போன்
மிக்க வுயிர்க்குயிராய் மேவினோ—மெக்கண்ணு
நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமமோது நாடு.

(இ-ள்.) அக்கரங்கட்கெல்லாம் அகரவுயிர் நின்றாற்போல் - ஏனைய எல்லா அக்கரங்கட்கும் அகரமாகிய அக்கரம் உயிராய் நின்றதுபோல்,—

மிக்க உயிர்க்கு உயிராய்மேவினேம் - சர்வான்மாக்களிடத்திலேயும் அறிவுக் கறிவாய்ப்பொருந்தி நின்றேம்,—எக்கண்ணும் நில்லாவிடத்து உயிர்க்கு அறிவு நில்லாதென்று - சடசித்துக்க ளெல்லாவற்றினும் கர்த்தா நிறைந்து நின்றறிவித்தா லல்லது உயிர் அறியாதென்று,—நல்லாகமம் ஓதும் நாடு - சிவாகமங்களிலே சொல்லுமென்று விசாரித்தறிவாயாக என்க. (உ௯)

நற்றவத்தோர் தாங்காண நாதாந்தத் தஞ்செழுத்தா
லுற்றுருவாய் நின்றாட லுள்ளபடி—பெற்றிடநான்
விண்ணூர் பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே
தண்ணா ரருளாலே சாற்று.

(இ-ள்.) நற்றவத்தோர் தாம் காண - நல்லதவத்தையுடைய ஆன்மாக்கள் தரிசிக்கத் தக்கதாக,—நாதாந்தத்து அஞ்செழுத்தால் உருவாய் உற்று நின்றாடல் - நாதமுடிவிலே சிவபிரான்பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நிருத்தஞ்செய்கிற முறைமையை,—உள்ளபடி நான்பெற்றிட - உண்மையாக அடியேன் தரிசிக்கத்தக்கதாக,—விண்ணூர் பொழில்வெண்ணெய் மெய்கண்டநாதனே - ஆகாயத்தை அளாவியிருக்கின்ற சோலைகள் சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூரே திருப்பதியாகக் கொண்டெழுந்தருளியிருக்கிற மெய்கண்டதேவனே,—தண்ணார் அருளாலே சாற்று - குளிர்ந்த கிருபையினாலே அருளவேண்டும் என்க. (௩௰)

எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள்—சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெழுத்தஞ் சாலே
யவாயமற நின்றாடு வான்.

(இ-ள்.) எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே நட்டம் - எட்டுமிரண்டு முருவாயிருக்கிற யகாரமாகிய ஆன்மாவினிடத்திலே செய்யும் நடனத்தை,—புதல்வா நவிலக்கேள் - மாணவகனே சொல்லக்கேள்,—சிட்டன் - பரமசிவன்,—சிவாயநம வென்னுந் திருவெழுத்தஞ்சாலே அவாயம் அற நின்று ஆடுவான் - சிகாரமாதி பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு ஆன்மாக்கள் பிறவியறத்தக்கதாக நிருத்தஞ்செய்வன் என்க.()

ஆடும் படிகேணல் லம்பலத்தா னையனே
நாடுந் திருவடியி லேநகரங்—கூடு
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.

(இ-ள்.) ஐயனே நல் அம்பலத்தான் ஆடும் படிகேள் - மாணாக்கனே பொன்னம்பலமுடையான் நிருத்தஞ்செய்கிற முறைமையைச்சொல்லுகிறேங்கேள்,—நாடுந்திருவடியிலே நகரம் - நாடாநின்ற ஸ்ரீபாதத்திலே நகாரமாகவும்,—கூடும் உதரம் மகரம் - பொருந்தப்பட்ட திருவுந்தியிலே மகாரமாகவும்,—வளர் தோள் சிகரம் - வளராநின்ற திருத்தோளிலே சிகாரமாகவும்,—பகரு முகம் வா - சொல்லப்பட்ட திருமுகத்திலே வகாரமாகவும்,—முடியப்பார் - திருமுடியிலே யகாரமாகவும் கொண்டருளித் திருநிருத்தஞ் செய்வானென்று விசாரித்தறிவாயாக என்க. (௩உ)

சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகர
மார்க்கும் யகர மபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கி நகர மடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்.

(இ-ள்.) ஆர்க்குந் துடி சேர்க்குங் (கரம்) சிகரம் - ஒலிக்கின்ற டமரகமேந்திய ஸ்ரீஅத்தத்திலே சிகாரமாகவும்,—சிக்கனவீசுகரம் வா - நன்றாக வீசிய ஸ்ரீஅத்தத்திலே வகாரமாகவும்,—அபயகரம் யகரம்-அமைத்த ஸ்ரீஅத்தத்திலே யகாரமாகவும்,—பார்க்கில் அங்கி இறைக்கு நகரம்-பார்க்குமிடத்து அக்கினியேந்திய ஸ்ரீஅத்தத்திலே நகாரமாகவும்,—முயலகனார் தங்கும் அடிக்கீழ் மகரமதுதான் - முயலகனைமிதித்த ஸ்ரீபாதத்திலே மகாரமாகவும் கொண்டருளித் திருநிருத்தஞ் செய்வானென்றறிவாயாக என்க. (௩௩)

ஓங்கார மேநற் றிருவாசி யுற்றதனி
னீங்கா வெழுத்தே நிறைசுடரா—மாங்கார
மற்றா ரறிவரணி யம்பலத்தா னாடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்.

(இ-ள்.) ஓங்காரமே நற்றிருவாசி - பிரணவந்தானே நல்ல திருவாசியாகவும்,—உற்று அதனில் நீங்கா எழுத்தே நிறை சுடராம் - பொருந்தி அப்பிரணவத்தைவிட்டு நீங்காத பஞ்சாக்கரமே நிறைந்த உள்ளொளியாகவும்,—ஆங்காரம் அற்றார் அறிவர் - யானெனதென்னுஞ் செருக்கற்றவர்கள் அறிவார்கள்,—அணி அம்பலத்தான் ஆடல் இது பெற்றார் பின் பிறப்பு அற்றார் - அழகிய திருவம்பலத்தான் செய்யும் நிருத்தமாகிய இதனைத்தரிசித்தவர்களே பின்பு சநநமரண மற்றவர்கள் என்க.()

தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்கார—மூற்றமா
வூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

(இ-ள்.) துடியதனில் தோற்றம் - டமரகமேந்திய ஸ்ரீஅத்தத்திலே சிருஷ்டியாகவும்,—அமைப்பில் தோயும் திதி - அமைத்த ஸ்ரீஅத்தத்திலே ஆன்மாப் பொருந்தும் இரக்ஷையாகவும்,—சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - சொல்லப்பட்ட அக்கினியேந்திய ஸ்ரீஅத்தத்திலே மலசங்காரமாகவும்,—ஊற்றமா ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம் - உறுதியாக வூன்றிய மலர்போலும் பொருந்திய ஸ்ரீபாதத்திலே பிரபஞ்சத்தை மறைக்குந் திரோதமாகவும்,—நான்ற மலர்ப்பதத்தே முத்தி நாடு - தூக்கிய மலர்போலும் ஸ்ரீபாதத்திலே அநுக்கிரக முத்தியாகவும் திருக்கூத்துச்செய்வனென்று விசாரித்தறிவாயாக என்க. (௩௫)

மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ்
சாய வமுக்கியருள் டானெடுத்து—நேயத்தா
லாநந்த வாரிதியி லான்மாவைத் தானழுத்த
னெந்தை யார்பாதந் தான்.

(இ-ள்.) மாயைதனை உதறி - டமரகமேந்திய ஸ்ரீ அத்தத்தினாலே மாயையை நீக்கி,—வல்வினையைச் சுட்டு - அக்கினியேந்திய ஸ்ரீஅத்தத்தினாலே கன்மமலத்தைச் சுட்டு,—மலஞ் சாய அமுக்கி-ஊன்றிய ஸ்ரீபாதத்தினாலே மலமேலிடாமல் அமுத்தி,—அருள்தான் எடுத்து - தூக்கிய பாதத்தினாலே அருளை தனுவாகநிறுத்தி,—நேயத்தால் ஆநந்த வாரிதியில் ஆன்மாவைத்தான் அழுத்தல் தான்-கிருபையினாலே அமைத்த ஸ்ரீ அத்தத்தினாலே ஆநந்தவெள்ளத்திலே ஆன்மாவை அமுத்துவது தான்,—எந்தையார் பரதந்தான் - எம்முடைய பிதாவாகிய பரமேசுவரனுடைய திருக்கூத்து முறைமை என்க. (௩௬)

**மோ**னந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடு—மாநந்த
மொண்டருந்தி நின்றாடல் காணுமருண் மூர்த்தியாக்
கொண்டதிரு வம்பலத்தான் கூத்து.

(இ-ள்.) அந்த மோன மாமுனிவர் மும்மலத்தை மோசித்து - முடிவான மௌனமுடைய ஞானிகள் கர்த்தாவினுடைய கிருபையினாலேமூன்று மலங்களையு நீக்கி,—தான் அந்தமான இடத்தே தங்கியிடும்-ஆன்மபோத முடிந்தவிடத்திலே உதயமாகும்,—ஆநந்தம் மொண்டு அருந்தி நின்று ஆடல் காணும் - ஆநந்தவெள்ளத்தை முகந்துகொண்டநுபவிப்பது தான்,—அருள் மூர்த்தியாக்கொண்ட திருவம்பலத்தான்கூத்து-ஆன்மாக்களை யிரக்ஷிக்கவேண்டுமென்னும் காருண்ணியமே திருமேனியாகக்கொண்ட திருவம்பலத்தான் திருநிருத்தஞ் செய்யும் முறைமையாம் என்க.()

உரையுணர்வுக் கெட்டா வொருவன்மிகு பஞ்சாக்
கரத்தால் வரைமகடான் பாதி—பரையிடமாக்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு.

(இ-ள்.) உரை உணர்வுக்கெட்டா ஒருவன் - மனவாக்குக் காயங்களுக்கெட்டாத ஒப்பற்றபரமேசுவரன்,—மிகு பஞ்சாக்கரத்தால் கருணை உருக்கொண்டு - மேலான பஞ்சாக்கரத்தினாலும் கருணையினாலும் திருமேனிகொண்டு,—பரை இடமா - பராசத்தியாகிய திருவம்பலமிடமாக நின்று,—பாதி வரைமகடான் காணும்படியே - பாதியாகிய மலையரையன் மகள் காணும்படிக்கு,—ஆடல் பேணுமவர்க்குப்பிறப்பு உண்டோ-திருக்கூத்தை விரும்பினவர்களுக்குப் பின்பு பிறவியில்லையாம் என்க. (௩அ)

**நா**தாந்த நாடகத்தை நன்றா வருள்செய்தி
ரோதீ ரெழுத்தஞ்சு முள்ளபடி—தீதறவே
யஞ்செழுத்தீ தாகி லழியுமெழுத் தாய்விடுமோ
தஞ்ச வருட்குருவே சாற்று.

(இ-ள்.) நாதாந்த நாடகத்தை நன்றா அருள்செய்தீர்-தத்துவாதீதமாயிருக்குந் திருக்கூத்து முறைமையை நன்றாக அருள்செய்தீர்,—அஞ்செழுத்து ஈதாகில் அழியும் எழுத்தாய்விடுமோ ஓதீர் - பஞ்சாக்கரம் இவ்வெழுத்துகளிலே யொன்றாயிருக்குமாகில் அழிகிற வெழுத்துக்களாமோ சொல்வீர்,—தஞ்ச அருட்குருவே-புகலிடமாயிருக்குங் கிருபை

யுடைய தேசிகரே,—தீதறவே எழுத்தஞ்சும் உள்ளபடி சாற்று - ஆதலாற் குற்றமறப் பஞ்சாக்கரத்தின் றன்மையை உண்மையாக அடியேனுக்கு அருள்செய்யவேண்டும் என்க. (௩௯)

உற்ற குறியழியு மோதுங்காற் பாடைகளிற்
சற்றும் பொருடான் சலியாது—மற்றதுகே
ளீசனரு ளாவி யெழிலார் திரோதமல
மாசிலெழுத் தஞ்சினடை வாம்.

(இ-ள்.) ஓதுங்கால் - சொல்லுமிடத்து,—உற்றகுறி அழியும் - பொருந்தப்பட்ட வெழுத்துகளுடைய குறிகளழியும்,—பாடைகளிற் பொருடான் சற்றுஞ் சலியாது - பதினெண்பாஷைகளிலே உண்டானபொருள்கள் சற்றுங்கெடாது,—மற்றது கேள் - ஆதலால் அப்பஞ்சாக்கரத்தினுண்மையைச் சொல்லுவோங் கேள்,—ஈசன் அருள் ஆவி எழில் ஆர் திரோதம் மலம் ஆசில் அஞ்சு எழுத்தின் அடைவாம் - சிவன் அருள் ஆன்மா அழகுபொருந்திய திரோதம் மலம் ஐந்துங் குற்றமில்லாத பஞ்சாக்கரத்தின் பொருண்முறைமையாம் என்க. (௪0)

சிவனருளாவி திரோதமல மைந்து
மவனெழுத் தஞ்சி னடைவா—மிவனின்று
நம்முதலா வோதிலரு ணடாது நாடுமருள்
சிம்முதலா வோதுநீ சென்று.

(இ-ள்.) சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும் அவன் அஞ்சு எழுத்தின் அடைவாம் - சிவன் அருள் ஆன்மா திரோதம் மலம் ஐந்தும் பரமேசுவரனுடைய பஞ்சாக்கரத்தின் பொருள் முறைமையாயினும்,—இவன் நின்று - பக்குவப்பட்ட ஆன்மாநின்று,—நம்முதலா ஓதில் அருள் நாடாது - நகாரமுதலாக வுச்சரிக்கில் அருள்பொருந்தாது,—சிம்முதலா நீ சென்று ஓது அருள் நாடும் - சிகாரமுதலாக நீ பொருந்தி உச்சரிப்பாயானல் அருள் பொருந்தும் என்க. (௪௧)

அண்ணன் முதலா வழகா ரெழுத்தைந்து
மெண்ணி லிராப்பகலற் றின்பத்தே—நண்ணி
யருளா னதுசிவத்தே யாக்கு மணுவை
யிருளா னதுதீர வின்று.

(இ-ள்.) அண்ணல் முதலா அழகார் எழுத்து ஐந்தும் எண்ணில் - சிவமுதலாகச்சொல்லும் பொருளுடைய அழகுபொருந்திய அக்கரம் அஞ்சையும் (இடைவிடாது) தியானித்தால்,—அருளானது நண்ணி - அருளானது பொருந்தி,—அணுவை இன்று இருளானது தீர இராப்பகல் அற்ற இன்பத்தே சிவத்தே ஆக்கும் - ஆன்மாவை இப்போதே மலவிருள் நீங்கும்படி கேவல சகலங்கள் நீங்கிய விடத்தே ஆனந்த வுருவத்தையுடைய சிவத்தின் கண்ணே சேர்க்கும் என்க. (௪௨)

ஆதி மலமிரண்டு மாதியா வோதினுஞ்
சேதியா மும்மலமுந் தீர்வாகா—போத
மதிப்பரிதா மின்பத்தே வாழலா மாறி
விதிப்படியோ தஞ்செழுத்து மே.

(இ-ள்.) ஆதி மலம் இரண்டும் ஆதியா ஓதினற் சேதியா மும்மல மும் தீர்வாகா - ஆதியாகிய நகாரம் மகாரம் இரண்டும் அடியாக வுச்சரித்தால் உறுதியாக மும்மலமு நீங்கமாட்டாது,—மாறி ஓது விதிப்படி அஞ்செழுத்துமே (ஓதினல்) போதம் மதிப்பு அரிதாம் இன்பத்தே வாழலாம் - சிவமுன்னுக மாறி ஓதும் விதிப்படி திருவெழுத்தஞ்சையும் உச்சரித்தால் ஆன்ம போதத்தால் மதித்தற் கரிதாகிய பேரின்பத்தே வாழலாம் என்க. (௬௩)

அஞ்செழுத்தே யாகமமு மண்ண லருமறையு
மஞ்செழுத்தே யாதிபுரா ணம்மனைத்து—மஞ்செழுத்தே
யாநந்த தாண்டவமும் யாவைக்கு மப்பாலா
மோனந்த மாமுத்தி யும்.

(இ-ள்.) அண்ணல் அருமறையும் ஆகமமும் அஞ்செழுத்தே - பரமேசுவரன் அருளிய அரியவேதாகமங்களும் பஞ்சாக்கரமே,—ஆதிபுராணம் அனைத்தும் அஞ்செழுத்தே - முதன்மைபெற்ற புராணங்களனைத்தும் பஞ்சாக்கரமே,—ஆநந்த தாண்டவமும் யாவைக்கும் அப்பாலாம் மோனந்த மாமுத்தியும் அஞ்செழுத்தே - ஆனந்த நடனமும் தத்துவாதீதமாகிய மௌனமா யிருக்கும் பரமுத்தியும் பஞ்சாக்கரமே என்க. ()

முத்தி தனையடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை யிவையிற்றி—னொத்த
விரதமணம் வெம்மை யெழினாதம் போல
விரவுவரொன் றோதும் விதி.

(இ-ள்.) முந்து பழம் போது அங்கி வித்தகமாம் வீணை இவையிற்றின் ஒத்த இரதம் மணம் வெம்மை எழில் நாதம்போல - முதிய பழமும் மலரும் அக்கினியும் விசித்திரமாகிய வீணையும் ஆகிய இவற்றின் (முறையே) இணங்கிய இரதமும் மணமும் வெம்மையும் அழகிய ஓசையும் போல,—முத்திதனை அடைந்தோர் விரவுவர் என்று விதி ஓதும் - பரமுத்தியைப்பெற்றவர் இரண்டறச் சிவத்திற் கலந்திருப்பரென்று வேதாகமங்கள் விதியாகச் சொல்லும் என்க. (௬௫)

தத்துவங்க ளெல்லாஞ் சகசமா வான்மாவிற்
பெத்தத்தி னிற்கின்ற பெற்றிபோன்—முத்திதனிற்
சித்தமல மற்றார் செறிந்திடுவ ரென்றுமறை
சத்தியமா வோதியிடுந் தான்.

(இ-ள்.) பெத்தத்தில் தத்துவங்க ளெல்லாம் ஆன்மாவிற் சகசமா நிற்கின்ற பெற்றிபோல் - பெத்ததசையிலே தத்துவங்களெல்லாம் ஆன்மாவினிடத்திலே இரண்டறநிற்கு முறைமைபோல,—முத்திதனிற் சித்த மலம் அற்றார் செறிந்திடுவரென்று சத்தியமா மறை ஓதியிடுந் தான் - முத்திதசையிலே சகசமல மற்றவர்கள் சிவனிடத்திலே இரண்டறப் பொருந்தி நிற்பார்களென்று சத்தியமாக வேதாகமங்கள் சொல்லும் என்க.()

ஆதவன்றன் சந்நிதியி லம்புலியி னார்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோ—னாதாந்தத்
தண்ண றிருவடியி லான்மா வணைந்தின்பக்
கண்ணி லழுந்தியிடுங் காண்.

(இ-ள்.) ஆதவன்றன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி பேதம் அற நிற்கின்ற பெற்றிபோல் - ஆதித்தப்பிரகாசத்தின் முன்னே சந்திரப்பிரகாசமானது இரண்டறநிற்கு முறைமைபோல,—நாதாந்தத்து அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்து - தத்துவாதீதமாயிருக்கின்ற சிவபிரான் திருவடியிலே ஆன்மாப்பொருந்தி,—இன்பக் கண்ணில் அழுந்திவிடுங்காண் - பேரின்பத்திலே இரண்டறப் பொருந்துமென்றறிவாயாக என்க.

சென்றிவன்றா னொன்றிற் சிவபூ ரணஞ்சிதையு
மன்றவன்றா னொன்றுமெனி லந்நியமா—மின்றிரண்டு
மற்றநிலை யேதென்னி லாதித்த னந்தன்விழிக்
குற்றமற நின்றதுபோற் கொள்.

(இ-ள்.) இவன்றான் சென்று ஒன்றில் சிவபூரணஞ் சிதையும் - ஆன்மா சிவனைச்சென்று பொருந்துவனாகில் சிவனுக்குப் பூரணத்துவமில்லையாக வேண்டும்,—அவன்றான் ஒன்றுமெனில் அன்று அந்நியமாம்-சிவன் ஆன்மாவைச்சென்று பொருந்துவனாகில் அப்போது ஆன்மா வேறாயிருக்கவேண்டும்,—இரண்டும் அற்ற நிலை ஏதென்னில் - இரண்டு முறைமையுமல்லாமல் நின்ற நிலை எங்ஙனமெனில்,—இன்று ஆதித்தன் அந்தன் விழிக்குற்றம் அற நின்றதுபோற் கொள் - இப்போது அந்தகனுக்குப் படலநீங்கின காலத்து ஆதித்தனொளியுங் கண்ணொளியும் இரண்டறக் கலந்து நின்றாற்போலுமெனக் கொள்வாய் என்க. (சஅ)

வாக்கு மனமிறந்த வான்கருணை யாளனுருத்
தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா—நீக்காப்
பதியினைப்போ னித்தம் பசுபாச மென்றாய்
கதியிடத்து மூன்றினையுங் காட்டு.

(இ-ள்.) வாக்கு மனம் இறந்த வான் கருணையாளன் உருத்தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா - மனவாக்குக்களுக் கெட்டாத அருளே வடிவாய் உலகத்திலே தாக்கற்று நிற்கும் ஒப்பற்ற கர்த்தாவே,—நீக்காப் பதியினைப்போற் பசுபாசம் நித்தமென்றாய் - விட்டு நீங்காமலிருக்கும் பதியினைப்போற் பசுவும்பாசமு நித்தியமென் றருளிச்செய்தாய்,—கதியிடத்தும் மூன்றினையுங் காட்டு - முத்தியிலும் அம்மூன்று முதலும் அழியாமனிற்கிற முறைமையை அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும் என்க. (சகூ)

முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவநு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
யின்பங்கொ டுத்தலிறை யித்தைவிளை வித்தன்மல
மன்புடனே கண்டுகொளப் பா.

(இ-ள்.) அப்பா முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள் - மாணவகனே முத்தியிலும்பதிபசுபாசங்களாகிய மூன்றுமுதலும் அழியாமனிற்கு முறைமையைச் சொல்லுவாங்கேள்,—சுத்த அநுபோகத்தைத் துய்த்தல் அணு - சுத்தமாகிய ஆனந்தானுபூதியை அநுபவிப்பது ஆன்மா,—இன்பம் மெத்தவே கொடுத்தல் இறை - ஆநந்தத்தை மிகுதியுங் கொடுப்பது கர்த்தா,—இத்தை விளைவித்தல் மலம் - அவ்வாநந்தத்தை மேன்மேலும் விளைவிப்பது மலம்,—அன்புடனே கண்டுகொள் - (இவற்றை) அன்போடு கண்டுகொள்வாய் என்க. (ரு0)

அப்பாவிம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பா யருளாலே செப்பக்கே—ளொப்பில்
குருலிங்க வேடமெனக் கூறிலிவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண்.

(இ-ள்.) இம்முத்திக்கு அழியாத காரணந்தான் அருளாலே செப்பாய் அப்பா செப்பக்கேள் - இப்பரமுத்திக்கு அழியாத ஏதுவைக் கருணையினாலே அருளென்ற மாணவகனே சொல்லக்கேளாய்,—ஒப்பில் குருலிங்கவேடமெனக் கூறில் - (அக்காரணம்) ஒப்பில்லாத குருலிங்க சங்கம வழிபாடென்று (சிவாகமம்) செப்புமாதலால்,—இவை கொண்டார் - இம்முப்பொருளின் வழிபாட்டை உண்மையாகக்கொண்டவர்,—கரு ஒன்றி நில்லார்கள் காண் - கருப்பத்திலே பொருந்திப் பிறந்திறவார்களென்று அறிவாய் என்க. (௫௧)

கற்று மனம்போற் கசிந்து கசிந் தேயுருகி
யுற்றுசான் லிங்க முயர்வேடம்—பற்றாக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனி னின்றிடுவர் பார்.

(இ-ள்.) கற்று மனம்போற் கசிந்து கசிந்தே உருகி உற்று - ஈன்றண்ணியகன்றையுடைய பசுவைப்போலப் பெரிதுங் கசிந்துருகி அமைந்து,—ஆசான் லிங்கம் உயர் வேடம் பற்றாக - சிவதேசிகனையும் சிவலிங்கப் பெருமானையும் உயர்ந்த சிவவேடத்தாரையும் பொருளாகக்கொண்டு,—முத்தித்தலைவர் முழுமலத்தை மோசிக்கும் பத்திதனில் நின்றிடுவர் பார்- சீவன்முத்தியினிற்குந் தலைவரும் மலவாசனை முற்றும் ஒழித்தற் கேதுவாகிய அன்புசெய்யும்வழியே ஒழுகுவர் (ஆதலால் நீயும் அவ்வன்பின் வழியை) நோக்குவாய் என்க. (௫௨)

வாழ்ந்தே னருட்கடலே வற்றாப் பவக்கடலில்
வீழ்ந்தே யலையாமன் மேதினியிற்—சூழ்ந்துவிடா
வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே
யுண்மைத் தவப்பயனே யுற்று.

(இ-ள்.) சூழ்ந்துவிடா வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்டநாதனே - (மெய்யன்பர்) சூழ்ந்துநீங்காத திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கின்ற சுவேதவனப்பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமத்தையுடைய மெய்கண்டதேவனே,—அருட்கடலே - கிருபாசமுத்திரமே,—உண்மைத் தவப்பயனே - உண்மையாகிய சரியைமுதலிய தவத்தினர்க்குப் பயனாயுள்ளவனே,—வற்றாப் பவக்கடலில் வீழ்ந்தே மேதினியில் அலையாமல் உற்று வாழ்ந்தேன் - வற்றாதபிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து உலகவியலிற் சுழலாது (முத்திக்களையாகிய உனது திருவடியை) அடைந்துவாழ்ந்தேன் என்க. (௫௩)

## உண்மைவிளக்கமுற்றியது.

மனவாசகங்கடந்ததேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி - உமாபதிதேவநாயனார்

அருளிச்செய்த

# சிவப்பிரகாசம்.

காப்பு.

கலிவிருத்தம்.

ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வரும்யானை கழனாளு மறவாம
லளியாளு மலர்தூவு மடியார்க ளுளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

(இதன்பொருள்.) ஒளியான திருமேனி - ஞானப்பிரகாசமான திருமேனியையும்,—உமிழ் தானம் மிகமேவு களி-கவுட்சுவடுமிழாநின்ற மதமிகப்பெருகுகின்ற அருட்களிப்பினையுமுடைய,—ஆரவரும்யானைகழல் நாளும் மறவாமல்-(தியானிப்போர் கண்ணும் மனமும்) நிறையவெளிப்படுகின்ற யானைமுகத்தனாகிய கணபதியினுடைய சீர்பாதங்களை நாடோறுமறவாமல்,—அளி ஆளும் மலர்தூவும் அடியார்கள் உளமான-(செவ்வியால்) வண்டுகளை யாளாநின்ற மலர்களையிட்டு வழிபடுகின்ற அடியவருள்ளமானவைகள்,—வெளி ஆகும்-(முன்புண்டான அஞ்ஞானவிருணீங்கிஞானப்)பிரகாசமாம்,—வலிதாய வினைகூட நினையாவே-(பின்பு) வன்மையதான(மூவித)வினைகளும் (அவர்களைப்) பொருந்தவிசாரியா என்க.

யானை ஆகுபெயர். அவன் யாண்டுஞ்செறிந்து போக்குவரவின்றி நிற்றலின் வருதல் ஈண்டுவெளிப்படுதன்மேற்று. வினைசாதியொருமையாதலின் வலிதென்றார்.

இது கடவுள்வணக்கத்திற்கு முதற்பொதுவாகத்துதித்த விநாயகர்துதி.

## மங்கலவாழ்த்து.

நடராஜர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஓங்கொளியா யருண்ஞான மூர்த்தி யாகி
யுலகமெலா மளித்தருளு முமையம்மை காணத்
தேங்கமழு மலரிதழி திங்கள் கங்கை
திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து
நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்று
ணின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ் செய்யும்
பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியினு முறவணங்கிப் போற்றல் செய்வாம்.

(இ-ள்.) ஓங்கு ஒளியாய் - (அநாதிமல விருளை நீக்குதலின் எல்லாவொளியினும்) உயர்ந்தவொளியாய்,-அருள் ஞானமூர்த்தியாகி -(அநாதி

மலமுத்தனுதலிற் றன்னுடைய) கருணையான ஞானமே திருமேனியாக வுடைய நிட்கள சிவனானவன்,—உலகமெலாம் அளித்தருளும் உமை அம்மை காண - பிரபஞ்சத்தையெல்லா முண்டாக்கா நின்ற கிரியாசத்தி யான உமையென்னுந் திருநாமத்தைப்பெற்ற எல்லா உயிர்க்குந் தாயான வள் காண,—தேங்கமழும் மலர் இதழி திங்கள் கங்கை திகழ் அரவம் வளர் சடைமேற் சேரவைத்து - மணநாறுகின்ற விரிந்த கொன்றைமாலை யினையும் ஞானசந்திரகலையினையுங் கங்காநதியினையும் விளங்காநின்றபாம் பினையும் நீண்ட சடைமேலே பொருந்தவைத்து,—நீங்கல் அரும் பவத் தொடர்ச்சி நீங்க மன்றுள் நின்று - விட்டு நீங்குதற்கரிய பிறவித்தொட ர்ச்சி (தன்னுடல் கண்டோரைவிட்டு) நீங்கும்படி சிற்றம்பலத்துள்ளே நிலைபெற்று,—இமையோர் துதிசெய்ய நிருத்தஞ் செய்யும் - தேவர்கள் துதிப்ப (ஞான) க்கூத்தையாடியருளும்,—பூங்கமல மலர்த்தாள்கள் - பொலிவினையுடைய தாமரை மலர்போன்ற சீர்பாதங்கள்,—சிரத்தின்மே லும் புந்தியினும் உற வணங்கிப் போற்றல் செய்வாம் - (எம்முடைய) தலைமேலும் இதயத்துள்ளும் பொருந்தும்படி (யாம்) வணக்கஞ்செய்து துதிப்பாம் என்க.

ஆகி என்பது பெயர். இனி அருளாயெனமாறி ஒளியையெழுவாய்ாக்கலுமாம். செய்யுந்தாள்களென்புழி முதலொடுசினைக்கு ஒற்றுமைகருதி முதல்வினை சினைமே லேற்றப்பட்டது.

இது நிட்களபரமசிவனைத் துதித்தலுணர்த்திற்று. (௧)

### சிவகாமியம்மையார்.

பரந்தபரா பரையாதி பரன திச்சை
பரஞானங் கிரியைபர போக ரூபந்
தருங்கருணை யுருவாகி விசுத்தா சுத்த
தனுகரண புவனபோ கங்க டாங்க
விரிந்தவுபா தானங்கண் மேவி யொன்றாய்
விமலமா யைந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்
தரந்தைகெட மணிமன்று ளாடல் காணு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

(இ-ள்.) பரந்த பராபரை - (எங்கும்) வியாபகமான மேலான பரா சத்தி,—ஆதி - திரோதானசத்தி,—பரனது இச்சை - பரமசிவனுடைய இச்சாசத்தி,—பரஞானம் - மேலான ஞானசத்தி,—கிரியை - கிரியாச த்தி,—பரபோகரூபந்தரும் - (ஆன்மாக்களுக்கு அநாதியிலுண்டான) மேலான அனுபவ சொரூபத்தைக் கொடுக்கும்,—கருணையுருவாகி - கரு ணைவடிவாய்,—விசுத்தாசுத்த தனுகரண புவனபோகங்கள் தாங்க - சுத் தா சுத்தங்களான தனுகரண புவனபோகங்களைத் தரித்தற்கு,—விரிந்த உபாதானங்கள் மேவி - விரிந்த முதற்காரணங்களாகிய விந்து மோகி னி மான் மூன்றையும் பொருந்தி,—ஒன்றாய் விமலமாய் - (எவற்றிற்கும்) ஒருமுதலாய் நின்மலமாய்,—ஐந்தொழிற்கும் வித்தாய் - பஞ்சகிர்த்தி யங்களுக்குங் காரணமாய்,—ஞாலத்து அரந்தைகெட - பூலோகத்தி லுள்ளாருடைய பிறவித்துயர்கெட,—மணி மன்றுள் ஆடல் காணும் அன்னை - அழகிய சிற்றம்பலத்துள் ஆடுதலைக்கண்டருளும் எவ்வுயிர்க்

கு் தாயானவள்,—அருட்பாதமலர் சென்னி வைப்பாம் - அவளுடைய கிருபையாகிய சீர்பாதமலர்களைச் சென்னிமேல் வைத்து (யாம்) வணங்குவாம் என்க.

படைப்புமுதலிய வைந்துவிதசத்தியும் நிவிர்த்திமுதலிய கலைகளிற் பதிதலிற் சாந்தியானவாதிதிரோதாயியாம். பராபரை ஆதி இச்சை ஞானங் கிரியையாகிய அன்னையெனக் கூட்டுக. இனி பரைமுதலிய வைந்துமாகிக் கருணையுருவாகியென ஆகியென்பதை யீரிடத்து மேற்றலுமொன்று. இன்னும் பராபரை யாதியிலே பரனதிச்சாஞானக்கிரியைகளே கருணையுருவாயாடல்காணு மன்னையென இருபெயராக் கலுமொன்று. பரனதுவென்னுமுருபு பரைமுதலியவற்றோடியையும்.

இது அந்தப் பரசிவன் செய்கின்ற பஞ்சகிர்த்தியங்கட்கெல்லாம் உடனுன பராசத்தியைத் துதித்தலுணர்த்திற்று. (௨)

**விநாயகர்.**

நலந்தரநா விருதமிழின் செய்யுட் குற்ற
நண்ணுமை யிடையூறு நலியாமை கருதி
யிலங்குமிரு குழையருகு பொருதுவரி சிதறி
யிணைவேல்க ளிகழ்ந்தகயற் கண்ணியொடு மிறைவன்
கலந்தருள வருமானை முகத்தான் மும்மைக்
கடமருவி யெனநிலவு கணபதியி னருளா
லலர்ந்துமது கரமுனிவர் பரவவளர் கமல
மனையதிரு வடியிணைக ணினைதல் செய்வாம்.

(இ-ள்.) இருந் தமிழ்நூற் செய்யுளின் குற்றம் நண்ணுமை நலம் தர - பெரிய தமிழ்நூற் செய்யுளிடத்து (ப் பஞ்சாதிகார) க் குற்றம் பொருந்தாமல் (அவற்றுட்கூறிய) நன்மை தருதற்பொருட்டும்,—இடையூறு நலியாமை - (இந் நூன்முடியுமளவும்) இடையே தீங்குவந்து வருத்தாமலும்,—கருதி - நினைத்து,—இலங்கும் இரு குழை அருகு பொருது - விளங்காநின்ற இரண்டு மகரக்குழையளவுஞ்சென்று யுத்தம்பண்ணி,—வரி சிதறி இணை வேல்கள் இகழ்ந்த - செவ்வரிபரந்து இரண்டுவேல்களைப் பழித்த,—கயற்கண்ணியொடும் இறைவன் கலந்து அருள - கயற்கண்ணியாகிய வுமையோடும் இறைவன்கூடிப் பெறுதலான்,—மும்மைக்கடம் அருவியென நிலவு ஆனைமுகத்தான் வருங் கணபதியின் - மூவகைமதமும் அருவிபோல விளங்கப்படாநின்ற யானைமுகத்துடனே அவதரித்தருளின விநாயகனுடைய,—மதுகரம் முனிவர் பரவ அருளால் அலர்ந்து வளர் - வண்டுகளாகிய இருடிகள் பரவுதல்செய்யக் கருணையால் விரிந்துவளராநின்ற,—கமலம் அனைய திருவடி இணைகள் நினைதல் செய்வாம் - தாமரைப்பூவை யொத்த இரண்டு சீர்பாதங்களை (யாம்) தியானிப்பாம் என்க.

முகத்தானுகிய கணபதியெனினுமாம். இருந்தமிழ்நூற்செய்யுளின் குற்றநண்ணுமை நலந்தரவெனமாறுக. உம்மைகள் தொக்கன. வேல்களையென இரண்டாமுருபுவிரிக்க. மும்மைக்கடம் யானைக்கடை. பிள்ளையார்க்கு இருமதமேயுள; ஒருமருப்பிருமதக்கடவுளென்முர் பிறவாசிரியரும். கண்ணியொடும் உம்மை சிறப்பு. முகத்தான் ஆன் ஒடுவாயிற்று.

இது அந்தச்சத்தியுடனே சிவன்கூடின விடத்தே அவதரித்த விநாயகனைச் சிறப்பாகத் துதித்தலுணர்த்திற்று. (௩)

சுப்பிரமணியர்.

வளநிலவு குலவமரர் பதியாய் நீல
மயிலேறி வருமீச னருண்ஞான மதலை
யளவில்பல கலையங்க மாரணங்க ளுணர்ந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மண்ணல்விற லெண்ணு
வுள்மருவு சூரனுர மெமதிடும்பை யோங்க
லொன்றிரண்டு கூறுபட வொளிதிகழ்வே லுகந்த
களபமணி குறமகடன் மணிமுலைகள் கலந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம்.

(இ-ள்.) வள நிலவு குல அமரர் பதியாய் - செல்வம் விளங்கிய நல்ல தேவர்களுக்குச் சேனாபதியாய்,—நீலமயில் ஏறி வரும் ஈசன் அருள் ஞான மதலை - நீலநிறத்தையுடைய மயிலேறி (வரங்கொடுத்தற்கு எழுந்தருளி) வருகின்ற சர்வேசுரன் அருளிய ஞானப்பிள்ளை,—அளவில் பலகலை அங்கம் ஆரணங்கள் உணர்ந்த அகத்தியனுக்கு ஓத்து உரைக்கும் அண்ணல் - அளவிறந்த பலநூல்களும் ஆறங்கமும் வேதங்களும் அறிந்த அகத்தியமாமுனிவனுக்கு வேதப்பொருளை உபதேசிக்குங் குரவன்,—எண்ணு விறல் உளம் மருவு சூரன் உரம் - எண்ணப்படாத வீரப்பாட்டை யுள்ளத்தின்கண்ணே (எப்பொழுதும் மமதையால்) வைத்திருக்குஞ் சூரனுடையமார்பும்,—எமது இடும்பை - எம்போல்வாருடைய பிறவித்துன்பமும்,—ஓங்கல் - கிரவுஞ்சகிரியும்,—ஒன்று இரண்டு கூறுபட ஒளிதிகழ் வேல் உகந்த - (இவைமூன்றும்) ஒவ்வொன்றிரண்டு கூறுபடும்படி ஒளி விளங்கிய வேலை உயர்த்துவிட்ட,—குறமகடன் களபமலி மணி முலைகள் கலந்த கந்தன் மலர் அடி இணைகள் சிந்தை செய்வாம் - குறமகளான வள்ளி நாயகியுடைய பலகூட்டுச்செறிந்த அழகிய திருமுலைகளைக் கூடியருளின கந்தனென்னுந் திருநாமத்தை யுடையவனுடைய மலர்போலுந் திருவடியிணைகளை (யாம்) சிந்திப்பாம் என்க.

மதலை ஈண்டு முருகனென்னும் பெயர்மாத்திரையாய் வருமென்னும் பெயரெச்சத்திற்கு முடிபாய் நின்றது. அதிபதியாய் வருமென்க. மதலையண்ணலாகிய கந்தனெனக்கூட்டுக. எண்ணுவிறலெனவுங் குறமகடன் களபமலிமணிமுலைகளெனவு மாறுக. உவந்தவென்றுபாடமாக்கி வேலிலே திருவுளமகிழ்ந்தவனென்பாருமுளர். அயிற்குலவேல்போலக் குலவமரரென்பது நல்ல தேவரென்றுரைக்கப்பட்டது. உரம் இடும்பை ஓங்கலென் னுஞ் செவ்வெண்ணின் றொகைதொக்கு நின்றது. உகந்த கலந்த கந்தனென்க. இந்நான்குசெய்யுளுக்கும் யாமென் னுந் தோன்றாவெழுவாய் வருவிக்கப்பட்டன்.

இது அந்த விநாயகனுக்குப்பின் அவதரித்த இளையபிள்ளையாரைத் துதித்த வுணர்த்திற்று. (ச)

சந்தானகுரவர்.

தேவர்பிரான் வளர்கயிலை காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியா வெண்ணெய்

மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறு
　　விரவுபுக ழருணந்தி விறலார் செல்வத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச்
　　சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே.

(இ-ள்.) தேவர்பிரான் வளர் கயிலை காவல் பூண்ட திருநந்தி - ஸ்ரீகண்ட பரமேசுரன் அமர்ந்தருளாநின்ற கயிலைமலைக் காவல்பூண்ட சிறப்பினையுடைய நந்திபெருமான்,—அவர்கணத்து ஓர்செல்வர் - அவருடைய கூட்டத்தில் ஒருசெல்வரான சனற்குமாரமுனிவர்,—பாரிற் பாவிய சத்தியஞான தரிசனிகள் - இவ்வுலகத்தின்கண்ணே (உண்மைப்புகழ்) விரிந்த சத்தியஞானதரிசனிகள்,—அடிசேர் பரஞ்சோதி மாமுனிகள் - அவருடைய திருவடியைச்சேர்ந்த பரஞ்சோதிமாமுனிவர்,—வெண்ணெய்பதியா மேவியசீர் மெய்கண்ட திறலான் - (தமக்கு எப்பதியும் பதியாயினும்) திருவெண்ணெய் நல்லூரே பதியாகப்பொருந்தின சிறப்பினையுடைய மெய்கண்டதேவரென்னு ஞானவீரர்,—மாறுப்புகழ்விரவு அருணந்தி - ஒழியாதபுகழ்பொருந்திய அருணந்திதேவர்,—விறல் ஆர் செல்வத்தாவில் அருண் மறைஞானசம்பந்தர் - ஞானவீரம் நிறைந்த செல்வத்தோடு கெடாத திருவருளையுடைய மறைஞானசம்பந்தர்,—இவர் இச்சந்தானத்து எமை ஆளுந் தன்மையோரே - ஆகிய இவ்வெழு குரவரும் இந்தச்சந்தானத்திலே எம்மையாளுமியல்புடையார் என்க.

அடிசேரென்பதனை யெங்குந்தந் துரைக்க. நந்தியவரென ஒருமைப்பன்மை மயங்கிற்று. பதியாம்வெண்ணெயென்பதூஉம்பாடம். செவ்வெண்ணின்றொகை விகாரத்தாற்றொக்கது.

இது மெய்கண்டசந்ததியின் சாம்பிரதாயத்தை நான்முகத்தாலும் உபதேசத்தாலும் அருளிய சந்தானகுரவர் திருவடியடைவுணர்த்திற்று. (௫)

மறைஞானசம்பந்தர்.

பார்திகழ வளர்சாம வேத மல்கப்
　　பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி யெம்மை யாண்ட
　　சைவசிகா மணிமருதத் தலைவ னந்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதின்மீதே மதியங்
　　கடவாமை நெடுங்கொடியின் காந்தகையுங் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்த னெந்தை
　　திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம்.

(இ-ள்.) வளர் சாமவேதம் மல்க - (ஆயிரஞ்சாகை) வளர்கின்றசாமவேதம் பொலிவுபெறவும்,—பராசரமாமுனி மரபுபயில - பராசரப்பிரமவிருடிகோத்திரம் இடையறாது நிலைபெறவும்,—ஞானச் சார்புதர - எம்போல்வார்க்கு ஞானமாகிய பற்றுக்கோடுதரவும்,—பார்திகழ வந்தருளி - நிலவுலகத்தின்கண்ணே (திருமேனிகொண்டு) விளங்கவெழுந்தருளிவந்து,—எம்மை ஆண்ட சைவசிகாமணி - எம்மையடிமையாகக்கொண்ட சைவசூளாமணி,—மருதத் தலைவன் - மருதூர்க்கிறைவன்,—அந்தண் கார்மருவு பொழில் புடைசூழ் மதில்மீதே - அழகிய குளிர்ந்த மேகம் பொருந்திய சோலை

புடைசூழப்பட்ட மதிலின் மேலே,—மதியங் கடவாமை நெடுங்கொடியின் கரம் தகையும் சீர்நிலவு கடந்தை-சந்திரன் கடவாதபடி நெடுங்கொடிகளாகிய கைகள் தகையுஞ் சிறப்புவிளங்கிய பெண்ணாகடமென்னுந் திருநகரையுடைய,—மறைஞான சம்பந்தன் - மறைஞானசம்பந்தனென்னுந் திருநாமத்தையுடையான்,—எந்தை - எம்முடைய அத்தன்,—திருவளரும் மலர் அடிகள் சென்னிவைப்பாம் - (அவனுடைய) அழகுவளராநின்ற மலர்போலுந் திருவடிகளை (யாந்)தலைமேற்புனைவாம் என்க.

செயவென்னும் வினையெச்சவடுக்குக்களின் உம்மை தொகப்பட்டு வந்தருளியென்னும் வினையோடுமுடிந்தன. பார்திகழவென்பதற்குப் பூலோகம் விளங்கவுமென்று செவ்வேயுரைப்பினுமாம். பயிலுதல் இடையறுமை. சீர்நிலவு கடந்தையென மொழிமாறுக. கொடியின் இன் அல்வழிச்சாரியை; கண்ணின்வலேசலங்கொன்றாற் போல.

இது இந்நூலாசிரியர் தமக்கு நேரே குரவரான மறைஞானசம்பந்ததேசிகனைச் சிறப்பாகத்துதித்தலுணர்த்திற்று. (சு)

## நூற்கருத்து.

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
வறத்திறனல் வினைவதா யுடலுயிர்கண் ணருக்க
னறிவொளிபோற் பிரிவருமத் துவித மாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்.

(இ-ள்.) புறச்சமயத்தவர்க்கு இருளாய் - உலகாயதன் புத்தன் சமணன் மீமாம்சன் மாயாவாதி பாஞ்சராத்திரியென்னும் புறச்சமயிகள் அறுவர்க்கும் இருளாய்,—அகச்சமயத்து ஒளியாய் - சைவம் பாசுபதம் காளாமுகம் வயிரவம் வாமம் மாவிரதம் என்னும் உட்சமயிகள் அறுவர்க்கும் விளக்கமாய்,—புகல் அளவைக்கு அளவாகி - சொல்லப்பட்ட காட்சி முதலிய அளவைகட்கு மட்டாய்,—பொற்பணிபோல் அபேதப் பிறப்பு இலதாய் - பொன்னும் பணியும்போற் பேதமில்லாத தோற்றமில்லதாய்,—இருள் வெளிபோற் பேதமும் சொற்பொருள்போற் பேதாபேதமும் இன்றி - இருளும் வெளியும்போலப் பேதமும் சொல்லும் பொருளும் போலப் பேதாபேதமுமில்லாமல்,—பெருநூல் சொன்ன அறத்திறனால் விளைவதாய் - வேதாகமங்கள் கூறிய சிவதன்மங்களின் கூற்றினாலே யுண்டாவதாய்,—உடல் உயிர் கண் அருக்கன் அறிவு ஒளிபோற் பிரிவரும் அத்துவிதமாகுஞ் சிறப்பினதாய் - உடலுமுயிருங் கண்ணுமருக்கனும் ஆன்மபோதமுங்கண்ணொளியும் போல வேற்றுமையில்லாத அத்துவித மாகுஞ்சிறப்பினையுடையதாய்,—வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்தத்

திறன் இங்குத் தெரிக்கல் உற்றும் - வேதத்தின் முடிவிலே தெளிவான சைவசித்தாந்தத்தினுண்மையை இந்நூலுள் விளங்கச்சொல்லுவாம் என்க.

புறமும் அகமுமான சமயிகள் பன்னிருவர் கருத்துக்களை விரிந்தநூலிற்கண்டு கொள்க. ஈண்டுரைப்பிற்பெருகும். அபேதங்கொள்ளிற் பொன்னும் பணியு மற்றொன்றொன்றற்போல எல்லார்க்குஞ் சுகதுக்கங்கள் ஒத்தல்வேண்டும்; பேதங்கொள்ளின் இருளுமொளியும்போலச் சிவனுமுயிருமெக்காலமும் பேதமேயாதலின் வேதாகமங்களிற் சாயுச்சியமென்றுசொல்வது பயனில்சொல்லாம்; பேதாபேதங்கொள்ளின் மோக்ஷஞ் சாதிக்கவேண்டுவதில்லையாம்; ஆகையால் அவைமூன்றும் நீக்கப்பட்டன.

இது நூற்கருத்துணர்த்திற்று.　　　　(எ)

---

## தீட்சாகிரமம்.

மூவகையா ருயிர்வர்க்க மலத்தார் கன்ம
　　மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமா மெனவுருவாய் வந்து நாதன்
　　திருநோக்காற் பரிசத்தாற் றிகழும் வாக்காற்
பாவனையான் மிகுநூலால் யோகப் பண்பாற்
　　பரவிவரு மவுத்திரியாற் பாச நாச
மேவவரு ளுதவுமவுத் திரியிரண்டு திறனும்
　　வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே.

(இ-ள்.) மலத்தார் கன்ம மூலமலத்தார் மூன்றுமுடையார் - ஆணவமலமொன்றேயுடைய விஞ்ஞானகலர் ஆணவமலமுங் கன்மமலமுமுடைய பிரளயாகலர் மூலமலங் கன்மமல மாயாமலமென்னு மூன்றுமலமுமுடைய சகலர் (ஆக),—ஆர் உயிர் வர்க்கம் மூவகை-நிறைந்த ஆன்மவர்க்கம் மூன்றுவிதப்பட்டிருக்கும்,—அன்றே - (இவர்க்கு இவை) அநாதியே,—நாதன் தீவகமாமென உருவாய் வந்து - (அம்மூவகையாருட் பக்குவரான சகலர்க்குப்) பரமசிவன் பார்வையிட்டு மற்றொன்று பிடிக்குமாறுபோலத் திருமேனி கொண்டுவந்து,—திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால் பாவனையால் மிகுநூலால் யோகப்பண்பால் பரவிவரும் அவுத்திரியால் பாசநாசம் மேவ அருள் உதவும் - (சிவத்தியானம்பண்ணி விழித்துப்பார்க்கின்ற) சட்சுதீட்சையாலும் (சிவவத்தம்வைக்கின்ற) பரிசதீட்சையாலும் (மூலப்பிரமாங்கங்களைத்தானுச்சரிக்கின்ற) வாசகதீட்சையாலும் (குண்டமண்டலாதியெல்லாம் மனோபாவகத்தாற் கற்பித்துச்செய்கின்ற) மானததீட்சையாலும் (விசேஷசமயாநந்தரம் காமிகமுதலிய மிக்கசித்தாந்தசாத்திரங்களையுபதேசிக்கின்ற) சாத்திரதீட்சையாலும் (தாரணைமுதலியயோகங்களை யுபதேசிக்கின்ற) யோகதீட்சையாலும் சொல்லப்பட்டுவருகின்ற (குண்டமண்டலாதிகளால் வெளிப்படச்செய்கின்ற மூவகை) அவுத்திரிதீட்சையாலும் மும்மலங்களும் நாசத்தையடைய அநுக்கிரகத்தைக் கொடுப்பன்,—அவுத்திரி - நிருவாணமான அவுத்திரிதீட்சையானது,—வியன் கிரியை ஞானம் என விளம்புமாறு இரண்டு திறனும் - பெரியகிரியாவதி ஞானவதியென்று சொல்லும்படி இரண்டு கூறும் என்க.

பண்பு முறைமை. பின்வந்த அவுத்திரி ஏற்புழிக்கோடலான் நிருவாணமாயிற்று. நாதனுதவுமெனவியையும். ஞானத்தாற்கலாதியற்றவர் விஞ்ஞானகலர். பிரளயத்திலே அவையற்றவர் பிரளயாகலர். கலாதிகூடினவர் சகலர் எனக்கொள்க. இதனைப்பவுட்கரத்திலே (ஸகளா கலபேதேந) "சகலாகலபேதேந" என்பதனாலறிக. தீவகமாமென்றமையான் "முன்னும்பின்னும் வருவழிக்கொளால்" என்னுந்தந்திரவுத்தியாற் சகலர்க்கென்பதுபெற்றாம். இனி தீவகமாமென்பதைச் சுடராக்கி விஞ்ஞானகலரிற் பக்குவர்க்கு ஞானச்சுடராய்வந்தென்றும், உருவாயென்பதற்குப் பிரளயாகலரிற் பக்குவர்க்கு அனந்ததேவநாயனாராக வந்தென்றும், தீவகமாமென வுருவாயெனக் கூட்டி முன்னுரைத்தவாறு முரைத்துத் திருநோக்குமுதலியவற்றைச் சகலர்க்காக்கிப் பாசநாசமேவ வருளுதவுமென்பதை மூவர்க்குமாக்கி முடிப்பினுமாம். ஆகவென ஒருசொல்வருவிக்க. பக்குவாபக்குவ பேதங்களாலே விஞ்ஞானகலர் நால்வர். பிரளயாகலர் மூவர். சகலர் மூவராகப் பதின்மராவாரெனவறிக. விரிக்கிற்பெருகும்.

இது அந்தப்பேற்றைப் பெறுகின்றவுயிர் இத்துணைப் பகுதியுடையனவென்பதூஉஞ் சகலர்க்குப் பரமசிவன் அநுக்கிரகிக்கு முறைமையுமுணர்த்திற்று. (அ)

விரும்பியமந் திராதிகார மர்ச்சனா திகார
மேவும்யோ காதிகார மெனச்சமய விசேடம்
வரும்பொருவி னிருவாண மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்க டத்துவங்கள் கலைக
ளிரங்கடைவிற்றொகைபதினொன்றெண்பத்தொன்றைம்பத்தொன்
றிருநூற்றே டிருபத்து நாலாறு றைந்திற்
பரந்தநெறி யறுவகையு மொருவிநினை வரிதாம்
பரபதத்து ளுயிர்விரவப் பயிற்று மன்றே.

(இ-ள்.) சமய விசேடம் - சமயவிசேடமாகிய தீட்சைகள் இரண்டும், —விரும்பிய மந்திராதிகாரம் அர்ச்சனாதிகாரம் மேவும் யோகாதிகாரமென வரும் - விரும்பப்பட்ட மந்திரங்களுக் கதிகாரம் அர்ச்சனைக்கதிகாரம் அதற்கினமாகப் பொருந்தப்பட்ட யோகத்துக்கதிகாரமென்று சொல்லப்பட்டு வரும்,—பொருவில் நிருவாணம் - ஒப்பற்ற நிருவாண தீட்சையானது,—மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் இரங்கு அடைவில் தொகை-மந்திரங்கண்முதலாகச்சொல்லப்பட்ட நிரனிறைத் தொகையான,—பதினொன்று எண்பத்தொன்று ஐம்பத்தொன்று இருநூற்றேடிருபத்து நாலு ஆறுறு ஐந்தில்-இவ்வெண்களையுடைய,—பரந்த நெறி அறுவகையும் ஒருவி - மந்திரங்கள் பதங்களாலும் பதங்கள் வன்னங்களாலும் வன்னங்கள் புவனங்களாலும் புவனங்கள் தத்துவங்களாலும் தத்துவங்கள் கலைகளாலும் வியாத்தமான வத்துவாவாறுகூற்றையு நீக்கி,—நினைவு அரிதாம் பரபதத்துள் உயிர் விரவப்பயிற்றும் அன்றே - நினைத்தற்கரிய மேலான இலய தத்துவத்திலே ஆன்மாப் பொருந்தும்படி பண்ணும் என்க.

எனவே சமயஞ் சரியாதிகாரம். விசேடங் கிரியாயோகங்கட்கதிகாரம். நிருவாணம் ஞானாதிகாரமென்பதாயிற்று. அதிகாரம் யோக்கியம். கிரியாயோகமிரண்டற்கும் அதிகாரமொன்றென்பதறிவித்தற்கு மேவுமென்றடைகொடுத்தார். அதிகாரமென்பதற்கு அதிகரிக்கை யென்றுரைப்பாருமுளர். அன்று ஏ அசை.

இது அங்ஙனமநுக்கிரகம் பண்ணுதற்குக் கருவியாகிய எழுவகையான தீட்சைகளில் வைத்து அவுத்திரிதீட்சை முப்பகுதிற்றென்று மவற்றுண் மூன்றும் பகுதியான நிருவாணஞ் சாயுச்சியத்தை யடைவிக்குமென்றுமுணர்த்திற்று. (கூ)

கிரியையென மருவுமவை யாவு ஞானங்
    கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கு முண்மை
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
    சாலோக சாமீப சாரூ பங்கண்
மருவியிடு முயர்ஞான மிரண்டா மாறு
    மலமகல வகலாத மன்னு போதத்
திருவருளொன் றொன்றதனைத் தெளிய வோதுஞ்
    சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே.

(இ-ள்.) கிரியையென மருவுமவை யாவும் ஞானங் கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும் - (சரியையாதி மூன்றுபாதத்திற்) கிரியையென்று பொருந்தப்படு மவைகளெல்லாம் ஞானமுண்டாதற்குக் காரணமென்று ஆகமங்கள் சொல்லும்,—உண்மை - இதுசத்தியமே,—சரியை கிரியா யோகத் தன்மையோர்க்குச் சாலோக சாமீப சாரூபங்கண் மருவியிடும் - அந்தச் சரியைகிரியை யோகங்களின் முறைமையிலே நின்றவர்கட்குச் சாலோக முதலிய மூன்றும் பொருந்தும்,—உயர் ஞானம் இரண்டாம் - (ஞானபாதத்தில்) உயர்ந்த ஞானமானது இருவகையாம்,—மாறு மலம் அகல அகலாத மன்னுபோதத் திருவருள் ஒன்று - (அவையெங்ஙனமெனின்) ஆன்மாக்களைவிட்டு நீங்காத மலம் விட்டு நீங்கும்படி சிவத்தைவிட்டுநீங்காத நிலைபெற்ற அறிவான திருவருள் ஒன்று,—ஒன்று அதனைத் தெளிய ஓதும் சிவாகமம் - மற்றை ஒன்று அந்த ஞானத்தைத் தெளியச்சொல்லுஞ் சிவாகமங்கள்,—என்று உலகு அறியச் செப்பும் நூலே - என்றும் உயர்ந்தோரறியும்படி அவ்வாகமங்கள் சொல்லும் என்க.

பரஞானம் அபரஞானமென்னு மிரண்டுமே திருவருளும் ஆகமமுமென்றறிக. உண்மைச்சரியையென்றமை திவழுவின்றியனுட்டித்த தன்மையோர்க்கென்றுரைப்பினுமாம்.

இது முன்செய்யுளைநோக்கிச் சமயவிசேடங்களுக்குப்பயன்சொல்லாததென்னை யென்று வினவுதற்கு உத்தரமும் ஞானமிருவகையென்பதூஉமுணர்த்திற்று. (சுo)

---

## நூன்மரபுமுதலியன.

தெரித்தகுரு முதல்வருயர் சிவஞான போதஞ்
    செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கடிரு வடிகள் போற்றி
    விளம்பியநூ லவையிரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்திலுறை திருவருளு மிறைவ னூலுங்
    கலந்துபொது வுண்மையெனக் கருதி யானு
மருத்திமிக வுரைப்பன்வளர் விருத்த நூறு
    மாசில்சிவப் பிரகாச மாகு மென்றே.

(இ-ள்.) தெரித்த குருமுதல்வர் - (இந்தச் சாம்பிரதாய வுண்மையை முன்னம்) விளக்கிய முதலாசிரியரான மெய்கண்டதேவநாயனார்,— உயர் சிவஞானபோதஞ் செப்பினர் - மேலான சிவஞானபோதமென்னும் (ஸ்ரீநந்திகேசுரவாக்கியத்தைத்) தமிழாக அருளிச்செய்தார்,—பின்பு அவர் புதல்வர் சிவஞானசித்தி விரித்தனர் - பின்பு அவருடைய சீடரான அருணந்திதேவநாயனார் (அந்நூற்பொருளை) விரித்துச் சிவஞானசித்தியாக அருளிச்செய்தார்,—மற்றவர்கள் திருவடிகள் போற்றி - (அவ்விரண்டு நூலுஞ் சுருங்கியும் விரிந்து மிருக்கின்றமையின்) அவ்விரண்டு நாயன்மாருடைய ஸ்ரீபாதங்களை வணங்கி,—விளம்பிய நூல் அவை யிரண்டும் விரும்பி நோக்கி - அவர்கள் அருளிச்செய்த அந்நூலிரண்டையும் விரும்பி ஆராய்ந்து பார்த்து,—கருத்தில் உறை திருவருளும் இறைவனூலுங் கலந்து - என்னுடைய கருத்திற்பதிந்த அவர்களுடைய திருவருளையுஞ் சிவாகமங்களையுங் கூட்டி,—ஆசில் சிவப்பிரகாச மாகுமென்று - குற்றமில்லாத சிவப்பிரகாசமென்றுபெயரிட்டு,—வளர் விருத்தம் நூறும் - வளர்கின்ற விருத்தச் செய்யு ணூற்றையும்,—பொது உண்மையெனக் கருதி - பொதுவென்றும் உண்மையென்றும் இரண்டாகவிசாரித்து,—யானும் - (ஒருபொருளல்லாத) யானும்,—அருத்தி மிக உரைப்பன் - (புல்லறி) வாசைமிகுதலாலே சொல்வேன் என்க.

யானுமென்ற உம்மை இழிபு. ஆசின்மை சிவத்தின்மேற்று. இந்நூலுணர்ந்தார்க்குச் சிவம்பிரகாசமாதலின் நூன்மேலேற்றித் தற்புகழ்தலாம். அந்நூலிரண்டையுஞ் சிவாகமங்களையு மாராய்ந்தென்பார் கருத்திலுறை திருவருளு மிறைவனூலுங் கலந்தென்றுபசரித்தார். அந்நூலின் கருத்திலுறையருளுமென்பாருமுளர்.

இது அபரஞானமான சிவாகமப்பொருளைத் தமிழ்ப்படுத்திய முறைமையும் பெயரும் வகையுந் தொகையும் யாப்புமுணர்த்திற்று. (கக)

---

## அவையடக்கம்.

தொன்மையவா மெனுமெவையு நன்றாகா வின்று
    தோன்றியநூ லெனுமெவையுந் தீதாகா துணிந்த
நன்மையினோர் நலங்கொண்மணி பொதியுமதன் களங்க
    மவையாகா தெனவுண்மை நயந்திடுவர் நடுவாந்
தன்மையினோர் பழமையழ காராய்ந்து தரிப்பர்
    தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறித
லின்மையினோர் பலர்புகழி லேத்துவரோ திலரேற்
    றிகழ்ந்தனரோ விகழ்ந்திடுவர் தமக்கெனவொன் றிலரே.

(இ-ள்.) தொன்மையவா மெனும் எவையும் நன்றாகா - பழையனவாகுமென்று சொல்லப்படும் எத்துணைச் சிறப்புடைய நூல்களும் (பதிபசுபாசங்களை விளங்கச் சொல்லாவாயின்) நன்மையாகா,—இன்று தோன்றிய நூலெனும் எவையுந் தீதாகா - இப்பொழுதுண்டான நூலென்று சொல்லப்படும் எத்துணைச்சொல்லிழி புடைத்தாயினும் (அவைகளை விளங்கச்சொல்லுமாயின்) தீமையாகா,—துணிந்த நன்மையினோர் - தெளிந்த வுத்தமரானவர்கள்,—நலங்கொள் மணி பொதியும் அதன் களங்கம் - நல்ல

குணத்தைக் கொண்டிருக்கின்ற மணியைப் பொதியுங் குற்றம்,—நவையாகாதென வுண்மை நயந்திடுவர் - (பொதியப்படுமணியின்) குற்றமாகாதென்று கருதி அப்பொருளி னுண்மைத் தன்மையை விரும்புவர்கள் (அதுபோல்) இந்நூலுந் திரிபதார்த்தத்தைச் சொல்லுகையாதலிற் சொற்குற்றமும் புதுமையுங் கொள்ளாது பொருளுண்மையே கொள்வர்,—நடுவாந் தன்மையினர் பழமை அழகு ஆராய்ந்து தரிப்பர் - இனி மத்திமமான முறைமையையுடையவர்கள் (உத்தமரைப் போலப் பொருளின்மை தீமை கேட்டமாத்திரத்தில் அறுதியிட மாட்டாராகையாலே) பண்டுள்ள நூல்களினழகைப்பார்த்து அவையிரண்டு மொப்பிற் கொள்வர்,—தவறு நலம் பொருளின்கண் சார்வு - (உத்தமரைப்போலக்) குணமுங் குற்றமும் பொருளினிடத்துச் சார்தலை,—ஆராய்ந்து அறிதல் இன்மையினர் - ஆராய்ந்தறிதலும் மத்திமரைப்போல ஒப்புமை நோக்கியறிதலும் இல்லாத அதன்மர்கள்,—பலர் புகழின் ஏத்துவர் - (இந்நூலை அறிவுடையோர் பலருமிருந்து) கொண்டாடிற் (கூடியிருந்து) கொண்டாடுவர்,—ஏதிலர் உற்று இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர்-(இதனைப்) பரசமயிகள் இகழ்ந்துரைக்கிற் (கூடியிருந்து) இகழ்ந்துரைப்பர்கள்,—தமக்கென ஒன்று இலர் - தமக்கெனவோரறிவில்லாதாராகையால் என்க.

நன்று தீதென்னு மொருமைகள் பண்பின்மேனின்றன. இனி எவையு நன்றாகா வெவையுந்தீதாகா நல்லதே நன்றாந் தீயதே தீதாமெனக் குறிப்பாலுரைப்பினுமாம். உற்று கூடி. உற்றேத்துவர் உற்றிகழ்ந்திடுவரென்க. பொதியுங்களங்க மதனவையாகாவென அந்துவயமாக்குக. சார்வறிதல் ஆராய்ந்தறிதலென அறிதலையிரண்டிடத்து மேற்றுக. மேற்பதிபசுபாசந் தெரித்தலென அதிகாரப்பட்டு வருதலானு முவமையானும் பதிபசுபாசங்களைச் சொல்லாதாயினென்றுரைத்தாம். இவை பன்னிரண்டும் மங்கலவாழ்த்து.

இது அவையடக்கமுணர்த்திற்று. (கஉ)

மங்கலவாழ்த்துமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கஉ.

---

# பொதுவதிகாரம்.

## முதற்சூத்திரம்.

இதுமுதல் "ஏற்றவிவை" என்னுஞ் செய்யுளீறாகிய ஆறு திருவிருத்தங்களாலும் முதனூலாகிய சிவஞானபோதத்தின் முதற்சூத்திர முணர்த்துவானெடுத்துக்கொண்டார்.

### பதியிலக்கணம்.

பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப்
 பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே யதுதா
னிலவுமரு வுருவன்றிக் குணங்குறிக ளின்றி
 நின்மலமா யேகமாய் நித்த மாகி

யலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி
யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச்
செல்வரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே.

(இ-ள்.) வேதம் ஆகமம் பலகலை யாவையினுங் கருத்துப் பதி பசு பாசந் தெரித்தல் - வேதாகமங்கண் மற்றைப்பல நூல்களெல்லா வற்றினுமுள்ள தாற்பரியமாவதுபதிமுதலியபதார்த்தங்களைப் பகுத்துக் கூறுதல்,— பதி பரமே - (அவற்றுட்) பதியாவது (ஏனையிரண்டற்கு) மேலாயிருப்பதொன்றே,—அதுதான் - அந்தப்பதிதான்,—நிலவும் அரு உரு அன்றி - விளங்கப்பட்ட நிட்களமுஞ் சகளமுமல்லதாய்,—குணங் குறிகள் இன்றி - (தத்துவாதீதமாகையாலே) முக்குணங்களும் ஓரடையாளமு மில்லாதாய்,—நின்மலமாய் - (அநாதியிலே படிகம்போல) அழுக்கில்லாதாய்,—ஏகமாய் - ஒருமுதலாய்,—நித்தமாகி - தோற்றமின்றி யிருப்பதாய்,—அலகு இல் உயிர்க்கு உணர்வாகி-அளவில்லாத வுயிர்களுக்கும் அறிவாகி,—அசலமாகி - சலனமற்றதாய்,—அகண்டிதமாய் - (ஞானசொரூபமாகையாலே) ஒன்றினலே கண்டிக்கப் படாததாய்,—ஆனந்த உருவாய் அன்றிச் செலவு அரிதாய் - அறிவுருவானலன்றிக் கிட்டுதற் கரியபொருளாய்,—செல்கதியாய் - (அறிவுருவானற்) சென்றடையப்படும்பேறாய்,—சிறிதாகி- அணுவுக்கணுவாய்,—பெரிதாய் - மகத்துக்கு மகத்தாய்,—திகழ்வது - விளங்குவதாயிருக்கும்,—தத் - அந்தப்பொருளை,—தெளிந்துளோர் சிவமென்பர் - அறிவாற்றெளிந்தோர் சிவமென்று சொல்வர் என்க.

தற்சிவமென்பது வடசொல்லாய் எழுவாய்க்கும் இரண்டாவதற்கும் பொதுவாய் நிற்கும். தேர்முதலானவை ஒருவனன்முடியாமையிற் பிரபஞ்சமும் அநேகங் கருத்தாக்களாலுண்டாக வேண்டுமென்னும் அநேகேசுரவாதிமதமும் ஓரான்மா முத்தனனல் அவனிடத்திலே கருத்தா தன்னதிகாரத்தைவைத்துத் தான் பரமற்றிருப்பன் அவனும் அப்படி யொருவனிடத்திலேவைத்துப் பரமற்றிருப்பனென்னும் பிரவாகேசுரவாதிமதமும் ஏகமாயென்றதனன் மறுக்கப்பட்டன; என்னை? தேர்முதலானவை அநேகர் கூடியும் ஓர்கருத்தாவினேவலான் முடியுமாதலின் முன்னையோன்மதமும் ஈசுரன் சத்திக்கொரு காலமுங்குறைவில்லை யாதலானும் ஒருகாலத்தில் அநேகர்முத்தராானல் ஒருவனிடத்திலே வைத்தல் கூடாதாதலானும் மற்றையவன்மதமு மறுக்கப்படுமெனக்கொள்க. நித்தமாயென்றதனற்கருத்தா க்ஷணிகனெனும் பவுத்தன்முதலியோர்மதம் மறுக்கப்பட்டன; என்னை? க்ஷணிகமாயிருப்பதொன்றுக்குப் பிரபஞ்சகிருத்தியநடத்தல் கூடாமையின். அலகிலுயிர்க்குணர்வாகியென்றதனல் மாயாவாதி சிவாத்வைதி மதங்களுமறுக்கப்பட்டன; என்னை? ஆன்மாக்கள் அநாதியேபாசபந்தமாதலின். இனி ஆனந்த வுருவாயென்பதற்குச் சுகசொரூபமாயென்றும் அன்றிச்செலவரிதாயெனப்பிரித்து மாறுபட்டசமயிகள் செல்லுதற்கு வழியாயென்றுமுரைப்பாருமுளர். ஆனந்தவுருவாயன்றிச் செலவரிதாயென்றதனற்றனே ஆனந்தவுருவானற் செல்லப்படுமென்றிருக்கச் செல்கதியாயென்றல் புனருத்தியன்று வலியுறுத்தற்பொருட்டு. மலத்தினீங்குதலே அறிவுரு. "ஆனந்தங்கதியென்னவறிவழிகைவீடென்கை யூனம்" என்றிதற்கு முன்னூலினுங் கூறினமையான் ஆனந்தமீண்டறிவென்றேகொள்க.

இது பதிபசுபாசமென்னும்ப்பொருளில்வைத்துப் பதியிலக்கணமுணர்த்திற்று.

நீடுபரா சத்திநிக ழிச்சா ஞான
நிறைகிரியை தரவதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு வுருவ மாகி
நவின்றுபல கலைநாத விந்து வாதி
கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்
கொடுவினைகொ டனுகரண புவன போகம்
பீடுபெற நிறுவியவை யொடுக்கு மேனி
பிறங்கியநிட் களசகளப் பெற்றி யாமே.

(இ-ள்.) நீடு பராசத்தி நிகழ் இச்சா ஞானம் நிறை கிரியைதர அதனை நிமலன் மேவி - நிலைபெற்ற மேலான சிவசத்தி தன்னிடத்துண்டான இச்சாசத்தியையும் ஞானசத்தியையும் நிறைந்திருக்கின்ற கிரியாசத்தியையுமுண்டாக்க அந்தச்சத்திகளை நின்மலனான சிவன்பொருந்தி,—நாட அரிய கருணை திருவுருவமாகி - குறித்தற்கரிய கருணையே திருமேனியாகக்கொண்டு,—வளர்குடிலைமேவி - பெரியகுடிலையைப்பொருந்தி,—நாதவிந்து ஆதி - நாதவிந்துமுதலிய தத்துவங்களையும்,—ஒளி கூடுந் தனுகரண புவனபோகம்- (விஞ்ஞானகலர்க்கு) ஒளிபொருந்திய தனுகரணபுவனபோகங்களையும்,—பீடுபெற நிறுவி - பெருமைபெறப்படைத்து நிறுத்தி,—நவின்று பலகலை - (விந்துவிலேநின்றுஞ் சூக்குமைமுதலிய நாலுவாக்குகளையும் ஐம்பத்தோரக்கரங்களையும் படைத்து அக்ஷரங்களை மாறிமாறிப் புணர்த்துப் பதங்களையாக்கி அவற்றை மாறிமாறிப் புணர்த்து வாக்கியங்களையாக்கி அவற்றை மாறிமாறிப் புணர்த்துச் சந்தோபேதங்களாக்கி அவற்றால்) வேதாகமாதிகளை அங்ஙனமருளிச்செய்து,—மாயை மேவி - அதோமாயையைப்பொருந்தி,—கொடுவினைகொள் தனுகரண புவனபோகம் பீடுபெற நிறுவி - (பிரளயாகலர்க்குஞ் சகலர்க்கும்) கொடியவினைகளைப்பொருந்தியிருக்கின்ற தனுவாதிகளைப் பெருமைபெறப் படைத்துநிறுத்தி,—அவை ஒடுக்கும் - அவற்றை (மீண்டும் அவ்வெல்லைகளிலே யொடுக்குவன்,—மேனி - அவற்றை ஒடுக்குவிக்குந் திருமேனியுந் தோற்றுவிக்குந் திருமேனியும்,—பிறங்கிய நிட்கள சகளப் பெற்றியாம் - நிரனிறையாக வுயர்ந்த நிட்களமுஞ் சகளமுமான முறைமையாம் என்க.

நிட்களசகளமெனப்பின்வருதலின் அவற்றிற்கேற்பப் பொதுவாய்நின்ற மேனி ஒடுக்குவிக்குமேனி தோற்றுவிக்குமேனியெனப் பகுக்கப்பட்டது. இனி நிறுவி யொடுக்குதற் கேதுவானமேனியென எச்சமாக்கி எதிர்நிரனிறையாக வுரைப்பினுமாம். நிறுவியெனவே படைப்புமடங்கிற்று. பரமசிவனுக்கு இந்தமேனியிரண்டு முபசாரமே.

இது அந்தப் பரமசிவன் பிரபஞ்சத்தை நடத்துமுறைமையுணர்த்திற்று. (உ)

ஈங்கிதுவென் றதுகடந்த வியல்பி னானு
மீறுமுத னடுவொன்று மிலாமை யானு
மோங்கிவளர் ஞானமய னாத லானு
முண்மைபிறர்க் கறிவரிய வொருமை யானுந்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பு மெல்லாஞ்
சார்வரிய தனிமுதல்வ னாத லானு
நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்ற லானு
நிறுத்திடுவ னினைந்தவுரு நிமலன் றானே.

(இ-ள்.) ஈங்கு இதுவென்று அது கடந்த இயல்பினனும் - (காட்சிமுதலிய வளவைகளைக் கடந்தவனாதலின்) இவ்விடத்திதுவென்று சுட்டிக்காட்டு மதனைக்கடந்த வியல்பாலும்,—ஈறு முதல் நடு வொன்றும் இலாமையானும் - (சர்வவியாபகனாகையால்) அவனுக்கு முதனடுவிறுதிகள் ஒன்றுமில்லாத தன்மையாலும்,—ஓங்கிவளர் ஞானமயனாதலானும் - (சடமான பிரபஞ்சஞ் சேதனனையன்றி நடவாமையிற் கன்மகாலேசுரவாதிகளைப் போலவுமன்றி வயிந்தவசரீரங் கொள்வனென்னின் ஆன்மாக்களிலொருவனாதலின் இதுவுமன்றி அவன்) மிகுத்துவளர்கின்ற ஞானசொரூபனாகையாலும்,—உண்மை பிறர்க்கு அறிவு அரிய ஒருமையானும்,—(தானிரண்டறக்கலந்து நிற்கையாலுந்) தன்னுண்மையை (த்தானே மூர்த்திகரித்தெழுந்தருளிவந்து பரஞானத்தால் அறிவிக்கப்படுமவர்க்கன்றி) மற்றையவர்க்கு அறியவொண்ணாத ஒப்பற்ற தன்மையுடையனாதலானும்,—தாங்க அரியவெறுப்பினொடு விருப்புமெல்லாஞ் சார்வு அரிய தனிமுதல்வனாதலானும் - (நின்மலனாகையாலே) பொறுத்தற்கரியவெறுப்பும் விருப்புமாகியவெல்லாம்பொருந்துதற்கரிய ஒப்பில்லாததலைவனாகையாலும்,—நீங்கல் அரும் உயிர்க்கு உயிராய் நிற்றலானும் - விட்டுநீங்குதற்கரிய ஆன்மாக்களுக்கெல்லாம் பிராணனாய் நிற்கையாலும்,—நிமலன் நினைந்த உருத்தானே நிறுத்திடுவன் - நின்மலனான பரமசிவன் தன்னுடைய திருவுள்ளத்துக்குப் பொருந்தினதொரு திருமேனியைத்தானே தனதாகநிறுத்துவன் என்க.

மேனிதனக்கெனக்கொண்டுதானேயென்பர். ஒருமைமுறைமையென்பாருமுளர்.

இதுவும் அதனை ஒருவகையானுணர்த்திற்று. (ரு)

உலகமெலா மொருவனோ டொருத்தி யொன்றென்
றுளதாகி நின்றளவி லொடுங்கும் பின்னு
மலமதனா லுளதாகு முருவ மாறி
வருவதுபோ வதுசெல்வ தாத லானு
மலைவிலசே தனமாயை யாத லானு
மணுக்களுரு வடையுமறி விலாமை யானு
நிலவுதொழின் மருவியுரு நிற்ற லானு
நின்றெவையு மளித்திடுவ னிமலன் றானே.

(இ-ள்.) உலகமெலாம் ஒருவனோடு ஒருத்தி ஒன்றென்று உளதாகி நின்று அளவில் ஒடுங்கும் - (உலகாயதன் பிரபஞ்சந்தானே இயல்பாயுண்டாம் கர்த்தாவெற்றுக்கெனின் இயல்பு ஒருபடித்தாயிருத்தல்வேண்டும் அப்படியன்றிப்) பிரபஞ்சமெல்லாம் அவனவளதுவென(க் கன்மத்துக்கீடாக) த்தோன்றி நிலைபெற்று (மீளத்தோன்றின) வெல்லைகளிலே ஒடுங்கும் (ஆனால் ஒடுங்கின பிரபஞ்சம் பின்னுமுண்டாவதெற்றுக்கெனின்),—பின்னும் மலமதனால் உளதாகும் - பின்பு மலமேதுவாக (ஒடுங்கினவெல்லைகளிலேநின்று) முண்டாகாநிற்கும் (இனி பட்டாசாரியன் அச்சுமாறுதென்பன் அப்படியன்றிப் புழுவேட்டுவாளியானாற்போலவும் மயிர்க்குட்டிவண்டானாற்போலவும்),— உருவம் மாறிவருவது செல்வது போவதாதலானும்- ஆன்மதேகங்கள் (கன்மத்துக்கீடாக) மாறிமாறித்தோன்றுவதும் நிற்பதும் அழிவதுமாகையாலும் (இனி நீரீச்சுரசாங்கியன் புருடன் சந்நிதியிலே மாயைதானே தனுவாதிகளாய்த் தோன்றுமென்பன் அப்படி

யன்றி),—அலேவின் மாயை அசேதன மாதலானும் - சலனமில்லாதமாயை சடமாதலால் (தானேவடிவாகமாட்டாமை) யாலும்,—அணுக்கள் உரு அடையும் அறிவிலாமையானும் - அந்த ஆன்மாக்களும் (மலசகிதராகை யால்) ஒருடம்பையெடுத்தற்கு அறிவின்மையாலும் (இனி அந்தப்பட்டா சாரியன் வினைதானேசரீரத்தைக் கொடுக்குமென்பன் அப்படியன்றி),—நிலவுதொழில் மருவி உரு நிற்றலானும்-(மாயையிடமாக) விளங்காநின்ற கன்மமானது ஒருடம்பிலேபொருந்தி(ச் சடமாய்) நிலைபெறுகையாலும்,—நிமலன் தானே நின்று எவையும் அளித்திடுவன் - நின்மலனான சிவன் தானே விகாரமறநின்று எல்லாவற்றையு முண்டாக்குவன் என்க.

அளவு எல்லை. நிலவுதொழின்மருவியுரு நிற்றலானுமென்பதற்கு ஆன்மாக்கள் பொருந்தினதொருதொழிலைச்செய்து ஒருடம்பிலே நிற்கையுண்டாகையாலு மென் பாருமுளர். செல்வது நிகழ்வது. இவ்வாசிரியர்தாமே "செல்காலத்தற்பங்கொடு திக்குமிறை" என்றார் பிறிதினும்.

இது உலகாயதன் முதலியோரைமறுத்துப் பதியுண்மையுணர்த்திற்று. (ச)

கந்தமல ரயன்படைக்கு முலகமெல்லாங்
    கண்ணனளித் திடுமவையெங் கடவு ளானே
யந்தமுற வழித்திடுவ னாத லாலே
    யயனரியு மவனதுய ரதிகா ரத்து
வந்தமுறை தன்றொழிலே மன்னுவிப்ப னெல்லாம்
    வருவிப்பன் விகாரங்கண் மருவான் வானின்
முந்திரவி யெதிர்முளரி யலர்வுறுமொன் றலர்வான்
    முகையாமொன் றுலரு முறைமையி னாமே.

(இ-ள்.) உலகமெல்லாங் கந்தமலர் அயன் படைக்கும்-பிரபஞ்சமெல் லாம் பிரமதேவன்படைப்பன்,—கண்ணன் அளித்திடும்-(அவனாற்படைக் கப்பட்ட பிரபஞ்சத்தைப் புருஷோத்தமன் இரட்சிப்பன்,—அவை எங்க டவுளானே அந்தம் உற அழித்திடுவன்-அவையிற்றை எம்முடையதேவன் றானே (தன்னையொழியமற்றெல்லாம்) அறுதிபொருந்தும்படி அழிப்பன்,—ஆதலாலே அயன் அரியும் அவனது உயர் அதிகாரத்து-ஆகையாலேபிர மவிட்டுணுக்களும் அவனுடைய மேலானவதிகாரத்திலே (பொருந்துவார் கள்),— வந்தமுறை தன்றொழிலே மன்னுவிப்பன் - (இப்படி) வந்தமுறை மைகளெல்லாந் தன்னுடைய தொழிலாகவே நிலைபெறுத்துவன்,—எல்லாம் வருவிப்பன் - (மீண்டும் ஒடுங்கினமுறைமையிலே) சருவமுமுண்டாக்கா நிற்பன்,—விகாரங்கள் மருவான் - (இப்படிச் செய்கையிலுந்தானொரு) விகாரங்கள்பொருந்தான் (எப்படியெனின்),—வானின் முந்து இரவி எதிர் முளரி ஒன்று அலர்வு உறும் - வானினிடத்தியங்கும் ஆதித்தன் சந்நிதி யிலே (நேர்பட்ட) தாமரையொன்று அலராநிற்கும்,—ஒன்று அலர்வான் முகையாம்-ஒன்று அலர்தற்குப்பக்குவமாக முகுளிதமாகாநிற்கும்,—ஒன் று உலரும்-ஒன்று உலராநிற்கும்,—முறைமையின் ஆமே - (இப்படியிவை ஆதித்தனாற் காரியப்பட்டுவருகையினும் ஆதித்தன்கருத்தில் இவையில்லா ததுபோலப் பிரபஞ்சஞ் சிவனாற் காரியப்பட்டு வருகையினுஞ்சிவன்கருத் தில் விகாரமில்லாமை யிந்தமுறைமை போலவாம் என்க.

இன் உவமையுருபு. பொருந்துவதொன்னுந்தொழிலாகவெனவும் வருவிக்க. முந்திரவி வானிடத்தெல்லாக்கிரகங்களினு முந்திரவியென்றுமாம்.

இது பாஞ்சராத்திரியைமறுத்துச் சங்காரகர்த்தாவே படைப்புமுதலியவற்றிற்குங் கர்த்தாவென்பதூஉம் அவனிருவிகாரியாய் நின்றே செய்வனென்பதூஉ முணர்த்திற்று. (ரு)

ஏற்றவிவை யரனருளின் றிருவிளையாட் டாக
வியம்புவர்க ளணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே
யூற்றமிக வருள்புரித லேது வாக
வுரைசெய்வ ரொடுக்கமிளைப் பொழித்தன் மற்றைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகந்
துய்ப்பித்த றிரோதாயி நிறுத்த லாகும்
போற்றலரு மருளருளே யன்றி மற்றுப்
புகன்றவையு மருளொழியப் புகலொ ணாதே.

(இ-ள்.) அரன் அருளின் ஏற்ற இவை - பரமேசுவரன் காருண்ணியத்தினலே மேற்கொண்டவிவற்றை,—திருவிளையாட்டாக இயம்புவர்கள் - (கிரீடாப்பிரமவாதி மாயாவாதி முதலானவர்கள் பிரமத்தின்) விளையாட்டென்று சொல்லுவார்கள்,—அணுக்கள் இடர்க்கடல் நின்றும் எடுத்தே - (சைவசித்தாந்திகள்) ஆன்மாக்களைத் துன்பத்திற்கேதுவான பிறவிக்கடலினின்றுமெடுத்து,—ஊற்றம் மிக அருள் புரிதல் ஏதுவாக உரைசெய்வர் - நிலைபேறுமிக்க அருளைக்கொடுக்கையே காரணமாகச் சொல்லாநிற்பர்கள் (அஃதெப்படியெனின்),—ஒடுக்கம் இளைப்பு ஒழித்தல் - சங்காரம் ஆன்மாக்களை இளைப்பாற்றுவிக்கையாயிருக்கும்,—மற்றைத் தோற்றம் மலபாகம்வர - மீண்டுபடைத்தல் (அவ்வான்மாக்களைப்பற்றிய) மலத்துக்குப்பக்குவமுண்டாக்குகையாயிருக்கும்,—காத்தல் போகந் துய்ப்பித்தல் - இரட்சித்தல் (கன்மந்தொலைத்தல் காரணமாகப்போகத்தை) (ஏறுமற்குறையாமற்) புசிப்பிக்கையாயிருக்கும்,—திரோதாயி நிறுத்தலாகும் - மறைப்பையுண்டாக்குதல் (புசிக்குமளவும் அவ்விடயங்களிலே சுவைபிறக்கும்படி) நிறுத்துகையாயிருக்கும்,—போற்றல் அரும் அருள் அருளே - புகழ்தற்கரிய அநுக்கிரகம் அநுக்கிரகமே,—அன்றி மற்றுப் புகன்றவையும் அருள் ஒழியப்புகல் ஒணாதே - இதுவன்றி முன்சொல்லப்பட்ட நான்கும் அநுக்கிரகமென்று சொல்வதன்றி (விளையாட்டென்று)சொல்லவொண்ணாது என்க.

அணுக்களையெனவிரண்டாமுருபுவிரிக்க. எடுத்தேயென்னுமேகாரம் அருள்புரிதன்மேலேற்றப்பட்டுப் பிரிநிலையாய்நின்றது. அருளே ஏகாரந்தேற்றம். மற்று வினைமாற்று.

இது தம்மிறைவன் எந்தப்பயன்குறித்துச் செய்கின்றானென்னும் புத்தனைக் குறித்துக் கிரீடாப்பிரமவாதி மாயாவாதிகள் கருத்தையுமெடுத்துக்காட்டி உத்தரமுணர்த்திற்று. (சு)

முதற்சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கக.

## இரண்டாஞ்சூத்திரம்.

இதுமுதல் "அரிவையர்" என்னுஞ் செய்யுளீறாகிய முப்பத்திரண்டு திருவிருத்தங்களாலும் இரண்டாஞ்சூத்திர முணர்த்துவானெடுத்துக்கொண்டார்.

### பசுவிலக்கணம்.

எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி லழுந்தி
யிருவினையின் றன்மைகளுக் கீடான யாக்கை
யண்ணலரு ளானண்ணி யவையவரா யதனு
லலகினிகழ் போகங்க ளருந்து மாற்றாற்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்
புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா லருளா
லுண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத
முற்றிடுநற் பசுவர்க்க மெனவுரைப்ப ருணர்ந்தே.

(இ-ள்.) நற் பசுவர்க்கம் - நன்றான ஆன்மவர்க்கமானது,—எண்ண அரிதாய் - எண்ணவரியதாய்,—நித்தமாய் - அழியாததாய்,—இருண் மலத்தில் அழுந்தி - ஆணவமலத்தாலே மறைப்புண்டு,—இருவினையின் தன்மைகளுக்கு ஈடானயாக்கை - (அந்தமலம் பக்குவமாதற்குப்) புண்ணியபாவங்களுக் கீடானவுடம்பை,—அண்ணல் அருளான் நண்ணி - கர்த்தாவின் காருண்ணியத்தினுலே பொருந்தி,—அவை அவராய் - அஃறிணை உயர்திணைகளாய்,—அதனுல் - அவ்வுடம்பினுலே அலகு இல் நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றால் புண்ணியபாவம் புரிந்து - எண்ணிறந்த போகங்களைப்புசிக்கின்ற வழியாலே மீண்டும் புண்ணியபாவங்களை ஆர்ச்சித்து,—போக்கு வரவு உடைத்தாய் - இறத்தல் பிறத்தல்களையுடையதாய்,—புணரும் இருண்மலபாகம் பொருந்தியக்கால் - அநாதியிலேதாமிரகாளிதம்போலப் பொருந்தியமலத்துக்கும் பாகம் வந்தவிடத்து,—அருளால் உள் நிலவும் ஒளியதனுல் இருள் அகற்றி - தீட்சையினுலே தனக்குள்ளே விளங்குகின்ற சிவஞானத்தாலே அந்தமலத்தைப்போக்கி,—பாதம் உற்றிடும் - அவ்வண்ணறிருவடியைப்பொருந்தும்,—என உணர்ந்தே உரைப்பார்- என்றறிந்துசொல்லுவர் (பெரியோர்) என்க.

அவையாய் அவராய் என இவையிரண்டும் ஈண்டுத்திணைமாத்திரம் விளக்கின்றன. வர்க்கம் சாதியொருமை. பெரியோரென்பதவாய்நிலையான்வந்தது. எண்ணெனக்கடைகுறைந்து நின்றது. எண்ணலரிதாமெனினுமாம். எண்ணரிதாயென்றதனுன் மாயாவாதி சிவாத்துவிதி யொன்றென்னுமதமும் நித்தமாயென்றதனுலே க்ஷணிகமென்னும் புத்தர்மதமும் இருண்மலத்திலழுந்தியென்றதனுல் ஆன்மாச்சுத்தனென்னும் அயிக்கியவாதிமதமு மறுக்கப்பட்டன.

இது பசுவிலக்கணமுணர்த்திற்று. (௧)

### பாசவிலக்கணம்.

ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளு
மெண்ணரிய சத்தியதா யிருளொளிர விருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்

பாகமாம் வகைநின்று திரோதான சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்து பரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையா னடிக
ணணுகும்வகை கருணைமிக நயக்குந் தானே.

(இ-ள்.) ஏகமாய் - (சடமுமாய் அநேகமாமூற் கடாதிகளைப்போல அநித்தமாதலாற்பலவன்றி) ஒன்றாயிருப்பதாய்,—தங்கால எல்லைகளின் மீளும் எண்ண அரிய சத்தியதாய்-(ஒன்றே சர்வான்மாக்களையுமறைக்கில் ஒருவனுக்குப்பாசமோசனமுண்டாக எல்லார்க்கும் மோக்ஷமுண்டாதல் வேண்டும் அதுகூடாதாதலின் தத்தம் பரிபாகமான காலவரையறைகளிலே திரும்பத்தக்க அளவிறந்த சத்திகளையுடையதாய்,—இருள் ஒளிர இருண்ட மோகமாய் - (இருள் எல்லாப்பொருளையுமறைக்கையினுந் தன்னைக்காட்டி நிற்கும் இது சர்வான்மாக்களையுமறைத்து அவர்களையுந்தன்னையுங்காட்டா தாகையால்) இருளும் ஒளியென்னும்படி இருண்டமயக்கத்தையுடைய தாய்,—செம்பில் உறு களிம்பு ஏய்ந்து - செம்பிற்பொருந்திய களிம்புபோன்று,—நித்த மூலமலமாய் அறிவு முழுதினையு மறைக்கும் - அழியாதபிரதானமலமாய் ஆன்மாக்களுடைய இச்சாஞானக்கிரியைகள் அடங்கலையு மறையா நிற்கும்,—திரோதான சத்தி - திரோதான சத்தியானது,—நின்று - (ஆன்மாக்களோடு) நின்று,—பாகமாம் வகை பண்ணுதலால் - (அந்த வாணவமலம்) பக்குவமாம்படி (அதுமறைத்தற்கனுகூலஞ்) செய்தலால், —மலமெனவும் பகர்வர் - (அந்தச் சத்தியை) மலமென்று உபசரித்துச் சொல்லுவர்கள்,—அதுதானே - அங்ஙனமறைத்தற் கனுகூலமான சத்தி தானே,—நாகம் மாநதி மதியம் பொதி சடையான் அடிகள் நணுகும் வகை-பாம்புமுதலியவற்றைப்பொதிந்த சடையினையுடைய சிவனுடைய திருவடிகளை (அவ்வான்மாக்கள்) சேரும்படி (பக்குவம்வந்துழிப்பண்ணி),—மிகப் பரிந்து கருணை நயக்கும் - பெரிதும் பரிந்திரக்கமாய்மகிழும் என்க.

தானேயென்றதை அசைநிலையாக்கிப் பரிந்து பொதிசடையென்றியைப்பினுமாம். காளிதஞ் செம்பினுடன் சகசமாயிருந்தும் இரதகுளிகையாற்றீரும்; அதுபோல மூலமலமும் ஆன்மாக்களுடன் சகசமாயிருந்துஞ் சிவசத்தியாற்போக்கப்படுமாதலின் அதற்கு அஃது உவமையாயிற்று. இந்த மலம் ஆன்மாவினுடைய ஞானசத்தியை மறைத்தலாற்சகசமே ஆகந்துகமலமன்று. சகசமாவது கூடவுதித்தது. ஆகந்துகம் வந்துகூடியது. சகசமெனின் அக்கினிக்குவெம்மையும் புனலுக்குத் தண்மையும்போலுங் குணமாதலிற் குணமழியிற் குணியுமழியுமன்றேயெனின் அற்றன்று; செம்பிற்குக் களிம்பும் அரிசிக்குத் தவிடும்போலுங் குற்றமே அவற்றின் குணமன்று. களிம்புந் தவிடும் போகச் செம்பிற்கும் அரிசிக்குங்கேடில்லை;அதுபோலச்சகசமலமான வாணவமலத்தை நீக்கக்கேடின்று. ஆதலாற் சகசம் இருவிதமெனக்கொள்க. இந்த ஆணவமலம் மாயாகாரியமெனின் மாயாகாரியம் ஆகந்துகமாதலினுன் ஆகாது. மாயையெனின் மாயை தன்காரியத்தினாலே மலத்தைநீக்கி ஆன்மாவினுடைய ஞானத்தை விளக்குதலின் அதுவுமன்று. மாயை தன்காரியத்தால் விளக்கினாலுங் காரணரூபத்தான் மறையாதோவெனின் காரியத்திலில்லது காரணத்தினுமில்லை; அக்கினிகாரியமான தீபத்தாலும் விளக்கிக் காரணமானதன்னாலும் விளக்குதலின். ஆயின் மாயை காரணரூபத்தால் விளக்குமோவெனின் அப்படிவிளக்காது. ஆன்மாக்களை விஷயங்களிலேமோகிப்பிக்கும் ஆணவமலம்போல முழுதும்மறையாது. ஆதலான் ஆணவம்

இருளும் மாயை விளக்கும்போலுமெனக் கொள்க. ஆயின் இதனை மலமென்பதென்னையெனின், அதற்குப் பரிகாரமேலே "மோகமிக" என்னுஞ் செய்யுளிற்காட்டுதும். இனி ஞானபாவமெனின் அபாவமொரு திரவியமல்லாதபடியினாலே மறைக்குந்தொழிலைச் செய்யமாட்டாது. கடத்தினுடைய அபாவம் சலக்கிரசணம் பண்ணமாட்டாமைபோல. ஆதலான் ஞானபாவமுமன்று. ஞானத்தினுடைய பிராகபாவமெனின் பிராகபாவமநாதியான ஞானத்தான்முடிவு. ஆதலான் முடிவுள்ளதற்குத்தோற்றமுமுண்டு உண்டாகவே தோன்றியழியுமாதலான் அதுவுமன்று. அந்நியதாஞானமெனின் ஒன்றை யொன்றாகக்கருதுதலே யந்நியதாஞானமாதலின் அம்மாறாட்டமோகேதுவின்றிவாராது. சுத்தி வெள்ளியாகத்தோன்றும்போது கண்ணின் குற்றத்தாலன்றித் தோன்றாதவாறுபோலவாதலின் இதுவுமன்று. இனி ஆன்மாவின்குணமெனிற் சித்தான வான்மாவின்குணம் ஞானமன்றிச் சடமாயிராது. தீயின்குணம் வெம்மையன்றிச் சீதமாகாவாறுபோல வாதலால் அதுவுமன்று. இந்தவாணவமலத்திற்குப்பரியாயநாமங்கள்:—பசுத்துவம், பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்ஞானம், அவித்தை, ஆவிருதி, ருக்கு, கிலாணிபாவம், மூலம், க்ஷயம், பாசம், அசுத்தி, பெந்தனம், வியாகாதம், களங்கம், மோகம், கேவலம், ஆவரணம், தமசு, சடம், படலம், நிரோதம், ஆச்சாதனம் இவைமுதற் பிறவுமுள. இந்தமூலமலஞ் சகலரெனப்பட்டவான்மாக்களுக்குக் கருவிகூடிய சகலாவத்தையிலே அராகமுதலிய கருவிகளிலேயாவேசித்து மோகம், மதம், அராகம், விஷாதம், சோஷம், வைசித்திரியம், அரிஷம் என்னும் ஏழுவிதங்களையுஞ் செய்விக்கும். இவற்றுள் மோகமாவது அதிபாதகமுதலிய பஞ்சபாதகங்களை ஆசிரியனாலுணர்ந்திருப்பினும் அவ்வுணர்ச்சிகள் சிறிதும் விளங்காதபடி யிழப்பித்து அவற்றை நன்றென்றுசெய்விப்பது. மதமாவது தான்மோகித்துப் புணர்ந்த வனிதையின்மகளிரை அருவருக்காமற்பார்த்து இவள் திவ்வியஸ்திரீயென்றும் இவளின் அரிபபேறெமக்கில்லையென்றுமதிப்பிப்பது. விஷாதமாவது ஒருவன் வாஞ்சித்துப்புணர்ந்த மகளிரைப் பிரிந்தபோது மிகவும் வருந்தியழும்படி மனோதுக்கஞ்செய்விப்பது. அராகமாவது ஆசிரியனாலே தருமநூல்களைக் கேளாதானொருவனுக்குச் சிவத்திரவிய முதலியவற்றை வவ்வுதற்கு வாஞ்சையைச்செய்விப்பது. சோஷமாவது அந்த மனோதுக்கத்தாலே யுடம்புலரும்படி ஆகாரத்திலே கருத்தின்றிச்செய்விப்பது. வைசித்திரியமாவது நமக்குப் பரமசிவனாலுவிதமான விருவினைப் பயனையுந் தெய்வீகமுதலிய மூவகையாலே தருவனென்னு முணர்வை யிழப்பித்து இவனென்னைத் தாழ்வித்தான் வாழ்வித்தான், யானிவனைத் தாழ்வித்தேன் வாழ்வித்தேனென்பிப்பது. அரிஷமாவது மனைமுதலிய வளங்களைக்கண்டு களித்து எமக்கு இனியென்ன குறையென்பிக்கை. அநாதியிலே ஆன்மாக்களை அணுத்தன்மைப்படுத்தி நிற்கையால் ஆணவமெனப் பெயராயிற்று.

இது முறையே உணர்த்துவானின்ற ஐவகைப்பாசங்களுள் ஆன்மாக்களை அநாதியேகூடிநின்று சனனமரணங்களை விளைக்கின்ற மூலமலத்தின்றன்மையினையும் அதனைப்பாகம் வருத்துகையான் உபசரித்துப் பாசமென்னப்பட்ட திரோதான சத்தியின்றன்மையினையுமுணர்த்திற்று. (உ)

---

இனி பாசங்களுள் இருவிதமாயையும் மாயேயமும் ஏழு திருவிருத்தங்களாலுணர்த்துவான்றொடங்கினார்.

உன்னலரும் பரசிவன்ற னருளாலே நாத
முதிக்குமிகுங் குடிலைதனில் விந்துவரு நாதங்

தன்னிலதி னொளிவளருஞ் சதாசிவரா மவரிற்
றயங்கவரு மீசர்வித்தை தனையளிப்ப ரதனுன்
மன்னுவரிவ் வகையைவர் வாய்மையினுன் முன்னே
வந்திடுமென் றுரைசெய்த விந்துவழா வகையே
முன்னுதவு சூக்குமாதி யொருநான்கு மென்று
மொழிந்திடுவ ரருங்கலைகண் முதிர்ந்துளோரே.

(இ-ள்.) உன்னல் அரும் பரசிவன்றன் அருளாலே - நினைத்தற்கரிய பரமசிவனுடைய பராசத்தியாகியவருளாலே,—மிகுங்குடிலைதனின் நாதம் உதிக்கும் - மகாமாயையிலே நின்று நாததத்துவந்தோன்றும்,—நாதந்தன்னில் விந்து வரும்-அந்தநாதத்திலே விந்துசத்திதோன்றும்,—அதில் ஒளி வளருஞ் சதாசிவர்-அந்தவிந்துவிலே ஒளிமிகுந்த சதாசிவதேவர் (தோன்றுவர்),— ஆம் அவரில் தயங்கவரும் ஈசர் - தோன்றிய அந்தச் சதாசிவரிடத்திலே விளங்கித் தோன்றிய வீசுரதேவர்,—வித்தைதனை அளிப்பர் - (உருத்திரதேவரைக் கருத்தாவாகவுடைய) சுத்தவித்தையை உண்டாக்குவர்,—அதனுல் இவ்வகை ஐவர் மன்னுவர் - அப்படித்தோன்றிய முறைமையாலே நாதம் விந்து சதாசிவர் ஈசுரர் உருத்திரரென்னுமைவருஞ் சிவஞ் சத்தி சாதாக்கியம் ஈசுரஞ் சுத்தவித்தையென்னுமைந்து தத்துவங்களினும் நிலைபெறுவர்கள்,—வாய்மையினுன் முன்னே வந்திடுமென்று உரை செய்த விந்து - உண்மையான் முன்னே தோன்றுமென்று சொன்ன விந்துவானது,—வழா வகையே - கெடாத முறைமையிலே,—முன் சூக்குமாதி ஒரு நான்கும் உதவும் - ஆதியிலே சூக்குமைமுதலிய வாக்கு நான்கையுந் தோற்றுவிக்கும்,—என்று அருங்கலைகண் முதிர்ந்துளோர் மொழிந்திடுவர் - என்று அரிய சிவாகமங்களைக் கற்று முதிர்ந்தோர் சொல்வர் என்க.

தோன்றுவரென்பது சொல்லெச்சம். இனி சதாசிவராவரிற் றயங்கவருமீசரென்றொருபதமாக்கி அதிலொளிவளருஞ்சதாசிவராகிய விவரிடத்தென்றுரைப்பினுமாம். இப்பொருட்குச் சுட்டு சிறப்பின்வந்தது. சதாசிவதேவநாயனுர் சிவமுதலீசுராந்தம்வியாத்தராதலினென்றறிக. நாதம்,விந்து, சதாசிவர், ஈசுரர் என்பன அதிட்டானவதிட்டேயமாக ஆகுபெயராய்த் தத்துவங்களையு முணர்த்திநின்றன. ஈண்டு நாதமென்றது சிவதத்துவம். விந்துவென்றது சத்திதத்துவம். பரநாதமும் பரவிந்துவுஞ் சிவதத்துவத்திலுஞ் சத்திதத்துவத்திலும் அடங்கும். இந்தக்குடிலை பரமசிவனுக்கு இலயபோகாதிகார மூன்றுக்கு மிடமாய்ச் சுத்தமாய்ச் சடமாய் அவனுக்குப் பரிக்கிரகசத்தியாய் நித்தியமாய் மேலானகாரணமாகையால் ஒன்றாய்ச் சுத்தா சுத்தமானதத்துவதாத்துவிக மிரண்டினும் வியாத்தமாயிருக்கும். இதிற் சிவசத்தியதிட்டிக்கையாலே சிவமுதலிய தத்துவங்களைந்துங் கலையைந்துந் தோன்றின. எப்படியெனின், ஞானசத்தியதிட்டானத்தாலே சிவதத்துவமுங் கிரியாசத்தியதிட்டானத்தாலே சத்திதத்துவமும் இவையிரண்டுஞ் சமமாகவதிட்டித்தபோது சதாசிவதத்துவமும்ஞானங்குறைந்து கிரியையதிகமாக வதிட்டித்தபோது ஈசுரதத்துவமுங் கிரியைகுறைந்து ஞானமதிகமாக வதிட்டித்தபோது சுத்தவித்தியாதத்துவமுந் தோன்றும். இனி ஞானசத்தியதிட்டானத்தாலே குடிலையினின்றும் அபரநாதமும் கிரியாசத்தியதிட்டானத்தாலே அபரவிந்துவுந்தோன்றும். சிவஞ்சத்திநாதவிந்துவாகிய நான்குஞ் சிவனுக்கு நிட்களமான திருமேனியென்றும் இலயத்தானமென்றுஞ் சொல்லப்படும்.

சதாசிவதத்துவஞ் சகளநிட்களமான திருமேனியென்றும் போகத்தானமென்றுஞ் சொல்லப்படும். இந்தச் சதாசிவதத்துவத்திலே அட்சரசொரூபமாய்ச் சகளமாயிருக்கிற அபரநாதமும் அபரவிந்துவும் அணுசதாசிவர்களுடன் அடங்கும். ஈசுர முதலிய நான்குஞ் சகளமானதிருமேனியுமாய் அதிகாரத்தானமுமாய் இருக்கும். முன்சொன்ன விந்துவிலேநின்று "முற்றும்மையொரோவழியெச்சமுமாகும்" என்றதனால் ஐம்பத்தோரட்சரமுஞ் சத்தகோடி மகாமந்திரங்களும் இருபத்தெட்டு திவ்வியாகமங்களும் நாலுவேதமுந் தோன்றுமெனவுமறிக. ஈசுரதத்துவத்திலே அட்டவித்தியேசுரருஞ் சுத்தவித்தையிலே சத்தகோடி மகாமந்திரங்களுஞ் சத்தரூபமான வெண்பத்தொரு பதமந்திரங்களும் ஆகமங்களும் வேதங்களுமடங்கும். இனி அவன் நிட்களமும் நிட்களசகளமுஞ் சகளமுமாக மூவிதமான திருமேனிகொண்டபொழுது பராசத்தியும் மூவகைப்படும். எப்படியெனின், அவன் சிவமு நாதமுமாக நிட்களமானபோது சத்தியும் விந்துவுமாக நிட்களையாயிருக்கும். அவன் சதாசிவமாக நிட்கள சகளமாயிருந்தபோது மனோன்மனியாக நிட்களசகளையாயிருக்கும். அவன் ஈசன் உருத்திரன் மால் அயனாகச் சகளனானபோது மகேசை உமை திரு வாணியாகச் சகளையாயிருக்கும். இனி கலைகள் ஐந்தில் நிவிர்த்தியாவது தன்னிடத்திலே பொருந்தின ஆன்மாக்களுடைய சங்கற்பத்தை விடுவிக்கையால் நிவிர்த்தியென்று பெயராயிற்று. பிரதிட்டையாவது தன்னைப்பொருந்தின ஆன்மாக்களுக்குச் சங்கற்ப விடுதியை நிலைபெறுவிக்கையாற் பிரதிட்டையாயிற்று. வித்தையாவது அந்தசங்கற்பவிடுதியினிலைபேற்றால் ஆன்மாக்கட்கு அனைத்தறிவையும் விளக்குதலால் வித்தியாகலையாயிற்று. சாந்திகலையாவது அந்தஞானத்தாலே ஆன்மாக்கள் இராகத்துவேஷமின்றியிருந்தபடியாலே விகற்பஞானஞ் சாந்தமாயிருக்கையாற் சாந்திகலையென்றாயிற்று. அதீதகலையாவது அந்த விகற்பஞானஞ் சாந்தமானதென்கின்ற நினைவுங்கழன்று பரமாகாசரூபமாய்நிற்கையால் அதீதகலையாயிற்று. இந்தக்கலைகளுந் தத்துவமும் புவனமும் அர்த்தரூபமும் வாக்குநான்கும் அட்சரங்களும் பதங்களும் மந்திரங்களும் வேதங்களுஞ் சத்தரூபமாயிருக்கும். ஆகையாலே மகாமாயை சத்தார்த்தரூபமாக விரண்டுவடிவாயிருக்கும். படங்குடிலானாற்போலென்றறிக. இதன் விரிவை ஆகமங்களிற் காண்க.

இது சுத்தமாயையும் மூலமலந் திரோதாயியாலே பாகம் வருதல் காரணமாக அதனினின்றுந்தோற்றிய சுத்ததத்துவமைந்தும் வாக்குகள்நான்குமுணர்த்திற்று ()

உருவாதி சதுர்விதமா யொன்றொன் றொவ்வா
வுண்மையதாய் நித்தமா யொன்றா யென்று
மருவாகிக் கன்மாந்த மணுக்க ளியார்க்கு
மாவார மாயசித்தா யசல மாகி
விரிவாய தன்செயலின் வியாபியா யெல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை யொடுங்க
வருகால முயிர்களெல்லா மருவிடமாய் மலமாய்
மன்னியிடு மரளருளான் மாயை தானே.

(இ-ள்.) மாயை தானே - அசுத்தமாயையானது,—உருவாதி சதுர்விதமாய் - தனுகரணபுவனபோகமென்னு நாலுவிதமாய்,—ஒன்றொன்று ஒவ்வா உண்மையதாய் - அவைதாம் ஒன்றையொன்றொவ்வாத முறைமையினையுடையதாய்,—நித்தமாய் - அழியாததாய்,—ஒன்றாய் - ஒருமுதலே

யாய்,—என்றும் அருவாகி - எக்காலமுந்தோன்ருததாய்,—கன்மாந்தம் அணுக்களியார்க்கும் ஆவாரமாய் - கன்மந்தொலேயுமளவும் ஆன்மாக்களெல்லாவற்றிற்கும் (விஷயங்களிலே அறிவை) மயக்குவதாய்,—அசித்தாய் - சடமாய்,—அசலமாகி - சலனமற்றதாய்,—விரிவாய தன்செயலில் வியாபியாய் - தோன்றிப்பரந்த தன்னுடைய காரியமான தத்துவம் முப்பத்தொன்றினும் வியாத்தத்தையுடைத்தாய்,—எல்லாம் விரிந்த வகைபுரிந்து - அச்சகலமுந்தோன்றின கூற்றிலேநின்று,—அடைவின் மேவி - அடைவிலேபொருந்தி,—அவை யொடுங்கவருகாலம் உயிர்களெல்லாம் மருவு இடமாய் - அந்தத் தத்துவங்கள் ஒடுங்கவருகிற சங்காரகாலத்திலே அவ்வுயிர்நிலேகளெல்லாம் (அங்குராதிவித்திடத் தடங்குமாறுபோலப்) பொருந்துதற்கிடமாய்,—மலமாய் - (ஆன்மாக்கள் உள்ளபடிகாணுமல் பொய்யை மெய்யென்று காணமயக்கும்) மலமாய்,—அரன் அருளான் மன்னியிடும்- சிவன் அனுக்கிரகத்தானிலேபெறும் என்க.

கன்மாந்தமாவாரமாயென்பதற்கு அன்னியவுதாரணம் "கருமத்ததிகாராந்தத்தளவும்-விதிமுறைகொடுக்கும் வியப்பிற்றஃது" என்பதென்றறிக. கன்மமாரணுக்களென்றுபாடமோதிக் கன்மத்தைப்பொருந்திவருகிற வென்றுரைப்பாருமுளர். உயிர்களென்பது ஆகுபெயர். உயிர்களேத் தன்வசமாய் மயக்குதலின் மாயையெனப்பெயராயிற்று. அதுதான் காரணரூபத்தான் மோகிப்பிக்குங் காரியரூபத்தாற் பயன்படும்; நூல்தானுகப் பயன்படாது காரியமானபடத்தாற் பயன்படுமெத்தனேயே.இதன்படைப்புச் சூக்குமந்தூலமென்றிருவிதமாம். கலேமுதலான காரண முப்பத்தொன்றினுஞ் சூக்குமசிருட்டி. தனுபுவனபோகமூன்றுந் தூலசிருட்டியெனவறிக. பூதங்கள் தன்மாத்திரை, அகங்காரம், புத்தி, பிரகிருதி, கலாதிகள், ஆக விவையாறு மொன்றுக்கொன்று சூக்குமமாயிருக்கும். இன்னுமிதன்விரிவை ஆகமங்களிற்காண்க.

இது அசுத்தமாயையையுணர்த்திற்று. (ச)

என்னேயிது வெனினுலகுக் குபாதான மில்லே
யிறைவனல தெனினசித்துச் சித்தினிடத் துதியா
மன்னியுள தேன்முதல்வ னென்கொ லென்னின்
மாயைதா னசித்துருவாய் மருவ மாட்டா
தன்னவனு மிதுவொழிய வாக்க மாட்டா
னசத்தனு மெனினதுவு மவன்போ னித்த
முன்னவனவ் வசித்தை விரித்தெவையு மாக்கு
முதன்மையது கொடுத்ததென மொழிந்திடாரே.

(இ-ள்.) இது என்னே எனின் உலகுக்கு உபாதானம் - இந்தமாயைதான் எதற்கென்று (நீ) சொல்லிற் பிரபஞ்சத்திற்கு ஒருதாரகமாம்,—இறைவன் அலது இல்லேயெனின் - (அங்ஙனந்தாரமாக மாயையெனவொன்றுவேண்டுமோ கருத்தாவினிடத்திலே பிரபஞ்சம் சிலந்தியிடத்துநூல் தோன்றி யொடுங்கினுற்போலவுங் கடலிற்றிரைதோன்றி யொடுங்கினுற்போலவும் வானிடத்து மின்னுமிடியுந்தோன்றி யொடுங்கினுற்போலவுந் தோன்றியொடுங்குமாதலால்) இறைவனல்லது உபாதானமில்லேயென்று நீ சொல்லில்,—அசித்துச் சித்தினிடத்து உதியா - அசித்தான பிரபஞ்சஞ் சித்தாகியசிவனிடத்துத்தோன்ருு(பொன்னிற்களிம்புதோன்ருமையின்),—

மன்னி உளதேல் முதல்வன் என்கொலென்னின் - (மாயை) இப்படி நிலை பெற்றுள்ளதாயிற் கருத்தாவெற்றுக்கென்று நீ சொல்லின்,—மாயைதான் அசித்து உருவாய் மருவ மாட்டாது - அதுதான் சடமாகையால் தானே தனுவாதிகளாய்ப்பொருந்தமாட்டாது,—அன்னவனும் இதுவொழிய ஆக்கமாட்டான் - அந்தக்கருத்தாவும் இந்த மாயையைக்கொண்டன்றி ஒன்றையுண்டாக்கமாட்டான்,—அசத்தனுமெனின் - ஆனுல் இவன் சத்தியீனனுவனென்று நீ சொல்லின்,—அதுவும் அவன்போல் நித்தம் - அந்தமாயையும் அவனைப்போல அநாதியே யாதலிற் (புதிதாகவொன்றையுண்டாக்கிக்கொள்ளவேண்டுவதில்லை),—முன்னவன் அவ்வசித்தை விரித்து எவையும் ஆக்கும்-கருத்தா அந்தமாயையைவிரியப்பண்ணி எவற்றையுமுண்டாக்குவன்,—முதன்மை அது கொடுத்ததென மொழிந் திடாரோ - (ஆதலாலே)கர்த்தவ்வியத்தை அந்தமாயைகொடுத்ததென்றுபெரியோர் சொல்லார் என்க.

இதுவென்னையென்றும் இறைவனலதில்லை யுபாதானமென்றும் மாயைமன்னியுளதேலென்றும் மொழிமாற்றுக.

இது சிவாத்துவிதி மாயாவாதிகளை மறுத்து மாயையுண்டென்பதுணர்த்திற்று.()

படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப்
பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்ப
ரடுத்தவினை யுளதாயி னிறையே னென்னி
லசேதனமற் றவையாவிக் கமைத்த தாகு
மெடுத்தவினை யுருவுறுவ துயிரோற் றானே
யிருவினைக்குத் தக்கவுட லெய்து மென்னிற்
சடத்திரளுங் கர்த்தாவா யறிவொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே.

(இ-ள்.) படைத்தது ஒருபடி இன்றிப் பறவை பசு நரராய்ப் பண்ணியது என் (என்னில்) - (கருத்தாவேபடைப்பனுயின்) இங்ஙனம் படைக்கப்பட்ட பிரபஞ்சத்தை ஒருபடியாகப் படையாமற் பறவைமுதலியனவாகப் படைக்கவேண்டியதென்னையென்று உலகாயதன்சொல்லில்,—முன்னைவினைப் பான்மை என்பர்-ஆன்மாக்கள் முன்செய்த கன்மத்துக்கீடாகவென்றுசொல்லுவர் (பெரியோர்),—அடுத்தவினை உளதாயின் இறை ஏனென்னில் - முன்கூடின கன்மமுண்டாயிற் பின்னைக்கருத்தாவெற்றுக்கென்று நிரீச்சுரசாங்கியன்சொல்லில்,—அசேதனம் - (அக்கன்மஞ்) சடம்,—மற்றவை ஆவிக்கு அமைத்ததாகும் - (கருத்தா) அந்தவுடம்புகளைப்படைத்தது (முன்னரார்ச்சித்த கன்மபலங்களைப்புசிக்கும்) ஆன்மாக்கள் பொருட்டாகும்,—எடுத்தவினை உரு உறுவது உயிரோல் - முன்னூர்ச்சித்த கன்மபலத்தை ஒருடம்பிலே நின்றனுபவிப்பது ஆன்மாவாயின்,—தானே இருவினைக்குத்தக்க உடல் எய்து மென்னில் - ஆன்மாத்தானே புண்ணியபாவங்களின் முறைமைக்கீடான உடம்பைப்பொருந்துமென்று பின்னுஞ்சொல்லில்,—சடத்திரளுங் கர்த்தாவாய் அறிவு ஒன்றில்லாத் தன்மையனுங்கூட ஒரு சங்கை இன்றே - சடமான மாயாகாரியத்தின்திரட்சியுங் கருத்தா

வாய்த்தானே அறிகைக்கோரறிவுமில்லாத முறைமையினையுடைய வான் மாவும் பொருந்துதற்கு ஒருபிரமாணமுமில்லை என்க.

காரணமில்லையென்பாருமுளர். என்னிலென்பது முன்னுங்கூட்டப்பட்டது. எடுத்தவினை ஆகுபெயர்.

இது உலகாயதன் முதலியோரை மறுத்துக் கருத்தா கன்மத்துக்கீடாக மாயையை வியத்திப்படுத்துவனென்பதுணர்த்திற்று. (சு)

அல்லன்மிக வுயிர்க்கிவைதா னணைத்த தீச
　　னருவினைக ளருந்துதற்கோ வினையோ வன்றிச்
சொல்லிவரு மாயையோ வணுவை முந்தச்
　　சூழ்ந்ததெனு முரைமுதலோர் தொடக்கி லார்பா
லொல்லைவரு மெனினுளதா முயிருண் டாவே
　　யுளதுமல மலமுளதா வொழிந்த வெல்லா
நெல்லின்வரு தவிடுமிபோ லநாதி யாக
　　நிறுத்திடுவ ரிதுசைவ நிகழ்த்து மாறே.

(இ-ள்.) ஈசன்றன் - (உம்முடைய) இறைவன்,—உயிர்க்கு அல்லல் மிக இவை அணைத்தது - ஆன்மாக்களுக்குத் துன்பமிகவுண்டாக இவ்வு டல்களைக் கூட்டியது,—அருவினைகள் அருந்துதற்கோ - நீங்குதற்கரிய வினைப்பயன்களைப் புசித்தற்காகவோ (அங்ஙனமாகுக),—வினையோ அன் றிச்சொல்லிவரு மாயையோ அணுவைமுந்தச்சூழ்ந்தது-இந்தக்கன்மமோ இதுவன்றிச் சொல்லப்பட்டுவருமாயையோ ஆன்மாவை முற்பட்டுப்பொ ருந்தியது,—எனும் உரை-என்று சொல்லுஞ்சொல்,—முதல் ஓர் தொடக் கிலார்பால் ஒல்லை வருமெனின் உளதாம் - முன்பே ஒருமலமுமில்லாதா ரிடத்தில் விரையப்பொருந்துமென்றால் உண்டாம் (அத்தனையாயின் அத் தொடக்கேதெனில்),—உயிர் உண்டாவே உளது மலம் - ஆன்மா என்று ண்டு அன்றே ஆணவமலமுண்டு (ஆனால் மாயையுங்கன்மமும் பின்புள வானவோவெனில்),—மலம் உளதா ஒழிந்தவெல்லாம் - ஆணவமலமுண் டாகவே ஒழிந்தமாயையுங் கன்மமும்,—நெல்லின்வரு தவிடு உமிபோல் அநாதியாக நிறுத்திடுவர் - நெல்லிடத்துண்டானதவிடுமுமியும் அந்நெல்லி ற்கு அநாதிசம்பந்த மானாற்போல அநாதியாகச் சொல்வர்,—இது சைவம் நிகழ்த்துமாறே - இது சிவாகமங்கள் சொல்லுமுறைமை என்க.

அருந்துதற்கோவென்னுமோகாரம் உடம்பாட்டுவினா. மற்றையோகாரமிரண் டும் அறியாவினா.

இது கன்மத்துக்கீடாகக் கருத்தா சரீரத்தைக்கூட்டுவிப்பனென்னில் அந்தக் கன்மமோ சரீரமோ முந்தினதென்னும் வினாவிற்கு உத்தரமுணர்த்திற்று. (எ)

அருத்திமிகுங் கலைகால நியதியுடன் வித்தை
　　யராகமிவை யனந்தரான் மாயைதனி லாகு
முருத்திரராற் கலையதனிற் பிரகிருதி குணங்க
　　ளுளவாகு மகங்காரம் புத்தியினி லுதிக்குந்
தெரித்தவிது திரிவிதமாந் தைசதவை காரி
　　திகழ்தருபூ தாதியெனத் திருந்தியசாத் துவிதம்

விரித்தகுண மனம்புத்தி யிந்திரிய மென்று
விளம்பியசோத் திராதிமுதல் விளங்கியிடும் விரிந்தே.

(இ-ள்.) மாயைதனில் - அசுத்தமாயையிடத்திலே,—அனந்தரால் - அனந்ததேவரருளாலே,—அருத்திமிகுங் கலை காலம் நியதியுடன் வித்தை அராகம் இவை ஆகும் - ஆசைமிகுதற்குக் காரணமான கலை காலம் நியதி வித்தை அராகமாகிய விவையைந்தும் உளவாகும்,—உருத்திரரால் கலையதனில் பிரகிருதி குணங்கள் உளவாகும் - உருத்திரதேவரருளாலே முன் சொன்னகலையிலே மூலப்பிரகிருதிதோன்றி அதினின்றுங்குணங்கடோன்றும் (இக்குணத்தின்றோற்றந்தானே சித்தம் புத்திகளின்றோற்றமும்),—புத்தியினில் அகங்காரம் உதிக்கும் - புத்தியினின்றும் அகங்காரந்தோன்றும்,—தெரித்த இது திகழ்தரு தைசதம் வைகாரி பூதாதியெனத் திரிவிதமாம் - சொல்லப்பட்ட விந்தவகங்காரமானது விளங்கிய தைசதவகங்காரமும் வைகாரிபகங்காரமும் பூதாதியகங்காரமுமெனமூவிதமாம்,—முதல்- முதற்சொல்லப்பட்ட தைசதவகங்காரத்திலே,—திருந்திய சாத்துவிகம் விரித்தகுணம் - நல்லசாத்துவிகமாகக் கீர்த்திக்கப்பட்ட குணத்தையுடைய,—மனம் புத்தி யிந்திரியமென்று விளம்பிய சோத்திராதி-மனமும் ஞானேந்திரியமென்று சொல்லப்பட்ட சோத்திராதியைந்தும்,—விரிந்தே விளங்கியிடும் - விரிந்துதோன்றும் என்க.

புத்தி ஞானம். காலதத்துவந் தோற்றத்தின் முதன்மையாயிருக்க ஈண்டுக் கலையையெடுத்துச்சொல்லியது ஆன்மாவிற்குக் கேவலத்திருளைநீக்கி ஞானக்கிரியைகளை முற்படச்செனிப்பித்தலின். காலந்தோன்றி அதினின்று பின் நியதியும் அதினின்று பின் கலையுந்தோன்றி அக்கலையினின்று வித்தையும் அதினின்று அராகமுந்தோன்றும். இங்ஙனந்தோன்றுதலிற் சமுச்சயமாகவந்து மாயையிலாகுமென்றார். செய்யுளாதலிற் செவ்வெண்ணின்றொகை தொக்குநின்றது. குணதத்துவத்துக்குத்தோற்றஞ் சொல்லவே சித்தம் புத்தியென்னுமிரண்டின்றோற்றமுஞ் சொன்னதாமென்றது. என்னை? குணங்களின் சமமும் ஏற்றக்குறைச்சலுஞ் சித்தம்புத்தியாதலின். இராசதமுந்தாமதமுங்குறைந்து சாத்துவிகமேலிட்ட வவதரம் புத்தியென்பதனாலும் இதற்கு முன்னூலிற் "சித்தமாமவ்வியத்தஞ் சிந்தனைய துவுஞ்செய்யும்" என்றும் "புத்தியவ்வியத்திற்றோன்றி" என்றும் இவையிரண்டிற்கும் பிரகிருதி யுற்பத்தித்தானமாகச் சொன்னதினாலுமறிக.

இது அதோமாயாசிருட்டியுணர்த்திற்று. (அ)

மன்னியகன் மேந்திரிய மானவிரா சதஞ்சேர்
வாக்காதி வைகாரி மருவிவருஞ் சத்தந்
தன்னைமுத லாகியதா மதமிகுமாத் திரைபின்
றருமதனில் வானநில மனல்புனன்மண் சத்த
முன்னதனில் வெளியாதி யொன்றென் றுரு
முறையிலிவை யிருமையன் முடிவா முன்னே
யுன்னுசதா சிவராதி யதிபதிக ளொடுக்க
முதித்தவடை வெனவுரைப்ப ருணர்ந்து ளோரே.

(இ-ள்.) வைகாரி - வைகாரியகங்காரத்திலே,—இராசதஞ்சேர் மன்னியகன்மேந்திரியமான வாக்காதி மருவிவரும்-இராசதகுணத்தைப் பொருந்தின நிலைபெற்ற கன்மேந்திரியங்களான வாக்கு பாதம் பாணி பாயு உபத்தங்களான வைந்துந் (தங்கள் விடயங்களோடு) பொருந்தித் தோன்றும்,—பின்-(முன்னந் தைசதம் வைகாரி திகழ்தரு பூதாதியென வகுத்தவற்றுட்) பின்னாகியபூதாதி யகங்காரமானது,—தாமதமிகுசத்தந்தன்னை முதலாகிய மாத்திரைதரும் - தாமதகுணமிக்க சத்தத்தைமுதலாகவுடைய மாத்திரைகளைந்தையுந்தரும்,—அதனில்-அந்தச்சத்தமுதலிய தன்மாத்திரையிலே,—வான் அநிலம் அனல் புனல் மண் - ஆகாயமுதலியவைந்துபூதங்களும்,—முறையில் உறும் - (நிறுத்த) அடைவேதோன்றும்,—அதனில் - அந்தப் பூதத்திலே,—சத்தமுன் - சத்தமுன்னாகிய குணங்களைந்தும்,—வெளியாதி ஒன்றொன்றாக உறும்-ஆகாயமுதலியவற்றில் ஒவ்வொருகுணம் மேன்மேலும் பொருந்தும்,—அதிபதிகள் - அப்பூதங்கட்குத்தெய்வங்கள்,—இருமை அயன்முடிவா-பெரியபிரமனீறாக,—முன்னே உன்னு சதாசிவர் ஆதி-பஞ்சமூர்த்திகளின் முதன்மையாக முந்த நினைக்கப்படுஞ் சதாசிவதேவர் முதலியோர்களாயிருக்கும்,—ஒடுக்கம்(முறையில்)உதித்த அடைவென உரைப்பர் உணர்ந்துளோரே - இனித்தத்துவங்களொடுங்கு முறைமையுந் தோன்றின முறைமையென்று சொல்லுவர் பெரியோர் என்க.

காரணத்திலுள்ளது காரியத்துஞ்சேர்தலின் மனமுதல் இங்ஙனந்தோற்றஞ் சொல்லிய தத்துவங்கட்குங் குணம் அடைகொடுத்தார். முன்னூலில் "இருங்குணரூபமாகியிசைந்திடுமெங்கும்" என்றதனாலெனவறிக. சமவேதமாயிருக்கிற ஞானக்கிரியாசத்திகளுக்கு அபிவியஞ்சகமாகையாலெனின் வியாபாரத்துக்கு அபிவியஞ்சகங்களாகையாலே ஞானேந்திரியங்கன்மேந்திரியமெனப்பெயர்பெற்றனவென்றறிக. முறையிலென்பதீரிடத்துங்கூட்டுக. தன்மாத்திரை பூதமெனச்சாதியொருமையாகச் சொல்லப்படுதலின் அதனிலென்றார். இனி ஆகாயமுதலாக ஒவ்வொருகுணமேறுமென்றதென்னை? ஆகாயமொன்றுக்குமே சத்தகுணமுள்ளது. மற்றைநாலுக்குமில்லை. ஆகாயத்தினுடைய வாசிரயத்தாலே யுண்டாமத்தனையென்று வைசேடிகன் முதலியோர்சொல்லின், ஆகாயத்துக் கெதிரொலி வாயுவுக்குச் சகசகாதியொலி அக்கினிக்குத் தமதமாதியொலி அப்புவுக்குச் சலசலாதியொலி பிருதிவிக்குக் கடகடாதியொலி இப்படிப்பிரத்தியட்சமாக வெவ்வேறு சத்தங்கேட்கப்படுகையால் அவர் மதமுமடாது.

இது அதோமாயாசிருட்டியும் இருவித மாயாசிருட்டிகளான கருவிகளினொடுக்கமுமுணர்த்திற்று. (க)

இனி கன்மமலத்தை நான்கு திருவிருத்தங்களாலுணர்த்துவான்றொடங்கினார்.

நண்ணியிடு முருவதனுக் கேது வாகி
நானாபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரு மாதலா லநாதி யாகிப்
பலவாகி யணுக்கடொறும் படர்வ தாகி
யெண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்று
மியல்பினதாய் மதிகதமா யிருபயனும் பாவ

புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
பொருந்துமிது கன்மமலம் புகலு மாறே.

(இ-ள்.) கன்மமலம் - கன்மமலமானது,—நண்ணியிடும் உருவதனுக்கு ஏதுவாகி - (ஆன்மாக்கள்) பொருந்தப்படு முடம்பிற்கு ஓர்காரணமாய்,—நானா போகங்களாய் - நானாவிதமான போகங்களையுடையதாய்,—நாசோற்பத்தி பண்ணிவரும் - நாசத்தையும் உற்பத்தியையும் (பீசாங்குர நியாயமாக) உண்டாக்கிவரும்,—ஆதலால் அநாதியாகி - ஆகையினாலே தொன்றுதொட்டுவருவதாய்,—பலவாகி - பலவிதப்படுவதாய்,—அணுக்கடோறும் படர்வதாகி - (சிருட்டிகாலத்து உடலெடுக்குமிடத்துச் சூக்குமமா) யான்மாக்கடோறுஞ்செல்வதாய்,—எண்ணிவரு மனவாச கன்மத்தால் இயற்றும் இயல்பினதாய் - நினைவுபரந்த மனவாக்குக் காயங்களாலுண்டாக்கத்தக்க முறைமையையுடையதாய்,—மதிகதமாய் - (திரிகாலத்தில் ஆன்மாக்களுக்குச்சீவிதமாகப்) புத்தியை அடைந்திருப்பதாய்,—இருபயனும் புண்ணிய பாவமாய் - இரண்டுபிரயோசனமான (சுவர்க்கநரகங்களுண்டாதற்குக் காரணமான) புண்ணியபாவங்களாய்,—புலர்காலை மாயைமேவிப் பொருந்தும் - ஒடுங்குங்காலத்தில் அந்த மாயையிலே யொன்றுபட்டுப்பொருந்தும்,—இது புகலுமாறு - இஃது (ஆகமங்களிற்) சொல்லும்படி என்க.

புண்ணியபாவமாயெனமாறுக. மேவிப்பொருந்தும் என்றது 'சூழ்ந்தாழ்ந்தகண்' போல நின்றது. நாசோற்பத்திபண்ணிவருமென்பதற்கு அழிவதுமாவதுமாயென்றுரைப்பாருமுளர்; அதற்குப் பண்ணியென்னும் பொருள்படாமையறிக. வாச வடசொற்றிரிவு. கன்மம் ஆகுபெயராய் காயத்தின்மேனின்றது.

இது கன்மமலத்தின்றன்மை பொதுவகையாலுணர்த்திற்று. (௪௦)

கன்மநெறி திரிவிதநற் சாதியாயு போகக்
கடனதென வருமூன்று முயிரொன்றிற் கலத்த
றொன்மையது மூலலதுண வாகா தானுந்
தொடங்கடைவி னடையாதே தோன்று மாறித்
தன்மைதரு தெய்விகமுற் பவுதிகமான் மிகமாந்
தகையினுறு மசேதனசே தனத்தாலுஞ் சாரு
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவணூ
ணுடிலத னூழ்வினையா நணுகுந் தானே.

(இ-ள்.) கன்மநெறி - கன்மத்தின்வழி,—நற்சாதி ஆயு போகக் கடனதெனத் திரிவிதம் - நல்லசாதி வாழ்நாள் புசிப்பான முறைமையையுடையதென்னும்படி மூன்றுவிதமாம்,—வருமூன்றும் உயிர் ஒன்றிற் கலத்தல் தொன்மையது-இங்ஙனம் வருமூன்றும் ஓரான்மாவிலேகூடிப்போதுகிறது பழையதாயிருக்கும்,—ஊழ் அல்லது உணவு ஆகாதானும் - (அதுதான்) முறையிலன்றிப் புசிக்கலாகாதாயினும்,—தொடங்கு அடைவின் அடையாதே மாறித்தோன்றும் - ஆர்ச்சித்தமுறையிலே கூடாமல் (வன்மைமென்மைகட் கிடாக) மாறிக்கூடும்,—தன்மைதரு தைவிகம் முன் பவுதிகம் ஆன்மிகமாந் தகையில் உறும் அசேதன சேதனத்தாலுஞ் சாரும் - இயல்பாகிய ஆதிதைவிகமுதலாக ஆதிபவுதிகம் ஆத்தியான்மிகமான கூறுபாட்

டாற் பொருந்துகின்ற அசேதன சேதனங்களாலுஞ் (சுகதுக்கமாய்ப்) பொருந்தும்,—நன்மையொடு தீமைதரு சேதனனுக்கு இவண் ஊண் நாடின் - இப்படி நன்மை தீமைகளைச் செய்துவருகின்ற ஆன்மாவுக்கு இவ்விடத்துப் புசிப்பை விசாரித்துப்பார்க்கில்,—அதன் ஊழ்வினையா நணுகுந் தானே - அந்தக்கன்மங்களைப் புசிக்கு முறைமையிலே (மேலுஞ் சனன முண்டாகைக்குக்) கன்மமுண்டாகா நிற்கும் என்க.

மேலுஞ்சேதனத்தாலுமென்றவும்மை இறந்ததுதழீஇயவெச்சவும்மை. மாறித்தோன்றுமென்க. தெய்வத்தால்வருவது தைவிகம். பூதத்தால்வருவது பவுதிகம். ஆன்மாக்களால்வருவதான்மிகம். இவற்றுள் ஆன்மிகம் இருவிதம். அவை சாரீரகமும் மானசமுமெனவாம். சாரீரகமாவது குன்மங் காசமுதலான வியாதிகளால்வருவது. மானசமாவது சோகம் அசூயை மாற்சரியங்களால்வருவது. ஏடு எண்ணேடு.

இது அந்தக் கன்மமுடனேறுநின்று காரியப்படுமுறைமையுணர்த்திற்று. (கக)

மேலைக்கு வருவினையே தென்னி லங்கண்
விருப்புவெறுப் பெனவறியவ் விளைவு மெல்லா
மூலத்த வினைப்பயில்வா மென்னி னமென்
முற்றியதன் பயனுனக்கு முளைக்கு மென்பர்
ஞாலத்து வினைகளிரு திறமாகும் புந்தி
நண்ணாத வினைநணுகும் வினையெனவொன் றிரண்டா
யேலத்தா னிதமகித மாமிதனால் வழுவா
தெய்திபிடும் புண்ணியபா வங்க ளென்றே.

(இ-ள்.) மேலைக்கு வருவினை ஏதென்னில் அங்கண் விருப்பு வெறுப்பென அறி - (முன்பு நானார்ச்சித்த கன்மம் இப்போது புசித்துவிடுவதாயிருந்தது) மேலுமொரு செனனமுண்டாகைக்கு வருகின்றவினை எந்தவினைதானென்றுகேட்கில் (இப்பொழுது புசித்துவிடுவதென்றாயே அப்படிப் புசிக்கும்) அவ்விடத்திலேயுண்டான இதாகிதங்களால் வரும் வினையென்றறிவாயாக,—அவ்விளைவு எல்லாமும் மூலத்தவினைப்பயில்வாமென்னின்-அங்ஙனம் இதாகிதத்தாலுண்டான சகலவினைகளும் முன்புள்ள புண்ணியபாவங்களின் றொடர்ச்சியாமெனின்,—நாமென் முற்றி அதன்பயன் உனக்கு முளைக்கும் என்பர் - நாமென்னுமமதைதானே (மேலுமொரு பிறப்புண்டாகைக்கு) முதிர்ந்த அதன்பயனாகிய கன்மம் உனக்குண்டாமென்பர் (உயர்ந்தோர்),—புந்தி நண்ணாத வினைநணுகும் வினையென ஒன்று இரண்டாய் ஞாலத்து வினைகள் இருதிறமாகும் - அபுத்தி பூர்வமான கன்மமும் புத்தி பூர்வமான கன்மமுமென ஒருகன்மந்தானே இரண்டாய்ப் பிரபஞ்சத்திலே செய்து போதுகின்ற கன்மங்களெல்லாம் இரண்டுவகையாம்,—ஏலத்தான் இதம் அகிதமாம் - (அங்ஙனமாமிடத்திற்) பொருந்தத்தான் இதமும் அகிதமுமாகாநிற்கும்,—இதனால் வழுவாது புண்ணியபாவங்களென்றே எய்திபிடும் - இந்தவிதாகிதத்தாலே தப்பாமற் புண்ணியகன்மம் பாவகன்மமென்றுபொருந்தும் என்க.

விருப்புவெறுப்பும் விளைவும் ஆகுபெயர். அவ்வினையுமென்பதூஉம்பாடம். எல்லாமும் எனமாறுக. இரண்டாமென்று பாடமோதுவாருமுளர். என்றேயெய்திபிடுமெனக்கூட்டுக.

இது முன்னர் மேலைக்காகாமியமாய்ப்பொருந்துமென்பதை யாசங்கித்து எப்படிப்பொருந்துமென்பானுக்கு உத்தரமுணர்த்திற்று. (கஉ)

உற்றதொழி னினைவுரையி லிருவினையு முளவா
மொன்றொன்று லழியாதூ ணொழியா துன்னின்
மற்றவற்றி னொருவினைக்கோர் வினையால் வீடு
வைதிகசை வம்பகரும் மரபி லாற்றப்
பற்றியது கழியுமிது விலையா லேற்கும்
பான்மையுமாம் பண்ணுது பலிக்கு முன்னஞ்
சொற்றருநூல் வழியின்வரின் மிகுதி சோரும்
சோராதங் கதுமேலைத் தொடர்ச்சி யாமே.

(இ-ள்.) இருவினையும் உற்றதொழில் நினைவு உரையில் உளவாம் - அந்தப்புண்ணியபாவங்களான இரண்டுவினைகளும் (மெய்மனமொழிகளான முப்பொறிகளிற்) பொருந்தியதொழிலும் நினைவும் உரையுமான இம்மூன்றினுலே வருவனவாம்,—ஒன்று ஒன்றால் அழியாது - ஒருவினையால் ஒருவினைபோகாது,—உன்னின் ஊண் ஒழியாது - விசாரித்துப்பார்க்கிற் புசிப்புத்தவிராது,—மற்று அவற்றின் ஒருவினைக்கு ஓர்வினையால் வீடு- அவ்விருவினைகளுள் ஒருவினையால் ஒருவினைக்கு விடுதலையும்,—வைதிக சைவம் பகரும் - வேதாமங்கள்சொல்லும் (ஒழிதல் எப்படியெனில்),—மரபில் ஆற்றப் பற்றியது கழியும் - (அவை) சொன்னமுறையிலே செய்தாற் கூடின பாவகன்ம நீங்கும்,—இது - இங்ஙனம் புண்ணியத்தாற் பாவம் ஒழிகை,—விலையால் ஏற்கும் பான்மையுமாம் - விலைக்குக்கொள்ளு முறைமையயுடையதுமாம்,—பண்ணுது பலிக்கும் - இப்படிச் சாந்திபண்ணுதிருப்பினும் (அபுத்தி பூர்வமாகப் பாவமொழிகைக்கேற்ற புண்ணியமுஞ்) சித்திக்கும் (ஆனுல் இந்தமுறையிலே பாவமடங்கலையும் போக்கி விடலாமோவெனில்),—முன்னஞ் சொற்றரு நூல்வழியின்வரின் மிகுதிசோரும்- (இறைவன்) முற்காலத்திலே அருளிச்செய்த வேதாகமங்களின் முறைமையிலே செய்தால் மிகுத்தகன்மங்கள்போம்,—அங்குச்சோராது மேலைத் தொடர்ச்சியாமே - அவ்விடத்துப் போகாத கன்மம் (புசிப்பிக்கவேண்டுகையாலே) மேலைக்குச் சம்பந்தமாம் என்க.

வீடு நட்டபின் வீடில்லை என்பதுபோல. அங்குச் சோராதெனமாறுக. ஒன்றொன்று லொழியாதென்பதற்கு மனமொழிமெய்களிலேயொன்றுற் செய்தகன்ம மொன்றுற் போகாதென்றுரைப்பாருமுளர். பீசாங்குரநியாயமாகப் பிரவாகாநாதியாயிருக்கும்.இன்னுந் திட்டகன்மம் அதிட்டகன்மம் அநியதகன்மமெனமூவிதமாம். திட்டகன்மமாவது அவுடதப்பிரயோகத்தாலும் அரசராலும் பகைவராலே ஆபிசாரமாகப் பிரயோகிக்கப்பட்ட மந்திரங்களாலும் இம்மையிற்பலிப்பது. அதிட்ட கன்மமாவது சுவர்க்கநரகங்களிலே அனுபவிக்கப்படுவன. அநியதகன்மமாவது அசுவமேதமும் பிரமகத்தியு மொருகாலத்திற் செய்யப்பட்டுப் பக்குவம் வந்தவிடத்தே ஒருங்கேயிரண்டும் புசிக்கப்படாமையிற் கருத்தா இன்னகாலத்தில் இது வென்றுறுத்திப் புசிப்பிக்குமது. இனி மூன்றும்பத்தி திட்டாதிட்டம். அதாவது ஒருவன் இம்மையிற்செய்த அசுவமேதபலன் இம்மையிலே பலிப்பது என்பது மொன்று. கன்மங்கள் மாயையிலேபொருந்திப் பக்குவப்பட்டுச் சிருட்டித்தகாலத்திலே

புசிக்கப்படும். இதன்விரிவு ஆகமங்களிற்காண்க. ஏகமாயென்பதுதொட்டு இது காறும் பஞ்சமலங்களின் காரணகாரியங்க ளுணர்த்திற்று.

இது கன்மத்துக்கு மாயையுபாதானமான முறைமையும் அக்கன்மம் வாதியாத படிக்கு உபாயமுண்டென்பதூஉமுணர்த்திற்று. (௧௩)

மோகமிக வுயிர்கடொறு முடனாய் நிற்கு
மூலவா ணவமொன்று முயங்கி நின்று
பாகமிக வுதவுதிரோ தாயி யொன்று
பகர்மாயை யொன்றுபடர் கன்ம மொன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரு மாமாயைத் திரட்சி யொன்றென்
றாகமல மைந்தென்ப ரைந்து மாறா
தருளென்ப தரிதென்ப ரறிந்து ளோரே.

(இ-ள்.) மோகம் மிக உயிர்கடொறும் உடனாய் நிற்கும் மூல ஆணவம் ஒன்று - மறைப்புமிகும்படி உயிர்கடோறும் அநாதியிலே கூடிநிற்கும் மூலமாகிய வாணவமலமொன்று,—முயங்கி நின்று பாகம் மிக உதவு திரோதாயி ஒன்று - (அந்தவாணவமலத்தைப்) பொருந்திநின்று பக்குவத்தை மிக உண்டாக்குகின்ற திரோதான சத்தியொன்று,—பகர்மாயை ஒன்று - (தனுவாதிகட்குக் காரணமாகச்) சொல்லப்பட்ட மாயாமலமொன்று,—படர் கன்மம் ஒன்று - (புண்ணியபாவங்களாக) விரிந்த கன்மமலமொன்று,—தேகம் உறு கரணமொடு புவனபோகச் செயல் ஆரும் மாமாயைத்திரட்சி ஒன்று - தனுவும் மிகு கரணமும் புவனமும் போகமுமாய் நடக்கும் தொழில் நிறைந்தபெரியமாயாகாரியமானமாயேயமலமொன்று,—என்று - என்றெவ்வொன்றாக வெண்ணி,—ஆகமலம் ஐந்தென்பர்-(பின்னொருதொகை) யாக மலம் ஐந்தென்பர்,—ஐந்தும் மாறாத அருளென்பது அரிதென்பர் அறிந்துளோரே - அவ்வைந்துமலமு மொழியாமல் அருள் (பெறுதல்) கூடாதென்று சொல்லுவர் அறிவுடையோர். என்க,

ஒடு எண்ணொடு. ஒன்றாக மலமைந்தென்று பாடமாகில் என்றென்னு மிடைச்சொல் வருவிக்க. மாறாதென்னு மெதிர்மறை வினையெச்சம் பெறுதலென்னுமவாய்நிலையான்வந்த வினைப்பெயரிற் பெறுதலென்னும் வினையோடுமுடிந்தது. அரிதென்பது "மனக்கவலைமாற்றலரிது" என்பதுபோல வினைப்பொருட்டாய் நின்றது. அருளென்பது அருளென்றுயர்ந்தோராலெடுத்துரைக்கப்படுவது. மலமாவது அழுக்கு. ஆன்மாக்களுடைய ஞானக்கிரியைகளை மறைக்கையினாலே ஆணவமலத்தை மலமென்பது அனுமதம். ஏனை நான்கையு மலமென்பதென்னையெனின், மலபாகத்தின் பொருட்டுக் கருவிகளைக்கூட்டி ஆன்மாக்களைப் பொய்யை மெய்யென்று மயக்கிப் போகங்களை யனுபவிப்பிக்கையாலே உபசரித்துத் திரோதாயியான சிவசத்தியையு மலமுளதா வென்றார். ஒழிந்த வெல்லா நெல்லின்வரு தவிடுமிபோல் அநாதியாகலான் அவையொன்றிற்கொன்றேதுவாக மாயையினையுங் கன்மத்தையும் மாயாகாரியமாதலின் மாயேயத்தையும் மலமென்றார். அதோமாயையைக் காரியங்களின் மிகுதிபற்றி மாமாயையென்றார். "மும்மலநெல்லினுக்கு" என்றும் "மாயையின்காரியத்தை" என்று மிகுதற்கு முன்னூலினும் "மலங்களைந்தாற்சுழல்வன்" என்னுந் திருவாக்கினும் மலமென்றமை யறிக.

இது அம்மலங்களின் பெயருந் தொகையும் அவைநீங்கியன்றி முத்திவாயா தென்பதூஉமுணர்த்திற்று. (கச)

---

இனி கேவல சகல சுத்தமென்னும் அவத்தை மூன்றினையுமுணர்த்துகின்றவர் முதற் கேவலாவத்தையினையும் மூலமலமென்பதொன்றில்லையென்னும் புறமதத் தூடணங்களையும் நான்கு திருவிருத்தங்களாலுணர்த்துவான்றொடங்கினூர்.

ஓங்கிவரும் பலவுயிர்கண் மூன்றவத்தை பற்றி
யுற்றிடுங்கே வலசகல சுத்தமென வுணர்வ
ரீங்குவருங் கலாதியொடு குறியுருவ மொன்று
மின்றிமல மன்றியொன்று மில்லையெனு மியல்பா
யாங்கறிவை யறிவரிதா வறிகருவி யணையா
வாதலினூ லிருண்மருவு மலர்விழிபோ லதுவாய்
நீங்கும்வகை யின்றிநித்த வியாபகமா யங்க
ணிற்பதுகே வலமென்று நிகழ்த்து நூலே.

(இ-ள்.) ஓங்கிவரும் பலவுயிர்கள் மூன்றவத்தை பற்றி உற்றிடும் - (எண்ணிற்களவுபடாமையின்) உயர்ந்துவரும் ஆன்மாக்களெல்லாம் மூன்ற வத்தையைப் பொருந்கி அழுந்தும்,—கேவல சகல சுத்தமென உணர்வர்- (அவற்றைக்) கேவலாவத்தை சகலாவத்தை சுத்தாவத்தை யென்றுபெரி யோர் அறிவர்கள்,—கேவலம் - (அம்மூன்றினுட்) கேவலாவத்தையாவது, —ஈங்குவருங் கலாதியொடு குறி உருவம் ஒன்றும் இன்றி - அவ்வுயிர்கள் இவ்விடத்திற் பரந்த கலாதிகளுடனே ஓரடையாளமும் ஒருவடிவுமில்லா மல்,—மலம் அன்றி ஒன்றும் இல்லையெனும் இயல்பாய் - ஆணவமலமொழி ந்துவேறொன்றுமில்லையென்னு முறைமையினை யுடையவாய்,—அறிகருவி அணையா ஆதலினூல் - அறிதற்கேதுவாகிய கருவிகள் கூடாவாதலாலே,— ஆங்கு அறிவை அறிவு அரிதா - அவ்விடத்தே ஒருபொருளையு மறியக் கூடாமல்,—இருள் மருவும் அலர் விழிபோல் அதுவாய் - இருளைப்பொருந் திய விரிந்த கண்கள் (அவ்விருடாயுய்நின்றாற்) போல் அவ்வாணவ மலந்தா னுய்,—நீங்கும் வகை இன்றி - அதனைச்சிறிதும் விட்டு நீங்குமுறைமை இல்லையாய்,—நித்த வியாபகமாய் - அழியாத வியாபகமுமாய்,—அங்கண் நிற்பது - அவ்விடத்து நிற்கின்றது,—என்று நூல் நிகழ்த்தும் - என்று திவ்வியாகமங்கள் சொல்லும் என்க.

நிற்பதென்பது தொழின்மேனின்றவொருமை. நிகழ்த்தல் ஈண்டுச்சொல்லு தல். அறிவரியவென்ற பாடத்திற்கு ஆ யென்னுஞ்சொல் வருவிக்க. அறிவை யென்பதில் அறிவு ஆகுபெயர். அறிகருவி சுத்ததத்துவமென்பாருமுளர்.

இது கேவலாவத்தையையுணர்த்திற்று. (கரு)

இன்மைமல மாயைகன்ம மென்றிரண்டே யிறைதா
னிலங்குபல வுயிர்களுமுன் புரிந்தவிரு வினையின்
றன்மைகளா லவர்களுக்குந் தனுகரண புவனந்
தந்திடுமிங் கிதனாலே யிருபயனுஞ் சார்ந்து
கன்மமெலா நேராக நேராதன் மருவக்
கடவுளரு ளாலெவையுங் கழித்திடுவ னதனாற்

பின்மலமா னவையணுகா பெருகொளிமுன் புளதே
பெற்றிடுமென் றித்திறமென் பேசு மாறே.

(இ-ள்.) மலம் இன்மை (யே) - (கேவலாத்தைகள்) இருளென்ற ஆணவமலம் இல்லாமையே,—மாயை கன்மமென்று இரண்டே - மாயை யுங் கன்மமுமென இரண்டேயுள்ளன,—இறைதான் இலங்கு பல உயிர்க ளும் முன்புரிந்த இருவினையின் றன்மைகளால் எவர்களுக்குந் தனுகரண புவனந் தந்திடும் - (அவ்விரண்டுமுண்மையாற்) கருத்தாவானவன் விளங்கா நின்ற பலவான்மாக்களும் முற்சனனங்களில் ஆர்ச்சித்த புண்ணியபாவங்க ளின்முறைமைகட்கிடாகஎல்லாவுயிர்களுக்குந்தனுவாதிகளைக்கொடுப்பன், —இங்கிதனாலே - (இப்படி வினைக்கிடாக இறைவன் கொடுக்கு) மிதனாலே, —இருபயனுஞ் சார்ந்து - மீளவும் புண்ணியபாவங்களைப் (ஆர்ச்சித்து)பொ ருந்துதலால்,—கன்மமெலாம் நோாக நேராதல் மருவ - அந்தக் கன்மங்க ளெல்லாந் துலையொக்கச் செவ்வாதலைப் பொருந்தின விடத்து,—கடவுள் அருளால் எவையுங் கழித்திடுவன் - அவ்விறைவன் தன்கருணையாலே அக் கன்மங்களெல்லாவற்றையும் போக்குவன்,—அதனாற் பின் மலமானவை அணுகா - ஆதலாற் பின்பு அந்த மலமிரண்டும் பொருந்தா,—பெருகு ஒளி முன்பு உளதே பெற்றிடும் - (உயிர்களு) முன்புள்ள மிக்க பிரகாசத் தையே பெறும்,—என்று இத்திறம் பேசுமாறே என் - என்றிப்படி அயிக் கியவாதியும் பாசுபதியுஞ் சொல்லும்படி யென்பாய் என்க.

பயன் காரணத்தையுணர்த்துகின்றவாகுபெயர். ஆதாரவாதேய வொற்றுமை யாற் புவனஞ்சொல்லவே போகமுமடங்கிற்று. இரண்டேயென்னுந்தேற்றேகா ரம் இன்மையிலுஞ் சேர்க்கப்பட்டது. இங்கிதுவென்பது இங்கிவையுங் குவைபோ லொரு சொல்லாய்நின்றது. சார்ந்து சார்தலால்.

இது மலமில்லையென்னும் அயிக்கியவாதி பாசுபதிகள் கருத்துணர்த்திற்று.(௧௬)

மாயைமுத லெனவினையின் பான்மைமுத லெனவே
மன்னுபனை விதைமரபின் மயங்குமலஞ் சுத்தற்
கேயுநெறி யென்கொலத னியல்பாயின் முத்தி
யென்பதென்மற் றிவைநிற்க விருங்கலாதி யுணர்வாய்
மேயபினர்த் தன்னுருவம் விளங்காமை விளக்கு
மிருமுலகந் தனிலென்னி லிவைவிடுங்கா லுணர்வுட்
டோயுநெறி யிலதாத லறியாமை யெனநீ
சொல்லியது மலமென்பர் துணிந்து ளோரே.

(இ-ள்.) மாயைமுதலென வினையின் பான்மை முதலெனவே மன்னு பனைவிதை மரபின் மயங்கும் - (முன்சுத்தனாயிருக்கின்றவனை மாயையுங் கன்மமுங் கூடுமென்று நீ சொல்லுதலின்) மாயை முந்தியதென்றுங் கன் மத்தின் பகுதி முந்தியதென்றுஞ் சொல்லவே நிலைபெற்றதாலபீசநியாய மாக மயங்கும்,—சுத்தற்கு மலம் ஏயும் நெறி என் கொல்-(அதுவன்றிச்) சுத்தரானவர்களுக்கு (நீசொல்லிய) மலங்கள் பொருந்தியபடி எப்படி,— அதன் இயல்பு ஆயின் - அஃது அவ்வான்மாவினியற்கை ஆயின்,—முத்தி என்பது என் - (ஆனால் இயல்பானதழியாமையின் வேதாகமங்களில்)

வீடென்னுஞ் சொல்வருவதென்,—மற்று இவை நிற்க - (அதனுல் நீ சொல்லும்) இவையொழிக,—இருங்கலாதி உணர்வாய் மேயபினர் - பெரியகலாதிகள் இவனுக்கு அறிவை யுண்டாக்குவதாகக் கூடியபின்,—மிகும் உலகந்தனில் - பெரிய பிரபஞ்சத்திலே,—தன்னுருவம் விளங்காமை விளக்கும் - ஆன்மாவினுடைய சொரூபந் தோன்ருதபடி (அப்பிரபஞ்சத்தை) விளக்கி நிற்கும்,—என்னில்-என்று நீ சொல்லில்,—இவை விடுங்கால் உள் உணர்வு தோயு நெறி இலதாதல் (என்) - இக்கலாதிகள் நீங்கின அதீதத்தினுள்ளே அறிவு பொருந்து முறைமை இல்லாமையேன்,—அறியாமை-(அவ்விடம்) அறியாமையாம்,—என நீ சொல்லியது மலமென்பர் துணிந்துளோரே - என்று நீ சொல்லிய விதனை ஆணவமலமென்று சொல்லுவர் அறிவாற் றெளிந்தோர் என்க.

என்னென்பதனை இலதாதலென்பதினுங்கூட்டுக. மற்று அசை.

இது வினுவுத்தரமாக அவருள் ஒருவனைமறுத்துமலமுண்டென்பதுணர்த்திற்று.

அந்நியமா னவையுணர்த்தி யந்நியமாய் நிறைந்த
வறிவறியா மையினுனு மருணிலவுங் காலந்
தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானுமுயிர் தானெனவொன் றிலதாய்
மன்னியிடு மலமாயை கன்மங்கண் மாறி
வந்திடுமிங் கிதுவழுவா தாதலினுன் மனத்தா
லுன்னரிய திருவருளை யொழியமல முளதென்
றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே.

(இ-ள்.) மலம் - (இந்த) ஆணவமலமானது,—அந்நியமானவை உணர்த்தி - (தான் பக்குவமாமளவுமுயிர்கட்கு) வேறுய்ப் பொருளல்லாத பிரபஞ்சத்தைப் பொருளென்னும்படி அறிவித்தலால்,—அந்நியமாய் நிறைந்த அறிவு அறியாமையினுலும் - (அவ்வுயிர்கள் தமக்கு) வேறின்றிப் பரிபூரணமாய் நிற்கின்ற ஞானத்தை அறியாதபடியாலும்,—அருள் நிலவுங் காலந்தன்னில் அவனே யாவுமாய் நின்றதொன்மை தாம் உணர்தலானும் - அந்த அருள்விளங்குங் காலத்திற் கருத்தாவே சர்வமுமாய் நின்ற பழமையை அவைகடாம் அறிகையாலும்,—உயிர்தானென ஒன்று இலதாய் மன்னியிடும் - (அவ்வருள் பிரகாசிக்குமளவும்) ஆன்மாவென வொருபொருளில்லையாக (அதுதானேயாய்) நிலைபெற்றுநிற்கும்,—மாயை கன்மங்கள் மாறி வந்திடும் - மாயையுங் கன்மமுஞ் (சிருட்டிசங்காரங்களிலே) பற்றுவது விடுவதாயிருக்கும்,—இங்கிது வழுவாது - இந்த வாணவமலம் அப்படிப் பற்றுவது விடுவதாகாது,—ஆதலினுல் மனத்தால் உன்ன அரிய திருவருளை ஒழிய மலமுளதென்று உணர்வு அரிதாம் - ஆகையினுலே மனத்தானினைத்தற்கரிய திருவருளைக்கொண்டறிதலன்றி ஆணவமலமுண்டென்று ஒருவர்க்கு மறியக்கூடாது,—அதன் உண்மை உனக்கே தெரிவு அரிதாம் - ஆகையினுலே மலத்தினுண்மைத் தன்மை உனக்கறியக்கூடாது என்க.

இங்கிது ஒருசொல். உணர்த்தி உணர்த்தலால்.

இது மேலதனையேயுணர்த்திற்று. (௧அ)

புகலுமல மொழித்தற்குக் கலாதிமுதன் மாயை
பொருந்தியிடு மரனருளாற் போதந் தீபஞ்
சகலமெலா முடனுய வாறு போலுந்
தருமருளை மலமுயிர்கள் சாராமன் மறைக்கு
மிகலிவரு மிவையுணரி னிருள்வெளியாந் தன்மை
யெய்தும்வகை தன்செய்தி யிலங்கு விந்து
பகர்வரிய வுணர்வாகி யொளியா யுள்ளப்
பான்மையினு லொருநாதம் படருந் தானே.

(இ-ள்.) புகலு மலம் ஒழித்தற்கு - அங்ஙனஞ் சொல்லப்பட்ட ஆணவமலம் போக்குதற்பொருட்டாக,—அரன் அருளால் - கருத்தாவினருளினுலே,—கலாதிமுதல் மாயை பொருந்தியிடும் - கலாதிமுதலிய மாயாகாரியங்கள் ஆன்மாக்களைப் பொருந்தும்,—போதம் - சுத்தம் மிச்சிரம் அசுத்தமென்று பின்னமாயிருக்கின்ற தத்துவங்களால் அவ்வுயிர்கட்கு அறிவு விளங்கும்படி,—தீபம் சகலமெலாம் உடனுயவாறு போலும் - தீபமானது சகலமாய தண்டு தகழி நெய் திரி எல்லாவற்றுடனும் பிரகாசமானபடி போலும்,—தரும் அருளை மலம் உயிர்கள் சாராமல் மறைக்கும் - இப்படிக் கூட்டுகின்ற அருளை ஆன்மாக்கள் பொருந்தாதபடி அவ்வாணவமலம் மறையாகிற்கும்,—இகலிவரும் இவை உணரின் இருள் வெளியாந்தன்மை - இப்படி மாறுபட்டு வரும் ஆணவமும் மாயையும் விசாரிக்குமிடத்தில் இருளும் வெளியுமான முறைமையாயிருக்கும்,—எய்தும் வகைதன்செய்தி - இப்படிப் பொருந்திப்போதுகின்றது அவற்றிற்கு அநாதிமுறைமையே,—இலங்கும் விந்து - (இனிச் சகலாவத்தை நிமித்தமாக மூலாதாரத்திலே) விளங்காநின்ற விந்து சத்தியிலே நின்றும்,—பகர்வு அரிய உணர்வாகி ஒளியாய் - சொல்லுதற்கரிய அறிவாய் விளக்கமாய்,—உள்ளப் பான்மையினல் - ஆன்மசொரூபத்தின் இயல்பேதுவாக,—ஒருநாதம் படரும் தானே - ஒப்பற்ற சூக்குமைவாக்குப் (புறப்பட்டுத் துரியத்திற்) செல்லும் என்க.

விந்துவினெனவிரிக்க. தான் ஏ அசைகள். நாதமென்று சூக்குமைக்கும் விந்துவென்று பைசந்திக்கும்பெயர். இதற்கு முன்னூலில் "அவ்வுடனுவ் வுமவ்வு மனம்புத்தியகங்காரங்கள் - செவ்வியவிந்துநாதஞ்சித்தமோடுள்ளமாகும்" என்பதனுலே நாதம் உள்ளத்தை யதிட்டித்து நின்று விளக்குமென்பதறிக. உள்ளப்பான்மையினு லொருநாதம் படருமென்முர். உள்ளமாவது ஆன்மா. இச்சாஞானக்கிரியைகளை விளக்குங் கலைமுதலிய கருவிகளின் சமூகமாதலினுன் உள்ளப்பான்மையினுலென்றதற்கு அவ்வாறுரைத்தாம்; காலோத்தராகமத்தில் "உள்ளம்ஆத்துமவிக்கிரகமாம்" என்றதனுல். சூக்குமைமுதலிய வாக்குநான்கும் ஒன்றிலொன்முகவும் ஒன்றுக் கொன்று தூலமாகவும் பிறத்தலின் ஒருநாதமென்முர். பான்மையினுலென்பது 'மழையினுற் றெய்வம் பராவினுர்' என்றதுபோல நின்றது. விந்துப்படருந்தானே என்பதற்குச் சிலர் விந்துவிலே நின்றுஞ் சூக்குமைவாக்குத்தோன்றி யுணர்வாயொளியா யான்மாவின் பகுதியாலே யொருநாதமாய்த் துரியத்தானத்தைப்பொருந்துமென்றும் சிலர் விந்து சத்தி யறிவாயறிவிப்பதுமா யான்மாவின்பகுதியாலே நாலுவாக்கையுந்தோற்றுவித்தற்பொருட்டு அதிலேயொருநாதந்தோன்றுமென்றுமுரைத்தார். இனி அருளாற்போலும் என ஒருபதமாக்கிக் கருத்தாவாலிவன்போதஞ் சீவிக்கும்படி விளக்

கைக்கொண்டு பலபொருளையுங் காண்பதுபோலுமென்றும் இகலிவருந்தன்மை என்பதற்கு இப்படி மாறுபட்டு வருகிற வாணவத்தையுமருளையும் விசாரிக்கிலென்று முரைப்பாருமுளர். சகலம் ஆகுபெயர்.

இது சகசமல நீங்குதற்கு ஆகந்துகமலம் வேண்டுமென்பதூஉஞ் சகலாவத்தை நிகழ்தற்குச் சுத்தமாயையிற்றோன்றிய வாக்குநாலிற் சூக்குமைவாக்கு மூலாதாரத்தைப்பொருந்திய விந்துவினின்றுந் தோன்றுமென்பதூஉமுணர்த்திற்று. (கசு)

வந்தடைந்து பின்னமாய் வன்னங்க டோற்றம்
வருமடைவு படவொடுக்கி மயிலண்ட சலநேர்
சிந்தைதனி லுணர்வாகும் பைசந்தி யுயிரிற்
சேர்ந்துவரு மவைமருவு முருவெவையுந் தெரித்து
முந்தியிடுஞ் செவியிலுறு துள்ளுணர்வா யோசை
முழங்கியிடு மத்திமைதான் வைகரியி லுதானன்
பந்தமுறு முயிரணைந்து வந்தமொழி செவியின்
பாலணைய நினைந்தபொருள் பகருந் தானே.

(இ-ள்.) பைசந்தி வந்து - பைசந்திவாக்கானது (அந்தநாதத்திலே) தோன்றி,—அடைந்து - (சுழுத்தித்தானத்தைப்) பொருந்தி,—பின்னமாய் - வெவ்வேறாய்,—வன்னங்கள் தோற்றம்வரும் அடைவுபட ஒடுக்கி - அக்கரங்கடோன்றுகின்ற முறைமை தெரியாமற் றன்னுள்ளே ஒடுக்கி,—மயில் அண்டசலம் நேர் - மயில்முட்டையிற் சலமொப்பாய்,—சிந்தைதனில் உணர்வாகும் - சித்தத்திலே அறிவாய்நிற்கும்,—மத்திமைதான் - மத்திமைவாக்கானது,—உயிரிற் சேர்ந்துவரும் அவை மருவும் உரு எவையுந் தெரித்து - பிராணவாயுவுடனே பொருந்திவருகின்ற அவ்வக்கரங்கள் பொருந்திய சொரூபங்களெல்லாவற்றையும் (அவற்றின் பொருள்களையும் புந்தியிலேயொழுங்குபட)நிறுத்தி,—முந்தியிடுஞ்செவியில் உறுது-(ஞானேந்திரியங்களின்) முற்பட்டுவருஞ் செவிக்குக்கேளாமல்,—உள் உணர்வாய் ஓசை - உள்ளே அறியத்தக்க தொனியாய்,—முழங்கியிடும் - (கண்டத்திலே) முழங்காநிற்கும்,—வைகரியில் உதானன் பந்தம் உறும் உயிர் அணைந்து வந்தமொழி - வைகரியிலே உதானவாயுவானது (சுழுமுனையிற்) சேரும்பிராணவாயுவோடு கூடுதலாலே வந்தசத்தமானது,—செவியின்பால் அணைய - சொல்வோன் செவியிடத்திலே பொருந்தும்படி,—நினைந்தபொருள் பகருந்தானே - (அவ்வைகரியானது) அவனினைந்த பொருளைச் சொல்லும் என்க.

தான் ஏ அசை.நேராயெனவிரிக்க இந்தவாக்குநான்குஞ் சுத்தாத்துவாவிற்சூக்குமமாகவும் மிச்சிராத்துவாவிற்றூலமாகவும் அசுத்தாத்துவாவிற்றூலதரமாகவுஞ் சீவிக்குமெனவறிக. பைசந்தி சித்தத்தை அதிட்டித்துவிளக்குதலிற் சிந்தைதனி லுணர்வாகுமென்றார்.

இது எனைவாக்கு மூன்றின் காரியப்பாடுமுணர்த்திற்று. (உ0)

இத்தகைமை யிறையருளா லுயிரறியு மறிவுக்
கீடாக வாடாதே யீரிரண்டி னுரைத்த
வித்தைமுத லைவரான் விளங்கு ஞான
மேவியிடு மெனவுரைப்ப ரசுத்த மாயை

வைத்தகலை தான்மூல மலஞ்சிறிதே நீக்கு
மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப்
புத்திதர வித்தையிடை நின்றறிவை யுயிர்க்குப்
பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி புணர்ந்தே.

(இ-ள்.) இத்தகைமை - இந்தமுறைமையிலே,—உரைத்த ஈரிரண்டின் - சொல்லப்பட்ட நாலுவாக்கினாலே,—வித்தைமுதல் ஐவரான்-சுத்த வித்தை முதலான தானங்களிலேயிருக்கு மைவராலே,—உயிர் அறியும் அறிவுக்கு ஈடாக - ஆன்மாக்கள் அறிகிறவறிவுக் கீடாக,—இறை அருளால் - பரமசிவனருளினாலே,—வாடாதே-கெடாதே,—விளங்கு ஞானம் மேவியிடுமென உரைப்பர் - விளங்காநின்ற ஞானம் (அவ்வுயிர்க்குப்) பொருந்துமென்று (பெரியோர்) சொல்வர் (அஃதெப்படியென்னின் நாததத்துவம் மூலாதாரத்தையும் விந்து நாபியையுஞ் சாதாக்கியம் இதயத்தையும் அதிட்டித்துச் சூக்குமைமுதலான மூன்றையும் பிரேரிக்கும் ஈசுரமுஞ் சுத்தவித்தையுந் தன்செவி பிறர்செவிகட்குக்கேட்கும் வைகரி இருவிதத்தையுங் கண்டத்தையு முகத்தையும் அதிட்டித்துக்கொண்டு பிரேரிக்குமென வறிக இனி),—அசுத்தமாயை வைத்தகலைதான் மூலமலஞ்சிறிதேநீக்கி மருவும்வகை தெரிவிக்கும் - அசுத்தமாயையிலுண்டாகியகலையானது ஆணவமலத்தைச்சற்றேநீக்கி ஆன்மாவுக்குக் கிரியாசத்தி பொருந்துமுறைமையை விளக்குவிக்கும்,—வித்தை - வித்தையானது,—வாயில்களின்பயனைப் புத்திதர - இந்திரியங்களின் விடயங்களைப் புத்தி கிருகித்துத் தன்பாற்கொடுக்க,—இடைநின்று - (தான் ஆன்மஞானத்துக்கும் புத்திக்கும்) இடையே நின்று,—அறிவைப் பொருந்தியிடும் வகை உயிர்க்குப் புணரும் - விடயஞானத்தை (ஆன்மாப்பொருந்தி யறியும்படி அவ்வான்மாவுக்கு அந்தரங்கமாக)ப் பொருந்தும் (இவை தாமாகச் செய்ய வல்லனவோ வெனின்),—புனிதசத்தி புணர்ந்தே - சுத்தனுடைய சத்தியைக் கூடிநின்றே செய்யும் என்க.

வைத்தகலைதெரிவிக்கும் எனமுடிக்க. அந்தரங்கமாகவெனவும் கிரியாசத்தியெனவும் வருவித்துரைக்க. கலைவித்தையிலும் ஆன்மாவுக்கந்தரங்கமான கருவியாகலிற் போகங்களுக் காதாரமாயிருக்கும்.மட்குடம் அக்கினியிற் காய்ச்சினபோது மெழுகு கூட்டுகைக்கு யோக்கியமானாற்போல ஆன்மாவுங் கலையைப் பொருந்தினபொழுது போகங்களைப்புசிக்கைக்குப் பாத்திரமாவன். கலையாலே கிரியாசத்திவிளங்கவே ஞானசத்தியும்விளங்குமாயினும், அந்தஞானசத்தி யொருகாரணங்கூடாமல் விடயங்களைக்கிருகிக்க மாட்டாமையாலே விடயங்களையறிவது பொருட்டாகக்கலையினின்றும் வித்தைதோன்றிற்று. ஆன்மா இந்திரியங்களைப் பொருந்திச் சத்தாதிவிடயங்களைக் கிருகிக்குமிடத்துப் புத்தி கருவி. புத்தியிற்பொருந்திய விடயங்களையறியுமிடத்து வித்தை கருவியெனவறிக.

இது சுத்ததத்துவமைந்தும் வாக்குநாலையுங்கொண்டு ஆன்மாவுக் கறிவையுண்டாக்குமுறைமையும் அசுத்தமாயாதோற்றமான கலைவித்தைகளின் காரியப்பாடு முணர்த்திற்று. (உக)

பேசரிய வராகந்தங் கன்மத்துக் கீடாப்
பெற்றதனி லாசைதனைப் பெருகுவிக்கு நியதி
தேசமிகு மரசர்தரு மாணை செய்தி
செய்தவரைத் துய்ப்பிக்குஞ் செய்தி போல
நேசமுறு தங்கன்ம நிச்சயித்து நிறுத்து
நிகழ்காலங் கழிகால மெதிர்கால மென்றே
யோசைதர வருங்கால மெல்லைபலம் புதுமை
யுறுவிக்கு மிறைசத்தி யுடனாய் நின்றே.

(இ-ள்.) பேச அரிய அராகம் - சொல்லுதற்கரிய அராகதத்துவமானது,—தங்கன்மத்துக்கு ஈடாப்பெற்றதனில்ஆசைதனைப்பெருகுவிக்கும்-ஆன்மாக்கள் தங்களுடைய கன்மத்துக்கீடாகப் பெற்றதிலே ஆசையை மிகுவிக்கும்,—நியதி - நியதியானது,—தேசமிகும் அரசர் தரும் ஆணை - தேசங்கண் மிகுத்த அரசராற் கற்பிக்கப்பட்ட ஆணையானது,—செய்தி செய்தவரைத் துய்ப்பிக்குஞ் செய்திபோல - யாதொருதொழிலைச் செய்தவரை அத்தொழிற்கேற்ற பயன்களைப் புசிப்பிக்கு முறைமைபோல,—நேசம்உறுந் தங்கன்மம் நிச்சயித்து நிறுத்தும்-(ஆன்மாக்கள்முன்னே)விருப்பமுற்றுச்செய்த கன்மங்களை நிச்சயம்பண்ணி நிறுத்தும்,—கழிகாலம் நிகழ்காலம் எதிர்காலமென்றே ஓசைதரவருங்காலம்-இறப்பு நிகழ்வெதிர்வெனச் சொல்லவருங் காலதத்துவமானது,—இறை சத்தி உடனாய் நின்றே - சிவசத்தியுடன் கூடிநின்று,—எல்லை பலம் புதுமை உறுவிக்கும் - இறந்தகாலத்தெல்லையினையும் நிகழ்காலத்துப் பலத்தினையும் எதிர்காலத்துப் புதுமையினையும் பொருந்துவிக்கும் என்க.

நிகழ்காலமெனச் செய்யுளின்றொடையின்பநோக்கி முதனின்றது. செய்தி தொழில். ஆணைசெய்தென்று பாடமோதி அரசர் தாங்கற்பித்த வாணைகளைச் செலுத்தி அவ்வவர்செய்த வறுவகைத்தொழிலான்வந்த பயன்களை அவ்வவரைப் புசிப்பிக்குமுறைமைபோல வென்பாருமுளர். கலையினாலும் வித்தையினாலும் பிரகாசிக்கப்பட்ட கிரியாசத்தி ஞானசத்திகளையுடைய ஆன்மாவுக்குப் போகத்தில் ஆசையையெழுப்புதல் காரணமாக வித்தையினின்றும் அராகந்தோன்றிற்று. இனி அராகதத்துவம் வேண்டுமோ விடயந்தானே ஆசையையெழுப்பாதோவெனின் விடயங்களை உள்ளபடி யறிந்திருக்கையிலும் விருத்தர்க்கு அவற்றிலாசை யற்றிருக்கையாலே விடய மாசையையெழுப்பமாட்டாது. ஆயிற் புத்திகுணமான அவ்வயிராக்கியந்தானெழுப்பாதோவெனின் அது புத்தியின் வாதனையாதலான் ஆன்மாக்களை விடயங்களிலே செலுத்தமாட்டாது. பாண்டத்திற்பற்றிய பெருங்காயவாசனை ஓர் காரியத்திற்குச் செயற்படாமையின், இன்னும் அந்த வாதனைதான் ஓர் காலத்திலே தனித்தனியே அநந்த வாசையை எழுப்பும். அவற்றை இவன் ஒருகாலத்திலே அறியமாட்டானாதலால் ஆசையை எழுப்புதற்கு அராகதத்துவம் வேண்டுமென்பதாம். இனி நியதியில்லாதபோது ஒருவன்செய்த கன்மத்தை ஒருவன் அனுபவித்தல் கூடும்; அரசராணையில்லாதபோது ஒருவன் செய்த போகத்தைப் பலவாறொருவன் அனுபவிப்பனாதலின். ஆயிற் கன்மந்தானே நியதியாகாதோவெனின் அது போகத்தைக் கொடுக்குமன்றி நியமிக்கமாட்டாது. சிவசத்தி நியமியாதோவெனின் அஃது யாதா

னும் ஓர் தத்துவத்தை இடையிட்டன்றி ஓர் காரியத்தை நடத்தாது. நடத்தின் மற்றொரு தத்துவமும் வேண்டாவாய் முடிகையாலே நியதிதத்துவம் நியமிக்கவேண்டும். இவனுக்கு விருப்பமின்றி யிருக்கவுஞ் சூலைமுதலிய பிணிகளைத்தப்பாது புசிப்பித்து நிறுத்துவது நியதியெனக் கொள்க. இனி பால யவ்வன விருத்தங்களை விளைப்பித்து நிற்கையானும் பிறப்புக்களை யுண்டாக்குதலானும் ஆறிருதுக்களினும் அவ்வப்பலங்களைத் தப்பாது விளைவிக்கையாலுங் காலதத்துவம் வேண்டும். இதனாற் காலதத்துவமில்லையென்னும் உலகாயதனும் புத்தனு நிராகரிக்கப்பட்டார்கள். இந்தக்காலம் பூதபவிஷ்யவர்த்தமானமென மூவகைப்படுதலாலே இதனை நித்தியமென்ற நையாயிகன் வைசேடிகன் மதங்களு நிராகரிக்கப்பட்டன. என்னை? நித்தியமாயுள்ளது ஒன்றாயிருக்கவேண்டுமாகையாலுஞ் சடமாய்ப்பலவாயிற் கடாதிகளைப்போல அழியுமாதலானுமென்க. உறுவிக்குமிறை சத்தியுடனாய் நின்றென்றதனாற் காலேசுரவாதியு நிராகரிக்கப்பட்டான்; சடந்தானாகப் பிரவர்த்திக்கமாட்டா தாகையாலெனவறிக. பெற்றதனிலாசைதனைப்பெருகுவிக்கு மென்பதற்குப் பெற்றதனில் நின்று பெறாததற் காசையை யுண்டாக்குமென்பாருமுளர்.

இது காலநியதியராகமென்னு மூன்றின் காரியமுமுணர்த்திற்று. (உஉ)

ஐவகையா லுறுபயன்க ணுகரவருங் கால
மதுபுருட தத்துவமென் றறைந்திடுவ ரறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனினிதற்குஞ் சுத்தி
மேவியிடும் வகைதானும் விரும்பியநூல் விளம்புஞ்
செய்வகையின் றொடர்ச்சியிங்குத் தோன்றுவிக்குங் குணத்தின்
சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமா மவைதா
மிவ்வகையாற் சாத்துவிக ராசததா மதமா
யியம்புவர்க ளொன்றிரண்டு குணமேற்கை யுடைத்தே.

(இ-ள்.) ஐவகையால் உறு பயன்கள் நுகரவருங் காலம் அது புருடதத்துவமென்று அறிந்தோர் அறைந்திடுவர் - கலாதிகளைந்தினாலும் (பந்திக்கப்பட்டுச் சோத்திராதிகளாற்) பொருந்தப்பட்ட விடயங்களைப் புசிக்கவருகிற அவதரத்திலே (பும்சத்துவமென்று ஒரு மலமுண்டாய் அவ்வான்மாப்) புருடதத்துவமாமென்று அறிந்தோர் சொல்வார்,—மெய்வகைய கலாசுத்திதனின் இதற்குஞ் சுத்திமேவியிடும்வகை தானும் விரும்பிய நூல் விளம்பும் - மெய்யின் கூறுபாடாகிய கலைகளைச்சோதிக்குமிடத்தில் இந்தப் புருடதத்துவத்திற்குஞ் சுத்திபொருந்து முறைமையினை விரும்பப்பட்ட திவ்வியாகமங்கள்சொல்லும்,—செய்வகையின்தொடர்ச்சிஇங்குத்தோற்றுவிக்குங் குணத்தின்சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம் - (ஆன்மாக்களுக்குப்போகத்தைச்) செய்யுங்கருவிகளின் றொடர்ச்சியை இங்குத்தோற்றுவிப்பதான குணத்தின் கூட்டமாகக் (கடவுளாற் செய்யப்படும்) பிரகிருதியானது (பிரிவின்கண்) மூன்றுகுணமாம்,—அவைதாம்-அந்த மூன்றுகுணங்கடாம்,—சாத்துவிக ராசத தாமதமாய்-சாத்துவிகுணம் இராசதகுணம் தாமதகுணமாய் (பிரிக்கையாலே),—இவ்வகையால் இயம்புவர்கள் - இந்தக் கூறுபாட்டாற்பெயர் சொல்லுவர்கள்,—ஒன்று இரண்டு குணம் ஏற்கை உடைத்தே - (அவற்றுள்) ஒவ்வொன்றுதானே இவ்விரண்டு குணங்களைப் பொருந்துகையுடைத்து என்க.

ஆய் ஆகவெனத்திரிக்கப்பட்டது. ஏற்கவென்று பாடங்கொள்வாருமுளர். வித்தியாகலையைச் சோதிக்குங்கால் வித்தியாதத்துவங்களான கலாதிகளத்தனையுஞ் சோதனைபண்ணினதே புருடதத்துவத்துக்குச் சுத்தியென்று நூல்சொல்லுதலிற் கலாதி சுத்திதனினிதற்குஞ் சுத்திவிளம்புமென்றார். முன்னூலிலே "தொழிலறிவிச்சை மூன்றும்" என்றுசொல்ல ஈண்டுப் பஞ்சகஞ்சுகஞ்சொல்லிய தென்னை? மதங்காகமத்தின் மூன்றெனவும் பவுட்கரமுதலியவற்றில் ஐந்தெனவுஞ் சொல்லிய ஆகமபேதமெனவறிக. அதுவுஞ் சிருட்டிபேதமே. பிரகிருதி அரும்பின் மணம் விளங்காதடங்கி நிற்றல்போல முக்குணங்களும் விளங்காதடங்கி நிற்கின்ற சொரூபம். அவ்வியத்தமா மென்பதறிதற்குக் குணத்தின் சேர்வுபுரி பிரகிருதியென்றார். அதுதானே நாட்பூவின் மணம் விரிந்தாற்போலக் குணத்திரயமும் விளங்கி நிற்குமுருவமே குணமாதலிற் பிரகிருதி திரிகுணமாமென்று ஒற்றுமையாற் கூறினார். இந்தப் பிரகிருதிதான் மாயையென்று பெயர்பெற்று வித்தியா தத்துவங்களுள் ஏழாவதாகிநிற்கும். அதுதான் பஞ்சகஞ்சுகனை புருடனுக்குப் போக்கியமான புத்தியாதிகளைச் செனிப்பிக்கு முபாதானமாகையால் அதற்கு வேறுதொழிலில்லையெனக்கொள்க. தோற்றுவிக்கும் பிரகிருதியெனவியையும். சேர்வாகவெனவிரிக்க. புத்திமுதலியன புருடனுக்குப் போக்கியமாதலிற் செய்வகையின் றொடர்ச்சியென்பதற்கு அவ்வாறுரைத்தாம். முக்குணங்களும் புத்தியையும் அகங்காரத்தையும் பற்றிநின்று விளங்கும், தனித்து நின்று விளங்காவெனக் கொள்க. இனிபுத்திக்குக்காரணமாயிருக்கின்ற குணதத்துவமே அவ்வியத்தமென்று சாங்கியர் சொல்வர். அஃதடாது, குணங்கள் பலவகையாலே ஒன்றினது காரியமாயிருக்குமாதலின் அவற்றிற்குக் காரணம் ஒன்றாயிருக்கின்ற மூலப்பிரகிருதியே அவ்வியத்தமாம். அவர் இப்பிரகிருதியை நித்தியமென்பதூஉமடாது. என்னை? இஃதான்மாக்கடோறும் வேறுபட்டுப் பலவாயிருக்கையாற் கடாதிகளைப்போல அநித்தமாதலின். ஆகவே இதற்குக் காரணம் மாயையென வறிக.

இது புருடதத்துவத்தின்சொரூபமும் பிரகிருதியின்சொரூபமுங் குணங்களின் வகையுமுணர்த்திற்று. (உரு)

அலகில்குணம் பிரகாசம் லகுதைவியா பிருதி
யடர்ச்சிமிகுங் கௌரவமந் நியமிவைக ளடைவே
நிலவியிடு மும்மூன்று முயிரொன்றிற் கலந்தே
நிற்குமிவை நிறைபுல்னின் பயனெவையுங் கவருங்
குலவிவரு போகங்க ளிடமா மாறுக்
குறைவிலொளி யாமலகில் புலனிடத்தி லொருமை
பலவகையு முடையதாய்ப் பரனருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்குந் தானே.

(இ-ள்.) அலகு இல் குணம் - குணம் எண்ணிறந்தன,—அடைவே - (முன்னர்ச் சாத்துவிதராசததாமதமென்ற) முறையே,—பிரகாசம் லகுதை - (சாத்துவிக குணத்திலே) பிரகாசமான ஞானமும் இலகுதையாகிய மனமொழி மெய்களிற் பிரவிர்த்தியின் மெத்தனவும்,—வியாபிருதி அடர்ச்சி - (இராசதத்திலே) வியாபிருதியாகிய முப்பொறிகளின் மிகுத்த வியாபாரமும் அடர்ச்சியாகிய குரூர உரை சிந்தனைசெயல்களும்,—மிகுங்கௌரவம் அந்நியம் - (தாமதத்திலே) மிக்க கௌரவமாகிய மமதையும் அந்நியமாகிய தகாதகாரியத்தைச் செய்யவேண்டுமென்னுஞ் சங்கற்பமும்,—

இவைகள் நிலவியிடும் - என்றிவை (ஒவ்வொன்றிற்கு இவ்விரண்டாக) விளங்கியிடும்,—மும்மூன்றும் உயிர் ஒன்றிற் கலந்தே நிற்கும் - இவை ஒன்பது குணமும் ஒவ்வோருயிர்தோறுங் கூடிநிற்கும்,—இவை - இம்மூன்று குணங்களுள்,—நிறை புலனின் பயன் எவையுங் கவரும் - (எதிர் நிரனிறையாகத் தாமதம் நிறைந்த இந்திரியங்களின் விடயங்களெல்லாவற்றையுங் கைக்கொண்டு மடங்கும்,—குலவிவரு போகங்கள் இடமாம் - (இராசதகுணம்) கொண்டாடப்பட்டுவரும் போகங்களை ஆன்மாக் கொள்கைக்கிடமான வியாபாரத்தையுடைத்தாம்,—மாறாக் குறைவில் ஒளியாம் - (சாத்துவிகம் போகம் புசிக்கைக்கு ஒருப்படுவிக்க) ஒழியாத மிக்க பிரகாசமாயிருக்கும்,—புந்தி - புத்தியானது,—அலகு இல் புலனிடத்தில் ஒருமை - எண்ணிறந்த விடயங்களைப் புசிக்கிற விடத்தின் (நிச்சயம்பண்ணுகின்ற) ஒருமைப்பாடு,—பலவகையும் உடையதாய் - அனேகவிதங்களையுமுடைத்தாய்,—பரன் அருளால் - பரமசிவன் அநுக்கிரகத்தாலே,—பஞ்சாசற்பாவகமும் பண்ணுவிக்குந்தானே-ஐம்பது பாவகத்தையும் “முற்றும்மையொரோவழியெச்சமுமாகும்” ஆதலில் அறுநூற்றொருபத்திரண்டு பாவகத்தையும் பண்ணுவிக்கும் என்க.

தான் ஏ அசை. அலகிலென்பது “இரவினிளிவந்ததில்’ என்றாற்போனின்றது. ஒருமை பலவகையும் என்பதற்குப் புசிக்குமிடத்து ஒன்று பலவிதமாயென்றுரைப்பாரும் பிரகாசம் லகுதை யென்பவற்றை சாத்துவிகத்தில் இராசதஞ் சாத்துவிகத்திற்றாமதமென்றுரைத்து ஏனையவற்றையும் இவ்வாறுரைப்பாருமுளர். சாத்துவிகம் பதினைந்து விதமாம். அவை:—சாதிநெறிநிற்றல், பெரியோரைப்பேணல், சற்றறிவுடைமை, இனியவைகூறல், தற்புகழாமை, உள்ளதேவருமெனமகிழ்ந்திருத்தல், நடுவுநிலைமை, சுத்தநியமம், பொறை, கடைப்பிடி, பிறர்க்கிதகாரியஞ்செய்தல், இந்திரலோகாதிகளில் வாஞ்சை, பிறர்தன்னைப்புகழுங்கால்தான்தன்னையிகழ்தல், அடக்கமுடைமை, தன்பாலிரந்தார்க்கிரங்குதல் எனவறிக. இராசதம் ஒன்பது விதமாம். அவை:—சூரனுகை, குரூரமுடைமை, ஊக்கமுடைமை, மானமுடைமை, வயிராக்கியம், பலம், வன்கண்மை, போகியாதல், இடம்பத்தனமானகூடாவொழுக்கம் எனவறிக. தாமதகுணம் ஒன்பதுவிதமாம். அவை:—அழத்தகாதனவற்றிற்கு அழுகை, கல்வியில் ஆதரவறுகை, இழந்தாரைச்சேர்ந்துவாழ்தல், கோளுரை, மமதை, பேருறக்கம், நன்மைசெய்தற்கிளைக்கை, குலங்குணமீகையிரக்கங்களால் எனக்குயாரும் இணையில்லையென்கை, திருடுதல் எனவறிக. ஆகமுப்பத்துமூன்றெனக்காண்க. முக்குணங்களுள் ஒன்றுமேலிட்டு மற்றையிரண்டு மடங்கிச் சிறிது விளங்கும். ஒருவனுக்கு முக்குணங்களும் ஒத்து விளங்குதலில்லையெனக்கொள்க. சாத்விக விராசததாமதங்களால் அடைவே வீடுஞ் சுவர்க்கமும் நரகமும் பெறுவர். சாத்துவிகத்திற் சாத்துவிகமுதலிய வொன்பது பேதமும் அந்தமுப்பத்துமூன்றனுள் அடங்கும். விரிக்கிற் பெருகும். இங்ஙனம் பெருகுதலின் அலகில்குணமென்றார். இனிச்சித்தம் புத்தியின் விகற்பம் எப்படியெனின், அவ்வியத்தமாவதாதலின் வித்துப்போல முக்குணங்களும் அடங்கி நிற்கும் அவதரம். குணதத்துவமாவது வித்தினின்று மங்குரந்தோன்றினாற்போல அவ்வியத்தத்திலே நின்று மூன்றாய்த்தோன்றிச்சமமாயலைவறநின்ற அவதரம். அதுவே சித்தம். இவற்றின் ஏற்றக்குறைச்சலே புத்தி தத்துவம். அது இராசதமுந் தாமதமுங் குறைந்து சாத்துவிக மேலிட்ட அவதரம். இஃது “அருத்திமிகும்” என்றதிலுமுரைத்தாம். புத்தியின்காரியந்தன்மஞானவையிராக்கிய வயிசுவரியநான்கும். அதன்மாதி நான்குமெட்டாம். இவற்றுள் தன்மத்தினின்றும்

பத்துப்பாவகமும் ஞானத்தினின்றும் நூற்றெண்பது பாவகமும் வயிராக்கியத்தினின்றும் அறுபத்துநாலு பாவகமும் அயிசுவரியத்தினின்றுஞ் சத்தியென்னும் பெயரையுடைய நூற்றெழுபத்தாறு பாவகமும் இனி அதன்மத்திற் பத்தும் அஞ்ஞானத்தில் அறுபத்தாறும் அவயிராக்கியத்தின் நூறும் அவயிசுவரியத்தில் எட்டும் ஆகப்புத்தியின் பாவகம் அறுநூற்றொருபத்திரண்டும் வகையிற் காண்க. விரிவை யுரைப்பிற் பெருகும்.

இது மேலொன்றிரண்டு குணமேற்கை யுடைத்தென்றவை இவையெனக்குண தத்துவத்தின் காரியமும் புத்திதத்துவத்தின் காரியமுமுணர்த்திற்று. (உச)

> ஆனதனு வதனிலுறு மநிலனையு மியக்கி
> யாங்கார நீங்காத வகந்தைக்கு வித்தா
> யானலது பிறரொருவ ரெனையொப்பார் புவியி
> னில்லையெனு மியல்பினதா யிந்திரியம் புலன்க
> டாநுகரு மளவிலதின் முந்தியுறு மிச்சை
> தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியுந் தந்து
> மானதமா னதுநிற்குஞ் சிந்தைநினை வைய்யம்
> வந்துதரு மனமொழிய வகுப்பொ ணாதே.

(இ-ள்.) ஆங்காரம் - அகங்கார தத்துவமானது,—ஆன தனுவதனில் உறும் அநிலனையும் இயக்கி - வினைக்கீடாக வுடம்பிலே நிற்கும் பிராணவாயுவையுஞ் செலுத்தி,—நீங்காத அகந்தைக்கு வித்தாய் - நீங்காதமமதைக்கு மூலமாய்,—எனை ஒப்பார் யான் அலது பிறர் புவியின் ஒருவர் இல்லை யெனும் இயல்பினதாய் - என்னை ஒப்பார் யானொழிந்து பிறர் புவியில் ஒருவருமில்லையென்னும் இயல்பினையுடையதாய்,—இந்திரியம் புலன்கடாம் நுகரும் அளவில் - இந்திரியங்களும் விடயங்களும் புசிக்கவும் புசிக்கப்பட்டவுமாக நின்றவள்விலே,—அதின்முந்தி உறும் இச்சைதான் உருவாய் - அவ்விடயத்திலே முற்பட்டுப்பொருந்துகின்ற இச்சைதானே வடிவாக (நிற்க),—மானதமானது சங்கற்ப சதாகதியுந் தந்து நிற்கும் - மனதத்துவமானது ஒன்றைச் சங்கற்பிக்கையும் அநவரதசலனத்துவமுந் தந்துநிற்கும்,—சிந்தை நினைவு - சித்தமானது நினைவு மாத்திரமே,—ஐயம் வந்துதரு மனம் ஒழிய வகுப்ப ஒணாதே - சந்தேகத்தை வந்துண்டாக்குகின்ற மனத்தை யொழிய வேறாக வகுத்துக் கூற வொண்ணாது என்க.

இவ்விரண்டினுற்றுமைகருதி மனம் புத்தி யாங்காரமென மூன்றே அந்தக்கரணமென்ற பிறவாசிரியர் நூலிற்கும் இதற்கும் மாறுபாடின்மை காண்க. எனையொப்பார் யானென இடும்பாலுமயங்கியது அமைதியாற்கொள்க. அலதென்பது அன்றியென்னும் வினையெச்ச வாய்பாடு. விடயம் ஒவ்வொன்றுயனுபவித்தலின் அதிலென்றார். நுகருமென்பது செய்வதற்குஞ்செயப்படுபொருட்குமொப்பநின்று இந்திரியம் புலன்களென்னு மெழுவாய்கட்கு முடிபாயிற்று. இனி தாமென்பதை இந்திரியங்களிலேற்றிப் புலன்களையென விரிக்கினுமாம். உருவாகவென்பது கடைகுறையப்பட்டுக் காரணகாரியங்களன்றி நிற்குமென்னும் பிறவினைகொண்டது. சதாகதியுமென்றோதுவாருமுளர். சங்கற்பமுஞ் சலனமுந் தன்னொடுசேர்ந்த வுபாதியால் ஆன்மாவுக் குண்டாக்கலிற் றந்து நிற்குமென்றார். இனி அகங்காரமானது வனஞ் சங்கற்பங் கருவமென மூன்றும். அவற்றுட் சீவனமாவது பிராணாதி வாயுவினாலே அன்னபானாதிகளைக் கிருகிக்கை. சங்கற்பமாவது எவற்றினும் பிரவர்த்திப்

பிக்கை. கருவமாவது யானல்லதில்லையென்கை. புத்தியும் அகங்காரமும் நிச்சயிக்கும் வியாபாரத்தா லொக்குமாதலிற் புத்தியொன்றே அமையாதோவெனிற் புத்தியானது கிருகிக்கப்படும் விடயங்களை வெகுமுகமாக அறுதியிடுவதாயிருக்கும். அகங்காரம் புத்தியாலே புறம்பே நிச்சயித்துக் கிருகிக்கப்பட்ட விடயங்களை உள்ளே ஆன்மாவினிடத்திலே கூடி நான் செய்தேனென்று நிச்சயம்பண்ணிநிற்கும். இனி மனமும் இருவகைப்படும். ஒன்று உள்ளே சங்கற்பவிகற்பங்களைப் பண்ணும். ஒன்று புறம்பேநின்று இந்திரியங்கட்கு விரகைக் கொடுக்கும். இந்தச்சங்கற்பம் ஒருகாரியத்திலே ஒருமைப்பாடு. இந்திரியங்களும் விடயங்களும் ஆன்மாவுங் கூடியிருப்பினும் மனம் வேறொன்றிலே புரிந்தபோது இந்திரியங்கள் சேட்டிக்கமாட்டா. இதுவே சேட்டிப்பித்தல் வேண்டுமென வறிக.

இது அகங்காரமும் மனமுமான விரண்டின் காரியமுஞ் சித்தத்தின் காரியமும் அதன்சொரூபமுமுணர்த்திற்று. (உசு)

சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்
துண்டமிவை யைந்திற்குந் தொகுவிடய மாக
மன்னியசத் தப்பரிச ரூபரச கந்த
மருவியிடு மிவையடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவினோ டுபத்தம்
பேசவுறு மைந்திற்கும் பிறங்கொலிகொள் வசன
முன்னரிய கமனதா னவிசர்க்கா னந்த
முற்றதொழில் பெற்றிடுவ துண்மை யாமே.

(இ-ள்.) சொன்ன முறை - (புத்தி யிந்திரிய மென்றும் மன்னிய கன்மேந்திரிய மென்றும் முன்னம்) சொன்னவாறே,—செவி துவக்கு நோக்கு நாக்குத் துண்டம் இவை ஐந்திற்கும் - செவிமுதல் ஆக்கிராணமீறான இந்திரியங்கள் ஐந்துக்கும்,—தொகு விடயம் ஆக மன்னிய - கூடுகின்ற விடயங்களாக நிலைபெற்ற,—சத்தப் பரிச ரூப ரச கந்தம் இவை அடைவே மருவியிடும் - சத்தமுதற் கந்தமீறாகிய இவை அடைவே பொருந்தும்,—வாக்குப் பாதம் பின்னர் வரு பாணி மிகு பாயுவினோடு உபத்தம்போல் உறும் ஐந்திற்கும்-வாக்குப் பாதம் எண்ணுங்காற் பின்வருகின்ற பாணி மிக்க பாயுவுடன் உபத்தமாகச் சொல்லுகின்ற ஐந்திற்கும்,—பிறங்கு ஒலி கொள் வசனம் உன்ன அரிய கமனதான விசர்க்க ஆனந்தம் உற்ற தொழில் - பெரிய ஓசைபொருந்திய வசனமுதல் ஆனந்தமீறாக வுற்றவிடயமாகிய,—இவை அடைவே - இவை ஐந்தும் அடைவிலே,—பெற்றிடுவது உண்மை ஆமே - பெறுகின்றது இயல்பாம் என்க.

இனிச்சாருவாகனும் நியாயவைசேடிகருஞ் சோத்திராதியைந்தும் ஒவ்வொரு விடயங்களைக் கிருகிக்கையினாலே அவ்விடயங்கள் பூதங்களின் குணமாகையினாலே பூதங்களே நின்று சத்தாதிகளைக் கிருகிக்கும் அத்தனையே ஞானேந்திரியம் வேண்டாவென்று சொல்வர். பூதங்களே இந்திரியங்களாயின் தத்தங்குணங்களொன்றையுமே யறியவேண்டும். அப்படியன்றி இந்த விந்திரியங்கள் அந்நியபூதங்களையும் அவற்றின் குணங்களையும் போக்குவரவான கன்மங்களையும் 'ஆவுண்டு' என்பதுபோலுஞ்சாதிகளையுங் குணகுணிகளுடைய நிமித்த சம்பந்தங்களையும் அறிகையாலே ஞானேந்திரியம் பூதகாரியமன்று. இனி வசனாதிகிரியைகளைச்செய்கையாலே கன்மேந்திரியமுண்டு. இஃதின்றேல் ஒருதொழிலுங்கூடாது. ஆனல், தொழிலுக்குக்

கன்மேந்திரியமேதுவேற் புருவமுதலிய வுறுப்புக்கள் துடித்தல் தொழிலன்றே அத்தொழிற்கு இந்திரிய முண்டாகவேண்டும். அப்போதிந்திரியம் பலவென்னீயென்று உலகாயதன் சொல்லில், அவக்கிந்திரியஞ் சர்வாங்கமும் வியாபித்து நிற்குமாபோல எல்லாவிந்திரியங்களும் உடலெங்கும் வியாபித்து நிற்கும். அன்றிப் பாணிக்குத் தானமே தொழிலாயிருக்க முடவனொருவன் கையானடக்கும். காலிரண்டும் பாதவிந்திரியமின்றிக் கமனக்கிரியை நிகழாது. ஆதலாலே புருவமுதலிய துடிக்குந்தொழில்களெல்லாம் பாணிமுதலியவற்றின் வியாபாரமென்றறிக. இவை தொழிலுடன் கூடியிருக்கையாலிராசதகுணஞ்சேர்ந்தது. இவை அடைவேயென்ப தீரிடத்து மேற்றப்பட்டது.

இது இந்திரியம்பத்தின் காரியமுமுணர்த்திற்று. (உசு)

முந்தியவைம் பூதங்கள் வானாதி யாக
 முயங்கியநற் செவிநாசி கண்ணுமெய்ம் முறையா
லிந்தவயி னின்றுவரு மைம்புலனு முயிர்தா
 மெய்தும்வகை தம்முருவி னிலங்கியிடும் புறத்து
வந்தடைய விடங்கொடுக்கு நிரந்தரமாய் வானம்
 வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டுந்தீ வெம்மை
தந்தவைசுட் டொன்றுவிக்கு நீர்குளிர்ந்து பதமே
 தருமுரத்துத் தரிக்குமுந்து தரணி தானே.

(இ-ள்.) முந்திய ஐம்பூதங்கள் வான் ஆதியாக - (தத்துவங்களை எண்ணுங்கால்) முந்தியெண்ணப்படுஞ் சூக்கும பஞ்சபூதங்களும் ஆகாயமுதலாகக்கொண்டு,—நற்செவி மெய் கண் நா நாசி முறையால் முயங்கிய - நல்ல சோத்திரந் தொக்கு சட்சு சிகுவை ஆக்கிராணமென்றுசொல்லப்பட்ட ஞானவிந்திரியமைந்தும் அடைவே பொருந்தற்கு ஆதாரமாக,—இந்த வயின் நின்றுவரும் ஐம்புலனும் உயிர்தாம் எய்தும் வகை - இந்தவிந்திரியங்களிடத்திலே நிலைபெற்றுவரும் ஐந்து புலன்களையும் ஆன்மாக்கள் அனுபவிக்கும்படி,—தம் உருவின் இலங்கியிடும்-தங்கள் சொரூபத்தோடேவிளங்காநிற்கும்,—புறத்து வானம் வந்து அடைய நிரந்தரமாய் இடங்கொடுக்கும் - புறம்பே (தூலபூதங்களிலே)ஆகாயமானது (மற்றைப்பூதமெல்லாந் தன்னிடத்திலே வந்தடைய) வெளியாயிடங்கொடாநிற்கும்,— வாயு மிகச் சலித்து எவையுந் திரட்டும் - வாயுவானது மிகவுஞ்சலனமாயெல்லாவற்றையுந் திரட்டாநிற்கும்,—தீ வெம்மை தந்து அவை சுட்டு ஒன்றுவிக்கும்-தேயுவானது (பிறபொருட்கும்) வெப்பத்தைக்கொடுத்து அவற்றைச்சுட்டொன்றுபடுத்தும்,—நீர் குளிர்ந்து பதமே தரும் - அப்புவானது குளிர்ந்து பதங்கொடுத்து நிற்கும்,—முந்து தரணி உரத்துத் தரிக்கும்-முந்திய பிருதிவியானது கடினமாயெவற்றையுந்தரியாநிற்கும் என்க.

கடினத்துக்கேற்ப முந்தியென்றார். எய்தும்வகையிலங்கியிடும் புறத்து வான்கொடுக்கும் வாயுதிரட்டும் தீயொன்றுவிக்கும் நீர்பதமேதரும் தரணிதரிக்குமெனமுடிக்க. நிற்குங்குறியெழுத்து வடிவுமுதலியவற்றோடேடென்பார் தம்முருவினென்றார். ஞானேந்திரியங்கட்கு வலிசெய்து தன்மாத்திரைகள் சூக்குமரூபமாயவைகளிலிருக்குமென்பதை முன்னூல்களினுமறிக.

இது முறையே பூதங்களின் காரியப்பாடுணர்த்திற்று. (உஎ)

இந்நிலையி லைந்துசுத்த மேழ்சுத்தா சுத்த
மெண்மூன்று மசுத்தமெனு மிவைமுப்பத் தாறு
மன்னியதத் துவங்களிடை மயங்கநெடுந் துயர்தா
மருவுமுரு நிலையழிய வரும்பொழுது வரியார்
பன்னகமண் டசங்கனவு படர்வகையே முன்னம்
பகரவருங் கலாதிநிலை பரவியசூக் குமமாந்
தன்னுருவி னணைந்துபய னருந்தியர னருளாற்
றரையினிடை வருமென்று சாற்று நூலே.

(இ-ள்.) இந்நிலையில் - இங்ஙனஞ்சொல்லிவந்த அடைவிலே,—ஐந்து சுத்தம் - சிவதத்துவம் ஐந்துஞ் சுத்ததத்துவம்,—ஏழ் சுத்தா சுத்தம்-வித்தியாதத்துவங்கள் ஏழுஞ் சுத்தாசுத்ததத்துவம்,—எண்மூன்றும் அசுத்தம்-ஆன்மதத்துவம் இருபத்துநாலும் அசுத்ததத்துவம்;—எனும் இவை முப்பத்தாறும்-என்று சொல்லப்படுமிவைகள் ஒருதொகையாக முப்பத்தாறும் (இம்மூன்றுக்கும் அடைவே பிரேரகாண்டம் போககாண்டம் போக்கியகாண்டம் என்றும் உரைக்கப்படும்),—மன்னிய தத்துவங்களிடை மயங்கிநெடுந்துயர்தாம் மருவும் உரு நிலை அழியவரும் பொழுது-இங்ஙனநிலைபெற்ற தத்துவங்களினிடத்திலே மயங்கிப் பெரியதுன்பங்களைப் பொருந்தப்பட்ட சரீரமானது நிலைகுலையக் கூடும்பொழுது,—வரி ஆர் பன்னகம் அண்டசம் கனவு படர் வகையே - வரி ஆர்ந்த பாம்பும் முட்டையிற் செனித்தவையுங் கனவிற்கேற்றவுடலும் போகின்றபடியே,—முன்னம் பகரவருங் கலாதி நிலை பரவிய சூக்குமமாந் தன்னுருவில் அணைந்து - முன்னே அதோமாயா சிருட்டிசொல்லுதற்கு வருங்கலைமுதலிய முப்பது தத்துவங்களின் இவை விரிதற்கிடமான சூக்குமமாகிய தனக்குரிய புரியட்டகத்தோடே நல்வினை தீவினைக்கிடான பூதசார பூதசரீரங்களிலே பொருந்தி,—பயன் அருந்தி அரன் அருளால் தரையினிடை வருமென்று சாற்றும் நூலே - சுவர்க்க நரகங்களின் பயனை அனுபவித்துச் சிவானுக்கிரகத்தாலே பூமியின்கண் மீண்டு பூதபரிணாம வுடலோடே பிறக்கு மென்று திவ்வியாகமங்கள் சொல்லும் என்க.

பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, அந்தக்கரணம் மூன்று, குணம் ஒன்று, அதற்குக்காரணமான பிரகிருதி ஒன்று, கலாதி ஐந்து, ஆக எட்டுங்கொத்தாதலிற்புரியட்டகமாயிற்று. எனுமுப்பத்தாறு மன்னியதத்துவமிவைகளிடையெனமாறினுமாம். உயிரொனவருவிக்க. படர்வகையேயென்புழி வகை யுவமவுருபு. ஏகாரம் எண். சர்வசங்காரபரியந்தமன்றி மோட்சபரியந்தம் தன்னை நீங்காமல் ஏனையுடற்றுகில்போறலின் இது தனக்குரியவுடலென்பதுபோதரத் தன்னுருவினென்றார். கனவு ஆகுபெயர். பாம்புதூலவுடல்விட்டுச் சூக்குமவுடலோடுபோதற்கும், அண்டசம் முன்பழகினவுடலைப்பாராமற்போதற்கும், கனவு தூலதேகத்திற்செய்தகாரியத்தைச் சூக்குமதேகத்திலறியாமைக்கு முவமையாயின. வித்தியாதத்துவங்களைச் சுத்தாசுத்தமென்றது ஆன்மாக்களுக்குச் சிறிதறிவை விளக்குதற்குச் சாதனமாகையாலும் சூக்குமரூபத்துவாரத்தால் குணரூபமானசுகதுக்கமோகங்களையுண்டாக்குதற்குச்சாதனமாகையாலுமெனவறிக.

இது தத்துவங்களின்றொகையும் அவற்றிடையேயுயிர்கண்மயங்கிநின்று சரீரங்களை விடுதல் பற்றுதலுமுணர்த்திற்று. (உஅ)

தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற்
றுதைந்துவரு முற்பிச்சஞ் சராயுசங்க ணான்கி
னூற்றமிகு தாவரங்கள் பத்தொன்ப தென்று
மூர்வபதி னைந்தமரர் பதினொன்றொ டுலவா
மாற்றருநீ ருறைவனநற் பறவைகணாற் காலி
மன்னியிடும் பப்பத்து மாநுடரொன் பதுமா
வேற்றியொரு தொகையாக வியம்புவர்க ளியோனி
யெண்பத்து நான்குநூ றாயிரமென் றெடுத்தே.

(இ-ள்.) தோற்றியிடும் அண்டசங்கள் சுவேதசங்கள் பாரில் துதைந்துவரும் உற்பிச்சஞ் சராயுசங்கள் நான்கின் - தோற்றப்பட்ட முட்டையிற் செனிப்பவைகள் வியர்வையிற் செனிப்பவைகள் பூமியில்நெருங்கி வரத்தக்க வித்திற் செனிப்பவைகள் பையிற் செனிப்பவைகளாகிய நால்வகைத் தோற்றத்தின்கண்,—ஊற்றம் மிகு தாவரங்கள் பத்தொன்பது (நூறாயிரம்) என்றும் - நிலைபெறுமிக்க தாபரயோனிகள் பத்தொன்பது நூறாயிரபேதமென்றும்,—ஊர்வ பதினைந்து (நூறாயிரம்) என்றும் - ஊர்கின்றவை பதினைந்து நூறாயிரபேதமென்றும்,—அமரர் பதினொன்று (நூறாயிரம்) ஒடு-தேவயோனி பதினொரு நூறாயிரமென்றும்,—உலவா மால்தரு நீர் உறைவன நற்பறவைகள் நாற்காலி மன்னியிடும் பப்பத்து (நூறாயிரம்) என்றும் - ஒழியாத பெருமை தங்கிய நீர்வாழ்சாதிகள் நல்லபட்சிகள் நாற்கான்மிருகங்களான மூன்றும் ஒவ்வொன்று பொருந்தப்பட்ட பத்து நூறாயிரபேதமென்றும்,—மாநுடர் ஒன்பது (நூறாயிரம் என்றும்) ஆ ஏற்றி - மாநுடயோனி ஒன்பது நூறாயிரபேதமென்றுமாகவேற்றி,—யோனி எண்பத்துநான்கு நூறாயிரபேதமென்றெடுத்தே-யோனி எண்பத்துநான்கு நூறாயிர பேதமென்றெடுத்து,—ஒருதொகையாக இயம்புவர்கள் - ஒரு தொகையாகச்சொல்லுவர் (பெரியர்) என்க.

எழுவாய்வருவிக்க. அமரரும்மாநுடரும் ஆகுபெயர். நான்கின் இன் எழனுருபாதல் புறநடையாற்கொள்க. ஒடு எண்ணொடு. நூறாயிரமென்பதனையும் என்றுமென்பதனையும் எங்குந்தந்து இத்துணையென்று மாவேற்றியென்றியைத்துரைக்க. மால் பெருமை. தருதல் ஈண்டுத்தாங்குதல். மன்னுதல் பொருந்துதல். "இயல்மன்னுமன்புதந்தார்க்கு" என்னுங் கோவைத்திருவாசகத்திற்கு மன்னுமப்பொருள் வருதல் காண்க.

இது அவ்வுயிர்கள் விடுதல் பற்றுதல் செய்புவுடல்களின்றோற்றமும் யோனி பேதத்தின்றொகையுமுணர்த்திற்று. (உக)

இனையபல பிறவிகளி னிறந்துபிறந் தருளா
விருவினைகள் புரிந்தருந்து மிதுசகல மகலா
முனமருவு மிருபயனு மொருகாலத் தருந்த
முந்துநுக ருந்துபய னந்தமுற வந்த
வினையுமெதிர் வினையுமுடி வினையுதவு பயனு
னேராக நேராதன் மேவுங் கான்முற்
சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே.

(இ-ள்.) இனையபல பிறவிகளின் பிறந்து இறந்து அருளால் இருவினைகள் புரிந்து அருந்தும் இது சகலம் - இத்தன்மையான பல பிறவிகளிலே பிறந்துமிறந்துஞ் சிவானுகூலத்தாலே புண்ணியபாவங்களைச்செய்துஅவற்றின்பலன்களை அனுபவிக்குமிது சகலாவத்தை(இனி),—முந்து நுகர்-முற்பவங்களிலே (சுகதுக்க பலன்களை நுகரு) நுகர்ச்சி யிடத்திலே,—உந்து பயன் - ஆகாமியமாய் வந்தேறிய சஞ்சிதமும்,—அந்தம் உற வந்த வினையும் - புசித்தறுவதாகவந்த பிராரத்தமும்,—எதிர் வினையும் - (இப்பிராரத்தம் புசிக்குமிடத்தேறிய) ஆகாமியமுமாய்,—அகலாமுனம் மருவும் இருபயனும் ஒருகாலத்து அருந்த - நீங்காமல் முற்செனனங்களிலே பொருந்திய புண்ணியபாவங்களாகிய இரண்டின் பிரயோசனங்களையும் ஒருகாலத்திலே (ஒருவன்) புசிக்கும்படி,—முடிவினை உதவு பயனால் - வீட்டினைத்தருகின்ற சிவதன்மங்களாலே,—நேராக நேராதல் மேவுங்கால் - (அக்கன்மமெல்லாம் பக்குவத்தாலே) துலையொக்கச்செவ்வாதலைப்பொருந்துமிடத்தில்,—முற்சினமருவு திரோதாயி கருணையாகி - (இருவினையொப்புவரு) முன்னெல்லாம் (ஆன்மாக்களை ஈடேற்றுகைக்குத் தனக்கில்லாத) கோபத்தைப் பொருந்திய திரோதான சத்தியானது கிருபையாகாநிற்க,—அன்றே - அப்பொழுதே,—திருந்திய சத்திநிபாதந் திகழும் - நன்றான சத்திநிபாதக் குறிவிளங்கும் என்க.

உந்துப்பயன் உதவுபயன் இரண்டும் ஆகுபெயராய்க் காரணத்தைவிளக்கின. நேராதல் ஆகுபெயர். ஆக உவமவாசகம். இதுமுன்னர் இன்மைமலமென்றசெய்யுட்கு மொக்கும். செய்யுளின்பநோக்கி இறத்தலைமுற்கூறினர். உம்மை தொக்கது. நிபாதம் பதிதல். அஃது உபசாரம். கருணையாகி ஆக உந்துபயனுமென்னுமும்மை விகாரத்தாற்றொக்கது. பயனும் வினையும் எதிர்வினையுமாயெனவருவித்த ஆக்கவினையெச்சம் ஈறுகெட்டெதிர்மறையாய் நின்ற அகலாவென்னும் வினையெச்சத்திற் காலவினைகொண்டது. நுகர் முதனிலைவினை. அது பெயராய் நின்றேழாவதுதொகப்பட்டது. நுகருங்காலென்க. முடிவினும் வீடலும் ஒருபொருளாதலின் முடிவுவீடெனப்படும். இனி முந்தநுகம் மேவுங்காலென்பதற்குச் சஞ்சிதம் பிராரத்தமாகாமியமான மூவகைவினைகளும் இவனுக்கில்லையாதலையுண்டாக்காநின்றசிவதன்மங்களாலே விட்டுப்போம்படி ஒத்தலைப்பொருந்துமிடத்தென்பாருமுளர்.

இது ஓங்கிவருமென்னுஞ் செய்யுளினிறுத்தமுறையே சகலாவத்தையுஞ் சுத்தாவத்தையுஞ் சுத்தாவத்தைக்கு நிமித்தமான இருவினையொப்புஞ் சத்திநிபாதமுமுணர்த்திற்று. (௬0)

நாடியசத் திநிபாத நாலு பாத
நண்ணும்வகை யெண்ணரிய ஞான பாதங்
கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
கூத்தனொரு மூர்த்திகொடு குறுகி மோக
நீடியகே வலசகல நிகழா வாறு
நிறுத்திமல மறுக்குமிது நிலையார் சுத்தங்
கேடில்புகழ் தருஞ்சரியை கிரியா யோகக்
கேண்மையரோ விவையுணர்த்தக் கிளக்கு நூலே.

(இ-ள்.) நாடிய சத்திநிபாதம் நாலுபாதம் - ஆராயப்பட்ட சத்திநிபாதமானது மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என்று நான்குபாதமாயிருக்கும்,—நண்ணும் வகை எண்ண அரிய ஞானபாதங் கூடுமவர் தமக்குநின்ற ஞானக்கூத்தன் ஒருமூர்த்திகொடு உணர்வாய்க் குறுகி- (அந்நான்கினுட்) பொருந்து முறைமையைக்கிளத்தற்கரிய தீவிரதரமான ஞானபாதமானது பொருந்தப்படுமவர்க்கு நிலைபெற்ற ஞானக்கூத்தன் ஒப்பற்றகுருமூர்த்தங்கொண்டு அறியப்படும் பொருளாயெழுந்தருளிவந்து,—மோகம் நீடிய கேவல சகலம் நிகழாவாறு நிறுத்தி மலம் அறுக்கும் - மயக்கம்மிகவுண்டான கேவலத்தையும் (விகற்பமிகவுண்டான) சகலாவத்தையு முண்டாகாதபடி அருளிலேநிறுத்தி மலங்களைப்போக்குவன்,—இது நிலை ஆர் சுத்தம் - இந்நிலைமைநிறைந்த சுத்தாவத்தை,—கேடில்புகழ்தருஞ் சரியைகிரியாயோகக் கேண்மையரேல்-கெடாதபுகழையுண்டாக்குஞ் சரியைகிரியாயோகவுறவையுடையவர்களாயின்,—இவை உணர்த்தக் கிளக்கும் நூலே - அவர்களுக்கு இந்தப்பொருளை அறிவிக்கச்சொல்லும் ஆகமம் என்க.

சத்திநிபாதமாவது சென்மாந்தரங்களிலே செய்யப்பட்ட சிவதன்மங்களினாலே ஆன்மாக்களுக்குக்கன்மசமமும் பரிபாகமுமுண்டானவளவில் சிவசத்திபதிதல்.கன்மசமத்துவமேயன்றி மலபரிபாகமில்லாதபோது சிவசத்தி அந்தவினையிரண்டினையுஞ் சேதித்து விஞ்ஞானகலப்பிராத்தியாக்குமெனவறிக. கன்மசமத்துவமின்றி மலபரிபாகமுண்டானாற் கன்மங்களாற் பலமில்லை. பாதம் நான்கிலோர் கூறு. உணர்வு ஆகுபெயர். தமக்குணர்வாய்க் குறுகியறுக்குமெனவியையும். நூல்கிளக்குமெனக்கருவிகருத்தாவாயிற்று. சத்திநிபாதங்களாற்பயன் சரியைமுதலிய பாதங்களிலே நிறுத்தி மனவாக்குக்காயங்களைச் சுத்தமாக்கி ஞானத்துக்கு யோக்கியனாகப்பண்ணும். இவற்றுள் மந்ததரத்தினியல்பாவது இலிங்கமாகேசுரரிடங்களிலே பத்தியுண்டாக அதனாலே பரமசிவன் சாதகாசாரியனையதிட்டித்துச் சமயதீட்சைபண்ணி அவன் மனமொழிமெய்களைச் சரியைத்தொழிலிலே புரிவிப்பன். இச்சரியையின் முற்றுதலாலே மந்தசத்திநிபாதமுண்டாய்ச் சிவார்ச்சனையால் ஆதரவுண்டாக்கிப் போதகாசிரியனையதிட்டித்து விசேடசமயமுடித்துச் சிவார்ச்சனைகற்பித்து அந்தரியாகவகிரியாகங்களிலே அவன் மனமொழிமெய்களைப் புரிவிப்பன். இக்கிரியையின் முற்றுதலாலே தீவிரசத்திநிபாதமுண்டாக யோகவாஞ்சையுண்டாய்அவ்வாசிரியனால் அட்டாங்கயோகவுண்மையையறிவித்துக் காமாதியறுவிதமும் விடுத்து அவன் சித்தத்தைத் தியானத்திலே நிறுத்திச் சமாதியிலே யொடுக்குவன். இம்மூன்றின் முற்றுதலாலே தீவிரதரசத்திநிபாதமுண்டாய்ச் சிவஞானிகளிடத்தி லேபத்தியுந் திரிபதார்த்தசொரூபம் அறியவேண்டுமென்னுமறிவுந்தோன்றும் தேகாதிப்பிரபஞ்சங்களை நீக்கவேண்டுமென்னும் வைராக்கியமும் முத்தியிலாசையும் பிறவியிலே பயமும் இகலோகபரலோகத்திலேவெறுப்பும் நமக்கிந்தக்கவர்ச்சியைநீக்கிச் சிவரூபத்தைத்தரிசிப்பிக்கு நாதராவார்யாரொன்றுபசித்தவன் அன்னதாதாவைத் தேடுமாறுபோலவும் பிறவிக்குருடனான அநாதன் கோடைகாலத்தின்மத்தியானத்திலே நீர்தேடித்திரியுமாறுபோலவும் ஞானசாரியனைத்தேடி மிகவும் வருந்துகின்ற வாஞ்சையுண்டாம். இந்தத்தீவிரதரசத்திநிபாதமுந் தாரதம்மியத்தினாலே மந்ததரமாதியாக நான்காம். இந்நான்குவித சத்திநிபாதமுடையவர்கள் ஞானசாரியனை அடைந்துள்ளளவில் அவ்வாசாரியனாலே பரமசிவன் ஞானதீட்சையைப்பண்ணி அவர்கள் மலத்திரயங்களைச் சேதித்துக் கரணசூனியம் பிறப்பித்து ஞானனந்தானுபூதியைக் கொடுப்பன். இந்

நால்வர்தன்மையும் இவர்களை ஆசிரியன் திருத்துமருமையு மெளிமையும் அவர்களுக் குள்ள குருபத்தியும் அவர்களுக்கு ஞானம் பிரகாசிக்குந்தன்மையும் பிரகாசித்தால் அவர்களுக்குப் பிரபஞ்சத்திலேவெறுப்பும் உவமைமுகத்தாலே விளங்கச்சொல்லு வான்புகிற் பெருகும்; விரிந்தநூல்களிற்காண்க.

இது சத்திநிபாதத்தின் பாகுபாடுஞ் சுத்தாவத்தையும் இப்பொருள்களை இன் னார்க்குணர்த்தலா மென்பதூஉமுணர்த்திற்று. (சுக)

அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்து
மறுமுத்தி திரிகுணமு மடங்கு முத்தி
விரவுவினை கெடுமுத்தி மலம்போ முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தியிவை பழிசேர் முத்தி
திரிமலமு மகலவுயி ரருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே.

(இ-ள்.) அரிவையர் இன்பு உறும் முத்தி - மகளிரிடத்திற் சுகத்தை அனுபவிப்பதே முத்தியென்னு முலகாயதன் முத்தியும்,—கந்தம் ஐந்தும் அறும் முத்தி - உருவமாதி ஐந்துகந்தமு மறுவதே முத்தியென்னும் புத் தன் முத்தியும்,—திரிகுணமும் அடங்கும் முத்தி-திரிகுணமு மடங்குவதே முத்தியென்னுஞ் சாங்கிய வைசேடிகர் முத்தியும்,—விரவுவினை கெடும் முத்தி - விரிந்தகன்மங் கெடுவதே முத்தியென்னும் அருகன் முத்தியும்,— மலம்போம் முத்தி-மலங்கள்போவதே முத்தியென்னும் பேதவாதி பாசுபத வாதிகண் முத்தியும்,—விக்கிரகம் நித்தம் முத்தி - சரீரம் நித்தியமாயிருக்கி ன்றதேமுத்தியென்னுங் கன்மயோகிகள் முத்தியும்,—விவேகம் முத்தி-சக லத்தையும் விவேகித்தறிவதே முத்தியென்னும் மாயாவாதிமுதலியோர்முத் தியும்,—பரவும் உயிர்கெடும் முத்தி - புகழப்பட்ட உயிர்கெடுவதே முத்தி யென்னும் பாற்கரியன் முத்தியும்,—சித்தி முத்தி-அட்டமாசித்தியைப்பெ றுவதே முத்தியென்னுஞ் சித்தர்கள் முத்தியும்,—பாடாணம் முத்தி - கல் லுப்போற்கிடப்பதே முத்தியென்னும் நியாயவைசேடிகபிரபாகரமுத்தியும், —இவை பழிசேர் முத்தி-ஆகியவிவை பத்தும் பழியைச்சேர்ந்த முத்தியே, —திரிமலமும் அகல உயிர் அருள்சேர் முத்தி திகழ் முத்தி - மும்மலமும் விட்டுநீங்க ஆன்மா அருளைப்பெறுகின்ற முத்தியே விளங்காநின்ற முத்தி, —இது முத்தித் திறத்ததாமே - இது முத்தியின் கூறுபாடு என்க.

இவர்கள் மதமறுப்புகளை ஈண்டுரைக்கிற்பெருகும். சிவஞானசித்தியாரிற்காண்க.

இது உலகாயதன்முதலிய பரசமயிகள் முத்தியுஞ் சைவசித்தாந்திகள் முத்தியு முணர்த்திற்று. (சுஉ)

இரண்டாஞ்சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ருக.

---

பொதுவதிகாரமுடிந்தது.

---

# உண்மையதிகாரம்.

இயன்முறைமை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இங்கிவை பொதுவி யம்பு மென்பர்க ளிதன்மே லான்மாத்
தங்கிய வஞ்ச வத்தை தன்னுண்மை யுணர்த்துந் தன்மை
பொங்கொளி ஞான வாய்மை யதன்பயன் புனித னாம
மங்கதி லணைந்தோர் தன்மை யறைகுவ னருளி னாலே.

(இ-ள்.) இங்கிவை பொது இயம்பும் என்பர்கள்-இங்ஙனஞ்சொல்லிப் போந்த ஐம்பதுசெய்யுளுந் (திரிபதார்த்த விலக்கணத்தைப் பொதுப்படப் பொழிப்பகலமாகச்சொல்லுதலிற்) பொதுவென்று சொல்லப்படுமென்பர் (அறிவுடையோர்),—இதன்மேல் -இதற்குமேலான உண்மையென்று வகுக்கப்படும் ஐம்பதிலும்,—ஆன்மா - ஆன்மவிலக்கணம்,—தங்கிய அஞ்ச வத்தை - (அவ்வான்மா) பொருந்தப்பட்ட பஞ்சாவத்தை,—தன் உண்மை உணர்த்துந் தன்மை-(சிவன் உள்ளே நின்று கருவிகளைக்கூட்டி)ஆன்மாவினுடைய உண்மையுணர்த்து முறைமை,—(உண்மை-சிற்சத்தி),—ஒளி பொங்கு ஞானவாய்மை - ஒளி நிறைந்த சிவனுடைய ஞானத்தினுண்மை,—அதன்பயன் - அந்தச்சிவஞானத்தாலுண்டாகிய (ஆன்மதரிசன சுத்தியிலாபமென்னு மூவகையதான) பயன்,—புனிதன் நாமம் - நின்மலனுடைய திருநாமமாகிய ஐந்தெழுத்தருணிலை,—அங்கதின் அணைந்தோர் தன்மை - அந்த வுண்மையிலே அணைந்தோர் தன்மை (ஆக இவை எழுவகை யினையும்),—அருளினாலே அறைகுவன் - சிவானுக்கிரகத்தாற் சொல்வன் என்க.

அதன்பயன் மக்கட்பயன்போன்றது. இங்கிவை அங்கதிலென்பனவொருசொல். பாயிரத்தின்கட் பொது வுண்மை யெனப்படுத்தலானும் ஈண்டு இங்கிவை பொது வெனப்பிரித்தலானும் இதன்மேலாகிய உண்மை ஐம்பதிலென்றுரைத்தாம். இவ்வைம்பதுந் திரிபுதார்த்தத்தினுட்பமுஞ் சம்பிரதாயக்கிரமமுஞ் சொல்லுதலான் உண்மையெனப்பட்டது. செவ்வெண்ணின்றொகைதொக்கது. பயன் மூவகையென்று ஒன்பது தொகை கொள்வாருமுளர்.

இது உண்மை ஐம்பதிற்கும் இயன்முறைமையுணர்த்திற்று. (௧)

## மூன்றுஞ்சூத்திரம்.

இதுமுதல் "ஓரிடத்திருத்தல்" என்னுஞ் செய்யுளீறாகிய எட்டு திருவிருத்தங்களாலும் மூன்றுஞ்சூத்திர முணர்த்துவானெடுத்துக்கொண்டார்.

ஆன்மவிலக்கணம்.

செறிந்திடு முடலுண் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
யறிந்ததி லழுந்து மொன்று மறிந்திடா தறியுந் தன்மை
பிறிந்தடை யஞ்ச வத்தை பெருகிய மலத்தாற் பேணி
யுறுந்தனி யதீத முண்மை யுயிர்க்கென வுணர்த்து மன்றே.

(இ-ள்.) செறிந்திடும் உடலுள் மன்னி-(ஆன்மாவானது கன்மத்துக்கீடாகப்)பொருந்தின சரீரத்துள்ளே நிலைபெற்று,—சேர்புலன் வாயில்பற்றி அறிந்து அதில் அழுந்தும் - புசித்தற்கு யோக்கியமான விடயங்களை இந்திரியங்களாலேகண்டு (அந்தக்கரணங்களாலே)கிருகித்து (வித்தையினாலே) அறிந்த அவ்விடயத்திலே அழுந்திச்(சுகதுக்கங்களை அநுபவியா) நிற்கும் (காண்டலுங் கிருகித்தலும் பற்றியென்பதனாற்பெறுதும் இனி கலாதிகளாலறிந்து மனாதிகளாற்பற்றி இந்திரியங்களாற்கண்டு பிரகிருதியாலழுந்துமென்பாருமுளர்),—அறியுந்தன்மை ஒன்றும் அறிந்திடாது-அறியுந்தன்மையை (அறிவிக்குந்திருவருளும் புசிப்பிக்குஞ்சாதனமான கருவிகளும் போக்கியத்தின் வரலாறுமான இவற்றில்)ஒன்றும் அறியாது,—பிறிந்து அடை அஞ்சவத்தை பெருகிய மலத்தாற்பேணி உறும் - கருவிகளைப்பிரிந்த அடைவாகச்சாக்கிரமுதலிய அவத்தைகளிலே மிகுத்த ஆணவமலத்தாலே மறைப்புண்டு (அவத்தைப்படுகின்றேமென்னுந் தன்மை தெரியாமல்) அழுந்தும்,—தனி அதீதம் உயிர்க்கு உண்மையென உணர்த்தும் அன்றே - (இந்தக்கருவிகளெல்லாநீங்கி ஆணவமலநீங்காத) ஏகாந்தமான அதீதாவத்தை அவ்வான்மாவுக்கும்(பெத்தத்தில்) உண்மையென்று (திவ்வியாகமஞ்) சொல்லும் என்க.

இனி அறியுந்தன்மை பிரிந்தென ஒருபதமாக்கி இங்ஙனம் அறியுமுண்மையும் விட்டென்பாருமுளர். பிரிதல் உபசாரம். பேணி மறைக்கப்பட்டு. இது 'பேணி வைத்தான்' என்றாற்போலுங் காலவழக்கு. எழுவாய்வருவிக்கப்பட்டது.

இது ஆன்மவிலக்கணமுணர்த்திற்று. (க)

உருவுணர் விலாமை யானு மோரொரு புலன்க ளாக
மருவிநின் றறித லானு மனாதிக டம்மின் மன்னித்
தருபய னுகர்த லானு முயிர்சட மாத லானு
மருவினை யுடலு ளாவி யறிவினா லறியு மன்றே.

(இ-ள்.) உரு உணர்வு இலாமையானும் - உடம்பானது அவத்தையிலும் மரித்தபோதிலும் உணர்ச்சியில்லாத சடமாகையாலும்,—மருவி நின்று ஒரொரு புலன்களாக அறிதலானும் - (சோத்திராதிகளைந்துந் தத்தமக்காதாரமாகியபூதங்களைப்) பொருந்திநின்று ஒவ்வொருவிடயங்களாக (ஐந்தையும்) அறிகையாலும் (இதற்குச்சோத்திராதிகளைந்தையும் பொருந்திநின்றொருவனறிகையாலுமென்றுரைப்பர்),—மனாதிகள் தம்மின் மன்னித்தருபயன் நுகர்தலானும் - அந்தக்கரணங்கள் தங்களிற்கூடி (பற்றிநிச்சயித்து அகங்கரித்துச் சிந்தித்து இந்திரியங்கள்) தந்தவிடயங்களைப் புசிக்கையாலும் (இதற்கு இந்திரியங்களைப்பொருந்தி ஒவ்வொரு விடயங்களைப்பற்றி நிச்சயித்தகங்கரித்துச் சிந்திக்கையின் அவையொன்றறிந்ததொன்றறியாவாதலின் அவைநாலினும் ஆன்மாப்பொருந்திஅவற்றினால்அந்தப்பயனைப்புசிக்கையாலுமென்றுமுரைப்பர்),—உயிர் சடம் ஆதலானும் - பிராணவாயு வவித்தையை அறியாதிருத்தலானும்,—அருவினை உடலுள் ஆவி அறிவினால் அறியும் அன்றே - நீங்குதற்கரிய வினைக்கீடாக வெடுத்ததேகத்திலே ஆன்மாவானது (சிவன்கூட்டியருளின) கலாஞானத்தாலே அறியும் என்க.

இது தேகமும் இந்திரியமும் அந்தக்கரணமும் பிராணவாயுவும் ஆன்மாவென்னும் உலகாயதன் புத்தன் கன்மயோகிகளான இவர்களை நிராகரித்துத் தேகத்துக்கு அந்நியமாக ஆன்மாவுண்டென ஆன்மசாதநமுணர்த்திற்று. (உ)

அறிவெனில் வாயில் வேண்டா வன்றெனி லவைதா மென்னை
யறிவதை யுதவு மென்னி லசேதன மவைதா மெல்லா
மறிபவ னறியுந் தன்மை யருளுவ னென்னி லான்மா
வறிவில தாகு மீச னசேதனத் தளித்தி டானே.

(இ-ள்.) அறிவெனில் வாயில் வேண்டா - (வேறோரறிவினாலறியுமென்றதென்னை ஆன்மாத்தானே எவற்றையுமறியும்)அறிவுகாணுமென்னுஞ் சாங்கியனும் அயிக்கவாதியுஞ் சொல்லில் இந்திரியங்கள்வேண்டாவாய் முடியும்,—அன்றெனில் அவைதாம் என்னை - ஆன்மா அறிவுடையதன்றென்று நியாயவைசேடிகர் சொல்லில் (அறிவில்லாத ஆன்மாவுக்குக்)கருவிகள் எற்றுக்கு,—அறிவதை உதவு மென்னில் அவைதாம் அசேதனம் - (இந்திரியங்கள் ஆன்மாவுக்கு) அறியுமுறைமையைக் கொடுக்குமென்று சங்கிராந்தவாதி சொல்லில் அவைசடம் (ஆதலிற்கொடுக்கமாட்டாது),—எல்லாம் அறிபவன் அறியுந்தன்மை அருளுவனென்னில் - முற்றுணர்வினனாகிய பரமசிவன் (கருவிகளாலே ஆன்மாவுக்கு) அறியுமுறைமையைக்கொடுப்பனென்று பரிணாமவாதி சொல்லில்,—ஆன்மா அறிவு இலதாகும் - (அப்பொழுது) ஆன்மாச்சடமாகவேண்டும்,—ஈசன் அசேதனத்து அளித்திடானே - (ஆதலாலே) பரசிவன் சடத்துக்கு(அறிவை)க் கொடான் என்க.

எனவே ஆன்மாவுக்குமுன்புள்ளவறிவைக்கருவிகளாலேவிளக்குவனென்பதாம்.

இது ஆன்மாத்தானே யறியுமென்பது முதலாகச்சொல்லுஞ் சாங்கியன் முதலியோரை மறுத்துணர்த்திற்று. (௩)

அறிவினா லறிந்த யாவு மசத்தாத லறிதி யென்று
மறிவினா லறியொ ணாதே லாவதொன் றின்மை தொன்மை
யறிவுதா னொன்றை மூந்தி யதுவது வாகக் காணு
மறிவுகா ணசத்து மற்ற தறிவினுக் கறிவொ ணாதே.

(இ-ள்.) அறிவினால் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி - (கருத்தா ஒருவனுளனேல் அவன் என்னாலறியப்படானோவெனில் ஆன்மாவினது) சிற்றறிவினால் அறியப்பட்ட பொருளெல்லாம் நிலைநில்லாததுண்மை யென்றறிவாய் (ஆனாற்சத்தாகிய சிவம் என்னால் எப்பொழுதும் அறியப்படாதோவெனில்),—என்றும் அறிவினால் அறிய ஒணாதேல் ஆவது ஒன்று இன்மை(அறிதி)-ஒருகாலத்தினுஞ் சிவன் ஆன்மாவால் அறியாதிருக்குமாகில் இவனுக்குச் சிவனைக்கொண்டாவதொருபிரயோசனமுமில்லாமைஉண்மையாம் (ஆனால் என்னாலறியப்பட்டதெல்லாம் அசத்தென்று சொன்னதென்னையெனில்),—தொன்மை அறிவுதான் ஒன்றை மூந்தி அதுவதுவாகக் காணும் அறிவுகாண் அசத்து - அநாதியாய்வருகின்ற பசுபோதமாவது ஒருவிடயத்தை (இந்திரியங்களாலே) முற்பட்டுப்பொருந்தி அதுவதுவாகச் சுட்டி அறியப்படும் பொருள்காண் அசத்தென்றது,—மற்றது அறிவினுக்கு அறிவு ஒணாதே - அந்தச் சிவம் இந்தச் சுட்டறிவால் அறியப்படாது என்க.

காணுமறிவு ஆகுபெயர். ஆவதொன்றின்மையறிதி எனவுங்கூட்டுக. அறிதி உண்மை. அறிவொணாதென்பது 'தெரிவரியதோர்தெய்வம்' என்பதுபோனின்றது.

இது ஆன்மபோதத்தாலறியப்படுவனவெல்லாம் அசத்தென்றும் அவ்வறிவாற் சிவனை யறியவொண்ணாதென்றும் பரிணாமவாதி பாடாணவாதிகளை மறுத்துணர்த்திற்று. (ச)

எவ்வறி வசத்த றிந்த தெனிலுயி ரறியா தீச
னவ்வறி வறியா னல்ல தசேதன மறியா தாவி
செவ்விய கருவி கூடிற் றெரிவுறா தருளிற் சேரா
துவ்விரு வகைய தென்னி லொளியிரு ளொருங்கு றாவே.

(இ-ள்.) அசத்து அறிந்தது எவ்வறிவெனில் - அந்தவசத்தையசத்தென்றறிந்தது எந்தவறிவுதானென்னில்,—உயிர் அறியாது - (சிற்றறிவுடையது தானாகவொன்றையுமறியாதாதலின்) உயிரானது (அசத்தைச்சத்தென்றேயிருப்பதொழிந்து அசத்தென்று) அறியமாட்டாது,—அவ்வறிவு ஈசன் அறியான் - முற்றறிவுடைய ஈசன் (ஒன்றை இதுவெனச்சுட்டி)அறியான்,—அல்லது அசேதனம் அறியாது - அன்றி (இவர்களையொழிந்தகருவிகள்) சடமாகையாலே பாசஞானம் அறியாது,—ஆவி செவ்விய கருவி கூடின் தெரிவு உறாது - சிற்றறிவானவான்மாவும் அதற்குக்கருவியாகச் சிறந்த சடமுங்கூடியறியுமென்னில் விளக்கமுண்டாகாது,—அருளிற்சேராது - (அருளானசிவஞானமும் உயிருங்கூடி அறியுமென்னிற் பெத்தத்திலே ஆன்மா) அருளிற்பொருந்தாது,— உவ்விருவகையதென்னில் ஒளி இருள் ஒருங்கு உறாவே - மற்றைப்பதியும் பாசமுங்கூடி யறியுமென்னில் ஒளியுமிருளும் ஓரிடத்தினில்லா என்க.

முப்பொருள்களை ஒவ்வொன்றாகத்தனித்தனிமறுத்து இவ்விரண்டாகக்கூடியறியுமென்பதைமறுப்புழி ஆவியுங்கருவியுமறியா, ஆவியுமருளுங்கூடாவெனமறுத்தாற் பின்னிற்பதருளுங் கருவியுமாதலின் உவ்விருவகையதெனச்சுட்டினார். "உப்பக்க நோக்கி யுபகேசிதோண்மணந்தா - னுத்தரமாமதுரைக்கச்சென்ப—விப்பக்க - மாதானுபங்கிமறுவில்புலச்செந்நாப் - போதார்புனற்கூடற்கச்சு." என்புழி உப்பக்கமப்பக்கமென்னும்பொருளாய் நின்றாற்போலநின்றது. ஒவ்விருவகையதென்றுபாடமோதி யொத்தவிருவகையென்று பொருளுரைப்பின் இலக்கணத்தோடுஞ் சம்பிரதாயத்தோடுமாறுகோடலறிக. உயிரறியாதென்றதனால் விகாரவாதியும் ஈசனறியானென்றதனாற் பரிணாமவாதியும் அசேதனமறியாதென்றதனாற் சிவசமவாதியும் ஆவியுங்கருவியுமறியாவென்றதனாற் சங்கிராந்தவாதியும் உயிருமருளுங்கூடாவென்றதனாற் சைவரும் பதியுங்கருவியுங்கூடாவென்றதனால் அயிக்கியவாதியு மறுக்கப்பட்டார்களெனவறிக.

இது பசுஞானம் பாசஞானம் பதிஞானமென மூன்றையும் வைத்துக்கொண்டு இவற்றுள் அசத்தை அசத்தென்றறிந்தது எவ்வறிவென்றுவினவ இம்மூன்றுமறியாதென்பதுணர்த்திற்று. (ரு)

சத்தினு வென்ற சத்துத் தானறி யாத சத்தைச்
சத்தறிந் தகல வேண்டா வசத்தினு சத்தி தென்றோர்
சத்திரு ளொளிய லாக்கண் டன்மைய தாம சத்தைச்
சத்துட னின்று நீக்குந் தன்மையாற் சதசத் தாமே.

(இ-ள்.) அசத்துத்தான் சத்து இதுவென்று அறியாது - அசத்தான பாசஞ் (சடமாகையால்) சத்தாகியசிவத்தை இதுவென்றுசுட்டி அறியமாட்டாது,—சத்து அசத்தை அறிந்து அகலவேண்டா - சத்தாகியசிவம் (வியாத்தமாகையால்) அசத்தை இதுவென்றறிந்து நீங்கவேண்டா,—அசத்து இது சத்து இது என்றுஓர் சத்து-(மலபாகத்தாற்பிரகாசித்த அருளாலே) பாசம் இது சிவம் இது வென்றறிகிற ஆன்மாவானது,—இருள் ஒளியலாக் கண்டன்மையதாம் - (இருளிலேநின்றபோது இருளாயும் ஒளியிலே நின்றபோது ஒளியாயும்) இருளும் ஒளியுமல்லாத கண்ணின்றன்மைபோலுந் தன்மையுடையதாம் (ஆகவே),—அசத்தைச் சத்துடனின்று நீங்குந்தன்மையாற் சதசத்தாமே - (முன்கூடிநின்ற) மலங்களைச்சிவத்துடனேகூடிநின்று போக்குமுறைமையாலே (அவ்வான்மாவுக்குச்) சதசத்தென்ற பெயராம் என்க.

கண்ணின்றன்மைபோலுந்தன்மையாவது மலத்துடனே கூடிநின்றபோது மலமாயும் சிவத்துடனே கூடிநின்றபோது சிவமாயுநிற்கும் முறைமை. ஓரசத்து வினைத்தொகை. சத்து உள்ளதென்னும் பொருளன்றி அறிவென்னும் பொருளும்பயக்கும். அதனைப் பூசாத்தவத்திற் சதசதந்தமென்றபதத்துக் குறைபெழுதின ஆசிரியராலே இரண்டாங்கருத்தாகவெழுதினமைகாண்க.

இது அசத்தையறியாததாயின் சத்தையுமறியாவாதலின் இவ்விரண்டையுமறிவதெவ்வறிவென்றுவினவச் சத்தையும் அசத்தையும் அருள்கண்ணாக ஆன்மாவே அறியுமென்பதையுணர்த்திற்று. (௬)

கண்ணொளி விளக்க ளித்துக் காட்டிடு மென்னின் முன்னங்
கண்ணொளி யொன்று மின்றும் விளக்கொளி கலந்த வற்றைக்
கண்ணொளி யகல நின்றே கண்டிடும் வேறு காணக்
கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தொன் றன்றே.

(இ-ள்.) கண் ஒளி விளக்கு அளித்துக் காட்டிடு மென்னின் முன்னங் கண் ஒளி ஒன்றும் இன்றும் - கண்ணுக்கு ஒளியை விளக்குக்கொடுத்து (பொருள்களை) தெரிசிப்பிக்குமென்று நிமித்தபரிணமவாதி சொல்லின் முன்புகண்ணுக்கு ஒருபிரகாசமும்இல்லையாய்முடியும்,—விளக்கொளி கலந்தவற்றைக் கண்ணொளி அகலநின்றே கண்டிடும் - விளக்கொளிகலக்கப்பட்டவற்றைக் கண்ணிற் பிரகாசமானது வேறாகநின்றே காணும்,—வேறு காண - (இப்படி அகலநின்று காண்கையிலும் விளக்கொளியொடுகாண்டலன்றிக் கண்ணொளிகள்) தாமேகாணமாட்டா,—கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும் - கண்ணொளியும் விளக்கொளியும் (தம்மிற்) கலந்துநிற்கும்,—கருத்து ஒன்று அன்றே - (கலந்தாலும் பொருந்தியபொருள்கள்) அயிக்கத்தால் ஒன்றென்னின்றிப் பொருளிரண்டே என்க.

கருத்தொன்றன்றென்பதற்குக் கண்ணிற்பிரகாசமொன்றைச்சுட்டி நின்றேகாணும் விளக்கிற்பிரகாசமொன்றையுஞ்சுட்டாமனின்றே பிரகாசிக்குமென்பாருமுளர்.

இது கருத்தா ஆன்மாவுக்கு அறிவைக்கொடுப்பனென்னும் பரிணமவாதியை மறுத்துணர்த்திற்று. (௭)

ஓரிடத் திருத்தன் மாயா வுருநிறைந் திடுத லொன்றும்
பேரிடத் துறைத றானே பிறங்கறி வாகி நிற்றல்
சோர்வுடைச் சடநிகழ்த்த லெனுமிவை சொல்லார் நல்லோ
ரோரிடத் துணரு முண்மை யொளிதரு முபலம் போலும்.

(இ-ள்.) ஓரிடத்து இருத்தல் - யோகிகள் ஆன்மாத் தேகத்தில் ஏக தேசத்திலேயிருந்தறியுமென்னுமதுவும்,—மாயா உரு நிறைந்திடுதல் - சமணன் மாயாகாரியமானதேகத்திலேநிறைந்து நின்றறியுமென்னுமதுவும்,—ஒன்றும் பேரிடத்து உறைதல் - மாயாவாதி ஆகாயம்போல் எவ்விடத்தும் பூரணமாய் நின்றறியுமென்னுமதுவும்,—தானே பிறங்கு அறிவாகி நிற்றல் - சாங்கியனும் அயிக்கவாதியும் அவிகாரவாதியும் ஒருகருத்தா அறிவியாமல் ஆன்மாத்தானே உயர்ந்தவறிவாய்நிற்குமென்னுமதுவும்,—சோர்வுடைச்சடம் நிகழ்த்தல் - நியாயவைசேடிகர் குற்றத்தையுடையமனமுதலியகருவிகள் அதற்கறிவைக்கொடுக்குமென்னுமதுவும்,—எனும் இவை நல்லோர் சொல்லார் - என்றெண்ணப்படுமிவற்றைச் சைவசித்தாந்திகள் சொல்லார்கள்,—உணரும் உண்மை ஓர் இடத்து - ஆன்மா அறியுமுண்மையை விசாரிக்குமிடத்து,—ஒளிதரும் உபலம் போலும் - விளக்கந்தரும் படிகம்போல (அடுத்ததன்றன்மையாய் நின்றறியும்) என்க.

உணருமுண்மையோரிடத்தெனமாறுக. ஓரிடம் வினைத்தொகை. ஓரிடத்திருப்பின் ஏகதேசவுருவாய்ச்சடமாய் மற்றுள்ளவிடங்களில் அறிவுமற்று அழியும். உடன் முழுதுநிற்பின் அவத்தைப்படுங்குற்றமும், உடல்வளரவளர்ந்து சிறுகச்சிறுகுதலாகிய 'சங்கோசவிகாசதன்மம்' என்னுங்குற்றமும்,இந்திரியமைந்தும் புலன்களைந்தையுமொருகாலத்திலே நுகராதகுற்றமும், உடல்வளரவளர்ந்து சிறுகச்சிறுகுதலாகிய அவயவங்குறைய ஆன்மாவுஞ்சின்னபின்னப்படுங்குற்றமுமேறும்; எவ்விடமுநின்றறியிற் போக்குவரவுடையகுற்றமும், ஒருவன் கருத்தை பொருவனறியானென்னுங் குற்றமுந்தங்கும்; தானேயறியில் அவத்தைப்படுவதும் ஒருவரறிவிக்கவறியுங்குற்றமும், கருவிகளாலறியுங்குற்றமுமுளவாம்; கருவிகள் அறிவைக்கொடுப்பின் ஆன்மாவுக்குச் சடத்துவமுண்டாம்; அறியுஞ்சடமானகருவிகளொன்றுக்கு அறிவைக்கொடுக்கமாட்டா; ஆகையால் இவை முழுவதூஉம் நல்லோர்சொல்லார். ஓர்வுடைத்தென்பதூஉம்பாடம்.

இது இப்படிப்பட்ட ஆன்மவிலக்கணத்தைப் பரசமயிகள் வேறுவேறுகூற அவற்றை நிராகரித்து அதனுண்மையை உவமைமுகத்தாலுணர்த்திற்று. (அ)

மூன்றாஞ் சூத்திரமுடிந்தது
ஆகத்திருவிருத்தம் - க.

---

## நான்காஞ்சூத்திரம்.

இதுமுதல் "நீக்கமிலநீதம்" என்னுஞ் செய்யுளீறாகிய மூன்று திருவிருத்தங்களாலும் நான்காஞ்சூத்திர முணர்த்துவானெடுத்துக்கொண்டார்.

அவத்தைத்தன்மை.

எண்ணவொன் றிலாத தீத மெய்திய துரியத் தொன்று
நண்ணிடுஞ் சுழுத்தி தன்னி னயர்துள தொன்று பின்னு
மண்ணிடுங் கனவு தன்னி லாறேழாஞ் சாக்கி ரத்திற்
கண்ணுறு மஞ்சா றாய கருவிகண் மருவுந் தானே.

(இ-ள்.) எண்ண ஒன்றிலாது அதீதம் - மூலாதாரத்திலே (ஆன்மா ஆணவமலமேயாய்) எண்ணுதற்கு ஒருகருவிகளுமின்றி நின்றறுவதாம் அதீதம்,—எய்திய துரியத்து ஒன்று நண்ணிடும் - பொருந்தப்பட்ட துரியத்திலே பிராணவாயுவொன்றுபொருந்தும்,—சுழுத்திதன்னின் நயந்து உளது ஒன்று (நண்ணிடும்) - சுழுத்தியிலே விருப்பமுடைய சித்தமொன்று பொருந்தும் (நண்ணிடுமென்பதனையிதனோடுங்கூட்டுக),—கனவுதன்னில் ஆறேழாம் - சொப்பனவத்தையிலே சத்தாதியைந்தும் வசனாதியைந்தும் மனம் புத்தி அகங்காரமூன்றுமாகிய பதின்மூன்றுமாம்,—பின்னும் அண்ணிடும் - இவையன்றி (நின்ற பிரதானவாயுக்கள் ஒன்பதும்) பொருந்தும்,—சாக்கிரத்தின்கண் அஞ்சு ஆறு ஆய உறும் - சாக்கிரத்தின் ஞானேந்திரியங்களைந்தும் அதன்வழி எண்ணுவதாய (கன்மேந்திரியங்களைந்தும்) பொருந்தும்,—கருவிகள் மருவுந்தானே - (ஆராயுமிடத்து இத்தானங்கடோறும் இந்தமுறையே) கருவிகள் பொருந்தும் என்க.

காணுந்தானேயென்பதூஉம்பாடம். சாக்கிரத்தானம் நெற்றி. இதுதொட்டுக் கண்டமளவுஞ்சொப்பனத்தானம். முன்னூலாகிய சிவஞானபோதத்திலே "ஒன்றணையாமூலத்துயிரணையுநாபிதனில்" என்றாற்போல் இவ்வாசிரியருஞ்சிருட்டிக்கிரமமாக வுரைத்தார். கேவலசகலசுத்தமென்னுங் காரணவத்தை மூன்றினுட் சகலாவத்தை பதினைந்துவிதப்படும்; அவை:—சகலத்திற் கேவலமொன்றும், சகலத்திற் சகலமொன்பதும், சகலத்திற் சுத்தமைந்துமாம். சகலத்திற்கேவலமொன்றாவது அதீதம் சகலத்திற்சகலமொன்பதாவது மத்தியாலவத்தையைந்துங் கீழாலவத்தையிற் சாக்கிரமுதனான்குமாம். மத்தியாலவத்தையுஞ் சகலத்திற்சுத்தமைந்துமேற்காட்டுதும். கீழாலவத்தையைந்திற் சாக்கிரத்திற்கருவி முப்பத்தைந்து, சொப்பனத்திற்கருவி இருபத்தைந்து, சுழுத்தியிற்கருவி மூன்று, துரியத்திற்கருவி இரண்டு, அதீதத்தில் ஒன்று, அதுபுருடனாதலின் எண்ணவொன்றிலாததீதமென்றார். இனிச்சாக்கிரத்திலே இந்திரியம்பத்துநிற்க நின்ற இருபத்தைந்துடனே சொப்பனவத்தையுறுவன். இவ்விடத்தில் அறிகருவியான இந்திரியங்களின்றி யிருக்கையிலுஞ் சாக்கிரத்திற்கண்டவாதனை சொல்லமாட்டாமனிற்றல்பற்றி நிச்சயத்தெழுங்கருவிகளாண்டின்மையின், அறிவு ஒழுகக்காய்ந்தவிரும்பு இறுகிச் சிறிது சிவப்பு நின்றாற்போலவும் புத்தியிலே பிரகாசிப்பிக்கும்; அதெப்படியெனில், ஒழுகக்காய்ந்தவிரும்பு அக்கினியைவிட்டு நீங்கியிருக்கையிலும் அக்கினிசெய்யுந்தன்மைசெய்து நின்றாற்போலவும், பவுரிசுழன்றவன் அதுநீங்கியிருந்தவிடத்தும் அந்தப்பிரமைநின்றாற்போலவும், யானைகண்டவன் ஓடிப்போய் மீண்டுவரும்பொழுது அவ்வியானை யாண்டில்லாதிருக்கவும் மனத்தின்கணிற்குமாறுபோலவுமாம். இனி சுழுத்தியிலேசொப்பனவாதனை நிகழ்ந்துசொல்லமாட்டாமனிற்றல்பற்றி நிச்சயித்தெழுங்கருவிகளாண்டின்மையின், அறிவு ஒழுகக்காய்ந்த விரும்பு இறுகிச் சிறிது சிவப்பு நின்றாற்போலவுஞ், செறிந்தவிருளிலே மின்பிரகாசித்தழிக் கண்ணுக்கொருபொருளை நிச்சயிக்கவொண்ணாதிருந்தாற்போலவுமாம். இனி துரியத்திலே பிராணவாயுவின் சேட்டையேயன்றி வேறொன்றுநினைவுமற்றிருப்பன்; அவ்விரும்பும் மிக்க பிரகாசமும் வெப்பமுமாறிச் சிறிது வெம்மையுடனிற்பதுபோலவும், மின்மறைந்தவிடத்து மிக்க விருளிற்கூடிநின்ற கண்போலவுமாம். இனி அதீதத்திலே அறிவு வெம்மையற்ற விரும்புபோலவும் பிறவிக்குருடன் அந்தகாரத்திலே விழித்திருக்குந் தன்மைபோலவு மிருக்கும். "நனவுமுகந்தன்னி லுலேழுமேழுங் - கனவிருபத்தைந் துங்களத்தி—னினைவாஞ் - சுழுனையொருமூன் றுமார்பிற்றுரிய - மெழிஞ்ஞபிமூலமிரண்டொன்று." இந்திரியமீரைந்து

நிற்கவிலாடத்திருபத் - தைந்துங்களத்தினடைந்தாங்கனவு—மூந்தைநன - வென்னவிலங்குர் துயருமின்புந்திளைக்குமுயிர் - பின்னையதுபொய்யாம்பிரிந்து." "இந்திரியமீரைந்துநிற்கவிலாடந்தன்னி - லந்தத்தொழில்விடயமார்கனவின்—வந்துறலென் - வாதனையினுலேவிளங்குமன்றி மற்றிவற்றை-யாதலினுற்புக்கனவென்றார்." "உயிராவிசித்தமுரத்தினுடுங்கி - யயர்வுநினைவுஞ்சிறிதேயாகு—முயர்கனவிற் - றேன்றுநினைவுமித்னைச்சுழுத்தியெனச் - சான்றோருரைப்பரடைந்தார்க்கு." "நாபிக்குக்கீழ்மேலுநாலங்குலமங்கே-யாவிக்குயிர்க்கொடுக்கமாந்துரிய--மாவிதனித்-தொன்றியிலங்கத்திருளினுற்றவிழிக்கொப்பாகி -நின்றததீதநிலை." இவற்றின் பொருளுங்காண்க.

இது கீழாலவத்தை ஐந்தையும் அதீதமுதலாக வுணர்த்திற்று. (க)

இவ்வகை யவத்தை தன்னி லெய்திடுங் கரண மெல்லா
மெய்வகை யிடத்தி லுற்று மேவுமா கண்டு மிக்க
பொய்வகைப் பவம கற்றப் புரிந்திடி லருளா லாங்கே
யைவகை யவத்தை யுய்க்கு மறிவினு லறிந்து கொள்ளே.

(இ-ள்.) இவ்வகை அவத்தை தன்னில் எய்திடுங் கரணமெல்லாம்-இந்தவைந்துகூறுபாடான கீழாலவத்தையிற்பொருந்தப்பட்ட தத்துவமுப்பத்தைந்தும்,—மெய்வகையிடத்தில் உற்று மேவுமா கண்டு - உணர்த்துமுறைமைக்குத்தானமான இலாடத்தானத்திலும் பொருந்திப் (பஞ்சாவத்தை) கூடும்படிகண்டு,—மிக்க பொய்வகைப் பவம் அகற்ற அருளால் புரிந்திடில் - மிகுத்த பிரபஞ்சத்திலே பொய்யின் கூறுபாடான பிறவிகளைப் போக்குதற்குச் சிவனருளாலே (மேலாமவத்தையைப்) புரியுமிடத்தில்,—ஆங்கே ஐவகை யவத்தையுய்க்கும் - அவ்விடத்திலும் பஞ்சாவத்தை (அவ்வருளாற்) செலுத்தப்படும்,—அறிவினால் அறிந்துகொள்ளே - (இந்த அவத்தையை ஆசிரியனுணர்த்திய) உபதேசவறிவாலறிக என்க.

அறிந்துகொள் ஒருசொல். எச்சவும்மைகள் விகாரத்தாற்றொக்கன. நிலையாமையிற் பொய்வகையென்றார். மத்தியாலவத்தையையுஞ் சுத்தாவத்தையையு மதீதமுதலாகத்தரிசிப்பான். "விரும்புமரும்பொருளைவீழ்த்துமயங்க - லிரிந்தவனிலன்பெறுகை—வருந்தறிவு - தோன்றுதலையம்விழுந்தவிடந்தோன்றுதலென் - றுன்றவைந்துஞ்சாக்கிரத்தினும்." "ஒருவர்க்கொருவர்க்கொருகாலொருசா - ருகிவருமிவ்வவத்தை—கருவிகளை - முன்னம்பகர்ந்தமுறையிற்கொளுகமுகம் - பண்ணியவிவ்வைந்திலுக்கும்பாங்கு." "கலாதிகள்போகமுணுங்காலைக்கருவி - கலாதிகளைச்சாக்கிரத்தே காணுங்—கலாதிகளை - யின்றியும்போகமுமிருக்கிலங்குமோ- துன்றுபுகழாய்சூழ்ந்து சொல்." கலாதிகளாவிக்கொருவாக்கஞ்சுகமாகையாற் - கலாதிகளைக்கட்டுரையார் சற்றோர்—மலாரியுறை-வந்தனனுரியனென்வாறேயவனடியிற் - பந்தனைசொல்லாரிதுவேபார்." இனிச்சுத்தாவத்தை;"ஆருயிரின்மேலதனுளைந்தைந்தையைந்தினுளும்-பேருயிர்நிற்கும்பார்பெரும்பிணிபோம்—பேருயிரை - யாருயிர்மேற்பார்க்கையதீதந்துரியாதி -யாருயிருளாதியிற்பார்க்கை." என்னும் பெரியோர் வாக்கியங்களாலறிக.

இது மத்தியாலவத்தையுஞ் சகலத்திற் சுத்தாவத்தையுமுணர்த்திற்று. (உ)

நீக்கமி லதீத மாசு நிறைந்தகே வலமா நீர்மை
சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகு
மூக்கமி ரெண்டுங் கூடா தொழியவோர் நிலையி னீடுஞ்
சாக்கிரா தீதஞ் சுத்தத் தகைமைய தாகுந் தானே.

(இ-ள்.) நீக்கமில் அதீதம் - (இவ்விடத்துக்கருவிகழன்ற) அஞ்ஞான நீங்காத அதீதமானது,—மாசு நிறைந்த கேவலமாம் நீர்மை-ஆணவம் பரிபூரணமாயிருக்கிற (சர்வசங்காரமென்றுசொல்லப்பட்ட) கேவலாவததையாகியதன்மையாம்,—கலாதிசேர்ந்த சாக்கிரம் சகலமாந் தன்மையாகும் - கலாதிகளுடனேகூடிநின்று (விடயங்களினுலேவந்த சுகதுக்கங்களை அனுபவிக்குஞ்) சாக்கிரமானது (சிருட்டிதொடங்கிக் கன்மத்துக்கீடாக நானுயோனிகளிலும் புக்குழன்று ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்களுக் கீடாகச் சுவர்க்கநரகங்களை அனுபவித்துச்சர்வசங்காரமளவாகச் செனனமரணப்பட்டுத்திரியுஞ்) சகலாவத்தையான தன்மையாயிருக்கும்,— ஊக்கம் இல் இரண்டுங் கூடாது ஒழிய ஓர்நிலையின் நீடுஞ் சாக்கிரவதீதம் - (தீவிரதரசத்திநிபாதத்தாலே கேவலத்தில் அறியாமையுஞ் சகலத்தில் விகாரமுமானவை) நீங்காத இவ்விரண்டுந் தாக்காதுவிட (சிவனருளான) ஒப்பற்றசார்பிலே நிலைபெற்று நிற்குஞ் சாக்கிரவதீதமானது,—சுத்தத் தகைமையதாகுந் தானே - (பரமுத்தியான) சுத்தாவத்தையின் முறைமையாம் என்க.

கலாதிசேர்ந்தசகலமென்று கூட்டினுமாம் இம்மூன்று செய்யுளானும் பெத்த முத்தியிரண்டினுமுள்ள அவத்தைகளடங்கலுஞ் சொல்லப்பட்டன.

இது காரியாவத்தை பதினைந்திற்குங் காரணமான கேவலசகல சுத்தங்களின் தரிசனமுணர்த்திற்று. (கூ)

நான்காஞ்சூத்திரமுடிந்தது.

ஆசத்திருவிருத்தம் - கஉ.

---

## ஐந்தாஞ்சூத்திரம்.

இதுமுதல் "அறிந்திடுமெநாதி" என்னுஞ் செய்யுளீருகிய ஐந்து திருவிருத்தங்களாலும் ஐந்தாஞ்சூத்திர முணர்த்துவானெடுத்துக்கொண்டார்.

### உணர்த்துமுறைமை.

மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றுங்
கருவிக ணன்கு நீங்காக் கலாதிக ளைந்துங் கூடி
யொருபுல னுகருமிந்த வொழுங்கொழிந் துயிரு மொன்றைத்
தெரிவுறு தவனெ ழிந்தத் திரள்களுஞ் செயலி லாவே.

(இ-ள்.) மருவிய பொறியில் ஒன்றும் - (தத்தமக்கானவிடயங்களைப்) பொருந்திய சோத்திராதிகளில் ஒன்றும்,—மாபூதம் ஐந்தில் ஒன்றும் - பெரியபூதங்கள் ஐநதில் ஒன்றும்,—கருவிகள் நான்கும் - அந்தக்கரணங்கள் நான்கும்,—நீங்காக் கலாதிகள் ஐந்தும் - விட்டுநீங்காத கலாதிகள் ஐந்தும்,—கூடி ஒரு புலன் நுகரும்-(ஆகப்பதினெனன்றுந்தம்மிற்) கூட ஆன்மா ஒரு விடயத்தைப்புசிக்கும்,—இந்த ஒழுங்குஒழிந்து உயிரும் ஒன்றைத் தெரிவுறாது - இந்த முறைமையொழிந்த ஆன்மாவும் ஒன்றை அறியமாட்

டாது,—அவன் ஒழிந்து அத்திரள்களுஞ் செயல் இலாவே - அவ்வான் மாவையொழிந்து அந்தத் தத்துவங்களுஞ் சேட்டிக்குஞ் செயலுடைய னவல்ல என்க.

இலவென்னும்பன்மை வினைக்குறிப்புமுற்றுச்சொல் ஈறுதிரிந்துநின்றது. கூடி யென்னும் வினையெச்சங் காரணப்பொருட்டாய்நின்றது. கலாதிகளைந்து மென்பத னைக் கலாதிகளும் ஐந்துமெனப்பிரித்துக் கலாதிகளேழுஞ் சுத்த தத்துவமைந்துமெ ன்றுரைப்பாருமுளர்; அது பொருந்தாமையறிக. என்னை? முன்னும்பின்னுமும்மை விரிய நடுவேதொகுதல் சிறப்பன்மையானும், மாயையுபாதானமாகையாலும், புரு டனை ஐவகையாலுறுபயன்கணுகரவருங் காலமென்றிவ்வாசிரியரோதினமையானும், இவ்விரண்டு மத்துணைச்சிறந்தகருவிகளல்ல வெனபதைநோக்கி நீங்காமை அடை கொடுத்து இவ்வைந்திற்குமே சிறப்புடைமையானும், சிவதத்துவமைந்தும் வாக் குத்துவாரத்தாலறிவித்தலன்றி முப்பத்தொருதத்துவங்கள்போலுங் கருவியன்மை யானும் அங்ஙனம் பகுத்தல் ஆசிரியர் கருத்தன்மையின்.

இது ஆன்மா ஒரு புலனை நுகர்தற்கு இத்துணைக்கருவி வேண்டுமென்ப துணர்த்திற்று. (௧)

தனக்கென வறிவி லாதான் றானிவை யறிந்து சாரான்
றனக்கென வறிவி லாத வாயிறு னறியா சார
தனக்கென வறிவி லாதான் றத்துவ வன்ன ரூபன்
றனக்கென வறிவா னுலிச் சகலமு நுகருந் தானே.

(இ-ள்.) தனக்கென அறிவு இலாதான்றான் இவை அறிந்து சாரான்- தனக்கென ஓரறிவில்லாத ஆன்மா (ஒருவர் அறிவியாமற்றானே) இந்தத்தத் துவங்களை அறிந்து கூடமாட்டான்,—தனக்கென அறிவிலாத வாயிறுன் சார அறியா - தனக்கெனவறிவில்லாத சடமானவிந்திரியக்தானுக ஆன்மா வைக்கூடவறியாது,—தனக்கென அறிவிலாதான் தத்துவ வன்னரூபன் - இத்தன்மையனுன அவன் தத்துவங்களுடைய வன்னமே தனக்குச்சொரூ பமாய்நிற்பன் (ஆனுல் இவன் இவைகளால் எப்படிப்புசிப்பனென்னில்),— தனக்கென அறிவானுல் இச்சகலமும் நுகருந்தானே - சுதந்திரவறிவையு டைய சிவனுலே இவையெல்லாவற்றையுமறிந்துகூடிப்புசியாநிற்பன் என்க.

பின்வந்த தனக்கெனவறிவிலாதானென்பது அவனென்னுஞ்சுட்டுப் பெயர்த் தன்மைத்தாய் நின்றது. தனக்கெனவறியானுலென்றோதுவாருமுளர்.

இது அப்படி ஆன்மாவுங்கருவியுங்கூடி யறியுமாயிற் கருத்தா வேண்டுமோ வென்று வினவியதற்கு உத்தரமுணர்த்திற்று. (௨)

கண்டறி புலன்கள் காணுங் கருத்தினு லொருத்தன் ஞானங்
கொண்டுள மறியு மென்னிற் கொள்பவன் முதலி யாகு
மண்டிய வுணர்வு யிர்க்கா மன்னிநின் றறியு மென்னி
லுண்டிட வேண்டு வானுக் கொருவன்வே றுண்ட லாமே.

(இ-ள்.) கண்டு அறி புலன்கள் கருத்தினுல் காணும் - அனுபவித்தறிகி ன்றபொறி கன்மனத்தினுலே விடயங்களை அனுபவியாநிற்கும்(அதுபோல) உளம் ஒருத்தன் ஞானங் கொண்டு அறியுமென்னில் - ஆன்மாவானவன் ஒப்பில்லாத சிவனுடைய ஞானத்தைக்கருவியாகக்கொண்டு (சகலத்தை

யும்) அறிவனென்று விகாரவாதிசொல்லில்,—கொள்பவன் முதலியாகும் - கொண்டறிகின்ற ஆன்மாவே கருத்தாவாவன்,—மண்டிய வுணர்வு உயிர்க்கா மன்னி நின்று அறியுமென்னில் - (சிவனுடைய) மிகுத்தஞானமானது ஆன்மாவுக்காக நிலைபெற்றுநின்றறியுமென்று சங்கிராந்தவாதி சொல்லில்,—உண்டிட வேண்டுவானுக்கு வேறு ஒருவன் உண்டலாமே-பசியாலுண்ணவேண்டிய ஒருவனுக்காக வேறொருவனுண்டலையொக்கும் என்க.

உளம் ஆன்மா. கண்டு அனுபவித்து. தன்மாத்திரைகளோடொற்றுமையுண்மையிற்பொறியும் புலனெனஆகுபெயராய்நின்றது. "திருப்புலனெந்திரமிலாஞ்சனையெழுதுவினைப் - புகழ்ச்சிப்புலவர்பொறியெனப்புகல்வர்" என்பதனானுமறிக. கண்டறிபுலன்கள்காணுங் கருத்தினாலென்பது எடுத்துக்காட்டுவமை. இனி இந்தப்பதத்திற்கு ஆன்மா இந்திரியங்களாலே புலன்களைக்காணாநிற்கும். அதுபோலென்றும், ஆன்மாவினுடைய ஞானத்தைக்கொண்டு பொறிகள் புலன்களைக்கண்டறியும் அதுபோலென்றும், முன்பிந்திரியங்களாலே கண்டனுபவித்த விடயங்களைப் பின்புமந்த விந்திரியங்களாலே காணவேண்டின வுண்மைபோலென்று முரைப்பாருமுளர். உயிர்க்காக வெனத்திரிக்க.

இது ஆன்மாவானது சிவனறிவுகொண்டறியுமென்றுஞ் சிவன்றானே அவனுக்காவறிவனென்றுஞ் சொல்லுஞ் சமயிகளை மறுத்துணர்த்திற்று. (ங)

இருணனி யிரவி தான்வந் திரித்தலு மிரவி லெண்ணும்
பொருணிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல
மருணிலை யெங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுண் மன்னு
மருளையு மொழிய ஞாலத் தறிந்தவா றறியு மன்றே.

(இ-ள்.) இரவிதான்வந்து நனி இருள் இரித்தலும் இரவில் எண்ணும் பொருள் நிலைகண்டு மாந்தர் பொருந்திடு மாறுபோல - ஆதித்தன் வந்து மிக்க விருளைத்துரப்ப அவ்விராக்காலத்திலே விசாரித்த காரியங்களை (மானுடர்) கண்டு (அவ்வவர்தொழில்களிலே அவனுதவியறியாமற்) பொருந்துமுறைமைபோல,—உயிர் மருள் நிலை எங்கும் நீங்க மகிழ்ந்து - ஆன்மாவானது மலத்தினிலைமை (புலன்களையனுபவிக்குமிட) மெங்குங் (கலாதிகளாலே) நீங்குதலின் மகிழ்ச்சிபெற்று,—தன்னுள் மன்னும் அருளையும் ஒழிய ஞாலத்து அறிந்தவாறு அறியும் அன்றே - (அம்மலத்தினீக்கம் பண்ணுவித்துத்) தன்னுள்ளே பொருந்துந் திருவருளையும் விட்டுப் பூமியின்கண்ணே (தானாக) அறிந்தாற்போல அறியும் என்க.

அருளையுமென்புழி யும்மை சிறப்பும்மை. இதற்குப்பிறவாறுமுரைப்பர்.

இது அப்படிக்கூடிநின்றுணர்த்துவிக்குஞ் சிவனையிகழ்ந்த ஆன்மாக்கள் யான் செய்தேன் பிறர்செய்தாரொன்று நிற்குமுறைமையை யொருதிருட்டாந்த பூர்வகமாக வுணர்த்திற்று. (ச)

அறிந்திடு மனாதி வாயி லானவை யவன்ற னாலே
யறிந்திடு மென்று மொன்று மறிந்திடா வகைபோ லியாவு
மறிந்திடு மறியுந் தன்மை யறிந்திடா கன்மத் தொன்மை
யறிந்தவை நுகரு மாறு மருளுவ னமலன் றானே.

(இ-ள்.) அறிந்திடும் மனுதிவாயில் ஆனவை அவன்றனாலே என்றும் அறிந்திடும் - அறியத்தக்க மனுதிகளும் இந்திரியங்களுமானவைகள் அவ்வான்மாவினால் எப்பொழுதும் அறியாநிற்கும்,—ஒன்றும் அறிந்திடா - (இப்படி அவனாலே அறிகையிலும் இவனாலன்றோ அறிகின்றோமென்னுந் தன்மை) சிறிதும் அறியமாட்டா,—வகைபோல் யாவும் அறிந்திடும்-அவற்றையொப்ப (ஆன்மாவுஞ் சிவஞானத்தாலே) சகலமுமறிந்து புசியாநிற்கும், —அறியுந் தன்மை அறிந்திடா - (அவனாலன்றோ) அறிகின்றோமென்னு முறைமை (சிறிது) மறியமாட்டா,—கன்மத்தொன்மை அறிந்து அவை நுகருமாறும் அருளுவன் அமலன்றானே - இவனுக்கக்கன்மங்களையறிந்து புசிக்கமாட்டானாகையாலே பழையதாய்த்தேடிவைத்த கன்மபலத்தையுமறிந்து அவற்றை இவன் புசிக்குமுறைமையினையுங் கூட்டுவன் நின்மலனாகிய சிவன் என்க.

இதுவும் அதற்கொருதிருட்டாந்தமுணர்த்திற்று. (௫)

ஐந்தாஞ்சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - களஎ.

---

## ஆறாஞ்சூத்திரம்.

இத்திருவிருத்தத்தால் ஆறாஞ்சூத்திர முணர்த்துவானெடுத்துக்கொண்டார்.

ஞானவாய்மை.

காட்டிடுங் கரண மொன்று மில்லையேற் காணொ ணாதா
நாட்டிய விவற்றான் ஞான நணுகவு மொண்ணா முன்ன
மீட்டிய தவத்தினாலே யிறையரு ளுருவாய் வந்து
கூட்டிடு மிவற்றை நீக்கிக் குரைகழல் குறுகு மாறே.

(இ-ள்.) காட்டிடுங் கரணம் ஒன்றும் இல்லையேற் காண ஒணாதாம் - அறிவிக்கத்தக்க கருவிகள் ஒன்றுமில்லையாயின் (ஆன்மாவால்ஒன்றையும்) அறியவொண்ணாதாம்,—நாட்டிய இவற்றான் ஞானம் நணுகவும் ஒண்ணா - (இக்கருவிகள் எல்லாவற்றையுமறியுமோவெனில்) சொன்ன அத்தத்துவங்களாலே ஞானத்தைக்கூடவுமொண்ணாது (ஆனாற் கூடும்படி எங்ஙனமெனின்),—முன்னம் ஈட்டிய தவத்தினாலே இறை அருளுருவாய் வந்து-முற்சென்மங்களிலேசெய்த சரியைகிரியாயோகங்களின்முற்றுதலாலே (இவன் பக்குவங்கண்டு) பரமசிவன் அருளே திருமேனியாக வெழுந்தருளிவந்து, —இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகுமாறே கூட்டிடும் - இந்தத்தத்துவங்களை (பொருளல்லவென்று) நீக்கித் தன்னுடைய சீபாதத்தைப் பொருந்தும்படி அடைவிப்பன் என்க.

ஒண்ணாவெனச்கடைகுறைந்தது.

இது அந்தச்சிவஞானமே குருமூர்த்தமாய் வந்திரட்சிக்குமென்ற ஞானவாய்மையுணர்த்திற்று. (க)

ஆறாஞ்சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - கஅ.

---

## ஏழாஞ்சூத்திரம்.

இதுமுதல் "மாயைமாமாயை" என்னுஞ் செய்யுளீறாகிய இரண்டு திருவிருத்தங்களாலும் ஏழாஞ்சூத்திர முணர்த்துவா னெடுத்துக்கொண்டார்.

முற்சூத்திரப்புறனடை.

பன்னிறங் கவருந் தொன்மைப் படிகநீ டொளியும் பன்மை
மன்னிலங் கியல்புந் தந்த வளரொளி போல வையந்
தன்னகம் பயிலு நற்சிற் சடங்களின் றன்மை தாவா
நன்னலம் பெறநி றைந்த ஞானமே ஞான மென்பர்.

(இ-ள்.) பல் நிறங் கவருந் தொன்மைப் படிகம் நீடு ஒளியும் பன்மை மன் இலங்கு இயல்புந் தந்த வளர் ஒளிபோல-பல நிறங்களையுங்கவர்கின்ற பழைய பளிங்கினது நிலைபெற்ற ஒளியையும் பலவாய் நிலைபெற்றுவிளங்காநின்ற (வன்னங்களி)னியற்கைகளையுங்கூட்டுகின்ற (ஆதித்தனுடைய) மிக்கவொளி (அவ்விரண்டின் றன்மையுந்தாக்காது விளங்குமாறு)போல,—வையந்தன் அகம் பயிலும் நற்சிற் சடங்களின் தன்மை-தத்துவத்தினிடத்திற்பயிலு நல்ல ஆன்மாவுந் தத்துவங்களுமாகிய விரண்டின்றன்மையும்,—தாவா நல்நலம்பெற நிறைந்த ஞானமே ஞானமென்பர் - தாக்காது நல்ல சிறப்புண்டாய் நிறைந்த ஞானந்தானே ஞானமென்று சிறப்பித்துச் சொல்வர் (பெரியோர்) என்க.

இதற்குப்பிறவாறுமுரைப்பர்.

இது அப்படிக்கூடிநின்று காரியப்படுத்துகின்ற சிவஞானம் பிரபஞ்சத்தோய்வற நிற்கு முறைமையைத் திருட்டாந்த பூர்வகமாகவுணர்த்திற்று. (க)

மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளினி லிருளாய் நிற்கு
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளினி லொளியாய் நிற்கும்.

(இ-ள்.) மாயை மாமாயை மாயாவரும் இருவினையின் வாய்மை ஆய ஆர் உயிரின் மேவும் மருளினில் இருளாய் நிற்கும்-(ஆணவமலத்தினீட்டத்தாலே) இருவிதமாயையும் ஒழியாமல்வரும் இருவினைகளுமான இவற்றினுண்மையேயாய் நின்று (போகங்களை) அனுபவிக்கின்ற ஆன்மாவினிடத்திலே பொருந்திய மயக்கத்தினிடத்திலே(அந்தஞானம்) இருள் தானாகவே நிற்கும்,—மாயை மாமாயை மாயாவரும் இருவினையின் வாய்மை ஆய ஆர் உயிரின்மேவும் அருளினில் ஒளியாய் நிற்கும் - இனி அந்த ஆன்மாவினிடத்திலே (ஆசாரியனாற்) பொருந்திய அநுக்கிரகத்தினிடத்திலே அது பிரகாசமாகவே நிற்கும் என்க.

மருள் மயக்கம். சத்தார்த்தக்கிரியாசொரூபமான இந்த மாயாசத்திகளுடைய தன்மையும் பிறவித்துன்பமும் ஆன்மாக்கடன்மையும் எவற்றிற்கும் வேறாய்நிற்கும் வீட்டின்பமும் இவற்றிற்செலுத்துந்தன்மையும் ஒன்றுந் தோன்றாதபடி ஆணவகாரியமாயிருக்கின்ற அஞ்ஞானத்தைக்கொண்டு மறைத்து அவ்வஞ்ஞானமேயாய் நிற்குமாதலின் இருளாய்நிற்குமென்றும்,இந்த மலமாயாகன்மங்களினுடைய தன்மையுங் காட்டிப்பிரித்துத்தேகாந்தமளவுமுள்ள பிராரத்தவாதனையும் ஆன்மாவிற்றாக்காமல்

எவ்விடத்திலேயும் நாஞெழியவில்லை யென்னும்படி பிரகாசமாய் நிற்குமாதலின், ஒளியாய் நிற்குமென்றுமுரைத்தார். அந்தஞானமென்பது அதிகாரத்தாற்பெற்ரும். பின்வந்த ஆருயிர் அடையடுத்த சுட்டுப்பெயர் இதற்குப்பிறவாறுமுரைப்பர்.

இது இந்தச் சிவஞானம் இற்றைவரையும் என்னிடத்திற் பிரகாசியாதிருந்த தென்னையென வினயதற்கு உத்தரமுணர்த்திற்று. (௨)

ஏழாஞ்சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - ௨௦.

## எட்டாஞ்சூத்திரம்.

இதுமுதல் "சுத்தமாஞ்சத்தி" என்னுஞ் செய்யுளீருகிய ஐந்து திருவிருத்தங்களால் எட்டாஞ்சூத்திர முணர்த்துவா னெடுத்துக்கொண்டார்.

மேலதன்பயன்.

தேசுற மருவு மான்ம தெரிசன மான்ம சுத்தி
யாசிலா வான்ம லாப மாகமூன் ருகு மூன்றும்
பாசம தகல ஞானம் பற்றறுன் பணியை நீத்த
லேசினே யத்த ழுந்த லெனுமிவற் றடங்கு மன்றே.

(இ-ள்.) தேசு உற மருவும் ஆன்மதெரிசனம் ஆன்மசுத்தி ஆசு இலா ஆன்மலாபம் ஆக மூன்ருகும் - (அந்தப்பயனுவது) விளக்கமிகவும் பொருந்திய ஆன்மாவைத்தரிசிக்கை அந்தவான்மாவை நிருவிகற்பமாம்படி சுத்தி பண்ணுகை அங்ஙனங்குற்றமற்ற ஆன்மாவின் பிரயோசனம் ஆக மூன்று விதமாயிருக்கும்,—மூன்றும்-இந்த மூன்றுவிதமும்,—பாசமது அகல ஞானம் பற்றல்தான்-(முன்சொன்ன அடைவே ஆன்மாவானவன்) பாசமானதுவிட்டுப்போகப் பரஞானத்தைத் தரிசிக்கை,—பணியை நீத்தல் - அந்த ஞானத்தைக்கூடித் தன்னுடையசெயலை விடுதல்,—ஏசில் நேயத்து அழுந்தல் - (அந்தஞானத்தாலே) குற்றமற்ற சிவரூபத்தைப்பெற்று அதிலே அழுந்துதல்,—எனும் இவற்று அடங்கும் அன்றே - என்றுசொல்லப்பட்ட இவைமூன்றினுள்ளும் அடங்கும் என்க.

எனவே இம்மூன்றுதொழிலுமே அம்மூன்றுபெயரு மென்பதாம். ஒன்றனுளொன்றடங்குமென்பதன்று. அகலப்பற்றலென்பது 'கோழிகூவப்பொழுதுவிடிந்தது' என்ருற்போனின்றது. பணியை நீத்தல் ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகளை விடுத்தலென்பாருமுளர். தான் ஈண்டுப்பெயர்.

இது எட்டும் ஒன்பதும் பத்துமான சூத்திரங்களின் பொருளான அதன்பயனை ஆன்மதரிசனம் ஆன்மசுத்தி ஆன்மலாபமென மூன்ருக்கி அம் மூன்றினை வகுத்துணர்த்திற்று. (க)

ஆன்மதரிசனம்.

தன்னறி வதனு லேதுந் தனக்கறி வில்லை யேனுந்
தன்னறி வாக வெல்லாந் தனித்தனி பயன ருந்துந்
தன்னறி வறியுந் தன்மை தன்னுலே தனைய றிந்தாற்
றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே.

(இ-ள்.) தன்னறிவதனுல் ஏதுந் தனக்கு அறிவு இல்லையேனும் - ஆன்மாத்தன்னுடைய ஞானத்தால்(ஒன்றையறிதற்குச்)சிறிதுந்தனக்கறிவில்லை

யாயினும்,—தன்னறிவாக - தன்னுடையஞானத்தினலேயறிந்து புசிக்கின்றவனுக,—தனித்தனி பயன் எல்லாம் அருந்தும்-தனித்தனியே பயன்களெல்லாவற்றையும் புசியாநிற்பன்,—தன்னறிவு அறியுந்தன்மை - ஆன்மஞானத்தால் அறியுமுறைமை,—தன்னாலே தனை அறிந்தால் தன்னையுந் தானே காணும் - தனக்குப்பிராணனாய் நிற்கிற ஞானத்தினலே அந்தஞானத்தைத் தரிசித்தால் தன்னையும் (அவ்விடத்திலேதானே) காணநிற்கும் (தன்னைத்தானே காணவல்லதோ வெனில்),—தான் அதுவாகி நின்றே - தான் அந்த ஞானமாய் நிற்கையால் என்க.

நிற்றலான் நின்றெனத்திரிந்துநின்றது. தன்னாலே தனையறிந்தாலென்பதற்கு ஆன்மசிற்சத்தியாலே தன்னையறிந்தாலெனிற்குற்றமென்னை? அஃது இவ்வாசிரியர் கருத்தன்று. அது சித்தியாரிற் "சூரியகாந்தக்கல்லினிடத்தே" என்னுந்திருவிருத்தத்திற்காண்க. அன்றியும் "ஞானநாட்டம்பெற்றபின்யானு-நின்பெருந்தன்மையுங்கண்டேன்சாண்டலு - மென்னையுங்கண்டேன்" என்னும் பட்டினத்துப்பிள்ளையார் திருவாக்கானுமறிக.

இது அருளாலே அருளைத்தரிசித்தபின் தன்னைத்தரிசிக்கலாமென்பதுணர்த்திற்று.()

தத்துவ மான வற்றின் றன்மைக ளுணருங் காலை
வுய்த்தறிந் திடவு திப்ப தொளிவளர் ஞான மாகு
மத்தன்மை யறியு மாறு மகன்றிட வதுவா யான்மாச்
சுத்தமாஞ் சுத்த ஞானத் தொருமுத றோன்று மன்றே.

(இ-ள்.) தத்துவமான வற்றின் தன்மைகள் உணருங் காலை-தத்துவங்களை நீங்குதற்பொருட்டாக அவற்றினுண்மைகளை ஆராயுமிடத்து,—உய்த்து அறிந்திட உதிப்பது ஒளிவளர் ஞானமாகும் - அவைகளிலே தனித்தனிதன்புத்தியைச்செலுத்தி அவற்றினுண்மையை ஆராய்ந்து பார்க்கவே (நிலைபெற்றபொருளாய்த்தோன்றுவது) பிரகாசத்தையுடையஞானமேயாம்,—அத்தன்மைஅறியுமாறும் அகன்றிட-அப்படி அறிகின்றமுறைமையும் விட்டு நீங்க,—அதுவாய் ஆன்மாச் சுத்தமாம் - அந்தஞானந்தானேயாய் ஆன்மாச்சுத்தமாம்,—சுத்தஞானத்து ஒருமுதல் தோன்றும் அன்றே - (அப்பொழுதே) அந்தஞானத்துக்கு முதலாகிய ஞேயந்தோன்றும் என்க.

இது அந்தவருள் ஆன்மாவுக்குத்தோன்றுமுறைமையும் அவன் சுத்தனுமுறைமையும் பணியறநின்றகாலத்தின் ஞேயந்தோன்றுமென்பதூஉமுணர்த்திற்று. (௩)

உறைதரு முணர்வு மன்றி யதன்முத லுள்ள தென்றிங்
கறைவதென் னென்னி லண்ண லருளெனு மதுவே யன்றி
நிறையொளி முதலதன்றி நின்றிடா நிமல னாகு
மிறையவன் முதல வன்ற னிலங்கருள் சத்தி யாமே.

(இ-ள்.) உறைதரும் உணர்வும் அன்றி அதன் முதல் உள்ளதென்று இங்கு அறைவதென்னென்னில் - (தன்னிடத்திலே)பொருந்திய ஞானமுமல்லாமல் அதற்குமுதலாகிய ஞேயமுமுண்டென்று இவ்விடத்துச்சொல்லுகின்றதென்னையென்றுகேட்கில்,—அதுவே அண்ணல் அருள் எனும் - அந்தஞானமே சிவனுடைய அருளென்று சொல்லப்படும்,—அன்றி - அல்லது,—நிறை ஒளி முதலது அன்றி நின்றிடா - நிறைந்தபிரகாசமானது

ஆதித்தனையொழிந்து நில்லாததுபோல (ஞானமும் ஞேயத்தையன்றிநில்லாது),—நிமலனாகும் இறைவன் முதல் இலங்கு அருள் அவன்றன் சத்தியாமே - (ஆனால் அந்தஞானமேது ஞேயமேதென்னின்) நின்மலனாகிய சிவனே ஞேயமாகியமுதல் (அவனிடத்து) விளங்கிய அருளாகிய ஞானம் அவனுடைய சத்தியாம் என்க.

ஒளி நின்றிடாவென்பது பன்மை யொருமை மயக்கம்.

இது அப்படிக் காட்டா நின்ற ஞானமேயன்றி வேறுஞேயமில்லை யென்னுஞ் சங்கிராந்தவாதியை மறுத்துணர்த்திற்று. (௪)

சுத்தமாஞ் சத்தி ஞானச் சுடராகுஞ் சிவமொ ழிந்தச்
சத்திதா னின்று முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி
யத்தனை யருளுமெங்கு மடைந்திடு மிருள கற்றி
வைத்திடுமிரவி காட்டும் வளரொளி போன்ம கிழ்ந்தே.

(இ-ள்.) சுத்தமாஞ் சத்தி ஞானச் சுடராகும் - நின்மலமான அந்தச் சத்தி ஞானப்பிரகாசமா யிருக்கும்,—அச்சத்திதான் சிவம் ஒழிந்து இன்றாம் - அதுதான் சிவத்தையொழிந்து தனித்தொருமுதலாகமாட்டாது (ஆனால் அந்தச் சிவமே அமையாதோ சத்தியாற்பயனென்னையெனின்),—முன்னைத் தகவு இலா மலங்கள் வாட்டி அத்தனை அருளும்-(அந்தச்சத்தி) அநாதியிலே மயக்கிநின்றமலங்களைப்போக்கித் தனக்குமுதலாகிய சிவனைக் காட்டும்,—எங்கும் அடைந்திடும் இருள் அகற்றி வைத்திடும் இரவிகாட்டும் வளர் ஒளிபோல் மகிழ்ந்தே - எங்குஞ்செறிந்துநிற்கும் அந்தகாரத்தையோட்டி (த்தனக்கு முதலாக) வைத்துச் சொல்லப்பட்ட ஆதித்தனைக் காட்டும் பெரிய பிரகாசத்தைப்போல மகிழ்ந்து என்க.

ஒளிபோலமகிழ்ந்தத்தனையருளுமெனமாறியுரைக்க.

இது பின்னும் அந்த ஞானமாகிய வருளாற்பயனின்றேவென வினவ அதன் சொரூபஞ் சிவத்துடன் வேறின்மையும் அதனாற் பிரயோசனமுமுணர்த்திற்று. (டு)

எட்டாஞ் சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - உடு.

---

## ஒன்பதாஞ்சூத்திரம்.

இதுமுதல் "அடைபவர்சிவமேயாகும்" என்னுஞ் செய்யுளீறாகிய நான்கு திருவிருத்தங்களாலும் ஒன்பதாஞ்சூத்திர முணர்த்துவானெடுத்துக்கொண்டார்.

ஆன்மசுத்தி.

புகலரு மசத்தர் தம்பாற் பொருந்திய வலகை யேபோ
லகிலமு முணரு மீச னருளுயிர் மேவ லாலே
சகலமு நிகழ வேண்டுந் தலைவனைத் தொழிலுந் தானே
யிகலற வியற்றல் வேண்டு மென்றது நன்றி யின்றே.

(இ-ள்.) புகல் அரும் சத்தர் தம்பாற் பொருந்திய அலகையேபோல்- சொல்லுதற்கரிய அஞ்ஞானிகளிடத்திலேபொருந்திய பிசாசு (தன்வசமாக்

கிக்கொள்ள அவரும் அந்தப்பிசாசாய் நின்றாற்) போல,—அகிலமும் உணரும் ஈசன் அருள் உயிர் மேவலாலே-சகலத்தையுமறிகின்றசிவனுடையஞானம் ஆன்மாவிலே பொருந்துகையினலே,—சகலமும் நிகழவேண்டும் - சர்வமும் இவனுளத்து நிகழவேண்டும் (அஃதன்றி),—தலைவன் ஐந்தொழிலுந்தானே - கருத்தா நடத்தப்பட்ட பஞ்சகிர்த்தியங்களையுந்தானே;—இகல் அற இயற்றல் வேண்டும்-மாறுபாடற நடத்தவேண்டும்,—என்றது நன்றியின்றே - என்றுசொன்னவிது நன்மையுடைத்தன்று என்க.

நிகழ்த்தல் ஈண்டறிதல்.

இது முற்றுணர்வான அந்தச்சிவஞானத்தைப் பெற்றவர்கள் சிவனைப்போலப் பஞ்சகிருத்தியம்பண்ணவேண்டுமென்னுஞ் சிவசமவாதியை மறுத்துணர்த்திற்று. (க)

இன்றுநோக் குரைந டக்கு மியல்பிலோர்க் கிளைய வாய்ந்து
நின்றதோ ரலகை சேர்ந்தா னிகழ்வதெ னதுபோ லுள்ளத்
தொன்றிய வுணர்வு தம்பா லுள்ளது நிகழ்த்து மீசன்
றன்றொழி னடாத்து மேனி தனக்கெனக் கொண்டு தானே.

(இ-ள்.) இன்று நோக்கு உரை நடக்கும் இயல்பு இலோர்க்கு-இப்போது கண்ணும் வாக்குங்கமனக்கிரியையுமில்லாக்குருட்டூமைமுடவனிடத்திலே,—இளைய வாய்ந்து நின்றதோர் அலகை நேர்ந்தால் நிகழ்வதென் - இவையெல்லாஞ் சீவித்து நிற்கின்றதொரு பிசாசு பொருந்தினல் (அவனுக்குக் கண்தெரியுமோசொல்வழங்குமோநடைவருமோ) இல்லையே,—அதுபோல் உள்ளத்து ஒன்றிய உணர்வு தம்பால் உள்ளது நிகழ்த்தும் - அத்தன்மை போல ஆன்மாவிடத்திலே பொருந்தியஞானத்து அவ்வான்மா பிரயோசனமான சிவத்தைவிரும்ப,—மற்று அத்தன்மையது ஆகுந்தானே - அங்குள்ளதையே உண்டாக்கிவிடும்,—ஈசன் தனக்கென மேனி தானே கொண்டு தன்தொழில் நடாத்தும்-பரமசிவன் தனக்குப்பொருந்திய திருமேனியைத் தானே கொண்டு தனக்கு முறைமையான பஞ்சகிருத்தியத்தை நடத்தா நிற்பன் என்க.

முன்னர் நிறுத்திடுவனிணைந்தவுருவென்றதுமிது.

இது அந்தமுத்தான்மாக்களியல்புஞ் சிவனியல்புமுணர்த்திற்று. (உ)

இந்நிலை தன்னின் மன்னி யெய்திடுங் கலாதி போதந்
தன்னள வறிந்து நிற்குந் தகவிலா மலங்க ணீத்த
வந்நிலை கரண மாகா வகையதி லறிவ டங்கி
மன்னிட வியாபி யாய வான்பயன் றோன்று மன்றே.

(இ-ள்.) இந்நிலைதன்னில் மன்னி - (ஆசிரியனுபதேசித்த)இந்தமார்க்கத்திலே நிலைபெற்று,— எய்திடுங் கலாதிபோதம் - (ஆணவமலத்தை நீக்குதல் காரணமாகப்) பொருந்தினகலாதிகளாலே(எழுப்பப்பட்ட தன்னுடைய) இச்சாஞானக்கிரியைகளையும்,—தன் அளவு - (அவற்றைக்கொண்டறியுந்) தன்னுண்மையையும்,—நிற்குந் தகவு இலா மலங்கள் அறிந்து - (தன்னை அநாதியேபொருந்தி)மயக்கத்தைச்செய்து நிற்கின்ற மலங்களினுடைய தன்மையையும்,— (அருட்கண்ணாற்) கண்டு நீத்த அந்நிலை - நீங்கிய அந்நிலையிலே,—கரணம் ஆகாவகை அறிவு அடங்கி அதில் மன்னிட -

இச்சாஞானக்கிரியைகள் கூடாமல் ஆன்மா ஞாதிருவென்கின்ற தன்மையொழிந்து வேறின்றி அருளிலே நிலைபெற்றிட,—வியாபியா யவான்பயன் தோன்றும் அன்றே - (அப்பொழுதே) எங்குமொழிவற நிறைந்து நிற்கும் பெரிய பயனாகிய தற்காட்சிதோன்றும் என்க.

ஞேயந்தோன்று மென்பாருமுளர். அது முன்சுத்தஞானத்தொருமுதலேன்று மென்றதனானும் இனிவருஞ்செய்யுளின் பொருளாலும் பொருந்தாது.

இது அங்ஙனமாயின் இந்த வான்மசுத்தியிற்பயனேதென்று வினவியதற்கு உத்தரமுணர்த்திற்று. (ங)

அடைபவர் சிவமே யாகு மதுவன்றித் தோன்று மென்ற
கடனதே தென்னின் முன்னங் கண்டிடார் தன்மை பின்னுந்
தொடர்வரு மருளினாலுந் தோன்றுமா காணா ராயி
னுடையவ னடிசேர் ஞான முணர்தலின் றணைத லின்றே.

(இ-ள்.) அடைபவர் சிவமேயாகும் அதுவன்றித் தோன்றுமென்ற கடனதேதென்னில் - (சிவஞானத்தை) அடைந்தவர் சிவமாய் விடுதலேயன்றி (அவ்விடத்து மற்றுமொருபயன்) தோன்றுமென்ற முறைமையென்னையென் றுஐக்கவாதியுஞ் சிவாத்துவிதியுஞ்சொல்லில்,—முன்னம்தம்மைக் கண்டிடார் - முன்பே (மலமாயாகன்மங்களுடனேகூடித் தேகாதிகளைத் தாமென்றபிமானம் பண்ணித்) தம்மைக்காணார்கள்,—பின்னுந் தொடர்வு அரும் அருளினாலுந் தோன்றுமா காணாராயின்-(அனுக்கிரகம்பெற்ற) பின்புங் கிட்டுதற்கரிய இந்த ஞானத்தாலுந் தம்மைத்தோன்றும்படி காணாராயின்,—உடையவன் அடிசேர்ஞானம் உணர்தல் இன்று அணைதல் இன்றே- கருத்தன்றிருவடியாகிய ஞேயத்தைச் சேர்தற்குக் காரணமான அவன் ஞானத்தை அறிதலுங்கூடாது (அறியாமையாலே) திருவடியைக் கூடுதலும் இல்லை என்க.

இது அப்படி ஞானத்தையடைந்தவர்கள் ஞேயமான சிவமாவதேயன்றி வேறுமொருபயன்றோன்று மென்பதென்னை யென்பாரை மறுத்துணர்த்திற்று. (ச)

ஒன்பதாஞ்சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - உக.

---

## பத்தாஞ்சூத்திரம்.

---

இதுமுதல் "எல்லையிற்பிறவி" என்னுஞ் செய்யுளீறாகிய பத்து திருவிருத்தங்களாலும் பத்தாஞ்சூத்திர முணர்த்துவானெடுத்துக்கொண்டார்.

ஆன்மலாபம்.

பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றாமே தோன்றி நின்ற
சிற்பர மதனை யுள்ள செயலறுத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.

(இ-ள்.) பொற்பு உறு கருவி யாவும் புணராமே - பொலிவினையுடைய கருவிகள் முப்பத்தாறும்பொருந்தி விகற்பியாமல்,—அறிவிலாமைச்சொற்

பெறும் அதீதம் வந்து தோன்றுமே-அறிவில்லாமையையுடையதென்னுஞ் சொல்லைப்பெறுகின்ற அதீதம் வந்துகூடி மயங்காமல்,—தோன்றி நின்ற சிற்பரமதனுல் உள்ளச்செயல் அறுத்திட - (தன்னிடத்திலே) பிரகாசித்து நிலைபெற்ற மேலான ஞானசத்தியாலே ஆன்மாவின் செயலாகிய அகம்பிரமஞானத்தை அறுத்திட,—தற்பரம் உதிக்கும் - (அப்பொழுதே) அந்த மேலாகிய சிவம் பிரகாசியாநிற்கும்,—ஆகி நிற்றல் சாக்கிராதீதந்தானே - (அங்ஙனம் அந்தச் சிவன்தானே) ஆய் (ஆகாயத்தில் வாயுத்தம்பித்தாற் போலவும் அப்புவில் உப்புப்போலவும் ஏகீபாவம் பிறந்து) நிற்றலே சாக்கிராதீதம் என்க.

உள்ளம் ஆன்மா. உள்ளசெயலென்று பாடமாக்கிக் காட்டுந்தன்மையாகிய ஞானசத்தியின்செயலுங்காணுந்தன்மையாகிய தன்செயலுமவிழவிருக்கவென்பாரும், தன்னுடைய இச்சாஞானக்கிரியை யடங்கலேயுமொழிக்கவென்பாருமுளர்.

இது அந்தஞேயமான சிவத்துடனேகூடி யனுபவிக்குமுறைமையுணர்த்திற்று.(௧)

ஒடுங்கிடா கரணந் தானே யொடுங்குமா றுணர்ந்தொ டுக்க
வொடுங்கிடு மென்னி னின்ற தொடுங்கிடா கரண மெல்லா
மொடுங்கிட வொடுங்க வுள்ள வுணர்வுதா னொழியும் வேறா
யொடுங்கிடி னன்றி மற்ற வுண்மையை யுணரொ ணாதே.

(இ-ள்.) கரணந்தானே ஒடுங்கிடா - தத்துவங்கள் (சடமாகையாலே) தாமே ஒடுங்கமாட்டா,—ஒடுங்குமாறு உணர்ந்து ஒடுக்க ஒடுங்கிடுமென்னின் - ஒடுங்குமுறைமையை (நான்) அறிந்தொடுக்க (அவை) ஒடுங்குமென்றுசொல்லின்,—நின்றது ஒடுங்கிடா - (நீ அறிந்தொடுக்குதலின் உன்னுடைய இச்சாஞானக்கிரியைகளாய்) நிலைபெற்ற சத்தி ஒடுங்காது (ஆகவே அவையுமொடுங்கா),—கரணமெல்லாம் ஒடுங்கிட ஒடுங்க உள்ள உணர்வுதான் ஒழியும் - கரணமெல்லாம் ஒடுங்கும்படி நான் ஒடுங்குவேனென்று நீசொல்லின் உனக்குள்ள அறிவுங்கெடும் (ஆனாற் கரணங்களை ஒடுக்கிச் சிவனைத் தரிசிக்கும்படி எப்படியென்னின்),—வேறாய் ஒடுங்கிடின் அன்றி மற்ற உண்மையை உணர ஒணாதே - (அத்தத்துவங்கள்) அந்நியமாக (உனக்குத் தரிசனமான ஞானத்திலே உன்றன்மை சீவியாதபடி) ஒடுங்கி (அந்த ஞானமயமாய்) நின்றாலொழிந்து அச்சிவத்தைத் தரிசிக்கவொண்ணாது என்க.

இழிவுசிறப்பும்மை தொக்கது. மற்று அசை. நின்றதொடுங்கிடா வென்பது ஒருமைப்பன்மை மயக்கம்.

இது கருவிகள்தாமே யொடுங்குதலோ அடியேனறிந் தொடுக்குதலோ பயனென்று மாணாக்கன் வினவ அவற்றை மறுத்துப் பாசஞானம் போனாலன்றிச் சிவனை அறியவொண்ணாதென்பதுணர்த்திற்று. (௨)

பற்றிடுங் கருவி யாவும் படர்ந்துணர் வளிக்குங் காலை
யுற்றறிந் திடுவ தொன்றி னுணர்வினி னுண்மை யாகு
மற்றது பகல்வி ளக்கின் மாய்ந்திட வருவ துண்டேற்
பெற்றிடு மதனை மாயப் பிறப்பினை யறுக்க லாமே.

(இ-ள்.) பற்றிடுங் கருவி யாவும் படர்ந்து - உணர்வு அளிக்குங் காலே (விடயங்களைப்)பொருந்திநிற்குங் கருவிகளெல்லாம் விரிந்து(ஆன்மாவுக்கு) அறிவைக்கொடுக்குங்காலத்து,—ஒன்றின் உற்று அறிந்திடுவது உணர்வினின் உண்மையாகும் - ஒருவிடயத்திலேபொருந்தி (இதுவென்று சுட்டி) அறிகின்றது ஆன்மாவினுடைய அறிவின் செய்தியாகும்,—மற்று அநு பகல்விளக்கின்மாய்ந்திடவருவதுஉண்டேல்-அந்தத்தத்துவங்களெல்லாஞ் (சாக்கிரத்திலே நிற்கையிலே அவைகளிற்றாக்காமல் அருளைப்பொருந்தி) மத்தியானகாலத்தில் விளக்குப்போலத் தற்போதஞ்சீவியாமனிற்குமுறைமை கூடுமாயின்,—அதனைப் பெற்றிடும் - (அப்போது) அந்தஞேயமான சிவத்தைப்பெறும்,—மாயப் பிறப்பினை அறுக்கலாமே - (பெறவே) மயக்கத்தைச்செய்யும் பிறவியை அறுக்கலாம் என்க.

ஒன்றினுற்றறிந்திடுவதென மாறுக. ஒரான்மாவினுடைய வென்றுமாம்.

இது பசுஞானத்தாலுங் கூடவொண்ணு முறைமையை அறிவித்தற்கு அப்பசுபோதத்தினுண்மைத்தன்மையும் அப்போதம் இப்படியானுலொழிந்து ஞேயத்தைப் பெறவொண்ணுமென்பதூஉமுணர்த்திற்று. (௩)

முந்திய வொருமை யாலே மொழிந்தவை கேட்டல் கேட்டல்
சிந்தனை செய்த லுண்மை தெளிந்திட லதுதா னாக
வந்தவா றெய்த நிட்டை மருவுத லென்று நான்கா
மிந்தவா றடைந்தோர் முத்தி யெய்திய வியல்பி னோரே.

(இ-ள்.) முந்திய ஒருமையாலே மொழிந்தவை கேட்டல்-முற்சென னங்களிற் (செய்த சரியை முதலியவற்றின் முற்றுதலுண்டான)ஒருமைப் பாட்டினாலே (ஆசிரியனுபதேசித்த) உபதேசங்களைக் கேட்டல்,—கேட்டல் சிந்தனைசெய்தல் -கேட்டபொருளைச் சிந்தித்துப்பார்க்கை,—உண்மை தெளிந்திடல் - (அந்தப்பொருளி னுண்மையைத்)தெளிய அறிதல்,—அது தானாக வந்த ஆறு எய்த நிட்டை மருவுதல்-அந்தச்சிவந் தானாகவேண்டி (ஆசிரியனால்) வந்த வுபதேசத்தின்வழியைப்பொருந்த நிட்டைபொருந்துதல்,—என்று நான்காம் - என்றுநாலுவிதமாம் (அந்தச்சிவத்தைப்பெறுமுறைமை),—இந்தவாறு அடைந்தோர் முத்தி எய்திய இயல்பினோரே - இந்தப்படி நிட்டைகூடினவர்கள் முத்தியைப்பெற்ற முறைமையினையுடையோர் என்க.

இந்தக்கேட்டன்முதலிய நான்கும் ஞானத்திற்சரியைமுதலிய நாலுபாதமுமாம். இவற்றுட்கேட்டல் கேட்டுப்பற்றுதலான் நின்மலசாக்கிரமும் நின்மலசொப்பனமுமாம். சிந்தித்தல் சிந்தனுமாத்திரமாதலின் நின்மலசுழுத்தியாம். தெளிதல் தெளிந்தருளுடன்கூடி நிற்றலின் நின்மலதுரியமாம். நிட்டை அதுதானுக இரண்டறக்கலத்தலின் நின்மலவதீதமாம். இந்தவடைவிலே நின்றோர் அந்தந்தவளவிலே தேகாந்தமானவிடத்துச் சுத்தத்திற் சாலோகாதிகளை முறைமையிலே அடைவர்கள். "கேட்டலுடன் சிந்தித்த றெளிதனிட்டை" என் னுஞ் சிவஞானசித்தியாலுங்காண்க.

இது அந்தப்பாசபசுஞானங்களிற் கூடாமல் அந்தச்சிவத்தைப்பெறுமுறைமை எந்தமுறைமையென்றுவினவ அதற்குத்தரமுணர்த்திற்று. (௪)

பாசமா ஞானத் தாலும் படர் பசு ஞானத் தாலு
மீசனை யறிய வொண்ணு திறையருண் ஞான நண்ணித்

தேசுறு மதனுன் முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டுயர்ப ரத்து நிற்பது ஞான நிட்டை.

(இ-ள்.) பாசமாம் ஞானத்தாலும் படர் பசு ஞானத்தாலும் ஈசனை அறிய ஒண்ணுது - நாதாந்தமான பாசஞானத்தாலும் (இவை நீங்கின விடத்து) விரிந்த அகம்பிரமமென்னும் பசுஞானத்தாலுஞ் சிவனை அறியக் கூடாது,—இறை அருண் ஞானம் நண்ணித் தேசு உறு மதனுல் - சிவனுடைய அருண்ஞானத்தைப்பொருந்தி (அது காரணமாகத்தற்காட்சி) விளக்கமுற்ற தன்மையினுலே,—முன்னைச் சிற்றறிவு ஒழிந்து-பழைய சிற்றறிவைவிட்டு (அகம்பிரமஞானமன்றி) சேர்ந்து,—(திருவருளிலே) பொருந்தி நேசமோடு உயர் பரத்து நிற்பது ஞானநிட்டை-அன்புடன் (அதற்கு) மேலான சிவத்திலே (கூடிமுன்சொன்னபடியே) நிற்பது ஞானநிட்டையாம் என்க.

நண்ணியென்பது பிறவினைகொண்டது. இந்தநிட்டை தீவிரதரசத்திநிபாதரான வுத்தமர்நிற்குநிலை.

இது பதிஞானத்தாலன்றி அவனையறிதல் அரிதென்பதூஉம் நிட்டையின் சொரூபமுமுணர்த்திற்று. (ரு)

விளம்பிய வகையி னிட்டை மேவிட லரிதேன் முன்ன
மளந்தறி வளித்த வற்றி னளவுமற் றவற்றி னுலே
யுளங்கொளுந் தனையு முள்ள படியுமுற் றுணர்ந்து செவ்வே
தளர்ந்திடா துவப்ப மற்றத் தன்மைய தாகுந் தானே.

(இ-ள்.) விளம்பிய வகையின் நிட்டை மேவிடல் அரிதேல் - முன் சொன்னமுறைமையிலே நிட்டைகூடுதல் அரிதாயின்,—முன்னம்அளந்து உணர்வு அளித்து அவற்றின் அளவும் - முன்பு (அதுவிதுவென்று சுட்டி) வரையறுத்தறிவித்து அத்தத்துவங்களின் பிரமாணங்களையும்,—மற்று அவற்றினுலே உளங்கொளுந் தனையும் - அந்தத்தத்துவங்களினுலே (அறிந்து) புசிக்கின்றதன்னையும்,—உள்ளபடியும் - (தனக்குச் சிவனையன்றிச் சேட்டையில்லையென்னு) முண்மையினையும்,—உற்று உணர்ந்து - (அந்தஞானத்திலே) நிலைபெற்று நின்றறிந்து,—செவ்வே தளர்ந்திடாது உவப்ப - (கேட்டன்முதலிய மூன்றனைப்பிபாசத்தினுலே மயக்கவிகற்பங்களை) ச்செய்யாது கிரமத்திலே அந்த ஞானமேயாய் (த்தனக்குப்பிரயோசனமான சிவத்தை) விரும்ப,—மற்று அத்தன்மையது ஆகுந்தானே - முன்சொன்ன நிட்டையின் முறைமை (பரத்திலே) கூடும் என்க.

தன்மையதுவுமொருசொல். ஆகும் கூடும். மற்று அசை.

இது அந்த உண்மைநிட்டை கூடாதார்க்கு உபாயநிட்டையுணர்த்திற்று. (சு)

பாவிக்கின் மஹுதி வேண்டும் பயனிலை கரண நீத்துப்
பாவிப்ப னென்னி லென்ன பழுதுள பாவ கத்தாற்
பாவிக்க வொண்ணு னென்று பாவிப்ப னென்னி னீயென்
பாவிக்க வேண்டா வாண்ட பரனருள் பற்றி னேர்க்கே.

(இ-ள்.) பாவிக்கின் மனதிவேண்டும் பயன் இலை-(அந்தச்சிவத்தைநீ) தியானிக்கில் (அதற்குக்) கரணங்கள் வேண்டுங் (காணுதீதன்பாவனைக்கெட்டாமையின் உனக்குப்)பயனில்லை,—கரணம் நீத்துப் பாவிப்ப னென்னில் என்ன - கரணங்களையொழித்துத்தியானிப்பனென்னிற் (குற்றம்) என்னை,—பழுது உள - (கரணநீத்தபொழுதே) மலமறைக்கும்,—பாவகத்தாற்பாவிக்க ஒண்ணுனென்று பாவிப்பனென்னின் நீ என்-தியானத்தாற்றியானிக்கப்படானென்று தியானிப்பானென்றுசொல்லிற் (பாவாபாவமிரண்டினுங்கூடிநிற்கின்ற உன்னுடைய போதம் அவ்விடத்திற்) சீவிப்பதென்னை,—ஆண்ட பரன் அருள்பற்றினோர்க்குப் பாவிக்கவேண்டா - தம்மையாண்ட சிவனருள்பொருந்தினவர்கட்குப் பாவிக்கவேண்டா என்க.

எனவே பாவாபாவமிரண்டும் வேண்டாவென்பதாம். நீயென்னென்பதற்கு நீவேண்டுமோ வென்னினுமாம்.

இது அப்படிப்பாவிப்பதேவென்றுவினவியமாணுக்கனுக்குத்தரமுணர்த்திற்று.

ஒன்றிரண் டாகி யொன்றி னொருமையா மிருமை யாகி
யொன்றிலொன் றழியு மொன்று தென்னினொன் றாகா தீயி
னொன்றிரும் புறழி னின்று முயிரினைந் தொழி லும் வேண்டு
மொன்றிநின் றுணரு முண்மைக் குவமையாணவத்தொ டொன்றே.

(இ-ள்.) ஒன்று இரண்டாகி ஒன்றின் ஒருமையாம் - கடோபாதிவசத்தால் ஆகாயமானதிரண்டாய் நின்றாற்போலவும் பலபாத்திரங்களிலுள்ள சலோபாதிவசத்தால் ஒருசந்திரன் பலவாய்த்தோன்றினாற்போலவும் அகண்டபரிபூரணமாயிருக்கின்ற பரப்பிரமந்தானே மாயாகாரியங்களாகவிருக்கிற தேகோபாதிகளோடுஞ் சீவபேதத்தையடைந்து பெத்த நீங்கி முத்தியின்கண் அந்தக்கடமும் பாத்திரங்களும் பின்னமாயுள்ளளவிற் கடாகாயமு மகாகாயமுமொன்றாய் நின்றாற்போலவும் பலவாகத்தோன்றின சந்திரப்பிரதிபிம்பங்கள்போயொன்றாய் நின்றாற்போலவும் மகத்துக்களையாசிரயித்து வேதாந்தசிரவணஞ்செய்து அதனன் முன்னுண்டான மாயோபாதிநீங்கிற் சிவனேபிரமமென்னு மாயாவாதி ஒருபொருளிரண்டாய்ப்பின்னொன்றுமென்னிற் சீவபரமிரண்டிற்குங் குணமொன்றாயிருத்தல் வேண்டும் அன்றியும் இப்படியிருப்பதொன்றுக்கு மாயோபாதிகளிலே நின்று சுகதுக்கப்படவும் அவை நீங்குதற்கு மகத்துக்களைச்சேர்ந்து வேதாந்தங்கேட்கவும் வேண்டும் அன்றியும் சாயுச்சியவின்பம் பெற்றாலும் பின்பு செனனமுண்டாதல் வேண்டும் ஆதலால் இந்த மாயாவாதி ஏகான்மவாதமுமடாது இனி அக்கினியினின்றும் பலபொறிகளும் புகையுந் தோன்றினாற்போல அநாதியாயிருக்கிற சிவந்தானே பிரபஞ்சகாரணமாய்ச் சடசத்தியாயிருக்கிற மாயைமாமாயைகளையும் ஆன்மாக்களையும்பகுத்துத் தன்னிடத்தினின்றுந் தோற்றுவித்து அந்தமாயையினாலேபிரபஞ்சத்தைப் படைத்துச்சராசரபேதமான எண்பத்துநான்குநூறாயிரபேதயோனிகடோறுநின்றுவிளையாடிப்பெத்தநீங்கினமுத்தியின்கண்கன்மசமத்துவமும்சத்திநிபாதமுமுண்டானவளவிற் சற்குருவையடைந்து சாம்பவிதீட்சைபெற்றுக் குருபதேசத்தாலே செகத்தடங்கலையுஞ் சிவமாகவறிந்து பேறு மிழவும் பெறுவானும் ஈவோனும் வேறில்லையென்றுகருதிச் சீவனே சிவன்

சிவனேசிவனென்று பேதாபேதங்கொண்டிருக்கைமோட்சமென்று சிவாத்துவிதிசொல்லிற் சித்தாயிருக்கிற சிவனிடத்திலே அசித்தாயிருக்கிற மாயைதோன்றுது சிவனிடத்திலே ஆன்மாக்கள்தோன்றிற்கடாதிகளைப்போன்று மூர்த்தமாயழியும் பேறுமிழவும் பெறுவானு மீவானும் வேறில்லையெனில் ஆசிரியனையடைந்துபெற்ற மோட்சத்தாலொரு பிரயோசனமுமில்லையாம் ஆதலில் அவன்மதமும்,—இருமையாகி ஒன்றில் ஒன்று அழியும் - அநாதியிலே ஆன்மாவுஞ் சிவமும் வேறுயிருந்து முத்தியிலே நீரினீரும் பாலிற்பாலு நெய்யினெய்யுங் கலந்தாற்போல ஒன்றுமென்று ஐக்கவாதிசொல்லில் அநாதியிலே வேறுயிருந்த முதலிரண்டில் ஒன்றழியும் ஆகையால் அவன் சித்தாந்தமுமடாது,—ஒன்றுதென்னின் ஒன்றுகா- சிவனும் ஆன்மாவும் முத்தியிலுமொன்றுது பேதமாயிருக்குமென்று பேதவாதிசொல்லிற் சாயுச்சியமென்பது மின்றிச் சிவனைப்பெற்றதூஉ மில்லையாம் ஆகையால் அதுவுமடாது,—தீயின் ஒன்றுஇரும்பு உறழின் இன்றும்- தீயிற்சேர்ந்தவிரும்பு தீயானுற்போல் ஆன்மாவுஞ் சிவத்துடனே கூடிச் சிவமாமென்று சங்கிராந்தவாதிசொல்லில் ஆன்மாவுக்கங்ஙனமாந்தன்மையில்லை அஃதெங்ஙனமென்னின்,—உயிரின் ஐந்தொழிலும் வேண்டும் - தனக்குப்பிராணுயிருக்கின்ற கர்த்தனுடைய தலைமைபோல் இவனும் பஞ்சகிர்த்தியமு நடத்தல்வேண்டும் நடத்தில் அவனுடைய தலைமைகெடும் அன்றியுந் தீயைச்சேர்ந்த விரும்பு தீசெய்யுந்தொழிலைச் செய்யாது இரும்பைச்சேர்ந்த தீயேதகிக்கும் ஆதலின் அப்படிச்சொல்லுஞ் சங்கிராந்திவாதமுமடாது,—ஒன்றிநின்று உணரும் உண்மைக்கு உவமைஆணவத்தொடு ஒன்றே - (ஆன்மாசிவனுடனே) ஏகிபவித்துத் தான்கெடாமனின்று பரமானந்தத்தை அநுபவிக்குமுண்மைக்குவமை (முன்பு இவன்) ஆணவத்தோடுகூடி அதுவாகவேயிருந்த தன்மையாம் என்க.

ஒன்றென்பது முதனிலைவினை யீண்டுப்பெயராய் நின்றது. ஏகாரம் தேற்றம். கருவிகளெல்லாங்கழன்றகேவலத்திலே ஆணவமலத்தை இவன்சென்று கூடாமல் அதுவு மிவனைவந்துபொருந்தாமல் ஆன்மாத்தான் கெடாமல் அந்தமலத்தை யிதுவென்று சுட்டிக்காணுமல் அதுவுந்தானும் ஒன்றுகாமலிரண்டாகாம லொன்றுமிரண்டுமின்றுகாமலிருக்குந் தன்மைபோலா மென்பதாயிற்று; இன்னும் இதனுண்மைகளைக் குருமுகத்தான்அறிக. உவமை ஏகதேசமெனக்கொள்க.

இது அபேதமுதலியவற்றைமறுத்து ஆன்மாவுஞ் சிவமும் ஐக்கமானசாயுச்சியத்தினிலைமையுணர்த்திற்று. (அ)

அழிந்திடும் பாசமென்னி னித்தமென் றுரைத்தல் வேண்டா
வழிந்திடா தென்னின் ஞான மடைவது கருத வேண்டா
வழிந்திடுஞ் சத்தி நித்த மழிந்திடா வொளியின் முன்னே
ரழிந்திடு மிருளு நாச மடைந்திடா மிடைந்தி டாவே.

(இ-ள்.) பாசம் அழிந்திடுமென்னின் நித்தமென்று உரைத்தல் வேண்டா - பாசமழிவாமென்னின் (மூன்றுமுதலும்) நித்தமென்று ஆகமஞ் சொல்லவேண்டுவதில்லை,—அழிந்திடாதென்னின் ஞானம் அடைவது கருதவேண்டா - அழியாதென்னின் ஞானமுண்டாமென்றுநினைக்கவேண்டா,

—(ஆனால் அழிந்ததேதென்னில்) சத்தி அழிந்திடும் நித்தம் அழிந்திடாது - (இவனுடைய போதத்தைத் தெரியாதபடி மறைக்கின்ற) காரியத்திற்கு அழிவுண்டாம் (அத்தனையொழியப் பாசத்தினுடைய அநாதித்துவத்திற்கு) அழிவில்லை (அஃதெப்படியென்னின்),—ஒளியின் முன்னர் அழிந்திடும் இருள் நாசமும் அடைந்திடா மிடைந்திடாவே - விளக்கின்முன்னில்லா விருளானது அழிந்ததுமில்லை பிரகாசத்தின்முன் னின்றதுமில்லை (அதுபோலும்) என்க.

இருளுமென்னு மும்மையை அழிதலுமிடைதலுமென மாறியுரைக்கப்பட்டது. இருளடைந்திடா வென்பன வொருமைப்பன்மைமயக்கம்.

இது இந்தப் பேறடைந்தவரிடத்து மூலமலமழியுமோவென்றுவினவ அழியாதழியு மென்பதனைத் திருட்டாந்த பூர்வமாக வுணர்த்திற்று. (௯)

எல்லையில் பிறவி நல்கு மிருவினை யெரிசேர் வித்தி
னெல்லையி னகலு மென்ற வுடற்பழ வினைக ளூட்டுந்
தொல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டே
லல்லொளி புரையு ஞானத் தழலுற வழிந்து போமே.

(இ-ள்.) எல்லை இல் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தின் ஒல்லையின் அகலும் - முடிவில்லாத செனனங்களை யுண்டாக்குவதாய்(சடத்துவாக்களிலுங் கட்டுப்பட்டுக்கிடப்பதாயிருக்கின்ற)புண்ணிய பாவங்களான சஞ்சிதகன்மத்துவஞ் (சோதனையான தீக்கையிலே ஆசிரியன் பார்வையாலே) தீசேர்ந்த வித்துப்போல விரையக்கெட்டுப்போம்,—என்ற உடற்பழவினைகள் - எடுத்த உடலுக்கடைத்த பிராத்தகன்மங்கள்,—ஊட்டும் - (அவ்வுடல்போமளவுநின்றுபுசிக்கும்படி)புசிப்பிக்கும்,—தொல்லையின்வருதல்போலத் தோன்று இருவினையது உண்டேல் - முன்புகூடுவதுபோலத் (தேகத்திற் பிரார்த்தம் புசிக்கையிலே மனுதிகளின் வாதனையாலே) தோன்றப் பட்ட ஆகாமிய முண்டாயிற்றாயின்,—ஒளி அல் புரையும் ஞானத்தழல் உற அழிந்துபோமே - விளக்கின்முன் இருட்டுப்போல ஞானக்கினியுறுதலால் (அவை) அழிந்துபோம் என்க.

இங்ஙனங் கன்மங்களில்லையாகவே மேன்மாயையுமில்லையென்பதாயிற்று.

இது மற்றைக்கன்மமு மாயையும்போம் வழியுணர்த்திற்று. (௧0)

புறனடை.

இனி இந்த ஆன்மலாபமானநிட்டைகூடாதவர்களுக்கு முற்கூறியஒன்பதாஞ்சூத்திரத்தின்பகுதியாகிய ஸ்ரீ பஞ்சாக்கரத்தை மூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

அஞ்செழுத்தருணிலை.

பந்தமா னவைய றுத்துப் பவுதிக முழலு மெல்லைச்
சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரு
மந்தமா திகளில் லாத வஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே.

(இ-ள்.) பந்தமானவை அறுத்துப் பவுதிகம் உழலுமெல்லை - (ஞான தீக்கையாலே மலத்திரய) பந்தங்களை ஆசிரியனீக்கி(யுண்மையிலே நிறுத்த இவனுக்கு) ப்பூதசம்பந்தமானது (வெந்தபடம்போலத்தோன்றி யிருக்கையிலும் குயவன்றிரிகையானது வனைகலம் வனைந்து கைவிட்டாலும் விடாது சுழலுமாறுபோல வாதனையாலே முன்புபோல) வியாபரிக்குமிடத்தில்,—இங்குத் தன்மைபோல் சந்தியாது ஒழியாது - (தானிருந்த பாத்திரமிருக்குமளவுந் தானில்லாதிருந்துந் தன்வாதனை நீங்காத) பெருங்காயத்தின்குணம்போலப்(பிரார்த்தவாதனை) தாக்காதிராது,—வினையுஞ் சாரும்- (அதனல்யானெனதென்னு மமதைகொண்டு)ஆகாமியமும்பொருந்தும்,—(போக்குமுபாயமுன்சொன்ன ஞானுக்கினியாலன்றியுமுண்டோவெனின்) அந்தம் ஆதிகள் இல்லாத அஞ்செழுத்து அருளினலே வந்தவாறு உரை செய்வாரை வாதியா பேதியாவே - (ஆயினும் மந்திரசத்தியுடையவர்கட்கு விடமுதலிய குரூரசத்திகள் தாக்காதவாறுபோல) முடிவு முதலுமில்லாத ஸ்ரீபஞ்சாக்கரத்தை ஆசிரியர் அநுக்கிரகத்தால் வந்தபடியே(அறிந்து அநுபவபூருவகமாக) உச்சரித்தவர்களை (ப்பிராரத்வ கன்மம்) வாதிக்க மாட்டா என்க.

அறுத்து அறுக்கவெனத்திரிக்க. சந்தித்தல் தாக்குதல். வந்தவாறென்பதற்குத் தோன்றினமுறை யறிந்தென்பாருமுளர்.

இது அதனையுச்சரிக்குமுறைமையி லுச்சரிக்கப் பிரார்த்த கன்மமும் ஆகாமியக்ன்மமும் வாதியாவென்ப துணர்த்திற்று. (கக)

திருவெழுத் தைந்தி லான்மாத் திரோதமா சருள்சி வஞ்சூழ்
தரநடு நின்ற தொன்றுந் தன்மையின் றென்மை யாகி
வருமந மிகுதியாலே வாசியி லாசை யின்றிக்
கருவழிச் சுழலு மாறுங் காதலார்க் கோத லாமே.

(இ-ள்.)திருவெழுத்து ஐந்தில் ஆன்மாத் திரோதம் ஆசு அருள் சிவஞ் சூழ்தர நடுநின்றது - ஸ்ரீபஞ்சாக்கரத்திலே ஆன்மவக்கரமாவது திரோதானசத்தி ஆணவமலம் அருள் சிவமாகிய அக்கரங்களுன்கும் (முன்னிரண்டும் பின்னிரண்டுமாகச்) சூழ்ந்துநிற்ப நடுவே நின்றதாயிருக்கும்,—ஒன்றுந் தன்மையின் தொன்மையாகி வரும் - (இங்ஙனம் இவ்வைந்தும்) ஒருதொடரானவியல்பினேடே பழையதாய் வாராநிற்கும்,—மநமிகுதியாலே வாசியில் ஆசையின்றிக் கருவழிச் சுழலும் - ஆன்மாக்கள் இவ்வைந்தனுள்) மலத்திரோதாயிகளுடைய மேலீட்டாலே அருளிலுஞ் சிவத்திலும் விருப்பமில்லாதிருக்கையினலே செனனங்களிலே சுழலாநிற்கும்,—மாறுங்காதலார்க்கே ஓதலாம் - (இந்தச்செனனங்கள்) தீர்தற்குக்காரணமான காதலையுடையார்க்கே (இதனுண்மையைச்) சொல்லலாம் என்க.

பிரிநிலையேகார நான்கனுருபிலேற்றப்பட்டது. இன்றி இன்ருக. வாசியிலாசையின்ருதல் நமமுதலாகவுச்சரிக்கை.அது மேற்சிவமுன்னக வோசைகொளென்பதனுலுஞ் சூழ்கின்ற நான்கனுட் டிரோதாயியை முதற்சொல்லுகையாலு மறிக. இனி ஏகாரத்தை யெதிர்மறையாக்கிக் காதலார்க்கிப்படிச்செபிக்கலாகாதென்னினுமாம்.

இது அஞ்செழுத்தாலுந் திரிபதார்த்தங்கணின்ற முறைமையும் இன்னோர்க்கு உரைக்கலாமென்பதூஉ முணர்த்திற்று. (கஉ)

ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன் னாக
வோசைகொ ளதனி னம்மே லொழித்தரு ளோங்கு மீள
வாசியை யருளு மாய மற்றது பற்று வுற்றிங்
கீசனி லேக மாகு மிதுதிரு வெழுத்தி னீடே.

(இ-ள்.) ஆசு உறு திரோதம் மேவாது அகலுமா சிவம் முன்னாக ஓசை கொள் - ஆணவமும் (அதன்வழியே) பொருந்தின திரோதாயியும் (உன்னைப்) பொருந்தாமல் விட்டுநீங்கும்படி சிவமுதலாகச் செபிப்பாயாக,— அதனின் - அங்ஙனஞ் செபித்ததனாலே,—நம் மீள மேல் ஒழித்து அருள் ஓங்கும் - நகாரமான திரோதானசத்திதானே திரும்பமேலானமகாரமாய மலத்தைப்போக்கி அநுக்கிரகசத்தியாகமேலிடும்,—வாசியை அருளும் - (அங்ஙனமேலிட்டுத்)தனக்குமேலாகிய சிவத்தைத்தரும்,—மாய - (அங்ஙனம் அதுதருதலான்)மகத்தாகிய யகாரமான ஆன்மாவானது,—மற்றுஅது பற்று உற்று இங்கு ஈசனில் ஏகமாகும் - அந்த அருளேபற்றுக்கோடாகப் பொருந்தி அவ்விடத்திலே (முற்றுணர்வுமுதலிய சட்குணங்களாலே) சிவனைப்போன்று (கலப்பினாலே) ஒன்றும்,—இதுவே திருவெழுத்தின் ஈடு - இதுவே ஸ்ரீபஞ்சாக்கரத்தின் உண்மை என்க.

அதனின் என்பது ஏதுவில்வந்தவைந்தாமுருபு. இதற்கும் பலவாறு முரைப்ப. இது அதனையுச்சரிக்கு முறைமையும் அதனாற்பெறும்பயனு முணர்த்திற்று.)

பத்தாஞ் சூத்திர முடிந்தது.
ஆகத்திருவிருத்தம் - சஉ.

---

## பதினொன்றாஞ்சூத்திரம்.

இதுமுதல் "மண்முதல்கரணமெல்லாம்" என்னுஞ் செய்யுளீறாகிய ஐந்து திருவிருத்தங்களாலும் பதினொன்றாஞ்சூத்திர முணர்த்துவா னெடுத்துக்கொண்டார்.

அணைந்தோர்தன்மை.

தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவி தத்தா
னீங்கிட நீங்கா மூல நிறையிரு ளிரிய நேயத்
தோங்குணர் வகத்த டங்கி யுளத்துளின் பொடுங்க நேரே
தூங்குவர் தாங்கி யேகத் தொன்மையிற் றுகளி லோரே.

(இ-ள்.) தீங்குறு மாயை சேரா வகை வினைதிரிவிதத்தால் நீங்கிட-குற்றத்தையுடைய மாயை கூடாதபடி பிராரத்தகன்மங்கேட்டன்முதலிய மூவிதத்தாலு நீங்காநிற்ப,—நீங்கா மூல நிறை இருள் இரிய - விட்டு நீங்காத அநாதி சம்பந்தமான நிறைந்த ஆணவமலம் விட்டும்போம்படி,—நேயத்து ஓங்கு உணர்வகத்து அடங்கி - அன்பினாலே (தன்னிடத்துப்) பிரகாசிக்கின்ற அருளிடத்திலே (தன்னைக்) கொடுத்து,—உளத்துள் இன்பு ஒடுங்க-தன்னிடத்திலே சுகசொரூபமான சிவமொடுங்க,—நேரே - பயங்கவிகற

பங்களிற்படாமல்,—ஏகத் தொன்மையில் - பிரிவற்ற பழையதாகிய சிவ சமரசபாவத்திலே,—தங்கித் தூங்குவர் - தரித்து நிற்பார்கள்,—துகளிலோரே - குற்றமற்ற பெரியோர் என்க.

எனவே நிட்டையாலே மலவாதனை நீங்குமென்பதாம். திரிவிதத்தானீங்கிடவென்பதற்குப் பிறவாறுரைப்பாருமுளர். உளத்துளின்பொடுங்கவென்பதற்குத் தன்னிடத்திலே சிவபோகம் விளையவென்பாருமுளர். தாங்கி தரித்து. தூங்குதல் செறிதல் எனவே நிற்பதாம்.

இது அந்தச்சீவன்முத்தர்கள் பிராரத்தந் தொலையுமளவும் மலத்திரயங்களும் பந்தியாமனீக்கிக்கொள்ளுமுறைமையுணர்த்திற்று. (க)

குறிப்பிடங் காலந் திக்கா சனங்கொள்கை குலங்கு ணஞ்சீர்
சிறப்புறு விரதஞ் சீலந் தபஞ்செபந் தியான மெல்லா
மறுத்தற வொழிதல் செய்தன் மருவிடா மன்னு செய்தி
யுறக்குறு பவர்போல் வாய்மை யொழிந்தவை யொழிந்து போமே.

(இ-ள்.) குறிப்பிடங் காலந் திக்கு ஆசனங் கொள்கை குலங் குணஞ் சீர் சிறப்பு உறு விரதஞ் சீலந் தபஞ் செபந் தியானமெல்லாம் மறுத்து அற ஒழிதல் செய்தல் மருவிடா - சமாதிக்குயோக்கியமாகக்குறிக்கும் புண்ணியத்தலங்களும் இன்னகாலம் இதுசெய்யவேண்டுமென்னுங் காலசங்கற்பனையும் இன்னதிசைநோக்கி இதுசெய்யவேண்டுமென்னுந் திக்குக்கற்பனைகளும் பத்மாசன்முதலான அறுபத்து நான்காசனங்களிலும் இன்ன ஆசனத்திலே யிருக்கவேண்டுமென்னும் ஆசனநியமமும் ஒருபிரயோசனங்களிற் கோட்பாடுஞ் சாதியபிமானமுஞ் சாத்துவிகமுதலிய குணங்களும் நாமவேஷரூபமுதலிய சிறப்பில் அபிமானமுஞ் சிறப்பினையுடைய சாந்திராயணமுதலிய விரதங்களும் நல்லொழுக்கமும் பஞ்சாக்கினி நடுநிற்றன்முதலிய தவங்களும் இருஷி சந்தசுதேவதை பீசம் விநியோகமென்றிவையுடன்கூட மானதம் மந்தம் உரையென்னு மூன்றுவிதமாக வசிகரமுதலியவைகளைக்குறித்துச் செபிக்குஞ் செபமுஞ் சடாதாரங்களிலே ஒவ்வோரொளிகளைப்பற்றித் தியானிக்குந் தியானங்களுமான இவைமுதலானவைகளெல்லாம் அவர்களாக மறுத்துத் தீரவிடுதலுஞ்செய்தலும்பொருந்தா,—உறக்குறுபவர்போல் வாய்மை ஒழிந்து மன்னு செய்தி அவை ஒழிந்து போமே - நித்திரைசெய்கின்றவர் கைப்பொருள்போல (த்தாம்பெற்ற) உண்மையொழிய நிலைபெற்ற செய்தியவாகிய மற்றவையெல்லாந் (தனியே) யொழிந்து போம் என்க.

விடுதலைச்செய்தல் மருவிடாவெனினுமாம். பிறவுமுரைப்பாருமுளர். உறக்குறுபவர் ஆகுபெயர்.

இது இப்படிநின்ற சீவன்முத்தர்கள் முன்புள்ள நியமங்களெல்லாம்விட்டு நிற்பரோ விடாமனிற்பரோ வென்றுவினவ அதற்குத்தரமுணர்த்திற்று. (உ)

அகம்புற மென்றி ரண்டா லருச்சனை புரியு மிந்தச்
சகந்தனி லிரண்டு மின்றித் தமோமய மாகி யெல்லா
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழு நீர்மையார் போல ஞானந்
திகழ்ந்தகம் புறமெ னாத செம்மையார் தன்மை யாரோ.

(இ-ள்.) அகம் புற மென்று இரண்டால் அருச்சனை புரியும் இந்தச் சகந்தனில் இரண்டும் இன்றி - அந்தரியாகம் வெகிரியாகமென்று இருவிதமாக அருச்சனைபண்ணும் இந்தவுலகத்தின்கண் அவ்விரண்டுமின்றி,—ஞானந் திகழ்ந்து-ஞானம்பிரகாசித்தலால்,—தமோமயமாகி எல்லாமகிழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார் போல-அஞ்ஞானசொரூபமாய்க்(கன்மத்துக்கீடாக)ச் சர்வவிடயங்களுந்தோன்ற அவற்றிலே மகிழ்ந்து உயிர்வாழுந்தன்மையினரைப்போல,—அகம் புற மெனாத செம்மையார் தன்மையாரே - உள்ளிது புறமிது வென்னாது (ஒரு தன்மையாகவேகாணும்) உண்மையினையுடையவர்களே (சாயுச்சியமென்னு) நன்மையை யடைந்தவர்கள் என்க.

திகழ்ந்தென்னுஞ் செய்தெனெச்சம் பிறவினைகொண்டது. எச்சத்திரிபெனினுமமையும். இவைமூன்றுந் தெளிந்தோர்நிற்கு நிட்டையான ஞானத்தின்ஞானம்.

இது அவர்கள் சிவனையுள்ளே கண்டிருப்பரோ புறமேகண்டிருப்பரோவென்று வினவ இவ்விரண்டுமின்றியிருப்பரெனத் திருட்டாந்தபூர்வகமாகவுணர்த்திற்று. (ரு)

அண்டமே விடவ னைத்து மனைத்தையு மண்ட மேவிக்
கொண்டல்போ லெவையு ஞானக் குறைவிலா நிறைத லாலே
கண்டதோர் பொருளை யந்தக் கருத்தினாற் காணிற் றானே
யண்டநா யகனு மேனி யானதே லைய மின்றே.

(இ-ள்.) அனைத்தும் அண்டம் மேவிட அண்டம் அனைத்தையுமேவிக் கொண்டல்போல் - பிருதிவிமுதலிய நான்குபூதங்களும் ஆகாயத்திலே பொருந்திநிற்க அந்தவாகாயந்தான் அவையெல்லாவற்றையுங்கவளீகரித்துக்கொண்டு நிற்கின்றகோட்பாடுபோல,—எவையும் ஞானக்குறைவு இலா நிறைதலாலே - சகலத்திலும் அந்தஞானம் அகண்டமாக நிறைதலாலே,—கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினாற் காணில் - தோன்றியதோர்விடயத்தை அந்தஞானக்கண்ணினாற் பார்க்கின்,—தானே அண்டநாயகனும் - (அந்தக்கருத்தேவித்தாய்த்) தானே சிவனுமவன்(அப்படியாவனேவெனின்),—மேனி ஆனதேல் ஐயம் இன்றே - (ஞானமேதனக்குச்) சொரூபமாய்நிற்கின் (அங்ஙனமாதற்குச்) சந்தேகமில்லை என்க.

சிவனாதல் உபசாரம். மேனியானதேலையமின்றேயென்பதற்கு அந்தச்சிவமே தனக்குச் சொரூபமாய்நிற்கின் முத்திக்குச்சந்தேகமில்லை யென்பாருமுளர். குறைவிலாவென்பதீறுகெட்டுநின்றது.

இது அந்த ஞானநிலைகுலைந்தாலும் பழைய பிரபஞ்சவாதனை மேலிடாமனிற்குமுபாயமான ஞானத்தில்யோகமுணர்த்திற்று. (சு)

மண்முதற் கரண மெல்லா மறுவசத் தாக்கி ஞானக்
கண்ணினி லூன்றி யந்தக் கருத்தினா லெவையு நோக்கி
யெண்ணியஞ் செழுத்து மாறி யிறைநிறை யுணர்ந்து போற்றல்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே.

(இ-ள்.) மண்முதற் கரணமெல்லாம் மறுவசத்தாக்கி - பிருதிவிமுதலிய தத்துவங்களையெல்லாம் (சடமாகையாலே தனக்கு வேறாகக்கண்டு இவை அருளாலன்றிச் சீவியாதென்று) பரவசமாக்கி,—ஞானக் கண்ணினில் ஊன்றி - (இந்தத் தத்துவங்களினின்றும் விடுவித்த) ஞானதிருட்டி

ரிலே நிலைபெற்று,—அந்தக் கருத்தினால் எவையும் நோக்கி-அந்த ஞானக் கண்ணினாலே சகலத்தையும்பார்த்து,—அஞ்செழுத்து மாறி எண்ணி - பஞ் சாக்ஷரத்தைத் (திரோதானத்தினின்றுந்)திரும்பி(ச்சிகாரமுதலாக) மான தமாகச்செபித்து,—இறை நிறை உணர்ந்து - கர்த்தாவினுடைய பரிபூரண த்தை உணர்ந்து,—போற்றல் - (இங்ஙனம்) போற்றுகின்றதே,— புண்ணி யன்றனக்கு ஞான பூசையாய்ப் புகலும் அன்றே - சிவனுக்குப் பஞ்சசுத்தி யோடுங் கூடிய ஞானமென்று (ஆகமஞ்)சொல்லும் என்க.

மாறியெண்ணியென்க. மறுவசத்தாக்கன் முதலிறைநிறைவுணர்தலீறுசவைவந் தும் பூதசுத்தி ஆன்மசுத்தி திரவியசுத்தி மந்திரசுத்தி இலிங்கசுத்தியாகிய பஞ்சசுத் தியாம். அன்றே அசை. (ங)

இது அந்நிலைதிரிந்துழிநிற்கும் ஞானத்திற்கிரியையுணர்த்திற்று.

பதினொன்றாஞ்சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - எஎ.

## பன்னிரண்டாஞ்சூத்திரம்.

இத்திருவிருத்தத்தால் பன்னிரண்டாஞ்சூத்திரமுணர்த்துவானெடுத்துக்கொண்டார். இதுவுமது.

தொண்டர்க டாமும் வானோர் தொழுந்திரு மேனி தானு
மண்டருங் கண்டி லாத வண்ணலே யெனவ ணங்கி
வெண்டர ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே.

(இ-ள்.) தொண்டர்கள் தாமும் வானோர் தொழுந் திருமேனிதானும் - மகேசுரரும் தேவர்கடொழப்பட்ட சிவலிங்கமும்,—அண்டருங் கண் டிலாத அண்ணலே யெனவணங்கி - தேவராலுங் காணப்படாத சிவபி ரான்றானே யென்றுட்கொண்டுவணங்கி,—விழி வெண்தரளங்கள் சிந்த - கண்கள் முத்துப்போலு நீர்த்துளி உகுப்ப,—மொழி குழற - வாக்குத்தழு தழுப்ப,—மெய்யே கண்டு கொண்டு இருப்பர் - அவ்வுண்மைப்பொருளை யே கண்டு கொண்டிருப்பர்கள்,—ஞானக் கடல் அமுது அருந்தினோரே - ஞானக்கடலிலே (விளைந்த) அமுதத்தைப் புசித்தவர்கள் என்க.

தொண்டர்களிடத்துமென்ற பாடத்திற்குப்பொருட்சிறப்பின்று. தரளம் ஆகு பெயர். ஞானக்கடலமுதென்பதனை அமுதிற்கேற்றவடையாக்கி ஞானமிர்தத்தை யென்று சுவாத்மானுபூதிக்கொரு பெயராக்கலுமாம்.

இது ஞானத்திற்சரியையுணர்த்திற்று. (க)

பன்னிரண்டாஞ்சூத்திரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் - சஅ.

## நூற்கருத்து.

நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துட்
குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி வேதத்
தலைதரு பொருளா யின்பாய்த் தாவில்சற் காரி யத்தாய்
மலைவறு முணர்வாற் பெத்த முத்திகண் மதித்தா மன்றே.

(இ-ள்.) நில உலகாயதாதி நிகழ் சிவாத்துவிதாந்தத்துள் குலவினர் - நிலத்தின்கண் உலகாயதன் முதலாகவுண்டாய் வருகின்ற சிவாத்துவிதியீறாகிய சமயிகளிலே,—அளவளாவாக் கொள்கையதாகி - (செவ்வியரல்லாதாருடைய)பிரமாணங்களுக் களவுபடாத கோட்பாட்டையுடையதாய்,—வேதத் தலைதரு பொருளாய் - வேதத்தின் சிகையிலே தங்கியபொருளாய், —இன்பாய் - சுகசொரூபமாய்,—தாவில் சற்காரியத்தாய் - கெடாதசற்காரியபட்சத்தின் கண்ணதாய்,—மலைவு அறும் உணர்வால் - முன்பின் மலைவற்ற சிவஞானத்தாலே,—பெத்த முத்திகள் மதித்தாமன்றே-(சைவசித்தாந்தத்திற்) பந்தமோட்சமிரண்டையும் இந்தநூலிடத்து விசாரித்துச் சொன்னோம் என்க.

குலவினர் கொண்டாடத்தக்கவ ரென்பாருமுளர். வினையெச்சவடுக்குகள் அறுமென்னும் பெயரெச்சவினையில் அறுதலோடுமுடிந்தன. நிலவுலகாயதாதியென்பதற்குப் பிரபஞ்சத்திலே நிலவப்பட்டவென்றுமாம். அன்றே அசை.

இது இந்நூலை முன்பின் மலைவறத் திருவருளாலே சொன்னோமென்று அருளின் மகிமையுணர்த்திற்று. (க)

நூலியுமுறைமை.

திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றால் விளம்பிய வேது நோக்கிப்
பெருகிய வுவமை நான்கின் பெற்றியி னிறுவிப் பின்முன்
றருமலை வொழியக் கொள்வோன் றன்வயிற் சாற்ற லாமே.

(இ-ள்.) பெருகிய உவமை நான்கின் பெற்றியின் நிறுவிப் பின்முன் தரும் மலைவு ஒழியக் கொள்வோன் றன்வயின் - மிகுத்த பண்பு பயன்வினை உருவென்றுசொல்லப்பட்டவுவமை நான்குவகையின்றன்மைகளிலேபொருள்களை நிறுவிப்பின்முன் மலைவறப்புத்தியிற்கொள்ள வல்லவனாகிய மாணாக்கனிடத்திலே,—மற்று இச்சிவப்பிரகாச நன்னூல் விரிவது தெளியுமாற்றால் விளம்பிய ஏதுநோக்கி - இந்தச்சிவப்பிரகாசமாகிய நல்லநூலினது (பொருளின்) விரிவுகளைத் தெளியுநெறியினாலே (தீக்கைக்குச்)சொல்லப்பட்ட(சத்திநிபாதக்)குறிகளை ஆராய்ந்து,—திருவருள் கொடுத்துச் சாற்றலாமே - (ஞானதீக்கையாலே) சிவஞானத்தைப் பிரகாசிப்பித்து (இந்நூலை)ச்சொல்லலாம் (ஆசாரியர்) என்க.

மற்று அசை. ஏகாரம் ஈற்றசை. இதற்காற்றுநீர்ப்பொருளாகவுரைப்பாருமுளர். நூல்விரிவது நூலதுவிரிவென அந்நுவயிக்கப்பட்டது. நன்னூலென்றது அந்நூலுட்சிவம் பிரகாசித்தலின்.

இது இந்நூலைக்கொடுக்குமுறைமையுங்கொள்வோன்றன்மையுமுணர்த்திற்று.()

உண்மையதிகாரமுடிந்தது.

ஆகத்திருவிருத்தம் . ௱.

---

சிவப்பிரகாசமுற்றியது.

உமாபதிதேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி - உமாபதிதேவநாயனார்
அருளிச்செய்த

# திருவருட்பயன்.

உமாபதிசிவனென்னும் பிள்ளைத் திருநாமத்திற்கும் இந்நூற்கும் முதல்வராகிய கொற்றவன்குடிமுதலியார், அறம் பொருள் இன்பம் வீடு என நான்கினுள் வீட்டு நெறிகாட்டுவான் தம்மாலெடுத்துக் கொள்ளப்பட்ட இலக்கியம் இடையூறின்றியினிது முற்றுதற் பொருட்டு ஆதிக்கண்ணே கரிமுகக் கடவுளை வணக்கஞ் செய்தருளுகின்றார்; வழிபடு தெய்வ வணக்கஞ்செய்து மங்கலமொழிமுதல் வகுத்தெடுத்துக் கொள்ளப்பட்ட இலக்கணவிலக்கியம் இடுக்கணின்றியினிதுமுடியுமென்பாராகலின்.

காப்பு.
குறள்வெண்பா.

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

(இதன்பொருள்.) அடைந்தோர்பாற்செய்பு நல்லருளினையுடைய யானைமுகத்தினையும், என்று மொருபடித்தாயிருக்கும் இளமையினையும் பெற்ற கடவுளை ஒருவர் மனமொழிமெய்களால் வந்திப்பாராயின், அவர்க்கு வேதாகம புராணமுதலிய கலைகள் யாவும் வருந்திக்கற்பிக்கும் பண்டமல்ல. எனவே தானே யெளிதின் வருமென்பதாம் என்க.

உலகத்தானைகளெல்லாம் அடைந்தோர்பாற் றுன்பஞ்செய்தலின், இதனை நற்குஞ்சரக்கன்றென்றருளிச்செய்தார். யானையறிந்தறிந்தும் பாகனையே கொல்லுமென்றறிக. இஃதாகுபெயர். (க)

## க - வது. பதிமுதுநிலை.

அஃதாவது, மேலாகிய இறைவனது இயல்பு.

அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து.

(இ-ள்.) அகரமாகியவுயிர், எழுத்துக்க ளெல்லாவற்றினும் பொருந்தி வேறற நின்றாற்போலத் தனக்கோர் உவமனில்லாத் தலைவன் உலகுயிர்முழுதும் ஒழிவற நிரம்பி ஞானவுருவாய்அழிவின்றிநிலைபெறும் என்க.

அகரம், தானேதனித்தும் ஏனையுயிருடம்புக ளெல்லாம் வேறின்றிப் புணர்ந்தும் நிற்றலானும், அங்ஙனம் புணர்ந்த வழியுந் தன்னுருவுதோன்றாதாகலானும், முதற்கண் வைக்கப்படுதலானும், விகாரமின்றி நாதமாத்திரையாயியல்பாற் பிறத்த

லானும், இறைவற்குவமையாயிற்று. இவ்வொப்புவமையாற் சடமாகியவொலி வடிவன்றென்பதற்கு அறிவாகியென்றும், அகரம்போல வொருகாற் புணர்ந்து நீங்காதென்பதற்கு நிறைந்தென்றும், அவ்வகரமுதலிய வெழுத்துக்களு முட்படுதற்கெங்குமென்றும், மாணுக்கர்க் கறிவித்தற் பொருட்டு உவமனெடு புணர்த்தினும் அன்னதன்றென்பதற்கு நிகரிலென்றுங் கூறியருளினர். "அக்கரங்கடோறுஞ் சென்றிடுமகரம் போல நின்றனன் சிவனுஞ்சேர்ந்தே" என்றருளிச் செய்தவாறு காண்க.

இதனுல் இறைவனது உண்மையும், அவன்வேறறநின்றமையும் கூறப்பட்டன.

தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான்.

(இ-ள்.) வாக்குமனங்கட் கெட்டாத தனது விமல வானந்த வீட்டினெல்லையை நிலைபெற்ற ஆன்மாக்கள் வந்து பொருந்தும்படி செய்யும் அருளாகிய பராசத்தியுடனே பேதமின்றி யொன்றி நிற்பான் எம்முடைய இறைவன் என்க.

மன்னுயிர்களென்றதனுல் ஆன்மாக்கள், வினைவயத்தில் உருவுந்தொழிலும் வேறுபடுவதன்றி நிலமுதல் நாத மீருகிய தத்துவங்கள்போலப் பிறந்திறப்பன வல்லவாம்.

இதனுல் அவன் ஓர் சத்தியோடும் கூடிநிற்பனென்பதூஉம், அது கருணைவடிவிற்றென்பதூஉம் கூறப்பட்டன. (உ)

பெருமைக்கு நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கு மொப்பின்மை யான்.

(இ-ள்.) எவ்விடத்துமுளதாய நிறைவினுனும், நேர்மையினுனும், மிகுந்தகருணையினுனும், ஒருத்தராற் பெறுதற்கருமையானும் ஆயவிந்நான்கினுந் தனக்கோரொப்புவமையில்லாதான் முன்னங்கிளந்த எம்மிறைவன் என்க.

இவ்வாற்ருல் தனக்குவமனில்லானுகவே மற்றனைத் தியல்பினுனும் ஒப்பிலனுதலினுல் உய்த்துணர்க. "அண்டப்பகுதியி னுண்டைப்பிறக்க - மளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி-யொன்றினுக்கொன்றுநின்றெழில்பகரி - னூற்றொருகோடியின் மேற்படவிரிந்தன-வின் னுழைகதிரின் றுன்னணுப்புரையச்-சிறியவாகப்பெரியோன்" எனவும் "பெருமைக்கண்டமணுத்தர - வணுவண்டத்து-நின்றுநுணங்கிய தண்டாச்சீர்த்தி" எனவும் அருளிச்செய்தவாறு காண்க. குவ்வுருபு மூன்ரும் வேற்றுமைப் பொருள்தந்தது. "யாதனுருபிற் கூறிற்ருயினும் பொருள்சென்மருங்கின் வேற்றுமைசாரும்" என்பதிலக்கணமாதலின்.

இதனுல் இறைவனது உயர்வு கூறப்பட்டது. (௩)

ஆக்கி யெவையு மளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல்.

(இ-ள்.) இனையனுகிய அக்கடவுள் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட வுலகங்க ளெல்லாவற்றினையும் படைத்துநிறுத்தி யிச்சாஞானக்கிரியைக ளுணராத வண்ணம் ஆன்மாக்களெல்லாம் மூலமலத்துடனே அடங்கியிருக்கும்படி அழித்தலைச் செய்யுந்தான் என்ஞான்று நீங்காததோர் புகலிடமாயிருக்கும் என்க.

ஆசுடனடங்கவென்றதனால், புனருற்பத்தியுண்டென்பது கூறியதாயிற்று. "உயிரவையொடுங்கிப்பின்னு முதிப்பதெ னரன்பாலென்னிற் - செயிருறுமலத்திஞகும்" என்றருளிச் செய்தவாறு காண்க.

இதனால் அவனொருவனே முத்தொழிற்கும் உரியனென்பது கூறப்பட்டது. ()

அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவு முடையா னுளன்.

(இ-ள்.) சிவம் சத்தி நாதம் விந்து என்னும் அருவடிவு நான்கும், மகேசுரன் உருத்திரன் மால் அயனென்னும் உருவடிவு நான்குமுடையன், அவ்விறைவன் அறிவுடையாரது உள்ளத்தின்கண் தோன்றும் ஞானவுருவினையு முடையனுகலான் என்க.

அருவும் உருவும் உள்ளானெனவே அருவுருவாகிய சதாசிவ வடிவமென்பது கூறவேண்டாவாயிற்று. "சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழுமீச - னுவந்தருளுருத்தி ரன்றான்மாலய னொன்றினொன்றாம்." என்றும் "குறித்ததொன்றாக மாட்டாக் குறைவில னுதலானும்." என்றும் அருளிச்செய்தவாறு காண்க.

இதனால் அவனருவுருக் கூறப்பட்டன. (௫)

பல்லா ருயிருணரும் பான்மையென் மேலொருவ
னில்லாதா னெங்க ளிறை.

(இ-ள்.) நிறைந்து எண்ணிறந்த ஆன்மாக்களும் அறிவிக்கவறியும் பகுதிபோலத் தனக்கு மேலாய் நின்று உணர்த்துவதோர் கடவுளை யில்லாதான் எம்முடைய இறைவன் என்க.

இதனாற் கடவுட்டன்மை யொருவராற் பெறாது இயல்பாகவுடையன் என்பது கூறப்பட்டது. (௬)

ஆனா வறிவா யகலா னடியவர்க்கு
வானோர் காணாத மன்.

(இ-ள்.) நீங்காத ஞானமாய் அடியார்கள் உள்ளக் கமலத்தினை விட்டு ஒருபொழுதும் பிரிதல்செய்யான், தான் தேவர்களால் காண்டற்கரிய மேலோனாயினும் என்க.

அடியவரெனவும், வானோரெனவும், பொதுப்படக்கூறினமையால் யாவராயினும் அன்பர்க்கெளியவனுதலும், அன்பரல்லாதவர்க்கு அரியனுதலும் உடையன் என்பதாம். "கனவிலுந்தேவர்க் கரியாய்போற்றி - நனவிலுநாயேற் கருளினை போற்றி". என்றருளிச்செய்தார் 'போதவூர்புகழகம் பேர்த்தமெய்யன் - வாதவூர் வந்த மறைமுதற்றலைவர்'.

இதனால் அவன் அருள்புரியுமாறு கூறப்பட்டது. (௭)

எங்கு மெவையு மெரியுறுநீர் போலேகந்
தங்குமவன் றானே தனி.

(இ-ள்.) எல்லா வுலகங்களிடத்தும் அளவிறந்த வுயிர்கண்மாட்டும் நீர்வடநின்ற தழல்போல இரண்டறக் கலந்திருந்தானுயினும் அக்கடவுள் அப்பதங்களிற்றங்காது நீங்கி யேகனாய் நிற்பன் என்க.

✗ சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கல்லால்
நலமில னொருவற்கு நல்கு வானலன்
குலமில ராகினுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே.



எகாரம் பிரிநிலை. "பார்பதமண்டமனைத்துமாய்" என்பதனுள் "நீருறுதீ" என்றருளிச்செய்தவாறு காண்க. நீருறுதீயென்பது காய்ந்த புனலின்கணுளதாய வெம்மை.

இதனால் யாண்டுநிரம்பி நிற்பினும் அதிற்றோயானென்பது கூறப்பட்டது. (அ)

✗ நலமில னண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்.

(இ-ள்.) தன்தாளினை யடைந்தார்மாட்டு நன்மையினைச்செய்தலும், அதுசெய்யார்மாட்டு அதுசெய்யா திருத்தலும், உடையனாயினும் வயிரமென்பது சிறிதுமிலன்; இன்பத்தினைப் பண்ணுஞ்சங்கரனென்னும் பெயரினையுடையான் ஆகலான் என்க.

வடமொழியில் சம் என்பது சுகம், கரன் என்பது பண்ணுவான், இவையிரண்டும் புணர்ந்து சங்கரனென நின்றது,

இதனால் விருப்பு வெறுப்பிலனென்பதூஉம், அவரவர் செய்திக்கொத்த பயனுதவும் நடுவுநிலைமையை யுடையவனென்பதூஉம் கூறப்பட்டன. (கூ)

உன்னுமுள ளைய மிலதுணர்வா யோவாது
மன்னுபவந் தீர்க்கு மருந்து.

(இ-ள்.) ஞானமயமாய்ப் பிரிப்பின்றி நின்று அனாதியே தொடர்ந்துவரும் பிறவிப் பிணியினை அறுத்தற்கு ஓர்மருந்தாந் தன்மையினையுடையன் அக்கடவுள், அதற்கு ஓர் ஐயமில்லை. அதனையெஞ்ஞான்றும் இடைவிடாது அன்புடன் நினைப்பீராக என்க.

இதனால் பதியினை வழிபடவேண்டுமென்பதும் உறுதிப்பாடுங் கூறப்பட்டன.

பதிமுதுநிலைமுடிந்தது.

ஆகத்திருக்குறள் - கக.

---

## உ - வது. உயிரவைநிலை.

---

அஃதாவது, பலவாய வுயிர்களது முறைமை. இதனைப் பன்மைவாசகப்படுத்தியவதனால் பதியொன்றே யென்பது தானேகொண்டுகிடந்தது. பதியினியல்பு கூறிப் பசுக்களியல்பு கூறிற்றுகலான், மேலையதிகாரத்தினோடு இதற்கியைபுடைத்து எனக்கொள்க. பசு - உயிர் - சேதனன் - புற்கலன் - சீவன் - அணு - வியாபகன் - ஆன்மா - என்பது ஒருபொருட்கிளவி.

பிறந்தநாண் மேலும் பிறக்குநாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை.

(இ-ள்.) உயிர்கள்தோற்றிய காலத்தினது தொகையும், மேற்றோற்றுங் காலத்தினது தொகையும், இறைவன் திருவடியை அடைந்தாரது தொகையும், மேலடைதற்குரியாரது தொகையும், தம்மிலொக்கும். எனவே அளவிலவென்பதாம் என்க.

ஈற்றினின்ற தொகை நான்கனோடுங் கூட்டப்பட்டது. இதில் உயிருண்மையுடைத்தெனக்கூறியது எதனாலெனின், பொருளுண்மைபெற்றே அதனியல்பு கூறவேண்டும்; பித்திகை யுடைத்தாயே சித்திரமெழுதவேண்டு மாறுபோல.

இதனால் உயிர்களது உண்மையும், மிகுதியும் கூறப்பட்டன. (க)

திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர்.

(இ-ள்.) ஆணவம் கன்மம் மாயை என்னு மலங்கள் மூன்றுடையராகியும், இம்மூன்றில் மாயை நீங்கி யேனைய இரண்டு முடையராகியும், அவ்விருவகையுமல்லாது ஆணவமொன்றினையு முடையராகியும், சொல்லப்பட்ட மூன்று திறத்தினையுடையார் அவ்வான்மாக்கள் என்க.

ஆயுமென்பது மூன்றிடத்துங் கூட்டப்பட்டது. அவர்கள் நிரனிறையிற் சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலராம். "உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்றா மயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் - நிரையின்மல மலங்சன்ம மலங்கன்ம மாயைநிற்கும்" என்றருளிச் செய்தவாறுகாண்க.

இதனால் தொடர்பின் விகற்பத்தால் உயிர்கள்மூவகைப்பட்டமை கூறப்பட்டது.

மூன்றுதிறத் துள்ளாரு மூலமலத் துள்ளார்க
டோன்றலர்தொத் துள்ளார் துணை.

(இ-ள்.) இம்மூன்று திறத்தான்மாக்களும், மூலமலமாகிய ஆணவத்தாற் பிணிக்கப்பட்டவர்களே. அவருள், மாயை யென்னுந் துணையினையுடைய சகலர், தாங்கள் கட்டுற்றவரென்னுந் தன்மை தமக்குத் தெரிதலிலர். எனவே ஏனையரிருவருக்குந் தெரியு மென்பதாம் என்க.

மல்மென்பது அழுக்கு. உம்மை முற்று.

இதனால் முன்னர்ஒவ்வொன்றாக நீக்கப்பட்டது மாயையும் கன்மமும் அல்லது ஆணவமன்றென்பது கூறப்பட்டது. (ரு)

கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல்.

(இ-ள்.) பலகாலுஞ் சகலாவத்தையில் தாம் கண்டறிந்த பொருள்களைச் சொப்பன அவத்தையில் திரிபுபடக்காணுந் திணிந்தவெற்றியினையுடைய வுயிர்களுக்குச் செயலுடைத்தென்பது எவ்வண்ணமோ என்க.

திண்டிறலென்பது அன்மொழித்தொகையாய் இகழ்ச்சிக்குறிப்பு மொழியாய் நின்றது. திரிபுபடக்காண்டலாவது நல்குரவாளர்தமைச் செல்வராகவும், செல்வர்தமை நல்கூர்ந்தவராகவும், உறுப்பில்லார்தமை யுறுப்புடையராகவும், உறுப்புள்ளார்தமை யுறுப்பில்லாராகவும், ஒன்று ஒன்றாக மாறுபடக்காண்டல் முதலாயினவெல்லாம். (சு)

பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற.

(இ-ள்.) செவிமுதலிய கருவிகள் கூடாமல் யாதொரு விடயமும் எய்தமாட்டாத வுணர்வினையுடைய உயிர்களுக்கு நூல் வல்லோர் அறிவுடையன வென்றிட்டபேர் மிகவும் அழகிது என்க.

பொறியின்றியொன்றும் புணராதென்பதனால், அது கூடிப்புணரு மென்பதா யிற்று. புந்தி ஆகுபெயர். நன்றென்பது முன்னையதுபோல் இகழ்ச்சிக்குறிப்புமொழி.

இவை இரண்டுபாட்டானும் உயிர்கட்கோர் முன்னிலையான் அன்றி அறிவுந் தொழிலுங் கூடாமை கூறப்பட்டன. (ரு)

ஒளியு மிருளு முலகு மலர்கட்
டெளிவி லெனிலென் செய.

(இ-ள்.) விளக்கஞ்செய்யும் ஞாயிறு திங்கள் அங்கியென்னுஞ் சுடர் களும், மயக்கினைச்செய்யும் அந்தகாரமும், பலவகைப்பொருளோடு சிறந் தவுலகமும், விழித்திருக்கின்ற கண்ணினிடத்துச் சோதியில்லையாயின் என்னபயனைச்செய்தற் பொருட்டு? எனவே யாதுமின்றென்பதாம் என்க.

இவ்வுவமையால் மிகுந்தபிரகாசமாகிய சிவனுடைய ஞானமும், இருளாகிய ஆணவமும், கலைமுதல் நிலமீறாகிய தத்துவங்களும், நித்தமாகிய வுயிர்களிடத்து உணர்வில்லையாயின் என்னபயனைச் செய்யுமென்னும் பொருள்தோன்றி நின்றது. இஃது ஒட்டென்பதோ ரலங்காரம். இம்மூன்றுவகையினானும் நன்று தீதுகளை யடைவன வுயிர்களேயா மென்பதாயிற்று.

இதனால் விளக்க விளங்குங் கண்போல உணர்த்த வுணரு முணர்வினையுடைய தென்பதூஉங் கூறப்பட்டது. (சு)

சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை
யுய்த்தல்சத சத்தா முயிர்.

(இ-ள்.) நிலைபெற்ற ஞானமாகிய சிவனுக்கு அநித்தங்களான சடப் பொருள்களைப் புதிதாகச் சுட்டியறியவேண்டுவதில்லை. அசேதனங்களா கிய தத்துவங்கட்கறிவென்பதில்லை. இவ்விரண்டு தன்மையாயின், அவ்வி டத்திவற்றைத் தன்னுளுணர்வு செலுத்திப் பகுத்தறியுமுயிர்கள் சத்தும் அசத்துமன்றியே சதசத்தாதல் வேண்டும். எனவே அல்லது கூடா தென்பதாம் என்க.

உயிர்களுஞ்சித்தென்று வழங்கப்படுமாயினும் சிவனுடைய ஞானத்தினோடொ ருதன்மை யல்லவென்பதாம். "சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்றா மென்னிற் சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் திவன்றான் - பவங்கெடுபுத்திமுத்தி பண்ணுஞ் சித் தவற்றிற் படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றா - னவன்றானே யறி யுஞ்சித் தாதலினா லிரண்டு மணைந்தாலு மொன்றாகா தன்னியமாயிருக்கு - மிவன்றா னும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தியிது வசித்தென் றிடிலிவனுக் கிவனுமசித் தாமே" என்றருளிச்செய்தவாறுங்காண்க.

இதனால் உயிர்கள் சுத்தவறிவுஞ் சடமு மல்லவாதல் கூறப்பட்டது. (எ)

இருளி விருளாகி யெல்லிடத்தி னெல்லாம்
பொருள்க ளிலதோ புவி.

(இ-ள்.) இருள்வந் திறுத்தகாலை மறைந்தும், ஒளிவந் திறுத்தகாலை விளங்கியும் நிற்கும் பொருள்களையுடையதன்றோ உலகம் என்க.

பொருள்களென்ற பன்மையால் அவை கண்ணும் ஆடியும் விண்ணுமுதலாயின. ஓகாரம் எதிர்மறை. இதுவும் ஒட்டென்பதோ ரலங்காரம்.

இதனால் சுத்தவுணர்வுஞ் சடமுமன்றியிடைப்பட்ட தொன்றில்லை யென்பாரை யுண்டெனமறுத்து மேலது வலியுறுத்தப்பட்டது. (அ)

ஊமன்கண் போல வொளியு மிகவிருளே
வாமன்கண் காணா தவை.

(இ-ள்.) உதயஞ்செய்து விளங்காநின்ற சூரியனைக்காணாத கூகையினது கண்போல முற்கூறிய வுயிர்களும், கருத்தாவாகிய சிவனுடைய ஞானத்தினைக் காணமாட்டா. அந்தஞானமும் அந்தக் கூகையினது கண்ணுக்குச் சூரியன் சிறிதுந்தோன்றாது நின்றாற்போல உயிர்களுக்குந் தோன்றாது நின்றதாம் என்க.

உம்மை சிறப்பு. ஏகாரம் தேற்றம்.

இதனால் உயிர்கள், தமக்கு உயிராகி விளங்கிநின்ற ஞானத்தினைக் காணாமைக்கு உவமனெடுபெடுத்திக்கூறப்பட்டது. (கூ)

அன்றளவு மாற்றுமுயி ரந்தோ வருடெரிவ
தென்றளவொன் றில்லா விடர்.

(இ-ள்.) அநாதியேதொடங்கி இற்றைவரையும் எண்ணிறந்த துன்பத்தினைத் தாங்கிநிற்கு முயிர்கள், அந்தோ! எந்தநாளோ திருவருளாகிய ஞானத்தினைக்கண்டு தம்மிடும்பைதீர்ந்து பேரின்பத்தையெய்து நாள் என்க.

அந்தோவென்ப திரக்கத்தின்கட்குறிப்பு.

இதனால் உயிர்படுந் துன்பமிகுதிக் கிரங்கிக்கூறப்பட்டது. (௧0)

உயிரவைநிலை முடிந்தது.

ஆகத்திருக்குறள் - உக.

## ௩-வது. இருண்மலநிலை.

அஃதாவது, அறியாமையே வடிவாகிய ஆணவமலத்தினது தன்மை. உயிரவைநிலை யென்பதுபோலப் பொதுப்படப் பாசங்களது நிலையென்னாது இருண்மல நிலை யென்றதனால், ஒழிந்த மாயை கன்மங்களெவ்வாறடங்குமோ வெனின், "ஒருமொழியொழிதன்னினங்கொளற்குரித்தே" என்பதனாலடங்கும். முற்கிளந்தவுயிர்களாற் புணரப்பட்ட பாசத்தினியல்புகூறுதலின், மேலை அதிகாரத்தினோடிதற்கியைபுடைத்தெனக்கொள்க.

துன்றும் பவத்துயரு மின்புந் துணைப்பொருளு
மின்றென்ப தெவ்வாறு மில்.

(இ-ள்.) தொன்றுதொட்டிடைவிடாது வரும் பிறவித்துன்பமும், மேலாய வீட்டின்பமும், இவற்றைக்கூட்டி முடிப்பதாய முதல் துணை நிமித்தங்களும், இல்லையென் றறுதியிட்டுக் கூறுதல், காண்டல் முதலிய அளவைகளெல்லாவற்றானும் இல்லை என்க. (க)

இருளான தன்றி யிலதெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள்.

(இ-ள்.) உலகத்து வெவ்வேறு பலவகைப்பட்ட குணங்களையுடைய பொருள்களெல்லாவற்றினையும் ஒரு பொருளாக வேற்றுமை தோன்றாது

மறைத்துக்கொண்டு நிற்பது இருளுருவான தற்கன்றிப் பிறிதொரு பொருட்கில்லை என்க.

ஆதலால் இதுபோலப் பிறப்பிறப்புகளும், வீட்டுநெறியும்,காரணங்களும், பகுத்தறியாதபடி மறைத்தது ஆணவமென்பதாயிற்று.

இவை இரண்டுபாட்டானும் ஆணவத்தினது உண்மையும், அஃதிருள்போல மருள்விளைவிற்றென்பதூஉம், கூறப்பட்டன. (உ)

ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டு
மிருபொருளுங் காட்டா திது.

(இ-ள்.) அந்தகாரமானது வேறொரு பொருளையுங் காணமல் மறைத்துத் தன்னுருவங் காட்டிநிற்கும், ஆணவமானது தன்னுருவத்தையும் ஞானத்தையுங் காட்டாமல் நிற்கும் என்க.

இதனால் இவ்விருளினு மிகக்கொடியது ஆணவமென்று கூறப்பட்டது. (ங)

அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி
யின்றளவு நின்ற திருள்.

(இ-ள்.) அகவிளக்காகிய ஞானத்தினோடே தானும் அனாதியே கலந்துகொண்டு அந்த ஞானத்தின்மேற் படராது உயிரளவிலே யமைவுற்று இதுநாள்வரையும் நீங்காது நின்றது ஆணவமாகிய அந்தகாரம் என்க.

உள்ளொளியோடு என்பது உயர்வின்கண் வந்தது; "ஒருவினையொடுசொ லுயர்பின் வழித்தே" என்பதிலக்கணமாதலின்.

இதனால் ஆணவமாகிய அந்தகாரம் அனாதியென்பதூஉம், மாயை கருமம்போல நீங்கிப்புணர்ந்த தன்றென்பதூஉம் கூறப்பட்டன. (ச)

பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங்
கணவர்க்குந் தோன்றாத கற்பு.

(இ-ள்.) எண்ணிலராகிய ஆன்மாக்களைப் பேதமறக்கலந்து இடையறாது நின்றாலும், இருள்மலமாகிய மகளுக்கொருநாளுந் தனது தலைவராகிய ஆன்மாக்களுக்குத் தன்னைக்காட்டாது நிற்பதோர் நியமமுமுண்டு என்க.

பாவையெனவுங் கணவரெனவுங் கூட்டம்பற்றி உருவகஞ்செய்ததன்றி ஆண்குறி பெண்குறி அவ்விடத்தில்லையெனக்கொள்க. என்றும் என்றதனால் கேவல சகல சுத்தமூன்றினுமென்பதூஉம் பெற்றாம். சிறப்பும்மை இரண்டனுள் பின்னது இழிவு குறித்து நின்றது. இடைநின்ற உம்மை முற்று.

இதனால் ஆணவத்தினது தன்மை கூறப்பட்டது. (ரு)

பன்மொழிக ளென்னுணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது.

(இ-ள்.) பற்பலவார்த்தைகளாற் பயனென்னை? அறியவேண்டும்பொருள்களை யறியும் பகுதிதோன்றாது நின்றவியல்பெல்லாங் கருமை நிறத்தினையுடைய மூலமலமாயினர் கொடுத்தது என்க.

அறியவேண்டும் பொருள்களாவன பதி பசு பாசமென மூவகைப்பொருள்களும், சரியை கிரியா யோக ஞானமென்ற நால்வகை யொழுக்கமுமாம். இருளாரென்பது செறலின்கண்வந்த அஃறிணை வழுவமைதி.

இதனால் மூலமலத்தினால்வந்த அறியாமை வலியுறுத்தப்பட்டது. (சா)

இருளின்றேற் றுன்பே னுயிரியல்பேற் போக்கும்
பொருளுண்டே லொன்றாகப் போம்.

(இ-ள்.) இருளாகிய அவிச்சையில்லையாயின், இந்திரியங்கட்கு ஏவல் செய்யும் பிறவித்துன்பம் படற்குக் காரணமென்னை? அஃது ஆன்மாவினது சுபாவமாயின் நீங்காது, நீக்குஞ் சிவஞான முண்டாயின் அதனுடனே உயிருங்கெட்டுப்போமாதலால். எனவே பிறவித்துன்பத்துக்கு நிமித்தம் அவிச்சையென்பதாம் என்க.

இதனால் அவிச்சையில்லை யென்பாரை யுண்டென்றுமறுத்துக் கூறப்பட்டது.

ஆசாதி யேலணைவ காரணமென் முத்திநிலை
பேசா தகவும் பிணி.

(இ-ள்.) அவிச்சை யிடையிட்டு வந்ததாயின், அஃதோர் காரணமில்லாமல் வந்துபொருந்திய தென்னை? அன்றி முத்தியினு முறையாடாது வந்து கவர்ந்து கொள்ளுமன்றோ என்க.

உறையாடாது கவர்தல் தோன்றாது விரைவிற் கவர்தல்.

இதனால் அவிச்சையாதி யென்பாரை மறுத்துக் கூறப்பட்டது. (அ)

ஒன்று மிகினு மொளிகவரா தேனுள்ள
மென்று மகலா திருள்.

(இ-ள்.) மலமாயையென்னு மிரண்டினுள் மலமாகிய இருள் வியாபகம் எல்லா மறைத்ததாயினும் ஏகதேசவிளக்கமாகிய மாயாகாரியத்தினை யுயிர்கள் கவர்ந்து கொள்ளாதாயின் என்ஞான்றும் அவ்வவிச்சை யவைகளைவிட்டு நீங்குவதில்லை என்க.

கவருந்தன்மையுயிர்களுக்குண்டாக வேண்டுமென்பது கருத்து. என்றுமென்பதருளுதைய மானகாலத்தினு மென்பது காட்டிநின்றது.

இதனால் உயிர்கள் அவிச்சைநீங்கி முத்தியடைவதற்கோர்நிமித்தங்கூறப்பட்டது.

விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து.

(இ-ள்.) சிவனுடைய ஞானமாகிய கிரணந்தோன்றி ஆணவவிருள் நீங்குமளவு மாயையினிடத்திலே நின்றுந் தனுகரணபுவனபோகங்கள் தத்தம் புண்ணியபாவங்களுக்கீடாகத்தோன்றிச் சிறிதே மலவிருளினை நீக்கி விடயவின்பங்களைக்காட்டும் விளக்குகள்போலவாம் என்க.

மலமுமாயையும் இருளுமொளியும்போலத்தம்முள்மாறுடையவென்பதாயிற்று. சிறிதேநீக்குதல் விளக்கனைய என்பதனாற் பெற்றாம். விடிவாமளவுமென்றதனால் மாயாகாரியங்கள் சங்காரகாலத்திற்றமதுகாரணத்திலேயடங்கினும் உயிர்களைவிட்டு நீங்கினவன்றென்பதாம் "இருளிரி சுடரிரண்டாநின்ற முழுமலமாயை" என்றருளிச்செய்தவாறுகாண்க.

இதனால் அவ்வவிச்சையால் நீங்காது தொடர்ந்து நின்றமாயை கருமம் இரண்டின் முறைமையுங்கூறப்பட்டது. (க0)

இருண்மலநிலைமுடிந்தது.

ஆகத்திருக்குறள் - ருக.

---

## ௭ - வது. அருளது நிலை.

அஃதாவது, கருணையுருவாகிய ஞானத்தின் முறைமை. இத்தன்மையவாகிய அவிச்சையைத் துறந்து வீட்டுநெறி காட்டுதற்பொருட்டு அதற்கு மாறாகிய அருளினது முறைமை கூறலின், மேலை அதிகாரத்தினோ டிதற்கியைபுண்மை யறிக.

அருளிற் பெரிய தகிலத்து வேண்டும்
பொருளிற் றலையிலது போல்.

(இ-ள்.) ஒருவர்க்கெல்லாப் பொருள்களுள்ளுந் தாம்விரும்பிய பொருளின் மேலாயபொரு ளில்லாதவாறுபோலத் திருவருளின் மிக்கதாகிய பொருள் உலகத்தில்லை என்க.

இதனால் அருளினது உயர்வு கூறப்பட்டது. (௧)

பெருக்க நுகர்வினை பேரொளியா யெங்கு
மருக்கனென நிற்கு மருள்.

(இ-ள்.) உலகத்து மக்கட்டொகுதிகள் பொருளினை யீட்டவும் துய்க்கவும் நிமித்தமாய்நின்ற சூரியனைப்போல, அருளும உயிர்களெல்லாம் புண்ணியபாவங்களை வளர்க்கவும் அவற்றின் பயனாகிய சுகதுக்கங்களை யருந்தவும் காரணமாய் மிகுந்த வொளியாகி யெவ்விடத்தும் நிறைந்து நிற்கும் என்க.

அருக்கனென என்றதனால் அவ்வாறுகாரணமாதல் ஒருவராற் செய்துகொள்ளப்பட்ட தல்லவாம். பொதுப்பட வினையென்றதனால் புண்ணியபாவ மிரண்டுமாம். சூரியனைப்போலவோரிடத்துண்டாய காலை யோரிடத் தின்றாயிருப்பதில்லை என்பார், எங்குமென்றருளிச் செய்தார்.

இதனால் அருள் காரணமாதல் கூறப்பட்டது. (௨)

ஊனறியா தொன்று முயிரறியா தொன்றுமிவை
தானறியா தாரறிவார் தான்.

(இ-ள்.) அசேதநங்களாகிய தத்துவங்கட்கு எஞ்ஞான்றும் அறிவுண்டாவதில்லை, உயிர்கள் யாதொன்றுந் தாமாய் அறியமாட்டா, ஆதலால் அந்த அருள் தாமறிந்தறிவியாமல் உலகத்தின்கண் அறிவினைப்பெறுவார் யாவர். எனவே அருளறிந் தறிவித்தே யறியவேண்டுமென்பதாம் என்க.

இதனால் அருளிற்கு அறியவேண்டுவதில்லை என்பாரை, உயிர்கட் கறிவித்தற்பொருட்டு அறியவேண்டுமென மறுத்துக்கூறப்பட்டது. (௩)

பாலாழி மீனாளும் பான்மைத் தருளுயிர்கள்
மாலாழி யாளு மறித்து.

(இ-ள்.) மேலாய அருளின்கட்பட்ட உயிர்கள் அதனோடுபொருந்தி நின்று பேரின்பத்தை நுகராமல் மாயாபோகமாகிய மயக்கவேலையுளாழ்ந்து அழுந்துந்தன்மை, திருப்பாற்கடலின்கண் வைகிய மீன்கள் பாலைப் பருகாது அதனுள் சிறியதாம் பிராணிகளை வருந்தித் தேடியுண்ணு முறைமையினை யுடைத்து என்க.

மின்களும் பாலைப்பருகுமாயின், ஜெந்துக்களைத்தேடி யொருகாற் கிடைத்துங் கிடையாது முழலாமல், நின்றநிலையிலே வேண்டுமளவும் பருகும். உயிர்களும் அருளினோடு கலந்துநிற்குமாயின், சிற்றின்பங்களைத்தேடி அவ்வாறுழலாமல், பேரின்பத்தினைத் தாமும் அந்நிலையிலே யிடையறுது அனுபவிக்கு மென்பதாம்.

இதனுல் அருளோடு கூடிநின்றும் உயிர்கடுன்புறும் இழிபுகூறப்பட்டது. (௪)

அணுகு துணையறியா வாற்றேனி லைந்து
முணர்வை யுணரா வுயிர்.

(இ-ள்.) தமக்கு மருங்காக உடன்வருந் துணையினைத் துணையென நாடாது வழிச்செல்வான் போலவும், தமக்கு முதலாய்நின்று உணர்த்துந் தன்மையறியாத இந்திரியங்கள் போலவும், உயிர்கள் தாமுந்தமக்குயிராய் நின்றுணர்த்தும் அருளினை அறியமாட்டா என்க.

இவை துணைமையுந் தலைமையும் பற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. (௫)

தரையை யறியாது தாமே திரிவார்
புரையை யுணரா புவி.

(இ-ள்.) பூமியைத் தமக்கு ஆதாரமென் றறியச்செய்யாது தாமேதமக்காதாரமாகப் போக்குவரவு செய்வாரைப்போல், அருளினைத் தமக்காதாரமென்றறியா உயிர்களும் என்க.

புவியென்ப தீண்டுயிர்கண்மே னின்றது. (௬)

மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர் ஞானந்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம்.

(இ-ள்.) மலையினை யிழந்தோரும், மண்ணினை யிழந்தோரும், ஆகாயத்தினை யிழந்தோரும், எங்கணு நிறைந்த பேரறிவினை யிழந்தோரும், தானென்பதனை யிழந்தோரும் தம்மிற்றுமொப்பர் என்க.

மலை நிலம் ஆகாயம் தான் என்பவற்றைக் கெடுத்தோர் உலகின்கணில்லை; உளராயின் அவர்போல அருளினையிழந்தோரும் பேதையரொன்பதாம்.

ஈண்டுத் தற்கேடென்பது யாக்கைமேல் நின்றது. (௭)

வெள்ளத்து ணுவற்றி யெங்கும் விடிந்திருளாங்
கள்ளத் திறைவர் கடன்.

(இ-ள்.) நிறைந்த நறுநீரின்கண்ணே நின்றும் அதனைப்பருகாது நாவறண்டும், எவ்விடத்தும் இருள் நீங்கி விடிந்திருக்கவு மயங்கிநிற்கு மடவோரது தன்மையே, தாம் நிறைந்த அருளோடு கலந்துநின்றும் அதனுல் வரும் பேரின்பத்தை நுகராத வஞ்சத் தலைமை யுடைய ஆன்மாக்களது முறைமை. எனவே உயிர்கண்மாட்டுளதாய குறையேயன்றி அருளின் குறையன்றென்பதாம் என்க.

வஞ்சத்தலைமையாவது தாமொன்றிற்குங் கருத்தா வல்லவாயிருக்கவும்யானென்தென் றகங்கரித்தல். (௮)

பரப்பமைந்த கேண்மினிது பாற்கலன்மேற் பூனை
கரப்பருந்த நாடுங் கடன்.

(இ-ள்.) சஞ்சல மனத்தாற்படும் விளைவினை யடக்கி அருளின்றன்மையே யினிதாகக்கேட்டு மனங்கொள்வீராக. அதனை நாடாது சிற்றின்பங்கள்மேற்படரும் இப்புல்லறிவாண்மை, உறியின்மேல்வைகும் இனிய பாற்குடத்தின் மீதிருக்கும் பூனையானது, சுவர்த்தலையிலோடுங் கரப்பினைத் தாவிப்பற்றி நுகரவிசாரிக்கு முறைமையினை யொக்குமாகலான் என்க.

பூனையும், உறியின்கட் பாற்குடத்தின் மேலிருந்தவாறே அதனைப்பருகாதுகரப்பினைப்பற்ற விசைகொண்டு வாவுங்கால், அதுகைப்படின், சிறிதின்மையில்லாத வுணவாதலேயன்றித் தாவலான்மிக்க வருத்தமுமெய்தும். கைப்படாக்கால், வருத்தத்தோடு கரப்பினையும் போக்கிப் பாற்குடத்தினையு முடைத்து மிக்கதுன்பமெய்தும். உயிர்களும் அநாதியே கூடிநின்ற அருளகத்தடங்கிப் பேரின்பத்தினை யெய்தாது சிற்றின்பங்கள்மேற் படருமாயின், அதுபோல வொருகாலெய்துஞ் சிற்றின்பத்துக்கு மனமொழிமெய்களாற் றுன்பமுற்றும், அஃதெய்தாக்கால் இருமை யின்பமுமிழந்தும், மிக்க இடர்ப்படுமென்பதாம். உறியின் மேல்வைகும்பாற்குட மெனவும், சுவர்த்தலையிலோடுங் கரப்பெனவும் விதித்த தநுபவம்.

இவை ஐந்துபாட்டானும், அருள் துணையும் இறைமையு மாகியும் ஆதாரமாகியும் நிற்றலையறியாதிருத்தலும், எவ்விடத்தும் இருப்பதனைக் காணாதுமயங்குதலும், அதனால் வருமின்பமெய்தாமையும், அதன்மேற் பற்றுச்செய்யாமையுமான உயிரின் குற்றங் கூறப்பட்டன. (௯)

இற்றை வரையிசைந்து மேதும் பழக்கமிலா
வெற்றுயிர்க்கு வீடு மிகை.

(இ-ள்.) அநாதியே தொடங்கி இன்றளவும் அருளோடிரண்டறக்கலந்துநின்றும், சிறிதும் அதிற்றோய்ந்த பழமை தோற்றுதலில்லாத வெறிய உயிர்கட்கு வீடுசேர்தலென்பது மிகுதி. எனவே தகாதென்பதாம் என்க.

வெறுமை பயன்கொளாமை. பழமைதோற்றுதல் உலகவெறுப்புத் தோன்றுதல்.
இதனால் அருளோடு கலந்துநின்றும் வீடுகூட நினையாதவுயிரினைப் பழித்துக் கூறப்பட்டது. (௧0)

அருளது நிலை முடிந்தது.
ஆகத்திருக்குறள் - ௪௧.

---

## ௫ - வது. அருளுரு நிலை.

அஃதாவது, ஞானவடிவாகிய குரவனது தன்மை. அருளது நிலைகூறி, அருளாளும் வடிவினது நிலைகூறுதலின், மேலையதிகாரத்தினோடு இதற்கியை புடைத்தெனக் கொள்க.

அறியாமை யுண்ணின் றளித்ததே காணுங்
குறியாகி நீங்காத கோ.

(இ-ள்.) தோன்றாத் துணையாய்க் கலந்துநின்று காத்து நடத்தின அருளே, கண்ணாற் காணப்படும் வடிவினை யுடையதாக விட்டு நீங்காத குரிசில் என்க.

இதனால் அருள் குருவடிவு கொண்டுவந்தமை கூறப்பட்டது. (௧)

அகத்துறுநோய்க் குள்ளினரன்றி யதனைச்
சகத்தவருங் காண்பாரோ தான்.

(இ-ள்.) ஓர் இல்லின்கண் ஒருவர் கொண்டபிணியை அவ்வில்லின்கண் வாழ்வார் அறிவதன்றி, அதனைச் சேய்மைக்கண்ணராகிய உலகத்தார் அறியவல்லவரோதாம் என்க.

தான் என்பது அசைநிலை. ஓகாரம் எதிர்மறை.

இதனால் இங்ஙனம் வடிவுகோடற்கு அருளாதல் வேண்டுமோ வென்னும் ஐயத்தினை யகற்றி வலியுறுத்தப்பட்டது. (உ)

அருளா வகையா லருள்புரிய வந்த
பொருளா ரறிவார் புவி.

(இ-ள்.) படைப்பு நிலை ஈறு மறைப்பு என்னும் நான்கினையுந் தோன்றாது செய்தவாறுபோல, அருளென்னுந் தொழிலினையும் தான் பண்ணாதுபோலப் பண்ணும்படி, மாநுடவடிவென்னும் அங்கியால் மறைத்துக்கொடுவந்த உண்மைப்பொருளே இக்குருவடிவென்பதனை அறியமாட்டாதது உலகு.எனவே தம்போலொருமாநுடராகநினைக்குமென்பதாம்என்க.

பொய்யிருண்ட சிந்தைப் பொறியிலார் போதமா
மெய்யிரண்டுங் காணார் மிக.

(இ-ள்.) நிலையாத காயவாழ்க்கையினையும், ஆணவமலத்தால் மறைந்தவுணர்வினையும் உடையராய், ஞானமென்னுஞ் செல்வத்தினை எய்துதலிலாதார், அறிவுமயமாகிய அருளும், அவ்வருளான் ஆகிய தேசிகவடிவும் என்னு முண்மைப்பொருளிரண்டினையும் சிறிதுமறியமாட்டார் என்க.

இத்தன்மயவாகிய ஆசாரியவடிவினை, அருள்கொண்ட வடிவமாக வுணராராகவே, நின்மலமாய் அகண்டமாய் சின்மயமாய் ஒழிவற நிறைந்த, அவ்வருளினையும் உணரமாட்டாரென்பது கருத்து. (௩)

பார்வையென மாக்களைப் பற்றிப் பிடித்ததற்காம்
போர்வையெனக் காணார் புவி.

(இ-ள்.) விலங்குகள் பறவைகளைப் பிடித்தற்கு அவ்வவற்றின் வடிவாற்செய்த தீவகம்போல, மிக்கதெய்வ வடிவங்கண்டு அஞ்சிவெருளாது, மனிதரைத் தன்வயத்தாக்கிக் கோடற்பொருட்டு அருள் போர்த்துக்கொண்ட மாநுடவுருவாகிய குருவடிவினை, போர்வையாக அறியமாட்டாவாம் இவ்வுலகு என்க.

இவை மூன்றுபாட்டானும் அகளமாய்நிறைந்த அருளே குருவுருவுதரித்து வந்ததென்பதனை அறியாதார் இழிபு கூறப்பட்டது. (௫)

எமக்கெ னெவனுக் கெவைதெரியு மவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர்.

(இ-ள்.) நீ குருவுண்மை கொண்டமையால் எமக்கு வரும்பயனென்னை? யாவ னொருவனுக்கு யாவைசில நூற்பொருள்கள் குரவனையின்றி யுணர முன்னேடுபின்மலைவறத்தோன்றும்,அந்நூற்பொருள்கள் அவனைத் தமக்குக் குரவனாக அவாவிநிற்கும் பொழுது இம்மறுதலையினை ஒழிவாயாக என்க.

X அருள் மானுடச்சட்டை சாத்தல்.



குருவுண்மை கொள்ளாயாயின் என்ப தெஞ்சி நின்றது.

இதனால் யாதொருநூற் பொருள்களுங் குரவனையின்றி யுணரப்படாவென்பது கூறப்பட்டது. (சு)

விடநகுல மேவினுமெய்ப் பாவகனின் மீளுங்
கடனிலிருள் போவதெவன் கண்.

(இ-ள்.) விடமானது கீரி தானேவந்து தீண்டினுமீளாது, அதன்வடிவினைப்பாவிப்பானொருவனால் மீளுமாறுபோலவே, இவனுடைய திருநோக்கினால் ஆணவவிருள் நீங்கு முனக்கு என்க.

இறைவன் அனாதியே உயிரோடு கலந்து நிற்பினும் குருவுருக்கொடு வந்தல்லது பாசம் நீங்காதென்பதாயிற்று. இது சகலரைக் குறித்து நின்றது.

இதனால் ஆசாரியனால் பாசம் நீங்கவேண்டு மென்பது கூறப்பட்டது. (எ)

அகலத் தருமருளை யாக்கும் வினைநீக்குஞ்
சகலர்க்கு வந்தருளுந் தான்.

(இ-ள்.) கலையினின்றும் நீங்கின விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கும் நிராதாரமாய்நின்று அருளைவிளக்கும், கன்மமலச் சேதனம் பண்ணுதற்குப் பக்குவராகிய சகலர்க்கும் குருவுருவினை யாதாரமாகக் கொண்டவர்போலத் தானேவந்தநுக்கிரகம் பண்ணும். எனவே அவ்வா றருள்புரிதல் சகலர்க்குக் கூடாதென்பதாம் என்க.

பிரளயாகலர்க்குக் கலைநீங்கலாவது அதன் வயத்தாகாதிருத்தல். குவ்வுருபு விகாரத்தால் தொக்கது. முதலிருவர்க்கு "நிராதாரமாகிக்கரையிலருட்பரந் துவிதா சத்திநிபாதத்தால்" என்றருளிச்செய்தவாறு காண்க.

X இதனால் அருள் மானுடச்சட்டைசாத்தி வருவதற்குக் காரணங் கூறப்பட்டது.

ஆரறிவா ரெல்லா மகன்ற நெறியநாளும்
பேரறிவான் வாராத பின்.

(இ-ள்.) மந்திரமுதல் கலையீறாகிய மூவிரண்டு அத்துவாவுங்கடந்த வீட்டுநெறியினை வெளிப்படுத்தும் நிறைந்த ஞானத்தினையுடைய இறைவனே குருவுருக்கொண்டு வாராதவிடத்து, அதனை அறியவல்லார்யார். எனவே ஒருவருமில்லை யென்பதாம் என்க.

இதனால் நிறைந்த அறிவனாகிய இறைவனே உருக்கொடுவரினல்லது உண்மையையுணர்தல் கூடாதென்பது கூறப்பட்டது. (கூ)

ஞான மிவனொழிய நண்ணியிடு நற்கன்ற்
பானு வொழியப் படின்.

(இ-ள்.) அருள்வடிவாகிய குரவனையன்றி யொருவற்கு ஞானமுண்டாதல்கூடும், ஆதித்தனலன்றி மாகிலாச்சூரியகாந்தக் கல்லினிடத்து நெருப்புத் தோன்றுமாயின். எனவே இரண்டுமில்லை யென்பதாம் என்க.

இதனால் திருவடிஞானம் குரவனையின்றியமையாச் சிறப்பிற்றென மேலது வலியுறுத்தப்பட்டது. (க0)

அருளுருநிலை முடிந்தது.

ஆகத்திருக்குறள் - ருக.

## ௬ - வது. அறியுநெறி.

அஃதாவது, உண்மைப்பொருளையுணருமுறைமை. அருளுருநிலைகூறி அதனாலறியும் பொருளுண்மைகூறுதலின், மேலையதிகாரத்தினோடு இதற்கியைபுண்மையறிக

நீடு மிருவினைக ணேராக நேராதல்
கூடுமிறை சத்தி கொளல்.

(இ-ள்.) ஒன்றை யொன்றெவ்வாது மிக்குவளர்ந்துவரும் புண்ணிய பாவங்களிரண்டும் தம்மி லொப்பாகவரும் பருவத்திலே யுண்டாகும், சிவனுடைய சத்திபதிதல் என்க.

நேராக நேராதல் ஓர்புண்ணியத்துக் கோர்பாவமோர்வகையா னொத்திருத்தலாம். அதுவன்றி வாக்குமனங் காயமென்னு மூவகையாலியற்றப்பட்ட புண்ணியங்கள் முழுவதுமோர்பங்கும், பாவங்கள் முழுவதுமோர்பங்குமாகப் பொன்னும் இரும்பும் கன்மத்தாற்றுலையொக்கத் தூங்குதல்போலப், பலத்தாற் சமனாதல். சத்திபதிதலாவது நிலையாத இயல்பினையுடைய வுலக நடையினையஞ்சி வீட்டுநெறியினை விரும்பும் வண்ணம் உயிர்களதுணர்வினைத் திருந்தச்செய்தல். ஒன்றையொன் றேற்றத் தாழ்வுபடில் அவையவை யிகல்செய்திழுக்கு மென்பதாம்.

இதனால் உண்மை யுணர்தற் கேதுவான சத்திபதியு மெல்லைகூறப்பட்டது. (௧)

ஏக னனேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யாறாதி யில்.

(இ-ள்.) ஒருவனாகிய இறைவனும், அளவிலவாகிய வுயிர்களும், இருள் வடிவாகிய ஆணவமலமும், கன்மமலமும், சுத்த மசுத்தமென்னுமிருவகை மாயைகளுமாகிய இப்பொருள்கள் ஆறும் அநாதியாகியபொருள்கள் என்க.

அனேகன் என்பதில் ஈற்றுமகரம் னகரமாய்த் திரிந்து நின்றது. இவையாறுமென அஃறிணை வாசகங்கொண்டு மிகவினால்முடிந்த திணைவழுவமைதி. ஆறுமென்னு முற்றும்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கது.

இதனால் நித்தியப்பொருள்களிவையெனத் தொகுத்துக்கூறப்பட்டது. (௨)

செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்பயனுஞ் சேர்ப்பவனு
முய்வா னுளனென் றுணர்.

(இ-ள்.) புண்ணியபாவங்களைப் பண்ணும் புருடனும், அவனாற்செய்யப்படும் வினைகளும், அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களும், அவற்றைக் கூட்டியருத்து மிறைவனுமென்னு மிந்நான்குதிறத்தினை யுடையனாக வுன்னையறிவாயாக; மாணவகனே! நீ கதிசேர்தற்பொருட்டு. எனவே இவை உணராதிருக்கவே யானெனதென்னுஞ் செருக்கறாது பிறவித் துன்பமுறுமென்பதாம் என்க.

உடையனாதல் இருவினைகளைச் செய்திறைவனா லவற்றின்பயனை நுகர்தற்குத் தானுரியனாதல். (௩)

ஊனுயிரால் வாழு மொருமைத்தே யூனொடுயிர்
தானுணர்வோ டொன்றாந் தரம்.

(இ-ள்.) உடம்பானது உயிரோடுகூடிப்பிரிப்பின்றி நடைபெறுமொற்றுமையினை யுடைத்து, அவ்வுடம்போடுயிர்கணிறைந்த ஞானத்தோடு கூடி யொன்றுபட்டு வேறறநிலைபெறுந் தகுதியன. எனவே உலகத்துயிர் போலக் கலந்துநின்று நடத்துமென்பதாம் என்க.

உடம்பென்ற பொதுவகையால் ஐவகையுடம்பு மடங்கும். அவையடங்கவே நிலமுதல் நாதமீறாகிய தத்துவமெல்லா மடங்குமெனக்கொள்க. (௬)

தன்னிறமும் பன்னிறமுந் தானுங்கற் றன்மைதரும்
பொன்னிறம்போன் மன்னிறமிப் பூ.

(இ-ள்.) அடுத்த பலவன்னங்களையுங் கவர்தலும் அவையடுத்திருக்கினுந் தன்னிறமே காட்டிநிற்றலுமாகிய படிகத்தினது தன்மையிரண்டிற்கும் தான்காரணமாகி நின்று பண்ணும் சூரியன் கிரணம்போலாம், இவ்வுலகிற்கு இறைவனது சுடராகிய ஞானசத்தி. எனவே கட்டு வீடென்னுமிரண்டிற்குந் தானேயென்றே காரணமென்பதாம் என்க.

இவை மூன்றுபாட்டானும் இறைவனுலகினை நடத்துமாறு கூறப்பட்டது. (௭)

கண்டொல்லை காணுநெறி கண்ணுயிர் நாப்பணொளி
யுண்டில்லை யல்லா தொளி.

(இ-ள்.) நினைவினையுடைய வுயிரினது நடுவாக ஞானவொளிக்குநிலையுண்டாதல் வேண்டுமென்றாயின் வாயில்வழியாற்புலன்களையுற்றுப்பார்த்து விரைவிலுணரு முறைமையில்லை என்க.

குரவனாலன்றியுணர்கொண்டுணர்த லரிதெனக்கொள்க. நடுவாக நிற்றல் கலந்து நிற்றல்.

இதனால் ஞானமுன்னிற்பினல்லது அறிதல் கூடாதென்பதோ ரநுபவவகையால் விளங்கக் கூறப்பட்டது. (௯)

புன்செயலி னேடும் புலன்செயல்போ னின்செயலை
மன்செயல தாக மதி.

(இ-ள்.) புருடனது சிறுதொழிலின்வழியே திரிபின்றி நடக்கு மிந்திரியங்களது செயல்போல, மாணவகனே! நின்னுடைய செய்தியையும் இறைவனது கிரியாசத்திவழியேயவ்வாறு நடப்பதாகக்கருதுவாயாக. எனவே அவ்வாறு கருதவே வினைத்தொடர்பின்றிப் பிறவிநீங்கி நிற்பரென்பதாம் என்க.

இதனால் இறைவனது செயல்வழி நிற்றல் கூறப்பட்டது. (எ)

ஓராதே யொன்றையுமுற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார்.

(இ-ள்.) ஞான மெவ்வண்ணமிருக்குமோவென் றாராயாமல், அதனையும் விடயங்கள்போலக் குறிக்கொண்டுன்றி நினையாமல், நீயாகமுன் சென்று மேற்கொண்டு காண்டலுஞ்செய்யாமல்,உன்னைக்கண்ட ஞானத்தினைக் காண்பாயாக என்க.

இவ்வா றசைவின்றி நிற்கவே அவ்வகண்டமாகிய ஞானந்தானே தோன்றுமென்பது கருத்து. (அ)

களியே மிகுபுல னாக்கருதி ஞான
வொளியே யொளியா வொளி.

(இ-ள்.) இத்தன்மையவாகிய ஞானத்தினைக் காணப்பெற்றமையால் வருமகிழ்ச்சியைப் பெரியவிடயமாகநினைந்து, ஞானமாகியவொளியன்றி வேறுனக்கோரொளியின்றாகும்படிஅதனுட்புக்குக்கரந்துநிற்பாயாகஎன்க.

கரந்துநிற்றல் விகற்பமறக் கூடிநிற்றல். (௯)

கண்டபடி யேகண்டு காணாமை காணாமை
கொண்டபடி யேகொண் டிரு.

(இ-ள்.) ஞானமான துனக்கு யாதொருபடியே வெளிப்பட்டது அப்படியே நீயும் கண்டறியாமையாகிய அதீதாவத்தை வந்து தோன்றாமல் யாதொருபடியுன்னை விழுங்கிற்றப்படியே நீயும் விழுங்கக்கொடுத் திருப்பாயாக என்க.

இம்மூன்றுபாட்டானு ஞானத்தினைக் காணுமாறும், கண்டாலதனுட் கலக்குமாறும், அவ்வழிதன்னை அதன் வயத்தனாக்குமாறும் கூறப்பட்டன. மாணவகனே யென்ப திம்மூன்றிற்குங்கூட்டி யுரைக்கப்பட்டது. (௬0)

அறியுநெறி முடிந்தது.

ஆகத்திருக்குறள் - ௬௧.

## எ - வது. உயிர் விளக்கம்.

அஃதாவது, ஆன்மசுத்தி பண்ணும்படி அறியுநெறியிற் கூறியவாற்றான் அறிந்தபடிநின்று யானெனதென்னுஞ் செருக்கறுத்தல் கூறினமையின், மேலையதிகாரத்தினோடிதற்கியை புடைத்தெனக் கொள்க.

தூநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோற்
றானதுவாய் நிற்குந் தரம்.

(இ-ள்.) கோடையான் வெதும்பினோன் குளிர்ந்த நிழலையடைதற்கு அடைதியென வொருவருஞ் சொல்லார், தானே விரைவினடையுந் தன்மையினையொக்கும், மாயாவிகாரவெம்மையான் வருந்தினோ னொருவன் தானவ்வருளினையடைந்ததுவாய் நிற்குமுறைமை. எனவே உலகவெறுப்பினல்லது அருளினை யடைதல் கூடாதென்பதாம் என்க.

இதனால் அருளினையடைதற்கு ஏதுகூறப்பட்டது. (௧)

தித்திக்கும் பாலுநாங் கைக்குந் திருந்திடுநாப்
பித்தத்தின் றன்றவிர்ந்த பின்.

(இ-ள்.) குற்றந்தீர்ந்தநாவானது பித்தநோயினின்றும் தான்நீங்கின பின்னர்முன்கைத்தபாலும் தித்திக்கும் அதனைத்தானுங்கண்டறியும்என்க.

மலவிருள் தீர்ந்தபின்னர் முன்னந்திரோபவித்து நின்றமருளும் அருள்வடிவாகி வெளிப்படும், அதனையுயிர்களுங்காணுமென்பது பொருள். மாசுதீரின்விளங்கித் தோன்றுந்தன்மையினையுடையது உயிரென்பதற்கு உவமித்து இதனைத்திருந்திடு நாவென்றருளிச்செய்தார். இதுவும் ஒட்டென்னு மலங்காரம்.

இதனால் அருள்வெளிப்படுங் காலமும், உயிர் அதனைத்திருந்திக் காணுங்காலமுமொன்றென்பதூஉங் கூறப்பட்டன. (௨)

காண்பா னொளியிருளிற் காட்டிடவுந் தான்கண்ட
வீண்பாவ மெந்நாள் விழும்.

(இ-ள்.) ஒளிவடிவாகிய ஞானம், தன்னைக் கண்டறிதற்பொருட்டு மலவிருளிலே மருண்டு கிடக்கின்ற வுயிர்கட்குத் தன்னை வெளிப்படுத்தவும், அதனை நாடாது உயிர்தானே காண்பதாகக் கண்டமையாலே வறிதேவரும்பாவ மென்னபயனைச் செய்ததாய் வந்துமுற்றும் என்க.

ஓர் புலனுணர்வான் வரும் பாவம்போலாது வாளா வருதலின் வீண்பாவமென்றருளிச்செய்தார். பித்தம் பாலானன்றி மற்றொன்றானுந் தீராவாறுபோல, மலமும் அருளாலன்றிப்பிறிதொன்றால் தீராதென்பதூஉம்,அருள் மறைந்துநில்லாது வெளிப்பட்டு நிற்பினும் அந்நாக்குச்சுவைகாண்டல்போலத் தானே காண்டல் கூடாதென்பதூஉம், இதனுட் கொண்டுகிடந்தவாறு கண்டுகொள்க.

இதனால் அருளை முன்கொண்டு காணுக்கால் குற்றமுடைத்தென்பது கூறப்பட்டது. (௩)

ஒளியு மிருளு மொருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல்.

(இ-ள்.) பலவாய பொருள்கடம் பன்மை தோன்றாது ஒருபடித்தாயிருத்தல், ஒளியின் கண்ணும் இருளின்கண்ணுமொக்கத்தெளிந்துநிற்றலும் மருண்டு நிற்றலுமாய செயல்கள் அவ்விடத்துப்பேதம் என்க.

பிறிதொன்றுந் தோன்றாதென்பது கருத்து.

இதனால் அருளோடுகூடி நிற்றல் ஒருவகையால் இருளோடு கூடிநிற்றல்போலுமென்பது கூறப்பட்டது. (௪)

கிடைக்கத் தருமோநற் கேண்மையார்க் கல்லா
லெடுத்துச் சுமப்பானை யின்று.

(இ-ள்.) நல்ல கேளிரை யுடையார்க்கல்லால் தம்மேல் பாரமுழுதுஞ் சுமத்தச் சுமக்குமொருவனை யிப்பொழுதே கிட்டுதல்கூடுமோ என்க.

நற்கேண்மையென் றருளிச்செய்தார் அருளோடு கூடியதென்பதற்கு. "சிவனுமிவன் செய்தியெல்லா மென்செய்தி யென்றும் செய்ததெனக் கிவனுக்குச் செய்ததென்றும் - பவமகல வுடனாகி நின்றுகொள்வன் பரிவார் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே" என்றருளிச் செய்தவாறுகாண்க.

இதனால் அருளாகுங்கேண்மையினையுடையார்க்குத் தன்னையடைந்தார் வினைகளெல்லாம் அவரைத் தொடராது தன்செயலாகக்கொள்ளு ஞேயம் வெளிப்படுதலெளிதென்பது கூறப்பட்டது. (௫)

வஞ்ச முடனொருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல்.

(இ-ள்.) ஒருவன் சேமித்த பொருளினை ஒருவன் களவினால் கவர்ந்துகொண்டேக, மற்றவனுறங்குதல் செய்தானோ, அவ்விடம் விட்டுநீங்குதல் செய்தானோ, மாணவகனே! சொல்வாயாக என்க.

இதுவும் முன்னரதுவும் ஒட்டென் னுமலங்காரம்.

இதனால் அதுபோலக் கேடின்றி நிரம்பிநிற்குஞானசத்தியினைவஞ்சித்து அதன் முதலாய ஞேயத்தினை யுடைத்தாதல் அரிதென்பது கூறப்பட்டது. (௬)

தனக்குநிழ லின்று மொளிகவருந் தம்ப
மெனக்கவர லில்லா திருள்.

(இ-ள்.) தனக்கெனவேறோரொளிதோன்றாதவண்ணம் சூரியகிரணத்தாற் கவர்ந்துகொள்ளும் படிகத் தூண்போல, ஆன்மா தன்னுடையபோதந்தோன்றாதுநிற்கும் வண்ணம் அருள் கவர்தலைச்செய்யுமாயின் அந்நிலையே யிருளானது தன்பால் நிலைபெறாது நீங்கும். எனவே சூரியகிரணத்தினுள்ளே தன்னைக்கொடுத்து நிற்கும் படிகம்போல ஆன்மாவுந் தன்னை அருளினுள்ளே கொடுத்து நிற்றல்வேண்டு மென்பதாம் என்க.

இதனால் ஆன்மாவை அருள் தன்வயத்தாக்குமாறு கூறப்பட்டது. (௭)

உற்கைதரும் பொற்கை யுடையவர்போ லுண்மைப்பி
னிற்க வருளார் நிலை.

(இ-ள்.) தழற்கொள்ளியினைப் பிடித்திருக்கு மழகியகையினையுடையோர், தாம்வேண்டிய பொருள்களைக் காணுமளவும் அதனைமுன்னிட்டுத் தாம் பின்னிற்கு மாறுபோல, ஞேயமானது வெளிப்படுமளவும் அருளைத் தமக்கு முன்னாக்கித் தாம் அதன்பின்னிற்றலே அருளோடு பொருந்தி நிற்கு நிலையாவது என்க.

இதனால் அருளோடு பொருந்திநிற்குமுபாயங்கூறப்பட்டது. (அ)

ஐம்புலனாற் றான்கண் டகன்று லதுவொழிய
வைம்புலனார் தாமா ரதற்கு.

(இ-ள்.) மெய் வாய் கண் மூக்குச் செவிகளால் தாம் கண்டறிந்த விடயங்களுள் ஒன்றல்லவாயின், அவ்வருளானேயன்றிப் பேரின்பமாகிய நேயத்தினையடைதற்கவ்வைம்பொறிகள்தான்ஆர்?உயிர்கள்தாம்ஆர்?என்க.

சுட்டிறந்து நின்றமையால் இவர்க்கடைத லுரிமையில்லையென்பார் ஆனொன்றருளிச்செய்தார். (கூ)

தாமே தருமவனைத் தம்வலியி னாற்கருத
லாமே யிவனா ரதற்கு.

(இ-ள்.) ஒருபொருளினை யொருவற்குத் தாமே கருத்தாகநின்று விரும்பித்தருதற்கு உரியானைத் தம்வலியால் தந்தவராகநினைத்தல் முறைமையன்றே, ஆதலால், அவ்வருளாற்பெறும்பேரின்பத்திற்கு அப்பெற்றியினையடைய நிற்கும் இவன் யார் என்க.

இவை இரண்டுபாட்டானும் பேரின்பமாவ தருளாலேயன்றிக் கரணங்களோடு கூடியும் தனித்தும் உயிர்களால் அடையப்படா தென்பது கூறப்பட்டது. (க0)

உயிர்விளக்கமுடிந்தது.

ஆகத்திருக்குறள் - எக.

---

## அ - வது. இன்புறு நிலை.

அஃதாவது, ஆன்மலாபமடையு முறைமை. ஆன்மசுத்திகூறிப்பின்ன ரதனாலெய்தும் பயன்கூறினமையின் மேலையதிகாரத்தினோடு இதற்கியை புண்மையறிக.

இன்புறுவார் துன்பா ரிருளி னெழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்.

(இ-ள்.) முன்னர் ஞானத்தினைப் பின்னிட்டுத் தாமதற்கு முன்செல்வாராகில் துன்புற்றவரே, பின்னர் மிக்க துன்பினைச்செய்யு மலவிருளிலே நின்று மெழுந்த ஞானவிளக்கினை முன்னிட்டுத் தாமதன்பின் செல்வாராகில் பேரின்பத்தினையடைவார் என்க.

துன்பவின்பமடைதற்குக்காரணம் ஞானத்திற்கு முன்பின் சேறலாயிற்று. கட்டுற்று நின்றவர்க்கும் வீடடைபவர்க்குந் தம்முள் வேற்றுமை யிதுவென்பதுமாம்.

இதனால் பேரின்பத்தை யெய்துவா ரிவரொன்பது கூறப்பட்டது. (க)

இருவர் மடந்தையருக் கென்பயனின் புண்டா
மொருவ னொருத்தி யுறின்.

(இ-ள்.) இரண்டுபேர் மகளிர்க்குத் தம்புணர்ச்சியால் வரும்பய னென்னை? ஓர் புருடனு மோர்மகளுந்தம்மிற் புணர்வாராயினன்றே யின்ப முண்டாவது என்க.

உயிர்க்கும் அருட்குமுதலாயநேயம் வெளிப்படினல்லது இன்பமுண்டாகாதெ ன்பதுபொருள். ஒருவனொருத்தியென்னும் உவமம் தலைமையும் தன்மையும்பற்றிவந் தது. இதற்கிவ்வாறன்றி யுயிரினைப் பெண்ணியல்பினதாகவும் இறைவனை யாணியல் பினதாகவும் அறிவில்லார் கூறுமது பொருளன்று; அன்னவியற்கை அசேதனவடி விற்கல்லது சேதனவடிவிற் கின்றாதலான்.

இதனால் பேரின்பத்தினையெய்து மெல்லை கூறப்பட்டது. (உ)

இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவ
மின்பகன மாதலினு லில்.

(இ-ள்.) தன்னைவந் தடையுமவர்க்குப் பேரின்பத்தினைவழங்கும் அவ் விறைவன் தனக்கு வடிவம் ஆநந்தமயமாதலால், தான் தன்னை நுகர்வ தில்லை என்க.

அநாதியே யாணவமலத்தால் மறைப்புண்டு அதுநீங்கி இப்பொழுது நவமாக வந்ததுபோலக்கருதுமுயிர்கள்போலாது,இறைவன் அநாதிமலமுத்தனாதலான் அவற் கில்லை யென்றருளிச்செய்தார். புதிதாக வந்ததன்றென்பது கருத்து.

இதனால் உயிர்களுக்குக் கொடுப்பதன்றி இறைவன் தானுமவ்வின்பத்தினை நுகர் வனோவென்னுஞ் சங்கையினையகற்றிக்கூறப்பட்டது. (௩)

தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலீ யேகமெனக் கொள்.

(இ-ள்.) தாள் தலை யென்னுஞ் சொல்லிரண்டுந் தம்பொருள் பிரிந்து தோன்றாது பொருந்தியவாறுபோல், புணர்ச்சிக்க ணொருகாலு முண்டா காத வேற்றுமையினையு மின்பத்தினையு முடைய கலப்பினையிறைவனோ டொன்றுதலெனக்கொள்வாயாக மாணவகனே என்க.

அச்சொற்கள் ஒரோருகாற் பிரிதலும், புணர்வாற் றும்பெறும்பயனின்மையுங் கருதி, இவை யன்னவல்லவென்பதற்கு நிகழாவேற்றின்பக் கூடலென் றருளிச்செய் தார். தாளுந்தலையுமென்னுஞ் சொற்களாற்கூறியது, உயிரினது தாழ்வு மிறைவனது உயர்வுங் காட்டுதற்காம்.

இதனால் ஞேயத்தழுந்தி யொன்றுபட்டு நிற்குநிலை கூறப்பட்டது. (௪)

ஒன்றாலு மொன்றா திரண்டாலு மோசையெழா
தென்றாலு மோரிரண்டு மில்.

(இ-ள்.) இறைவனையு முயிரினையு மொன்றென்போமாயினும் பின் னர்ப்பொருந்தவேண்டுவதில்லை,இரண்டென்போமாயினுந்தம்முட்டாக்கிய வொலியெழுதலைச்செய்யாது, ஆதலாலொருபொருளுமல்ல இரண்டாவது மில்லை என்க.

இதனால்இறைவனையும்உயிரினையுமேகமென்பாரையுமிரண்டென்பாரையுமறுத்து அத்துவிதங்கூறப்பட்டது. அத்துவிதமாவது தம்மிற்கலப்பால் அநந்நியமாயிருத்தல்.

உற்றாரும் பெற்றாரு மோவா துரையொழியப்
பற்றாரு மற்றார் பவம்.

(இ-ள்.) பேரின்பமாகிய முத்தியினை யடைந்தாரும், அதற்கு நேரே காரணமாகிய சமாதியை யடைந்தாரும், மெய்ப்பொருளினை யொருகாலு நீங்குதல் செய்யார். அவ்வாறு வாக்கிறக்கும்படி அதனைப்பற்றி நில்லாதாரும் பிறப்பினை யற்றவர் என்க.

உரையொழியப்பற்றா ரென்றதனால் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாகிய நிலையின் கண்நிற்பரென்பதாம். பிறப்பற்றாரென்பது பதமுத்திகளையடைவாரென்பதுகருத்து.

இதனால் வீட்டினையடைவாரது வகைமை கூறப்பட்டது. (சு)

பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமே
நீயொன்றுஞ் செய்யாம னில்.

(இ-ள்.) பேய் பிடியுண்டோரது தன்மை யுனக்குண்டாமளவு நீமேல் யாதொரு செயலுஞ்செய்யா தசைவற நிற்பாயாக என்க.

பேய்பிடியுண்டாரது செயலெல்லாம் பேயின்செயலாமாறுபோல உன்செயலனைத்தும் இறைவன்செயலாமளவுமென்பது கருத்து. பின்னரச்சாதனையின்றென்பதாம். இனியென்றதனுன் முன்னர்ச்செய்யவேண்டுவவனைத்துஞ் செய்துமுற்றியதென்பதூஉம்பின்னிலைக்குச்செயலின்மையேவேண்டுவதென்பதூஉங்கண்டுகொள்க.

இதனால் சமாதிசெய்வோர்க் கதுமுதிர்ந்து கைவருமாறு கூறப்பட்டது. (எ)

ஒண்பொருட்க ணுற்றா ருறுபயனே யல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண்.

(இ-ள்.) ஒள்ளியதாய மெய்ப்பொருளினது எல்லையைத் தலைப்பட்டார்க் கவ்விடத்தேயும் பேரின்பமேயன்றி மற்றுள்ள யோகமுதலிய தொழில்களியாவும் உறங்குவோர்கையிற் பண்டம்போல மெல்லெனத்தன்வயத்திலே நீங்குவதாக வறிதி. எனவே தாமேவலிதுநீப்பதன்றென்பதாம் என்க.

இதனால் அவர்சமயாசாரம் நீங்கு முறைமை கூறப்பட்டது. (அ)

மூன்றாய தன்மையவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றாத வின்பமதன் சொல்.

(இ-ள்.) ஞாதுரு ஞான ஞேயமென்னு மூன்றுவகைப்பட்ட தன்மையுஞ் சிவசீவபாவங்களிரண்டுந் தம்மின் மிகவுங் கூடியகலப்பினாற் றோன்றுதலைச் செய்யாத வின்ப மவ்விடத்து வார்த்தையாது என்க.

இதனால் அவ்வானந்தமிகுதியின் அதிசயங் கூறப்பட்டது. (கூ)

இன்பி னினிதென்ற வின்புண்டே லின்புண்டா
மன்பு நிலையே யது.

(இ-ள்.) எல்லா வின்பங்களினு மினிமை யுடைத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படும் பேரின்பமாவ தொருவற்கன்பெ னிப்பொழுதுண்டாயி னிப்பொழுதேயுளதாம், அதுமிக்கவன்பினது நிலையே தனக்குநிலையாக வுடையதாகலான் என்க.

இன்பென்ற பொதுமையா லமிழ்தநுகர்ச்சி முதலாயினவெல்லா மடங்கும். ஏகாரந் தேற்றம்.

இதனால்அன்புடையார்க்கப்பேரின்பமெளிதினினெய்துமென்பது கூறப்பட்டது.

இன்புறுநிலைமுடிந்தது.

ஆகத்திருக்குறள் - அக.

---

## கூ - வது. ஐந்தெழுத்தருணிலை.

அஃதாவது, ஐவகைப்பட்ட திருவெழுத்தாகிய அருளினது முறைமை. இதனையு மோர்திருவருளாகக் கூறியருளினார் வீட்டுநெறி காட்டுதலால்; அவ்வாறே சமாதியினை யடைதல் கூடாதார்க் கிதனை விதிப்படியோதவே யந்நிலை கூடுமாதலின் மேலை யதிகாரத்தினோ டியையுடைத்தெனக் கொள்க.

அருணூலு மாரணமு மல்லாது மைந்தின்
பொருணூ றெரியப் புகும்.

(இ-ள்.) சைவாகமங்களினது கருத்தினையும், வேதங்களினது கருத்தினையும், இவை யிரண்டுமல்லாத பலகலைகளினது கருத்தினையும் சற்றுவல்லோ ராராயப்புகுவாராயின் அவையெல்லாந் திருவெழுத் தைந்தின் பொருளாகிய பதி பசு பாசங்களைச் சொல்லு நூல்களாம் என்க.

இதனால் எல்லா நூற்பொருள்களும் இவ்வைந்தெழுத்தினுள்ளே அடங்குமென்பது கூறப்பட்டது. (க)

இறைசத்தி பாச மெழின்மாயை யாவி
யுறநிற்கு மோங்காரத் துள்.

(இ-ள்.) சிவனும் சத்தியும் ஆணவமும் அழகுடைத்தாய மாயையும் ஆன்மாவும் ஆகிய ஐந்தும், ஐந்தெழுத்தோரெழுத்தாகிய பிரணவத்தினுள்ளே யமைந்துநிற்கும் என்க.

இதனால் பிரணவமென்று பேர்பெற்றுநிற்கு நுண்ணியவைந்தெழுத்தினதியல்பு கூறப்பட்டது. (உ)

ஊன நடன மொருபா லொருபாலா
ஞானநடந் தானடுவே நாடு.

(இ-ள்.) பிறப்பினைவிளைக்கு நகார மகாரங்களாகிய கூத்தொருமருங்காகவும், வீட்டினை யுதவுஞ் சிகார வகாரங்களாகிய கூத்தொரு மருங்காகவும், யகாரமாகிய ஆன்மா இவ்விருவகைக்கு நடுப்பட்ட தொன்றாகவும் விசாரித்தறிவாயாக என்க.

கூத்தென்றது உயிர்களைப் பெத்தமுத்திகளி லுய்த்து நடத்தலை.

இதனால் ஐந்தெழுத்தின் பொருளியல்பு கூறப்பட்டது. (ங)

விரியமன மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும்.

(இ-ள்.) மகார நகாரமாகிய மலமும் திரோதமு மிகவு மிறுகப்புணர்ந்து யகாரமாகிய வுயிர்களைத் திரும்பவிடா; அவ்வுயிர்கள் தம் பெரிய பிணியாகிய மலவிருள் தீருங்கால் சிகாரமாகிய சிவத்தினை யடையும். எனவே மலந்தீரவே திரோதந்தானே நீங்குமென்பதாம் என்க.

வினையென்பது ஈண்டுப்பிணியென்னும் பொருள்தந்து நின்றது.

இதனால் கட்டு வீடென்னு மிரண்டும் ஐந்தெழுத்தினானே அமையுமென்பது கூறப்பட்டது. (ச)

மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாசு மீளா விடின்.

(இ-ள்.) மயக்கத்தினைப் பொருந்திய திரோதானமு மலமுமாகிய நகார மகாரம் இரண்டும் ஆதிக்கண்ணதாக வுச்சரிக்கில், அவைகள் நீங்குமோ, இவற்றைக் கீழாக்கிச் சிவமாகிய சிகார மேலாம்வண்ண மாற்றி யுச்சரியாதொழியின் என்க.

இதனல் நகார மகாரங்களை முதலாக உச்சரித்து வழங்குவது வீட்டினையடைவோர்க் காகாதென்பது கூறப்பட்டது. (ரு)

ஆராதி யாதார மந்தோ வதுமீண்டு
பாரர்து மேலோதும் பற்று.

(இ-ள்.) தமக்காதார மாருகவெண்ணியவ்வா றுச்சரித்தலால் வரும் பழுதினைத் திரும்பி விசாரியாம லந்தோ நகாரமகாரங்களை மேலாக உச்சரிக்கும் விருப்பம் என்க.

இதனல் அவ்வாறோதுவார் துணையின்றித் துன்புறுதற்கிரங்கிக்கூறப்பட்டது.

சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும்
பவமிதுநீ யோதும் படி.

(இ-ள்.) சிகார வகாரமென்னு மிரண்டுமாதிக்கண்ணதேயாம்வண்ண முச்சரித்தல் கூடுமாயின், அந்நிலையே யுன்து பிறவித்துன்பநீங்கும், மாணவகனே! வீட்டினைக்காமுற்ற நீ உச்சரிக்கு முறைமையிது என்க.

இதனல் முத்தரோதுமாறு கூறப்பட்டது. (எ)

வாசி யருளியதை வாழ்விக்கு மற்றதுவே
யாசி லுருவமுமா மங்கு.

(இ-ள்.) அவ்வாறுச்சரிக்குங்கால், வகாரமாகிய வருள் சிகாரமாகிய சிவத்தினைக் காட்டி யகாரமாகியவுயிரினை வீட்டின்பத்திலே யிருத்தும். அன்றியும் அவ்வருளே யந்தச்சிவத்திற்குக் குற்றந்தீர்ந்த திருமேனியாயிருப்பது என்க.

இதனல் திருவெழுத்தைந்தில் வகாரமாகிய வருளினது தன்மை வகுத்துக் கூறப்பட்டது. (அ)

ஆசின்வா நாப்ப ணடையா தருளினல்
வாசியிடை நிற்கை வழக்கு.

(இ-ள்.) குற்றந்தீர்ந்த திரோதானமும் அருளுமாகிய நகார வகாரங்கட்கு நடுப்பட்டு நில்லாது வகாரமாகிய வருளினலே யகாரமாகிய வுயிர் அவ்வகாரத்திற்குஞ் சிவமாகிய சிகாரத்திற்கு நடுப்பட்டு நிற்பது முறைமை என்க.

அவ்வா றதற்கெழுத்துக்களைமாறி யுச்சரிப்பது குருமுகத்தாற் றெளிந்து கொள்க. ஆன்மாவைமறைக்கும் பாசங்களைச்செலுத்துவதன்றி திரோதானசத்தி தானுகமறையா தென்பதற்கு ஆசினவென் றருளிச்செய்தார்.

இதனால் திருவெழுத்தினைக் கூறிய முறைமையினேதுவா ரடைந்து நிற்கு நிலை கூறப்பட்டது. (கூ)

எல்லா வகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து.

(இ-ள்.) எவ்வகைப்பட்ட வுபாயங்களினையு நூல்களுரைக்கும், இவ்வாறு ஆன்மாவானவன் சிவசத்தியினை நீங்கிநில்லாதுடனாய் நிற்குந் திறத்தினைக் கருதி என்க.

இதனால் அறியுநெறிமுதல் இவ்வதிகாரமீறான நான்கதிகாரத்தினது கருத்துந் தொகுத்துக் கூறப்பட்டது. (க0)

ஐந்தெழுத்தருணிலைமுடிந்தது.

ஆகத்திருக்குறள் - கக.

---

## க0 - வது. அணைந்தோர்தன்மை.

அஃதாவது, இவ்வகைப்பட்ட சமாதியினை யடைந்தோரதுதன்மை. மேலையதிகாரங்களாற் சமாதிகூடுமுறைமைகூறியது; கூடினோரது தன்மை இதனாற் கூறுதலின், அவற்றோடிதற் கியைபுடைத்தெனக்கொள்க.

ஓங்குணர்வி னுள்ளொடுங்கி யுள்ளத்து ளின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்.

(இ-ள்.) நிறைந்த ஞானத்தினுள்ளே தாம் அடங்கித் தம்மறிவினுள்ளே பேரின்பமடங்கும்படி யாநந்த நித்திரைபண்ணுநிற்பர், மற்றவார்த்தையாதுளதாம் என்க.

அவ்வின்பம் இறைவற்கின்றி யுயிர்கள் தாமேநுகர்தலின் உள்ளத்திலின்பொடுங்க வென்றும், ஞேயத்தழுந்தினு ஞானத்தின்மிக்கா ரன்றென்பதற்கு ஓங்குணர்வினுள்ளடங்கியென்று மருளிச்செய்தார்.

இதனால் அவர்ஞேயத் தழுந்திநிற்கு மியல்பு கூறப்பட்டது. (க)

ஐந்தொழிலுங் காரணங்க ளாந்தொழிலும் போகநுகர்
வெந்தொழிலு மேவார் மிக.

(இ-ள்.) பரமசிவனாற் செய்யப்படும் படைப்பு நிலை ஈறு மறைப்பு அருளென்னும் ஐந்தொழில்களையு மொருங்கே செய்தலும், அயன் மால் உருத்திரன் மகேசன் சதாசிவனென்னு மிவரிலொருவற்கு மொரோவொருதொழிலைச்செய்தலும், மாயாபோகத்தினையருந்தும் பிறப்பிற்கேதுவாகிய வெய்யதொழிலினைச் செய்தலுஞ் சிறிதும் பொருந்தாரவர் என்க.

அசஞ்சலமா யகண்டமா யொழிவற நிறைந்த ஞானவடிவினராய் நின்றும் பரமானந்தத்தினை யனுபவித்திருக்கு மொன்றிற்குமே யுரியாரொன்பது கருத்து. மிகவென்பது குறிப்புமொழியாய்ச் சிறிதுமென்னும் பொருள்விளங்க நின்றது. "உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தே" என்றருளிச்செய்தவாறு காண்க.

இதனால் அவர் மற்றொரு தொழிற்கு முரியாரல்ல ரொன்பது கூறப்பட்டது. (உ)

எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரோன்
றல்லா தறியா ரற.

(இ-ள்.) இயல்பினுன் முழுவதூஉ முணருஞானமானது வெளிப்பட்டுத் தம்மையிரண்டறக் கலந்து நிற்பினு மிவ்விடத் திந்தச் சீவன்முத்தரானவ ரானந்த ஞானமொன்றுமேயன்றிப் பிறிதொரு பொருளினையுஞ் சிறிது மறிதல்செய்யார் என்க.

அற என்பது மிகவென்பதுபோலக் குறிப்புமொழியாய் நின்றது. சீவன் முத்தர் சிவ மொன்றுமே யன்றிப் பிறிதொன்று மறியாராகவே பரமுத்தரு மவ்வாறுதல் கூறவேண்டாவாறுயிற்று. "பரஞானத்தால்" என்பதனுள் "சீவன்முத்தர்பரமே பார்த்திருப்பார்" என் றருளிச்செய்த வாறுகாண்க.

இதனுல் அவர் பிறிதொன்றுமறியா தெவ்விடத்துஞ் சிவமே கண்டிருத்தல் கூறப்பட்டது. (௩)

புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார்
தலநடக்கு மாமை தக.

(இ-ள்.) ஓர்விடய மெதிரிடுங்கால் அதற்கஞ்சி அதன்மேற்செல்லுந் தம்முணர்வினை மாற்றித் தமது முதலாகிய ஞேயத்தினிடத்திலே புக்குப் பொருந்தி மறித்து நீங்குதல் செய்யார், அவர் பூமியின் கண்ணே நடந்து செல்லுங்கா லொருவரெதிர்ப்படி னவரையஞ்சித்தன் றலையினைச்சுரித் துள்ளே வாங்கி யசைவறக்கிடக்கு மாமையினை யொப்ப என்க.

ஆமை பின்னரொதிர்ந்தோரகலுங்காற் றன்றலையினை வெளிப்படுத்திச் செல்லுமதுபோ லிவர் விரைவிற்றிரிபு படாமையிற் போதாரொன் றருளிச்செய்தார்.

இதனுல் அவர் புலனுணர்வுக்கஞ்சி யகலுமாறு கூறப்பட்டது. (௪)

அவனையகன் றெங்கின்று மாங்கவனு மெங்கு
மிவனையொழிந் துண்டாத லில்.

(இ-ள்.) இறைவனைநீங்கி யெவ்வுலகமு நிற்பதில்லை, அதுபோல இறைவனுதலடைந்த விம்முத்தான்மாவை யன்றி யெவ்விடமுமுளதாய் நிற்றலில்லை. எனவே இவனுமிறைவனைப்போல வியாபகனுய் நிற்குமென் பதாம் என்க.

"காயங்கழிந்தக்கா லெங்குமாய்க் கருத்தாப்போல்நிற்பன்" என் றருளிச்செய்த வாறு காண்க.

இதனுல் அவர் சிற்றறிவுநீங்கிப் பேரறிவுடைய ரென்பது கூறப்பட்டது. (௫)

உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேது மில்.

(இ-ள்.) அகமும் புறமு மொருதன்மைத்தாய் நிற்கு ஞானத்தினையடைந்தோருக்கொன் றனையிகழ்ந்திடும்வண்ணமெவ்வாற்றுனுமில்லை என்க.

இதனுல் அவர்க்கெல்லாப்பொருள்களும் ஞானமாயேதோன்றுதல்கூறப்பட்டது.

உறுந்தொழிற்குத் தக்க பயனுலகந் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன்.

(இ-ள்.) தன்னையாற்றிய தலைவரைப் பின்றொடர்ந்து சூழும் யானெனதென்னுஞ் செருக்காற் செய்யப்பட்ட வினைக்கேற்ற பயனுவ துலக

வாழ்க்கைகள், செருக்கினைநீங்கித் தம்மை யிகழ்ந்தோர்செய்யுந் தானந் தவமுதலிய தொழிற்குவரும் பயனுவ தழிவில்லாத வீட்டின்பமே என்க.

தக்கபய னென்றதனால் பயன்பலவாயிற்று. வறுந்தொழிலென் றருளிச்செய் தார், தொடர்ந்துபயன் வழங்காமையின்.

இதனால் அவரோர்தொழிலினைச்செய்யினும் பிறிதொருகாமியத்தினைக்கருதிச் செய்யாரென்பது கூறப்பட்டது. (எ)

ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சுடும்.

(இ-ள்.) பக்குவப்பட்டமைந்த வினையான துடம்பிற்கமைத்த கால வரையறையிலே தொலையும், இடைப்பட்டகாலத்தில் வந்து பொருந்தும் வினைக ளுளவாயி னருளென்னு நெருப்பினாலே வெந்துபோம் என்க.

சஞ்சிதம் நீங்காமல் ஞானம் வெளிப்படாது, வெளிப்படாதாகவே ஆகாமியந் தீர்வதில்லை, அதனை அருளேசுடுமென்பதனாற் சஞ்சிதமு நீங்கிற்றென்பது தானே போதருமெனக்கொள்க. தோன்றிலென்பதனால் அதுதோன்றாதவண்ண மிடையறா தருளோடு நிற்பரென்பது கருத்து.

இதனால் அவர்க்கு வினைத்தொடர்பின்றாமாறு கூறப்பட்டது. (அ)

மும்மை தருவினைகண் மூளாவா மூதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம்.

(இ-ள்.) இம்மை அம்மை மறுமையென்னு மூவகைப்பயனையுந்தரும் வினைகள் யாவுந்தொடரா, தம்மேலாய அறிவினையுடையார்க்கும் பிறந் தெய்து மின்பமு மதனோடு கூடிநிற்கவே யுளதாமாகலான் என்க.

இம்மை இப்பிறப்பு, அம்மை மேலுலகினையடைதல், மறுமை மறித்து வரும்பி றப்பு. உடம்பிறந்தகாலத்து நிலைவேறுபடுதலின்மைநோக்கி அம்மையு மிம்மையே யாமென் றருளிச்செய்தார்.

இதனால் அவர்க்குச்சிறிதும் வினைத்தொடர் பின்றென்பதுவலியுறுத்தப்பட்டது.

கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக.

(இ-ள்.) யானெனதென்னும் வஞ்சத்தலைமையினையுடைய வான்மாக் கள் படுந்துன்பத்தினை யெண்ணித் தம்மிடத்தெழுந்த கருணையாகிய கட லினுள்ளே மிகவு மலைதலைச்செய்வர் என்க.

அலைதல் இரக்கத்தாற் றளர்தல்.

இதனால் அவர் வீட்டினைவிரும்பாத உயிர்கள்மாட்டிறைவன்போ லருளுடைய ராதல் கூறப்பட்டது. (௧0)

அணைந்தோர்தன்மை முடிந்தது.
ஆகத்திருக்குறள் - ௧0௧.

---

திருவருட்பயன்முற்றியது.

உமாபதிதேவர்திருவடிவாழ்க.
திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி-உமாபதிதேவநாயனார்

அருளிச்செய்த

# வினாவெண்பா.

நேரிசைவெண்பா.

நீடு மொளியு நிறையிருளு மோரிடத்துக்
கூடலரிது கொடுவினையேன்—பாடிதன்முன்
னொன்றவார் சோலை யுயர்மருதச் சம்பந்தா
நின்றவா றெவ்வா று நீ.

(இதன்பொருள்.) நீடுமொளியும் நிறையிருளும் ஓரிடத்துக் கூடலரிது - விரிந்தபிரகாசமும் நிறைந்தவிருளும் ஓரிடத்திலே கூடமாட்டாது,—கொடுவினையேன் பாடு இதன்முன் - கொடியவினையேன் பக்கல் தரிசிப்பதற்குமுன்,—வார்சோலை யுயர் மருதச் சம்பந்தா நீ ஒன்ற நின்றவா றெவ்வாறு - அழகியசோலையுயர்ந்த மருதநகர்வாழ் சம்பந்தமாமுனிவனே தேவரீர் அடியேனிடத்துப் பொருந்தநின்ற தெப்படி என்க.

இதனால் அந்தகன் கண்ணுக்கு ஆதித்தப் பிரகாசம் வியாத்தமா யிருந்தும் தெரியாத தன்மைபோ லென்பது பெறப்பட்டது. (க)

இருளி லொளிபுரையு மெய்துங் கலாதி
மருளி னிலையருளு மானுங்—கருவியிவை
நீங்கி னிருளா நிறைமருதச் சம்பந்தா
வீங்குனரு ளாலென் பெற.

(இ-ள்.) இருளில் ஒளி புரையும் - ஆணவமேலிட்டகாலத்து ஞான மொழிந்துநிற்கும்,—எய்துங் கலாதி மருளின் நிலையருளும் - கலாதிகளைப் பொருந்திய விடத்தும் ஆணவத்தையே நிலைநிறுத்தும்,—மானுங்கருவியிவை நீங்கின் இருளாம் - ஒப்பற்ற கருவி அடியேனை நீங்கினபொழுது இருளாயிருக்கும்,—நிறைமருதச் சம்பந்தா ஈங்குனருளால் என்பெற - நிறைந்தமருதநகர்வாழ் சம்பந்தமாமுனிவனே இவ்விடத்துன்னருளால் பிரயோசனம் யாது என்க.

இதனால் சுத்தத்திற் பயனென்பது பெறப்பட்டது. (உ)

புல்லறிவு நல்லுணர்வ தாகா பொதுஞான
மல்லதில துள்ளதெனி லந்நியமாந்—தொல்லையிரு
ளூனமலை யாவா றுயர்மருதச் சம்பந்தா
ஞானமலை யாவாய் நவில்.

(இ-ள்.) புல்லறிவு நல்லுணர்வதாகா பொது ஞானம் - சிற்றறிவு பேரறிவாகாது பொது ஞானத்தால்,—அல்லது இலதுள்ள தெனில் அந்நியமாம் - அல்லது முன்பில்லாத சிவஞானம் மலபரிபாகத்திலே யுண்டாமென்னில் சற்காரியவாதமாகாமல் அந்நியமேயாம்,—தொல்லை இருள் ஊனமலை

யாவாறு உயர்மருதச் சம்பந்தா ஞானமலையாவாய் நவில் - பழைய ஆணவ மலக் குற்றத்தால் மயங்காத முறையிலுயர்ந்த மருதநகர்வாழ் சம்பந்தமா முனிவனே மலைபோன்ற ஞானத்தை யுடையவனே திருவாய் மலர்ந்தருள வேண்டும் என்க.

இதனால் ஆன்மஞானம் சிவஞானமாகாதென்பது பெறப்பட்டது. (௫)

கனவு கனவென்று காண்பரிதாங் காணி
னனவி லவைசிறிது நண்ணு—முனைவனரு
டானவற்றி லொன்றா தடமருதச் சம்பந்தா
யானவத்தை காணுமா றென்.

(இ-ள்.) கனவு கனவென்று காண்பரிதாம் - கனவிலேநின்று கனவினைக்காணப்படாது,—காணில் நனவிலவை சிறிது நண்ணு - நனவிற் காணும் கண்டதென்னில் அங்கக்கருவிக ளில்லாமையாலே சிறிதுங்காணமாட்டாது,—முனைவன் அருடான் அவற்றிலொன்றா - அருளிலே நின்று கண்டதென்னில் அருள் அவத்தைகளிற் பொருந்தமாட்டாது,—தடமருதச் சம்பந்தா யானவத்தை காணுமாறென் - தடாகம் பொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனிவனே அடியேன் அவத்தைகளைத் தரிசிக்குமுறை யெப்படி என்க.

இதனால் சுத்த தத்துவங்களைக்கொண்டறிய வேண்டுமென்பது பெறப்பட்டது.

அறிவறிந்த தெல்லா மசத்தாகு மாயின்
குறியிறந்த நின்னுணர்விற் கூடா—பொறிபுலன்க
டாமா வறியா தடமருதச் சம்பந்தா
யாமா றறிவா ரினி.

(இ-ள்.) அறிவறிந்ததெல்லாம் அசத்தாகுமாயின் - அடியேனறிவினு லறியப்பட்டவனைத்தும் அசத்தாயழிந்துபோமெனின்,—குறியிறந்த நின்னுணர்விற்கூடா - குறியினைக்கடந்த தேவரீருடைய ஞானத்திலே பொருந்த முடியாது,—பொறிபுலன்கடாமா அறியா - பொறிபுலனாகிய தத்துவங்கள் தாமே ஒன்றனையு மறியமாட்டாது,—தடமருதச் சம்பந்தா யாமாறறிவாரினி - தடாகம்பொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனிவனே யானை யறியப்போவதினி என்க.

இதனால்ஆன்மா அருளோடுசேர்ந்துபாசநீங்கிஅருளாய்நிற்குமென்பதுபெறப்பட்டது.

சிற்றறிவு முற்சிறையிற் சேர்வாரின் றாஞ்சிறிது
மற்றதனி னிற்கிலருண் மன்னுவாந்—துற்றமுகின்
மின்கொண்ட சோலை வியன்மருதச் சம்பந்தா
வென்கொண்டு காண்பே னியான்.

(இ-ள்.) சிற்றறிவு முற்சிறையிற் சேர்வாரின்றாம் - சிற்றறிவு முன்னேகெடுமாயின் பின்னருளைப் பெறும் பேறில்லையாம்,—சிறிது மற்றதனில் நிற்கிலருள் மன்னுவாம் - சிற்றறிவு சிறிதாக அதில் நின்றாலும் அருள்பொருந்தாதாம்,—துற்றமுகில் மின்கொண்ட சோலைவியன்மருதச் சம்பந்தா என்கொண்டு காண்பேனியான் - நெருங்கிய மேகங்களோடு பிரகாசத்தைக்கொண்ட சோலைசூழ்ந்த பெரிய மருதநகர்வாழ் சம்பந்த மாமுனிவனே எதைக்கொண்டு காணவல்லேன் யான் என்க.

இதனால் சிற்றறிவு கெட்டதுமன்று முன்போலிருந்ததுமன்று பாசபந்தநீங்கித் திருவடியிலே கலந்துகிடக்குமென்பது பெறப்பட்டது. (௬)

உன்னரிய நின்னுணர்வ தோங்கியக்கா லொண்கருவி
தன்னளவு நண்ணரிது தானுகு—மென்னறிவு
தானறிய வாரா தடமருதச் சம்பந்தா
யானறிவ தெவ்வா றினி.

(இ-ள்.) உன்னரிய நின்னுணர்வ தோங்கியக்கால் - நினைத்தற்கரிய தேவரீரருள் தோன்றியகாலத்தில்,—ஒண்கருவி நண்ணரிது தானுகும் - ஒப்பற்றகருவிகள் முப்பத்தாறுமும் பொருந்தப்படாது,—என்னறிவுதான் அறிய வாராது - என்னுடைய பசுஞானத்தாலு மறியப்படாது,—தடமருதச் சம்பந்தா யானறிவ தெவ்வாறினி - தடாகம்பொருந்திய மருதநகர் வாழ் சம்பந்தமாமுனிவனே அடியே னறிவதெப்படி யினி என்க.

இதனுல் ஆன்மா அருளேமயமாக நின்றறியுமென்பது பெறப்பட்டது. (எ)

அருவே லுருவன் றுருவே லருவன்
றிருவேறு மொன்றிற் கிசையா—வுருவோரிற்
காணி லுயர்கடந்தைச் சம்பந்தா கண்டவுடற்
பூணுமிறைக் கென்னும் புகல்.

(இ-ள்.) அருவேல் உருவன்று உருவேல் அருவன்று இருவேறுமொன்றிற் கிசையா - கர்த்தா அருவமானுல் உருவமாகமாட்டான் உருவமானுல் அருவமாகமாட்டான் அருவுமுருவும் ஒரு பொருளுக்கிசையாது,—உருவோரிற் காணில் உயர்கடந்தைச் சம்பந்தா கண்டவுடல் பூணுமிறைக் கென்னும் புகல் - திருமேனியை விசாரித்துப்பார்க்கில் உயர்கடந்தைநகர்வாழ் சம்பந்தமாமுனிவனே கொண்ட திருமேனியைப் பூணப்பட்ட கர்த்தாவுக்குத் அத்திருமேனி எதனுலுண்டானது திருவாய்மலர்ந்தருளவேண்டும் என்க.

இதனுல் கர்த்தா ஞானத்திலே திருமேனிகொள்ளுவனென்பது பெறப்பட்டது.

இருமலத்தார்க் கில்லை யுடல்வினையென் செய்யு
மொருமலத்தார்க் காரை யுரைப்பேன்—றிரிமலத்தா
ரொன்றுக வுள்ளா ருயர்மருதச் சம்பந்தா
வன்றுகி லாமா றருள்.

(இ-ள்.) இருமலத்தார்க்கு உடல் இல்லை வினை என் செய்யும் - இருமலமுடைய பிரளயாகலருக்கு மாயையின்றுதலால் உடம்பில்லை வினை புசிக்கும் வகையாது,—ஒருமலத்தார்க்கு ஆரையுரைப்பேன் - ஒருமலமுடைய விஞ்ஞானகலர்க்கு உவமையாராகச்சொல்லுவேன்,—திரிமலத்தார் ஒன்றுகவுள்ளார் - மும்மலமுடைய சகலருக்கன்றே ஒன்றுகவுள்ளது,—உயர்மருதச் சம்பந்தா அன்றுகில் ஆமாறருள்-உயர்ந்த மருதநகர்வாழ்சம்பந்தமாமுனிவனே அப்படியல்லவாகில் ஆகும்படி அருளவேண்டும் என்க.

இதனுல் விஞ்ஞானகலருக்கும் பிரளயாகலருக்கும் சுத்தமாயையிலே தேகமென்பது பெறப்பட்டது. (க)

ஒன்றிரண்டாய் நின்றென்றி லோர்மையதா மொன்றுக
நின்றிரண்டா மென்னி லுயிர் நோராகுந்—துன்றிருந்தார்
தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா யானுகி
யோங்கியவா றெவ்வா றுரை.

(இ-ள்.) ஒன்றிரண்டாய் நின்றென்றில் ஓர்மையதாம் - ஒருபொருள் விவகாரத்திலிரண்டாய் நின்று ஒன்றுமென்னில் ஒன்று பொருந்தமாட்டாது,—ஒன்றுக நின் றிரண்டா மென்னில் உயிர் நோராகும் - இரண்டாய்நின்றென்றுமென்னில் ஒன்றிலொன்றழிந்துபோம்,—துன்றிருந்தார்

தாங்கிவாழ் தண்கடந்தைச் சம்பந்தா யானுகி யோங்கியவாறெவ்வாறுனா-ஞானந்தங்கிய பெரியோர் தங்கி வாழப்பட்ட வயல்சூழ்ந்த கடந்தைநகர் வாழ் சம்பந்தமாமுனிவனே யான் சிவமாகி யோங்கிய முறைமையைத் திருவாய் மலர்ந்தருளவேண்டும் என்க.

இதனால் ஆணவத்தைப்பொருந்தினஆன்மாவைப்போலவென்பது பெறப்பட்டது.

காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை
காண்பார்க ணன்முத்தி காணார்கள்—காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர்.

(இ-ள்.) காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை காண்பார்கள் - காண்கின்ற ஆன்மாவும் காட்டுகின்ற சிவனும் காணப்படுகின்ற பொருளும் விட்டு உண்மையைத் தரிசிப்பார்களென்னில்,—நன்முத்தி காணார்கள்-நல்லமுத்தியைக்காணார்கள்,—காண்பானும்காட்டுவதும்காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன் வாட்டுநெறி வாராதவர் - ஆனால் காண்கின்றவனும் காட்டுகின்றவனும் காணப்படுகின்ற பொருளுமாகவோகாண்பார்களென்னில் அப்படிக்காண்கின்றவர்களுங்குளிர்ச்சிபொருந்தினகடந்தைநகர்வாழ் சம்பந்தமாமுனிவன்வாட்டும்வழி வாராதவர் என்க.

இதனால் ஞாதுருஞானஞேயம் இஃதென்பது பெறப்பட்டது. (கக)

ஒன்றி நுகர்வதிவ னூனு முறுதொழிலு
மென்று மிடையி லிடமில்லை—யொன்றித்
தெரியா வருண்மருதச் சம்பந்தா சேர்ந்து
பிரியாவா றெவ்வாறு பேசு.

(இ-ள்.) ஒன்றிநுகர்வதிவனூனுமுறுதொழிலும் என்றுமிடையிலிடமில்லை - இவன் சுதந்தரஹீனனுகையால் ஆர்ச்சித்த வினைப்போகமும் செயலும் எக்காலத்தும் நீ யளிக்கப்பெறுவதல்லது பிறிதிடமில்லை,—ஒன்றி தெரியா வருள்மருதச் சம்பந்தா - சர்வவியாபியாயிருக்கையிலேயுந் தோன்றாத கருணைபொருந்திய மருதநகர்வாழ் சம்பந்தமாமுனிவனே,—சேர்ந்துபிறியாவாறெவ்வாறுபேசு - தேவரீர் திருவடியைச் சேர்ந்து பிரியாமற் போகங்களைப் புசிக்குமுறைமை திருவுளம்பற்றவேண்டும். என்க.

இதனால் கர்த்தாவே போகங்களைப் பசிப்பிக்கிறவனென்பது பெறப்பட்டது. ()

அருளா லுணர்வார்க் ககலாத செம்மைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித்—தெருளா
வினவெண்பா வுண்மை வினவாரே லூமன்
கனவின்பா லெய்துவிக்குங் காண்.

(இ-ள்.) அருளாலுணர்வார்க்கு அகலாதசெம்மைப்பொருளாகிநிற்கும் பொருந்தி-ஆசாரியன் அநுக்கிரகம்பெற்ற ஞானவான்களுக்கு விட்டுநீங்கி மலைவு வராமல் செம்மைப்பொருளாகவே பொருந்திநிற்கும்,—தெருளா வினவெண்பா உண்மை வினவாரேல் ஊமன் கனவின்பாலெய்துவிக்குங் காண் - அறியத்தக்கதாக வினவெண்பாவின் உண்மையை வினவியறியாதவர் ஊமன் கனவில் பால்குடித்த லொக்கும் என்க.

இதனால் இந்நூற்பெருமை இஃதென்பது பெறப்பட்டது. (கரு)

## வினவெண்பாமுற்றியது.

உமாபதிதேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி-உமாபதிதேவநாயனார்

அருளிச்செய்த

# போற்றிப்பஃறொடை.

பஃறொடைவெண்பா.

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளி ராங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்ப—னுமன்னும்
வேதம்வே தாந்தம் விளக்கஞ்செய் விந்துவுட
னாதநா தாந்த நடுவேதம்—போதத்தா
லாமளவுந் தேட வளவிறந்த வப்பாலைச்
சேம வொளியெவருந் தேறும்வகை—மாமணிசூழ்
மன்று ணிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலைபோற்றி—குன்றாத
பல்லுயிர்வெவ் வேறு படைத்து மவைகாத்து
மெல்லை யிளைப்பொழிய விட்டுவைத்துந்—தொல்லையுறு
மந்த மடிநடுவென் றெண்ண வளவிறந்து
வந்த பெரிய வழிபோற்றி—முந்துற்ற
நெல்லுக் குமிதவிடு நீடுசெம்பிற் காளிதமுந்
தொல்லைக் கடன் றோன்றத் தோன்றவரு—மெல்லா
மொருபுடையொப் பாய்த்தா னுள்ளவா றுண்டா
யருவமா யெவ்வுயிரு மார்த்தே—யுருவுடைய
மாமணியை யுள்ளடக்கு மாநாகம் வன்னிதனைத்
தானடக்குங் காட்டத் தகுதியும்போன்—ஞானத்தின்
கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தா
லெண்ணுஞ் செயன்மாண்ட வெவ்வுயிர்க்கு—முண்ணாடிக்
கட்புலனாற் காணார்தங் கைக்கொடுத்த கோலேபோற்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண்—முற்பாற்
றனுகரண மும்புவன முந்தந்த வற்றான்
மனமுதலால் வந்தவிகா ரத்தால்—வினையிரண்டுங்
காட்டி யதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு
மீட்டறிவு காட்டும் வினைபோற்றி—நாட்டுகின்ற
வெப்பிறப்பு முற்செ யிருவினையா னிச்சயித்துப்
பொற்புடைய தந்தைதாய் போகத்துட்—கர்ப்பமாய்ப்
புல்லிற் பனிபோற் புகுந்திவலைக் குட்படுங்கா
லெல்லைப்படா வுதரத் தீண்டியதீப்—பல்வகையா

லங்கே கிடந்த வநாதியுயிர் தம்பசியா
லெங்கேனு மாக வெடுக்குமென—வெங்கும்பிக்
காயக் கருக்குழியிற் காத்திருந்துங் காமியத்துக்
கேயக்கை கான்முதலா யெவ்வுறுப்பு—மாசறவே
செய்து திருத்திப்பின் பியோகிருத்தி முன்புக்க
வையவழி யேகொண் டணைகின்ற—பொய்யாத
வல்லபமே போற்றியம் மாயக்கா ருன்மறைப்ப
நல்ல வறிவொழிந்து நன்குநீ—தொல்லையுரு
உ0. வக்காலந் தன்னிற் பசியையறி வித்தழுவித்
துக்காவி சோரத்தா யுண்ணடுங்கி—மிக்கோங்குஞ்
சிந்தை யுருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப்—பந்தித்த
பாசப் பெருங்கயிற்றூற் பல்லுயிரும் பூலிக்க
நேசத்தை வைத்த நெறிபோற்றி—யாசற்ற
பாளைப் பசும்பதத்தும் பாலனு மப்பதத்து
நாளுக்கு நாட்சகல ஞானத்து—மூள்வித்துக்
கொண்டாள் வாளக் கருவிகொடுத் தொக்கநின்று
பண்டாரி யான படிபோற்றி—தண்டாத
உரு. புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனையி
லன்புசேர் கின்றனகட் டைந்தாக்கி—முன்புள்ள
வுண்மை நிலைமை யொருகா லகலாது
திண்மை மலத்தாற் சிறையாக்கிக்—கண்மறைத்து
மூலவருங் கட்டிலுயிர் மூடமா யுட்கிடப்பக்
கால நியதி யதுகாட்டி—மேலோங்கு
முந்திவியன் கட்டிலுயிர் சேர்த்துக் கலைவித்தை
யந்த வராக மவைமுன்பு—தந்த
தொழிலறி விச்சை துணையாக மானி
னெழிலுடைய முக்குணமு மெய்தி—மருளோடு
ந0. மன்னு மிதயத்திற் சித்தத்தாற் கண்டபொரு
ளின்ன பொருளென் றியம்பவொண்ணு—வந்நிலைபோய்க்
கண்ட வியன்கட்டிற் கருவிகளீ ரைந்தொழியக்
கொண்டு நியமித்தற்றை நாட்கொடுப்பப்—பண்டை
யிருவினையான் முன்புள்ள வின்பத்துன் பங்கண்
மருவும்வகை யங்கே மருவி—யுருவுடனின்
றோங்குநுத லாய் வோலக்க மண்டபத்திற்
போங்கருவி யெல்லாம் புகுந்தீண்டி—நீங்காத
முன்னை மலத்திருளுண் மூடா வகையகத்துட்
டுன்னு மிருணீக்குஞ் சுடரோபோ—லந்நிலையே
நரு. சூக்கஞ் சுடருருவிற் பெய்து தொழிற்குரிய
ராக்கிப் பணித்த வறம்போற்றி—வேட்கைமிகு
முண்டிப் பொருட்டா லொருகா லவியாது
மண்டியெரி யும்பெருந்தீ மாற்றுதற்குத்—திண்டிறல்சேர்

வல்லார்கள் வல்ல வகையாற் றொழில்புரித
லெல்லா முடனே யொருங்கிசைந்து—சொல்காலை
முட்டாமற் செய்வினைக்கு முற்செய்வினைக் குஞ்செலவு
பட்டோலை தீட்டும் படிபோற்றி—நட்டோங்கு
மிந்நிலைமை மானுடருக் கேயன்றி யெண்ணிலா
மன்னுயிர்க்கு மிந்த வழக்கேயாய்—முன்னுடைய
நாணாள் வரையி லுடல்பிரித்து நல்வினைக்கண்
வாணாளின் மாலா யயனாகி—நீணாகர்
வானாடர் கோமுதலாய் வந்தபெரும் பதத்து
நானா விதத்தா னலம்பெறுநா—டான்மாள
வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட—விற்றைக்கு
மில்லையோ பாவீ பிறவாமை யென்றெடுத்து
நல்லதொ ரின்சொ னடுவாகச்—சொல்லியிவர்
செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு—மையறருஞ்
செக்கி னிடைத்திரித்துந் தீவாயி லிட்டெரித்துந்
தக்க நெருப்புத்தூண் டழுவுவித்து—மிக்கோங்கு
நாராசங் காய்ச்சி செவிமடுத்து நாவரிந்து
மீராவுன் னூணத்தின் னென்றடித்தும்—பேராம
லங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம்
வெங்கோப மாறாத வேட்கையரா—யிங்கொருநா
ளெண்ணிமுதற் காணாத வின்னற் கடுநரகம்
பன்னெடுநாட் செல்லும் பணிகொண்டு—முன்னாடிக்
கண்டுகடன் கழித்தல் காரியமா மென்றெண்ணிக்
கொண்டுவரு நோயின் குறிப்பறிவார்—மண்டெரியிற்
காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணுரிக்க நன்னிதிய
மீய்த்துத்தாய் தந்தைதம ரின்புறுதல்—வாய்த்தநெறி
யோடியதே ரின்கீ ழுயிர்போன கன்றாலே
நீடுபெரும் பாவமின்றே நீங்குமென—நாடித்தன்
மைந்தனையு மூர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை நமன்றூதர்—வெஞ்சினத்தா
லல்ல லுறுத்து மருநரகங் கண்டுநிற்க
வல்ல கருணை மறம்போற்றி—பல்லுயிர்க்கு
மின்ன வகையா விருவினைக்க ணின்றருத்தி
முன்னை முதலென்ன முதலில்லோ—னல்வினைக்க
ணெல்லா வுலகு மெடுப்புண் டெடுப்புண்டு
செல்காலம் பின்னரகஞ் சேராமே—நல்லநெறி
யெய்துவதோர் காலந்தன் னன்பரைக்கண் டின்புறுத
வுய்யுநெறி சிறிதே யுண்டாக்கிப்—பையவே
மட்டாய் மலராய் வருநாளின் முன்னைநாண்
மொட்டா யுருவா முறைபோலக்—கிட்டியதோர்

நல்லபிறப்பிற் பிறப்பித்து நாடும்வினை
யெல்லை யிரண்டு மிடையொப்பிற்—பல்பிறவி
யத்தமதி லன்றே வளவென்று பார்த்திருந்து
சத்தி பதிக்குந் தரம்போற்றி—முத்திதரு
நன்னெறியின் ஞானகலர் நாடுமல மொன்றினையு
மந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப்—பின்னன்பு
மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப்—பூவலயந்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை—யன்னவனுக்
காதிகுண மாதலினு லாடுந் திருத்தொழிலுஞ்
சோதி மணிமிடற்றுச் சுந்தரமும்—பாதியாம்
பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியு மதிக்கொழுந்து—மச்சமற
வாடு மரவு மழகார் திருநுதன்மே
னீடுருவ வன்னி நெடுங்கண்ணுங்—கேடிலயங்
கூட்டுந் தமருகமுங் கோல வெரியகலும்
பூட்டரவக் கச்சும் புலியதளும்—வீட்டின்ப
வெள்ளத் தழுத்தி விடுந்தாளி னுமடியா
ருள்ளத்தி னும்பிரியா வொண்சிலம்பும்—கள்ளவினை
வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலு
மொன்றுமுருத் தோன்றும வுள்ளடக்கி—யென்று
மிறவாத வின்பத் தெமையிருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து—நறவாருந்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதனென்று
பேரிலா நாதனொரு பேர்புனைந்து—பாரோர்த
முண்டி யுறக்கம் பயமின்ப மொத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி—மிண்டாய
வாறு சமயப் பொருளுமறி வித்தவற்றிற்
பேறின்மை யெங்களுக்கே பேறுக்கித்—தேறாத
சித்தந் தெளியத் திருமேனி கொண்டுவரு
மத்தகமை தானே யமையாமல்—வித்தகமாஞ்
சைவ நெறியிற் சமய முதலாக
வெய்து மபிடேகம் மெய்துவித்துச்—செய்யதிருக்
கண்ணருளா னோக்கிக் கடியபிறப் பாற்பட்ட
புண்ணு மிருவினையும் போயகல—வண்ணமலர்க்
கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாய நெஞ்சுருக்கி
மெய்த்தகைமை யெல்லாம் விரித்தோதி—யொத்தொழுகுஞ்
சேணு ரிருள்வடிவுஞ் செங்கதிரோன் பானிற்பக்
காணு தொழியுங் கணக்கேபோ—லாணவத்தி
னூதி குறையாம லென்பா லணுகாம
னீதி நிறுத்து நிலைபோற்றி—மேதக்கோர்

செய்யுஞ் சரியை திகழ்கிரியா யோகத்தா
லெய்துஞ்சீர் முத்திபத மெய்துவித்து—மெய்யன்பாற்
அ௦. காணத் தகுவார்கள் கண்டாற் றமைப்பின்பு
நாணத் தகுஞான நன்னெறியை—வீணே
யெனக்குத் தரவேண்டி யெல்லாப் பொருட்கு
மனக்கு மலரயன்மால் வானோர்—நினைப்பினுக்குந்
தூரம்போ லேயணிய சுந்தரத்தா ளென்றலைமே
லாரும் படிதந் தருள்செய்த—பேராளன்
றந்தபொரு ளேதென்னிற் றான்வேறு நான்வேறாய்
வந்துபுணரா வழக்காக்கி—முந்தியென்ற
னுள்ளமென்று நீங்கா தொளித்திருந்து தோன்றிநிற்குங்
கள்ளமின்று காட்டுங் கழல்போற்றி—வள்ளமையாற்
அ௫. றன்னைத் தெரிவித்துத் தன்றாளி னுட்கிடந்த
வென்னைத் தெரிவித்த வெல்லையின்கண்—மின்னாரும்
வண்ண முருவ மருவுங் குணமயக்க
மெண்ணுங் கலைகால மெப்பொருளு—முன்னமெனக்
கில்லாமை காட்டிப்பின் பெய்தியவா காட்டியினிச்
செல்லாமை காட்டுஞ் செயல்போற்றி—எல்லாம்போய்த்
தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருளாகி
யெம்மைப் புறங்கூறி யின்புற்றுச்—செம்மை
யவிகாரம் பேசு மகம்பிரமக் காரர்
வெளியா மிருளில் விடாதே—யொளியாய்நீ
௯௦. நின்ற நிலையே நிகழ்த்தி யொருபொருள்வே
றின்றியமை யாமை யெடுத்தோதி—யொன்றாகச்
சாதித்துத் தம்மைச் சிவமாக்கி யிப்பிறவிப்
பேதந் தனிலின்பப் பேதமுறாப்—பாதகரோ
டேகமாய்ப் போகாம லெவ்விடத்துங் காட்சிதந்து
போகமாம் பொற்றாளி னுட்புணர்த்தி—யாதியுட
னிற்கவழியா நிலையிதுவே யென்றருளி
யொக்க வியாபகந்தன் னுட்காட்டி—மிக்கோங்கு
மாநந்த மாக்கடலி லாரா வமுதளித்துத்
தான்வந்து செய்யுந் தகுதியினு—லூனுயிர்தான்
௯௫. முன்கண்ட காலத்து நீங்காத முன்னோனை
யென்கொண்டு போற்றிசைப்பே னியான்.

பூமன்னு மென்பதுமுதல் நிருத்தநிலைபோற்றி என்பது வரையுமொருதொடர்.

(இதன்பொருள்.) பொற்றாமரைப்பூவில் நிலைபெற்று நான்கு முகத்தோ டெழுந்தருளியிருக்கின்ற பிரமனுந் தேவர்களு மவர்களுக்கு அரசனாகிய தேவேந்திரனுந் திருமகள்பொருந்திய மார்பில் மிகுந்த பிரகாசமுடைய கௌத்துவமணி தரித்திருக்கும் விஷ்ணுவுஞ் சகல பொருண்மையுநாவிலிருந்து சொல்லுகின்றவேதங்களும் வேதமுடிவான வுபநிடதங்களும்

எல்லாவறிவும் விளக்கஞ்செய்யும் விந்துவு மதற்குள்ளொளியாகிய நாதமுங் குடிலையுந் தத்தமிதயத்திற்றோன்றிய போதச்செயல்களால் ஆமளவுந் தேடவு மளவுபடாமல் அப்பாற்பட்டிருக்கும் பேரின்பவொளியாகிய பதி ஆன்மாக்களைக் காக்க வேண்டுமென்னுங் கருணை தோன்றி எவர்களும் பத்தியுடனே தரிசித்து மலமயக்கநீங்கித் தெளிந்து தேறும்படி மிகுந்த விரத்தினமணிகள் சூழ்ந்து விளங்குந் திருச்சிற்றம்பலத்துள் ஞானப்பிரகாச நிறைந்து தோன்ற நின்று ஆன்மாக்களுடைய பிறவித்தொடர்பறுக்கச்செய்யும் ஆநந்தநிருத்தநிலை யெம்மைக் காக்க என்க.

குன்றாத என்பதுமுதல் பெரியவழிபோற்றி என்பது வரையுமொருதொடர்.

(இ-ள்.) அநாதியா யெண்ணிறந்த ஆன்மாக்கள் மோக்ஷமடைந்திருக்கவுங் குறைவில்லாமல்நித்தியமாயளவிறந்திருக்கும் பெத்தான்மாக்களைக் கன்மத்துக்கீடான தேகங்களிற் சராயுஜம் அண்டஜம் சுவேதஜம் உற்பீஜம் ஆகிய நால்வகையோனிகளினு மாறிமாறி வேறுவேறாகப் படைத்தும் அவ்வான்மாக்களுக்குள்ள வரியவினைப்போகங்களை யேறாமற்குறையாமற் கூட்டிப் புசிப்பித்தும் சர்வசங்காரகாலத்தி லான்மாக்கள் சகலாவத்தைப் பட்டுப் பிறந் திறந்தலைந்து திரிந்த விளைப்புநீங்கும்படி காரணகேவலாவத்தையி லொடுக்குவித்தும் அநாதியே தொடுத்தாதியாய்ச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்து மளவிறந்தாதிகடுவந்தமற்றுவரும் பெரிய கிருத்திய வழி யெம்மைக்காக்க என்க.

முந்துற்ற என்பதுமுதல் வினைபோற்றி என்பது வரையு மொருதொடர்.

(இ-ள்.) ஆன்மாக்கள் நித்தியமாயிருக்கச் சிருஷ்டிப்பட்டுந் திதிப்பட்டுஞ்சங்காரப்பட்டும் வருவானேனெனில், அநாதியிலே மலத்தில்பந்திக்கப் பட்டிருக்கையினால்மலநீங்கும்படி கர்த்தாகிருபையினாலே செய்வித்ததாயிருக்கும். ஆனால் மலமான்மாக்களைப் பந்தித்த தெப்படியெனில், முன்னேயுண்டான நெல்லுக் குமிதவிடுமுளை முற்பிற்பாடில்லாமலநாதியிலேகூடத் தோன்றினதாயிருக்கும். இதிலாணவமல மான்மாவினறிவை மறைத்த தெப்படியெனில், செம்பினுடையநிறத்தைக்காளிதங்கூடத்தோன்றிமறைத்ததுபோன்றிருக்கும். கர்த்தாவினுடைய வியாபகத்திலே யான்மாக்கணிறைந்திருக்கவு மாணவமல முயிரைமறைத்த தெப்படியெனில், பழமையாகியகடல் வியாபகத்திலே நிறைந்திருக்கிறதண்ணீரை யுப்புக்கலந்துபிடித்திருப்பதுபோன்றிருக்கும். இப்படியெல்லாம் வெவ்வேறா யொருபுடையொப்பாகக்கர்த்தாவுள்ளவன்றே யுண்டாயருவமாய்மூவகையான்மாக்களையு மாணவமலம்பிடித் துருவையுடைய மகத்தான மாணிக்கமணியை நஞ்சுவாய்க்கு ளடக்கின மகத்தாகிய சர்ப்பம்போலவும் பச்சையாய் முளைத்துவிறகாகுமட்டு மக்கினியைத்தெரியாமன் மறைத்து வைத்திருந்த காட்டம் போலவு மான்மாவினுடைய ஞானக் கண்ணை மறைத்த கடுந்தொழிலையுடைய வாணவமலத்தினாலே யறிவுஞ்செயலு மிழந்த சகலவுயிர்களுக்குங் கர்த்தாகிருபையினாலே நன்றா யவர்களிச்சையை நாடிப்பார்த்துக் கட்புலனாற் காணாதபிறவியந்தகர்க்குரிமையுள்ளவர்க ளிச்சித்தபடி கோலைக்கொடுத்திச்சித்த விடங்களிலே கொண்டுபோய் விடுவதுபோலப் பொலிவினையுடைய மாயையின் காரியமான தனுகரண புவன போகங்களையு முன்னே

யுண்டாக்கிக்கொடுத்து இச்சித்த புவனங்களிலே இச்சித்த வினைப்போகங் களையுங் கூட்டிமுடித்துப் புசிப்பிக்கையினும் அந்தவாணவமல மயக்கத் தாற் கர்த்தாவுபகாரத்தை மறந்து நாமென்கிறவந்தக்கரண விகார ஹிதா ஹிதமுண்டாகையாற் புண்ணிய பாவ மிரண்டு முண்டாம்படி காட்டி அந் தப் புண்ணியபாவத்தினாற் பிறக்கும் பிறவியையுண்டாக்கி அதனாற்செய்யு மிருவினைகளையு மேற்றுக்கொண்டு மீண்டு மந்தவினைப்போகங்களைப் புசிப் பதற்குக் கலாதி ஞானங்களையுங் காட்டுங் கிருபைத்தொழி லெம்மைக் காக்க என்க.

நாட்டுகின்ற என்பதுமுதல் வல்லபமேபோற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) கர்த்தா ஆன்மாக்களுக்கு வினைப்போகங்களைப் புசிப்பதற் குத் தேகங்களைக் கூட்டுமுறைமை சொல்லுமிடத்து முன்பாகமங்களி லே சொல்லப்பட்ட எண்பத்துநான்கு நூறாயிர மியோனிபேதப் பிறப்பின் வகை யெல்லா முன்செய்த இருவினைக்கீடாக வுண்டாம்படி திருவுள்ளத் திலே நிச்சயித்துப் பலபடி வெவ்வேறு தேகபேதங்களை யுண்டாக்குவன். அதில் மானுடதேக முண்டாக்குவ தெப்படியெனின், அழகுபொருந் திய தந்தையுந் தாயுங் காமவிகாரந் தீரும்படி சையோகபோகஞ் செய்யுங் காலத்து அவர்களுக்குப் பிள்ளைப்பே றுண்டில்லையென்பது அறிந்து தா யினுடைய கருப்பத்திற் றந்தை புல்லினுனியிற்றங்கிய பனித்திவலைபோ ன்ற விந்துவை விடும்போ ததற்குள் ளுயிரையடக்கிக் கருப்பாசயத்திற் சுரோணிதத்துடனே கலப்பித்திருத்தி அந்த விந்து தாய்வயிற்றி லளவற் றிருக்கின்ற வுதராக்கினியினா லெரிசுவறுமலும் பலவகையாக அந்த வயிற்றுக்குட் கிடந்த அநாதி யுயிர்களாகிய புழுக்கள் தம் பசியினால் அந்த விந்துவை வினாவிலே யெடுத்துப் புசியாமலும் வெய்யகும்பி நரகம்போ ன்ற காயக்கருக்குழியிற் காத்திருந்து வினைக்கீடான கை கால் முதலாகிய எல்லாவுறுப்புங் குற்றமறச்செய்து அழகுபொருந்தத் திருத்திப் பின்பத் தேகத்தையெடுத்து நேரே யோகத்திலிருத்தித் திரிகால வர்த்தமானங்க ளையு மறியும்படி யுணர்வையுங் கொடுத்துப் பத்துமாதவரையிலும் புசிப்புங் கொடுத்துப் பின்பு பூமியில் பிறக்கும்போதிரண்டுகையையுஞ் சிரசின் மேற் குவித்த பாவனையாய்த் தலைகீழாய் வரும்படிசெய்து முன்புகுந்த சிறு வழியைப் பெருவழியாக்கி உயிர் துன்புற்றிறவாம லுயிருக்குயிரா யணைத திருந்து வெளியிலே யிழுத்துக்கொண்டு வரு மெய்ம்மையாகிய வல்லப மெம்மைக்காக்க என்க.

அம்மாயக்கால் என்பதுமுதல் நெறிபோற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) தாய்வயிற்றைவிட்டு பூமியிலே மகப் பிறந்தவுடனே உடம் பிற்குக் காரணமான மாயை சண்டமாருதம்போலலைத்து மயக்க முன் கருப்பத்தினிருக்கும்போ திப்பிறவித்துன்பத்தை நீக்கிக்கொள்ளவேண்டு மென் றவ்விடத்திலேநினைத்திருந்த நல்லநினைவையுமறந்துஉயிர்உடம்பின் மயமாய் நல்வினைதீவினைத் துன்பத் தொடர்ச்சியாற் பகுத்தறிவின்றி அக் காலத்தி லுயிர் புசிப்பிச்சை யுற்றிருப்பதை யறிந்து பசிதெரியும்படி யறி

வித்துக் கதறியழச் செய்வித்துப் பிள்ளையழுவதுகண்டுடனே பெறும்போ துற்ற வருத்தத்தையுந் தாய்மறந்து உட்கி ஆவிசோரும்படி யுள்ளே நடு ங்கி மிகுந்தோங்கிய அன்பினாலே சிந்தையிரங்கியுருகப் பச்சுடம்பி லிருந்த உதிரஞ் சிவப்புமாறி வெண்ணிறவமுதமாய்க் கொங்கையில்வந்து சுரப்பத் தீஞ்சுவைப் பாலைப் பிள்ளை வாய்வைத்துக்குடித்து முகஞ்செழித்திருப்பது கண்டு தாய் மகிழ்ந்திருக்கும்படி செய்வித்திப்படிப் பிள்ளையாசை யென் கின்ற பெருங்கயிற்றாற் கட்டிச் சகலவுயிர்களுக்குங் குழந்தைகளை வளர்க் கும்படி ஆன்மாக்கடோறு நேயத்தை வைத்தருளிய நெறி யெம்மைக் காக்க என்க.

ஆசற்ற என்பதுமுதல் படிபோற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) தாயன்பாயிருந்து காத்த கர்த்தா இப்படி தோன்றிவரு முயிர் களுக்குக் கருப்பத்தி லிருக்கிற பசும்பருவத்தும் பாலனாயிருக்கிற அப்ப ருவத்தும் நாளுக்குநாள் பரிணமித்து வளரும் பாலகுமார விருத்தபருவங் களிலுஞ் சகலாவத்தைப் படுத்திப் பருவத்துக் கேதுவான கலாதிஞானங் கொடுத்துச் செயலற்ற வுயிர்கள் வாங்கிக்கொள்ள ஆள்வதற்கேற்ற முப் பத்தாறு கருவிகளையுங்கொடுத் துயிர்க்குயிரா யிமைப்பொழுது நீங்காம னின்று பண்டாரியா யுயிர்க்கேவல் செய்தருளுகின்ற கிருபை யெம்மைக் காக்க என்க.

தண்டாத என்பதுமுதல் அறம்போற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) கர்த்தா பண்டாரிபோல் நின்று தத்துவங்களைக்கூட்டிக்காப் பது எப்படியெனில், நீங்காமற் புன்புலால்நாறுந் தோல்போர்த்த புழுக் கூடெனும் சரீரமாகிய பெரியமனைக்கண் கிருபையினாலே துரியாதீதந் துரி யம் சுழுத்தி சொப்பனம் சாக்கிரமென்னும் பெயரையுடைய ஐந்துகட் டாக்கி ஆன்மாவுக் கநாதியிலே பொருந்திய வுண்மைநிலைமையான ஆண வமல மறைப்புச் சற்றுநீங்காமற் றிண்மையா யுயிரைச் சிறைப்படுத்தி நிற்கு மூலாதாரமாகிய வீட்டி லதீதப்பட்டு உயிர் மூடமாயுட்கிடப்ப அவ் விடத்தி லிளைப்பாறும் வரையுங் காலத்தை நியதியினானிறுத்தி அப்பான் மேலே யோங்கியிருக்குந் துரியமான நாபித்தானவீட்டி னுயிரைப் பிரா ணவாயுவுடன் கூடச்சேர்த்து அவ்விடத்திலே கலைவித்தை இராகத்தினான் முன்னே ஆன்மாவினுடைய தொழிலறிவிச்சை மூன்றையுமெழுப்பி அத ற்குத் துணையாகப் பிரகிருதிமாயையி லுண்டான அழகு பொருந்திய சா த்துவிக ராசத தாமத மென்னு முக்குணங்களையுஞ் சேர்த்து அப்பான் மேலே சுழுத்தி வீடாகிய இதயத்தானத்திற் சித்தக்கருவியுடனே கூட்டி அவ்விடத்திற் சித்தத்தாற் கண்டபொரு ளின்னபொருளென்றறியாமன் மயங்கி நின்ற வுயிரைச் சொப்பன வீடாகிய கண்டத்தானத்திற் சேர்த்து அவ்விடத்திலே சத்தாதியைந்தும் வசனாதியைந்தும் அந்தக்கரணம் நான் கும் வாயுக்கள் பத்தும் புருடனுமாகிய விருபத்தைந்து கருவியுங்கூட்டிமு ன்னேசெய்த இருவினைக்கீடாகமுன்சாக்கிரத்திலே இன்பத்துன்பங்களைப் புசிப்பித்த முறைமைபோலச் சொப்பனத்திலுமிருவினைப்போக முண்டா னதுமறிந்து சுத்ததத்துவங்களினாற் பிரேரித்துப்புசிப்பித்துப் பின்பதற்கு

மேலாய தூலதேகத்தின்கண் வளர்ந்து நிற்கும் சாக்கிரவீடென்னும் நுதற்றானமாகிய ஓலக்கமண்டபத்தின் முன்கேவலாவத்தைக்குக்கூடாமல்நின்ற பூதங்களைந்தும் புருடதத்துவ நீங்கலாகநின்ற வித்தியாதத்துவமாறுஞ் சிவதத்துவமைந்து மாகப்பதினாறு முன்சாக்கிரத்தி லிருந்த ஞானேந்திரியமைந்துங் கன்மேந்திரிய மைந்துஞ் சொப்பனத்திலிருந்து வந்த விருபத்தைந்து கருவியும் மற்றப் புறக்கருவிக ளறுபத்தைந்து மாகத் தொண்ணூற்றாறு கருவிகளையும் பொருத்திச் சீவிக்கச் செய்வித்து முன்னேவிட்டு நீங்காம லேந்தவத்தையினு மறைந்துநின்ற ஆணவமல இருள்கூடாதபடி மனையிலே நெருங்கிநின்ற இருளை நீக்கும் விளக்கைப்போலச் சூக்குமாதி வாக்குடனே கூடிப் பிரகாசித்து நிற்குஞ் சகலாவத்தையினுயிரை நிறுத்திக் கன்மத்துக்கேதுவான சத்தாதி விடயங்களைக்காட்டி ஆன்மாக்கள் யானென தென்ன நின்றவைகள் வெவ்வேறு தொழிற்குரியராகச் செய்விக்குஞ் சிவதருமமெம்மைக்காக்க என்க.

வேட்கைமிகும் என்பதுமுதல் படிபோற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) கர்த்தா சகலாவத்தையிற் கருவிகூட்டி முடிக்கு முபகாரத்தைமறந்து ஆன்மாக்கள் பிரபஞ்ச வாசைமிகுந்து புசிப்புநிமித்தமொரு கணமேனுங் கெடாமல் வயிற்றிலே மண்டியெரிந்து கொண்டிருக்கும் வடவாமுகாக்கினிபோன்ற பசியைத் தணிக்கும்பொருட்டுத் திண்ணியவாங்காரப் பலன்களால் அவரவர் வல்லமைக்கேற்ற தொழில்கள் செய்யுமிடத்து அவர்களுக்குத்தோன்றாமல் உடனிகழ்ச்சியான ஒருமைப்பாடாய்க் கூடிநின்று அவரவர் நினைவின்படி செய்வித்துக்கொடுத்து ஆன்மாக்கள் யானெனதென் றிடையறாது செய்யும் வினை மிகுதியான ஆகாமியத்துக்கு முன்செய்த ஆறத்துவாவிலுங் கட்டுப்பட்டிருக்கின்ற சஞ்சிதத்துக்கு மதிலேபாகப்பட்டுப் புசிப்புக்குவந்த பிராரத்துவச் செலவிற்கு மவரவர்கணக்கப்பிள்ளையாயிருந்து புட்டோலை யெழுதி யொப்பிக்குங் கருணை எம்மைக் காக்க என்க.

நட்டோங்கும் என்பதுமுதல் மறம்போற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) கர்த்தா ஆன்மாக்கள்செய்த இருவினைக்குங் கணக்கெழுதினபடி புண்ணியபாவத்துக்குள்ள பலன்களையுங் கூட்டுவதெப்படியெனில், பொருந்தி மிகுந்த இருவினைமுறைமை பூமியிலுள்ள மானுடருக்கே யன்றி யெண்ணில்லாத தனுக்களிலே பொருந்தியிருக்கும் பலவுயிர்களுக்கும் இந்த முறைமையாக வினைகளை நிச்சயித்தறிந்து முன்னமைத்த ஆயுண் முடிவி லுடல்களைப் பிரித்து நல்வினை பாகப்பட்ட வுயிர்களையெல்லாம் பூதசரீரமான திவ்வியசரீரத்துடனே காலநீட்டிப்பாய் வாழ்ந்திருக்கும்படி விஷ்ணுவுலகத்தில் விஷ்ணுரூபமாயும் பிரமலோகத்திற் பிரமரூபமாயுந் தேவலோகத்தில் தேவேந்திரரூபமாயுந் தேவர்களாயும்வந்த பெரிய பதப்பிராப்திகளிலே பலவிதமான போகங்கள் புசித்திருக்கச் செய்வித்தும், பூமியிலே இராசஐஸ்வரியத்துடனே வாழும்படி செய்வித்துமிருக்கு நாராயண புண்ணிய கன்மபலன் புசித்து முடிந்து பாவகன்மபலன் புசிக்குநாள்

அடுத்தவுடனே அங்கங்கு வாழ்ந்திழிந்த வுயிர்களவ்வத் தேகத்தை விட்டு மாளும்படி கர்த்தாவினுடைய ஆணையினலே வெற்றிபொருந்திய யமதூதர்கள் வேகத்துடன் வந்து பாசத்தினற் கட்டிப்பிடித்துக் கொண்டுபோய்த் தங்களிறைவனுகிய எமராஜாவின் முன்புவிட அவன் ஆன்மாக்களைப் பார்த்திரங்கிப் பாவிகாள்! உங்களுக் கிறைவனைக் குள்ளாகப் பிறவாநெறி பெறவேண்டுமென்று கர்த்தாவைவிரும்பு மறிவு பிறக்கவில்லையோவென்று நல்ல வின்சொல்லாக நடுவுநிலைமையாகப் பேசிப் பின்பவர்கள்செய்த பாவத்துக்கேற்ற செயல்களைச் செய்யுமென்று கோபத்துடனே கிங்கரர்களைப் பார்த்துச் சொல்ல விடைபெற்றுப் பூதசரீரமான யாதனசரீரத்தில் உயிரைநிறுத்தித் துன்பமுறும்படி செக்கிலிட்டாட்டியுந் தீவாயிலிட்டெரித்தும் பெரிய நெருப்புத்தூணைத் தழுவிக் கிடக்கும்படிசெய்து மிகுந்து நீண்டிருக்கும் நாராசங்களைக் காய்ச்சிச் செவியில் செலுத்தியும் நாக்கைக் கருவிகொண்டறுத்தும் அவரவருடை யவரவர் தின்னவரிந்துகொடுத்தடித்தும் போராதபடி யாழ்ந்த நரகங்களிலே யழுத்துவித்தும் பின்னுந் தங்களுடைய கடுங்கோபமாறாத விச்சையுடையரா யவற்றில் ஒருநாள் போல் துன்பத்தைக் கொடுக்கும் கொடிய நரகங்களில் பலநெடுநாள் செல்லுமட்டு மியமகிங்கரர்கள் பணிசெய்யக்காருண்ணிய வடிவாகிய கர்த்தா சிற்றுயிர்களை யமகிங்கிரர்களிடத்திற் காட்டிக்கொடுத்து அவர்கள் துக்கப்படுவதைப் பார்த்திருப்பானே னெனில், உலகத்திலே தந்தை தாயர் பிள்ளையினுடைய நோய் மிகுதியையுள்ளே நாடியறிந்து நோய்தீரும்படி அதற்கேற்ற முறைமை செய்வது கடனென்று நினைந்து பிள்ளையை நோயறிந்து மருந்துகொடுத்துத் தீர்க்கும் வைத்தியனிடத்திலொப்பித்து அவனிருப்பு நாராசங்காய்ச்சிச் சுடவுஞ் சத்திரமிட் டறுக்கவுங் கண்படலத்தை யுரிக்கவு மிப்படிப்பலகிரியையுஞ்செய்யப் பிள்ளை வருத்தப்பட்டாலுநோய்தீர்ப்பதையறிந் தந்தவைத்தியனுக்கு நல்ல திரவியமுதலான வெகுமானம் பண்ணிச் சந்தோஷத்துடனே யவர்கள் கண்டுநிற்பதுபோலவு மனுச்சக்கரவர்த்தியாகிய சோழன் தானருந்தவம்பண்ணிப்பெற்ற அருமையாகிய வொருமகன் திருவாரூர்த்தெருவழியே தேரேறிப் போம்பொழுது மாயமாகத் தேர்க்காலில் வீழ்ந்திறந்த பசுவின் கன்றினிமித்த மந்தப் பாவந்தீரும்படி எத்தனைபேர் மாறுபாடாய்த்தடுக்கவுங் கேளாமற்பிள்ளையைக் கன்றிறந்தபடித் தேர்க்காலிற்போட்டு நசுக்கிப் போடவேண்டு மென்றே துணிந்து தேரிலே தாய்ப்பசுவைவைத்தூர்ந்துகொன்றது மகனை யமன்பிடித்து வருத்தாதபடிசெய்த கிருபையே யாகையால் அவ்வழக்குப்போலவும் விடம்போன்ற சிந்தையையுடைய நமன்றூதர் மிகுந்த கோபத்துடனே பாவஞ்செய்த வுயிர்களைக் கொடிய நரகவாதனைப் படுத்துவதைச் சகல வுயிர்களுக்குந் தந்தையுந்தாயுமாயிருக்கும் சிவமுஞ்சத்தியுமலநோய் தீர்ந்தாற் போதுமென்று சந்தோஷத்துடன் கண்டு நிற்கும் வல்லபமான கருணை மற்றெம்மைக்காக்க என்க.

பல்லுயிர்க்கும் என்பதுமுதல் தறம்போற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) கர்த்தா இங்ஙனஞ் சொன்ன வொன்பது வகையினலுங்காக்கப்பட்ட ஆன்மாக்களுக்குப் பெத்தகால முடிவாமளவு மிருவினைப்பலன்

களை அவன் அவள் அது முன்னிலையாகநின்றருத்தித் தனக்குமேலொரு கர்த்தாவில்லாத சகலபுவன கர்த்தாவாகியசிவன் அவ்விருவினைகளுக்கிருப் பிடமான மாயா வுலகங்களை யெடுப்புண் டெடுப்புண்டு மாறிமாறிவரும் படி ஆதியாயநாதிதொடுத்துச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்துந் தி ரோபவித்து மநுக்கிரகித்துந் தமது சத்தியினால் பஞ்சகிருத்தியங்களைச் செய்வித்து மலபரிபாகப்பட்டதறிந்து பின்னரகத்திற் செல்லும் பெத் தத்தை நீக்கி ஆன்மாக்களுக்கு முத்திக் காலத்தை நேர்படுத்தவேண் டித் தனக்கன்பராகிய மெய்யடியாரைக் கண்டவுடனே தன்னைக் கண்டது போல அவ்வான்மாக்க ளின்புற் றவரேவிய பணிவிடை கேட் டுய்யும்படி சிறிது நல்லவழியை யுண்டாக்கிக் காட்டி அந்த வழியே சிவபுண்ணிய மானது புத்திபூர்வத்தினு மபுத்திபூர்வத்தினு முபாயச்சரியையாதியிலு முண்மைச் சரியையாதியிலுமாகக் கிரமத்தே செய்யப்படுத்தி அம்மட்டாய் மலரவிருக்கும் அரும்பு பருவநீங்கிய வரும்பருவத்துக்கடுத்த முதனாள் மொட்டாயிருக்கின்ற மலர்போல் மலபரிபாகம் பிறந்ததன்மை சமீபத்திற் கண்டு ஒப்பற்ற நல்ல சிவசமயத்திற் பத்திமிகுந்த விடத்திலே பிறப்பி த்து நாட்டப்பட்ட இருவினையு மேககாலத்திலே யிரண்டுதராசுநுனிபோற் சமனான பருவத்தில் பலபிறவியு மந்தமாம்படி தமது தீவிரதரம்பொருந் திய அருட்சத்தியை அவ்வுயிர்களின் மலநீங்கும்படி பதிக்குந்தர மெம் மைக்காக்க என்க.

முத்திதரும் என்பதுமுதல் குணம்போற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) இருவினையொப்பு மலபரிபாகஞ் சத்திநிபாதம் பெற்ற பக் குவான்மாக்களுக்குக் கர்த்தா ஆசாரியமூர்த்தமா யநுக்கிரகம் பண்ணும் முறைமை யெப்படியெனில், முத்தியைக்கொடுக்கு நல்வழியையுடைய விஞ்ஞானகலர்க் கவர்களைப்பற்றியிருக்கும் ஆணவமலமொன்றினையு மவர் களறிவுக்குட்பேரறிவாய்ப் பிரகாசித்துத்தோன்றி நீக்கி யருள்வடிவாக்கி ஞேயத்திலழுந்தும்படி அருளுவர். பின்பு பொருந்திவிளங்குகின்ற பிர ளயாகலருக்குத் திருவுருக்காணும்படி மானுமழுவுஞ் சதுர்ப்புஜமுங் கா ளகண்டமுந்திரிநேத்திரமுமுடைய திருமேனிகொண்டிருந்து அவர்களைப் பற்றியிருக்கும் ஆணவமலங் கன்மமல மிரண்டையுநீக்கி அருள்வடிவாக்கி ஞேயத்திலழுந்தும்படி அருளுவர். அசுத்தமாயையிற்றோன்றிப் பூலோ கத்தை விட்டு நீங்காமலிருக்கும் சகலருக் கவரைப்போல மானுடச் சட்டை சாத்தி மானைக்காட்டி மான்பிடிப்பார்போல முன்னின்று தரி சனைகொடுத் தவர்களைப்பற்றியிருக்கும் ஆணவம் கன்மம் மாயையெ ன்னு மலத்திரயங்களையுந் தீக்ஷாக்கிரமங்களினாலே தீர்த்தருள்வடிவாக்கி அடிமையாக்கிக்கொள்ளுத லந்தக் கர்த்தாவுக் காதிகாலத்திலே யுண்டான குணமாதலால் திருச்சிற்றம்பலத்தின்கண்ணே நின்றாடுந் திருநடனத்தொ ழிலும் பிரகாசம் பொருந்திய நீலமணிபோன்றிலங்குகின்றகாளகண்டமுந் திருமேனியிற் பாதியாய்ப் பச்சைவடிவுகொண்டிலங்குஞ் சிவகாமிதங்கிய இடப்பாகமும் பவளக்கொடி படர்ந்து கிடப்பதுபோன்ற திருச்சடாபாரத் தின்மேற் றரித்திருக்கிற கங்கையும் பாலசந்திரப் பிரபையும் வெருவும்

படிப் படம் விரித்தாடும் சர்ப்பமும் அழகுமிகுந்த திருநுதனடுவின் மேனோக்கி நீண்டுகிடந் திலங்கு மக்கினி நேத்திரமும் வலக்கையிற் பிடித்திருக்கும் கேடில்லாதலயத்துடன் முழங்குந்தமருகமும் அழகுபொருந்திய விடக்கையிற் பிடித்திருக்கு மக்கினி குண்டமும் அரையிலே கட்டியிருக்கு மைந்தலை யரவக்கச்சும் புள்ளிபொருந்திய புலித்தோலுடையும் பக்குவான்மாக்களை மோட்சமாகிய பேரின்பவெள்ளத் தழுத்துதற் கூன்றின பாதத்தினு மடியாருள்ளத்திற்கலந் தின்பபூரணமாயிருக்கிற ஞானகுஞ்சிதபாதத்தினும் பிரியாமற் றரித்திருக்கும் திருவருட்பிரகாசம்பொருந்திய சிலம்பும் உயிர்களைச்சோரத்தனமாய்க் களவுகொண்டு தன்வசப்படுத்துகின்ற முன்னை வினையைவென்று பிறவித்துன்பங்களை யறுப்பதற்கு மலவைரிநாமென்று முழந்தாளிற் றரித்துக்கொண்டிருக்கும் வீரகண்டாமணியும் இவைகளொன்று முருத்தோன்றாதவண்ண முள்ளேயடக்கி யொளித்துக்கொண் டென்றுமுடிவில்லாத பேரின்ப மோக்ஷத்தி லெம்போல்வாரையு மடைவிக்கவேண்டிப் பிறவாமுதல்வன்பிறந்து வந்தானென் றதிசயமாய்ச்சொல்லும்படி திருமேனிகொண்டு தேன்பொருந்திய செங்கழுநீர் மாலையுலாவும் புயத்தையுடைய மறைஞானசம்பந்தநாதனென்று ஒருபெயருஞ் சுபாவத்திலில்லாத நாதனொருதிருப்பெயரையுஞ் சாத்திக்கொண்டு பூமியிலுள்ளவர்களைப்போல் உண்பதும் உறங்குவதும் அஞ்சுவதும் விடயபோகம் இன்பமுறுவது மொத்தொழுகிக்கொண் டெழுந்தருளி மகிழ்ந்திருந்த குண மெம்மைக்காக்க என்க.

மிண்டாய என்பதுமுதல் நிலைபோற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) இப்படி மானுடரைப்போலத் திருமேனிகொண்டாசாரியமூர்த்தமாய்ப் பெண்ணாகடத்தின்க ணெழுந்தருளியிருந் தெங்களுக் ககங்காரம்பொருந்திய புறச்சமயப் பொருள்களெல்லா மறிவித்ததிலே யொருபயனு மில்லையென்னுந் திடமே பேறும்படி செய்வித்துத் தேறுமலிருந்த சித்தந்தெளியும்படி திருமேனி தரிசனைகொடுத்தருளிய வந்தத் தகைமையும் போகாமன் மேம்பாடாகிய மெய்கண்ட சந்தானச் சுத்தசைவநெறியில் விட்டகுறையறிந்து சமயவிசேட நிருவாணம் பொருந்தப்பட்ட அபிடேகமென்னு நான்குவகைத்தீட்சையும்பண்ணிச்சிவந்த தாமரைமலர் போன்ற திருக்கண்ணருளினுற் பார்த்துத் துன்பப்பிறப்பினுற்பட்ட புண்ணுடம்புத்துன்பமு மிருவினைத்துன்பமு முயிரைவிட்டு நீங்கும்படி அழகு பொருந்தியதாமரைமலர்போன்ற திருக்கைத்தலத்தைச் சிரசின்மேல்வைத்தருளிக் கற்போன்றிருந்தநெஞ்சை அக்கினியைச்சேர்ந்த மெழுகுபோலவுருக்கித் திரிபதார்த்த மெய்த்தகைமைப் பொருள்களெல்லாம் விரித்தோதி யுபதேசித் தொற்றுமையாக ஆகாயத்தை மறைத்த பூதவிருள்வடிவு அவ்வாகாயத்திற் சிவந்த சூரியனுதையமானவுடன் பூதவிருட்பிரகாசமாய் மறைந்து நீங்க ஆகாயஞ் சூரியவொளி வடிவாகி நின்ற முறைமைபோல் உபதேசித்த ஞானப்பிரகாசத்தைப் பற்றி மும்மலமுநீங்கி ஆன்மபோதம்

அருளிலடங்கச்செய்து மலமான்மபோதத்தையும் பற்றுமல் தன்னுடைய அநாதி நித்தியமுங் கெடாமல் நீதியாக நிறுத்தின நிலைமையெம்மைக் காக்க என்க.

மேதக்கோர் என்பதுமுதல் கழல்போற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) உலகப்பற்றற மேம்பாட்டுடனே தாதமார்க்கஞ் சற்புத்திர மார்க்கஞ் சகமார்க்கஞ் சன்மார்க்கமென்னு நான்குவழியினுநின்றுண்மைச் சரியைகிரியாயோகங்களை விதிதப்பாமலநுட்டித்த அடியார்களுக்குச் சிறப்புமிகுந்த பதமுத்தியான சாலோக சாமீப சாரூபமெய்தும்படி செய்வித்து அதனல் ஞானதாகமுற்ற அடியார்களநுக்கிரகத்தைப் பெற்று மெய்யன்பினுலே சிவரூபத்திலான்மதரிசனம்பண்ணிச் சிவதரிசனத்திலான்மாவின் றன்னியல்பை யறிந்து பின்பு பெத்தமுத்தி இரண்டினு முபகரித்துக்காக்குங் கர்த்தாவினுடைய கருணையை மறந்து நாமொரு முதலென்றிருந்தோமே யென்று இலச்சைபட்டு நாணிப் பதைப்பற வருளினழுந்தி இரண்டற்றநுபவிக்குஞ் சிவாநுபவத்தைத் தடுமாறியாணுலுஞ் சிவசிவாவென்று நினையாத எனக்கும் வீணே யிரங்கி அநுக்கிரகம் பண்ணவேண்டி வேதாகம புராண சாத்திரங்களிற் சொல்லப்பட்ட எல்லாப்பொருளுக்கு மனத்துக்குந் தாமரைமலரி னெழுந்தருளி யிருக்கும் பிரம விஷ்ணு முதலாகிய தேவர்கணினைப்புக்குந் தெரியப்படாத தூரம்போல் நின்றும் சடசித்துக்களிடத்தினு மணித்தாய் நிறைந்திருக்கும் அழகு பொருந்திய சீபாத கமலத்தை யடியேன் சிரசின்மீதிருந்து பிரகாசிக்கும்படி வைத்து பெரிய மகாதேவரொன்னும் பெயரையுடைய மறைஞானசம்பந்த ஞானசாரியரொனக் கநுக்கிரகம் பண்ணிய பொருளேதெனில் தான்வேறு நான்வேறுய்வந்து பொருந்திய தில்லையென்னும் வழக்கை யறிவித் தநாதியே தொடுத்துன்னிடத்திலே யொளித்திருந்து நீ நம்மைக்காணுதிருக்க நாமென்று முன்னேக்கண்டு கொண்டிருந்தோ மென்னும் கள்ளத்தை இப்போ துயிர்க்குயிராய்ப் பிரகாசித்துநின்றறிவித்த பாதமானதெம்மைக் காக்க என்க.

வள்ளமையால் என்பதுமுதல் செயல்போற்றி என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) வளப்பமிகுந்த கிருபையினுற் கர்த்தா தன்னைத்தெரிவித்துத் தன்பாததாமரையான திருவருளுக்குள்ளே பிரியாம லென்றுங்கிடந்த என்னையுந் தெரிவித்த வெல்லைக்கண் மின்போல் தோன்றி யழியும் வண்ணத்தையுடைய தேகமுந் தேகத்தைப்பொருந்திய குணமயக்கங்களு மறிவைவிளக்கப்பட்ட கலைமுதலாகிய தத்துவங்களு முன்னில்லாத கேவலாவத்தையை முன்னேயறிவித்துப் பின்பு தேகமுதலிய கருவிகரணுதிகளுங் கூடின சகலாவத்தையு மறிவித்து இனியருளைவிட்டுத் தேகமுதலான கருவிகரணுதிகளிற் செல்லாத சுத்தாவத்தையு மறிவித்தசெய லெம்மைக் காக்க என்க.

எல்லாம் என்பதுமுதல் போற்றிசைப்பேனியான் என்பதுவரையுமொருதொடர்.

(இ-ள்.) எல்லாத் தத்துவங்களையும் பொய்யென்று கண்டு நீங்கித் தமமைத்தெளிந்தோம், நமக்குமேலே வேறொருபொருளில்லையென்னுஞ் சைவசித்தாந்திகளுடனே கூடலாகா தவர்நமக்குப் புறம்பென்றும்பேசித் தன்னின்பத்தைத் தானே புசித்திருப்போமென்று மகிழ்வெய்திச்செவ் விதான நிருவிகாரி நாமேயென்றுபேசு மகம் பிரம வாதிகள் தன்னையு மறியாமற் றலைவனையு மறியாமன் மயங்கிநிற்கும் வெளிபோன்ற இருளி லென்னை விடாமலும், ஞானசொரூப வொளிவடிவாய் இப்போது நீ நிற்கும் நிலையென்று நிகழ்த்தி இதற்குமேல் வேறொருபொருளின்றி யமையாமையு மெடுத்தோதி ஆன்மாவைச் சிவத்துடனே யொன்றாகும் படி சாதித்துத் தம்மைச் சிவமாக்கி இப்பிறவிப்பேதமாகிய சரீரத்திலே தானே ஜீவன்முத்தித் தன்மையும் பரமுத்தித் தன்மையும் சரியாகக் கண்டு வெற்றின்பமான சிவபோகம் புசியாமல் சமவாதம்பேசி ஆன்மசுத்தி யுடனேகூடி யின்பம் புசிப்போமென்னும் பாதகரோடுங்கூடி ஏகமாய்ப் போகாமலு மெனக் கெவ்விடத்துங் குருலிங்கசங்கமாய்க்காட்சிகொடுத்து மேலானபோகமுண்டாகும் திருவருட்பாதத்திற்பிரியாமலுள்ளேயடங்கிக் கிடக்கப்பொருத்துவித்து ஞேயத்திலழுந்திநிற்கு மழியாத சாயுச்சியநிலை இவ்வருணிலையென்று விகற்பந்தோன்றாம லநுக்கிரகித்துத் தமது பரிபூர ண வியாபகத்துள்ளே யானுமொக்க வியாபித்து நிற்குந்தன்மையுங்காட்டி யிருந்தோங்கி யளவுபடாமனிறைந்துநின்ற தமது பேரானந்தத் திருவருட் கடலில் விளைந்த வாராதஞேயவமுதத்தைப் புசித்துக் களித்திருக்கும்படி தாமேயென்னைத் தேடிவந்துகொடுத்த பெருங்கருணைத் தகுதியினு லுனு யிர்தானே முதன்மையென்று நின்ற பெத்தகாலத்து மதற்குமுதன்மையுங் கொடுத்து நீங்காமநின்ற முன்னோனை எவ்வகையுங்கொண்டு புகழ்ந்து போற்றுவேனியான் என்க. (க)

போற்றி திருத்தில்லை போற்றிசிவ போகம்
போற்றியவன் மெய்ஞ்ஞானப் புண்ணியநூல்—போற்றியெங்கள்
வெம்பந்த வாழ்க்கைவிட வேறாய்வந் துண்ணின்ற
சம்பந்த மாமுனிபொற் றாள்

(இ-ள்.) எங்கள் கொடிய பாசபந்தங்களுக்கு வேறாகி வந்துள்ளே யெழுந்தருளியிருந்த சம்பந்தமாமுனிவன் அழகிய பாதங்கள் காக்கக்கட வது அவனருளிச்செய்த மெய்ஞ்ஞானநூல் காக்கக்கடவது அழகிய தில்லை நகரம் காக்கக்கடவது சிவபோகங் காக்கக்கடவது என்க.

போற்றிப்பஃறொடைமுற்றியது.

உமாபதிதேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி-உமாபதிதேவநாயனார்

அருளிச்செய்த

# கொடிக்கவி.

கட்டளைக்கலித்துறை.

ஒளிக்கு மிருளுக்கு மொன்றேயிட மொன்று மேலிடிலொன்
றொளிக்கு மெனினு மிருளடராதுள் ளுயிர்க் குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும்படிக்கொடி கட்டினனே.

(இதன்பொருள்.) ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றேயிடம் - ஆணவத்திற்கும் ஞானத்திற்கும் இடமொன்றே,—ஒன்றுமேலிடில் ஒன்றொளிக்கும் - ஞானமேலிட்டகாலத்து ஆணவமொளித்துநிற்கும் ஆணவமேலிட்டகாலத்து ஞானமொளித்துநிற்கும்,—எனினும் இருளடராது - என்றாலும் ஞானத்தை ஆணவமலம் பொருந்தாது,—உள்ளுயிர்க்கு உயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்துளதேனும் திரிமலத்தே குளிக்கும் - பண்டைய வாசனை விசேஷத்தாலே உள்ளேகிடந்த சிவஞானம் சற்று விளங்கினும் மும்மலங்களிலே மூழ்கிக் கிடக்கும் அல்லாமல் அதுகொண்டே நீங்கமாட்டாது,—உயிர் அருள்கூடும்படி கொடிகட்டினனே - இத்தகைய ஆன்மா அருளைப்பெறும்படி தீக்ஷாக்கிரமத்தினாலே மலங்களைப்போக்கத் துசங்கட்டினேன் என்க.

ஆணவத்திற்கும் ஞானத்திற்கும் இடமொன்றாயிருந்தும் தனது காரணங் கெடாமலிருக்கின்ற மலத்தைத் தீக்ஷாக்கிரமத்தினாலே போக்கி மோக்ஷத்தை அடைவிப்போமென்பது கருத்து. (க)

நேரிசைவெண்பா.

பொருளாம் பொருளேது போதேது கண்ணே
திருளாம் வெளியே திரவே—தருளாளா
நீபுரவா வையமெலா நீயறியக் கட்டினேன்
கோபுர வாசற் கொடி.

(இ-ள்.) பொருளாம் பொருளேது - பொருளிலே அழியாத பொருளேது,—போதேது - கிரணமான சத்தியேது,—கண்ணேது - கண்போல ஆன்மாவேது,—இருளாம் வெளியேது இரவேது - அஞ்ஞானமான சகலமேது கேவலமேது,—அருளாளா - அருளையுடையவனே,—நீ புரவாவையமெலாம் நீயறியக் கட்டினேன் - தேவரீர் புரக்கின்ற வையகத்திலே மலமாயாதி கன்மங்களிலே பொருந்தாமல் ஆன்மாக்களிடமாகப் பொருந்தியிருக்கின்ற உன் திருவருளறியக் கட்டினேன்,—கோபுரவாசற்கொடி - திருக்கோபுரவாசலிலே கொடி என்க.

கர்த்தா, சத்தி, ஆன்மா, கேவலம், சகலம், இவை ஏதெனச் சொல்வாருமுளரோவென்று கொடிகட்டினேனென்பது கருத்து. (உ)

வாக்காலு மிக்க மனத்தாலு மெக்காலுந்
தாக்கா வுணர்வரிய தன்மையனை—நோக்கிப்
பிரித்தறிவு தம்மிற் பிரியாமை தானே
குறிக்கு மருணல்கக் கொடி.

(இ-ள்.) வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும் தாக்கா வுணர்வரிய தன்மையனை - வாக்கினாலும் பெரிய மனத்தினாலும் எப்பொழுதும் எட்டியறிவதற் கரிதாகிய தன்மையுடையவனை,—நோக்கி - விசாரித்துப் பார்த்து,—பிரித்து - பகுக்குமிடத்து,—அறிவுதம்மிற் பிரியாமைதானே குறிக்கும் அருள் நல்கக் கொடி - அறிவினிடத்திலே அறிவாயிருக்கின்ற சிவத்தைப் பிரியாமற் குறித்து அருளைப்பெறத்தக்கதாகக் கொடி கட்டினேன் என்க.

மனவாக்குக் காயங்களினாலே ஒருகாலும் எட்டப்படாதவனேனும் என்றும் பிரிவிலனென்பது கருத்து. (௩)

அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்து—நெஞ்சழுத்திப்
பேசு மெழுத்துடனே பேசா வெழுத்தினையுங்
கூசாமற் காட்டக் கொடி.

(இ-ள்.) அஞ்செழுத்தும்-சிவாயநம என்கிற ஐந்தெழுத்தும்,—எட்டெழுத்தும் - ஓம் ஆம் அவ்வும் சிவாயநம என்கிற எட்டெழுத்தும், —ஆறெழுத்தும் - ஓம் நமசிவாய என்கிற ஆறெழுத்தும்,—நாலெழுத்தும் - ஓம் சிவாய என்கிற நாலெழுத்தும் (உச்சரிக்கின்ற விதிப்படியே உச்சரித்து),—பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் நெஞ்சழுத்தி - (விதிப்படி உச்சரிக்கின்ற முறைமையைவிட்டு ஸ்ரீபஞ்சாக்கரத்தினுடைய சொரூபத்தையறிந்து) பிஞ்செழுத்தென்னும் வகாரமாகிய பராசத்தியையும் மேலைப் பெருவெழுத்தென்னும் சிகாரமாகிய சிவத்தையும் தன்னுடைய இருதயத்திலே வைக்கில்,—பேசுமெழுத்துடனே பேசாவெழுத்தினையும் கூசாமற் காட்டக் கொடி - பேசுமெழுத்தென்னும் வகாரமாகிய சத்தியும் பேசாவெழுத்தென்னும் சிகாரமாகிய சிவமும் இரண்டறக் கூசாமல் அழுத்துவிக்கக் கொடி கட்டினேன் என்க.

பஞ்சாக்ஷரமுதலாகிய மந்திரங்களை உச்சரித்து அதன்பின்னர் அந்த மந்திரத்தினுள் அக்ஷரசொரூபத்தை யறிந்து சத்தி சிவான்மீகமாயிருக்கின்ற அக்ஷரத்தை இருதயத்திலே வைத்தால் அந்தச் சத்திதானே சிவனை இரண்டறக் கலப்பிக்கும் என்பதறிந்து பஞ்சாக்ஷரத்தினாலே மோக்ஷத்தையடையும்படி கொடி கட்டினேனென்பது கருத்து.

பஞ்சாக்ஷரமானது-தூலம் சூக்குமம் அதிசூக்குமம் என மூன்றாம்; உச்சரிக்கு முறைமையுமப்படியேயாம். சிகாரம் சிவம், வகாரம் சத்தி, யகாரம் ஆன்மா, நகாரம் திரோதை, மகாரம் மலமெனக்காண்க. (௪)

## கொடிக்கவி முற்றியது.

உமாபதிதேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

வகாரத்தில் நகாரமும், யகாரத்தில் மகாரமும், சிகாரத்தில் வகாரமும் அதில் யகாரமும் ஒடுங்கும் ஏகாக்ஷரம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி-உமாபதிதேவநாயனார்

அருளிச்செய்த

# நெஞ்சுவிடுதூது.

கலிவெண்பா.

பூமேவு முந்திப் புயல்வண்ணன் பொற்பமைந்த
நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன்—றாமேவிப்
பன்றியு மன்னமுமாப் பாரிடந்தும் வான்பறந்து
மென்று மறியா வியல்பினா—னன்றியு
மிந்திரனும் வானோரு மேனோரு மெப்புவியு
மந்தர வெற்பு மறிகடலு—மந்திரமும்
வேதமும் வேத முடிவும்விளை விந்துவுட
னாதமுங் காணா நலத்தினா—னோத
ரு. வரியா னெளியா னளவிறந்து நின்ற
பெரியான் சிறியான் பெண்பாகன்—றெரியா
வருவா னுருவா னருவுருவு மில்லான்
மரியான் மரிப்பார் மனத்தான்—பரிவான்
மெய்யர்க்கு மெய்யன் வினைக்குவினை யாயினான்
பொய்யர்க்குப் பொய்யாய்ப் பொய்யாயினா—னையன்
படநாகம் பூண்ட பரமன் பசுவி
னிடமாய் நிறைந்த விறைவன்—சுடரொளியா
னென்றுமுள னன்றளவு மியானு முளனாகி
நின்றநிலை யிற்றரித்து நில்லாமற்—சென்றுசென்று
க0. தோற்றியிடு மண்டஞ் சுவேதசங்கண் மண்ணின்மேற்
சாற்றுமுற் பீசஞ் சராயுசங்கட்—கேற்றபிறப்
பெல்லாம் பிறந்து மிறந்து மிருவினையின்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன்—கல்லா
வுணர்வின் மிசையோ டுலகா யதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு—கணையிற்
கொடிதெனவே சென்று குடிப்பழுதே செய்து
கடிய கொலைகளவு காமம்—படியின்மிசைத்
தேடி யுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி யிடையு மனந்தனக்கு—நாடியது
கரு. போன வழியோடும் புந்திக்கும் புந்தியுட
னான திறலா ரகந்தைக்கு—மேனி

யயா வயா வழிய வழியு
முயிரின் றுயா முறையேன்—வயிரமே
கொண்டதொரு காமனுக்குங் கோபனுக்கு மோகனுக்கு
மண்டு மதமாச் சரியனுக்குக்—திண்டிறல்சே
ரிந்திரியம் பத்துக்கு மீரைந்து மாத்திரைக்கு
மந்தமிலாப் பூதங்க ளைந்தினுக்குஞ்—சிந்தைகவர்
மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றுமல மூன்றவத்தை
யேன்றுநின்று செய்யு மிருவினைக்குந்—தோன்றாத
உ௦. வாயுவொரு பத்துக்கு மாறாத வல்வினையே
யாய கிளைக்கு மருநிதிக்கு—நேயமா
மிச்சை கிரியை யிவைதரித்திங் கெண்ணிலா
வச்சங் கொடுமை யவைபூண்டு—கச்சரவன்
சீரினிலை நில்லாமற் றிண்டாடும் பல்கருவி
வாரி யகப்பட்டு மயங்கினேன்—றேருங்கா
லுன்னை யொழிய வுறவில்லை யென்னுமது
தன்னை யறிவைத் தனியறிவை—முன்னந்
"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ"ரென்று—நிலைத்தமிழின்
உரு. றெய்வப் புலமைத் திருவள் ளுவருரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாம—லைவர்க்கு
மாவதுவே செய்தங் கவர்வழியைத் தப்பாமற்
பாவமெனும் பௌவப் பரப்பழுந்திப்—பூவையர்தங்
கண்வலையிற் பட்டுக் கலவிக் கலைபயின்றங்
குண்மை யறிவுணர்ச்சி யோராமற்—றிண்மையினு
ளுவிற் கொடுமை பலபிதற்றி நாடோறுஞ்
சாவிற் பிறப்பிற் றலைப்பட்டிங்—காவிநிலை
நிற்கும் வகைபாராய் நிலையான நெஞ்சமே
பொற்பினுடன் யானே புகலக்கேள்—வெற்பின்மிசை
ங௦. வந்திருக்க வல்லான் மதியாதார் வல்லரணஞ்
செந்தழலின் மூழ்கச் சிரித்தபிரா—னந்தமிலா
வேத முடிவில் விளைவில் விளைவிலொளி
யாதி யமல னிமலனருட்—போத
வறிவி லறிவை யறியு மவர்கள்
குறியுள் புகுதுங் குணவ—னெறிகொள்
வெளியில் வெளியில் வெளியன் வெளியி
லொளியி லொளியி லொளிய—னொளியி
லளியி லளியி லளிய னளியி
லளவி லளவி லளவ—னளவிறந்து
ஙரு. நின்றா னனைத்து நிறைந்தா னினைப்பவர்பாற்
சென்றான் றெரியத் தெரியாதான்—குன்றா
விளக்காய் நிறைந்த விரிசுடரான் விண்மேற்
றுளக்காம னின்றபெருஞ் சோதி—யுளக்கண்ணுக்

கல்லாது தோன்று வமல னகிலமெலா
நில்லாம னின்ற நிலையினான்—சொல்லாரு
மீசன் பெருமை யிருவினை யேன்றனக்குப்
பேசுந் தகைகமையெலாம் பேணிக்கேள்—பாசம்
பலவுங் கடந்து பரிந்தருள்சேர் பண்பாற்
குலவி விளங்குங் குணக்குன்றே—னிலகவே
செய்ய தருமச் செழுங்கிரியின் மீதிழிந்து
வையம் பரவ மகிழ்ந்தெழுந்தங்—கையங்
களவுபயங் காமங் கொலைகோபங் காதி
யளவில்வினை யெல்லா மழித்திங்—குளமகிழத்
தொம்மெனவே யெங்கு முழங்கிச் சுருதிபயில்
செம்மைதரு மாகமங்கள் சேர்ந்தோடி—மும்மலத்தின்
காடடங்க வேர்பறித்துக் கல்விக் கரைகடந்தங்
கோடுபல பூதத் துணர்வழித்து—நீடுபுகழ்
மெய்வாய்கண் மூக்குச் செவியென்னப் பேர்பெற்ற
வைவாய வேட்கை யவாவழித்து—நையுமியல்
வாக்குப்பா தம்பாணி பாயுருபத் தம்பலவு
நீக்கிச் செறிந்து நிறைந்தோடிப்—போக்கரிய
பந்தமெனுஞ் சோலை பறித்துப் பரந்தலைக்கு
மந்தமனம் புந்தியுட னுங்காரஞ்—சிந்தைவிழ
மோதி யலைக்கு மருணீர்மை முக்குணமுங்
காதி யுரோமமெலாங் கைகலந்து—சீதப்
புளக மரும்பிப் புலன்மயக்கம் போக்கி
விளைவில் புலன்முட்ட மேவிக்—களபதன
மாதர் மயக்க மழித்துவளர் மண்டலத்தின்
சோதியொரு மூன்றினையுஞ் சோதித்து—நீதியின்
லாதார மாறினுஞ்சென் றுறியடல் வாயுக்கண்
மீதான பத்து மிகப்பரந்து—காதிப்
பிருதிவி யப்புத்தேயு வாயுவா காய
முறுதி நிலமைந்து மோடி—மறுவிலா
நான்முகன்மா லீசன் மகேச னலஞ்சிறந்த
தான்முக மைந்தாஞ் சதாசிவமு—மானதொரு
விந்துநா தங்கடந்து சுத்த வெறுவெளியி
லந்தமிலாப் பாழடங்கத் தேக்கியபின்—முந்திவரு
மவ்வறிவுக் கப்பாலுஞ் சென்றகண்ட முள்ளாக்கிச்
செவ்வறிவே யாகித் திகைப்பொழிந்தங்—கெவ்வறிவுந்
தானுய வீடருளித் தன்னிற் பிரிவில்லா
வூனுகி யெவ்வுயிர்க்கு முட்புகுந்து—மேனியிலா
ரஞ்சவத்தை யுங்கடந் தாயபெரும் பேரொளிக்கே
தஞ்சமெனச் சென்று தலைப்பெய்தி—வஞ்சமறத்
தானந்த மில்லாத தண்ணளியா லோங்கிவரு
மானந்த மென்பதோ ராறுடையான்—வானந்தம்

பண்ணும் பயன்சுருதி யாகமங்கள் பார்த்துணர்ந்து
நண்ண வரியதொரு நாடுடையா—னெண்ணெண்
கலையா லுணர்ந்து கருத்தழிந்து காம
நிலையான தெல்லாமுன் னீத்திங்—கலைவறவே
தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தா
லோட்டற்று வீற்றிருக்கு மூருடையா—னாட்டத்தாற்
றெண்ணீ ரருவிவிழச் சிந்தைமயக் கந்தெளிந்
துண்ணீர்மை யெய்தி யுரோமமெலா—நண்ணும்
புளகம் புனைமெய்யர் பொய்யிற்கூ டாம
லுளகம்பங் கொண்டுள் ளுருகி—யளவிலா
மாலா யிருக்கு மவர்மனத்தை வாங்கவருண்
மேலாய் விளங்கலங்கன் மெய்யினன்—றோலாத
வானம் புவன மலைகடலேழ் பாதாள
மூனைந்து பூதத் துயிருணர்ச்சி—ஞானமா
யெல்லாமா யல்லவா யெண்ணுவா ரெண்ணத்து
ணில்லாம நிற்குநீள் வாசியான்—சொல்லாரும்
பாதாள மூடுருவிப் பாரேழும் விண்ணேழு
மாதார மாகி யகண்டநிறைந்—தோத
வரிதா யெளிதா யருமறையா றங்கத்
துருவா யுயிரா யுணர்வாய்ப்—பெரிதாய
வெய்யதுயர்ப் பாசமற வீசியே வெம்பிறவித்
துய்ய கடலைத் துகளெழுப்பி—யையமுறுங்
காமக் குரோதமத மாச்சரியங் காய்ந்தடர்த்துச்
சாமத் தொழிலின் றலைமிதித்து—நாமத்தாற்
கத்துஞ் சமயக் கணக்கின்விறற் கட்டழித்துத்
தத்தம் பயங்கொலைக ளாங்கழித்தே—தத்திவரும்
பாசக் குழாத்தைப் படவடித்துப் பாவையர்த
மாசைக் கருத்தை யறவீசி—நேசத்தா
லானவே கங்கொண் டருண்மும் மதத்தினு
லூனையார் தத்துவங்க ளுள்புகுந்து—தேனைப்
பருகிக் களித்துயர்ந்த பன்மறைநாற் கோட்டான்
மருவித் திகழ்ஞான வானையா—னிருமுச்
சமயங் கடந்து தனக்கொப் பிலாத
சுமைதுன்ப நீக்குந் துவசன்—கமையொன்றித்
தம்மை மறந்து தழலொளியுள் ளேயிருத்தி
யிம்மை மறுமை யிரண்டகற்றிச்—செம்மையே
வாயுவை யோடா வகைநிறுத்தி வானத்து
வாயுவையு மாங்கே யுறவமைத்துத்—தேயுவா
லென்று மொருதகைமை யாயிருக்கு மின்பருளே
நின்று முழங்கு நெடுமுரசோ—னன்றியு
மாலு மயனும் வகுத்தளித்த வையமெலாஞ்
சாலுமிதற் கப்பாலு மெப்பாலு—மேலை

யுலகு முலகா துணரவொண்ணு வூரு
மிலகி நடக்குமெழி லாணையா—னலகிறந்த
காட்சியான் காட்சிக்குங் காணுக் கலைஞான
வாட்சியா ளுட்சிக்கு மாயினுன்—சூட்சியான்
பாருந் திசையும் படரொளியா லேநிறைந்தான்
றூருந் தலையுமிலாத் தோன்றலான்—வேறுகி
வித்தாகி வித்தின் முளையாகி மேவுதனுச்
சத்தாதி பூதங்க டாறுகிச்—சுத்த
வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக் கப்பா
லுறுபொருளாய் நின்ற வொருவன்—பொறியிலியென்
வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியென் றம்பிரா—னம்புவியார்
போற்றுந் திருவடியென் புன்றலைமீ தேபொறித்தோ
னேற்றின் புறத்தமைந்த வெங்கோமான்—சாற்றுவார்
சாற்றும் பொருளான் றனிமுதல்வன் றுன்லலான்
வேற்றின்ப மில்லா விளங்கொளியான்—போற்றுங்
குருவேட மாகிக் குணங்குறியொன் றில்லாப்
பெருவேட மாய்நிறைந்த பெம்மான்—கருவேடங்
கட்டுமுருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையா
னெட்டுமவர்க் கெட்டா வியல்பினுன்—மட்டவிழ்தார்
வானேன் பவனி வரக்கண்டு வல்வினையே
னேனேரு மேத்துதல்கண் டேத்தினேன்—றனென்னைப்
பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லா
நீத்தா னினைவுவே றுக்கினு—னேத்தரிய
தொண்ணூற் றறுவர்பயி றெக்கிற் றுவக்கறுத்தான்
கண்ணூறு தேனமிர்தங் காட்டினுன்—வெண்ணீறும்
வேடமும் பூசையுமே மெய்யென்றுன் பொய்யென்றுன்
மாடையும் வாழ்க்கை மனையுமே—நாடரிய
வஞ்செழுத்தி னுள்ளீ டறிவித்தா னஞ்செழுத்தை
நெஞ்சழுத்தி நேய மயலாக்கி—யஞ்செழுத்தை
யுச்சரிக்குங் கேண்மை யுணர்த்தியதி லுச்சரிப்பு
வைச்சிருக்கு மந்த வழிகாட்டி—யச்சமறச்
சென்று விளக்கையெழத் தூண்டிச் செழுஞ்சுடரி
லொன்றி யொருவிளக்கி னுள்ளொளியாய்—நின்ற
பெருவிளக்கின் பேரொளியி னுள்ளே பிரச
மருவு மலர்போன் மதித்தங்—குருவினுருக்
கொள்ளா வருளைக் கொளுத்திக் குணங்குறியொன்
றில்லா விடத்தே யிளைப்பாற்றி—விள்ளாத
வுள்ள முதலாக வுற்றதெல்லாம் வாங்கவருள்
வெள்ள மயலளித்து மேவினுன்—கள்ள
மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கி மனமெல்லா
மிறப்பித்தா னென்பிறவி யீர்த்தான்—விறற்சொல்லுக்

கoo. கெட்டாண யார்க்கு மெழுதா வியற்குணங்க
ளெட்டானே யாற்று வெழுத்தினன்—மட்டாரும்
பாடலா ராடலார் பண்பலார் நண்பலா
ராடலா ராட லகன்பதியாங்—கூடலார்
காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்
பாணர்க் கிலகு பலகையிட்டான்—சேணிற்
சிறந்த வுருவான் றிருமாலுக் கெட்டா
னிறைந்த திருவுருவாய் நிற்போன்—கறங்குடனே
சூறை சுழல்வண்டு சுழல்கொள்ளி வட்டமெனு
மாறில் கருணையினன் மாற்றினு—னீறணிந்த
கoடு. மெய்ய னமல னிமலனருள் வீடளிக்கு
மையனறி வுக்கறி வாயினன்—பொய்யர்பாற்
பொய்மையாய் நின்றான் புரிந்தவர்த நெஞ்சத்துண்
மெய்மையாய் நின்று விளங்கினன்—கைமழுவா
னத்தன்பா னீசென் றடையு மிடத்தையெலாஞ்
சித்தஞ்சேர் நெஞ்சமே செப்பக்கே—ணித்தலுமே
பூசிமுடித் துண்டுடுத்துப் பூங்குழலார் தங்கலவி
யாசைதனிற் பட்டின்ப வார்கலிக்கு—ணேசமுற
நின்று திளைக்கு மிதுமுத்தி யல்லதுவே
றென்று திளைக்கு மதுமுத்தி—யன்றென்
ககo. றிலகா விருளலகை போலிகலே பேசு
முலகா யதன்பா லுறாதே—பலகாலுந்
தாம்பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண் டாங்கதுவே
நான்பிரம மென்பவர்பா னண்ணுதே—யூன்றனக்குக்
கொன்றிடுவ தெல்லாங் கொலையல்ல வென்றுகுறித்
தென்றுமற மேதெய்வ மென்றென்று—வென்றிப்
பொறையே யெனும்புத்தன் பொல்லாத புன்சொன்
மிறையே விரும்பி விழாதே—நிறைமேவி
வாழ்பவர்போன் மன்னுடலின் மன்னுமுரோ மம்பறித்துத்
தாழ்வுநினை யாதுதுகி றுனகற்றி—யாழ்விக்கு
ககடு. மஞ்சு மகற்று மதுமுத்தி யென்றுரைக்கும்
வஞ்சமணன் பாழி மதியாதே—செஞ்சொல்புனை
யாதிமறை யோதி யதன்பயனொன் றும்மறியா
வேதியர்சொன் மெய்யென்று மேவாதே—யாதியின்மே
லுற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே—நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே—நீட
வழித்துப் பிறப்ப தறியா தரனைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே—விழித்தருளைத்
கஉo. தந்தெம்மை யாண்டருளுஞ் சம்பந்த மாமுனிவ
னந்தங் கடந்தப்பா லாய்நின்றே—னெந்தைபிரான்

வீற்றிருக்கு மோலக்க மெய்தியடி வீழ்ந்திறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென—வார்த்தகரி
யன்றுரித்தாய் நின்பவனி யாதரித்தா ரெல்லோரும்
வென்றிமத னம்புபட வீழ்வரோ—நின்றிடத்து
நில்லாது செல்வ நிலையென் றுணைநீங்கிப்
பொல்லா நரகம் புகுவரோ—பல்லாருங்
கத்துஞ் சபைமயக் கணக்கிற் படுவரோ
சித்தம் பலகாற் றிகைப்பரோ—முத்தம்
கஉரு. பொருத நகைமடவார் புன்கலவி யின்பம்
மருவி மயங்கி வருவரோ—விருபொழுது
நாளிருபத் தேழு நவக்கிரக மும்நலியுங்
கோளிதுவென் றெண்ணிக் குறிப்பரோ—வேளை
யெரித்தவிழி யாய்நின் னின்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல்—வருத்தமெலாந்
தீரா யெனவுரைத்துச் செங்கமலப் பூந்திருத்தா
டாரா யெனப்பலகாற் றாழ்ந்திறைஞ்சி—யோராரும்
பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே
யீங்கொன்ற வாரா யினி.

(இதன்பொருள்.) பூமேவுமுந்தி - தாமரைப்பூவினையொத்த கொப்பூழினைவாய்ந்த,—புயல்வண்ணன்-மேகநிறத்தினையுடைய நாராயணமூர்த்தியும்,—பொற்பமைந்த - அழகுபொருந்திய,—நாமேவும் - நாவினிடத்தமரும்,—மாது-சரஸ்வதி,—புணர் - சேரும்,—நான்முகத்தோன்-நான்குமுகங்களைவாய்ந்தபிரமாவும்,—பன்றியுமன்னமுமாக-முறையேபன்றியாகியும் அன்னமாகியும்,—தாமேவி - தாங்கள் வடிவெடுத்து,—பாரிடந்தும் - பூமியைக் கீண்டும்,—வான்பறந்தும் - ஆகாயத்திற்பறந்தும்,—என்றும் - எக்காலத்தினும்,—அறியா - அறியவொண்ணாத,—இயல்பினன் - தன்மையினை யுடையவன்,—

அன்றியும் - அல்லாமலும்,—இந்திரனும் - தேவேந்திரனும்,—வானோரும் - தேவர்களும்,—ஏனோரும் - மற்றையரும்,—எப்புவியும் - எந்தவுலகத்தவரும்,—மந்தர வெற்பும் - மந்தரமலைவாசிகளும்,—மறி - அலைமடங்கும்,—கடலும் - சமுத்திரவாசிகளும்,—மந்திரமும் - சப்தகோடி மகாமந்திரர்களும்,—வேதமும் - நான்குவேதங்களும்,—வேதமுடிவும் - முப்பத்திரண்டு உபநிடதங்களும்,—விளைவிந்துவுடன் - சுத்தமாயையி லுண்டாகிய விந்துவுடன்,—நாதமும் - அம்மாயையின் காரியமாகிய நாதமும்,—காணா - இவைகளாற் காணப்படாத,—நலத்தினன் - நன்மையையுடையவன்,—

ஓத - எடுத்துச்சொல்ல,—அரியான்-(உழுவலன்பின் றலைப்படாத அயன்முதலியதேவர்கட்கு) அருமையானவன்,—எளியான் - (அன்பின் றலைப்பட்ட அடியருக்கு) எளிமையானவன்,—அளவிறந்து - (வைகரியாதிநால்வகைவாக்கின் பகுதியவாகிய வேதமுதல் நாதமீறானவைகளுக்கு

அதீதமாய்ச்சுட்டுணர்வுக்கெட்டாது யாங்கணும் பிரிவின்றி சமவேதமாய் நின்ற) வியாபகமாய்,—நின்ற - எழுந்தருளிய,—பெரியான் - (அளவின்றிப்பரந்த அண்டங்கள்யாவும் தன்னுள்வியாப்பியமாகத் தான்வியாபகமாயெங்குநிறைந்துநின்ற) பெரியவன்,—சிறியான் - (மலபாகம்வருவித்தருளுதற்பொருட்டு அணுக்களாகிய உயிர்கட்குள்ளிருந்து அதிசூக்கும ஐந்தொழில்நடத்தும்) சிறியவன்,—பெண்பாகன் (நிஷ்களசிவம் ஆன்மாக்களின்பேரந்தகாரமாகிய ஆணவத்தை நீக்கும்பொருட்டும் ஆகமங்களைக் குருசந்தானத்தில் வைக்கும்பொருட்டும் அறுவகைச்சமயத்தவருமவரவர் தியானவண்ணம் அருளுதற்பொருட்டும் அருள்வடிவாகிய சத்தியின்வழியேசங்கற்பித்துநின்ற) அம்மையாரை வாமபாகத்திலுடையவன்,—

தெரியா - ஒருவராலுமறியப்படாத,—அருவான்-(சிவம் சத்தி நாதம் விந்து என) அருவமானவன்,—உருவான் - (மகேச்சுரன் உருத்திரன் திருமால் அயன் என)உருவமானவன்,—அருவுருவம்-(சதாசிவமென்னும்) அருவுருவமாகி,—இல்லான்-(நவந்தருபேதமுநாடகமாத்திரையினடிக்கும்) இவையாவுமில்லாதவன்,—மரியான் - இறவாதவன்,—மரிப்பார் - இறக்கும்பிரமவிஷ்ணுக்களுடைய,—மனத்தான் - மனத்திலிருப்பவன்,—

பரிவான - பக்குவப்பட்ட,—மெய்யர்க்கு - உண்மையடியார்க்கு,—மெய்யன் - உண்மையாய்விளங்குபவன்,—வினைக்கு - பிரபஞ்சகாரியங்கட்கு,—வினையாயினன் - நிமித்தகாரணனாயினன்,—பொய்யர்க்கு—உண்மையில்லார்க்கு,—பொய்யாய் - இன்மையாய்,—பொய்யாயினன்-தோன்றாதவனுவான்,—

ஐயன் - சர்வான்மாக்களுக்கும் பிதாவானவன்,—படநாகம்-(தாருகாவனத்தர் அவிசாரவோமத்துண்டாக்கிஏவிய) படங்களோடுங்கூடிய பாம்புகளை,—பூண்ட - ஆபரணங்களாகத்தரித்த,—பரமன்-மேலானவன்,—பசுவின் - எண்ணிறந்தவான்மகோடிகளின்,—இடமாய் - இடமாகி,—நிறைந்த - பூரணனாய்த்தங்கிய,—இறைவன் - கடவுள்,—

சுடரொளியான் - சோமசூரியாக்கினி சொரூபமாயுள்ளவன்,—என்றுமுளன் - (இத்தகைய முதல்வன்) எக்காலத்துள்ளானே,—அன்றளவும் - அக்காலமுதல்,—யானும் - பசுவாகியநானும்,—உளனாகி - இருப்பவனாகி,—நின்றநிலையில் - (ஆன்மாவினது உண்மைச்சொரூபமாயுள்ள) தன்மையில்,—தரித்து - நிலைபெற்று,—நில்லாமல் - வாழாமல்,—

சென்றுசென்று - படைப்புகடோறும் போய்ப் போய்,—தோற்றியிடும் - முதல்வனாலுண்டாக்கப்பட்டு,—மண்ணின்மேல் - பூமியின்மீது,—சாற்றும் - சொல்லும்,—அண்டம் - முட்டையிற்றோன்றுவன,—சுவேதசங்கள் - வியர்வையிற்றோன்றுவன,—உற்பீசம் - விதையிற் றோன்றுவன,—சராயுசங் கட்கு - கருவிற்றோன்றுவனவாகிய விலைகட்கு,—ஏற்ற - சம்பந்தமாகிய,—பிறப்பெல்லாம் - எழுவகைப்பட்ட எண்பத்துநான்கு நூறாயிரயோனிகடோறும்,—பிறந்தும் - சனித்தும்,—இறந்தும் - மறுபடிமரித்தும,—இருவினையின் - அந்தந்தச் சென்மங்கடோறும் உண்

டான புண்ணியபாவங்களின்,—பொல்லாங்கு - தீமையை,—துய்க்கும் - அனுபவிக்கும்,—பொறியிலியேன் - அறிவிலியேன்,—

கல்லா - பதிநூல்களைக்கல்லாது,—உணர்வின் - பாசவறிவினால்,—மிசையோடு - மிகுந்ததிகப்பட்ட,—உலகாயதனை - சாருவாகனை,—புணர்வதொரு - கலந்ததொரு,—புல்லறிவு - சிற்றறிவு,—பூண்டு - கொண்டு,—

கணையின் - அம்பினைக்காட்டிலும்,—கொடிதெனவே - கொடுமையாகவே,— சென்று - வேகமாகப்போய்,—குடிபழுதேசெய்து - பிறனில் விழைந்து,—கடிய - அச்சமான,—கொலை - பிறவுயிரைக்கொல்லல்,—களவு - திருடல்,—காமம் - அன்னியமாதர்மேலிச்சைமுதலியன,—படியின் மிசை - இவ்வுலகில்,—தேடியுழன்று - முயன்று திரிந்து,—தெரிவை - முதல்வன்றிருவருளை,—தெரியாமல் - நாடாமல்,—வாடி - சோம்பி,— இடையும் - சோர்தலையடையும்,—மனந்தனக்கு - (கருவிகளிற்றலைமையாய) மனத்திற்கு,—

நாடி - மனமானது விடயங்களைப் பற்றி,—அது - அம்மனம்,— போனவழியோடும் - சென்றவழியிலே செல்லும்,—புந்திக்கும் - ஒன்றை நிச்சயம்பண்ணும் புத்திக்கும்,—புந்தியுடன் - அப்புத்தியுடன்,—ஆன - பொருந்திய,—திறலார் - வன்மைபொருந்திய,—அகந்தைச்கும் - சித்தத்திற்கும்,—

மேனி - தேகமானது,—அயர அயர - (நாளுக்குநாள்) தளரத் தளர,—அழிய அழியும் - அக்கருவிகளுடன் அம்மேனியழியும்போது,— உயிரின் - ஆன்மாவின்,—துயரம் - (அக்காலத்துண்டாகுந்)துன்பத்தினை, —உரையேன் - இவ்வளவெனக்கூறேன்,—

வயிரமே - விரோதமே,—கொண்டதொரு - பெற்றதொரு,— காமனுக்கும் - ஆசையென்பவனுக்கும்,—கோபனுக்கும் - சிறிதுஞ்சாந்தமில்லாதகோபமென்பவனுக்கும்,—மோகனுக்கும் - நன்மைதீமைபகுத்தறியாது மயக்கஞ்செய்யும் மோகனென்பவனுக்கும்,—மண்டு - மிகுந்த,— மதம் - செருக்கினையுடைய,—மாச்சரியனுக்கும் - பொறாமையனுக்கும்,—

திண்டிறல்சேர் - வல்லமையை வெற்றியாகவுடைய,—இந்திரியம் பத்துக்கும் - மெய் வாய் கண் மூக்கு செவி யாகிய ஞானேந்திரியமைந்து வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தமாகிய கன்மேந்திரியமைந்து ஆக பத்துக்கும்,—ஈரைந்து மாத்திரைக்கும் - சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தம் ஆகிய பத்துக்கும்,— அந்தமிலா - முடிவில்லாத,—பூதங்களைந்தினுக்கும் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் ஆகிய வைந்துக்கும்,—

சிந்தைகவர் - மனத்தைக்கிரகிக்கின்ற,—மூன்று குற்றம் - காமம் வெகுளி மயக்கமென்னு மூன்றுகுறைகள்,—மூன்று குணம் - சாத்துவிதம் இராசதம் தாமதம் ஆகிய மூன்றுகுணங்கள்,—மூன்றுமலம் - ஆணவம் கன்மம் மாயை யென்னு மும்மலங்கள்,—மூன்றவத்தை - கேவலம் சகலம்

மத்திபமென்னு மூன்றவத்தைகள்,—என்று நின்று-பொருந்தி முறைபிற ழாது புசிப்பிக்கநின்ற,—இருவினைக்கும்-புண்ணியபாவமிரண்டினுக்கும்,-

தோன்றாத - பிரத்தியட்சமில்லாத,—வாயுவொரு பத்துக்கும் - பிராணன் அபானன் உதானன் வியானன் சமானன் நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் ஆக பத்துவாயுக்களுக்கும்,—மாறாத - விடாத, —வல்வினையேயாய - வலிமைபொருந்திய வினைகளையாகிய,—கிளைக்கும்-உறவினுக்கும்,—அருநிதிக்கும் - மிகவும் வருந்தித் தேடிய செல்வத்திற்கும்,—

நேயமாம் - இவைகளின் வசமாம்,—இச்சை கிரியை இவை தரித்து - இச்சாஞானக்கிரியா ரூபனாய்,—இங்கு - இப்புவியில்,—எண்ணிலா - அளவில்லாத,—அச்சம் - பயம்,—கொடுமை - தீமை,—அவை பூண்டு - அவைபெற்று,—

கச்சரவன் - அரையிற் பாம்பினைக் கச்சையாகக்கட்டிய முதல்வன் (திருவாய்மலர்ந்தருளிய),—சீரினிலை - சிறப்புப்பொருந்திய (ஆகம) வழியில்,—நில்லாமல்-நடவாது,—திண்டாடும் - அலக்கழியும்,—கருவிவாரி - தத்துவங்களாகிய சமுத்திரத்தில்,—அகப்பட்டு - மூழ்கி,—மயங்கினேன்-கரைதெரியாது மயக்கத்தை அடைந்தேன்,—

தேருங்கால் - ஆராயுங்கால்,—உன்னை - (முதல்வனாகிய) தேவரீரை, —ஒழிய - அல்லாது,—உறவில்லை - வேறுதுணையில்லை,—என்னுமது தன்னை - என்று சொல்லப்படும் உண்மையினை,—அறிவை - பசுவறிவை, —தனியறிவை - பதியறிவை,—

முன்னம் - பூர்வத்தில்,—தீரத் துறந்தார் - (விசாரித்து) முற்றத் துறந்தவர்,—தலைப்பட்டார் - முத்தியடைந்தவராவர்,—மற்றையவர் - அப்படித் துறவாதவர்,— மயங்கி - மருண்டு,—வலைப்பட்டார் - பிறப்பாகிய வலையில் அகப்பட்டவராவர்,—என்று - என்பதாக,—

நிலைத்தமிழின் - உலகத்தில் நிலைபெற்ற தமிழினால்,—தெய்வப்புலமை - தெய்வத்தன்மை பொருந்திய புலமைவாய்ந்த,—திருவள்ளுவர் - திருவள்ளுவதேவநாயனார்,—மெய்வைத்த சொல்லை - உண்மையாகத் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறளினை,—விரும்பாமல் - அன்புடனாடாமல்,—

ஐவர்க்கும் - பஞ்சேந்திரியங்கட்கும்,—ஆவதுவே - ஆனகாரியங்களையே,—செய்து - முடித்து,—அங்கவர்வழியைத் தப்பாமல் - அவைகளின் வசங்கடவாமல்,—பாவமென்னும்-நரகமென்னும்,—பௌவப்பரப்பு-பிறப்பாகிய சாகரத்தில்,—அழுந்தி - முழுகி,—

பூவையர்தம் - மாதர்களின்,—கண்வலையில் - கண்களாகிய வலைகளில்,—பட்டு - சிக்கி,—கலவிக்கலை - மதனநூல் முதலிய வற்றுள்,— பயின்று - தேர்ந்து,—அங்கு-அவ்விடத்து,—உண்மை-மெய்மையாகிய,— அறிவு - அறிவினைவிளைக்கும்,—உணர்ச்சி - கல்வியை,—ஓராமல் - ஆராயாமல்,—

திண்மையினுல் - வலிமையினுல்,—நாவின் - நாவினுல்,—கொடுமைபல - அநேகமான தீங்குகளை,—பிதற்றி - விடாதுபேசி—நாடோறும் - எத்தினமும்,—சாவில் - இறப்பிலும்,—பிறப்பில் - சனிப்பிலும்,—தலைப்பட்டு - எதிர்ந்து,—இங்கு - இப்புவியில்,—

நிலையான - (என்னுடன் எப்போதும்) நிலையாயுள்ள,—நெஞ்சமே - மனமே,—ஆவி-ஆன்மாவானது,—நிலைநிற்கும்-எந்நாளுமோர்படித்தாயிருக்கும்,—வகைபாராய்- வகையையாலோசிக்கக்கடவாய்,—பொற்பினுடன்-அழகுடன்,—யானே - நானே,—புகலக்கேள் - அந்த வகையை உனக்குச் சொல்லுவேன் கேட்பாயாக,—

வெற்பின்மிசை - வெள்ளியங்கிரியின்மீது,—வந்திருக்க - எழுந்தருளியிருக்க,—வல்லான் - வல்லவன்,—மதியாதார் - ஒருவரையும் வணங்காதவர்களாகிய அசுரர்களின்,—வல்லரணம்- வலிமைபொருந்திய வெள்ளி பொன் இரும்பு முதலியவற்ரு லாகிய மதிலாற் சூழப்பட்ட கோட்டைகளை,—செந்தழலின்-அக்கினியில்,—மூழ்க-அழிந்துபோம்படி,—சிரித்த-புன்னகைசெய்த,—பிரான் - கடவுள்,—

அந்தமிலா - முடிவிலா தனேகமான,—வேதம் - வேதங்களின், —முடிவில் - அந்தத்தில்,—விளைவில் - சத்தத்தின்,—விளைவில் - பொருளாயிருக்கின்ற,—ஒளி - சோதியன்,—ஆதி - சகலத்திற்குந் தலைமையான,—அமலன் - அநாதியே மலமில்லாதவன்,—நிமலன் - நின்மலன்,—அருள் - அருண்மயமாகிய,—

போதவறிவில் - ஞானமயமான வறிவின் கண்ணே, அறிவை - சிவத்தை,—அறியும் - தரிசிக்கும்,—அவர்கள் - சீவன்முத்தர்கள்,—குறியுள் - இதயத்தில்,—புகுதும் - எழுந்தருளும்,—குணவன் - இயல்புடையவன்,—

நெறிகொள் - அடைவான,—வெளியில் - ஆகாயத்தினது,—வெளியில் - அதற்குக் காரணமான பிரகிருதியில்,—வெளியன் - அதற்காதாரமான கலாரூபமாயுள்ளவன்,—வெளியில் - அக்கலையின், —ஒளியில்-அக்கலைக்குமேலாகிய அசுத்தமாயையில்,—ஒளியில் - அதற்கப்பாற்பட்ட சுத்தவித்தையில்,—ஒளியன் - அதைக்கடந்த விந்துவிலிருப்பவன்,—

ஒளியில் - அவ்விந்துவில்,—அளியில் - அவ்விந்துவைக்கடந்த சதாசிவத்தில்,—அளியில் - அச்சதாசிவத்தின்மேலான பராசத்தியில்,—அளியன் - அப்பராசத்திக் காதாரமான பரசிவன்,—அளியின் - அத்தகைய பரசிவனுயினும்,—அளவில் - எண்ணல் எடுத்தல் நீட்டல் குறுக்கல் என்பனவற்றிற்கும்,—அளவில் - அவற்றினுக்கு மேற்பட்ட காட்சிகருதலுரைமுதலிய வற்றினுக்கும்,—அளவன் - அதனினுமிக்க முதனடு வீறின்மையான தனியளவினன்,—

அளவிறந்து - இவ்வளவென எல்லைப்படுத்தற்கரியனுய்,—நின்றான் - உள்ளவன்,—அனைத்தும் - பிரபஞ்சமுழுதும்,—நிறைந்தான் - வியாபக

மானவன்,—நினைப்பவர்பால் - தியானிப்பவரிடத்து,—சென்ருன் - எழுந்தருளுபவன்,—தெரிய - ஆன்மபோதத்தாலறிய,—தெரியாதான் - அறியப்படாதவன்,—

குன்ரு - குறைபடாத,—விளக்காய் - தீபமாய்,—நிறைந்த - எங்கும் வியாபியான,—விரிசுடரான் - பரவியசோதியான்,—விண்மேல் - ஆகாயத்தில்,—துளக்காமல் - தானேபிரகாசியாது,—நின்ற - சோமசூரியாக்கினியாய் நின்ற,—பெருஞ்சோதி - பெரிய வொளிரூபமாயுள்ளவன்,—

உளக்கண்ணுக்கு-அறிவினுக்கு,—அல்லாது-அல்லாமல்,—தோன்ரு - புறக்கண்களுக்குக் காணுத,—அமலன் - பரிசுத்தமானவன்,—அகிலமெலாம் - சித்பிரபஞ்சமெல்லாம்,—நில்லாமல் - வேருயிராமல்,—நின்ற - (கண்ணொளியான்ம போதம்போல உடனுய்)நின்ற,—நிலையினுன் - பூரணனுய் நிற்பவன்,—

சொல்லாரும் - வேதாகமங்களிற் பொருந்திய,—ஈசன் - முதல்வனது,—பெருமை - மகிமைகளை,—இருவினையேன் - புண்ணியபாவங்களிற் கட்டுப்பட்டபெத்தனுகிப நான்,—உன்றனக்கு - மனமாகியவுனக்கு,—பேசும் - எடுத்துச்சொல்லும்,—தகைமையெலாம் - பெருமையெல்லாம்,—பேணிக்கேள் - விரும்பிக்கேட்பாயாக,—

பாசம்பலவும் - ஆணவம் கன்ம மாயையாகிய மலங்களின் காரியகாரணங்களை,—கடந்து - அவற்றிற்ருேயாது அப்பாற் சென்று,—பரிந்து - விரும்பி,—அருள் - கிருபையினை,—சேர் - பொருந்திய,—பண்பினுல் - குணத்தினுல்,—குலவி - பாராட்டி,—விளங்கும் - அடியாரிதயந்தோறும் பிரகாசிக்கும்,—குணக்குன்ருேன் - நற்குணமே சொரூபமாகிய மலையினையுடையவன்,—

இலகவே - ஒளிவிடவே,—செய்ய - செவ்விய,—தருமம் - பதிபுண்ணியமான,—செழுங்கிரியின்மீது - அழகியமலையின்மேல்,—இழிந்து - இறங்கி,—வையம் - உலகம்,—பரவ - வணங்க,—மகிழ்ந்து - சந்தோஷித்து,—எழுந்து - எழுந்தருளி,—அங்கு - அவ்விடத்து,—

ஐயம் - சந்தேகம்,—களவு - திருட்டு,—பயம் - அச்சம்,—காமம் - ஆசை,—கொலை - கொல்லல்,—கோபம் - சினம்,—காதி - இவைகளைக் கெடுத்து,—அளவில் - எண்ணிறந்த,—வினையெல்லாம் - துன்பங்களையெல்லாம்,—அழித்து - ஒழித்து,—இங்கு - இவ்விடத்தில்,—

உளமகிழ-மனம்பூரிக்க,—தொம்மெனவே-தொம்மெனுமகாவாக்கியவொலியோடு,—எங்கும் - எவ்விடத்தும்,—முழங்கி - ஆரவாரித்து நிற்கும்,—சுருதி - நான்குவேதங்களிடத்தும்,—பயில் - தங்கிய,—செம்மைதரும் - உண்மையான ஞானத்தைக்கொடுக்கின்ற,—ஆகமங்கள் - இருபத்தெட்டாகமங்களில்,—சேர்ந்தோடி - தங்கவியாபித்து,—

மும்மலத்தின் - மூன்றுமலங்களின்,—காடு - காடானது,—அடங்க - ஒங்காதுகுன்றிவிட,—வேர்பறித்து - அடியோடலைத்து,—கல்வி - அபர

ஞானமாகிய சமுத்திரத்தின்,—கரை - கரையினை,—கடந்து - தாண்டி,—அங்கு - அவ்வவ்விடங்கட்கு,—ஓடு - தாவிச்செல்லுகின்ற,—பல பூதத்து - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னுமைம் பூதங்களுடைய ஐந்து நான்கு மூன்று இரண்டு ஒன்று ஆகிய அவற்றின் குணங்களின்,—உணர்வு - தெளிவை,—அழித்து - போக்கி,—

நீடுபுகழ் - மிக்கபுகழினைவாய்ந்த,—மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னப் பேர்பெற்ற - மெய் வாய் கண் மூக்கு செவி யென்னும் பெயர்களை வாய்ந்த ஞானேந்திரியங்களாகிய,—ஐவாய-ஐந்து வாயில்களினலாய,—வேட்கை - கிரகிக்கும் சத்த பரிச ரூப ரசகந்தமென்றாய,—அவா - ஆசைகளை,—அழித்து - போக்கி,—

நையும் - கீழ்ப்படுத்தும்,—இயல் - தன்மையினைவாய்ந்த,—வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் பலவும் - வாக்குபாதம்பாணிபாயுரு உபத்தமெனப் படும் கன்மேந்திரியங்களின்,—நீக்கி - (அவற்றின் செயலாகிய வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்த மென்பனவற்றை) ஒழித்து,—செறிந்து - நெருங்கி,—நிறைந்தோடி - நிரம்பிச்சென்று;—

போக்கரிய - நீக்குவதற்கருமையாகிய,—பந்தமெனும் - சங்கற்ப விகற்பங்களாகிய கட்டென்னும்,—சோலை - செறிவினை,—பறித்து - களைந்து,—பரந்து - சூழ்ந்து,—அலைக்கும் - வருத்தும்,—அந்த,—தேகத்தினிடத்துள்ள,—மனம்புத்தியுடனுங்காரஞ்சிந்தை - அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி சித்த மகங்காரங்கள்,—விழ - ஒழிய,—

மோதி - தாக்கி,—அலைக்கும் - வருத்தும்,—மருள் நீர்மை - மயக்கவொப்புரவாய்ந்த,—முக்குணமும் - சாத்துவித இராசத தாமதமாகிய முக்குணங்களையும்,—காதி - அழித்து,—உரோமமெலாம் - உடல் முழுவதும்,—கைகலந்து - நிரம்பி,—

சீதம் - குளிர்ச்சி பொருந்திய,—புளகம் - மயிர்ச்சிலிர்ப்பு,—அரும்பி - உண்டாகி,—புலன் - ஐம்புலன்களாலுண்டாகும்,—மயக்கம் - மருளினை,—போக்கி - கெடுத்து,—விளைவில் - அச்சம்பவிப்பில்,—புலன் - அறிவானது,—முட்ட - கிட்ட,—மேவி - பொருந்தி,—

களபம் - கலவைச் சந்தனத்தாற் பொலிந்த,—தனம் - கொங்கைகளையுடைய,—மாதர் - மாதர்களாலுண்டாகும்,—மயக்கம் - அறியாமையை,—அழித்து - நீக்கி,—வளர் - ஓங்கிய,—மண்டலத்தின் - அக்கினிமண்டலம் ஆதித்தமண்டலம் சோமமண்டலங்களிலுள்ள,—சோதி - பிரகாசங்களாகிய,—ஒருமூன்றினையும் - சோமசூரியாக்கினி மூன்றினையும்,—சோதித்து - ஆராய்ந்து,—

நீதியினல் - கிரமத்தால்,—ஆதாரமாறினும் - மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆஞ்ஞை என்னும் ஆறுஆதாரங்களிலும்,—சென்று - போய்,—ஆறி - நிறைந்து,—அடல் - வல்லமை பொருந்திய,—மீதான - மேலான,—வாயுக்கள் - பிராணன் அபானன் உதானன் வியானன் சமானன் நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன்

தனஞ்சயனென்னும்,—பத்தும் - தசவாயுக்களும்,—மிகப்பரந்து - மேற்கொண்டோடி,—

காதி - கோபித்து,—பிருதிவியப்புத் தேயுவாயுவாகாயம் - மண் புனல் தீ காற்று வெளியென்னும்,—உறுதி - நிலைபெற்ற,—நிலமைந்து - ஐந்துநிலங்களிலும்,—ஓடி - தாவி,—

மறுவிலா - குற்றமிலாத,—நான்முகன் - நிவர்த்திகலைக்கதிபரான பிரமாவும்,—மால் - பிரதிட்டாகலைக்கதிபரான நாராயணனும்,—ஈசன் - வித்தியாகலைக்கதிபரான உருத்திரனும்,—மகேசன் - சாந்திகலைக்கதிபரான மகேசனும்,—நலம் - நன்மை,—சிறந்த-சிறப்புப்பெற்ற,—முகமைந்தாம்-ஈசானம் தற்புருடம் அகோரம் வாமம் சத்தியோசாதமென்னும் ஐந்து திருமுகங்களையுடைய,—சதாசிவமும் - சாந்தியாதீதகலைக்கதிபரான சதாசிவமும்,—

ஆனதொரு - இவ்வகையாகிய,—கலைகட்கும் மூர்த்திகட்கும் காரணமான வொரு,—விந்து - சுத்தமாயையி னதோமுகமான பராசத்தியையும்,—நாதம் - சுத்தமாயையின் ஊர்த்துவமுகமான ஓசைவடிவாகிய பரநாதத்தையும்,—கடந்து - மேற்சென்று,—சுத்த - நின்மலமான,—வெறுவெளியில் - வெட்டவெளியில்,—அந்தமிலா - முடிவில்லாத,—பாழடங்க - சுத்தசூனியமுழுதும்,—தேக்கியபின் - நிறைந்தபின்,—

முந்திவரு - ஞானபாதங்களின் முதற்பேசப்பட்ட,—அவ்வறிவுக்கு-அப்பராசத்திவடிவினுக்கு,—அப்பாலும் - அப்பாலும்,—சென்றகண்டம் - போய்விசாரித்த பரநாதத்தை,—உள்ளாக்கி - உள்ளடக்கி,—செவ்வறிவேயாகி - ஒரேநீர்மையான சுத்தவறிவாகி,—திகைப்பொழிந்து - சந்தேகமில்லாது தீர்ந்து,—அங்கு - அவ்விடத்து,—

எவ்வறிவும் - (பாதாளசத்திதொடங்கிப் பரநாதவியாபகம் வரையிலுள்ள சத்துக்களின்) ஞானங்களும்,—தானாய் - தானேயாகி,—வீடருளி - முத்தியுங்கொடுத்து,—தன்னில் - தன்னிடத்து,—பிரிவில்லா - அபின்னமானவைகட்கு,—ஊனாகி - திருமேனியாகி,—எவ்வுயிர்க்கும் - எவ்வகைப்பட்ட (விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலராகிய) உயிர்கட்கு,—உள்புகுந்து - உயிருக்கு உயிராய்நிறைந்து,—

மேனியிலார் - தத்துவங்களாலாய தேகத்தில்பொருந்திய,—அஞ்சவத்தையும் - (சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் ஆகிய)பஞ்சாவத்தைகளையும்,—கடந்து - கடந்து,—ஆய - பொருந்திய,—பெரு - பெரிய,—பேரொளிக்கே - சோதிசொரூபத்தினுக்கே,—தஞ்சமென - அடைக்கலமென,—சென்று - அடைந்து,—தலைப்பட்டு - உபாயந்தேடி,—

தான் வஞ்சமற - வினையால் வேறுபாடுசெய்வதல்லது தான் யாதொருபக்கல்சார்தலின்றி,—அந்தமில்லாத - முடிவுடைய வொருபொருளாயிராது,—தண்ணளியால் - காருண்ணியத்தினால்,—ஓங்கி - மேலுமேலும் வளர்ந்து,—வரும் - வருகின்ற,—ஆனந்த மென்பதோர் - நித்தியானந்தசுகமென்பதொன்றான,—ஆறுடையான் - ஆற்றினையுடையவன்,—

ஆனந்தம் - சுகரூபத்தினையே,—பண்ணும் - செய்வதற்கு,—பயன் - பிரயோசனமாயுள்ள,—சுருதி - இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் (பொதுவான) நான்கு வேதங்களையும்,—ஆகமங்கள் - அவ்வேதங்களின் பாஷியமாக விளங்கும் (சிறப்பான) ஆகமங்களையும்,—பார்த்து - விசாரித்து,—உணர்ந்து - உண்மையறிந்து,—நண்ண - அடைதற்கு,—அரியது - அருமையானதாம்,—ஒரு - ஒப்பற்ற,—நாடுடையான் - நாட்டினையுடையவன்,—

எண்ணெண்கலையால் - அறுபத்துநான்குவகைப்பட்ட அபரஞானங்களால்,—உணர்ந்து - அறிந்து,—கருத்தழிந்து - உண்மையினையறியாமல் நொந்து,—காமநிலையானதெல்லாம் - ஆசைக்கேதுவான கீழுற்றபோகத்தானங்களெல்லாவற்றையும்,—முன்னீத்து - முன்பு நீக்கி,—இங்கு - இவ்விடத்து,—

அலைவறவே - சலிப்பறவே,—தேட்டற்ற - தேடுதலின்றி ஒடுங்கிய,—சிந்தை - மனத்தினிடத்துதித்த,—சிவஞானம் - சிவஞானமாகிய,—மோனத்தால் - மவுனநிலையில்,—ஓட்டற்று - போக்குவரவற்று,—வீற்றிருக்கும் - அனுபூதிமயமாய்ப் பூர்ணம் பெற்றிருக்கும்,—ஊருடையான் - ஊரினையுடையவன்,—

நாட்டத்தால் - கண்களினின்றும்,—தெண்ணீரருவிவிழ - ஆனந்தநீர் சோர,—சிந்தைமயக்கம் - மனமயக்கம்,—தெளிந்து - தெளியப்பெற்று,—உண்ணீர்மை - மனக்களிப்பு,—எய்தி - பெற்று,—உரோமமெலாம் - மயிர்க்கால்கடோறும்,—

நண்ணும் - பொருந்தும்,—புளகம் - சிலிர்ப்பு,—புனை - கொண்ட,—மெய்யர் - அடியார்கள்,—பொய்யிற் கூடாமல் - பிரபஞ்சத்திற் சாராமல்,—உளகம்பங்கொண்டு-மனநடுக்கம்பெற்று,—உள்ளுருகி-சிந்தையுருகி,—

அளவிலா - எல்லையில்லாத,—மாலாயிருக்கும் - வாஞ்சையுடன் வீற்றிருக்கும்,—அவர்-ஜீவன்முத்தர்களின்,—மனத்தை - இருதயத்தை,—வாங்க - தன்வயப்படுத்த,—அருள் - அருண்மயமான,—மேலாய்விளங்கு - எப்பொருட்கும் மேற்பட்டு விளங்கும்,—அலங்கல் மெய்யினான் - திருமேனியில் மாலையாகவுடையவன்,—

தோலாத - பொருளாய்க் காணப்படாத,—வானம் - ஆகாயமும்,—புவனம் - இருநூற்றறுபத்து நான்கு புவனங்களும்,—மலை-அட்டகுல பர்வதங்களும்,—கடல் - ஏழுசமுத்திரங்களும்,—பாதாளம் - சத்தபாதாளங்களும்,—ஊன் - உடம்புண்டாவதற்குக் காரணமாகிய,—ஐந்துபூதத்து - பஞ்சபூதங்களும்,—உயிர் - எண்ணிறந்த ஆன்மகோடிகளிடத்தும்,—உணர்ச்சி - அவ்வப்பதார்த்தங்களின் அறிவுக்குத்தக்க,—

ஞானமாய் - ஞானமாகி,—எல்லாமாய் - கலப்பினாலுடலுயிர்போல அவ்வுயிர்களேயாய்,—அல்லவாய் - பொருட்டன்மையாற் கண்ணருக்கன் போல அவற்றின்வேறுமாய்,—எண்ணுவார் எண்ணத்துள் - காண்பவர் மனத்தில்,—நில்லாமல் - பேதமாயிராமல்,—நிற்கும்-அபேதமாய்க்கலந்து நிற்கும்,—நீள்வாசியான்-வேகமாய்ச்செல்லுங்குதிரையினையுடையவன்,—

சொல்லாரும்-நூல்களிற்சொல்லப்பட்ட,—பாதாளமூடுருவி-அதோமுகவுலகங்களளவுஞ்சென்று,—பாரேழும் - மத்தியகதமான ஏழுலகங்களுக்கும்,—விண்ணேழும்-ஊர்த்துவமுகமான மேலேழுலகங்களுக்கும்,—ஆதாரமாகி - நிலையாக நிற்பதற்காதாரமாகி,—அகண்டநிறைந்து - சுத்தமாயாலோகமெங்கணு நிரம்பி,—

ஓத - சுட்டிச்சொல்லுதற்கு,—அரிதாய் - காட்சியிற்படாமல்,—எளிதாய் - ஞானவான்களருளாலறிதற்கெளிதாய்,—அருமறை-அருமையானவேதங்களும்,—ஆறங்கத்து-சிட்சை கற்பம் வியாகரணம் நிருத்தம் சோதிடம் சந்தமென்னும் ஆறங்கங்களின்,—உருவாய் - ரூபமாய்,—உயிராய்-கலப்பினல் ஆன்மகோடிகளாய்,—உணர்வாய் - அவ்வுயிர்களில் விளங்கும் அறிவுமாத்திரையாய்,—

பெரிதாய - சர்வவியாபியாகிய,—வெய்ய - கொடுமையான,—துயர் - துன்பினைச்செய்யும்,—பாசம் - கட்டை,—அற வீசியே,—முற்றுமெறிந்து,—வெம்பிறவி - கொடியபிறப்பென்னும்,—துய்ய - நீராற்சுத்தமாகிய,—கடலை - பிறவிக்கடலை,—துகளெழுப்பி - நீர்வற்றித் தூளெழும்படிச்செய்து,—

ஐயமுறும் - கிலேசத்தினைச்செய்கின்ற,—காமம்-விருப்பம்,—குரோதம்-சினம்,—மதம் - செருக்கு,—மாச்சரியம்-பொறாமையாதியவற்றை,—காய்ந்து - கோபித்து,—அடர்ந்து - எதிர்த்து,—சாமத்தொழிலின் - பிறப்பினுக்குக் காரணமான புவனத்தொழிலை,—மிதித்து - காற்கடைக்கொண்டொதுக்கி,—

நாமத்தால் - பலபெயர்களால்,—கத்தும்-பிதற்றும்,—சமையக்கணக்கின் - அகப்புறச்சமயம் புறச்சமயம் புறப்புறச்சமயம் ஆகிய முக்கூற்றுச் சமயங்களின்,—விறல் - வலியவாதத்தின்,—கட்டழித்து - பொய்க்கட்டுப்பாட்டை யொழித்து,—தத்தம் - தங்கள் தங்கள்,—பயம் - அச்சம்,—கொலைகளாம் - கோறலாதிகளை,—கழித்தே - நீக்கியே,—

தத்திவரும் - ஆன்மாக்களின்மீது சூழும்,—பாசக்குழாத்தை - பிரபஞ்சவாசனைகளை,—படவடித்து - தலையெடாதொதுக்கி,—பாவையர்தம்-மாதர்களின்,—ஆசைக்கருத்தை - அவாவாகியவெண்ணத்தை,—அறவீசி-முற்றுநீக்கி,—

நேசத்தாலான - அன்பாலாகிய,—வேகங்கொண்டு - விரைவினைவாய்ந்து,—அருள் - கிருபையாம்,—மும்மதத்தினல் - ஆரணி சநநி ரோதயித்திரி என்னு மூன்று சத்திகளாலாய மதங்களால்,—ஊனையார் - உடலைக்கலந்த,—தத்துவங்களுள் - தத்துவக்கூட்டங்களுள்,—புகுந்து - பிரவேசித்து,—

தேனை - ஆனந்தத்தேனை,—பருகி - குடித்து,—களித்து - சல்லாபமடைந்து,—உயர்ந்த - வீறிட்ட,—பன்மறை நாற்கோட்டால் - பலவேதங்களை நான்கு கொம்புகளாக,—மருவி - பொருந்தி,—திகழ் - விளங்குகின்ற,—ஞானவானையான் - பரஞானவானையினையுடையவன்,—

இருமுச்சமையம் - அகச்சமையங்களாறினுக்கும்,—கடந்து-அப்பாற்பட்டு,—தனக்கொப்பிலாத - சமதியாகப்பொருந்துதலில்லாத,—சுமை - பிரபஞ்சபாரமாகிய,—துன்பம் - துயரை,—நீக்கும் - ஒழிக்கும்,—துவசன் - கொடியினையுடையவன்,—

கமையொன்றி - பொறுமைவாய்ந்து,—தம்மைமறந்து - ஆன்மாவினுக் கன்னியமானவற்றை மறந்து,—தழலொளி - அக்கினியை,—உள்ளேயிருத்தி - மூலாதாரத்திலெழுப்பி,—இம்மை மறுமை - இகபரங்களின்,—இரண்டகற்றி - இருவகைப்பட்ட வாசனைகளை நீக்கி,—

செம்மையே - கிரமமாகவே,—வாயுவை - இடைபிங்கலைகளை,—ஓடாவகை - வெளியில் செல்லாதவிதம்,—நிறுத்தி - தம்பிக்கச்செய்து,—வானத்து - இவ்வாயுக்களுக்குக் காரணமாய் ஆகாயத்துலவும்,—வாயுவையும் - பூதவாயுவினையும்,—ஆங்கே - உள்ளே வாங்காதபடி,—உற - பொருந்த,—அமைத்து - நிறுத்தி,—

தேயுவால் - சுழுமுனை நாடியினுண்டாய வாயுவினால்,—என்றும் - (மூலாதாரத்திற் சொலிக்கின்ற அக்கினியையெழுப்பி இலாடத்தானத்துள்ள சந்திரமண்டலத்துத்தாக்கி அதினின்றுஞ்சொட்டுமமிர்தத்தையுண்டு) எக்காலத்தும்,—ஒருதகைமையாய் - (நரைதிரைமூப்பு மரணமுதலியவின்றி வச்சிரகாயமான) ஓரேதன்மையாக விளங்கி,—இருக்கும் - எழுந்தருளியிருக்கும்,—இன்பருளே - அன்பான திருவருளினையே,—நின்று - நிலைபெற்று,—முழங்கும் - சத்திக்கும்,—நெடுமுரசோன் - பேரொளியான வாத்தியமாக வுடையவன்,—

அன்றியும் - அல்லாமலும்,—அயனும் - பிரமாவும்,—மாலும் - விண்டுவும்,—வகுத்தளித்த - முறையேசிருட்டித்தும் திதித்தும் வருகின்ற,—வையமெலாம் - பிரகிருதிக்குக் கீழ்ப்பட்ட உலகமெல்லாம்,—சாலும் - மிகுந்து,—இதற்கப்பாலும் - இப்பிரகிருதிக்கு அப்பாற்பட்ட அசுத்தமாயா புவனங்களும்,—எப்பாலும் - மேலுமுண்டாய வுலகங்களும்,—

மேலையுலகும் - சுத்தமாயா புவனங்களும்,—உலகால் - இத்தகைய உலகங்களிலுள்ள எவ்வகைப்பட்ட ஆன்மாக்களாலும்,—உணர - அறிதற்கு,—ஒண்ணு - எட்டாத,—ஊரும் - ஓர் ஊரினையும்,—இலகி - இவ்வுலகமெல்லாவற்றினும் விளங்கி,—நடக்கும் - தன்னருள்நடக்கப்பெற்ற,—எழில் - அழகுபொருந்திய,—ஆணையான் - செங்கோலுடையவன்,—

அலகிறந்த - எண்ணிறந்த,—ஆன்மகோடிகட்கு,—காட்சியான் - அவரவர்கள்கொண்ட கோட்பாட்டிற்குத் தக்கபடி அருள்புரியும்பலதன்மைகளை யுடையவன்,—காட்சிக்கும் - தற்போதமுன்னிட்டறியுங்காட்சியினுக்கும்,—காணுன் - அறியப்படாதவன்,—கலைஞானம் - வேதாகமமுதலிய அபரஞானங்களால் நிச்சயிக்கப்பட்ட,—ஆட்சியான் - உரிமையினையுடையவன்,—ஆட்சிக்கும் - அவ்வேதாகமங்களால் நிச்சயிக்கப்பட்டவுரிமையினுக்கும்,—ஆயினன் - நுண்மையானவன்,—

சூட்சியான் - நுண்ணியன்,—பாரும்- பூமியும்,—திசையும் - எட்டுத் திக்குகளும்,—படர் - சஞ்சரிக்கின்ற,—ஒளியாலே - சோமசூரியாக்கினி களாலே,—நிறைந்தான் - அவற்றினுக்குப் பிரகாசத்தினைக்கொடுத்து நிறைவினையுற்றான்,—தூரும் - ஆதியும்,—தலையும் - அந்தமும்,—இலா - இல்லாத,—தோன்றலான் - அநாதிநித்தியனானவன்,—

வித்தாகி - (தாவரங்கட்குப் பொருந்துமுயிர்கட்கு முதற்காரணமான) விதையாகி,—வேராகி - (அவ்விதைக்கு நிலையாகிய) மூலமாகி,—அவ் வித்தின் - அவ்விதையின்,—முளையாகி - (சினை அடை தளிர் முதலியனவாய்க் காரியப்படுவதற்கு) அங்குரமாய்,—மேவும் - சங்கமங்களாய்ப் பொருந்திய வுயிர்கட்கு,—தனுச்சத்தாதி - தேகமுதலிய ஆதாரவாதி,—பூதங்கடானுகி - (அத்தனுக்களுக்குக் காரணமான) பிருதிவியாதி பூதங்களாகி,—

சுத்த - (இத்தகைய பிரகிருதிகளை அதிட்டித்துக் காரியங்களையாக்கினானாயினும்) அபரவிந்துவாய்,—வெறுவெளியாய் - அபரநாதமாய்,—பாழாய் - பரவிந்துவாய்,—வெறும்பாழுக்கு - பரநாதத்தினுக்கு,—அப்பால் - மேற்பட்டு,—உறு - பொருந்திய,—பொருளாய் - திரிபுடியற்ற முதல்வனாய்,—நின்ற - தானேதானாய் நின்ற,—ஒருவன் - ஒப்பற்றவன்,—

பொறியிலியென் - (மெய்யாதிபொறிகள் உடைத்தானவனாயினும் அவற்றைத் திருவருண் மாட்டுச் செலுத்தர்மையால் அப்பொறிகள் இன்மையனைப்போன்றவெனது,—வெம்பும் - துயரவழலினால்வாட்டும், —பிறவியலை - பிறவிக்கடலில்,—வீழாமல் - அழுந்தாமல்,—வீடளித்த - மோட்சத்தையருளிய,—சம்பந்தமாமுனி - சம்பந்தமாமுனியென்ற அருமைத்திருநாமத்தைப்புனைந்த,—என் தம்பிரான் - என்சுவாமி,—

அம்புவியோர் - இவ்வுலகில் வாழும்பெரியோர்கள்,—போற்றும்-ஏத்தும்,—திரு - அழகிய,—அடி - பாதத்தை,—என் - எளியேனது,—புன் - அற்பமாகிய,—தலைமீதே - சிரசின்மீதில்,—பொறித்தோன் - விளங்கத் தீட்சித்தவன்,—ஏற்றின்-(புண்ணியரூபமாகிய) நந்தியம்பெருமானது,—புறத்து - முதுகின்மீது,—அமைந்த - எழுந்தருளிய,—எம்கோமான் - நம்கடவுள்,—

சாற்றுவார் - பலசமயத்தவர்கள்,—சாற்றும் - எடுத்துச்சொல்லும், —பொருளான் - (அவரவர்கொண்ட கருத்துக்கிசைந்த) பொருளாயிருப்பவன்,—தனிமுதல்வன் - சமானரகிதனாயிருப்பவன்,—தானல்லான் - சுட்டிறந்தவனாயுள்ளவன்,—வேற்றின்பம் - பிளவுபட்டசுகத்தினை,—இல்லா - வாய்க்கப்பெறாது,—விளங்கு - பிரகாசிக்கின்ற,—ஒளியான் சுக சொரூபமாய்ப் பிரகாசிக்கப்பட்டவன்,—

போற்றும் - எல்லாராலேயும் தோத்திரிக்கப்பட்ட,—குருவேடமாகி (இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமுமமைந்தசகலான்மாக்களை இரட்சிக்கும்பொருட்டு) ஆசாரியகோலம்புனைந்து,—குணம் - (அத்தகைய திருமேனிகொண்டானாயினும்) தனக்கெனவொருகுணமும்,—

குறி - தனக்கென ஒரு அடையாளமும்,—ஒன்றில்லா - ஏதேனுமில்லாத, —பெருவேடமாய் - பெரியகோலமாய்,—நிறைந்த - வியாபகமான,—பெம்மான் - கடவுள்,—

கருவேடம் - (நால்வகைத்தோற்றத்து மூவகைப்பிறப்பினுக்காதாரமான) பிறவிக்கோலத்திற்கேதுவாய,—கட்டு - கன்மமுதலியவற்றினையும், —உருக்கட்டு - அவற்றால்விளைந்த தனுவாதிகளையும்,—அறுத்தான் - நீக்கினவன்,—கற்றவர் - வேதாகமங்களிற்றேர்ந்தவர்கள்,—வாழ் - தங்கப்பெற்ற,—தில்லையான்-சிதம்பரத்தி லெழுந்தருளியிருப்பவன்,—எட்டுமவர்க்கு - தற்போதத்தா லளவைகொண்டு விசாரிப்பவர்க்கு,—எட்டா - அவரறிவாற்காணாத,—இயல்பினான் - தன்மையினான்,—

மட்டு - தேனானது,—அவிழ் - சிந்தப்பெற்ற,—தார் - கொன்றைமாலையினையுடைய,—வானோன் - (பெண்ணாடகத்தைத் திருப்படைவீடாகக்கொண்ட மறைஞானசம்பந்த முனியாகிய) தேவன்,—பவனிவரக்கண்டு - உலாப்போதலைத் தரிசித்து,—ஏனோரும் - அநேகமான வுண்மையடியார்களும்,—ஏத்துதல்கண்டு - தோத்திரித்தலைப்பார்த்து,—வல்வினையேன் - வலியமலசகிதனாகிய யானும்,—ஏத்தினேன் - தொழுதேன்,—

தான் - அப்பெருமான்,—என்னை - ஏழையை,—பார்த்தான் - திருநோக்கால் தீட்சித்தான்,—பழைய - அநாதிசம்பந்தமான,—வினை - வினையாகிய,—பஞ்சமலம் - ஆணவம் கன்மம் திரோதானம் மாயை மாயேயம் ஆகிய ஐந்துமலங்களின்,—கொத்தை - கூட்டத்தினை,—எல்லாம் - யாவற்றினையும்,—நீத்தான் - சுட்டெரித்தான்,—நினைவு - என்னுடையசீவவறிவை,—வேறாக்கினான் - சிவவறிவிற் சேர்த்திட்டான்,—

ஏத்தரிய - மதித்தற்கரிய,—தொண்ணூற்றறுவர் பயில் - தொண்ணூற்றாறு தத்துவங்களாலாய,—தொக்கின் - உடலின்,—துவக்கு - துன்பமனைத்தும்,—அறுத்தான் - ஒழித்தான்,—கண்ணூறு - தம் திருநேத்திரங்களிற் றதும்பிய,—தேனமிர்தம் - தேனினையும் அமுதத்தினையுமொத்த திருவருளினை,—காட்டினான் - தரிசிப்பித்தான்,—

வெண்ணீறும் - விபூதியும்,—வேடமும் - உருத்திராக்கமணி கல்லாடை முதலாயவேடமும்,—பூசையுமே - சிவபூசையுமே,—மெய்யென்றான் - மோட்சவேதுவினுக்குக் காரணமாகிய சத்தியபதார்த்தங்களென்றான், —மாடையும் - செல்வமும்,—வாழ்க்கையும் - பிரபஞ்சவாழ்வும்,—மனையுமே - பெண்டுமுதலியவுமே,—பொய்யென்றான் - நிலையில்லாத அசத்தியபதார்த்தங்களென்றான்,—

நாடரிய - அறிதற்கரிய,—அஞ்செழுத்தின் - பஞ்சாக்கரத்தின்,—உள்ளீடு - (பதிபசுபாசமமைந்திருக்கும்) உள்ரகசியத்தை,— அறிவித்தான் - தெரிவித்தான்,—அஞ்செழுத்தை - பஞ்சாக்கரத்தை,—நெஞ்சழுத்தி - மனமிருத்தி,—நேயமயலாக்கி-அன்பாலாசையைப்பெருக்கி,—

அஞ்செழுத்தை - பஞ்சாக்கரத்தை,—உச்சரிக்கும் - (தீட்சிதர் சிகாரமுதலாகவும் அதீட்சதர் நகாரமுதலாகவும்) செபிக்கும்,—கேண்மை -

சம்பந்தத்தினை,—உணர்த்தி - அறிவித்து,—அதில் - அந்தமகாமந்திரத்தில்,—உச்சரிப்பு - (நகாரத்தில் திரோதசத்தியும், மகாரத்தில் மலமும், சிகாரத்தில் சிவமும், வகாரத்தில் அருளும், யகாரத்தில் ஆன்மாவுமாகநின்ற) உச்சரிப்பினை,—வைச்சிருக்கும் - நிலைப்பித்திருக்கும்,—அந்தவழி - அந்தச் சோபான மார்க்கத்தை,—காட்டி - வெளிப்படுத்தி,—

அச்சமற - மனச்சஞ்சலநீங்க,—சென்று - அதோமுகமாகநோக்கி,—விளக்கை - அவ்விடத்து அவ்வமையத்துண்டான தீபத்தை,—எழத்தூண்டி - சிகாரவக்கரத்தைக்கொண்டு சொலிப்பித்து,—செழுஞ்சுடரின் - மாட்சிமைதங்கிய சோதிரூபமாகிய அச்சிகாரத்தை,—ஒன்றி - தாதான்மியமாகப் பொருந்தி,—ஒருவிளக்கின் - ஒப்பற்ற தீபம்போன்ற வகாரமாகிய சத்தியினால்,—உள்ளொளியாய் - உள்ளேபிரகாசிப்பதாய்,—

நின்ற - நிலைபெற்ற,—பெருவிளக்கின் - யகாரமான வான்மதீபத்தின்,—பேரொளியின் - பெரியசோதியின்,—உள்ளே - மத்தியிலே,—பிரசம் - ஆனந்தத்தேன்,—மருவும் - பொருந்தும்,—மலர்போல் - தாமரைமலர்போல்,—மதித்து - ஒன்றைப்பாவித்து,—அங்கு - அந்தக்கமலத்தில்,—

உருவில் - மாயையில்,—உருக்கொள்ளா - தோயாத,—அருளை - திருவருளினை,—கொளுத்தி - அத்தாமரையிற் பிரவேசிப்பித்து,—குணம் - பண்பும்,—குறி - அடையாளமும்,—ஒன்றில்லா - ஒன்றுமில்லாத,—இடத்தே - தானத்திலே,—இளைப்பாற்றி-(செனனமரணதாபமாகிய) சோபத்தைநீக்கி,—

விள்ளாத - இனிவாய்திறந்து பேசவழக்கில்லாத,—உள்ளம் - உயிர்முதலாக,—உற்றதெல்லாம் - பொருந்திய உடல்பொருளனைத்தையும்,—வாங்க - தனதாகக்கொண்டு,—வெள்ளமயல் - (அதற்குப்பதிலாக) கருணைப்பிரவாகத்திற் றிளைக்கும் களிப்பினை,—அளித்து - தலையன்பினோடுந்து,—மேவினன் - என்னோடிரண்டறக் கலந்தனன்,—

கள்ளம் - எனக்குண்டாய வஞ்சமாதியினை,—மறப்பித்தான் - தலையெடாதபடி செய்தான்,—மெய்ஞ்ஞானம் - பேரறிவினை,—ஆக்கி - எனக்குண்டாக்கி,—மனமெல்லாம் - மனமாதி கரணங்கள் யாவும்,—இறப்பித்தான் - கெடுத்தான்,—என்பிறவி - (தோன்றியதும் தோன்றுவதுமான) எனது சன்மங்களை - ஈர்த்தான் (அவற்றிற்குக் காரணமாயிருந்த சஞ்சிதவித்தினைப்) பிளந்திட்டான்,—

விறல் - பெருமைபொருந்திய,—சொல்லுக்கு - வைகரி யாதிவாக்குவிகற்பங்கள் பற்றிநிகழும் வேதாதிகட்கு,—எட்டானை - எட்டாதவனாய்,—யார்க்கும் - எத்தகையினருக்கும்,—எழுதா - இன்னதன்மையனென் றெழுதவொண்ணமல்,—இயல்-சுபாவமான,—குணங்கள் - குணங்கள்,—எட்டான் - (முடிவிலாற்றல் தன்வயத்தனாதல் இயற்கையுணர்வு முற்றுமுணர்தல் பேரருளுடைமை வரம்பிலின்பம் தூயவுடம்பு பாசங்களினீக்கம் என) எட்டுடையவனாய்,—ஆற்று-(அபரஞான முழுவதினையும்) செய்யும்,—எழுத்தினன் - பிரணவ சொரூபியானவன்,—

மட்டாரும் - (பரதநூலின்)அளவுபொருந்திய,—பாடலார் - இசைப்பாவினுக்குத் தக்கபடி,—ஆடலார் - தாண்டவத்தைச் செய்பவர்,—பண்பலார் - (இத்தகையராயினும்) தனக்கெனவோரியல்பில்லாதவர்,—நண்பலார் - தனக்கெனவோர் விருப்பமில்லாதவர்,—ஆடலார் - அவிநயர்,—ஆடல்-நடனம்,—அகன்பதியாம்-எங்கும்பரவியவிசாலமான நகரமாகும்,—

கூடலார் - (துவாதசாந்தத்தலமாகிய) திருவாலவாயுடையார்,—காண - ஊனநேத்திரத்தாற் பார்க்க,—கிடையாதவன் - கிட்டாதவன்,—காண்பார்க்கு - அறிவால் விசாரிப்பார்க்கு,—காட்சியான் - புலப்படுபவன்,—பாணர்க்கு - (மேற்சொன்ன திருவாலவா யென்னும்பதியிற்) பாண பத்திரர்க்கு,—இலகு - பிரகாசிக்கின்ற,—பலகையிட்டான் - பலகையொன்று கொடுத்தனுப்பினன்,—

சேணில்-ஆகாயத்தில் (மாலைக்காலத்திற்றோன்றும் செவ்வானத்தைக் காட்டிலும்),—சிறந்த - மிக்க நிறத்தினைவாய்ந்த,—உருவான் - திருமேனியையுடையவன்,—திருமாலுக்கு (உலக முழுவதுமளந்த) நாராயணனுக்கும்,—எட்டான் - கணிக்கக்கூடாதவன்,—நிறைந்த - எல்லாவண்டங்களினும் வியாபகமான,—திருவுருவாய் - அழகிய சொரூபமாய்,—நிற்போன் - எழுந்தருளியிருப்பவன்,—

கறங்குடனே - (எழுவகைப்பட்ட எண்பத்து நான்குநூறாயிர பேதமான யோனிவகைகளினும்) காற்றாடியுடன்,—சூறை - சுழற்காற்று,—சுழல்வண்டு - வட்ட மிட்டுழலும் வண்டு,—சுழல் கொள்ளி - கரத்திற் பிடித்துச் சுற்றும் கொள்ளிக்கட்டை யாதிய,—வட்டமெனும் - வகை போல மாறி மாறிப் பிறக்கும் வேகச்சுற்றினை,—மாறில் - யாதொரு கைம்மாறில்லாமலே,—கருணையினால் - தனக்கு இயற்கையாயுள்ள கிருபையினால்,—மாற்றினன் - நீக்கிச்சலிப்பற நிறுத்தினன்,—

நீறணிந்த - விபூதிபூத்த,—மெய்யன் - திருமேனி வாய்ந்தவன்,—அமலன் - பரிசுத்தமானவன்,—நிமலன் - அநாதியே மலமில்லாதவன்,—அருள் - அருண்மயமாகிய சுத்தாத்துவித,—வீடு - சிவசாயுச்சிய முத்தியினை,—அளிக்கும்-பாலிக்கும்,—ஐயன் - முன்னோன்,—அறிவுக்கு-ஆன்மகோடிகளின் சிற்றறிவினுக்கு,—அறிவாய் - அவற்றைப்பிரோரிக்கும் பேற்றறிவுடையவனாய்,—ஆயினன் - விளங்கினன்,—

பொய்யர்பால் - அஞ்ஞானிகளிடத்து,—பொய்மையாய் - சூனியமாய்,—நின்றான் - மறைந்திருப்பவன்,—புரிந்தவர்தம் - வழிபட்டார்களது,—நெஞ்சத்துள்-மனத்தின்கண்ணே,—மெய்மையாய் - சத்தியமாய்,—நின்று - எழுந்தருளி,—விளங்கினன் - தோன்றினன்,—

கைமழுவான்-(அத்தகையனாயினும்) திருக்கரத்தில் மழுவாயுதத்தையுடையவன்,—அத்தன்பால் - இத்தகைய இறைவனிடத்து,—நீசென்று - நீபோய்,—அடையும் - சேரும்போது,—இடத்தையெல்லாம் - (வழியில் பலவிடையூறுகளை விளைவிக்கும்)இடங்களையெல்லாம்,—சித்தஞ்சேர் - அந்தக்கரணங்களின் பாற்பட்ட,—நெஞ்சமே - மனமே,—செப்பக்கேள் - நான் சொல்லுவதைக் கேட்பாயாக,—

நித்தலுமே - நாடோறுமே,—பூசி-சந்தனகஸ்தூரி களபமணிந்து,—முடித்து - பரிமளபுட்பங்களைச்சூடி,—உடுத்து - பட்டுபீதாம்பரம்தரித்து,—உண்டு-அறுவகை சுவையுடன்கூடிய நால்வகைப்புசிப்பினையும் புசித்து,—பூங்குழலார்தம் - மலரணிந்த கூந்தலையுடையமாதர்களது,—கலவி-புணர்ச்சியாகிய,—ஆசைதனில் - மோகத்தில்,—பட்டு - கட்டுப்பட்டு,—இன்பவார்கலிக்கு - இன்பசமுத்திரத்தில்,—

நேசமுற - ஆசைபொருந்த,—நின்று - நிலையாகவிருந்து,—திளைக்கும் - (பிரத்தியட்சமாக) அனுபவிக்கும்,—இது முத்தி - இதுவே உண்மையான மோட்சமாம்,—அல்லது - இதுவல்லாமல்,—வேறென்று (ஆன்மா பரமான்மா வுண்டென்றும் நரகமோட்சமுண்டென்றும் அனுமானவாகம வாதிகளாற்பேசும்) வேறுவித மாகவொன்றுகூறி,—திளைக்கும் - அனுபவிக்கும்,—அதுமுத்தி - அது உண்மையான மோட்சம்,—அன்று - அல்லவாம்,—என்று - இவ்வகையாகக்கூறி,—

இலகா - வாழ்ந்து,—இருள் - அஞ்ஞானத்தைவாய்ந்த,—அலகைபோல் - பேயைப்போல,—இகலே - குற்றமே,—பேசும்- பிதற்றுகின்ற,—உலகாயதன் - சாருவாகனிடத்தில்,—உறுதே - அவன் வலையிற்படாதே,—

பலகாலும் - எந்தவேளையும்,—தாம் - ஆன்மாவாகிய தங்களையும்,—பிரமம் - பரமான்மாவாகிய பரத்தினையும்,—கண்டவர்போல் - விசாரித்திரண்டற வனுபவிக்கும் சீவன் முத்தர்களைப்போல,—தம்மைக்கண்டு - கருவிகள் நீக்கத்து ஆன்மாவாகிய தன்னைத் தரிசித்து,—ஆங்கதுவே - அங்ஙனம் தரிசித்த நிலையிலேயே திருத்தியடைந்து,—நான்பிரமம் - அகம்பிரமம்,—என்பவர்பால் - என்று சாதிக்கு மாயாவாதிகளிடத்தில்,—நண்ணுதே - அவர்மயக்கில் மயங்காதே,—

ஊன்றனக்கு - தேகத்தினை வளர்க்கும் பொருட்டாக,—கொன்றிடுவதெல்லாம் - மிருகாதிகளைக்கொலை செய்துண்ணுவதெல்லாம்,—கொலை யல்லவென்று - பாவமாகாதென,—குறித்து - தீர்மானித்து,—என்றும் - எக்காலத்தும்,—அறமே - புண்ணியமே,—தெய்வ மென்று- கடவுளெனக்கூறி,—என்றும் வென்றி - இத்தகைய புண்ணியத்தினில் செயமடைந்து,—

பொறையே - (நட்புப்பகை யிரண்டிலும் விருப்பு வெறுப்பின்றி) பொறுமையாகவிருத்தலே,—எனும் - முத்தியெனச்சாதிக்கும்—புத்தன்-பௌத்தமதத்தினனது,—பொல்லாத - தீமையாகிய,—புன்சொல் - அற்பச்சொல்லாம்,—மிறையே - குற்றத்தினையே,—விரும்பி - நாடி,—விழாதே - அத்தடுமாற்றத்தி னுழையாதே,—

நிறைமேவி - (ஒருயிருக்குந் துன்பத்தைச் செய்யப்படாதெனும்) மாட்சிமையினையடைந்து,—வாழ்பவர்போல் - வாழுகின்றவர்களைப்போனடித்து,—மன்னுடலில்-தமக்கு நிலையானதேகத்தில்,—மன்னும்-தங்கும்,—உரோமம் - உரோமங்களை,—பறித்து-பிடுங்கி,—தாழ்வுநினையாது - உயிர்களைவருத்தாது,—துகில்தானகற்றி - ஆடையணியாது (மரவுரிதாங்கி),—

ஆழ்விக்கும் - பிறப்பினி லழுத்தும்,—அஞ்சு - (உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னும்) பஞ்சகந்தங்களை,—அகற்றும் - நீக்குவதே,—அதுமுத்தி - அதுமோட்சமாகும்,—என்றுரைக்கும் - என்று

கூறும்,—வஞ்சமணன் - வஞ்சத்தினைவாய்ந்த சமணனது,—பாழி - அவன் கோயிலை,—மதியாதே - நினையாதே,—

செஞ்சொல்புனை -(மங்கலகரமான)பதங்களானிறையப்பெற்ற,—ஆதிமறை - பழையவேதங்களை,—ஓதி - நன்றுயாராய்ந்து,—அதன்பயன்- அவ்வேதங்களின் உண்மையினில்,—ஒன்றும் - சிறிதேனும்,—அறியா - நிச்சியாத,—வேதியர் - பாஞ்சராத்திராதியர்,—சொல் - அவர்கூறும் நூல்களை,—மெய்யென்று - சத்தியமென்று,—மேவாதே - அவற்றைவாசிக்கச் சாராதே,—

ஆதியின்மேல் - பரமேசுவரன் திருமேனியின்மீது,—உற்ற - பொருந்திய,—திருநீறும் - விபூதியினையும்,—சிவாலயமும் - சிவபெருமானெழுந்தருளியிருக்கு மாலயத்தினையும்,—உள்ளத்து-மனத்தின்கண்ணே,—செற்ற- தியானியாதுவிட்ட,—புலையர்பால் - பஞ்சமர்களிடத்தில்,—செல்லாதே - சேராதே,—

நற்றவஞ்சேர் - அரியதவத்தோடுங்கூடிய,—வேடமுடன் - விபூதிருத்திராட்ச காஷாயம்பூண்டகோலத்துடன்,—பூசை - சிவபூசையும்,—அருள்-திருவருளைப்பொழிகின்ற,—மெய்ஞ்ஞானம் - சிவஞானமும்,—இல்லாத - வாய்க்கப்பெறாத,—மூடருடன் - மடையர்களுடன்,—கூடி - சந்தித்து,—முயங்காதே - தழுவாதே,—

நீடு - எக்காலத்தும்,—அழித்து - (பிரமாமுதல் பிபீலிகைபரியந்தமுள்ள ஆன்மகோடிகளைச் சர்வசங்காரகாலத்தில்) ஒழித்து,—பிறப்பது - (மறுபடியும்அச்சங்கார காரணனாலேயே)உதிப்பதும்,—அறியாது- (இவ்வுண்மையினை)யறிந்துகொள்ளாது,—அரனை - முதல்வனை,—பழித்து - நிந்தித்து,—திரிபவரை - சஞ்சரிக்கின்ற பாவிகளை,—பாராதே - முகாலோபனம் பண்ணாதே,—

விழித்து - (காருண்ணியமான நேத்திரங்களைத்)திறந்து தீட்சித்து,—அருளை - தனது அருட்சத்தியை,—தந்து - என்பால் பதியவைத்து,—எம்மை - அடியேமை,—ஆண்டருளும் - திருவடியின்கீழ் இரண்டறக்கலக்கச் செய்யும்,—சம்பந்த மாமுனிவன் - (முனிச்சிரேஷ்டராய் விளங்கும்)மறைஞானசம்பந்தமூர்த்தி,—அந்தம் - வேதாதிகளின் முடிவினில்,—கடந்து-அடங்காது,—அப்பாலாய் - வேறாய்,—நின்றான் - எழுந்தருளுபவன்,—

எந்தை - எமது பரம்பிதாவாகிய,—பிரான் - தலைவன்,—வீற்றிருக்கும் - எழுந்தருளியிருக்கும்,—ஓலக்கம்-திருவோலக்கத்தினைத்தரிசித்து,—எய்தி - (பையப்பைய) சென்று,—அடி - அவரதுதிருவடியில்,—வீழ்ந்து - அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்க ஏகாங்கமாகவணங்கி,—இறைஞ்சி - தோத்திரித்து,—போற்றிசயசய போற்றியென - போற்றி போற்றி சயசய போற்றியெனவாழ்த்தி,—

ஆர்த்த - (தாருகாவனத்தர் அபிசாரவேள்வியினின்றும் வந்து) கூச்சலிட்ட,—கரி - யானையை,—அன்று - (கங்காளர்வேடங்கொண்ட) அக்காலத்தில்,—உரித்தாய்-அதன்தோலைவாங்கிப்போர்வையாகக்கொண்டாய்,—நின் - தேவரீரது,—பவனி - (இரண்டாயிரந் தந்தங்களையுடைய ஐராவணமென்னும் யானையின்மீதுவரும்)திருவுலாவினை,—ஆதரித்தார்-ஆசையுடன் தரிசித்தவர்கள்,—எல்லோரும்-சிவனடியார்கள் யாவரும்,—வென்றி-(ஆன்மாக்களைமயக்குவதில்)செயத்தினைவாய்ந்த,—மதன்-மன்மதனது,—அம்பு-

(புட்பங்களாலாய)பஞ்சபாணங்கள்,—பட - தங்கள்மீதுபட,—வீழ்வரோ-அம்மன்மதன் மாய்கையிலகப்படுவரோ,—

நின்றிடத்து - ஓரோதானத்தில்,—நில்லாது - என்றும் நிலைபெற்றிராத,—செல்வம் - பிரபஞ்சவாழ்வினை,—நிலையென்று - சத்தியமெனவெண்ணி,—உனை - தேவரீரை,—நீங்கி - (திருவருட்கன்னியமாக)பிரிந்து,—பொல்லா - தீமையாகிய,—நரகம் - நரகத்தினில்,—புகுவரோ - முழுகுவரோ,—

பல்லாரும் - (முக்கூற்றுப் புறச்சமயத்தவர்கள்) யாவரும்,—கத்தும்-பிதற்றும்,—சமையக்கணக்கில் - சமயக்கூட்டத்துள்,—படுவரோ-அகப்படுவரோ,—சித்தம் - மனத்தில்,—பலகால் - பலதடவை,—திகைப்பரோ - சந்தேகிப்பரோ,—

முத்தம் - முத்துகளை,—பொருத - ஒத்த,—நகை - பற்களையுடைய,—மடவார் - மாதர்களது,—புன் - அற்பமாகிய,—கலவியின்பம் - சையோகவின்பத்தினை,—மருவி - பொருந்தி,— மயங்கி - மோகத்தில்முழுகி,—வருவரோ - வாழ்ந்துவருவரோ,—

இருபொழுதும் - இரவும்பகலும்,—நாளிருபத்தேழும் - இருபத்தேழுநட்சத்திரங்களும்,—நவக்கிரகமும் - நவக்கிரகங்களும்,—நலியும் - இடையூற்றினைச் செய்யும்,—கோளிதுவென்று - கோள்களாமென்று,—எண்ணி - நினைத்து,—குறிப்பரோ - மனத்தில் மதிப்பரோ,—

வேளை - மன்மதனை,—எரித்த - சாம்பராக்கிய,—விழியாய் - திருநேத்திரத்தை யுடையவனே,—நின் - தேவரீரது,—இன்பக்கடற்கே - சிவானந்தக் கடலினிடத்திலேயே,—தரித்து - தங்கி,—மதி - அறிவானது,—மறந்த - திருவருளிலிளைத்த,—தையல் - நாயகியது,—

வருத்தமெலாம் - சோகமனைத்தும்,—தீராய் - தீர்த்தருளுவாய்,—எனவுரைத்து - எனத்திருச்செவியிலோதி,—செங்கமலம் - சிவந்ததாமரையினையொத்த,—பூந்திருந்தாள் - அழகியதிருவடிகளை,—தாராயென - தந்தருளுவாயென,—பலகால் - அடிக்கடி,—தாழ்ந்து - வணங்கி,—இறைஞ்சி-தோத்திரித்து (திருவுளமிசையாரேல்),—

ஏராரும் - அழகுபொருந்திய,—பூங்கொன்றை - (சிவமணங்கமழும் பிரணவாகாரமான) கொன்றைப் பூ மாலையினை,—வாங்க - பெற்றுக் கொள்ள,—புகழ்ந்துபுரி-வாழ்த்துதலைச்செய்து,—நெஞ்சமே - மனமே,—ஈங்கு - இவ்விடத்து,—ஒன்ற - என்னிடத்துப்பொருந்த,—இனி - இனிமேல்,—வாராய் - வரக்கடவாய் என்க. (க)

நேரிசைவெண்பா.

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் றூர்வாங்கி—யம்புந்தும்
வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாமகல
நெஞ்சமே வாராய் நினைந்து.

## நெஞ்சுவிடுதூது முற்றியது.

உமாபதிதேவர் திருவடிவாழ்க

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி - உமாபதிதேவநாயனார்

அருளிச்செய்த

# உண்மைநெறிவிளக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மண்முதற் சிவம தீறாய் வடிவுகாண் பதுவே ரூப
மண்முதற் சிவம தீறாய் மலஞ்சட மென்றல் காட்சி
மண்முதற் சிவம தீறாய் வகையதிற் றானி லாது
கண்ணுத லருளா னீங்கல் சுத்தியாய்க் கருத லாமே.

(இதன்பொருள்.) மண்முதற் சிவமதீறாய் - நிலமுதல் நாதமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களையும்,—வடிவுகாண்பதுவே ரூபம் - தனுவும் கரணமும் புவனமும் போகமும் செயலும் பிரேரகமுமாய் நின்ற பெருவடிவைத் தனக்கு வேறாய்க்காண்பதுவே தத்துவரூபமாம்,—மண்முதற் சிவமதீறாய் மலஞ்சடமென்றல் காட்சி-பிருதிவிமுதல் நாதமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் சுத்தவசுத்தமாயா மலகாரியமென்றும் சடப்பொருளென்றும்தன்னாலறியப்பட்டதென்றும் தன்னறிவிலேவிளங்கக்காண்பதுவேதத்துவதரிசனமாம்,—மண்முதற்சிவமதீறாய் வகையதிற்றானிலாது-பிருதிவிமுதல்நாதமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களினது விகற்பமாகியசுட்டறிவுகளிற்றானில்லாமல்,-கண்ணுதலருளால் காண்டல்சுத்தியாய்க்கருதுமன்றே-தத்துவங்கள் தன்னைத்தாக்காமல் கானலை நீரென்றுகண்டானொருவன்விசாரித்தறிந்தவிடத்து அதனைவிரும்பாததுபோன்றும் சொப்பனத்தில் யானையேறி மாலைசூடக்கண்டானொருவன் விழித்தவிடத் ததனைப்பொய்யாய்க் கண்டது போன்றும் தன்னறிவிலே கண்டுநீங்கித் தானசைவின்றி அன்னியமறவெங்குநிறைவாய் நித்தியமாயறிவாயுள்ளமுறைமையை அறிந்து நிற்பதுவே தத்துவசுத்தியாமென்று வேதாகமங்கள் கூறும் என்க. (க)

பாயிரு ணீங்கி ஞானந் தனைக்காண்ட லான்ம ரூப
நீயுநின் செயலொன் றின்றி நிற்றலே தரிச னந்தான்
போயிவன் றன்மை கெட்டுப் பொருளிற்போ யங்குத் தோன்றா
தாயிடி லான்ம சுத்தி யருணூலின் விதித்த வாறே.

(இ-ள்.) பாயிருணீங்கி ஞானந்தனைக் காண்டல் ஆன்மரூபம் - ஆசாரியனது அருளினாலே தன்னையும் தன்னிடத்திலே பந்தமாயிருக்கிற தத்துவ விவகாரங்களையும் எவ்விடத்திலுந் தோன்றாமல் சகசமாய் மறைத்து நின்ற ஆணவமலத்தையும் நீங்கித் தானறியுமுறைமையும் அவனது ஞானமறிவுக்கறிவாய்நின்றுபகரிக்குமுறைமையும் தன்னறிவிலே விளங்கக்காண்பதுவே ஆன்மரூபமாம்,—நீயுநின்செயலொன்றின்றி நிற்றலே தரிசனந் தான்-ஆன்மாவின்செய்தி எவ்விடத்துந் தோன்றாமல் தத்துவதாத்துவிகங்களை என்னதென்றும் பசுஞானத்தை யானென்றும் நின்ற அசத்தியபோதநீங்கிப் பழைய சிற்றறிவாகிய சுட்டுப்போதமுங் கழன்று நிற்பதுவே

ஆன்மதரிசனமாம்,— போயிவன் தன்மைகெட்டு-தனக்கெனச் செய்தியில்லாத ஆன்மா தன்சுட்டறிவெவ்விடத்திலுந் தோன்றாமற்கெட்டு,—பொருளிற்போய் - தன்னிடத்திலே விளங்கப்பட்ட அநுக்கிரகஞானத்திலே தற்பூரணமெல்லாமடங்கித் தன்செய்தியெல்லம் அநுக்கிரகத்தின் செய்தியாய்,—அங்குத்தோன்றா தாயிடில் - தன்னை அந்தஞானமடக்கின முறைமையும் தானந்தஞானத்திலே அடங்கினமுறைமையும் எவ்விடத்துந் தோன்றாமற் பெத்தத்திலுல்தேகமேதானும் தானேதேகமாகியும்நின்றமுறைமை போன்று சிவமேதானாய் நிற்கவந்ததாயின்,—ஆன்மசுத்தி அருணூலின் விதித்தவாறே - ஆன்மசுத்தியாமென்று வேதாகமங்களின் வழியிலேயடைந்த பெரியோர்கள் சொல்லு முறைமையாம் என்க. (உ)

எவ்வடி வுகளுந் தானா யெழிற்பரை வடிவ தாகிக்
கவ்விய மலத்தான் மாவைக் கருதியே யொடுக்கி யாக்கிப்
பவ்வம்விண் டகலப் பண்ணிப் பாரிப்பா னொருவ னென்று
செவ்வையே யுயிரிற் காண்டல் சிவரூப மாகு மன்றே.

(இ-ள்.) எவ்வடிவுகளுந்தானாய் - சடசித்துக்களாகிய தாபரசங்கமங்களுளெல்லாம் தான்வேறறநின்று,—எழிற்பரை வடிவதாகி - பெருமை பொருந்திய காருண்ணியசத்தியே தனக்குத் திருமேனியாகி,—மலத்தான் மாவைக் கருதியே - ஆணவமலம் சகசமாயிருக்கப்பட்ட ஆன்மாக்கள்பாக பேதங்களைத் திருவுள்ளத்தடைத்து,—கவ்வியே - தனதிச்சாஞானக்கிரியையின் செய்தியாகிய மாயாதத்துவங்களினால்,—ஆக்கியொடுக்கி-ஆக்கியுநிறுத்தியுந்தொலைத்தும்,—பவ்வம்விண்டகலப்பண்ணி - மலபாகவொழிவில் இத்தத்துவங்கள் வேறும்படி சத்திநிபாதத்தை விளைவித்து,—பாரிப்பானொருவன் - அச்சத்திநிபாதத்தின் வழியிற் புறம்பே கட்புலனுக்குத் தோன்ற மானுடச்சட்டைசாத்தி எழுந்தருளிவந்து தான்வேறற நின்ற முறைமையைத் தருபவன் ஆன்மாக்களுக்கெல்லாம் அறிவுக்கறிவா யிருக்கிற சிவனேயென்று,—செவ்வையே யுயிரிற்காண்டல் - பிரதிஞ்ஞை ஏது திட்டாந்தங்களினால் மயக்க விகற்பமறத் தன்னறிவிலேவிளங்கக்கண்டுநிற்பது,—சிவரூபமாகுமன்றே - சிவனது ரூபமாமென்று வேதாகமங்கள் கூறும் என்க. (ந)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பரையுயிரில் யானெனதென் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமா
முரையிறந்த சுகமதுவே முடியாகு மென்றிவ்
வுண்மையினை மிகத்தெளிந்து பொருள்வேறென் றின்றித்
தரைமுதலிற் போகாது நிலையினினில் லாது
தற்பரையி னின்றழுந்தா தற்புதமே யாகித்
தெரிவரிய பரமாநந் தத்திற் சேர்தல்
சிவனுண்மைத் தரிசனமாய்ச் செப்பு நூலே.

(இ-ள்.) பரையுயிரில் யானெனதென்றற நின்றதடியாம் - ஆன்மா எவ்விடத்திலுந் தோன்றாமல் என்னதென்றும் யானென்றும் நின்ற அசத்தியபோதநீங்க ஆசாரியமூர்த்தியின் அநுக்கிரகஞானம் பிரகாசித்துநின்றவவதரஞ் சிவனதுபாதமாம்,—பார்ப்பிட மெங்குஞ் சிவமாய்த் தோன்றலது முகமாம் - தன்னையுணர்த்தும் பகுதியாகத் தாக்குவதான விடயபோகங்களை அவனவளதுவாய்நோக்குமிடமெல்லாம்அவனநுக்கிரகத்தாலேகண்டநுபவிப்பது அவனது திருமுகமாம்,—உரையிறந்த சுகமதுவே

முடியாகும் - அவ்வநுக்கிரகத்திலே தற்செயல்தோன்றமல் பரவசப்படு வதே அவனது திருமுடியாமென்றறிந்து,—இவ்வுண்மையினை மிகத்தெளிந்து - இவ்வுண்மையைச் சந்தேகவிகற்பமற உள்ளபடி விசாரித்தறிந்து,— பொருள் வேறொன்றின்றி - இதுவன்றி சத்தியமாயுள்ள பொருள் வேறொன்றில்லையெனத் தெளிந்து,—தனைமுதலிற்போகாது - எனதியானென்னும் விகற்பமாகிய நிலமுதல் நாதமீறாகக்கூறப்பட்ட சகலாவத்தையிலும் பொருந்தாமல்,—நிலையினினில்லாது - இக்கருவிகள் நீங்கில் தனக்குள்ள சகசநிலையாகிய கேவலாவத்தையிலும் பொருந்தாமல்,—தற்பரையினின்றழுந்தாது - இக்கேவலசகலமிரண்டு நீங்கினவிடத்து விளங்கும் போதபூரணமாகிய அகம்பிரமஞானத்திலும் பொருந்தாமல்,—அற்புதமேயாகி-தேசிகமூர்த்தத்தின் அநுக்கிரகஞானத்திலே தற்பூரணமெல்லாமடங்கித் தன்செய்தியெல்லாம் அவனநுக்கிரக ஞானசத்தியினது செய்தியாய்,—தெரிவரிய பரமாநந்தத்திற் சேர்தல் - அறிதற்கரியமேலான பூரணவின்பந் தோன்றமல் ஏகதேசவியாபாரமாகிய தனுகரணுதியின்பமே தோன்ற அவ்வின்பங்களையே மெய்யென்றநுபவித்து நின்றமுறைமைபோலத் தனுகரணுதியின்ப மெவ்விடத்திலுந் தோன்றமல் பூரணவின்பத் தொடர்ச்சியாகிய ஆசாரியரநுக்கிரக ஞானத்தை எவ்விடத்திலுங் கண்டநுபவிப்பது,—சிவனுண்மைத் தரிசனமாய்ச் செப்புநூலே - சிவனையுள்ளபடி சத்தியமாகப்பெற்ற தரிசனமென்று கூறுஞ் சிவாகமங்கள் என்க.(ச)

எப்பொருள்வந் துற்றிடினு மப்பொருளைப் பார்த்தங்
கெய்துமுயிர் தனைக்கண்டிங் கவ்வுயிர்க்கு மேலா
மொப்பிலருள் கண்டுசிவத் துண்மை கண்டிங்
குற்றதெல்லா மதனலே பற்றி நோக்கித்
தப்பினைசெய் வதுமதுவே நினைப்புமது தானே
தருமுணர்வு புசிப்புமது தானே யாகி
யெப்பொருளு மசைவில்லை யெனவந்தப் பொருளோ
டிசைவதுவே சிவபோக மெனுமிறைவன் மொழியே.

(இ-ள்.) எப்பொருள்வந் துற்றிடினும் - சடசித்துக்களிரண்டினு நின்று விளங்குவதாகிய இதாகிதங்கட்கேற்ற சத்தாதி விஷயங்களில் எவ்விஷயம் வந்து தாக்கினும்,—அப்பொருளைப்பார்த்து - அவ்விஷயமெதிரிட்டுப் பார்த்து இதுமாயாகாரியமாகிய தனுகரண புவனபோகங்களின் விகற்பமென்றும் இவ்விஷயங்களினின்றும் விளங்குவதாகிய இதாகிதங்கள் கன்மத்தின் விகற்பமென்றும் கண்டு,—அங்கெய்து முயிர்தனைக் கண்டு - அவ்விஷயங்களை அதுவதுவாகப் புசிக்குமான்மாவை நித்தியனய்ப் பூரணனயறிவாயிருக்கினுந் தானுயொன்றையு மறிதற்கறிவில்லையென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து,—அவ்வுயிர்க்குமேலா மொப்பிலருள் கண்டு - அவ்வான்மாவின் அறிவுக்கறிவாய்நின்று இவ்விஷயபோகங்களை இடைவிடாமற் பாகமறிந்துணர்த்தி நிற்குந்திருவருளையுமுள்ளபடி தரிசித்து,—சிவனுண்மை கண்டு - அவ்வருளின் நிறைவெல்லாந் தன்வடிவாகவுடைய பூரணவின்பமெனக் கண்டித்துக் குருமூர்த்தமாயெழுந்தருளி மானுடச்சட்டைதரித்துவந்துபதேசித்த அநுக்கிரகத்தை உள்ளபடி தரிசித்து,—இங்குற்றதெல்லா மதனலே பற்றி நோக்கி - இவ்விடத்தில் வந்துபொருந்தப்பட்ட சத்தாதி விஷயங்களையெல்லாம் அவ்வநுக்கிரகத்தினல் பொருந்திப்பார்த்து,—தப்பினை செய்வது மதுவே நினைப்புமதுதானே-இவ்விஷய

போகங்களின் வழித்தாய்த் தீவினையைச் செய்விப்பதும் அநுக்கிரகமாகிய திருவருள்தானே நல்வினையைச் செய்விப்பதும் அத்திருவருள்தானே,—தருமுணர்வு புசிப்புமதுதானேயாகி யெப்பொருளு மசைவில்லையென வந்தப்பொருளோ டிசைவதுவே - இந்நன்மைதீமைகளையறியும்படி புசிப்பாகிவந்தவிஷயபேதங்களும் அவ்வநுக்கிரகமாகிய ஆன்மவர்க்கத்துக்கும் சடமாகிய பாசஜாலங்களுக்கு மொன்றையொன்றறியவும்ஒன்றையொன்று பொருந்தவும் ஒருசற்றுஞ் செயலில்லையென்னும் முறைமையை உள்ளபடி தரிசித்து அப்பொருளோடிசைவதுவே,—சிவபோகமெனு மிறைவன் மொழியே - அவனநுக்கிரக பூரணமெல்லாந்தற்பூரணமாகவும் இப்படி யிரண்டற நிற்பதே சிவனுடனே இரண்டறக்கூடிய முறைமையென்றுஞ் சிவாகமங்கள் கூறும் என்க. (௫)

பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றி வரினுஞ்
சாதிநெறி தப்பிடினுந் தவறுகள்வந் திடினுந்
தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கி
னாதனவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து
நானுபோ கங்களையுந் தானுகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானுக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி யிதுவே.

(இ-ள்.) பாதகங்கள் செய்திடினுங்கொலைகளவு கள்ளுப்பயின்றிடினு நெறியல்லா நெறிபயிற்றி வரினுஞ் சாதிநெறி தப்பிடினுந் தவறுகள் வந்திடினும் - இப்படிப்பட்ட செய்தியல்லாத தொழில்களைச் செய்யினும்,—தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கில் - தன்செயலெவ்விடத்திலுந்தோன்றாமல் அநுக்கிரகமாகிய அருணிறைவிலே வேறறநிற்கில்,- நாதனவ னுடலுயிராய்-அந்தத்திருவருளுக்கு முதன்மையாகிய நேயமவன தறிவு பூரணமெல்லாந் தன்வடிவாகக்கொண்டு தானந்தவறிவு பூரணத்துக் கெல்லா முயிராய்,—உண்டுறங்கி நடந்து - இவனறிவு தொழிலாகிய விந்திரிய போக்கங்களாய்வரும் புசிப்புந் தொழிலுமாகவே புசித்துத் தொழிற்படும்,—நானு போகங்களையுந் தானுகச் செய்து - நானுவிதமாகிய போகங்களையெல்லாம் இவனுக்குத்தனது பூரணவின்பமாகிய நேயவடிவாகவே காட்டி,—பேதமற நின்றிவனைத் தானுக்கிவிடுவன் - இவனறிவு பூரணமெல்லாந் தன்னின்பப் பூரணமாகவும் தன்னின்பப்பூரணமெல்லாம் இவனறிவு பூரணமாகவும் வேறறத்தோன்றி நின்று தன்னின்ப நிறைவெல்லாம் இவனநுபோக பூரணத்தை அமிழ்த்திநிற்பது,—பெருகுசிவ போகமெனப் பேசுநெறியிதுவே - சடசித்துருவமாகிய பிரபஞ்சமெவ்விடத்துந் தோன்றாமல் பெருகப்பட்ட சிவாநந்தமேலீடாகிய சிவபோகத்தினதுமுறைமை இத்தன்மைத் தென்று சொல்லும் வேதாகமங்கள் என்க. (௬)

உண்மைநெறிவிளக்கமுற்றியது.

உமாபதிதேவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

கொற்றவன்குடி - உமாபதிதேவநாயனார்

அருளிச்செய்த

# சங்கற்பநிராகரணம்.

காப்பு.

நேரிசையாசிரியப்பா.

திருந்திய வருந்தவம் பொருந்துபன் முனிவர்
கன்மையாக் காத லமையாது பழிச்சும்
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்
தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை
வாட்டரு மும்மை நாட்ட நால்வாய்ப்
பாச மங்குசந் தேசுறு மெயிற்றொண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்
தங்கதங் கடகம் பொங்கிழை யார
நிறைமணிச் சுடிகைக் கறையணற் கட்செவி
கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாட்
களிறுத னிருகழல் கருதா
வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே.

(இதன்பொருள்) திருந்திய அருந்தவம் பொருந்து பல்முனிவர் - திருத்தமாகிய அரியதவத்தினை வாய்ந்த பலமுனிவர்கள்,—

கன்மையாக்காதல் அமையாது பழிச்சும் - (எஞ்ஞான்றும்) நிரம்பாத ஆசையோடும் நீங்காது தோத்திரஞ்செய்யும்,—

நிகரில் செக்கர் புகர்முகத்து எழுந்த புனிற்று வெண்பிறை தனிப் பெருங் கோட்டு - ஒப்பற்ற செவ்வானம்போன்ற புள்ளியையுடைய திருமுகத்திலே உதயமாகிய குழவிவெண் திங்களைப்போன்ற ஒற்றைப்பெருங் கோட்டினையும்,—

தழைசெவி - தழைந்த செவியிரண்டினையும்,—

மழைமதம்-மழையைப்போலுஞ்சொரியாநின்ற மும்மதத்தினையும்,—

புழைநெடும் தடக்கை - துவாரமிரண்டோடும் நீண்ட பெரிய துதிக் கையினையும்,—

வாள்தரும் மும்மை நாட்டம் - (சோமன் சூரியன் அக்கினி என்னும்) ஒளியினைக்கொண்ட மூன்றுவிழியினையும்,—

நால்வாய் - தொங்காநின்றவாயினையும்,—

பாசம் அங்குசம் தேசுறுமெயிறு ஒண்கனி இவைதாங்கும் புனித நாற்கரத்து-பாசக்கயிற்றினையும் தோட்டியினையும் அழகுதங்கிய தந்தத்தினையும் ஒப்பற்றமாங்கனியினையும் தாங்கிய பரிசுத்தமாகிய நான்கு கரத்தினையும்,—

அங்கதம் கடகம் பொங்கிழை ஆரம் நிறை - வளையினைத்தரித்ததோளினையும் கங்கணந்தங்கிய கரத்தினையும் மிக்க ஆபரணத்தினையும் முத்துமாலையினையும் கொண்டு நிறைத்த மார்பினையும்,—

மணிச்சுடிகை கறையணல் கட்செவிகொண்ட திண்பெரும்பண்டி - மாணிக்க முடியோடு கரியகண்டத்தைப்பெற்ற பாம்பினைக் கச்சாகக்கட்டிய வலிய பெரும்புகழினையுடைய வயிற்றினையும்,—

குறுந்தாள் - குறுகிய பாதத்தினையும் உடைய,—

களிறுதன் இருகழல் கருதா - பிரணவரூபியாகிய யானையினது உபயபாததாமரையை நினைத்து,—

வெளிறுறு துயரம் பெரிதே வீட்டினம் - அறிவின்மையினால் உண்டாகிய துன்பகோடிகளைப் பெரிதாகமதியாமல் அறவொழித்தோம் என்க.

## நூற்காரணமுதலியன.



பெருங்கட லுதவுங் கருங்கடு வாங்கிக்
கந்தரத் தமைத்த வந்தமில் கடவுள்
பாலனை யுணர்த்து மேலவர் போலக்
கேட்போ ரளவைக் கோட்படு பொருளா
லருளிய கலைக ளலகில வாலவை
பலபல சமயப் பான்மைத் தன்றே
யஃதா லந்நூற் றன்மை யுன்னிய
மாந்த ரிதுவே பொருளென் றதனிலை
யறைதலின் வேற்றோர் பனுவ லேற்றோர்க்
கிசையா மாறுபாடு கூறுவ ரதனாற்
புறச் சமயங்கள் சிறப்பில வாகி
யருளின் மாந்தரை வெருளுற மயக்கி
யலகைத் தேரி னிலையிற் றீரு
மீங்கிவை நிற்க நீங்காச் சமய
மூவிரு தகுதி மேவிய தாமு
மொன்றோ டொன்று சென்று நிலையி
லாறு மாறு வீறுடைத் திவற்று
ளெவ்வ மில்லாச் சைவநற் சமயத்
தலகி லாகம நிலவுத லுளவவை
கனக மிரணியங் காஞ்சன மீழந்
தனநிதி யாடகந் தமனிய மென்றிப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும்
வாய்ந்த நூல்க ளாய்ந்தன ராகி

யாசா னாகி வீசிய சமத்துட
னேழஞ் சிருனூ றெடுத்த வாயிரம்
வாழுநற் சகன மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த வற்புத ஞானி
யாரும் விழவிற் பொற்றே ராலயத்
தேரு வெண்மர் நிறையி லிருப்ப
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட வொருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதிதிகழ்
மெய்கண் டவனருள் கைகண் டவர்களி
லொருவ ரொருதலை மருவி யிருப்ப
வஞ்சப் பிறவிக் கஞ்சிவந் தொருவ
னேதிறை யருளென வீதெனு மாயா
வாதியை யயலினர் மறுதலைத் தருடர
மற்றவ ரயலின ரவருரை மறுத்துச்
சொற்றர வயலின ரவருந் தொலைவுற்
றின்னே யெவரு முன்னே கழியுழி
யாங்கய லிருந்த வருளின ரழகிது
நீங்கள் சங்கற்ப நிராகரித் தமையென
மற்றவ ருரைத்த சொற்றரு பொருள்கொடு
வாத செற்ப விதண்டையு மேது
மோது நால்வகை யுவமையுந் திகழ்தர
வருள்சேர் மாந்தர் வெருள்சே ராமற்
றர்க்கமும் விடையமுங் கற்க
நற்கவி மாந்தர் நகநவிற் றுவனே.

(இ-ள்.) பெருங்கடல் உதவும் கருங்கடுவாங்கி கந்தரத்தமைத்த அந்தமில் கடவுள் - பெரியகடலாலே கொடுக்கப்பட்ட கரிய விஷத்தைத் திருக்கரத்தினாலே வாங்கி அயின்று மிடற்றிலே தரித்த அநாதிநித்தனாகிய சிவபெருமான்,—

பாலரை உணர்த்தும் மேலவர்போல - குழந்தைகளுக்கு அவ்வப் பருவங்களுக்குத் தக்க அறிவைப் புகட்டி நடத்தும் மேன்மைப்பட்ட தந்தைதாயரைப்போல,—

கேட்போர் அளவை கோட்படு பொருளால் அருளியகலைகள் அலகிலவால் - கேட்கத்தொடங்கிய மாணாக்கர்களின் அறிவினெல்லையின் கோட்பாட்டுக்கு அமைந்த பொருளால் செய்யப்பட்ட நூல்கள் எண்ணிறந்தனவாகும்,—

பலபல சமயப் பான்மைத்து - அந்நூல்கள் அநேகவிதமாயுள்ள சமயப் பகுப்போடுங் கூடியதாம்,—

அஃதால் அந்நூற்றன்மை உன்னியமாந்தர் இதுவே பொருள் என்று அதனில் அறைதலின் - ஆதலால் அச்சாத்திரத்தினதுண்மையை ஆராய்ந்

தறிந்தவர்கள் நமக்கிதுவேசாத்திரமும் அத்தமுமென்று அச்சமயத்தையே திறமாகக் கூறி நிற்கையினலே,—

வேற்றோர்பனுவல் ஏற்றோர்க்கிசையா மாறுபாடுகூறுவர் - மற்றொரு சாத்திரத்தை ஆராய்ந்தறிந்தவர்களுக்கு அவன் சொல்லுஞ் சாத்திரமும் அத்தமும் பொருந்தா ஆகையால் அவன் சொன்னதிவனுக்குப் பொருந்தாமல் இவன்சொன்ன தவனுக்குப்பொருந்தாமல் ஒன்றுக்கொன்றுமாறுபடச் சொல்லா நிற்பர்கள்,—

அதனல் புறச்சமயங்கள் சிறப்பிலவாகி அருளின்மாந்தரைவெருளுற மயக்கி அலகைத்தேரின் நிலையிற்றீரும்-அப்படியிருக்கையினலே உலகாயதன் புத்தன் சமணன் மீமாஞ்சன் மாயாவாதி பாஞ்சராத்திரி என்று சொல்லப்பட்ட புறச்சமயங்களினுள்ள அத்தங்கள் உண்மைப் பகுதியில்லாததாய் சிவனுடைய அநுக்கிரகத்திற் கேதுவல்லாத அபக்குவான்மாக்களை ஈதோரத்த மிருந்தபடியென்றச்சப்படத்தக்கதாக மருட்டிப் பேய்த்தேரைத் தண்ணீரென்று கருதி இதைக் குடித்துத் தாகந்தீரலாமென்று வந்தவனுக்கு அந்தத் தண்ணீர்பொய்யாய்ப் பேய்த்தேர்மெய்யான தன்மைபோல இந்தச்சாத்திரங்களும் அத்தங்களுஞ்சத்தியம்போலத் தோன்றி அசத்தியமாய் முடியும்,—

ஈங்கிவைநிற்க நீங்காச்சமய மூவிருதகுதி மேவியதாமும் - ஆகையால் இவ்விடத்திற் கூறிய சமயங்களும் அத்தங்களு நமக்கு வேண்டுவதில்லை தன்னிலொன்றோடொன்று கூடிக்கொண்டிருக்குஞ் சைவம் பாசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் வைரவம் என்கிறஉட்சமயங்களாறும்,-

ஒன்றோடொன்று சென்றுறுநிலையில் ஆறுமாறுவீறுடைத்து-இவை ஒருசமயத்தோ டொருசமயந் தாக்கிப் பார்க்குமளவில் அந்த ஆறுசமயங்களுந் தனித்தனியே மகத்துக்களாயிருக்கும்,—

இவற்றுள் எவ்வமில்லாச் சைவநற்சமயத்து அலகிலாகமநிலவுதனுள - இச்சமையங்களில் வைத்துக்கொண்டு சற்றுங் குற்றஞ்சொல்லவொண்ணமலிருக்குஞ் சைவமாகிய நல்லசமயமொன்றையு நோக்கித் தம்பிரானர் அருளிச்செய்த ஆகமங்களெண்ணிறந்து பொருந்தாநிற்கும். அந்த ஒருசமயத்தைநோக்கிப் பலசாத்திரம் அருளிச்செய்வானேனென்னில்,—

அவை கனகம்இரணியம்காஞ்சனம் ஈழம் தன நிதி ஆடகம்தமனியமென்றிப் பலபெயர் பயப்பதோர் பொருளேபோலப் பதிபசு பாச விதிமுறைகிளக்கும் - அப்படிப் பலவாக அருளிச்செய்ததுமொருபொருளைப் பற்றியிருக்கும் அஃதெங்ஙனே யென்னில், கனகம் இரணியம் காஞ்சனம் ஈழம் தனம் நிதி ஆடகம் தமனியம் என பலபெயராகச்சொல்லப்பட்டவையெல்லாம் பொன்னகிய ஓர்பொருளையே பற்றிநின்றாற்போல அந்தச் சாத்திரங்களும் பதியினிலக்கணத்தையும் பசுவினிலக்கணத்தையும் பாசத்தினிலக்கணத்தையுமே சொல்லாநிற்கும்,—

வாய்ந்தநூல்கள் ஆய்ந்தனராகி ஆசானகிவீசியசமத்துடன் - இங்ஙனம் பொருந்தப் பட்டிருக்கும் ஆகமங்களைக்கற்றுணர்ந்தாராய்ந்த போத

வான்களாய்ச் சமயவிசேஷ நிருவாணவபிஷேகமென்னும் நாலுதீக்ஷை களையு முடையவர்களாய் எங்கும் பிரகாசிக்கப்பட்டிருக்கும் பக்ஷப்பிரதி பக்ஷமில்லாத சமபோதவான்களாயுள்ள இந்தப்பெரியோர்கள்,—

ஏழஞ்சிருநூ றெடுத்தவாயிரம் வாழுநற்சகன மருவாநிற்ப - சகாத்தம் ஆயிரத் திருநூற்று முப்பைத்தைந்து செல்லாநின்றகாலத்திலே,—

பொற்பொதுமலிந்த அற்புதனுனி ஆறும்விழவில் - பொன்னினுற் செய்யப்பட்ட திருவம்பலத்தின்கண்ணே நிறைந்தெழுந்தருளியிருக்கும் தம்பிரானுருடைய ஆனிமாதத்து ஆறுந்திருவிழாவிலே,—

பொற்றேராலயத் தேறுவெண்மர் நிறைபிலிருப்ப - பொலிவினைக் கொண்ட தேர்மண்டபத்திலேயேறி முன்சொல்லப்பட்ட ஆசாரியமார் எட்டுத்திருப்பெயரொழுங்கிலே எழுந்தருளியிருக்கும் அவதரத்திலே,—

மயங்குவாத மாயாவாதி முயங்கிடவொருதலை - சற்காரியவாதமின்றி ஒருகாற்சொன்னதொருகாற்சொல்லாமல் முன்னுெடுபின் மலைந்துவரும் வர்க்கத்தோடுங்கூடியிருக்கும் மாயாவாதியென்னுஞ் சமயி ஒருபுறத்திலே கூடியிருக்க,—

முதுவெதிர் மணிசேர் பெண்ணைசூழ்ந்த வெண்ணெயம்பதி திகழ் மெய்கண்டவனருள் கைகண்டவர்களி லொருவரொருதலை மருவியிருப்ப - முதிர்ந்த மூங்கில்களினுண்டாகிய முத்துக்களோடுங்கூடியிருக்கும் பெண் ணையாறு சூழப்பட்ட திருவெண்ணெய் நல்லூரொன்கிற திருப்படைவீட் டிலே திருவவதாரஞ் செய்யப்பட்ட மெய்கண்டதேவநாயனுருடைய அநுக் கிரகத்தைப்பெற்ற அடியார்களிலே ஒருவர் அந்தக்கூட்டத்திெனுருபுறத் திலே பொருந்தி எழுந்தருளியிருக்கும் அவதரத்திலே,—

வஞ்சப்பிறவிக் கஞ்சிவந்தொருவன் ஏதிறையருளென - பொல்லாங் கைவிளைப்பதாயிருக்கும் பிறவிப்பிணிக்குப் பயந்தாெனுருபக்குவன் வந்தி வர்களைத் தொழுது தம்பிரானுர் திருவருளெத்தகையதென்று வினவ,—

ஈதெனுமாயா வாதியை அயலினர் மறுதலைத் தருடர - தன்னுடைய அத்தத்தைப்பார்த்து இதுவேபொருளென்று நாட்டினமாயாவாதியை அரு கேயிருந்தவர் அவன்சொன்னஅத்தத்தைக்கண்டித்ததுவத்தமல்லவென்று தம்முடையவத்தத்தை இதுவே பொருளென்றுநாட்ட,—

மற்றவரயலினர்அவருரைமறுத்துச் சொற்றர - அவருடைய பக்கத்தி லிருந்தவர் அவர் சொன்னவத்தத்தைக் கண்டித்துத் தம்முடையவத் தத்தை இதுவேபொருளென்று நாட்ட,—

அயலினரவருந்தொலைவுற்று - அவருடையவருகே இருந்தவராலே அவருங் கண்டிக்கப்பட்டு,—

இன்னேயெவரு முன்னேகழியுழி - இப்படி ஒருவனையொருவர் மறுத்தெட்டுப்பேரு முன்னே தள்ளுண்டவவதரத்து,—

ஆங்கயலிருந்த அருளினரழகிது நீங்கள்சங்கற்ப நிராகரித்தமையென மற்றவருரைத்த சொற்றரு பொருள்கொடு - அவ்விடத்தவர்களருகே

எழுந்தருளியிருந்த ஆசாரியர்களைப்பார்த்து நீங்களுங்களத்தங்களைச் சங்கற்பித்ததும் நிராகரித்ததும் மிகவு நன்றாயிருந்த தென்றருளிச்செய்தவர்கள்சொன்னசொற்களிலுண்டாகியபொருள்களை எடுத்துக்கொண்டுயான்,-

வாதசெற்ப விதண்டையு மேதுவு மோது நால்வகை உவமையுந் திகழ்தர - வாதமென்றது விகாரமென்றும் விசியுழியென்று மிரண்டாம். இதில் விகாரமென்றது குருவுஞ்சீஷனுமாகுதல், தன்னோடொத்த பக்ஷபாதனாகுதல்,மாறுபாடின்றிப் பிரமாணங்களிலுண்டாகிய அத்தங்களைத்தர்க்கித்ததிலுண்டாகிய குற்றங்களைநீக்கிச் சத்தியமானவத்தத்தை நியமிக்கப்படுவதெனக்கொள்க. விசியுழியென்றது செற்பை யென்றும் விதண்டையென்றும் இரண்டாம். இதில் செற்பை யென்றது பிறருடையவத்தங்களை நிராகரித்துத் தன்னுடையபொருளை மலைவறநாட்டுகையெனக் கொள்க. விதண்டையென்றது பிறருடைய வத்தங்களை நிராகரித்துத் தன்னுடையவத்தந்தோன்றாமனின்று சாதிக்கப்படுவதெனக்கொள்க. ஏதுவென்றது அளவைப் பிரமாணங்களிலே விதிக்கப்பட்டிருக்கும் பலவேதுக்களாம். ஓதுநால்வகை யுவமையுமென்றது வினை பயன் மெய் உருவென்று சொல்லப்பட்ட நால்வகை யுவமையு மிந்நூலிலே விளங்கத்தக்கதாக,—

அருள்சேர்மாந்தர் வெருள்சேராமல் - திருவருளுக் கேதுவாயுள்ளபக்குவான்மாக்களுக்கு அம்மலைவென்கிறவச்சம்வந்துதாக்காமல்அவர்கள்,—

தர்க்கமும் விடயமுங்கற்க நற்கவிமாந்தர் நகநவிற்றுவனே - இந்நூலிலுண்டாகிய தர்க்கங்களையும் விடயங்களையுங் கற்கத்தக்கதாகவும் நல்ல கவிதையோடுங் கூடியிருக்கிற வித்துவான்கள் இவனுமொருநூல் செய்வதேயென்று சிரிக்கத்தக்கதாகவும் இந்நூலைச்சொல்லாநின்றேன் என்க (உ)

---

## மாயாவாதிசங்கற்பம்.

நவிற்றிய நிரையி னவித்தையி னோனுரை
நித்த னறிவன் சுத்தன கண்டித
னிருவிகற்ப னிர்த்தத் துவனி ரஞ்சனன்
சொல்வகை யெவையுந் தொடராத் தூய்மணி
வரம்பில் வேதச் சிரந்தரு பரம்பொருள்
சத்தா யெவையுந் தானா யவித்தை
தொத்தா துயர்ந்த தொல்சுடர் மூவா
வின்ன தன்மைய னேக னனேகன்
கன்னற் பெருஞ்சுவை தன்னிற் பிறவாப்
பெற்றியினிருந்து பொற்பணி யியல்பினின்
வான்வளி யனனீர் மண்மருந் தன்ன
மான தாது வாறைங் கோசத்
தொகுதி யாக்கைப் பகுதிய தொருபுடை
சுத்தி வெள்ளி யொத்தன மித்தையிற்

ருனென லாகுந் தன்மைத் துனுதையிற்
சின்னூற் றகையின் வேற்றுமை மரீஇய
தென்னப் பன்மைய தெனினிலே பழம்பூத்
தோனூர் வயிரந் தருத்தருந் தொன்மையின்
வானு ரந்திரா றுரைதரு வாய்மையிற்
கூடும சித்தைச் சித்தத வாதெனி
னெற்பதர் பலாலத் திற்பரந் தருமிது
தன்னியல் பென்றும் விளையாட் டென்று
முன்னுள மறைகண் மொழிதலி னொருநூற்
பன்மணி நிலேயும் பசுப்பா லெனவும்
பகலவ னீரி லலர்கதி ரெனவுங்
கூவ லாழி குளஞ்சிறு குழிகால்
வாவி யாவையும் வருபுன லெனவு
மவ்வவற் றடங்கி யாடியு ணிழலெனத்
தோன்றி யாக்கைகற் காந்தத் திரும்புங்
கனவிற் றீங்குங் கங்குலிற் கயிறும்
புனலிற் றேன்றும் பேய்த்தேர்ச் செய்தியு
மன்ன துன்பி னன்னிறப் பளிங்கெனப்
பதினுற் கரணத் தொருமூன் றவத்தை
நாளு நாளு நயந்துறு மிருபயன்
தன்னிற் சாராத் தொன்மைத் தன்மை
தர்ப்பண நிழற்கட் குற்றிபாய்ந் தற்றே
விவ்வியற் பந்தப் பௌவம தகல
விண்முத றந்த கொண்மூப் படலத்
திருளற வுதித்த காறக விவேகந்
தன்னிற் றேன்றிச் சாதக மனைத்தையு
மன்னகப் பிரிப்பு மடியிழை வாங்கலும்
போல ஞாலம் பொய்யறக் கழீஇத்
தானே தானுய்த் தன்னிற் றன்னைத்
தானே கண்டு தன்னல முற்று
வசையி றத்துவ மசிபதத் தெளிவா
லகமே பிரம மாயின னெனவறிந்
தசல னுகிநற் சலசல மதியெனக்
கண்டிடு முடலம் விண்டகல் கடத்து
மங்குல துடைதர வெங்குமாந் தகைத்தே
யிவ்வகை யுணர்ந்து செய்தொழி லறுத
மடவோர் தாமுங் கடனு வியற்றுங்
கன்ம காண்டத் தொன்மைப் புரிவாற்
றேற்றிய வித்தை மேற்கடை யரணியி
லெழுந்தெரி யவற்றை விழுங்கிய தென்னத்
தன்னெழிற் றுள்ள தானு யழியு
மந்நிலே யன்றி யழிவறு முத்தி

யேயா தென்றுதன் னியல்பை
மாயாவாதி வகுத் துரைத் தனனே.

**பேத்தவிலக்கணம்.**

(இ-ள்.) நவிற்றியநிரையின் அவித்தையினேனுனா - முற்கூறியவொழுங்கில் மாயாவுபாதிகளினலே வாதிக்கப்பட்டுப் பரப்பிரமமிப்படிமயங்கி நிற்குமென்று சொல்லும் மாயாவாதியினுடைய மதமிருக்கும்படி,—

நித்தனறிவன் சுத்தனகண்டிதன் - ஒருக்காலு மழிவில்லாதவனுமாய் சர்வஞ்ஞனுமாய் நிர்மலனுமாய்க் கண்டிக்கப்படாதவனுமாய்,—

நிருவிகற்பனிர்த்தத்துவ னிரஞ்சனன் - விகற்பமில்லாதவனுமாய்த் தத்துவாதீதனுமாய் மறைப்பில்லாதவனுமாய்,—

சொல்வகையெவையுந் தொடராத்தூய்மணி-சொல்லும் பொருளுமாயிருக்குஞ் சாத்திரங்களொன்றுஞ்சென்று கிட்டவொண்ணுமலிருக்குஞ் சுத்தரத்தினமாய்,—

வரம்பில்வேதச் சிரந்தருபரம்பொருள் - எந்தச்சாத்திரங்களினுலு மளவிடப்படாமலிருந்துள்ளதாமாயினும் எல்லையற்றிருக்கும் வேதத்தினது தலையிலே சுமந்துதரப்பட்ட எதற்கு மேலாயிருக்கிறவத்தமாய்,—

சத்தாய் - சுத்த சைதன்னியமாய்,—

எவையுந்தானய் - எல்லாவுபாதிகளுந் தானேயாய்,—

அவித்தை தொத்தாதுயர்ந்த தொல்சுடர் - அப்படியிருந்ததாயினும் அவ்வுபாதிகளவனைத்தொந்தியாதபடி மிக்கபழைமையானபிரகாசமாய்,—

மூவா இன்னதன்மையன் - ஒருக்காலும் கெடாதநியாயத்தோடு கூடியிருப்பானய்,—

ஏகனனேகன் - ஒருத்தனுமாய்ப் பலயோனிகளிலுதிற்பவனுமாய்,—

கன்னற்பெருஞ்சுவை தன்னிற்பிறவாப் பெற்றியினிருந்து - கரும்பிலுண்டான மிக்க இரதமானதந்தக்கரும்புக்குத் தோன்றுதவியல்புபோலத் தன்னிடத்திலுண்டாகிய இன்பத்தையுந் தானறியாமலிருந்துள்ள பரப்பிரமமானது பிரபஞ்சலீலையை உண்டாக்குமிடத்து,—

பொற்பணி யியல்பினின் - பொன்னனது பலவானவாபரணங்களாயிருந்த தன்மைபோல,—

வான்வளி அனனீர் மண்மருந்து அன்னமான தாது ஆறைங்கோசத் தொகுதி யாக்கைப்பகுதிய தொருபுடை-பரப்பிரமந்தானே ஆகாசமும் வாயுவுமக்கினியுமப்புவும்பிருதிவியுமௌடதவன்னங்களுமதனுலுண்டாகப்பட்ட தாதுக்களாறும் அன்னமயம் பிராணமயம் மனேமயம் விஞ்ஞானமயம் ஆநந்தமயமென்னும் ஐங்கோசங்களும் ஒருபக்ஷமிவையெல்லாமாகக் கூடியிருகுஞ் சரீரத்தின் பகுதியாயிருக்கும். இங்ஙனந்தோன்றப்பட்ட பிரபஞ்சம் நித்தியமோ வநித்தியமோ அநித்தியமென்னில் இதுநித்தயமாய்த்தோன்றுவானேனென்னில்,—

சுத்திவெள்ளி யொத்தனமித்தையில் - சுத்தியாகிய சிப்பியானது வெள்ளியையொத்துத் தோன்றினாற்போலத் தோன்றிற்றென்றுசொல்லலாமாக மதிப்பிரமையினாலே அசித்தியமாயுள்ள பிரபஞ்சமு நித்தியமாய்த்தோன்றும். ஆனாலந்தப்பரப்பிரமமும் இந்தப்பிரபஞ்சமுந் தன்னில் வேறோவென்னில்,—

தானெனலாகுந் தன்மைத்து - அந்தப்பரப்பிரமந்தானே இந்தப்பிரபஞ்சமென்று சொல்லுந்தன்மையை யுடையதாயிருக்கும். அந்தப்பிரமத்தைப்போலேயிராமல் இந்தப்பிரபஞ்சம் வேற்றுமையாயிருப்பானேனென்னில்,—

உலூதையிற் சின்னூற்றகையின் வேற்றுமை மரீஇயது - சிலம்பியினிடத்துண்டாகியசிறிய நூலிலையொக்கப் பிரபஞ்சமும் பிரமத்துக்கு வேற்றுமையைப் பொருந்தியிருக்கும்,—

என்னப் பன்மையதெனின் - சிலம்பிநூல்போலேயென்று சொல்வது ஒரு தன்மையாயிருந்தது. பிரபஞ்சம் பலபிரகாரமா யிருப்பானேனென்னில்,—

இலைபழம் பூத்தோனார் வயிரந் தருத்தருந் தொன்மையின் வானாரந் திரை நுரை தருவாய்மையிற்கூடும்-இலையும் பழமும் பூவும் காயும் தோலும் நாரும்வயிரமும் இவையெல்லாமரமானதுதங்தொடுங்குந்தன்மைபோலவும் பெருமையினையுடைய தண்ணீரானது திரையையுநுரையையுந் திவலையையுங் குமிழியையுந் தந்தொடுங்குந்தன்மைபோலவும் இப்படி பிரபஞ்சமும் பலவாகத்தோன்றி யொடுங்குமென்று சொல்லப்படும்,—

அசித்தைச் சித்துதவாதெனில் - அசித்தாயுள்ள பிரபஞ்சஞ்சித்தாயுள்ள பிரமத்திலே தோன்றுதென்னில்,—

நெற்பதர் பலாலத்திற் பரந்தரும் - நெல்லானது பதரையும் வைக்கோலையுந் தந்ததன்மைபோலச் சத்தாகியபிரமமும் சித்தாகிய பிரபஞ்சத்தைத் தராநிற்கும். இந்தப்பிரமமிப்படிச் செய்யவேண்டுவதென்னெனில்,

இது தன்னியல்பென்றும்-இப்படிச்செய்துவருவது இந்தப் பிரமத்தினுடைய இயல்பாயிருப்ப தொன்றென்றும், பிரமமிந்த உபாதிகளினாலே வாதிக்கப்பட்டிருப்பானே னென்னில்,—

விளையாட்டென்றும் - இந்தவுபாதிகளோடுங் கூடிக்கொண்டிருப்பதைப் பிரமத்துக்கு விளையாட்டாயிருப்பதொன்றென்றும்,பிரமத்துக்கியல்பென்றும் விளையாட்டென்று மெங்கே காணப்பட்டதென்னில்,—

முன்னுள மறைகண் மொழிதலின்-அநாதியாயுள்ளவேதங்கள் சொல்லுகையினாலே,இவ்வுபாதிகள்பலவாகக்காண்பிக்கப்பட்டாற்போல அந்தப் பிரமமு மிப்படிப் பலவாகக் கண்டிருக்கப்பட்டிருக்குமோவென்னில்,—

ஒருநூற் பன்மணிநிலையும் பசுப்பாலெனவும் பலவகனீரி லலர்வகதிரெனவுங் கூவலாழி குளஞ்சிறுகுழிகால் வாவியாவையும் வருபுனலெனவு மவ்வவற்றடங்கி-மணிகள் பலநிறமாயிருந்ததாயினும் அதிற் கோப்புண்

டானநூலக்கிறம்போற்றேன்றியு மொருதன்மையாயிருந்தாற் போலவும் பசுக்கள் பலவர்ணங்களாயிருந்தாலும் பாலொரு தன்மையாயிருந்தாற் போலவும் நீர்பொருந்திய பாத்திரங்கள் பலவாயிருந்ததாயினும் அதிற் பிரதிபிம்பித்த ஆதித்தன் ஒன்றாயிருந்த தன்மைபோலவும் கிணறுங் கடலுங் குளமுஞ் சிறிதாயுள்ள குழிகளும் வாய்க்கால்களும் இவையெல்லாம் பல பேதமாயிருந்ததாயினுந் தண்ணீரொன்றாயிருந்த தன்மைபோலவும் இப்படியே யோனிகள் பலவாறாயிருந்ததாயினு மறிவேகமாய் அநந்த யோனிகடோறுங் கூடியிருக்கும். அப்படி யோனிகடோறுங் கூடியிருந்ததாயினிந்தவுடல்கடோறும் பெந்தப்படாதோ வென்னில்,—

ஆடியுணிழலெனத் தோன்றியாக்கை - கண்ணாடியிலே நிழலானது தோன்றி நிற்கும் அந்தநிழலதிற்றோய்வற நின்றாற்போலவும் உடலிலே பிரமமானது தோன்றி நிற்குமிடத்தேயும் அந்தவுடலிற்றாணுந்தோய்வற நிற்கும். அப்படி யந்தவுடலிலே தோய்வறநிற்குமாயின் இந்தவுடல் காரியப்படுவதெப்படியென்னில்,—

நற்காந்தத்திரும்பும் - நல்லகாந்தமானதுதோய்வறநிற்கஅதன் சந்நிதியிலே இரும்பானது காரியப்பட்டாற்போலப்பிரமந்தோய்வறநிற்க அதன் சந்நிதியிலே யுடலானது காரியப்படாநிற்கும். அந்தவறிவிந்தவுடலிலே நின்று சுகதுக்கங்களையநுபவிக்கின்றதே அதுவருவானேனென்னில்,—

கனவிற்றீங்குங் கங்குலிற் கயிறும் புனலிற்றேன்றும் பேய்த்தேர்ச் செய்தியும் - ஒருவன் சொப்பனங்காணு மிடத்தவனை யோரானை பின்பிடித்துக்கொண்டுவர அதற்குப்பயப்பட்டிவனேடு மிடத்து விழித்தவவதரத்திலவையெல்லாம் பொய்யாயிருந்ததன்மைபோலவும் ஒருவனிராக்காலத்திலே யொருபுற்றின் வாசலிலே கயிறுகிடக்கிறதைக்கண்டு ஒரு பாம்பு கிடப்பதைப்பாரீரொன்று பிரமித்துநிற்குமிடத்து விடிந்த வவதரத்துப் பாம்பு பொய்யாய்க் கயிறு மெய்யானதன்மைபோலவும் ஒருவன் தண்ணீர் தாகத்தின் மிகுதிகொண்டு கானலைத் தண்ணீரொன்று புத்திபண்ணிக்கொண்டு வந்தான்அதனுடைய வுண்மையைப் பார்த்தவிடத் தவனுக்குத் தண்ணீர் பொய்யாய்க் கானல்மெய்யான தன்மைபோலவும் இந்தப்பிரம முடலோடுங்கூடி நின்று சுகதுக்கங்களை அநுபவித்தாற்போல விருப்பதொழிந்து தன்னுண்மைபார்க்குமிடத்திந்தச் சுகதுக்கங்களும்அந்தவறிவுக்குண்டாகாது. இப்பொழுது பிரத்தியக்ஷமாகச்சோத்திராதிகளோடுங் கூடியதுதானய்க் கன்மங்களைப் புசிப்பது காணப்பட்டிருக்கிறதே யென்னில்,—

அன்னதுன்பின் நன்னிறப்பளிங்கென - அப்படியந்த இந்திரியங்கள் தானய் நின்றதாயினும் பிரமத்துக்கந்த அநுபோக முண்டாகாது அஃதென்போலவென்னின், படிகமானது நல்ல பஞ்சவன்னங்களோடுங் கூடியதுதானயிருந்ததாயினு மவையிற்றினேடும் படிகமொரு சற்றுந் தோய்வற நின்றாற்போல்வு மெனக்கொள்க இதன்றியும்,—

பதினாற்கரணத் தொருமூன்றவத்தை நாளுநாளு நயந்துறும் - சோத்திராதிகளைந்தும் வாக்காதிகளைந்தும் அந்தக்கரண நான்குமாகப்பதினான்

கோடுங்கூடிப்புருவமத்தியத்திற்சாக்கிராவத்தையும்அதிற்சோத்திராதியும் வாக்காதியுநிற்க அந்தக்கரணங்களோடுங்கூடிக் கண்டத்தானத்திற்சொப் பனவத்தையும் அதின் மனோபுத்தியாங்காரநிற்க சித்தத்தோடுங்கூடி இத யத்தானத்திற் சுழுத்தியவத்தையும் இந்த அவத்தைகளில் நாடோறும் பொருந்தி அநுபவியாநிற்கும். அறிவானதிந்தவவத்தைகளோடுங்கூடிஅநு பவிக்குமாயின்இதற்குப்புண்ணியபாவதொந்தனையில்லையோவென்னில்,—

இருபயன்றன்னிற்சாராத்தொன்மைத்தன்மைதர்ப்பணநிழற்கட்குற் றிபாய்ந்தற்றே - இந்தவவத்தைகளோடுங் கூடிநின்றதாயினும் அநாதியே புண்ணியபாவதொந்தனை இந்தப்பிரமத்துக்குச்சாராதுஅஃதெத்தன்மைத் தெனில்கண்ணாடியிலே யொருவன்முகம் பிரதிபிம்பிக்க அவ்விடத்தந்த முகத்தின்கண்ணே பாரைக்கோல்கொண்டு பாய்ந்தவிடத்தந்தக்கண்ணாடி யுடைந்தொழிந்துகண்ணுக்கீனம்வராதிருந்தாற்போலுமெனக்கொள்க,—

சீவன்முத்தியிலக்கணம்.

இவ்வியற்பந்தப் பௌவமதகல - இப்பொழுது நான்சொல்லிவந்த முறைமையிலே இந்தப்பிரமத்தைவாதிக்கப்பட்ட மாயாவாதைகளினுண் டாகிய பிறவித்தொந்தனை நீங்குகைநிமித்தமாக,—

விண்முதறந்த கொண்மூப்படலத் திருளறவுதித்தகாறக-ஆகாயமென் பதினின்றுமேகமானதுதோன்றி அவ்வாகாயத்தைமறைக்க அதனாலுண் டாகிய இருளானதுநீங்குகைநிமித்தமாக அவ்வாகாயத்தினின்றுதோன்றி அந்தமேகங்களைநீக்கி ஆகாயத்தை நின்மலமாக்கின வாயுவைப்போல,—

விவேகந்தன்னிற்றோன்றி - அந்தப்பிரமத்தினின்றும் விவேகஞான மானது தோன்றி,—

சாதகமனைத்தையும் - இந்தப்பிரமத்துக் குண்டாகிய மறைப்புக ளெல்லாவற்றையும்,—

மன்னகப் பிரிப்பு மடியிழை வாங்கலும் போல ஞாலம் பொய்யறக் கழிஇ - நிலைபெற்றுவாராநிற்பதொரு வீட்டை ஒருவனொரு வைக் கோலாகவு மோரொருமரமாகவும் நாளிலேபிடுங்கிப்போட்டபின் அந்த வீடென்னுஞ்சொரூபமில்லையாய்ப்போன தன்மைபோலவும் மடியாகிய புட வையும் அப்படித்தானேரோரிழையாக வாங்கிப்போட்டாற் புடவை யென்னுந்தன்மைபோனாற்போலவும்பிரபஞ்சமாகியபொய்யையும்பிருதிவி முதலாகக்கண்டுஇது நானல்லவிதுநானல்லவென்றுநியதிபண்ணி நாளிலே நீக்கிக்கொண்டு,—

தானே தானாய்த் தன்னிற்றன்னைத் தானேகண்டு தன்னலமுற்றி - இப்படி அந்தவுபாதிகணீங்கினவிடத்திந்தவறிவானதுஇந்தப்பிரமந்தானே யாய் தன்னிடத்திலே தற்சொரூபத்தைத் தானேதரிசித்துத் தன்னிடத்தி லுண்டாகிய இன்பத்தைத் தானேயநுபவித்து,—

வசையில் தத்துவமசி பதத்தெளிவால் அகமேபிரமமாயினனென வறிந்து - குற்றமற்றிருக்குந்தத்துவமசியென்னுமகாவாக்கியத்தொம்பதந் தத்பதமசிபதமென்னு மிலக்கணை மூன்றுமறிந்த தெளிவுகொண்டு அந்தப் பிரமந்தானென்கிற பிரமஞானத்தைத் தீரவிளங்கி,—

அசலனுகி - இந்தப்பிரமஞான முண்டான விடத்துப் பின்னைச் சற்றுஞ்சலநமில்லாதவனுய், உபாதிகளோடுங் கூடிச் சத்தாதி விடயங்களைப் புசிக்குமிடத்துச் சலனமில்லையென்பதென்னையென்னில்,—

நற்சல சலமதியெனக்கண்டிடும்-உபாதிகளோடுங்கூடிச் சத்தாதிவிடயங்களைப்புசிக்குமிடத்தே அந்தவுண்மைக்குச் சலனமில்லாதது நல்லசலமான தசைந்தவிடத்தந்தஜலத்தோடுங்கூடினசந்திரனுமொக்கவசைந்தாற்போலேயிருக்க அந்தச்சந்திரனுண்மையைப் பார்க்குமிடத்ததற்கில்லையானற்போல இந்தவறிவுங்காணப்படும்,—

பரழத்தியிலக்கணம்.

உடலம் விண்டகல் கடத்து மங்குலதுடைதர வெங்குமாந்தகைத்தே- இந்தச்சரீர தொந்தனை விட்டவவதரத் தந்தவறிவு மந்தப்பிரமமுமொன்றுபட்டவிடத்தென்போலவென்னின்,விசாலமாகவிருக்குங்கடத்துக்குள்ளே அகப்பட்டுநின்ற ஆகாய மிந்தக்குடமான துடைந்தவவதரத் தந்தப்பிரகாசமுந்தானு மொன்றுபட்டாற்போலவாமெனக்கொள்க,—

இவ்வகையுணர்ந்து செய்தொழிலறுத மடவோர்தாமும் - அதுநானென்னும் பிரமஞானத்தையறிந்து தான்முன்பு செய்துவந்த கன்மங்களெல்லாவற்றையும் விடமாட்டாத அறிவில்லாதவர் தாமும்,—

கடனுவியற்றுங் கன்மகாண்டத் தொன்மைபுரிவாற்றேற்றியவித்தை- அந்தப்பிரமஞானமுண்டாகை நிமித்தமாகப் சாதகசதுஷ்டயமாகிய கன்மங்களை அநுஷ்டித்தந்தத் தொழில்களைப் பழகிச்செய்துவர விவேகஞானமானதவர்களுக் குண்டாகாநிற்கும்,—

மேற்கடையரணியிலெழுந்தெரியவற்றைவிழுங்கியதென்னத் தன்னெழிந்துள்ள தானுயழியும் - அப்படியுண்டான விவேகஞானமுந் தீக்கடைக்கோலை மேலேவைத்துக்கடையவந்தத்தொழிலினுலேயுண்டாகிய நெருப்பு அந்தவரணியையுங் கோலினையுஞ் சேரச்சுட்டுப்போட்ட தன்மைபோலத் தானென்றுமொழிந்து மற்றுண்டாகிய கன்மங்களனைத்தையும் அழித்துப் போடாநிற்கும்,—

அந்நிலையன்றி-அந்தநிலையிலேநின்றுவிடக்கடவன் அஃதொழிந்து,—

அழிவறு முத்தியேயாதென்றுதன்னியல்பை மாயாவாதி வகுத்துரைத்தனனே- நிலைபேறுடையதாயிருக்கு முத்தி பொருந்தாது. இப்படியே தன்னுடைய பெத்தத்தினு முத்தியினுமுண்டாகிய முறைமையினை மாயாவாதியானவன் விரித்துச்சொன்னுன் என்க. (ந)

---

## நிராகரணம்.

உரைதரு பிரம மொன்றெனு முறைக்கண்
வருபிர மாண மறையெனி லருமறை
யொன்றென்ற தன்றி யிருபொரு ளுரைத்த
னன்றன் றபேத நாடிய பொருளேற்
ரு. பேதமு மபேதமு மோத வேண்டா
பேத மெனினு மபேத மெனினும்

பேதா பேத மெனினும மையுநின்
னையமி லுரையிற் பையவங் துளதாங்
திகழ்பிர மாண விகழ்வுமுண் டன்றிப்
பெத்தம் பேத முத்தி யபேதமே
லநவத் திதமா மவையிரு திறனு
மினியப் பழமொழி யிரண்டல வொன்றே
யன்றியும் பெத்தம் பேதத் தறைதலு
மொன்றிய முத்தி யபேதத் துரைத்தலும்
பழுதா மித்திறம் பதையா தாய்கமற்
றெழுதா மறையெனு மிப்பிர மாண
மாருளை தானே யாயின தேலுன
தேக மநேக முறுமியம் பாமற்
சத்த ரூபங் தகாதெனில் வானத்
தொத்தொலி யுறழு மெனில்வறி துதியா
தன்றியும் பதமும் பாழியு மனைத்து
மின்றியோ ரொலியா யெழுந்திடு மதனுக்
கறிவில துருவில தறியா தறையா
தன்றியு மவ்வகை யகண்டித மதுவிது
வென்றது குறிப்ப தெவ்வகை யாவு
மொன்றெனு முரையு மொழிந்தனை யன்றே
யருமறை பிரம வுரையெனி னதற்குத்
தந்த தாலு முதனவில் பொறியில
தென்னிலோ ருடற்கண் மன்னிய வலகை
யறைந்தற் றென்ப தார்சொல தமலத்
திறம்பெற் றின்றே செய்தோர் பெயராற்
சுயம்பு வென்றுல கியம்புமென் றறியினித்
தற்கீட் டலைவரைத் தான்றெழு துரைக்குஞ்
சொற்கேற் புரவல னேவ லமைச்சரை
யடிகண் மற்றெங் குடிமுழு தாண்மினென்
றேத்தி யிறைஞ்சிக் காப்பர்க ளென்றுங்
கீச னுஞ்செயப் பேசின னன்றி
யினையவை பிறரிற் கனவிலு மிலனே
தன்னைத் துதிக்குஞ் சொன்னலங் தானுமத்
துறையறி வாணர்க் கறைவதொன் றன்றியுங்
தனக்குத் தானே தன்னலம் பகரா
தசத்துக் குரையா தார்க்குரை யுயிர்க்கெனி
லுரைபிர மாண மிறைபிர மேய
நீபிர மாதா நின்பிர மிதியென
நால்வகை யுளதுன தேகநன் றன்றே
நற்பிர மாண நிற்பதொன் றன்று

லப்பிர மேயமு மதனியல் பன்றே
கன்னற் சுவையி லக்கிய மிலதா
யினிமை தோன்றாத் தனிமைத் தென்றனை
யறிவிற் குவமை யசத்தாங் கட்டி
பிறிவித் தொட்டினும் பேறது றாதே
தற்பர விரிவு பொற்பணி தகுமெனிற்
செய்வோ ரின்றிச் செய்வினை யின்மையிற்
பொன்பணி யாகை தன்பணி யன்றே
செய்வோர் போலாச் செயப்படு பொருண்முதற்
செய்வோ ரேயாச் செய்யவும் படுமே
சுத்தி வெள்ளியிற் றோன்றிற் றாயினுஞ்
சத்துல கேதுந் தாரா தருமெனி
னுலகமித் தையென் றோரா துரைத்தனை
நிலவுநின் மரபு நினைந்திலை யாங்கொல்
விவகா ரத்தில் வேண்டுது முலகம்
பரமார்த் தத்திற் பகரா மென்னிற்
பரத்துள தேலிவை யும்பர மார்த்தம்
பரத்தில தேலொழி முன்பகர் மாற்ற
மதன்முத லிதுவென வுதவுக வன்றியும்
விவகரிக் குங்காற் றிகழ்பர மார்த்த
நிலையது தெரியி னிதுநீ நீயேற்
றெரியா தாயி னஃதுந் தெரியா
துரையா ரளவையு மொழிந்தனை யன்றே
யளவை காண்டல் கருத லுரையென
வுளதவை மூன்றின் மொழிவழி நுழையி
னின்பிர மேய மென்பதெ னுங்கொல்
பொற்பிதிர் பிதிர்ந்தும் பொன்னே யாகின்
றற்பர மசித்தைத் தருமா றென்னெனிற்
சிலம்பி நூறரு நலம்போற் றோன்று
மென்றனை யது வதன்றொழி லன்றியு
மொன்றத னியல்புல கோரியல் பன்றெனப்
பலமிலை பழம்பூப் பாதவந் தருநீர்
திரைநுரை திவலை சிலதரு மிவைபோற்
றானே பலவா மெனநீ சாற்றினை
சத்தசத் தாகவுஞ் சத்தினி லசத்தின்
கொத்துள தாகவுங் கூறின ரிலராற்
வித்திலை கனிநனி விழுதா றருநெறி
சத்தல தொன்று தான்றர வேண்டு
நெற்பதர் பலாலத் திற்குபா தானமென்
காரண மின்றிக் காரியம் பிறவா

பாரிடை யொருபடம் பண்ணவும் படுமே
யந்தமில் பிரமமவித்தைகா ரணமெனத்
தந்தனை யவித்தை தானெய் துறுத
றன்னியல் பென்னில் வன்னிதன் வெம்மையிற்
சத்தின தியல்புஞ் சத்தே யசத்தெனில்
வைத்த னியல்பெனும் வழக்கொழி யன்றியு
மிருள்பொதி விளக்கென வருமரு விளக்கிற்
கருமை பயந்த பெருகொளி தருமெனிற்
றன்னியல் பன்றத னுபாதி வசத்தான்
மன்னிய தன்றிமைத் தான்றனி மாயா
தொன்று னசுத்த னன்று மன்றே
யாங்கொரு காலத் தோங்கிய தாயி
னந்தமி லவித்தை வந்தணை வதற்கோ
ரேது வேண்டும் புயலியல் பெனின்வீ
டோத வேண்டா வொழிந்தோ ரினுமுறுங்
களங்கம துறவுறு மவித்தைதற் கவித்தல்
விளங்கிய பிரம விளையாட் டாயி
னவித்தை யென்பதொன் றங்கியந் தன்னி
லுதிக்கு மென்றமுன் னுரையும றந்தனை
நுண்ணூற் குடம்பை நூந்துழி போனுட்
படுநெறி யதனால் விடுநெறி யிலதாற்
றலைமையு மறிவு மிலதென வித்தையை
விடுத்தெடுத் தாணரும் வேற்றோ ரன்றே
யொளிகொ டாமிரங் குளிகைபெற் றுங்கத
னவித்தையை வித்தை தவிர்குமென் றுரைக்கி
னித்த னறிவன் சுத்தனென் றுரைத்த
வித்தக மென்னீ வித்தையும் வேறொன்
றெம்ம னேரி லொருவ னின்னிறை
யம்ம சைவந் தவனீ யன்றே
பன்மணி பசுநற் பாத்திர மெனவு
நன்னூல் பானீர் நற்கதி ரெனவு
முடலையு முணர்வையு முவமித் தனையேற்
றடமணி சரடொடு தாங்கூ டலவே
யுணர்வுணர் வொழியி னுலகுணர் வுறினின்
பாலும் பசுவுஞ் சாலுஞ் சாலக்
கலம்பல வன்றிச் சலம்பல விலதெனக்
காணுந ரின்றி வீணின் விளம்பினை
யாடியு னிழல்போற் கூடுதல் கூறிற்
றன்னிழல் கொண்டு தற்பணஞ் சலிக்கின்
மன்னிழல் கொண்டுடல் வந்தகன் றிடுமே
மன்னயக் காந்த மெனவுடல் பிரம
சந்நிதி யளவிற் சலித்திடு மாயி

ணகண்டிதன் சந்நிதி யலதில தெவையு
நடந்திட வேண்டுங் கிடந்திடப் பெறுவே
காந்தத் திரும்பு காட்டுரைப் பெறிலயஞ்
சேர்ந்திடு நீக்குஞ் செயலதற் கிலதே
கனத்துயர் கயிற்றர வெனச்சில தொடுத்தனை
கனவின் பயனு நனவின் பயனும்
வினையின் பயனவை பொய்யென வேண்டா
வுடன்மா றூட்டக் கடனது கருதுக
வுற்ற புற்று மற்றதிற் கயிறு
முடலுங் கூடச் சடமென வறிதி
யறிவு கயிறென் றறியா தன்றே
யச்சம தடைதல் கொச்சமை யுடைத்தே
யின்னுமக் கனவி லிருளுறு கயிற்றிற்
பின்னுநின் பிரமம் பிரமித் திடுமே
துன்னிய வினையிற் செம்மலர்ப் பளிங்கெனத்
தானுந் தகைமை யானல் மலனொன
வொருபய னன்றிப் பலபயன் மரீஇய
திருவினை தருபய னெனநனி வேண்டி
லாண்ட வித்தையு மவித்தைகொ டாக்கையு
மீண்டிரு வினையு மியம்பினை பரத்தைக்
கள்வனாப் பிணிக்குங் காவல னெனமுய
றெல்வினைத் தொடக்கிற் றேன்றுடற் சிறையிட்
டிருவினை யூட்டு மெம்மா னம்மா
னருவினை யுடற்க ணவத்தைக ளுறைத்தனை
யாருறு பவர்பர மகண்டிதம் மடங்கா
தோர்வில துடல்சட முருநெறி யாதெனின்
மன்னிய கரண மாறூட் டத்திற்
பன்னின மென்னி னிவையோ பரமோ
முதலிய தாயி னிவைபிறழ் வெய்தா
திவையெனி னுனது மொழிபழு துளதே
யுடற்படு பிரம முறுமெனிற் சாளரத்
திடத்தகு முறுவிர னுதியளி யெறிதுய
ரங்குலி தானே யருந்திடி னுடற்கட்
டங்கிய வறிவு தனித்துறு மன்றே
தற்பண நிழற்கட் குற்றிபாய்ந் தற்று
னற்கணிற் றுயர நணுகாத் தகைத்தெனி
னின்மொழி விரோதமுங் காட்சி விரோதத்
தன்மையு முறுமவை தவறில வாகா
யாமுடைப் பதிவகை யாவரும் பலகலை
சொல்லுத லெளிதரி தத்தொழில் புரிவெனப்
புல்லிய பழமொழி புதுக்கினை யன்றே
யகண்டித மெனநீ பகர்ந்தமை தனக்குப்

பந்த மிதுவெனத் தந்தமை கருதில்
வானி னடக்குங் காலினைப் பிடித்துப்
பருவிலங் கிட்ட வொருவனீ யன்றே
பந்தம தகல வுந்து விவேகம்
வான்வளி யெனத்தனிற் றானே தோன்றின்
முன்புள தாயின் மயங்கா திலதெனிற்
பின்புள தாகா திலதுள தெனின்வெளி
மலரது தருமனல் மரக்கணின் றாகித்
தருவது தகுமெனிற் றானே தோன்றா
விறகி னுதித்த கனறகு மாயி
னவித்தையி னுதித்த வித்தை யம்மரத்
துதித்த விவேகம் வித்தையென் றுரைத்த
வெந்தழ லனைய விவேக முதித்த
திந்தன மனைய திறையிலன் றற்றே
யிற்படப் பிரிப்பின் மெய்ப்படு மெவற்றையு
மிதுவன் றிதுவன் றெனக்கழி காலை
யதுவே தானே யாயின தென்றனை
வித்தை முன்ன ரவித்தையு மவித்தைமுன்
வித்தையு நில்லா வியனொளி யிருளென
விருளல வொளிக்கு மொளியல விருட்கு
மொருகா லத்து மொருபய னிலதா
லிரண்டையு நுகரு முரண்டரு விழியென
வித்தையு மவித்தையு முய்த்ததொன் றுளதே
தானே தானு மாறுற்பய னென்
றன்னிற் றன்னைத் தானே காணிற்
கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே
தன்னல மதனைத் தானே நுகரு
மென்னின் முன்னல மெய்தா திருந்ததென்
கட்டி போலெனக் கதறினை யின்பம்வந்
தொட்டிடும் வித்தை யுடையையா யிடினே
தத்துவ மசியென வைத்தமுப் பதத்திற்
கொன்றே பொருளென் றன்றே பகர்வது
நீபுலி யாயினை யென்றுங் குணரி
லாயினை யென்றத தாகுவ மைத்தா
னேயா யினமே லாயா யென்று
லகமே பிரம மாயின தென்றற்
சகமே யறியத் தான்வே றன்றே
யுண்மையிற் சலமில வுடற்சஞ் சலமுறும்
வெண்மதி போல விளங்கிடு மென்றனை.
யசல னாகிச் சஞ்சல சலத்துச்
சலசு மேவின மெனமதி காண

வேண்டும தன்றிக் காண்பவர் பிறரோ
வீண்டுனை தேகமென் செய்த தியம்புக
வுடல்விடக் கடத்துட் படுவெளி போலெனில்
விட்டென் பெறவுடற் பட்டென் படமற்
றிகலற வொருவ னிவ்வகை தெளியி
லகிலமு முத்தி யடைந்திட வேண்டு
மறிந்தோர் முத்தி யடைந்தோ ராயின்
பிறிந்தோ ருயிர்பல பேதத் தன்றே
கன்ம காண்டங் காரண மாக
மன்னும் விவேக மென்னில வித்தைக்
கேது காரண மோதினை யில்லை
யிதற்குங் காரணம் விதித்தல் வேண்டின்றே
யரணியி லுதித்த கனலவை கவர்வென
விரதத் துதித்த விவேக மழித்தல்
வருந்தி யாயினுந் திருந்திய வேத
நீதி யெல்லா நீத்துப் போதமொன்
றறியார் தாமு மவ்வழி நடத்தல்
பொறியோ போத நெறியோ விதுபவ
நீங்கிடு நெறிதரு பாங்கினைப் பழித்த
னன்றி கொன்ற லன்றே யன்றியு
ஞால நீதியு நான்மறை நீதியும்
பாலருன் மத்தர் பசாசரி லெனவு
முறங்கி னேன்கை வெறும்பாக் கெனவுந்
தானே தவிரா தானுற் புரியா
தொழிந்திடி னிரயத் தழுந்துத றிடமே
யுய்த்தோ னன்றி முத்தி யுரைத்தல்
பித்தோ பிரமஞ் செத்தோ பெறுவ
துடலையு நீயே சடமெனச் சாற்றினை
வையினும் வாழ்த்தினுங் கொய்யினுங் கொளுத்தினும்
வணங்கினு முதைப்பினும் பிணங்குதல் செய்யாப்
பிரமத் தன்மை பெறுவ தெக்கால
மிருக்கு நாள்சில வெண்ணினால் கதறித்
தருக்கம் பேசித் தலைபறி யுற்றுக்
கண்டோ ரீந்தப் பிண்டமுண் டலறிப்
பன்னோ யாக்கை தன்னோ யுற்றுடல்
விடவரு மென்று நடுநடு நடுங்கி
விட்டோர் தெய்வத் தொட்டின்றன் றியும்
யானே யெவரு மானே னென்றலி
னவ்வவர் சீறிய வவ்வவர் வாளுட்
செவ்விதி னிரயஞ் சேர்த்துவ ரதனல்
மாயா வாதப் பேயா வுனக்குத்
தேவரி லொருவருண் டாக
மேவரு நரகம் விடுத்தலோ வரிதே.

வேதஞ்சுயம்புவன்றென்றது.

(இ-ள்.) உரைதருபிரம மொன்றெனுமுரைக்கண் வருபிரமாண மறையெனில் - நீ பெத்தமாகவு முத்தியாகவுங்கூறின உன்னுடைய மதத்தின்றுணிபு பிரமமொன்றுமே யுள்ளதென்றுசொல்லுமிடத்து ஒன்றென்றதற்குப் பிரமாணமேதென்னில், இதற்குப்பிரமாணமாகச் சொல்லப்பட்டது வேதமாயிருக்குமென்னில்,—

அருமறை ஒன்றென்றதன்றி இருபொருளுரைத்தனன்றன்று - அரியவேதமானது பிரமமொன்றுமேயுள்ளதென்று சொல்லுவதன்றிச்சீவபரமிரண்டென்று சொல்லுவது நீயிட்டபிரமாணத்துக்கு நன்றாகாது,—

அபேதநாடிய பொருளேல் - வேதமப்படி யிரண்டென்றதும் அபேதசித்தாந்தத்தைச் சொன்னதாயிருக்குமென்னில்,—

பேதமுமபேதமு மோதவேண்டா - நீ யொன்றென்றதற்கிட்டபிரமாணம் இரண்டென்றும், இரண்டல்லவென்றுஞ் சொல்லவேண்டுவதில்லை. பேதமென்றும் அபேதமென்றும் பேதாபேதமென்றும் வேதஞ்சொல்லுவதெல்லாம் அந்தப்பிரம மொன்றையுமாயிருக்குமென்னில்,—

பேதமெனினு மபேதமெனினும் பேதாபேதமெனினு மமையுநின்னையமிலுரையிற் பையவந்துளதாந் திகழ்பிரமாணவிகழ்வும் - வேதமிரண்டென்றாலு மிரண்டல்லவென்றாலு மிரண்டுமா யிரண்டல்லவுமா யிருக்குமென்றாலும் அமைவுபிறந்திருக்கும் உன்னுடைய சந்தேகமற்ற சாத்திரத்திலேவிசாரித்துப் பார்க்குமிடத் துன்மதத்திலே விளங்கப்பட்ட பிரமாண விரோதமுண்டாகா நிற்கும்,—

உண்டன்றிப்பெத்தம்பேதமுத்தி அபேதமேல் - அப்படிப் பிரமாண விரோதமுண்டாகாது காணும், அந்தவேதம் பெத்தத்திற் பேதமென்றும் முத்தியிலபேதமென்றுஞ் சொல்லுமென்னில்,—

அநவத்திதமா மவையிருதிறனும்-சாத்திரம் பெத்தத்திற் பேதமென்றும் முத்தியிலபேதமென்றுஞ் சொன்ன இரண்டுவகையும் விசாரித்துப் பார்க்குமிடத் துன்னுடைய சாத்திரமறுதியில்லாததாம். ஆகையாற் சாத்திரவிரோத முண்டென்பது தப்பாது,—

இனி அப்பழமொழி இரண்டலவொன்றே - நானநவத்திதமாயிருக்குமென்றதுகொண்டு நீ யிப்பொழுதந்தப் பழையமொழியாகிய வேதமிரண்டென்று சொல்லாது ஒன்றென்று சொல்லுமென்னில்,—

அன்றியும்பெத்தம்பேதத்தறைதலுமொன்றிய முத்தியபேதத்துரைத்தலும்பழுதாமித்திறம் பதையாதாய்க - சாத்திரமுன்னே இரண்டென்று சொல்லி இப்போதொன்றென்று சொன்ன தோஷமன்றியும் பெத்ததிசையிற் சீவபரமிரண்டாயிருக்குமென்றதும் முத்திதிசையிற் சீவபரமிரண்டுமொன்றாயிருக்குமென்றதும் குற்றத்தையுடைத்தாம் இப்படிநான்சொன்னவகையைப் பதறாமலாய்ந்துபார்ப்பாயாக,—

மற்றெழுதாமறையெனுமிப்பிரமாணமாருரை-அஃதொழிந்து எழுதப்படாதவேதமாகிய இந்தப்பிரமாண மாராலேசொல்லப்பட்டது,—

தானேயாயினதேல் - அஃதொருவராற்சொல்லப்பட்டதன்று சுயம்புவாயுள்ள தொன்றென்னில்,—

உனதேக மனேகமுறும் - நீ பிரமமொன்றென்றதுபோய்ப்பிரமமொருமுதலும் வேதமொருமுதலுமாக உன்னுடைய ஏகமனேகமாய்ப் பொருந்தாநிற்கும் இதன்றியும்,—

இயம்பாமற் சத்தரூபந் தகாதெனில் - ஒருவனுச்சரியாமற் சத்தத்தினுடையசொரூபந் தானாகத்தோன்றுதென்னில்,—

வானத்தொத்தொலி யுறமுமெனில் - ஆகாயத்திலே ஒருவருச்சரியாமற் சத்தமானதுண்டானாற்போல வேதமுமொருவருச்சரியாமல் தானேயுண்டாகாநிற்குமென்னில்,—

வறிதுதியாது - ஆகாயத்திலே வாயுவேதுவாகக் கொண்டு சத்தமுண்டாவதொழிந்து சும்மா சத்தந்தோன்றாது,—

அன்றியும் பதமும் பாழியு மனைத்துமின்றியோ ரொலியாயெழுந்திடு மதனுக் கறிவிலது-அன்றியும் பதமென்றும் கிரமமென்றும் பாழியென்றும் இன்னும் பலசத்தங்களு மத்தங்களுமாயிருக்கும் வேதமானது, இப்படி ஆகாயத்திற்சத்தமொரு பிரகாரமாயிருக்கும் அச்சத்தத்துக் கறிவென்பதொன்றில்லை,இவ்வேத மறிவாயிருப்பதொன்றாகையால் அவ்வாகாயத்தினுண்டாகியசத்தம்போலு மிந்தவேதமென்று சொல்லலாகாது. வேதந்தானேயுண்டாகாதென்றால் அவ்வேதத்தைச்சொன்னார்சிலர்வேண்டும்இதற்கு,—

உருவிலதறியா தறையாது - இந்தச்சரீரத்தாலே சொல்லப்பட்டது வேதமென்னில், இது சுத்தசடமாயிருந்தபடியாலே ஒருசத்தத்தையு மத்தத்தையுஞ் சொல்லமாட்டாது,—

அவ்வகையன்றியு மகண்டிதமதுவிதுவென்றது குறிப்பதெவ்வகை- அந்தச்சரீரத்தின் பகுதியுமன்றியும் பிரமத்தினுடையதன்மையை விசாரிக்கில் அதுகண்டிக்கப்படாததாயகண்டிதமா யிருந்தபடியாலே சத்தத்தையு மத்தத்தையு மதுவிதுவென்றுசுட்டிச்சொல்லும்பகுதி யெப்படி,—

யாவுமொன்றெனுமுறையுமொழிந்தனையன்றே - ஆகையால் எல்லாமொன்றேயென்று சொன்னசொல்லையும் விட்டுவிட்டாயாகும்,—

அருமறை பிரமவுரையெனில் - அரியவேதமானதந்தப்பிரமத்தாலே உச்சரிக்கப்பட்டதென்னில்,—

அதற்குத்தந்ததாலு முதனவில்பொறியிலது - அந்தப்பிரமமகண்டிதமாகையால் பல் நாக்கு முதலாகச் சொல்லப்பட்ட கருவிகளில்லாதபடியினலே அந்தப்பிரமத்தாற் சொல்லப்படாது,—

என்னிலோருடற்கண் மன்னியவலகைபறைந்தற்று - அந்தப்பிரமத்தாலே வேதஞ்சொல்லப்படாதென்னில், பேயானது ஒருவன் சரீரத்திலே நிலைபெற்றுநின்று வருங்காலநிகழ்ச்சிகள் சொன்னாற்போன்று அந்தப்பிரமமுமொருவனுடலைச் சார்ந்து நின்று வேதத்தைச்சொல்லாநிற்கும்,—

என்பதார்சொல தமலத்திறம் பெற்றின்றே - அப்படியோருடலைச் சார்ந்துநின்று சொல்லுமென்றது ஓர்தேவனைச்சார்ந்தோ ஓரிருடியைச் சார்ந்தோ யாரைச்சார்ந்துநின்று வேதஞ் சொல்லப்பட்டது. அப்படி யொருவனைச்சார்ந்துநின்று சொன்னதாமாகில் அதுபசுவாக்கியமாகையால் அந்தச்சொல்லுக்கு நின்மலத்துவ முண்டாகாது. பின்னையெப்படிப் பிர பஞ்சமெல்லாஞ் சுயம்புவென்று சொல்லுவதென்னில்,—

செய்தோர்பெயராற் சுயம்புவென் றுலகியம்புமென்றறியினி- நிட்கள மாய்நின்ற கர்த்தாசகளீகரித்தவனாலே பிறந்தந்த வேதமுச்சரிக்கப்படுகை யினாலே இதைச்சொன்னவன் சுயம்புவாகையாலிந்தவேதத்தையுஞ்சுயம்பு வென்றுலகஞ்சொல்லாநிற்கும்.இஃதிப்படியிருக்குமென்றுமேலறிவாயாக,

தற்கிட்டலைவனைத் தான்றொழுதுரைக்குஞ் சொற்கேல் - வேதமும் முடைய கர்த்தாசொன்னதாகில் அவன் றனக்குக்கீழாயுள்ள தேவதை களைத் தான்நமஸ்கரித்துச் சொல்லவேண்டுவானேனென்னில்,—

புரவலனேவ லமைச்சரை யடிகண் மற்றெங்குடிமுழுதாண்மினென் றேத்தியிறைஞ்சிக் காப்பர்களென்றுங் கீச னுஞ்செயப் பேசினன் - அரச னுடைய குடியாயுள்ளவர்களெல்லாரும் அந்தவரசனைக்கண்டு தங்கள் மேற்கருமஞ்சொல்லிக்கொள்ளமாட்டார்கள். வாசற்காரியம்பார்க்கு மந் திரிமுதலானபேர்களைக்கண்டு அடியோங்கள் தேவரீருக்குப் பழையவடி மையாக விருக்கவென்று வணங்கினவிடத் தவர்களுக்குண்டாகிய மேற் கரும மந்தக்காரியம்பார்ப்பவர்களாலே தீர்க்கப்பட்டாற்போலக் கர்த்தாவு மெல்லாரும் பக்குவர்களல்லாததுகொண்டே அபக்குவர்களாயுள்ளவர் கள் வழிபாடுசெய்யத்தக்கதாக அந்தத்தேவதைகளையுஞ் சொன்னதா யிருக்கும்,—

அன்றி இணையவைபிறரிற் கனவினுமிலனே - இஃதொழிந்து பிற தெய்வங்களை அவனமஸ்கரித்துச் சொன்னானென்ப தவனுக்குச் சொப் பனத்தினுமுண்டாகாது. உம்முடையகர்த்தா தன்னைத்தான் தோத்திரம் பண்ணுவானேனென்னில்,—

தன்னைத்துதிக்குஞ் சொன்னலந்தானு மத்துறையறிவாணர்க் கறைவ தொன்று-கர்த்தாதன்னைத்தான்றோத்திரம்பண்ணுவதுபக்குவான்மாக்களா யிருப்பவர்கள்தன்னைவழிபாடுசெய்யத்தக்கதாகச் சொன்னதாயிருக்கும்,—

அன்றியுந் தனக்குத்தானே தன்னலம்பகரா தசத்துக்குரையா தார்க் குரை யுயிர்க்கெனில் - இதன்றியுங் கர்த்தா தன்னுடைய பெருமையைச் சொல்லுமிடத்து வேறே யொருவர் கேட்கச் சொல்லுவதொழிந்து தனக் குத்தான் தன்னுடைய பெருமையைச் சொல்லிக்கொள்ளாது. பின்னைச் சரீரம் சடமானபடியினாலே அந்தச் சரீரத்தைநோக்கிச் சொல்லாது. பின்னை அவனுடைய பெருமையைச் சொன்ன தாரைநோக்கி? அது பிறரைநோக்கிச் சொன்னானென்னில்,—

உரைபிரமாண மிறைபிரமேய நீபிரமாதா நின்பிரமிதியென நால் வகையுளதுன தேகநன்றன்றே-சாத்திரமாகிய பிரமாணம், கர்த்தாவாகிய

பிரமேயம், ஆன்மாவாகிய பிரமாதா, ஆன்மாவினுடைய அறிவாகிய பிரமிதி யென்று நால்வகையாகக்காணப்பட்டது ஆகையாலே நீயொன்றென்றது நன்றாயிருந்தது,—

நற்பிரமாண நிற்பதொன்றன்றால் - ஆகையால் நன்றாக இதற்குப் பிரமாணமென்று நாட்டப்பட்ட வேதமு மொன்றென்றுசொல்லி நிலை நிற்கப்பட்டதில்லை,—

அப்பிரமேயமு மதனியல்பன்றே - இந்தப் பிரமாணத்தாலே அளவிடப்பட்டதாய் மேன்மறுக்கப்படும் பிரமேயமும் அந்தச்சாத்திரத்தினுடைய வியல்பாகப்படும்,—

பிரமம் பிரமேயமன்றென்றது.

கன்னற்சுவையி லந்நியமிலதா வினிமைதோன்றாத் தன்மைத்தென்றனை-கரும்பிலுண்டாகிய விரதந் தன்னில் வேறுபாடில்லாதது கொண்டு தன்னுடையவிரதந் தனக்குத்தோன்றாத் தன்மைபோலும் பிரமமுந் தன்னுடைய வின்பத்தைத்தானறியாதென்றும்புன்மதத்திலேசொன்னாய்,—

அறிவிற்குவமை யசத்தாங்கட்டி பிறிவித்தொட்டினும் பேறுதுறாதே - அறிவாயுள்ளதற்கு உவமைசொல்லுமிடத்து அறிவாயுள்ளதைச் சொல்லாமல் சடமாயுள்ளகரும்புமிரதமும்போலுமென்றுசொன்னாய், அந்தத்தோஷமன்றியுங்கரும்பிலுண்டாகியகட்டியைத்தன்னிலேபிரித்துவைத்து மேலோரவதரத்திலே கூடினவிடத்து இத்தனைநாளிலந்தவிரதத்தையிழந்தோமே இப்பொழுதிந்தவிரதத்தைப்பெற்றோமேயென்னுந் தன்மை கட்டிக்குண்டாகாதாகையால் அதுபிரமத்துக்குவமையன்று இதன்றியும்,-

தற்பரவிரிவு பொற்பணிதகுமெனில் - பரப்பிரமம் தேகாதிபிரபஞ்சமாகப் பலவாக விரிந்ததன்மை பொன்னானது பலபணியாயிருந்ததன்மை போலுமென்று நீசொல்லில்,—

செய்வோரின்றிச் செய்வினையின்மையிற் பொன்பணியாகை தன்பணியன்றே - இந்தப் பிரபஞ்சத்திற் செய்வோரொருவரையன்றிச் செய் தொழிலானது காணப்படாமைபோலப் பொன்னானதும் ஒருவன்பண்ணப்பலபணியாக இருந்ததொழிந்துதானாகப்பலபணியாகாது, நீசொன்ன பிரமம் பிரபஞ்சமாக விரிந்ததும் வேறே யொருவனாலே செய்யப்பட்டதாகவேண்டும். அப்படியன்றுகாணும், எல்லாவற்றையுஞ்செய்ததுபிரமந் தானே யென்னில்,—

செய்வோர்போலாச் செயப்படுப்பொருள்முதல் - இந்த வுலகத்திற் செய்பவர்கள் போலேயிரா திவர்களாற் செய்யப்படும் பொருள்களுக்கு முதலாயுள்ள உபாதானமும் என்போலவென்னில், குலாலனைப் போலேயிராது சால் குடம் சட்டி பானைக்குபாதானமாகியமண்ணும், ஆகையாலிந்தப் பிரமத்தையின்றிப் பிரபஞ்சத்துக்குபாதானம் வேறேயொன்றுண்டாகவேண்டும். அப்படியோருபாதானமுண்டாகில் அதுவேயமையாதோ இந்தப்பிரமமேனென்னில்,—

செய்வோரேயாச் செய்யவும்படுமே-அந்தவுபாதானம் சடமாயிருந்த படியாலே அதுதானகப் பிரபஞ்சமாகாது, அந்த உபாதானத்தைக் கொண்டு செய்கைக்குக் கர்த்தாவேண்டும். அதுவன்றிப் பிரபஞ்சத்தில் யாதொரு பொருளுஞ் செய்வோரொருவனையில்லாமல் அந்தத்தொழில் கள்தான் செய்யப்பட்டுவருவது முண்டாமோ,—

சுத்திவெள்ளியிற் றேன்றிற்றுயினுஞ் சத்துலகேதுந்தாரா தருமெனில் - சுத்தியென்னுஞ் சிப்பியானது வெள்ளியாகத் தோன்றினற்போற் கண்டவர்களுக்கு அசத்தியமாயுள்ள பிரபஞ்சமுஞ் சத்தியமாகத் தோன்றிற்றுயினும் அறிவாயுள்ளபிரமம் சடமாயுள்ள பிரபஞ்சத்தை ஒருபிரகாரத்தாலுமுண்டாக்காது. உண்டாக்கு மென்னில்,—

உலக மித்தையென் றேராதுரைத்தனே - நீமுன்னே இந்தவுலகத்தைப் பிராந்தியென்றுசொன்னது விசாரியாமற்சொன்னயாகவேண்டும்,—

நிலவு நின்மரபு நினைந்திலையாங்கொல் - இப்படிமலைவாற் பொருந்தப்பட்ட வுன்னுடையவத்தத்தினது கிரமத்தை மறந்தாயாகவேண்டும்,—

விவகாரத்தில் வேண்டுதுமுலகம் பரமார்த்தத்திற் பகராமென்னில் - இந்தப்பிரம முபாதிகள் வசத்தினலே தன்னைச் சீவனென்று பிரமாணம் பண்ணிக்கொண்டு நிற்கும் இந்தவிவகாரதிசைக்குலகமென்று கொள்ளப்படும். அஃதொழிந்து நான்பிரமமென்றறிந்த பரமார்த்ததிசையிலே எல்லாம் பொய்பாயிருந்த படியாலே அவ்விடத்துக்குலகமென்று சொல்லப்பட்டிராதென்னில்,—

பரத்துளதேலிவையும் பரமார்த்தம்-இந்தவுலகம் பரமார்த்தமாயுள்ள பிரமத்திலே நின்று முண்டானதாயின் அசத்தியமாயுள்ள பிரபஞ்சமுஞ் சத்தியமாயுள்ள பரமார்த்தமாகவேணுடும்,—

பரத்திலதேல் - உலகம் பொய்யாயிருந்தபடியாலே இந்தப்பரமார்த்தத்துக்குப் பணியல்லவென்னில்,—

ஒழி முன்பகர்மாற்றம் - முந்தப் பிரமத்தினின்றுந் தோன்றியதென்று சொன்னவார்த்தையை நீயொழித்துவிடுவாயாக,—

அதன்முத லிதுவெனவுதவுக - இந்தவுலகம் பிரமத்திலே தோன்றினதல்லவாயின் அது தோன்றின உபாதான முனக்குத்தெரியுமாயின் இன்னதென்று சொல்லுவாயாக,—

அன்றியும் விவகரிக்குங்காற் றிகழ்பரமார்த்தநிலையது - இந்தத் தோல்வியன்றியும் இன்னமுஞ் சொல்லுமிடத்து நின்மலமா யெல்லாவுபாதிகளையுங் கழன்ற பரமார்த்த நிலையாயிருப்பதொன்றந்தப்பரப்பிரமம்,—

தெரியினிது நீ - அந்தப் பிரமந்தான்காணு நானென்னில், அது அறிவாயிருப்பது விசாரித்துப் பார்க்குமிடத்து மலமாயிருக்கும் இந்த மாயாவுபாதிகளோடுஞ் சம்பந்தியாயிருப்பா னெருவனீயாகையாலிந்தச் சீவனுந் தனித்தொருமுதலென்னில்,—

நீயேல் - அந்தப்பிரமந்தான்காணு நானென்னில், அஃதறிவாயிருப்பது இஃதறியாமலிருப்பானேனென்னில்,—

தெரியாது - இது உபாதிவசத்தினாலே அறியாமலிருக்கும்,—

ஆயினஃதுந்தெரியாது - நீயுமந்தப் பிரமமுமொருமுதலாயிருக்கையினாலே இஃதுபாதி வசத்தினாலே அறியாமலிருக்குமாயின் அந்தப்பிரமமுமறியாதாக வேண்டும்,—

உனாயாரளவையு மொழிந்தனையன்றே - உன்னுடைய வத்தத்தை அளவிட்டுச்சொல்லிவைக்கும் பிரமாணத்தையும் விட்டுவிட்டாய். அஃதேனென்னில், அஃதொன்றைச் சொல்ல நீயொன்றைச் சொல்லுகையால். அந்தச் சாத்திரத்தின்படிகாணு நான்சொன்னதென்னில்,—

அளவை காண் டல்கருதலுரையெனவுளது - பிரமாணமாவது பிரத்தியக்ஷமென்று மநுமானமென்று மாகமமென்று மூன்றுவகைப்படும்,—

அவைமூன்றின் மொழிவழி நுழையினின் பிரமேயமென்பதெனுங்கொல் - அங்ஙனஞ்சொல்லப்பட்ட பிரத்தியக்ஷத்தின் வழியாலு மநுமானத்தின் வழியாலு மாகமத்தின் வழியாலு நுழைந்தொன்றையறிந்துகொண்டு வருமாயின் வாக்குமனத்துக்கு மெட்டாத உன்னுடைய பிரமேயமென்று சொல்லப்பட்ட தெவ்வாறு முடியும்,—

சித்தினிடத்தசித்துத்தோன்றதென்றது.

பொற்பிதிர்பிதிர்ந்தும் பொன்னேயாய்நின்றற்பரமசித்தைத் தருமாறென் னெனில் - பொன்னும்பணியும் போலப்பிரமமும் பிர்பஞ்சமுமென்றாய், பலபணியானதும் பொற்கட்டியானதும் மாற்றுநிறமு மொருபடித்தாகக் கண்டோம், பின்பு பொன்னேடேங் கூடப்பொன்னாய் நின்றதுங்கண்டோம், ஆகையாலுன்னுடைய சத்தாயுள்ள பிரமம் அந்த அசத்தாயுள்ள பிரபஞ்சத்தைத்தந்த பிரகார மெப்படியென்று நான்முன்னே யுன்மதத்திலே கேட்டபொழுது,—

சிலம்பிநூ றருநலம் போற்றென்று மென்றனை-சித்தாயுள்ள சிலம்பி சடமாயுள்ள நூலைத்தந்த தன்மைபோலுஞ் சித்தாயுள்ள பிரமத்திலே சடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றினதென்று சொன்னாய்,—

அது வதன்றொழில் - அந்தநூலை அநவரதமுந் தோற்றுவித்துக்கொண்டு நிற்பதந்தச் சிலந்திக்குள்ளதொழில், பிரபஞ்சம் பிரமத்திலே நின்றோரவதரத்திலே தோன்றுவதொழிந் தநவரதமுந்தோன்றிக்கொண்டு நில்லாது,—

அன்றியுமொன்றத னியல்புலகோ ரியல்பன்றெனை - அஃதன்றியுஞ் சிலந்தியினிடத்திலே தோன்றின நூலொரு தன்மையாகக்காணப்பட்டது, பிரமத்திலே தோன்றின பிரபஞ்சமொரு தன்மையாகக் காணப்பட்டதில்லையென்று நான் முன்னே சொன்னபொழுது,—

பலமிலை பழம்பூ பாதவந்தரு நீர்திரை நுரை திவலை சிலதரு மிவை போற் றுனே பலவாமென நீசாற்றினை-காயையு மிலையையும் பழத்தையும் பூவையு மாமரமானது தந்ததன்மைபோலவும் திரையையு நுரையுந் திவலை யையுங் குமிழியினையு நீரானது தந்ததன்மைபோலவும் பிரமந்தானே பலவிதமாயுள்ள பிரபஞ்சமாயிருக்குமென்றுன் மதத்திலே சொன்னுய்,—

சத்தசத்தாகவுஞ்சத்தினிலசத்தின்கொத்துளதாகவுங்கூறினரிலரால்-அறிவாயுள்ள தறியாமையாயிருக்குமென்றும் அறிவினிடத்திலே அறியா மையினது கூட்டங்கடோன்று மென்று நீசொன்ன இந்தமலைவு புத்தர் சமணர் முதலானோருஞ் சொல்லார்கள். பின்பிந்தப் பிரபஞ்சந் தோன் றினபடியெப்படியென்னில்,—

வித்திலை கனிநனி விழுதாருநெறி சத்தலதொன்று தான்தரவேண் டும்-சூக்குமமாயுள்ள வித்தானது இலையையும் பழத்தையு மிகுதியாயுள்ள விழுதையு முடைய தூலமாகிய ஆலமரத்தையுந்தந்த தன்மைபோலத் தூலமாய்ப் பலவாயிருக்கும் பிரபஞ்சத்தையுஞ்சூக்குமமாய் அசத்தாயிருப் பதோருபாதானந் தந்ததாகவேண்டும். அப்படியன்றுகாணும், நெல்லி லே நின்றும் வைக்கோலும் பதருந்தோன்றினாற்போலச் சித்தினின்றுஞ் சடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றுமென்னில்,—

நெற்பதர் பலாலத்திற் குபாதானமென்-நெல்லுஞ் சூக்குமமாய்ச்சட மாயிருக்கையால் அதுவும் வைக்கோலுக்கும் பதருக்கு முபாதானமென் றறிவாயாக,—

காரணமின்றிக் காரியம்பிறவா - ஆகையாற்றனதாகவுடைய் கார ணத்தினின்றுங் காரியந்தோன்றுது. தோன்றுமென்பையாகில்,—

பாரிடை யொருபடம் பண்ணவும்படுமே - பருத்திகாரணமாகப் புட வையுண்டானதொழிந்து மண்காரணமாகப் புடவை பண்ணப்படுமோ? ஆகையாற்சடங்காரணமாகசடமுண்டாவதொழிந்து சித்துக்காரணமாகச் சடமுண்டாகாது. இப்படியிருக்கையிலே நீ,—

அந்தமில்பிரம மவித்தை காரணமெனத் தந்தனை - சடமாயழிந்து போவதாயிருக்கும் பிரமங்காரணமென்று சொன்னுய்,—

அவித்தை தானெய்துறுதல் - சித்தாயுள்ள பிரமத்திலே சடமாயுள்ள பிரபஞ்சந் தோன்றுவானேன்,—

தன்னியல்பென்னின் - இந்தப்பிரபஞ்சந்தோன்றுவது அந்தப்பிரமத் துக்கியல்பாயிருப்ப தொன்றென்று நீசொல்லில்,—

வன்னிதன்வெம்மையிற் சத்தினதியல்புஞ் சத்தே - அக்கினிக்கு வெம்மையியல்பானாற்போல நீ சித்துக்கியல்பென்று சொன்ன பிரபஞ்ச முஞ்சித்தேயாகவேண்டும்,—

அசத்தெனில் - பிரபஞ்சத்தைச் சடமென்னில்,—

வைத்ததனியல்பெனும் வழக்கொழி - சத்தாகவைக்கப்பட்ட பிரமத்தினுடையவியல்பிந்தப்பிரபஞ்சமென்றுசொன்னவழக்கைவிடுவாயாக,—

அன்றியுமிருள்பொதி விளக்கெனவரும்-இந்தக் குற்றமன்றியுஞ் சித்தாயுள்ள பிரமத்துக்குச்சடமாயுள்ள பிரபஞ்சமியல்பென்று நீ சொல்வது பிரகாசமாயுள்ள விளக்கு இருளைப் பொதிந்துகொண்டு நின்றதென்பதை யொக்கும். அப்படியன்று காணும்,—

மருவிளக்கிற்கருமைபயந்த பெருகொளிதருமெனில் - பெரிய விளக்கினிடத்துண்டாகிய மிக்க பிரகாசமானது கறுத்த மையைத் தந்ததன்மையை யொக்கும், சித்தாயுள்ள பிரமம் சடமாயுள்ள பிரபஞ்சத்தைத் தந்ததென்று நீ சொல்லில்,—

தன்னியல்பன்றத னுபாதிவசத்தான் மன்னியது - அங்ஙனம் விளக்கினிடத்திலே கறுத்தமையானது தோன்றினது விளக்கினுடைய இயல்பன்றென்றறி, திரியென்றும் நெய்யென்றுஞ் சொல்லப்பட்ட உபாதிகள் வசத்தினாலே மையானது நிலைபெற்றதென்றுகொள்,—

அன்றி மைத்தான்றனின்மாயாது - அன்றியும் பிரமத்திற் றோன்றிய பிரபஞ்சமீளவும் பிரமத்திலே ஒடுங்காநிற்கும், விளக்கிற்றோன்றிய மையானது மீளவுமந்த விளக்கிலே சென்றொடுங்காது. அன்றியும்,—

ஒன்றுனசுத்த னன்றுமன்றே-இந்தப் பிரமமென்று சொல்லப்பட்டவொப்பில்லாதவன்தான்சுத்தனொழிந்தசுத்தனாயிருப்பானொருவனல்லனே அப்படியிருக்கஇந்தமாயாவுபாதிகளோடுங்கூடியிருக்க வேண்டுவானேன்,-

ஆங்கொருகாலத் தோங்கியதாயின் - அந்தப் பிரமத்தினிடத்தில் ஓரவதரத்திலே இந்தவுபாதிகள் வந்துகூடினதாயின்,—

அந்தமிலவித்தை வந்தணைவதற்கோரேதுவேண்டும - முடிவில்லாத மாயாவுபாதிகள் பிரமத்தினிடத்தில்வந்துகூடினதற்கு முன்னேயொரு காரணமுண்டாகவேண்டும்,—

புயலியல்பெனின் - நின்மலமாயிருக்கும் ஆகாயத்தை மேகமானது வந்து மறைத்ததன்மைபோலச் சுத்தமாயுள்ள பிரமத்தை மாயாவுபாதிகளியல்பாகவந்து கூடிற்றொழிந் திதற்கொருகாரணம் வேண்டுவதில்லையென்னில்,—

வீடோதவேண்டாம் - இந்தவுபாதிகளியல்பாகவந்து பொருந்தின் முத்தியென்று சொல்லவேண்டுவதில்லை. அஃதேனென்னில்,—

ஒழிந்தோரினுமுறும் - எல்லாவுபாதிகளையு நீங்கிய பழைய சுத்தத்தைக் கூடினவர்களிடத்தும் இந்தவுபாதிகளியல்பாக வந்துபொருந்தும். அப்படியன்றுகாணும்,—

களங்கமதுறவுறு மவித்தை தற்கவித்தல் விளங்கியபிரம விளையாட்டாயின் - பிரமத்துக்கு மயக்கமுண்டாகத்தக்கதாகப் பொருந்தப்பட்ட மாயாசரீரங்களிந்தப்பிரமத்தைப்பொருந்திக்கொண்டதுமிக்கபிரமத்துக்கு விளையாட்டாயிருப்ப தொன்றாயின்,—

அவித்தையென்பதொன் றந்நியந்தன்னிலுதிக்குமென்றமுன்னுரையு மறந்தனை - விளையாடுபவர்களுக்கு விளையாடப்பட்ட பொருள் வேறு ஞற்போற் பிரமத்தினுடைய விளையாட்டாகிய மாயாசரீரமும் வேறு யிருப்பதொன்றும்; பிரமத்தினிடத்தில் உபாதிகடோன்றிப் பிரமத்தை மறைக்குமென்று நீமுன்சொன்னசொல்லையு மறந்தாயாகவேண்டும்,—

நுண்ணூற்குடம்பை நூந்துழிபோலுட்படு நெறியதனுல் விடுநெறியிலதாற் றலைமையு மறிவு மிலதென் - உலட்டுப்புழுவானதுதன்னிடத்தினின்றுந் தோன்றிய நுண்ணியநூலால் தனக்குக் கூடாகப்பண்ணித் தானதற்குட் புகுந்து பின்னைத் தானகப்புறப்படமாட்டாமல் இறந்த தன்மைபோல் அப்பிரமமு மாயாசரீரத்துக்குள் விளையாட்டாகவந்து புகுந்து பின்னைத் தானகப் புறப்படமாட்டாம னிற்கையால் அப்பிரமத்துக்குச் சர்வமுதன்மையுஞ் சர்வஞ்ஞத்துவமு மில்லையென்றுசொல்,—

அவித்தையை விடுத்தெடுத்தாணரும் வேற்றே ரன்றே - இதுபாசபந்தியாயிருக்கையால் இம்மாயாசரீரத்தைத் தானக விடுவித்துக்கொள்ள மாட்டாமல் நின்மலமா யிருப்பதொருகுருமுதல் இம்மாயாசரீரத்தை நீக்கிப் பாவக்குழியினின்றெடுத்துத் தனக்கடிமையாக ஆண்டுகொள்கையாலச்சரீரத்தோடு கூடிநிற்பது பிரமமாகாது, அப்படியன்றுகாணும்,—

ஒளிகொ டாமிரங் குளிகைபெற்றுங் கதனவித்தையை வித்தை தவிர்க்குமென் றுரைக்கின்-பிரகாசத்தோடுங் கூடியிருக்குஞ்செம்பானது இரதகுளிகையோடுங் கூடினவிடத்துக் காளிதநீங்கிப் பொன்னுந்தன்மை போல் அப்பிரமத்துக்குண்டாகிய சரீரசம்பந்தத்தையு மதனிடத்தில் தோன்றினவிவேகஞான நீக்க அப்பிரமஞ்சுத்தமாமென்று நீசொல்லில்,—

நித்தனறிவன் சுத்தனென்றுரைத்த வித்தகமென்னீ - அப்படிஅசுத்தமாயிருக்கு முதலை நீ முன் நித்தியனென்றுஞ் சர்வஞ்ஞனென்று நின்மலனென்றுஞ்சொன்ன சாமர்த்திய மென்னதான்,—

வித்தையும் வேறுன்று - நீ விவேகமென்று சொல்வது இவ்வவித்தையோடுங்கூடிக்கொண்டுநிற்கு முதலன்று அதைவேறே முதலென்று சொல். இவ்விவேகந்தான் காணும் அப்பிரமமென்று நீசொல்வில்,—

எம்மனோரி லொருவ னின்னிறை - நீ கர்த்தாவென்றுசொல்லுமுதல் பாசபந்திகளாயுள்ள வெங்களில் ஒருவனுகவேண்டும்,—

அம்ம - நான்சொல்லுஞ்சொல்லைப் புத்திபண்ணிக்கேள்,—

சைவந்தவனீயன்றே - யாதொருவனைப்பொல்லாதவனென்றுசொல்லப்பட்டது அப்படிச்சொல்லப்பட்டவனீயாகவேண்டும். இதன்றியும்,—

பிரமாதாமறுப்பு.

பன்மணி பசுநற்பாத்திரமெனவு நன்னூல் பானீர் நற்கதிரெனவுமுடலையு முணர்வையு முவமித்தனையேல் - இரத்தினங்கள் பலவாயிருக்கினும் அதிற்கோக்கப்பட்டநூற்சரடொருதன்மையா யிருந்ததுபோலவும், பசுக்கள் பலவாயிருந்த தாயினும் அவற்றிலுண்டான பாலொருதன்மை யாயிருந்ததுபோலவும், பாண்டங்கள் பலவாயிருந்ததாமாயினும் அவற்றிற்

பிரதிபிம்பஞ்செய்யும் ஆதித்த னொருதன்மையா யிருந்ததுபோலவும், கூவலாழி குளஞ் சிறுகுழி கால் பலவாயிருக்கினும் அவற்றிலுண்டாகிய தண்ணீரொருதன்மையா யிருந்ததுபோலவுமென்று யோனிபேதங்களா யிருந்துள்ள உடல்களுக்கும் அவையிற்றிற்கூடிநிற்கும் பிரமத்துக்கு முவமையாகச்சொன்னாய். அப்படியாகில்,—

தடமணி சரடொடு தாங்கூடலவே-பிரகாசத்தான் மிகுந்திருக்கு மணிகளுஞ் சரடுந் தாமாகக் கூடினதில்லை, அவையிற்கை வேறொருவன் கோக்கக் கோப்புண்டு நின்ற தன்மைபோல் உன்னுடைய பிரமத்தையு மிவ்வுடலையுங் கூட்டினவனொருவனுண்டாகவேண்டும். அதன்றியும்,—

உணர்வுணர்வொழியி னுலகுணர்வுறினின் பாலும் பசுவுஞ் சாலும் - உன்னுடைய பிரமமான தறியாததாயுங் கூடிநிற்கும் தேகாதி பிரபஞ்ச மறிவேயா யிருந்ததாயின் நீபாலையும் பசுவையு முவமையாகச் சொன்ன தற்கொக்கும். அதன்றியும்,—

சாலக்கலம்பலவன்றிக் சலம்பலவிலதெனக் காணுநரின்றி வீணின் விளம்பிலை - மிகவும் பாத்திரங்களிற் பின்னமொழிந் தாதித்தனிற் பின்ன மின்றென்றுங் கூவலாழி குளஞ் சிறுகுழி கால்தங்களிற் பின்னமொழிந்து சலத்திற் பின்னமின்றென்றுங் கண்டுசொல்வார் சிலரையின்றிச் சும்மா மிகவுஞ் சிலமொழிகளைநீ சொன்னது திருஷ்டாந்தவிரோதமாகையால் அஃதத்தமாகாது,—

ஆடியுணிழல்போற் கூடுதல் கூறில் - கண்ணாடிக்குணிழல்தோய்வற நின்றாற்போற் சரீரத்திற் பிரமந்தோய்வற நிற்குமென்று நீசொன்ன வத்தத்தை நான்சொல்லுமிடத்து,—

தன்னிழல்கொண்டு தர்ப்பணஞ்சலிக்கின் மன்னிழல் கொண்டுடல் வந்தகன்றிடுமே - தன்னிடத்தில் நிற்கும் பிரதிபிம்பம் பிரதானமாகக் கொண்டு கண்ணாடியானது சலித்ததாயின் பிரமத்தினுடைய பிரதிபிம்பம் பிரதானமாகக்கொண்டு இவ்வுடல் கூடியும்பிரிந்தும்நிற்கும், அவையிற்றுக் கில்லாதபடியினால் இஃதத்தமன்று,—

மன்னயக் காந்தமென வுடல்பிரமசந்நிதியளவிற் சலித்திடுமாயின் - நிலைபெற்றுவருகின்ற இரும்பானது காந்தம் விகாரமறநிற்க அதன் சந்நிதிமாத்திரத்தில் விகாரப்பட்ட தன்மைபோற் பரப்பிரமமும்விகாரமறநிற்க அதன் சந்நிதிமாத்திரத்தில் உடல் போக்குவரத்தைச்செய்யா நிற்குமாயின்,—

அகண்டிதன் சந்நிதியலதிலதெவையு நடந்திடவேண்டுங் கிடந்திடப் பெறாவே - பரப்பிரமமென்று சொல்வது கண்டிதமல்லாமல் அகண்டிதமாகையால் அதன்சந்நிதியல்லாத விடமோரிடமுமில்லை ஆகையாற் கடபடாதியா யுள்ளனவெல்லாம் போக்குவரத்தைச் செய்யவேண்டும். அதன்றியும் உடலானது சேட்டித்துங் கடபடாதிகள் சேட்டையின்றிக் கிடப்பதுஞ் சந்நிதியில் எல்லாங் காரியப்படு மென்பதற்குப்பெறாது. இதன்றியும்,—

காந்தத்திரும்பு காட்டுநர்ப்பெறி லயஞ்சேர்ந்திடும் - காந்தமு மிரும்புங்கூடிக்கிடந்த தாயினும் அவைதாமாகக் காரியப்படமாட்டாது, அவையிற்றை முகமொக்கக் காட்டுவார் சிலரைப் பெற்றகாலத் திரும்பானது

காந்தத்தைச்சென்று பொருந்தும். ஆகையாலுன்னுடைய பிரமத்தையு முடலையுங்கூட்டிக் காரியப்படுத்துவது வேறேயொரு முதலுண்டென்று கொள்வாயாக. இதன்றியும்,—

நீக்குஞ்செய லதற்கிலதே - காந்தம் இரும்பைக் கூட்டிக்கொள்வ தொழிந்து நீக்கிக்கொள்ளுந்தன்மை அதற்குண்டாகாது. பிரமத்தின்சந்நி தியில் உடல்கூடியும் பிரிந்தும் வருகையால்நீகாந்தமிரும்பென்றது திருஷ் டாந்தவிரோதம் ஆகையால் அஃதத்தமன்று. இதன்றியும்,—

கனுத்துயர் கயிற்றரவெனுச் சிலதொடுத்தனை- சொப்பனத்தில் அதி பயங்களாயுள்ள காரியங்களைக் காண்பவன் விழித்தவிடத் ததுபொய்யாந் தன்மைபோலவும், இரவின்கண் புற்றின் வாயிலிற் கயிறுகிடப்பதைக் கண்டு பாம்பென்று புத்திபண்ணிப் பயப்பட்டகாலனுக்கு விடிந்தப் பாம்புபொய்யாந் தன்மைபோலவும், சுகதுக்கங்களாலுண்டாகிய அநு போகங்களும் அப்பிரமத்துக் குண்டாகாதென்று சொன்னாய்,—

கனவின்பயனு நனவின்பயனும் வினையின்பய னவைபொய்யென வேண்டா- சொப்பனத்திற் சூக்குமதேகத்தோடுங் கூடிச் சத்தாதிவிடயங் களை இவன்புசித்துஞ் சாக்கிரத்தில் தூலதேகத்தையடைந்து சத்தா திவிடயங்களைப் புசித்து மீண்டுமிவன் முன்செய்த பிராரத்தம் புசித்த தொழிந்து சாக்கிரத்திற் புசித்ததுமெய் சொப்பனத்திற் புசித்தது பொய் யென்று சொல்ல வேண்டுவதில்லை,—

உடன்மாறுட்டக் கடனது கருதுக - சாக்கிரத்துத்தூலதேகத் தோடுகூடியநுபவிக்கும், சொப்பனத்துச் சூக்குமதேகத்தோடுகூடி யநு பவிக்கும், ஆகையால் சரீரவொற்றுமை யுள்ளதென்றறிவாயாக,—

உற்றபுற்று மற்றதிற்கயிறு முடலுங்கூடச் சடமெனவறிதி - இவன் சென்றிரவி லடையப்பட்ட புற்றும் அதன்வாயிலிற் கிடக்குங் கயிறு மிவன் சரீரமுமாக மூன்றும் சடமென்பது நீயுமறிவை,—

அறிவுகயிறென் றறியாதன்றே - அறிவாயுள்ளபிரமங் கயிற்றைக்கயி றென்றறியமாட்டாமற் பிரமிக்குமாகிலதையறிவென்றுசொல்லப்படாது,-

அச்சமடைதல் கொச்சமையுடைத்தே-பிரமங்கயிற்றைப் பாம்பென் றுபயப்படுமாயின் அதைக்கர்த்தாவென்றுசொல்லப்படாது.இதன்றியும்,—

இன்னுமக்கனவி லிருளுறு கயிற்றிற் பின்னுநின் பிரமம் பிரமித்தி டுமே - இன்னமொரு குற்றமுமுண்டு. கனவிற்றீங்கு பொய்யென்றுங் கங்குலிற் கயிறுபொய்யென்றுமறிந்து மிருக்கையிலேயு மீண்டுங் கனவைக் கண்டவிடத்துங் கங்குலிற் கயிற்றைக்கண்டவிடத்தும் உன்னுடைய பிர மமான தச்சப்படுவது தகுமே,ஆகையாலிவ்வுடம்பொடுகூடி இப்படிமயங் குவது பிரமமன்று. இதன்றியும்,—

துன்னியவினையிற் செம்மலர்ப்பளிங்கெனத் தானுந்தகைமையானல்- சிவந்த பூவொடுங்கூடியிருக்கும் படிகம் தன்னுடைய தன்மையிழந் தவ் வன்னமே யாயிருந்ததாயினு மதிலொரு சற்றுந்தோய்வற நின்றாற்போல் அப்பிரமமு நெருங்கிவருங் கன்மங்களைப் புசிக்குமிடத் தவ்விடயங்கள் தாமாயிருந்த தாயினு மதிலொருசற்றுந் தோய்வற நிற்குமாயின்,—

மலமொன வொருபய னன்றிப் பலபயன் மரீஇய திருவினை தருபய னென நனிவேண்டில் - படிகம் பூவோடு கூடியிருந்தபோது சிவந்தவன்ன

மொன்றுமேயா யிருந்தாற்போல் வினையோடு கூடின பிரமமு மேகப்பிர காரமாயிராது நானுவிதமாய்க்கொண்டிருப்பானே னென்ன? அஃது புண் ணியபாவங்கள் பலவாயிருக்கையால் அதையனுபவிக்கவேண்டி அப்பிர மமும் வெகுபிரகாரமாயிருந்ததென்று மிகவு முனக்குப்பக்ஷமாயின்,—

ஆண்டவித்தையு மவித்தைகோடாக்கையு மீண்டிரு வினையு மியம் பினை - இவ்விடத் திவனை யடிமையாக ஆண்டு காத்துக் கொள்வதொ ருவிவேக ஞானமும் அறியாமையோடுங் கூடியிருக்கு மோர்சரீரமும் பல விதமாயிருக்கும் புண்ணியபாவங்களுமுண்டென்றாய். ஆகையால்,—

பரத்தைக் கள்வனைப்பிணிக்குங் காவலனெனமுய றல்வினைத் தொ டக்கிற்றேன்றுடற் சிறையிட்டிருவினையூட்டு மெம்மானம்மான் - இவ்வி டத்துக் களவுகொண்ட கள்வனைக்கொண்டுவந்து சிறைசெய்தற்குத்தக்க தண்டங்களையுஞ்செய்யும் அரசனுனைபோல்முன்னைப்பிறவியிற்செய்த பழ வினையின் தொந்தனையினால் உண்டாகப்பட்டவுடலாகிய சிறைச்சாலையில் உன்னுடையபிரமத்தைவிட்டுப்புண்ணியபாவங்களென்னுந் தண்டங்களைப் புசிப்பிக்கும் சர்வான்மாக்களிடத்துங் கிருபையுடைய வெம்முடைய கர்த் தாவாகிய இறைவன். இதன்றியும்,—

அருவினையுடற்க ணவத்தைகளுளாத்தனை - அரிதாயுள்ள வினைக் கீடாக வெடுக்கப்பட்ட வுடலின் மூன்றவத்தைப் படுமென்று நீ யுன்மதத் திற் சொன்னாய்,—

ஆருறுபவர் பரமகண்டித மடங்காது - இச்சரீரத்தோடுண்டாகிய மூன்றவத்தையுமநுபவிப்ப தார்தான்; பரப்பிரமமோவென்னின்? அதுபரி பூரணமா யிருந்தபடியால் நனவு கனவு சுழுத்தி என்னு மவத்தைகளில் அடங்காது,—

ஓர்வில துடல்சடலமுரு நெறியாதெனின் - உடல் சடமாயிருக்கை யால் அவத்தைப்படுமென்னும் மொழி அதற்குண்டாகாது. பின் அவத் தைப்படுநெறியாதென்று கேட்கின்,—

மன்னியகரண மாருட்டத்திற் பன்னினமென்னின் - நிலைபெற்றுவரு மந்தக்கரணங்கள் பிரிந்தவிடத்துண்டாகிய மயக்கத்தை யுடையதாயிருக் கும் யாமவத்தையென்று சொல்லப்பட்டதென்னில்,—

இவையோ பரமோமுதலியது - அந்தக்கரணங்களோ பரப்பிரமமோ இச்சரீரத்துக்கு முதன்மையுடையது,—

ஆயின் இவைபிறழ்வெய்தாது - பரப்பிரம முதன்மையுடையதாகில் அப்பிரமநிற்க இவ்வந்தக்கரணங்க ணீங்கமாட்டா. அதனால்,—

இவையெனி லுனதுமொழி பழுதுளதே - இவ்வந்தக்கரணங்கள் முதன்மையுடையவென்னி லெல்லாமுதன்மையுமுடையது பரப்பிரமமே யென்று வேதஞ்சொல்லுமென்று நீ சொன்னது பழுதாகவேண்டும்,—

உடற்படுபிரம முறுமெனின் - அப்படியன்றுகாணும் அவத்தையுழு வதுடற்குள் அகப்பட்டு நிற்கும் பிரமமேயாகில்,—

சாளரத் திடத்தகு முறுவிர னுதி யளியெறி துயரங்குவிதானே யருந் திடிலுடற்கட் டங்கியவறிவு தனித்துறுமன்றே - பலகணி வாயிலிடத்திற் புறம்பேநின் றுள்ளேயொருவிரலை நீட்ட அவ்விரல் நுதியில் ஒருவண்டா னது கொட்ட அதனாலுண்டாகிய துயர மவ்விரல் தானே யநுபவித்த

தாயின் இவ்வுடலிற்பொருந்திநிற்கும் பிரமம் அவத்தைதனியேயநுபவித்த தென்றுசொல்லலாம். அவ் விரனுதியில் வண்டுகொட்டின கடுப்புப் பாதாதிகேசமளவுநின்று கடுக்கின்றமையால் உடலில்நிற்குமறிவுஅவத்தையைத்தனியேயுறுமென்று நீசொன்னது அத்தமாகாது. இதன்றியும்,—

தர்ப்பணநிழற்கட் குற்றிபாய்ந்தற்றாநற்கணிற்றுயர நணுகாத்தகைத் தெனின் - கண்ணாடியின்கண் தோன்றின நிழலினது கண்ணில் கூர்ச்சிகொண்டு கடாவினவிடத்துக் கண்ணாடியுடைந்த தொழிந்து கண்ணுக்கு இலயம்வாராத் தன்மைபோற் சுகதுக்கங்களா லுண்டாகிய வநுபோகங்களு முடற்கொழிந்து பிரமத்துக் கில்லையென்னின்,—

நின்மொழிவிரோதமும் காட்சிவிரோதத் தன்மையுமுறு மவை தவறிலவாகா - உன் சாத்திரஞ் சுகதுக்கங்களை அநுபவிப்பதறிவென்று சொல்லும் நீயிப்பொழுதுடற்கொழிந்து அறிவுக்கநுபோகமில்லை யென்கையாற் சாத்திரவிரோதமும் பிரத்தியக்ஷமாக அறிவு சுகதுக்கங்களையனுபவிக்கையில் அனுபோகமில்லை யென்கையாற் பிரத்தியக்ஷ விரோதமுமிவையிரண்டுந்தப்பாம லுண்டாகும்,—

யாமுடைப்பதிவகை யாவரும் பலகலைசொல்லுத லெளிதரிதத் தொழில்புரிவெனப் புல்லியபழமொழி புதுக்கினையன்றே - நாம் வஸ்து நிச்சயமாக நாட்டப்பட்டது "சொல்லுதல் யார்க்குமெளிய வரியவாஞ்-சொல்லிய வண்ணஞ் செயல்" என்று சொல்லப்பட்ட திருக்குறளை நீ யிப்பொழுது புதுக்கினுயாகவேண்டும். இதன்றியும்,—

அகண்டிதமென நீ பகர்ந்தமை தனக்குப் பந்தமிதுவெனத் தந்தமை கருதில் - பரப்பிரமமொன்றாலுங் கண்டிக்கப்படாம லகண்டிதமா யிருப்பதென்று நீமுன் சொன்னதற் கிப்பொழுது மாயாவுபாதிகளால் இப்படிப் பந்திக்கப்பட்டு நிற்குமென்று சொன்னதை விசாரித்துப்பார்க்கில்,—

வானினடக்குங் காலினைப்பிடித்துப் பருவிலங்கிட்ட வொருவனீயன்றே - ஆகாயத்தின்கண் வியாபித்து நடக்குங் காற்றினைப்பிடித் தங்கிங்கசையாவண்ணம் பெரியவிலங்கை யிட்டுவைத்தவ னீயாவையென்று சொல்லப்படும்,—

முத்திமறுப்பு.

பந்தமதகல வுந்துவிவேகம்வான்வளி யெனத்தனிற்றானே தோன்றின் - பிரமமாயா வுபாதிகளாற் பந்திக்கப்பட்டிருக்குமென்று சொன்ன அப்பந்தம் பிரமத்துக்கிப்பொழுது நீங்கத்தக்கதாக வந்துதோன்றின விவேகஞான மாகாயத்தினிடத்திலொருவாயுத்தோன்றி அவ்வாயுஆகாயத்தை மறைத்துநின்ற மேகங்களை யொதுக்கி அதனை நின்மலமாக்கிய தன்மைபோல் இவ்விவேகஞானமும் பிரமத்தினிடத்தினின்றுந் தானே தோன்றியதாயின்,—

முன்புளதாயின் மயங்காது - இவ் விவேகஞானம் பிரமத்துக்குமுதலேயுள்ளதாயின் அதுநிற்கையிற் பிரமத்துக்குநடுவே மயக்கம் வராது,—

இலதெனில் - இவ் விவேகம் பிரமத்துக்கு முதலே யுள்ளதன்று நடுவே யோரவதரத்தில் வந்துண்டானதென்று நீ சொல்லில்,—

பின்புளதாகாது - முன்பில்லாதது பின்புள்ளதாகாது,—

இலதுள தெனின் - முன்பில்லாதது பின்புண்டாமென்னில்,—

வெளிமலராதுதரும் - இல்லாததுண்டாமென்பது ஆகாயத்தி லொரு பூவுண்டென்பதற்கொக்கும். அப்படியன்றுகாணும்,—

அனல் மரக்கணின்றாகித் தருவது தகுமெனில் - அக்கினியின் பிரகாச மரத்தினிடத்தின் முன் காணப்படாதிருந்து பின்பொருகாலத்திற் காணப்பட்டாற்போல் முன்பில்லாத விவேகஞானம் பின்னுண்டாங் காணுமென்று நீ சொல்லில்,—

தானேதோன்று-விறகினிடத்து முன்னில்லாத அக்கினி பின்புண்டா மிடத்து ஒரு அரணியைவைத்துக்கடைய வுண்டானதொழிந்து தானாக வுண்டாகாது. ஆகையாலுன்பிரமத்துக்கும் பின்னுண்டாகியவிவேகஞான மும்வேறேயொருவனாலுண்டாக்கவுண்டானதென்றுகொள். இதன்றியும்,

அவித்தையினுதித்த வித்தைவிறகினுதித்தகனறருமாயின்-அறியாமை யாகிய பெத்தநிலையிற்றோன்றின விவேகம் விறகினிடத்தில் தோன்றின அக்கினியையொக்குமாயின்,—

அம்மரத்துதித்த விவேகம் வித்தையென்றுரைத்த வெந்தழலனைய - வித்தையென்று சொல்லப்பட்ட விவேகஞானம் அவ்விறகிற் றோன்றின வெவ்விய தழலையொக்கும்,—

விவேகமுதித்ததிந்தனமனையது - விவேகஞானந் தோன்றினதுதான் அவ்விறகினையொக்கும். ஆகையால்,—

இறையிலன்றற்றே - விவேகஞானந் தோன்றியது பிரமத்திலென்று சொல்லப்படாது, மாயாவவித்தையிலே யாகவேண்டும். இது திருஷ்டாந்த விரோதமாகையால் நீசொன்னதத்தமாகாது, இதுவன்றியும்,—

இயற்படப் பிரிப்பின் மெய்ப்படு மெவற்றையு மிதுவன்றிதுவன்றெ னக் கழிகாலை யதுவேதானே யாயினதென்றனை - வீட்டை யோரோர் வைக்கோலாகவு மோரோர்கழியாகவும் நாளிலேபிடுங்கிப் போட்டபின் வீடென்னுஞ்சொல்இன்றாய்ப்போனதன்மைபோலவும், சீலையையோரோ ரிழையாக வாங்கிப்போட்டாற் சீலையென்னுந் தன்மைபோனது போலவும், சரீரமாகக்கூடிக்கொண்டிருக்கு மெல்லாவுபாதிகளையு மிதுநானன்று இது நானன்றென்று நியதிபண்ணி நீங்கினவிடத்து அப்பிரமந்தானேயின்று இச்சீவனாயிருந்ததென்று நீசொன்னாய்,—

வித்தைமுன்ன ரவித்தையு மவித்தைமுன் வித்தையுநில்லா- அறிவா கிய பிரமத்தின்முன் அறியாமையாகிய தேகாதிபிரபஞ்சந் தோன்றி நில்லாது, அறியாமையாகிய தேகாதி பிரபஞ்சத்தின்முன் அறிவாகிய பிரமந் தோன்றி நில்லாது, அஃதென்போலவென்னில்,—

வியனொளி யிருளென - மிக்கபிரகாசத்தினையுடைய ஆதித்தன்முன் அந்தகாரநில்லாததுபோலவும், அந்தகாரத்தின் முன் ஆதித்தனில்லாதது போலவு மெனக்கொள்,—

இருளலவொளிக்கு மொளியலவிருட்கு மொருகாலத்துமொருபயனி லதால்-இருளல்லாத சுத்தவொளிக்கு மொளியல்லாதசுத்தவிருட்குமொரு காலத்தினுமிவற்றுக்கொருபயனுமுண்டாகாது. அப்படியிருக்கையால்,—

இரண்டையுநகரு முரண்டருவிழியென - இருளோடுகூடியிருளை யநுபவித்தும் ஒளியோடுகூடி யொளியையநுபவித்து மவையிரண்டு

முதலுமாகாமல் தனியேயொருமுதலாய் நின்ற பெரியகண்ணின் தன்மை யென்று சொல்வதாகில்,—

வித்தையுமவித்தையுமுய்த்ததொன்றுளதே-அறிவாயுள்ளபதியோடுகூடி பதியென்றறிந்தும், அறியாமையாயுள்ள பாசத்தோடுகூடிபாசமென்றறிந்தும், இரண்டுமெல்லாமற்பசுவென்றொருமுதல்தனியேயுண்டென்றறி,—

தானேதானுமானாற் பயனென் - இப்பிரமந்தானே பிரமமானதாயின் இப்பிரமத்துக்குண்டாகிய பயனென்னதான்,—

தன்னிற்றன்னைத் தானேகாணின் - இப்பிரமந் தன்னிடத்தில் தன்னியல்பைத் தானேகாணப்படுமாயின்,—

கண்ணிற் கண்ணைக் காணவும்படுமே - கண்ணானது தன்னிடத்தில் தன்னுடைய சொரூபத்தைக்காணுமென்று சொல்லவும்படுமே, அஃதுண்டாகாதாகையால் நீ பிரமம் தன்னில் தன்னைக்காணுமென்று சொன்ன தத்தமன்று. இஃதன்றியும்,—

தன்னலமதனைத் தானே நுகருமென்னின் - பிரமந் தன்னிடத்திலுண்டாகிய சுகத்தைத் தானேயநுபவிக்குமென்று நீ சொல்லில்,—

முன்னல மெய்தாதிருந்ததென் கட்டிபோலெனக் கதறினை - பிரமமிப்பேத முண்டாவதற்குமுன் தன்னிடத்திலுண்டாகிய சுகத்தைத் தானநுபவியாமலிருப்பானேனென்று நான் கேட்டதற்குக் கருப்புக்கட்டி தன்னிடத்திலுண்டாகிய விரதத்தைத் தானநுபவியாம லிருந்தாற்போலென்று நீ கதறினாய்,—

இன்பம் வந்தொட்டிடும் வித்தையுடைமையாயிடினே - அப்பிரமத்திலுண்டாகியசுக முனக்கிம் முத்தியிலநுபோகமானது நீ தனியேபசுவென்றொருமுதலா யதிற்பாசபந்தியா யிருந்திப்பொழு தப்பாசநீங்கிப்பதியோடு கூடுகையாலெனக்கொள்,—

தத்துவமசியென வைத்தமுப்பதத்திற்கு - தத் - அது, தொம் - நீ, அசி - ஆகின்றாய் என்னு மகாவாக்கியத்துக்கு உண்மைப்பொருள் விசாரிக்குமிடத்து,—

ஒன்றேபொருளென் றன்றேபகர்வது - நீ யொன்றே யாயிருக்குமென்றது பொருளன்றே. இதற் கத்தமொன்றன்றென்றே அம்மகாவாக்கியஞ் சொல்வது. பின்னையெங்ஙனே யென்னில்,—

நீபுலியாயினை யென்றாங் குணரின் - ஒருவ னொருவனுடைய ஆற்றலைக் கண்டபோது நீ புலியாயினையென் றவன்சொன்ன சொல்லை விசாரித்துப்பார்க்கில்,—

ஆயினையென்றத தாகுவமைத்தான் - ஆயினையென்ப தாகுவமைத்தென் றிலக்கணவிதியிற் சூத்திரங்கள் சொல்கையால் அவன் புலியாகின்றானல்லன். இஃதன்றியும்,—

நோயாயினமே லாயாய் - ஒருவனொருவனைப்பார்த்து நீ இப்படிப் பொல்லா திருப்பானேனென்ன நானோயாய்க் கிடந்தேனென் றவன்சொன்னசொற்பொருள் நீதானே யாராய்ந்து பார் அவன்கொண்ட வெப்பங் குளிரவனுவதில்லையே,—

என்றால் - அப்படியிருக்கையால்,—

அகமேபிரம மாயினதென்றால் - அகந்தானே பிரமமாகாநின்றதென்று மகாவாக்கியஞ் சொல்கையினால்,—

சகமேயறியத்தான் வேறன்றே - ஒருவரன்றி இப்பிரபஞ்ச மித்தனையு மறியத்தக்கதாக இவனப்பிரமத்துக்கு வேறென்பது தப்பாதென்றறி. அன்றியும்,—

உண்மையிற் சலமில உடற்சஞ்சலம் - நம்முடைய உண்மையைப் பார்க்குமிடத்தில் நமக்குச்சலனமில்லை இவ்வுடலினிடத் துண்டாகிய சலந முடற்காயிருக்கும். அஃதென்போலென்னில்,—

சலமுறும் வெண்மதிபோல - சலத்தோடுகூடியிருக்கும் பிரதிபிம்ப மதி அச்சலமசைந்தபொழுது தானு மசைந்தாற்போலிருப்ப தொழிந்து அதனுடைய வுண்மையைப் பார்க்குமிடத் தம்மதிக் கசைவில்லை யானாற் போல, —

விளங்கிடுமென்றனை - இங்ஙனம் அம்முத்தித்திசையில் விளங்காநின்றேமென்று நீ சொன்னாய்,—

அசலனாகிச் சஞ்சலசலத்துச் சலனமே வினமென மதிகாணவேண்டும் - நாம் சலனமில்லாமலிருப்பா னொருவன் ஆற்றிலேயோடுஞ்சலத்தினுடைய சஞ்சலங்கொண்டு நாமுஞ் சஞ்சலித்ததுபோலிருந்த தொழிந்து நமக்கந்தச் சஞ்சலமில்லையென்று கண்டாற்போல் ஆகாயத்திலிருக்கும் அம்மதியானது காணவேண்டும் அப்பொழுதுநீசொன்னதிருஷ்டாந்தமொக்கும்,—

அதன்றிக் காண்பவர் பிறரேல் - அஃதொழிந்திப் பிரதிபிம்பமதிக் கசைவில்லை தண்ணீருக்கே யசைதலென்றுஅம்மதியையொழிந்து வேறேயொருவன் கண்டுசொல்லுஞ் சொல்லுண்மைபோல் அப்பிரமத்துக்குச் சலனமில்லை உடலுக்கே சலனமென்று அப் பிரமத்தையொழிய வேறேயொருவன் கண்டு சொல்கையினால்,—

ஈண்டுன தேக மென்செய்த தியம்புக - இவ்விடத்துப் பிரமமொன்றுமே யுள்ளதென்று நீ சொன்னசொல் யாதாய்முடிந்தது சொல்,—

பரமுத்திமறுப்பு.

உடல்விடக் கடத்துட் படுவெளிபோலெனில் - பரமுத்தி இச்சரீர நீங்கினவிடத் திச் சரீரத்தினின்றவறிவு தன்னிலொன்று பட்டுநின்றது கடத்துக்குள்ளே யகப்பட்டுநின்ற ஆகாய மக் கடமுடைந்தகாலத் தக் கடத்துக்குள் நின்ற ஆகாயமும் பராகாயமுந் தன்னிலொன்றுபட்டு நின்றாற் போலுமென்று நீ சொல்லில்,—

விட்டென்பெற வுடற்பட்டென்பட - ஆகாயங் குடாகாயமாய் நின்ற காலத்தொரு துக்கத்தை யநுபவித்தது மில்லை, குடமுடைந்தகாலத் தொருசுகத்தை யனுபவித்தது மில்லை, அதுபோலப் பிரமமுடலுக்குள்ளகப்பட்டு நின்ற காலத் தொருசுகத்தை யநுபவித்தது மில்லையாகவேண்டும். இவ் வுடல்விட்ட காலத்துமொரு சுகத்தை யநுபவித்தது மில்லையாகவேண்டும். இஃதன்றியும் இவ்வுடலினிற்கிறவறிவு பிரத்தியக்ஷமாக விப்பொழுது துக்கத்தை யநுபவித்துவிட்ட காலத்துச் சுகத்தை யநுபவித்து நிற்கையால் நீ குடாகாய வாகாயம் போலுமென்ற தத்தமன்று. திருஷ்டாந்த விரோதம்,—

மற்றிகலறவொருவனிவ்வகைதெளியி லகிலமுமுத்தி யடைந்திடவேண்டும் - இஃதொழிந்து நீசொன்ன சாத்திரப் பிரமாணத்தில் மாறுபாடறவொருவன்நான்பிரமமென்றுதெளிந்தகாலத்தெல்லாவறிவுமொன்றென்று சொல்கையாற் சர்வான்மாக்களு முத்தியையடையவேண்டும்,—

அறிந்தோர் முத்தி யடைந்தோராயின் - பிரமஞான முடையார் முத்தியையடைவர், இல்லாதவர் முத்தியையடையார். ஆயின்,—

பிறிந்தோருயிர்பல பேதத்தன்றே-அறிந்தவனொன்று மறியாதவனொன்றுஞ் சொல்கையாலப்பிரமத்தை யொழிந்து சொல்லப்பட்ட சீவான்மவர்க்கமும் பலபேதமாயிருக்குமென்று கொள்,—

விவேகத்தன்மை கூடாதவர்களுக்குச் சாதனசதுஷ்டயங்களாற்
பிரமஞான முண்டாகாதென்றது.

கன்மகாண்டங் காரணமாக மன்னும் விவேக மென்னில்-இத்தன்மை கூடாதவர் யாகாதிகளாயுள்ள கன்மகாண்டங்களை யநுஷ்டிக்க அதுகாரணமாக அவர்க்குப் பின்பு விவேகஞான முண்டாமென்று சொல்லின்,—

அவித்தைக் கேதுகாரண மோதினையில்லை - பிரமத்தைமாயாவித்தைகள்வந்து ஓர் காலத்திலே பொருந்தி மயக்கிக்கொண்டு நிற்குமென்று நீசொன்னதற்கு இன்னதுகாரணமாகப் பிரமத்தைவந்து பொருந்திற்றென் றொன்றைச் சொன்னாயில்லை,—

இதற்குங்காரணம் விதித்தல் வேண்டின்றே - கன்மகாண்டங் காரணமாக விவேகமுண்டா மென்றதுபோற் பிரமத்துக்கு முன் இப்படியிருப்பதொரு குற்றமுண்டு. அது காரணமாக இவ்வவித்தைகள்வந்து இப்பொழுது பொருந்திற்றென் றொன்றை காட்டவேண்டும். இப்போது,—

அரணியி லுதித்த கனலவைகவர்வென விரதத்துதித்த விவேகமழித்தல்-தீக்கடைக்கோலை மரத்தில்வைத்துக் கடைந்து அத்தொழிலினாலுண்டாகிய அக்கினி அவ்விரண்டு காட்டத்தையுஞ் சுட்டெரித்ததென்று சொல்வதாகக் கன்மங்களைச் செய்வதனாலுண்டாகிய விவேகம் அக்கன்மங்களை யில்லையாக்கிவிடுமென்பது,—

வருந்தியாயினுந் திருந்தியவேத நீதியெல்லாநீத்து - சதாசாரங்களை நன்றாகச் சொல்லப்பட்டிருக்கும் வேதவொழுக்கமெல்லாவற்றையும்வருந்தியுங் கைவிட்டு,—

போதமென் றறியார்தாமு மவ்வழிநடத்தல் - பிரமஞானமென்பது ஏகதேசமுங்கூடி யறியாதவரும் ஓர் பிரமஞான முண்டாயிற்று எங்களுக்காசாரம்வேண்டுவதின்றென்று அனசாரங்களைச்செய்துகொண்டுதிரிவது,-

பொறியோ போத நெறியோ - இவருடைய தலையிலெழுத்தோ அல்லதறியாமைதானோ,—

இதுபவ நீங்கிடு நெறிதருபாங்கினைப் பழித்தல் - இவனைவிட்டொரு காலத்தினு நீங்காமற் றொடர்ந்துத்துக்கொண்டுவரும் பிறவித் துன்பங்கணீங்குகைக்கேதுவான இக்கன்மத்தின் பகுதிகளை யெனக்காகாதென்று இதனைக் கைவிட்டு விடுவது,—

நன்றிகொன்றலன்றே - "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை-செய்ந்நன்றிகொன்றமகற்கு" என்றதிருக்குறளிற்கூறியதொக்கும்,-

அன்றியும் ஞால நீதியு நான்மறை நீதியும் - இஃதன்றியு முலோகாசாரங்களும், வேதஞ்சொல்லிய ஆசாரங்களுமிவை,—

பாலருன்மத்தர் பசாசரிலெனவு முறங்கினோன்கை வெறும்பாக்கெனவுந்தானேதவிராது-யாதொன்றினையும் விகற்பியாமல் நிருவிகற்பமாய்க்கொண்டு காணும் பாலர் போன்றும், வைதாரையும் வாழ்த்தினாரையுஞ் சுட்டியறியாத மதுபானஞ் செய்தவர் போன்றும், ஆகாரமுதலில்லாத பசாசர்போன்றும், நித்திரை செய்பவன்கையில் தனியேபிடித்திருந்த பாக்குப்போன்றும், உனக்குப் பிரமஞான மில்லாதபடியால் அவ்வாசாரங்களுந் தானாகப்போய் அறியாது,—

ஆனாற் புரியாதொழிந்திடி னிரயத்தழுந்துதறிடமே - அவைதானே போகாதெனின், அவன்றானே யெனக்கு அவ்வாசாரங்கள்வேண்டுவதில்லை யென்று விட்டுவிடின் தேகாந்தத்தில் மீளாநரகத்திற் போய்க்கிடந்து துக்கங்களை யநுபவிப்பானென்பது தப்பாது,—

உய்த்தோனன்றி முத்தியுரைத்தல் பித்தோ - நீயவ்வாசாரத்தாற் பிரமஞானமுண்டா மென்னுமல் நான் முத்தனென்று சொல்லுமிது பித்துமேலிட்டுக்கொண்டோ,—

பிரமஞ் செத்தோ பெறுவது - இவனிருக்கையிற் பிரமஞான முண்டாகவேண்டுவதொழிந்து இவன் இறந்துபோய்ப்பிரமஞானத்தைப்பெறப் போவதில்லை. அஃதேனென்னில்,—

உடலையு நீயே சடமெனச்சாற்றினை-இவ்வுடலை நீதானே சடமென்று சொல்லிவைத்தனை,—

வையினும் வாழ்த்தினுங் கொய்யினுங் கொளுத்தினும் வணங்கினுமுதைப்பினும் பிணங்குதல்செய்யாப் பிரமத்தன்மை பெறுவதெக்காலம்-ஒருவனிவனைவைதவிடத்தும், வாழ்த்தினவிடத்தும், கைகாலைத்தறித்த விடத்தும், நெருப்பாற்கொளுத்தினவிடத்தும், தண்டம்பண்ணினவிடத்தும், கால்கொண்டு மிதித்தவிடத்தும், இதமகிதமடையாமலிருக்கும் பிரமஞான மிவனிடத்திற்றைவரைக் காணப்பட்டதில்லை. அப்பிரமஞான மெக்காலத்திலே யுண்டாகும்,—

இருக்குநாள்சில - புருடாயுள் நூறு, இதிற்பாதி நித்திரையிற் போம், நின்றவைம்பதில் வாலிபமாய்ப் பதினைந்துபோம், விருத்தனாய்ப் போம் பதினைந்து, நின்றவிருபதில் நோயாய்ப்போஞ் சிலநாள், இதில் இடையிலிறந்துபோம் காலமுமிகுதி, இதற்குநடுவே,—

எண்ணினூல்கதறித் தருக்கம்பேசித் தலைபறியுற்று - எண்ணிறந்த சாத்திரங்களெல்லாங்கற்று அதுகொண்டெல்லாரோடுந் தருக்கம்பேசி அதனாற்றலைபறியுண்டு,—

கண்டோரீந்தபிண்டமுண்டலறி - இவர் நல்லவத்தியான்மியென்று கண்டவர்களிடப்பட்ட அன்னங்களைப்புசித்துப் பிரமஞானஞ் சொல்கின்றேனென்றவர்களிடங்களிற் சீவனவயிற்றைக் கூப்பிட்டு,—

பன்னோயாக்கை தன்னோயுற்றுடல் விடவருமென்று நடுநடு நடுங்கி-பலநோய்களுங்கூடி யொன்றாயெடுக்கப்பட்ட சரீரத்துக்கடைந்த வியாதி

யிவனைவந்து நெருக்கினபோது இதனால் நமக்குச் சாக்காடுவருமென்று பதைபதைபதைத்து,—

விட்டோர்தெய்வத் தொட்டின்றன்றியும் - உடல்விடுங்காலத்து நீப யப்படாதை நானுண்டென்று சொல்லியுன்னைக்காத்துக் கொள்கைக்கு ஒருதெய்வதொந்தனையு மில்லையாயிருப்பதன்றியும்,—

யானே யெவருமானே னென்றலின்-நான்றானே பிரமாவும் விஷ்ணுவும் உருத்திரனும் இந்திரனும் எமராஜாவு மற்றுமுள்ளவர்களெல்லாருமாயிருந்தேனென்று சொல்கையால்,—

அவ்வவர்சீறிய வவ்வவர்வாளுள்செவ்விதினிரயஞ்சேர்த்துவர் - அத்தேவதைகள் நம்மை யிவன்றானென்று சொன்றானென் றுன்னோடு சீற்றங் கொண்டு தங்களுக்குச் செல்லுங் காலங்களெல்லாம் நன்றாகக் கொண்டழுந்த நிரயங்களில் தள்ளிவிடுவர்,—

அதனால் மாயாவாதப்பேயா வுனக்குத் தேவரிலொருவ ருண்டாக மேவருநரகம் விடுத்தலோவரிதே-அங்ஙனமிருக்கையால் மாயாவாதமென்னும் பேய்ச்சமயத்தை யுடையானே உனக்கெல்லாரு மிறந்துபோய்த் தேவவர்க்கத்திலே யொருவரிருந்தாராயினுமொருவராலுங் கிட்டுதற்கரிதாயிருக்கு நிரயமுனக்கு நீங்காதென்றறி என்க. (ச)

---

## ஐக்கியவாதிசங்கற்பம்.

அரிதேர்ந் துணராப் பெரியோ னுரைத்த
பதிபசு பாச விதிமுறை கிளக்கி
லீச னேக னெண்ணிலி பசுக்கள்
பாச மிருவகைப் பரிசின துலகத்
தாயவ னுயிர்க்கு மாயையி னருளா
லிருவினைத் தொகையி னுருவினைத் தருமாற்
கருமுகி லடர விரிதரு கதிர்போன்
றறிவா முயிரிற் பிறியா தேயு
மீட்டு மிருபய னூட்டிடு நியதிக்
கொருபொழு திருபய னுகர்வுற மருவுத
லின்மை யாதன் முன்னிய காலைச்
சத்திநி பாத முற்றிறை யருளா
லுருவுகொ டுலகு தெரிவுற மருவி
மாசுறுந் தூசு தேசுற விளக்குந்
தன்மையி னுணர்த்தும் புன்மைக ணீங்கி
நீரு நீருஞ் சேருந் தகைமையி
னறிவினோ டறிவு செறிவுறப் பொருந்தி
யொன்று மென்பதை யுலகோர்
நன்று முத்தி யெனநவின் றனரோ.

(இ-ள்.) அரிதேர்ந் துணராப் பெரியோனுரைத்த பதிபசுபாச விதிமுறைகிளக்கின் - விஷ்ணு பூமியைக்கீண்டாராய்ந்து பார்த்தவிடத்து இப்படியிருக்குமிவனுடைய சொரூபமென்றறியப்படாத பெரியவனென்றுசொல்

லப்பட்ட சிவனாலருளிச் செய்யப்பட்ட பதியுண்மையினையும் பசுவுண்மையினையும் பாசத்தினுண்மையினையுமுள்ளபடி சொல்லுமிடத்து,—

ஈசனேகனெண்ணிலிபசுக்கள்பாசமிருவகைப்பரிசினது - பதியென்று சொல்லப்பட்ட பரமசிவ னொருமுதலா யிருப்பதொன்று, பசுவென்று சொல்லப்பட்ட ஆன்மாக்கள் பலமுதலாயிருப்பதொன்று, பாசமென்று சொல்லப்பட்டது மாயையென்றுங் கன்மமென்று மிருவகைப்பட்டிருப்பதொன்று,—

உலகத்தாயவனுயிர்க்கு மாயையினருளா லிருவினைத்தொகையி னுருவினைத்தருமால் - பிரபஞ்சத்திற்கு அம்மையப்பனாயுள்ள சிவன் தன் காருண்ணியத்தினால் ஆன்மாவுக்குப் புண்ணியபாவங்களுக் கீடான சரீரங்களை மாயையினின்றுங் கொடுப்பன்,—

கருமுகிலடர விரிதரு கதிர்போன் றறிவாமுயிரிற் பிறியாதேயும்- கரியமேகம் பிரகாசத்தினையுடையஆதித்தனிடத்திற்சென்று பொருந்தின விடத்து அவ்வாதித்தனுடைய கிரணங்களெல்லா நீங்கின தன்மைபோல் முதலே சுத்தமாயறிவாயிருக்கு மான்மாவி னிடத்தில் அம்மாயாதேகமொருக்காலு நீங்காமற்பொருந்திவரும்,—

ஈட்டமிருபயனூட்டிடு நியதி - முன்னே செய்த புண்ணிய பாவங்களை இச்சரீரத்தில் கர்த்தா இவனுக்கெந்நாளும் புசிப்பிப்பன்,—

ஒருபொழுதிருபய னுகர்வுறமருவுத லின்மையாதன் முன்னியகாலை- புண்ணிய பாவ மிரண்டுந் துலையொத் தொருசநநத்தி லெல்லாக் கன்மங்களும் புசித்துத் தொலையத்தக்கதாக வேதேனுமொரு சிவபுண்ணியம் வந்தெதிர்ப்பட்ட வவதரத்து,—

சத்திநிபாதமுற்று-இவனுக்குச்சத்திநிபாதமென்பதொன்றுண்டாகி,—

இறையருளா னுருவுகொடுலகுதெரிவுற மருவி - கர்த்தா தன்காருண்ணியமே தனக்குத் திருமேனியாகக் கொண்டருளி உலகத்தாரெல்லாருங்காணத்தக்கதாக ஆசாரியனாக வெழுந்தருளிவந்து,—

மாசுறுந்தூசு தேசுறவிளக்குந் தன்மையினுணர்த்தும் - அழுக்கினால் மிகுத்திருக்கும் புடவையை நன்றாக வெள்ளாவிவைத்தவ்வழுக்கை நீக்கித் தூய்தாக வெள்ளையாக்கின தன்மைபோல் இவனிடத்தி லுள்ள பாசங்களைத் தீக்கைசெய்து கிரமத்திற் போகத்தக்கதாகவுபதேசமருளவே,—

புன்மைகணீங்கி நீருநீருஞ்சேருந்தகைமையி னறிவினோடறிவு செறிவுறப்போருந்தி யொன்றும் - இவனிடத் துண்டாகிய குறைகளெல்லா நீங்கச் சுத்தனாகித் தண்ணீருந்தண்ணீருந்தன்னிற்கூடி ஐக்கியமாயொன்று பட்டு நின்றதன்மைபோலச் சிவனுடையவறிவோடு தன்னறிவு கூடி ஐக்கியம்பிறந் தொன்றுபட்டு நிற்கும்,—

என்பதை யுலகோர் நன்றுமுத்தியென நவின்றனரே- என்றிங்ஙனஞ் சோல்லப்பட்டதை யுயர்ந்தோர் முத்திகளெல்லாவற்றிலும் வைத்துக்கொண் டிதுவே நல்ல முத்தியென்று சொல்வர் என்க. (௫)

---

## நிராகரணம்.

முத்தி யென்ப தெவனோ சுத்த
வறிவெனிற் பாசஞ் செறியா மாயை

யுருவிரு வினையால் வருமிரு வினையு
முருவா லன்றி மருவா திவற்றின்
முந்திய தேதோ வந்தனை வதற்கோ
ரோது வேண்டுந் தானியல் பென்னின்
வீடுற் றவரினுங் கூடக் கூடு
மீங்கிவை நிற்க நீங்காக் கருவிகள்
கொண்டறி வறியக் கண்டது மன்றி
மருவிய வுருவு துயில்பெறுங் காலைச்
சிறுபொறித் தறுகட் கறையணற் சுடிகைத்
துத்திக் கடுவுட் டெளியெயிற் றுரகக்
கொத்தயல் கிடப்பினுங் குவைதரு நவமணி
யொருபா றுதையினும் பெருகார் வத்தினோ
டச்சமு மணுகாக் கொச்சமை யென்னே
கருவி யாவும் பிரிவுறு நிலையேற்
பொறிபுல னுதி குறைவற நிறைந்து
காட்சிய தளிக்கு மூட்சியின் முன்னர்க்
கொடுத்தோ ராழி விடுத்தவர் நாடிக்
கொள்வோர்க் காணு துள்கி மீண்டுழித்
தந்தவர்க் கண்டாங் கந்தமி லதனைத்
தருக வென்னும் பெருமதி பிறங்கும
தறிவி லாமையென் றனையது மலமாக்
குறிகொ ளாள ரறைகுவ ரன்றே
யறிவுக் கறிவு செறியவேண் டின்றே
யுண்மையி லிருமையு மொளியே யெனிலொரு
தன்மை யாகமுன் சாற்றின ரிலரோ
முன்பு நன்றுட னென்றிய காலை
யின்ப மெய்துதற் கிலதுயி ராதலி
னீயலை பொருந்த மாயா வாதி
யாயினை யமையு மருணிலை கேண்மதி.

பேத்தநிலைமறுப்பு.

(இ-ள்.) முத்தியென்பதேதவனோ - இதை நீ முத்தியென்று சொன்ன தென்னைகாண். அது பின்சொல்வாம்,—

சுத்தவறிவெனிற் பாசஞ்செறியா - ஆன்மா அநாதியிற் சுத்தமாய் அறிவா யிருக்குமென்று சொல்லின் நடுவே சுத்தமாயிருக்கு மான் மாவைப் பாசம்வந்து பொருந்துகைக்கு வழக்கில்லை,—

மாயையுருவிரு வினையால்வரும் - இம்மாயாசரீரம் இவனைவந்து பொருந்துமிடத் திவன்செய்த புண்ணியபாவங்களுக் கீடாகவந்து பொருந் துவ தொழிந்து தானுகவந்து கூடமாட்டாது,—

இருவினையு முருவாலன்றி மருவாது - அப்புண்ணிய பாவமுண்டா மிடத் தொருமாயா சரீரமுண்டா யதினுண்டாகிய திரிவித கரணங்களா லிவன்செய்ய வுண்டாவதொழிந்து தானே யுண்டாகாது. ஆகையால்,—

இவற்றின் முந்தியதேதோ - இம்மாயாமலங் கன்மமலமிரண்டினும் வைத்துக்கொண் டிவனைமுந்திலந்துகூடியபாசமெதுதான்.இதன்றியும்,—

வந்தணைவதற்கோரேதுவேண்டும் - இப்பாசங்கள் நடுவேயோர்காலத் திவனை வந்து பொருந்துமென்பதற் காதியிலிவனுக்கு மலமென்பதொன் றுண்டாயதுகாரணமாக வந்து கூடிற்றென்று சொல்லவேண்டும்,—

தானியல்பென்னின் - அப்படி மலமென்பதொன்றில்லை இப்பாசந்தா னடுவேவந் திவனைப் பொருந்திற்று வெள்ளைப்புடவைக் கழுக்கேறினாற் போலியயல்பாகவந்து பொருந்துமென்று நீ சொல்லில்,—

வீடுற்றவரினுங் கூடக்கூடும் - மாயாகன்மங்கணீங்கி முத்தியைப் பெற்றிருப்பவரிடத்து மாயாகன்மங்களியல்பாகவந்துபொருந்தவேண்டும்,-

ஈங்கிவைநிற்க - இவ்விடத்து நான் சொன்னதற் கோருத்தர முனக்குச் சொல்லப்பட்ட தில்லையாகையா லிவைநிற்க,—

நீங்காக்கருவிகள் கொண்டறிவறியக் கண்டதுமன்றி - அநாதியில் உன்னைவிட்டு நீங்காதிருக்கு மலசம்பந்தத்தை இம்மாயாகருவிகள்வந்து நீக்க அக்கருவிகளைக்கொண் டுன்னுடைய அறிவுசத்தாதி விடயங்களையறிந்து வருவது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கையிலேயு மலமென்பதொன் றில்லை யென்றாய். இதன்றியும்,—

மருவியவுருவு துயில்பெறுங்காலை-அநாதியே இவனுக்கு மலமென்பதொன்றில்லை நடுவே யியல்பாய்வந்து எய்திற்றென்று நீ சொன்ன இவ்வுடம்பில் துயில்கையில்,—

சிறுபொறித்தறுகட் கறையணற்சுடிகைத்துத்திக்கவெட்டுளையெயிற் றுரகக்கொத் தயல்கிடப்பினும் - உடம்பிற் சிறிதாயிருக்கும் பொறியையும் தறுகண்ணினையும் தலையிற்றுத்தியினையும் உள்ளே துளையாயிருக்கும் பற்களில் நஞ்சினையுமுடைய பாம்பின் கூட்ட மொருபக்கத்தில் வந்து கிடந்ததாயினும்,—

குவைதருநவமணி யொருபாற் றுதையினும் - கூட்டங் கூட்டமாக நவரத்தினங்க ளொருபக்கத்தின் மிகவுங் கிடந்ததாயினும்,—

பெருகார்வத்தினோ டச்சமுமணுகாக் கொச்சமையென்னோ - இவ்விரத்தினங்க ளிருக்கக்கண்டு மிகவும் பிரியம்வாராமலும் இப்பாம்புகள் கிடப்பதைக்கண்டுமிகவும் பயம்வாராமலுமிருந்த அறியாமை யென்னதான்,—

கருவியாவும் பிரிவுறு நிலையேல் - எல்லாக்கருவிகளு நீங்குகையினால் அவ்விடத்து விருப்புவெறுப்புக் காணப்பட்டதில்லையாலோ,—

பொறிபுலனாதி குறைவறநிறைந்துகாட்சியதளிக்குமூட்சியின் - பொறியும்புலனு மாதியாயுள்ள கருவிகளெல்லா மொன்றிற் குறைவறநிறைந்து நின் றிவனுக்கறிவைக்கொடுக்க இவனறிவுசத்தாதி விடயங்களில் மூண்டு சீவிக்கையில்,—

முன்னர்க்கொடுத்தோ ராழிவிடுத்தவர் நாடிக்கொள்வோர்க் காணு துள்கி மீண்டுழித்தந்தவர்க் கண்டாங் கந்தமிலதனைத் தருகவென்னும் பெருமதிபிறங்கும் - அரைநாழிகைக்குமுன் ஒருவன்கையி லொருமோ திரத்தைக் கொடுத் திம்மோதிரத்தை விற்றுக்கொண்டு வாவென்று சொல் லிப் போகவிட அம்மோதிரத்தைக் கொள்வோ ரொருவனாயேனும் காணு திம்மோதிரத்தை நம்முடைய கையில் வைத்துக்கொண் டிருக்கக் கட வோ மல்லவென்று விசாரித்துன்னிடத்தின் மீண்டவன்றந்த மோதிரத் தைவாங்கி வைத்துக்கொண்டு பின்னையும் அரைநாழிகைக்குள் அம் மோதிரந் தந்தவனைக் கண்டு நான்முன் உம்முடைய கையில் விற்கத் தந்த விலைமதிக்க வொண்ணு மோதிரத்தைத் தருவீரென்று சொன்ன யுத்திப்பெருமை மிகவுமுண்டான தென்னதான்,—

அறிவிலாமை யென்றனை - அப்படி அவனுக்கு மயக்கம்வந்த தறி யாமை கொண்டென்று சொல்லில்,—

அது மலமாக்குறிகொளாள ரறைகுவரன்றே - அப்படி யறியாமை யென்று நீ சொன்னது தன்னைக்காணும் மலமாகக்கொண்டு திரிபதார்த்த நிச்சயம்வந்த பெரியோர் சொல்வார்,—

முத்திநிலைமறுப்பு.

அறிவுக்கறிவு செறியவேண்டின்றே - ஆன்மா அறிவேயாயிருக்கில் வேறோரறிவோடுசென்று கூடவேண்டுவதில்லை. இதன்றியும்—,

உண்மையி லிருமையு மொளியே யெனில் - முத்தியில் நீருநீருங் கூடினாற்போல் பதியும்பசுவுமிரண்டுங்கூடிப்பிரகாசமாயிருக்குமென்று நீ சொல்லில்,—

ஒரு தன்மையாக முன்சாற்றினரிலரோ - அவன் சர்வஞ்ஞன், இவன் கிஞ்சிஞ்ஞன், அவன் பரிபூரணன், இவனேகதேசி, அவனின்மலன், இவன் மலசகிதன், அவன்பதி, இவன்பசு, இப்படியிருக்கையாற்சிவனையுமான்மா வையு மொருதன்மையாகக்கொண் டிதற்குமுன்ஒருவருஞ்சொல்வார்இலர்,

முன்புநன்றுடனென்றிய காலையின்ப மெய்துதற் கிலதுயிராதலின் - அநாதியிற் சுத்தமாயிருக்கும் ஆன்மாவைப் பின் கூடியவசுத்தங்கணீங்க முத்தியிற் சிவனேடுகூடி இன்பத்தை யநுபவிக்குமென்றாய். இம்மாயா கன்மங்கள் கூடுவதற்குமுன் ஆன்மா சிவனேடுங்கூடி நிற்கையில் இன்ப மநுபவிக்கக் கண்டோமில்லையே, ஆகையால்,—

நீ யலைபொருத மாயாவாதி யர்யினை யமைய மருணிலை கேள் - நீயும் பிரமந்தானே குடாகாய மாகாயம்போல நிறைந்தவுடனீங்கியகாலத் திரண்டு பிரமமு மொன்றாய் நிற்குமென் றுன்னை டடித்துக்கொள்ளப் பட்ட மாயாவாதி தானாய் விட்டாய், ஆகையால் நீசொன்னதெல்லா மமையும். மேற்றிருவுருணிலைமையை நான் சொல்கிறேன் கேள் என்க. ()

---

## பாடாணவாதிசங்கற்பம்.

மூல மலத்தாற் சாலு மாயை
கருமத் தளவிற் றருமுரு விறைவன்
செறிந்திரு பயனு நுகர்ந்திடு முயிர்க
ளிருளுறு மலத்திற் பருவாற் படுதலி
ன்டையிரு நோக்குந் தடைபட் டோரிற்
றுயருறு மதனாற் செயிருறு துன்பங்
கொத்தை மாந்த ருய்த்துறுந் துயில்போற்
காட்சி யென்னக் காணாத் துயர
மாட்சியை முத்தி யெனவகுத் தனரே.

பெத்தநிலை.

(இ-ள்.) மூல மலத்தாற்சாலுமாயை-அநாதியே ஆன்மாக்களுக் காணவமலமென்ப தொன்றுண்டு அம்மலத்தைப்போக்கு நிமித்தமாக மாயை இவனைவந்து பொருந்தும்,—

கருமத்தளவிற் றருமுரு விறைவன் - ஆன்மா முன்செய்த கன்மத்துக் கேடாகச் சரீரங்களைக் கர்த்தா கொடுப்பன்,—

செறிந்திருபயனுநுகர்ந்திடுமுயிர்கள்-அச்சரீரங்களைப்பொருந்தித்தங்களுக்குண்டானபுண்ணியபாவங்களிரண்டையுமுயிர்கள் புசித்துவரும்,—

இருளுறுமலத்திற் பருவரற்படுதலின்-இப்படி யநுபவித்துவருமிடத்தாணவமலத்தினால் மறைப்புண்கையால்,—

இடையிரு நோக்குந் தடைபட்டோரின் றுயருறும்-முன்கண்டுவந்த கண்ணடுவே காசமேலீட்டாற் காணாதிருந்த கண்ணுடையாரைப் போல் அவத்தைப்படும்,—

அதனாற் செயிருறுதுன்பம்-அப்படியவத்தைப்பட்டு வரலாற் குற்றமுடைத்தாகிய பிறவித்துன்ப மேன்மேல் உண்டாகும்,—

முத்திநிலை.

கொத்தைமாந்த ருய்த்துறுந் துயில்போல் - அஞ்ஞானிகளாம் ஆன்மாக்களெல்லா வவத்தைகளு நீங்கி அதீதத்தில் அழுந்திக் கிடக்குந் தன்மைபோல்,—

காட்சியென்னக்காணாத்துயர மாட்சியைமுத்தி யென வகுத்தனரே - அவ்விடத்துச் சுட்டிக்கணுங் காட்சியுமில்லையாய்ச் சுகதுக்கவநுபோகங்களு மில்லையாயிருக்கும் நிலையை முத்தியென்றுசொல்வர் என்க. (எ)

---

## நிராகரணம்

வகுத்துரை பெருகத் தொகுத்திடு முத்தி
நன்று நன்றிரு ளொன்றிய மலத்தா
முளத்திற் குறுபொறி செறிபுல னுகர்தல்
விளக்கிற் றிகழு மேன்மைய தன்றே

கருவிக ளகல்வுழி மருவிய துயரமு
நன்றென லாகுந் துன்றிய படலத்
திடைதடைப் பட்ட சுடர்விழி மாந்தர்
படல நீங்குதல் கடனு தலினே
காட்சி யென்னக் காணுத் துயர
மாட்சியை முத்தி யெனவகுத் துரைக்கிற்
கரணு பாவ மரணங் கருமர
மேய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே
யனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா
தனிதரு துயர மெனுமிது திடமே
பாடா ணத்திற் கூடா முத்தி.

பேத்தநிலைமறுப்பு.

(இ-ள்.) வகுத்துரைபெருகத் தொகுத்திடுமுத்திநன்றுநன்றிருளொன்றியமலத்தாம் - சொல்லைப்பலவாகவகுத்துச்சிலதிருஷ்டாந்தங்களையுஞ் சொல்லிமுடிவில்யான் மலத்தோடுங்கூடிநிற்கும் கேவலக்கிடையைமுத்தி யென்று நீசொன்னது நன்று, இப்படி யொருவருஞ் சொல்வாரிலர்,—

உளத்திற்குறுபொறி செறிபுலனுகர்தல் விளக்கிற்றிகழு மேன்மைய தன்றே - சகலத்தி லான்மாவுக்குப் பொருந்தப்பட்ட இந்திரியங்கள் காட்டாகஅவ்வான்மாசெறிந்திருக்குஞ்சத்தாதிவிடயங்களைப்புசித்துக்கொண்டு வருவது கண்ணுக்கு விளக்கினது காட்டாகக் கண்டுவரும் தன்மைபோலு மாகையாற் சகலங் குற்றமாகச்சொன்னாய்,—

கருவிகளகல்வுழி மருவியதுயரமு நன்றெனலாகும் - விளக்குப்போல் இவனுக்குக் காட்டும் கருவிகணீங்கினவிடத் தாணவமலத்தி லழுந்திக் கிடக்கும் கேவலமு முன்னீசொன்ன சகலம்போல் நன்றென்று சொல்லலாகும். அஃதெதுகொண்டென்னில்,—

துன்றியபடலத் திடைதடைப்பட்ட சுடர்விழிமாந்தர் படலநீங்குதல் கடனுதலினே - மிக்கபலத்தினால் நடுவே காட்சி தடைப்பட்ட கண்ணையுடையஆன்மாக்களுக்குப்பின்னொருகாலத்தில்ஔடதப்பிரயோகங்களினால் அக்கண்ணின்படலநீங்குவது முறையா யிருக்கையாலெனக்கொள்க,—

முத்திநிலைமறுப்பு.

காட்சியென்னக் காணுத்துயர மாட்சியைமுத்தி யெனவகுத்துரைக்கின் - சுட்டிக்காண்டற்கொரு காட்சியுமின்றிச் சுக துக்கங்களினநுபவமின்றியிருக்கு மிதை முத்தியென்று நீ பலவாறுவகுத்துச்சொல்லில்,—

கரணுபாவ மரணங்கருமர மேய்ந்தவர் முத்தி சேர்ந்தவரன்றே - கரணங்களின் பிரிவைப்பொருந்திய ஆன்மாக்களில்மரணத்தையடைந்தாருங் கருவையடைந்தாரும் மாவர்க்கங்களைப்பொருந்தினருமிவர்களனைவருமுத்தியைப் பெற்றவரேயாகவேண்டும்,—

அனையகதிக்கோர் முனைவரும்வேண்டா-அப்படிப்பட்ட முத்தியைப் பெறற்கோ ராசிரியனும் வேண்டுவதின்று,—

தனிதருதுயர மெனுமிதுதிடமே - இம் முத்தியெல்லாக்கருவிகளு நீங்கி ஆணவத்தோடுங்கூடி யொன்று மறியாமற்கிடக்கிற்; கேவலத்துயர மென்பது தப்பாதாகையால்,—

பாடாணத்திற் கூடாமுத்தி-கல்லுப்போலொன்றுமறியாமற்கிடப்பது முத்தியென்று சொல்லப்படாது என்க. (அ)

---

## பேதவாதிசங்கற்பம்.

ஈசன தருளாற்பாசத் தொகுதி
செறிவுறு செம்பிற் கறையுறு களிம்பு
குளிகை தாக்க வொளிபெற் றுங்கு
நித்த சுத்த முத்த ராக
ரு. வைத்தன ருலகின் மறைவல் லோரே.

(இ-ள்.) செறிவுறுசெம்பிற்கறையுறுகளிம்புகுளிகைதாக்கவொளிபெற் றுங்கு ஈசனதருளாற் பாசத்தொகுதி- குகைக்குள் செறிந்தசெம்பினிடத் துண்டான கரிய காளிதமானதிரதகுளிகை சென்று கூடினவிடத்து அக் காளிதங்கெட்டுப் பத்துமாற்றுப்பொன்னுந் தன்மைபோற் பக்குவப்பட்ட ஆன்மாக்கட்குக் கர்த்தாவின் காருண்ணியத்தான் ஆணவ மாயை காமிய மென்று சொல்லப்பட்ட மலக்கூட்டங்கெட்டு,—

நித்தசுத்தமுத்தராக வைத்தனருலகின் மறைவல்லோரே - அழியாத தாய் நின்மலமாயிருக்குமுத்தியைப்பெற்றுப் பெறுவானும் பேறுமாயிருப் பார்களென்று சொல்லிவைத்தனருலகத்தின்கண் வேதத்தினுண்மையை யறிந்த பெரியோர் என்க. (௬)

---

## நிராகரணம்.

மறைகளாகமத் துறைகண்மற் றெவையும்
நாசமில் பதிபசு பாசமென் றுரைத்த
லயர்த்தோர் குளிகைச் சயத்தாற் றும்பிரக்
காளித நாசம் பாசத் தேய்த்தல்
ரு. கூடா தன்றியுங் குளிகை சேருண
நீடா தழித்த நிலைநிலை யாதலிற்
பேத வாத மோதுதல் பிழையே
யின்னு மின்னுயி ரோமங் குளிகை
தன்னி லங்கியங் தருவது திடமே
௧0. வீடித் திறனிற் கூடக் கூடா.

(இ-ள்.) மறைகளாகமத்துறைகண்மற்றெவையும்-நான்குவேதங்களு மாகமங்களு மவற்றின் வழிநூலாகிய புராணங்களுஞ் சாத்திரங்களும்,—

நாசமில்பதிபசு பாசமென்றுரைத்தல்-பதிபசுபாசங்களுக் கழிவில்லை யென்று சொல்வது,—

அயர்த்தோர் குளிகைச் சயத்தாற் றும்பிரக் காளிதநாசம் - மறந்திப் பொழு தோரிரதகுளிகையின் சாமர்த்தியத்தாற் செம்பிலுண்டாகிய காளிதங் கெட்டுப்போவதாக,—

பாசத்தேய்த்தல் கூடாது - பாசத்திற்கு நீ யுவமைகூறியது சாத்திரவிரோதம்,—

அன்றியுங்குளிகை சேருணகேடா தழித்தநிலைநிலை யாதலில் - அதுவல்லாமலும் இரதகுளிகை செம்பை நிலைநிற்கவொட்டாமல் அழித்துப் பொன்னுக்கிய திருஷ்டாந்தநிலை யுனக்குத் தாஷ்டாந்தநிலையாகையால்,—

பேதவாத மோதுதல்பிழையே - பசுமுதல்கெடாது பெறுவானும் பேறுமாயிருக்குமென்று நீ முன்கூறிய பேதவாதமும் பழுதாம்,—

இன்னுமின்னுயி ரேமங்குளிகை தன்னிலங்கியந்தருவதுதிடமே-இதுவன்றிச் செம்பு தன்னைச்சுத்தமாக்கிய குளிகையுமாகாமல் தன்றன்மையுங்கெட்டு நடுவே பொன்னுந்தன்மைபோல், இவ்வான்மாவுந் தன்னைச் சுத்தமாக்கிய சிவ சொரூபமுமாகாமல் தன்தன்மையுங்கெட்டுவேறொரு சொரூபமாகவேண்டுகையாற் குற்றமுண்டென்பதுதப்பாது,—

வீடித்திறனிற் கூடக்கூடா - முத்திநிலை செம்பு மிரதகுளிகையும் போலுமெனக் கூறிய வகையிற்கூடுமென்ப தாகாது என்க. (கo)

---

## சிவசமவாதிசங்கற்பம்.

---

பாசமும் பசுவு மீசனு மென்றிம்
மூவகை யுணர்வுந் தான்முதன் மையவாய்ப்
பாச வைம்புலன் றேசுற வுணர்த்தப்
பசுத்தனி ஞானம் புசித்திடு மன்றே
யினைய ஞானம் பிறிவுற வெரியாச்
செந்தழ றகுநெறி யந்தமி லுயிரு
மறிவா யொன்று மறியா தன்றே
யிவ்வா றொழுகு மேனை யுயிர்க்கு
முன்னேன் றனது முதிரொளி ஞான
மறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த
வண்டென வுயிரைக் கொண்டிடு முயிரது
தன்னை நோக்கித் தானது வாகி
யைவகைத் தொழிலு மெய்வகை யுணர்வும்
பிரியா வாறு பெற்றுத்
திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே.

பேத்த நிலை.

(இ-ள்.) பாசமும் பசுவுமீசனுமென்றிம் மூவகையுணர்வுந்தான்முதன்மையவாய் - பதி பசு பாச மூன்றினுக்கும் பதிஞானமென்றும் பசுஞான

மென்றும் பாசஞானமென்றுங் கூறப்பட்ட ஞானங்கள் அநாதியே முதன்மையா யிருக்கையால்,—

பாச வைம்புலன் றேசுற வுணர்த்த - பாசஞானமாகிய இந்திரியங்கள் அவ்விடயங்களை மயக்கமற வறிவிக்க,—

பசுத்தனி ஞானம் புசித்திடு மன்றே - ஒப்பில்லாப் பசுஞானம் விடயங்களைப் புசிக்கும்,—

இணையஞானம் பிறிவுற வெரியாச் செந்தழறகுநெறி - இவ்விரண்டு ஞானங்களு நீங்கியவிடத்துக் கொழுந்து விட்டெரியாமற் கிடக்குஞ் செந்தீயையொக்குமென்னலாம்,—

அந்தமி லுயிருமறிவாயொன்று மறியாதன்றே-அவத்தையிலழிவில்லாதிருக்கு மான்மாவு மறிவாயிருக்கையிற் சுட்டியறிதற் காகாது,—

முத்தி நிலை.

இவ்வாறுழுகு மேனையுயிர்க்கு - இப்படி நாடோறுங் கேவலசகலப் பட்டுவரு மான்மாவுக்கு,—

முன்னொன்றனது முதிரொளி ஞானம் - மூன்று முதற்குள் முற்பட்டுக்கிடந்த அறிவாயிருக்கும் பதிஞானம்,—

அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த வண்டென வுயிரைக்கொண்டிடும் - ஒன்றுமறியாமற் கிடக்கும் பச்சை நிறத்தையுடைய சிறியபுழுவைவந் தெடுத்துக்கொண்ட வேட்டுவன்போ லொன்றுமறியா ஆன்மாவை வந்தெடுத்துக்கொள்ளும்,—

உயிரது தன்னை நோக்கித் தானதுவாகி - புழு அவ்வேட்டுவனை நினைந்திருந்தவ்வேட்டுவன் சொரூபமேயானாற்போல் ஆன்மாவுமச்சிவத்தியானம்பண்ணி யச்சிவசொரூபமாகி,—

ஐவகைத்தொழிலு மெய்வகை யுணர்வும் பிரியாவாறு பெற்று-வேட்டுவனாகியபுழு அவ்வேட்டுவன்செய்யுந் தொழிலுஞ்செய்ததன் சொரூபமுநீங்கா ததன் கூட்டத்தோடுங் கூடியிருந்த தன்மைபோல் இவ்வான்மாவும் பஞ்சகிர்த்தியமுஞ்சர்வஞ்ஞத்தையுந்தன்னைவிட்டுநீங்காவாறடைந்து,-

திரியாப் பெரியோர் திரட்சி சேர்ந்திடுமே-முன் இவ்வறிவுந் தொழிலும் பெற்று நீங்காதிருக்கும் பெரியோர் கூட்டத்தொடுங்கூடிநிற்கும் என்க. ()

---

## நிராகரணம்.

சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமு
மொருகா லன்றித் தெரிவுற நிற்கி
லொண்பொருள் காணும் பண்பினுக் கொருகாற்
பருதியு மதியு மெரிதரு விளக்கும்
ரு. வேண்ட வின்றே காண்டகு காலை
யொன்றொன் றுக நின்றறி வுறுமெனி
லங்கிய மறியா மன்னுயிர் பொறிபுலன்

றுமேறு வறியா தலைவர்க் குலகினை
யானு வறிவா லறியவேண் டின்றே
கொழுந்தழ றருமெனி லழுந்திடு மவத்தையிற்
றிரியாத் தலைவர் தெரியாத் தன்மைவந்
தெய்த லாகா மெய்யுறு பொருட்கு
முன்னர்க் கிடந் தன்னென வெடுத்த
வேட்டுவ னியல்பு கூட்டல் பெறுதே
வண்டிறும் பெடாவுட் கொண்டது தனக்கு
மந்திர வாதந் தந்தது மிலதே
யெடுத்திடு மதனு லடுத்ததென் றறையிற்
கருமயிர்க் குட்டி யிருசிறைப் பறைவை
யாயின தெடுத்த தாய்சாற் றிலரோ
பிறவிப் பேதத் துறையிவை கிடக்க
வேயு மித்திற னுயுங் காலை
யோகத் தகுதி யாக்த் தகுமே
ஞான மின்மையென் றோதுவ தெவனெனி
னுயிரு முணர்வும் பயிலுத லின்றி
வேட்டுவ னுருவ மென்புழு வுணர்வு
கூட்டுத லானுங் கூடுத லானு
முத்தியி லிறையிற் பற்றுத லின்றித்
தன்னுரு வணைந்த பின்னத னுணர்வு
மாறுத லானு மூறுடைத் தன்றே
யீசன தியல்பரு ளெய்துயி ரியற்றல்
பேசுத றவறெனப் பெருமறை யறைய
வைந்தொழி லுயிருந் தந்திட றகுமே
யாவதென் முன்னு னவலர் பெருமான்
பண்டொரு முதலை யுண்ட மைந்தனை
வரவழைத் தனனென் றுய்பிழைப் பிலததூஉந்
தந்திட வேண்டு மென்றன னன்றே
யின்னவை கிடக்க முன்னவன் றன்மை
யெய்தின ரெல்லாச் செய்தியுஞ் செய்வ
ரிரும்பெரி யெய்தித் தருஞ்செய றகவெனிற்
பொருணிலை கிடக்க வொருதிட் டாந்தப்
பேறே யாயிற் சீறுக் கதுவிய
புனலொரு புடைசேர் கனறகு மாயினும்
வேறொரு பொருளை நீறுக் கிலதே
நெருப்பெனு மிதனி னுருத்தனி காட்டுக
வங்கியு மொன்றிற் றங்கி நின்றலது
தன்றொழி னடத்தா தென்றறி யினிநீ
யிரும்பனற் செய்தி தரும்பரி சுளதோ
வதுவெனோ ரலகை பொதிதருங் காலை

யதன்செய லனைத்து மிவன்செய லாமா
லவனிவ னாகி யிவனவன் செய்திக்
கென்னவை யென்னிற் பின்னுறு செயலு
மதன்செய லன்றி யிவன்செய லாகி
யிவன்செயல் பேயின் றன்செய லாகி
யிருந்த வாவெனத் தெரிந்திட வேண்டுந்
தெரியா தாகிற் புரியிற் கடுங்கன
லெரிந்த தென்னு மிதுதகு மன்றியு
மவனிவ னாகி யிவனவன் செய்தி
யென்று செய்வா னென்றிய மதத்தா
யெல்லா மறிதல் செல்லா துயிர்கள்
சிற்றறி வெனுமிச் சொற்றவ றூகு
மென்பதெ னலகை தன்பத மடைந்தோர்
கொண்ட வாறு கண்டன மென்னின்
மூங்கை யந்தருந் றேங்கிய குணங்குறி
செய்வதெ னின்னும் பௌவமுற் றழுந்தினு
நாழி கொள்ளா தாழியி னலைபுன
லதனுற் கருத்து முதலுள தாக
வேண்டு மன்றே யீண்டினி யமையு
மெல்லா மெனுமிச் சொல்லாற் படும்பொரு
ளனைத்துந் தாக்கா தனிப்பரத் துற்றவர்க்
கெவ்வகை யுணர்வு செய்வதென் செப்புக
வொன்றி னொன்று மொன்று துலகி
னின்ற போதுயிர் நேரா மன்றே
முத்தி யுற்ற நற்றவ ரவையிடை
சேர்வ தொன்றனை சார்தரு முத்தி
சாலோக் கியமோ சாயுச்சிய மெனிற்
பந்த முற்ற கந்தல கழித்த
வறிவினோ டறிவு பிரியாப் பெற்றி
வேண்டு மென்றதற் கீண்டிவ ரிவ்வா
றிருப்ப ரென்பதற் குருத்தான் வேண்டு
மண்ணல தருளி னண்ணி யிருப்பினுஞ்
சீவன் முத்தரொன் றேதின ரகன்று
நீங்கியு முருவ நீங்கா தாயி
னோங்கிய முத்தி யாவதென் னுரைக்க
செடியுட லணுகாக் குடிலை கொடுக்குமென்
றேதினை நீயே பேதாய் பகட்டுற
லொளிர்சினை முச்சித் தளிரொறு மிதுதகு
மிச்சா ரூப நச்சின ரொன்னின்
மும்மலத் தேது மின்மைய தன்றே
யிதுவளர் முத்திப் பதமென வியம்புவ
ரீங்கிவை நிற்க

பேத்தந்நிலைமறுப்பு.

(இ-ள்.)சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமு மொருகா லன்றித் தெரிவுற நிற்கில்- இங்ஙனங் கூடிவரும் பதி பசுபாச மென்னு மூவகைஞானமு மொக்கக்கூடிநின்றே யொருமுதலறியப்படவேண்டுமாயின்,—

ஒண் பொருள்காணும் பண்பினுக் கொருகால் - கண் அழகியபதார்த்தத்தி லொன்றைக் காணவேண்டி விசாரிக்குமிடத்து,—

பருதியு மதியு மெரிதரு விளக்கும் - ஆதித்தனுயினும் சந்திரனுயினும் எரியும்விளக்காயினும்,—

வேண்ட லின்றே காண்டகு காலை-ஒன்று காட்டக் காண்பதொழிந்து இவை மூன்றுங்கூடிநின்று காட்டக் கண்ணென்றைக் காணவேண்டுவதன்று; ஆகையால் மூன்றுஞானமுங் கூடியறியுமென்றதாகாது,—

ஒன்றென்றாக நின்றறி வுறு மெனில் - அப்படியன்றுகாணும், தனித்தனியேநின் றெவ்வொருவிடயம் அறியுமென்றுநீசொல்லில்,—

அங்கிய மறியா மன்னுயிர் - நிலைபெற்ற ஆன்மாவுக்கு விடயங்கள் வேறாயிருக்கையால் -பசுஞானந்தானுகவொருவிடயமுமறியமாட்டாது,—

பொறி புலன் றனே வறியா - பாசஞானம் சடமாகையா லொரு விடயமுமறியாது,—

தலைவர்க்குலகினை யானுவறிவா லறியவேண்டின்றே - பதிஞானமநாதியே பேரறிவாகையால்விடயம்புதிதாகச்சுட்டி யறியவேண்டுவதின்று,—

கொழுந்தழ றகுமெனி லழுந்திடு மவத்தையில் - கருவிகணீங்கி ஆணவத்தான்மறைக்கப்பட்டிருக்குமவத்தையில் ஆன்மா எரியாமற்கிடக்குங்கொழுந்தீயை யொத்திருக்கு மாகில்,—

திரியாத் தலைவர் செறியாத் தன்மைவந் தெய்த லாகா - ஒருகாலத்து மிவனை விட்டு நீங்காக் கர்த்தாவை யிவனறியாதிருக்குமுறைமை இவனுக்குண்டாகாது,—

ஆன்மா பஞ்சகிருத்தியஞ்செய்யுமென்பதை மறுத்தல்.

மெய்யுறு பொருட்கு முன்னர்க் கிடங் தன்னென வெடுத்த - சிவனேடொன்றுபட்டு முத்தித்தன்மைக்கு முன்னொன்று மறியாமற் கிடந்த பச்சைப்புழுவைத் தன்சொரூபமாகவேண்டுமென் றெடுத்த,—

வேட்டுவ னியல்பு கூட்டல் பெறுதே - வேட்டுவனியல்பு உவமையாகக் கூட்டிக்கூறுவது பெறுது,—

வண்டிறும் பெடாவுட் கொண்டது தனக்கு மந்திர வாதந் தந்தது மிலதே - இவனிவ்வான்மாக்களுக்கு மந்திரவுபதேசஞ்செய்துதற்சொரூபமாக்கினுற்போல வேட்டுவன் புழுவையெடுத்ததற்கு மந்திரவுபதேசங் கூறித் தற்சொரூபமாக்கியதாகக் கூறப்படாது. ஆகையால் நீ வேட்டுவனையும் புழுவையு முத்திக் குவமைகூறியதாகாது,—

எடுத்திடு மதனு லடுத்ததென் றறையில் - அப்படியன்று காணும், அவ்வேட்டுவன்சென் றெடுத்ததுதானே யுபதேசமாகப் புழு தற்சொரூப மாயிற்றென்று நீ சொல்லில்,—

கரு மயிர்க்குட்டி யிருசிறைப் பறவை யாயினது-கருமையான மயிர்க் குட்டிப்புழு பெரிய சிறகினையுடைய வண்டுப் பறவையாய் விட்டது,—

எடுத்த தாயர் சாற்றிலரோ - அதற்கொரு தாயாய்வந் தெடுத்ததுப தேசமாய்ப் பறவையாய்விட்டதென்றொருவருஞ் சொல்வாரிலர்,—

பிறவிப் பேதத்துறை யிவை கிடக்க-ஆகையால் பச்சைப்புழு மயிர்க் குட்டியுங் கன்மத்துக்கீடா அச்சுமாறியது முத்திக் குவமைசொல்லப் படாது; இவை கிடக்க இதன்றியும்,—

ஏயுமித்திற னுயுங் காலை யோகத் தகுதி யாகத் தகுமே - புழு வேட் டுவனுற்போல் ஆன்மாவுஞ் சிவசொரூபமானதை விசாரிக்கின் யோகத் திற்குச்சொல்லலாமொழிந்து ஞானத்திற்காகாது,—

ஞான மின்மையென் றேதுவ தெவனெனில் - இது ஞானமார்க்க மாகாதென்ற தெத்தாலென்னில்,—

உயிரு முணர்வும் பயிலுத லின்றி-ஆன்மாவுஞ் சிவனுங்கூடியொன்று பட்டிருப்பதே முத்தியென்றிருக்கையில் வேறுபட்டிருக்குமென்று நீ சொன்னதன்றியும்,—

வேட்டுவ னுருவ மென்புழு வுணர்வு கூட்டுதலா லுருக் கூடுத லானும் - வேட்டுவனுடைய சொரூபத்தை மெல்லிய புழுவினுடையகினை வானது கூடுதலால் உனக்கு முத்தியிலொருசரீரங்கூடலாலும்,—

முத்தியி லிறையிற் பற்றுத லின்றி - முத்தியிற் கர்த்தாவினிடத்துக் கூடியிருத்தலன்றி வேறுயிருக்குமென்று சொன்னதோடமன்றியும்,—

தன்னுரு வணைந்த பின்னத னுணர்வுமாறுத லானும் - புழுவேட்டுவன் சொரூபத்தைப்பெற்றபின்முன்னுண்டானவறிவதற்கில்லாமையாலும்,—

ஊறுடைத் தன்றே - இதை ஞானத்தா லுண்டாகிய முத்தியென்று கூறுவதாகாது,—

ஈசன தியல்பரு ளெய்துயி ரியற்றல் - கர்த்தாவுக்குண்டாகிய பஞ்ச கிருத்தியங்களைத் திருவருளைப் பெற்ற ஆன்மாக்கள் செய்யுமென்று,—

பேசுத றவறெனப் பெருமறை யறைய - சொல்வதுங் குற்றமெனப் பெரிய வேதம் சொல்லின்,—

ஐந்தொழி லுயிருந்தந்திடறகுமோ-கர்த்தாவாற்செய்யும் பஞ்சகிருத் தியங்களையும் ஆன்மாவினுற் செய்யப்படுமென்பது தகாது,—

ஆவதென் முன்னு ளுவலர் பெருமான் பண்டொரு முதலை யுண்ட் மைந்தனை வரவழைத்தனனென்றாய் - அப்படி சொல்வதென்னதான்? முற் காலத்தில் நம்பியாரூரர் முதலைவிழுங்கிய பிள்ளையை வரவழைத்தாரிலரோ வென்றுசொன்னாய்,—

பிழைப்பில தனுவுந் தந்திடவேண்டு மென்றனரன்றே - அப்படிக் கூறியதுந் தவறன்று "உரைப்பாருரையுகந் துள்கவல்லார் தங்களுச்சியா-யரைக்காடரவா வாதியுமந்தமுமாயினாய்-புரைக்காடுசோலைப் புக்கொளியூ ரவிநாசியே - கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே." என்னுந் திருப்பாட்டால் அப்பிள்ளையைத்தர வேண்டுமென்ற தொழிந்து தாமே வரவழைத்த தின்றாகலால் திருவருளைப்பெற்ற ஆன்மாபஞ்சகிருத் தியஞ் செய்யுமென்ற தாகாது,—

இன்னவை கிடக்க முன்னவன் றன்மை யெய்தினர் - இவையெல்லா நீ கூறியவை; அவைகிடக்க கர்த்தாவின்றிருவருளைப் பெற்றோரோ,—

எல்லாச்செய்தியுஞ் செய்வர்-கர்த்தாசெய்யும் சிருஷ்டிமுதலாய கிருத் தியங்கள் செய்வர். அஃதென்போ லென்னில்,—

இரும்பெரி யெய்தித் தருஞ் செயறக வெனில் - இரும்பு தீயைப் பொருந்தி அதன் சொரூபத்தையும் பெற்று அதன் றொழிலையுஞ் செய்ததுபோ லென்னின்,—

பொருணிலை கிடக்க வொரு திட்டாந்தப் பேறேயாயின்-திருவருளைப் பெற்ற நம்பியாரூராற் பஞ்சகிருத்தியஞ் செய்யப்பட்ட தின்றென்பது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கையால் அதுகொண்டிரும்புந்தீயும் போலெ னத் திருஷ்டாந்தத்தாற் சாதிக்கில்,—

சீறுக்கதுவிய புனலொரு புடைசேர் கனறகுமாயினும் - ஆரவாரித் துச்செல்லுந் தண்ணீர் தீயையுற்றறைக்கியமாயிருந்ததாயினும்,—

வேறொரு பொருளை நீறுக்கிலதே - தீயைச்சேர்ந்த இரும்பு போல, இவ்வெந்நீர் வைக்கோல் முதலியவற்றைச் சுட்டெரிக்காது அது தண்ணீரோடு நிற்றலிற் சுட்டதில்லை காணும், தனித்து நிற்கிற்சுடு மென்பையாயின்,—

நெருப்பெனுமிதனி னுருத்தனி காட்டுக - தீயென்னு மிப்பூத வடிந் தனித்துநின்று தன்றொழிலைச் செய்யாது. எங்கேனுந் தனித்துக் காரியப்பட்ட துண்டாயிற் காட்டு,—

அங்கியுமொன்றிற் றங்கி நின்றலது தன்றொழி னடத்தாதென் றறி யினி நீ - தீயு மொன்றைச் சார்ந்து நின்றல்லது தன்றொழிலைச்செய்யா தென்றறி; ஆகையால்,—

இரும்பனற்செய்தி தரும்பரி சுளதோ - தீ யிரும்பைச் சார்ந்து நின்றே தன்றொழிலைச்செய்வதொழிந்து இரும்புத் தீத்தொழிலைச் செய்த துண்டோ. ஆகையாற் றிருவருளைப் பெற்றோர் பஞ்சகிருத்தியஞ்செய்வ தொன்றதமையாது,—

அதுவென்னோ ரலகைபொதிதருங்காலை-ஒருவனையொருபசாசு பிடித்த விடத்து;—

அதன்செயலனைத்து மிவன்செயலாமால் - அப்பசாசின் செயலெ லாத்துமிவன்செயலாகக் காணப்பட்டதோ வின்றே, ஆகையால் அருளைப் பெற்றோர் பஞ்சகிருத்தியஞ் செய்வரென்பையாயின்,—

அவனிவனாகி லிவனவன் செய்திக்கென் - அச்சிவ னிவ்வான்மாவா யிருந்து தன்றொழிலைச் செய்தானாகில் இவ்வான்மா அச்சிவனுடைய தொழிலைச் செய்வதெதனாற் பொருந்தும்,—

அவை யென்னில் - அத்தொழில்களைச் செய்தற் கிவ்வான்மா வுரித் தென்பையேல்,—

பின்னுறு செயலு மதன்செயலன்றி யிவன்செயலாகில் - ஒருவனைப் பேய்பிடித்துவிட்டு நீங்கியபோதிவன்செய்தனவெல்லாமிவன்செயலாமோ அஃதெல்லாம் பேய்ச்செயலாகா திவன்செயலேயாயின்,—

இவன்செயல் பேயின் றன் செயலாகி யிருந்தவாவெனத் தெரிந்திட வேண்டும் - அப்படி யிவனுக்குப் பேய்பிடித்தபோது செய்தனவு மறிய வேண்டும், அறியப்படாததென் னென்பையாயின்,—

தெரியாதாகில் - அப்படி இவனுக்குப் பேய்பிடித்தபோதுசெய்தவை அறியப்படாதெனின்,—

புரியிற்கடுங்கன லெரிந்ததென் னுமிதுதகும்-புரியினிடத்துக்கொடிய தீயேகூடிநின்று தன்தொழிலைச்செய்ததுபோற் சிவனுமான்மாவினிடத்தி னின்று தன்தொழிலைச் செய்ததொழிந்து ஆன்மா சிவனது தொழிலைச் செய்யாது,—

அன்றியு மவனிவனாகி லிவனவன் செய்தி - இஃதன்றியும் அச்சிவ னொருகாலத்தும் சநநமரணமில்லாதவன், இவ்வான்மா வொருகணப்பொழு திற் சநநமரணப்படுபவன், இப்படிப்பட்ட ஆன்மா அச்சிவனுடைய தொழிலைச் செய்தானுமாயினும்,—

என்றுசெய்வா னென்றிய மதத்தாய் - எக்காலத்திற்செய்து நிறை வேற்றுவான் உன்மத்தத்தோடே கூடியிருப்பவனே இதற்குத்தர முண் டாயிற்சொல்,—

ஆன்மாவிற்குசர்வஞ்ஞத்துவமுண்டேன்பதைமறுத்தல்.

எல்லாமறிதல் செல்லா துயிர்கள் - இஃதன்றியும் சர்வஞ்ஞத்துவம் ஆன்மாவுக்குண்டென்றனை, எல்லாவற்றையு மறியும்பகுதி ஆன்மாக்க ளுக்குண்டாகாது. எல்லாவற்றையு மறிந்திருக்குந் திருவருளிவனிடத்திற் பதிதலால் இவனுமெல்லாவற்றையு மறிவனென்பையாயின்,—

சிற்றறி வெனுமிச் சொல்தவறுகும் - இவ்வான்மா கிஞ்சிக்ஞனென் பதுபழுதாம்,—

என்பதெனலகைதன்பத மடைந்தோர் கொண்டவாறு கண்டன மென்னில்-என்றுநீசொல்வதென்ன? பேயின்பதவியைப்பெற்றோர் அப்பே ய்க்குண்டாகியவருங்காலநிகழ்ச்சியெல்லாங் கூறக்கண்டோமென்னில்,—

மூங்கை யந்தருற்றோங்கிய குணங்குறிசெய்வதென் - ஊமையாயும் குருடனாயும் இருப்பவனொருவனை இவையெல்லாங் குறைவற்றிருக்கும் பேய்ப்பிடித்த விடத் தவனுவமூங்கி கூறியதுமின்று. கண்டெரிந்தொன் றைக்கண்டதுமின்று. ஆகையால் பேயின்றன்மையெல்லாம் பிடியுண்டவனுக்குண்டாகாது,—

இன்னும் பௌவமுற்றமூழ்கினு நாழிகொள்ளாதாழியின் அலைபுனல்- இஃதன்றியு நாழியைக் கடலிற் பொருந்தியமிழ்த்தினும் அலையை யுடைய அக்கடல் நீரையெல்லாங் கொள்ளாது,—

அதனாற் கருத்து முதலுளதாகவேண்டும் - அப்படியிருக்கையினாற் பொறியோடுங்கூடியிருந்தாலும்ஆன்மாவுக்குள்ளஅறிவுண்டாவதொழிந்து கர்த்தாவுக்குள்ளவறிவெல்லா முண்டாகாதாகவேண்டும்,—

அன்றே யீண்டினியமையும் - அநாதியிலேயே இவ்வாறிருக்கையால் நீயிவ்விடத்தருளோடுங்கூடின ஆன்மா எல்லாவற்றையுமறியு மென்பதை இனிவிடுவாயாக. அஃதேனென்னில்,—

எல்லாமெனுமிச்சொல்லாற்படும்பொருளனைத்துந்தாக்காதனிப்பரத் துற்றவர்க்கெவ்வகையுணர்வு செய்வதென் செப்புக - சர்வமென்றசொல் லானுண்டாகிய பொருளனைத்திலுந் தோய்வறநிற்கு மொப்பற்ற சிவனிடத்திற் பொருந்தினவர்க் கெம்முறைமை சர்வஞ்ஞத்துவமுண்டானது, அவ்விடத்துச் செய்யுந் தொழிலேதுசொல். ஆகையாற் சிவனைப் பெற்றோர்க்குச் சர்வஞ்ஞத்துவமென்பதுகூடாது. இஃதன்றியும்,—

## முத்திநிலையைமறுத்தல்.

ஒன்றினொன்று மொன்று தூலகி னின்றபோதுயிர் நோமன்றே - முத்தியில் ஆன்மாவுஞ் சிவமும் ஒன்றென்னிலொரு முதலில்லையாம், அவ்வாறு பரமுத்தியடையாமற் சரீரத்தைப்பெற்றுச் சீவன் முத்தனாயிருக்குமென்னில்,அவ்வாறிருந்த ஆன்மாசிவனுக்குச்சமமாகாதே. ஆகையாற் பொருந்தாது. இஃதன்றியும்,—

முத்தியுற்ற நற்றவரவையிடை சேர்வனொன்றனை - முன்னே திருவருளைப்பெற்றோர் முத்தியைப்பெற்றிருக்கு நல்ல தவத்தினையுடைய பெரியோர்கூட்டத்தினடுவே சென்றிருப்பானொன்றனை,—

சார்தரு முத்தி சாலோக் கியமோ - இவ்வாறுபொருந்தினோனொன்று கூறிய முத்தி சாலோக்கிய முத்தியைச்சொன்னாயோ,—

சாயுச்சிய மென்னில் - அப்படி யன்றுகாணும், நான் சாயுச்சியமுத்தியைக்கூறினே னென்னில்,—

பந்தமுற்றகந்தலகழித்த வறிவினோடறிவு - ஆன்மாக்களைப்பொருந்தியமலங்களைப்போக்கிய கர்த்தாவோடு ஆன்மாகூடியவிடத்து,—

பிரியாப்பெற்றிவேண்டு மென்றதற்கு - பிரியாமலொன்றுபட்டிருக்க வேண்டுமென்ற வியல்பினுக்கு,—

ஈண்டிவ ரிவ்வாறிருப்ப ரென்பதற் குருத்தான்வேண்டும் - இவ்விடத் தப்பரமுத்தியைப்பெற்றோர் முன் முத்தியைப் பெற்றிருக்கும் பெரிய ரோடுங் கூடியிருப்பாரென்கையால் இவர்க்குமொருசரீர முண்டாகவேண்டும். இஃதன்றியும்,—

அண்ணலதருளி னண்ணியிருப்பினுஞ் சிவன்முத்தரென் றோதினர் - கர்த்தாவின் திருவருளைப்பெற்றுப் பரமுத்தியையடையாம லிச்சரீரத்தோடிருந்தாரேனு மவரைச் சீவன்முத்தரென்று நல்லோரூற்கூறப்பட்டனர். அவ்வாறுகூறப்பட்டிருக்கையில்,—

அகன்று நீங்கியுமுருவ நீங்காதாயின் - இச்சரீர தொந்தனை விட்டுப் போய்ப்பரமுத்தியைப்பெற்றவிடத்துஞ்சரீரதொந்தனை நீங்காமலிருக்கின்,

ஓங்கியமுத்தி யாவதென் னுரைக்க - அதுமேலாம்பரமுத்தியாவதெப் படித்தான்சொல். அப்படியன்றுகாணும்,—

செடியுட லணுகாக்குடிலை கொடுக்குமென் றோதினைநீயே-அம்முத்தி இவ்வசுத்த மாயாதேகம் பொருந்தாது, சுத்தமாயாதேகத்தைக்கொடுக்கச் சரீரத்தோடுங் கூடியிருப்பாரென்று நீகூறினமுறைமை,—

பேதாய் பகட்டுர லொளிர்சினை முச்சித்தளிரொனு மிதுதகும் - வேம்பினடிக்கட்டை கைக்குமென்றறிந்துவிட்டு விளங்காநின்ற கொம்பினுனியிற்றளிர்கைக்காதென்றுகொண்டதொக்கும். இஃதன்றியும்,—

இச்சாரூப நச்சின ரென்னில் - சுவேச்சையினாலே எடுக்குஞ் சரீரத் தோடுங்கூடிப் பிரியப்பட்டிருந்தனரென்னின்,—

மும்மலத் தேது மின்மைய தன்றே - ஆகையால் முத்தியின் மலமாயாகன்மங்களிலொன்றானு நீங்கிற்றின்றாம்,—

இதுவளர்முத்திப்பதமெனவியம்புவர்-இப்படிச்சரீரத்தோடுங்கூடியிருக்குமுத்தியைச்சாலோகாதியாகியபதமுத்தியென்றுநல்லோர்சொல்வர்,—

ஈங்கிவைநிற்க - இவ்விடத்து நீ பழுதாகக்கூறிவந்த பெத்தமுத்திகளை விடுத்து நான் சொல்வதுகேள் என்க. (௧௨)

---

## சங்கிராந்தவாதிசங்கற்பம்.

---

நீங்கா தொளிருயிர்
விளக்கென நிற்கு மளப்புறு மறிவின்
றிறைவர்க் கேது மறியவேண் டின்றே
மன்னு மான்ம சந்நிதி யளவிற்
காந்த பசாசத் தேய்ப்ப வாய்ந்த
௫. வுயிருட லியக்குஞ் செயலுறு பூட்டைப்
பலவகை யுறுப்பு மிலகிய தொழில்போ
லைம்பொறி புலன்க ளின்புறு மன்றே
யினைய வாய்தலி னிகழ்தரு பயனவை
யந்தக் கரண முந்தி யுணர்ந்திடு
௧௦. மிவையகல் வுழிஇயைம் பொறிபுல னிகழா

வுயிர்நீங் கிடி னுடல் செயலில தன்றே
யிவ்வகை வினையின் செவ்விதி நடத்தும்
பழமல நீங்க நிகழுங் காலை
யேற்றோர் முகவொளி தோற்றுங் கலனெனத்
௧௫. தலைவன தருளுயிர் நிலவிடு நிலவக்
காட்டத் தங்கி மாட்டத் தங்கிய
தன்மையு மளத்துப் புல்வையி னீப்பும்
போன்றது வாகித் தோன்றிடு மதனாற்
பசுகர ணங்கள் சிவகர ணங்க
௨௦. ளாக மாறி யறிவு
மேக மாமுயி ரியானென னின்றே.

பெத்த நிலை.

(இ-ள்.) நீங்காதொளிருயிர் விளக்கெனநிற்கு மளப்புறுமறிவின்று - ஆன்மா நீங்காத பிரகாசத்தையுடைய விளக்கேப்போற சுட்டறநிற்கும். அதுவிதுவென்று சுட்டியறியு மறிவிதற்கின்று,—

இறைவற் கேது மறியவேண் டின்றே - கர்த்தாவிகாரமில்லாதானு கையால் அவற்கொன்றையு மறியவேண்டுவதின்று,—

மன்னு மான்ம சந்நிதி யளவிற் காந்த பசாசத் தேய்ப்ப வாய்ந்த வுயிருடலியக்கும் - காந்தம் விகாரமறநிற்ப, அதன் சந்நிதியிலிரும்பு காரியப்படுமொறுபோல் நிலைபெற்றவான்மா விகாரமறநிற்ப, அதன்சந்நிதிற்பொருந்தப்பட்ட பிராணவாயு உடலைக்காரியப்படுத்தும்,—

செயலுறு பூட்டைப் பலவகை யுறுப்பு மிலகிய தொழில்போல் - சமைக்கப்பட்ட நீரிறைக்கும் பூட்டையின் பலவகையாகிய அவயவங்களும் விளங்கப்பட்ட தொழில்களைச்செய்ததுபோல்,—

ஐம்பொறி புலன்க ளின்புறு மன்றே - பஞ்சேந்திரியங்களுஞ் சத்தாதிவிடயங்களை யநுபவிக்கும்,—

இனைய வாய்தலி னிகழ்தரு பயனவை யந்தக் கரண முந்தி யுணர்ந்திடும் - இவ்விந்திரியங்கள் பொருந்தப்பட்ட விடயங்களை யறிவதற்குமுன் அந்தக்கரணங்களறியும்,—

இவையகல் வுழிஇ யைம்பொறி புலனிகழா-இவ்வந்தக்கரணங்கணீங்கினவிடத்துப்பஞ்சேந்திரியங்களோடுஞ்சத்தாதிவிடயங்கள்பொருந்தா,—

உயிர் நீங்கிடி னுடல்செய லிலதன்றே - பிராணவாயு நீங்கின விடத்து உடல் சேட்டையின்றிகிடக்கும்,—

இவ்வகைவினையின் செவ்விநடத்தும் - இப்படியான்மாவின் சந்நிதி மாத்திரத்திற்பிராணவாயுபிராரத்துவத்தைப்புசிப்பித்துக்கொண்டுநிற்கும்,

முத்தி நிலை.

பழமல நீங்கி நிகழுங் காலை - இவ்வாறுபிராரத்துவமநுபவித்துவருகையிலிவனுக்கநாதியாகிய ஆணவமலநீங்கவிருவினையொப்புஞ்சத்திநிபாதமும் வந்தவிடத்து,—

ஏற்றோர் முகவொளி தோற்றுங் கலனென - எடுத்துப்பார்த்தோர் முகத்தின் பிரதிபிம்பந்தோன்றும் கண்ணாடிபோல்,—

தலைவன தருளுயிர் நிலவிடும்-கர்த்தாவின் திருவருளான்மாவிடத்திற் பொருந்தும்,—

நிலவக்காட்டத்தங்கிமாட்டத்தங்கியதன்மையும்-இவ்வாறு திருவருள் பொருந்தவே விறகினிடத்து தீயைக் கொளுத்தினபோது அவ்விறகு கெட்டதீயைப்போலும்,—

அளத்துப் புல்வையி னீப்பும்போன் றதுவாகித் தோன்றிடும் - உப்பளத்திற்போட்ட புல்லும் வைக்கோலும் கெட்டுப்போன தன்மைபோலு மிவ்வான்மாவுந்தன்னுண்மைகெட்டு அருட்சொரூபமாய்த்தோன்றும்,—

அதனாற் பசுகரணங்கள் சிவகரணங்களாகமாறி யறிவுமேகமா முயிரி யானெனதின்றே - அறிவிரண்டாய்நில்லாமலருளோடுங் கூடியொன்றும், பின் இவ்வான்மாவிற்கியானெனதென்பதின்று என்க. (கசு)

## நிராகரணம்.

இன்றுன துரையி னன்றி யுயிரொளிர்
தீபம் போலத் தாபந் தரினிருள்
செறியுன தன்மையெ னறிவில தாகி
லொளியென வுரைத்தல் தெளிவதற் கேதாஞ்
சந்நிதி யளவின் மன்னுஞ் செயலுடல்
காந்தம் போல வாய்ந்த தென்ற
தன்மையு முணராப் புன்மைய தன்றே
யுயிருட லியக்கிற் றுயில்பெறுங் காலைச்
செய்ததென் மனுதி யெய்துயிர் பொறிபுல
னடத்த வாவியுஞ் சடத்தன வாயிற்
பூட்டையிற் பூணி கூட்டல் பெறுதே
புலனைம் பொறியி னிலவிடு மென்றனை
யஞ்சு மொருகாற் றுஞ்சா தறிதற்
கழிவென் றருச்செழு மலரிலை யொடுபலங்
கனிதரு வதுபோ லிணையவை யைந்து
மொன்றொன் றாக நின்றறி வுறுமெனி
லொன்றின் பயனனி யொன்றறி யாதா
லிதுவே யல்லது கதுமென விருசெவி
யிருகூற் றொருகாற் றெரியாத் தன்மைவந்
தெய்து மனுதியு மெய்யுயிர்ச் செயலுந்
தனக்கில தொருவர்க் கெனத்தெளி கிலையே
நோக்கு முகவொளி நீக்கா தானெனக்
கவருந் தன்மை முகுரம் போலக்
கொடுத்தது கோடற் கடுத்துண் டன்றே
காட்டத் தங்கி கூட்டக் கூடு
மிந்தனத் தியற்கை வெந்தழ றுங்கா

வுப்பளத் தடுத்த புற்பலா லங்கள்
சடத்த வேனுங் கொடுத்தது கொள்ளுந்
தன்மை யுண்டுனக் கின்மைய தன்றே
யவமுறு கருவி சிவமய மாமெனக்
கூறினை யாகம் வேறுருக் கவரா
தென்பதை னவைமுற் றுன்பந் துடைக்குந்
திருவருண் மருவ வுரியன வென்னி
லருளுரு மாயா விருளின தாங்கொல்
சத்த பரிச ரூப ரசகந்த
யெத்திறத் தினதரு ளியம்புக வன்றியு
நிறைந்து நீயாய் நின்றனை யேனு
மறைந்தைம் புலனாய் வாரா யென்றுங்
கரண மெல்லாங் கடந்தனை யென்று
மரணமை யைந்தி னப்புறத் தென்று
முன்னருட் டலைவர் பன்னின ரெனவு
மினையவை யொழிய வறிகுவ தெவ்வா
றென்ற நிற்கலிக் கொன்றிய வின்பங்
கூறுதற் குமருட் பேறினை யன்றே
யேக முயிரறி வாக மொழிந்தனை
யிருபொரு ளொருமை மருவிய திலதே
யில்வகை கிடக்க மெய்வகை கேண்மதி.

## பெத்தநிலைமறுப்பு.

(இ-ள்.) இன்றுனதுரையின் அன்றி - இப்பொழுது நீபலவாறுகூறிய பெத்தமுத்தியை விசாரிக்கு மிடத்து,—

உயிரொளிர்தீபம்போலத் தாபந்தரின் - ஆன்மாபிரகாசத்தையுடைய விளக்கேபோலத் தாவுதலை செய்யுமாயின்,—

இருள்செறியுந் தன்மையென்-அஞ்ஞானமாகிய விருள்கூடியதன்மை யென்னைதான்,—

அறிவிலதாகில் - அறிவில்லாமையாகில்,—

ஒளியென வுரைத்ததெளி வதற்கேதாம் - பிரகாசத்தைப்போல வென்றுசொன்ன திடப்பாடு. அஃதெவ்வாறும் விசாரித்தறி,—

சந்நிதியளவில் மன்னுஞ் செயலுடல்-ஆன்மாவின் சந்நிதியிற்பிராண வாயுகாரியப்படுத்த உடல்காரியப்பட்டுவரும். அஃதென்போலவென்னில்,-

காந்தம்போல வாய்ந்ததென்றதன்மையு முணராப்புன்மையதன்றே - காந்தத்தின் சந்நிதியில் இரும்புகாரியப்பட்டாற்போலென்று நீமுற்கூறின தன்மையையும் இப்போது விசாரியாத சிறுமையினையு முடையது. அஃதன்றியும்,—

உயிருட லியக்கிற் றுயில்பெறுங்காலை செய்வதென் - பிராணவாயு வானது உடலைக்காரியப்படுத்துமாயின் நித்திரைசெய்கையிற்பிராணவாயுவு மொக்க நிற்குமிடத்து உடல் காரியப்படக் கண்டோமின்றே, ஆகையால் ஆன்மா உடலைக் காரியப்படுத்துவதொழிந்து பிராணவாயுல் காரியப்படுத்

தாது, ஆன்மா அவிகாரியா யிருப்பதொழிந்து இவையிற்றைக் காரியப் படுத்தாதென்பையெனின்,—

மனுதியெய்துயிர் பொறிபுலனடத்த வாவியுஞ் சடத்தனவாயின்-மன முதலிய அந்தக்கரணங்கள் பிராணவாயு இந்திரியங்கள் விடயங்களிவை யெல்லாவற்றையுங்காரியப்படுத்துதற்கான்மாவும்சடமாயிருக்குமெனின்,-

பூட்டையிற்பூணி கூட்டல்பெறுதே - நீரிறைக்கும் பூட்டைபோலெ னில் பூணியாகிய யெருதினுற் பூட்டையினிடத்துண்டாகிய அவயவங் கள் காரியப்பட்டுவருகையால் நீ செயற்படுத்தும் பூணியை ஆன்மாவிற்கு வமையென்றது திருஷ்டாந்தவிரோதம், ஆகையாலிதாகாது இஃதன்றியும்,-

புலனைம்பொறியி னிலவிடுமென்றனே - சத்தாதிவிடயங்களைப் பஞ் சேந்திரியங்கள் பொருந்தி யநுபவிக்கு மென்றனே,—

அஞ்சுமொருகாற் றுஞ்சாதறிதற்கழிவென் - சத்தாதிவிடயங்களைப் பஞ்சேந்திரியங்களநுபவிக்குமாயிற் பஞ்சேந்திரியங்களும் ஏககாலத்தில் அறியாமலொன்றறிந்ததுமற்றநான்குமறியா திருப்பதற்குக்குறைவென்,-

தருச்செழு மலரிலையொடுபலங் கனிதருவதுபோல் - நல்ல மரமொரு காலத்தில் இலையையு மொருகாலத்திற்பூவையு மொருகாலத்திற்காயையு மொருகாலத்திற் பழத்தையுந் தோற்றுவித்த வாறுபோல்,—

இனையவையைந்து மொன்றொன்றாக நின்றறிவுறுமெனில் - இவ்விந் திரியங்களையு மொவ்வொரு விடயங்களாக அறியுமென்னின்,—

ஒன்றின்பய னனியொன்றறியாதா லிதுவேயல்லது-ஓரிந்திரியத்தின் விடயத்தை யோரிந்திரிய மறியாது. இஃதல்லாமலும்,—

கதுமென விருசெவி யிருகூற் றொருகாற் றெரியாத் தன்மை வந் தெய்தும்-ஓரிந்திரியமாயிருக்கும் இரண்டு செவியினுஞ் சடக்கென இருவர் சத்த மொருகாலத்திற் கூற வொருவன் கூறினதையறிந்தும் ஒரு வன் கூறினதை அறியாமலு மிருந்ததன்மைவந்து எய்துகையால் அவ் விந்திரியத்தின் றொழில்கள் அதற்கின்றி ஆன்மாவிற் கானுற்போல,—

மனுதியுமெய்யுயிர்ச் செயலுந் தனக்கிலதொருவர்க்கெனத் தெளிகி லேயே - அந்தக்கரணங்களுக்குஞ் சரீரத்திற்கும் பிராணவாயுவுக்கு முண் டான தொழில்களு மவையிற்றுக்கில்லை. ஆன்மாவிற்கேயென்றறி, இதன் றியும் நீ முத்தித்தன்மைசொல்லும் இடத்தில் கண்ணாடியிற்றோன்றினுற் போலக் கர்த்தாவின்திருவருளுமிவ்வான்மாவிற்பிரகாசிக்குமென்றனே,—

நோக்குமுகவொளிநீக்கா தானெனக்கவருந் தன்மைமுகுரம்போல - கண்ணாடி பார்த்தவர்களுடைய முகத்தினுண்டாகிய வொளியைத் தன்னி டத்தில் கவர்ந்துகொண்டு நின்றதுபோல,—

கொடுத்ததுகோடற் கடுத்துண்டன்றே - கொடுத்தது கொள்ளுந் தன்மை யுனக்கடுப்பதன்று. இஃதன்றியும்,—

காட்டத்தங்கி கூட்டக்கூடு மிந்தனத்தியற்கை வெந்தழறுங்கா - விற கினிடத்து நின்றதீயை ஆன்மாவினேடுங்கூடிநிற்குமருளிற்குவமையாக்கு வது தீவிறகைச் சுட்டுவிடாமற் கொண்டிருந்தாலாம், அன்றித்தீவிறகைச் சுட்டுவிட்ட வகையினுகாது, இஃதன்றியும்,—

உப்பளத்தடுத்த புற்பலாலங்கள் சடத்தவேனும்-அளத்திற்கூடின புல்லும் வைக்கோலும் சடமாயிருந்தனவேனும்,—

கொடுத்ததுகொள்ளுந் தன்மையுண்டுனக் கின்மையதன்றே - அது தற்சொரூபத்தைக் கொடுத்து அதன்சொரூபத்தை முன்போற் பெறுந் தன்மையதற்குண்டு. உனக்கதன்முறைமைதானுமின்று, இஃதன்றியும்,-

அவமுறுகருவி சிவமயமாமெனக் கூறினை - அஞ்ஞானங்கட் கேதுவாங் கருவிகளைச் சிவரூபமென்றுன்மதத்திற் கூறினை,—

யாகம் வேறுருக்கவராது - அதிலச்சரீரத்தோடுண்டாகியவாசை நீ கூறியதொழிந்திச்சிவசொரூபஞ் சுத்தநின்மலமாயும் இம்மாயாசொரூபமசுத்தமலமாயு மிருக்கையாலிதுவதுவாகாது,—

என்பதெனவை முன்துன்பந் துடைக்குந் திருவருண்மருவ வுரியனவென்னில் - என்று நீ கூறியதென்ன? அம்மாயா கருவிகள்தொன்றுதொட்டுவரும் பிறவித்துன்பத்தை நீக்கித் திருவருளையெய்தி அதன்சொரூபமாகைக் குரியதென்னில்,—

அருளுரு மாயாவிருளினதாங்கொல் - அப்பொழுது திருவருளும் மாயையாகிய அஞ்ஞானமாகவேண்டும்,—

சத்தபரிசரூபரசகந்தை யெத்திறத் தினதருளியம்புக-சத்தப்பரிசரூபரசகந்தங்களோடுங்கூடியறிந்துவரும் மாயாகருவிகட்குத் திருவருளைத் தனைதூரம், இதற்குத்தரமுண்டாகிற் சொல்,—

அன்றியுநிறைந்து நீயாய் நின்றனையேனு மறைந்தைம்புலனாய் வாராயென்றுங் கரணமெல்லாங் கடந்தனையென்று மரணமையைந்தினப்புறத்தென்று முன்னருட் டலைவர் பன்னினரெனவு மினையவையொழிய வறிகுவதெவ்வாறென்ற நிற்கவிக்கொன்றிய வின்பங் கூறுதற்கும் - இஃதன்றியும் "நிறைந்தெங்கு நீயேயாய் நின்றாலுமென்று - மறைந்தைம் புலன்காண வாராய்-சிறந்த-கணியாருந் தண்சோலைக் காளத்தியாள்வாய் - பணியாயே லென்னுண்பரிசு." என்றும், "கரணங்களெல்லாங் கடந்துநின்ற கரைமிடற்றன் - சரணங்களே சென்று சார்தலுமே தானெனக்கு - மரணம்பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த - கருணைக்கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பி" என்றும், பையஞ்சுடர்விடு நாகப்பள்ளிகொள்வானுளத்தானுங் - கையஞ்சு நான்குடையானைக் கால்விரலாலடர்த்தானும்-பொய்யஞ்சி வாய்மைகள்பேசிப் புகழ்புரிந்தார்க் கருள்செய்யு - மையஞ்சி லைப்புறத்தானு மாரூரமர்ந்த வம்மானே." என்றும் முற்காலத்திலே திருவருளைப் பெற்றோர்கள் அருளிச்செய்தார்களென்று நான்சொல்லவு மிந்திரியங்களைவிட்டால் இவனுடைய வறிவு சீவியாதாகையால் இவ்விந்திரியங்களன்றித் திருவருளை யறியும்பகுதி யெவ்வாறென்று கேட்கும் உனக்குச் சொல்வது ஒருவனு மொருத்தியுங்கூடி யநுபவித்த இன்பத்தைத் தானநுபவியாத அலிக்குச் சொல்வதொக்கும்,—

அருட்பேறினையன்றே - மாயைக்குண் மயக்கப்பட்டு வரும்பொருள்களை யறிவது தானே பெருகக்கொண்டாய், ஆகையாலிதுவுமாகாது. இஃன்றியும்,—

ஏகமுயிரறிவாக மொழிந்தனை - அருளு மான்மாவுங் கூடியவிடத்து இரண்டுமொன்ருய்விடுமென்றனை,—

இருபொரு ளொருமைமருவிய திலதே - இரண்டுமுதல்கூடி யொரு முதலாய் நிற்குமென்ப தாகாது,—

இவ்வகைகிடக்க மெய்வகைகேள்மதி - இங்ஙனம் பலவாகக்கூறினவற்றைவிட்டுநாம்சொல்லும் உண்மையைப்புத்திபண்ணிக்கேள் என்க. (கச)

---

## ஈசுவரவவிகாரவாதிசங்கற்பம்.

---

பஃறுளைக் குடத்தி னுள்விளக் கேய்ப்ப
வறிவுள தாகு முருவுறு முயிர்கள்
கண்ணு லோசையுங் கந்தமுங் கருத
வொண்ணு தென்னு முணர்வுடை மையினு
லவ்வப் புலன்கட் கவ்வப் பொறிகள்
செவ்விதி னிறுவிச் சேர்ந்தவை நுகரு
மூல மலத்தின் பாகம்வந் துதவுழீஇ
யிருட்ரு மிற்புக் கொருபொருள் கவரத்
தீபம் வேண்டு மானவா போல
மோக மாமலம் போக ஞான
விளக்கர னருளாற் றுளக்கறப் பொருந்தி
நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச்
சலமில ஞகிச் சார்ந்தவர்க் கென்று
நலமிக நல்கு நாதனை யணைந்து
பூழி வெம்மை பொருந்தா துயர்ந்த
நீழல் வாழு நினைவினர் போலத்
திருவடி நீழல் சேர்ந்து
கருவுறு துயரங் களைந்திருந் திடுமே.

பெத்தநிலை.

(இ-ள்.) பஃறுளைக் குடத்தினுள் விளக்கேய்ப்ப வறிவுளதாகு முருவுறு முயிர்கள் - பலத்துவாரங்களையுடைய குடத்துக்குள் இருக்கும் விளக்குப்போன்று நவத்துவாரங்களையுடையசரீரத்தில்நிற்குமான்மாக்களு மறிவாயிருக்கும்,—

கண்ணு லோசையுங் கந்தமுங் கருதவொண்ணுதென்னுமுணர்வுடைமையினல் - கண்ணைக்கொண்டுருவத்தை யறிவதொழிந்து சத்தபரிசகந்தங்களை யறியவொண்ணுதென்னுமறிவு இவ்வான்மாக்களுக் குள்ளதாயிருக்கையினுல்,—

அவ்வப்புலன்கட் கவ்வப்பொறிகள் - இவ்வான்மா தனக்குக்கொள்ள வேண்டிய விடயங்களுக்குற்ற அவ்வவ்விந்திரியங்களை,—

செவ்விதி னிறுவிச்சேர்ந்தவைநுகரும் - மாறுபாடற நிறுத்தி அவையிற்றிற் பொருந்தப்பட்டுவரும் விடயங்களைப்புசிக்கும்,—

முத்திநிலை.

மூலமலத்தின் பாகம்வந்துதவுழி - இவ்வாறு கன்மத்தைப் புசிக்குமிடத்து ஆணவமலநீங்கிப் பாகம்வந்தவிடத்து,—

இருடருமிற்புக் கொருபொருள்கவர - இருட்டுவீட்டில் விளக்கை முன்னிட்டுக்கொண்டொருபொருளையெடுக்கவேண்டினவிடத்து,—

தீபம்வேண்டு மானவாபோல - ஒருவிளக்கை முன்னிட்டுக் கொண்டு சென்றப்பொருளையெடுத்தவாறுபோல,—

மோகமாமலம்போக - அஞ்ஞானவிருளாகிய ஆணவமலநீங்க,—

ஞானவிளக்கர னருளாற் றுளக்கறப்பொருந்தி - ஞானமாகிய விளக்கைச் சிவனுடைய வநுக்கிரகத்தால் அசைவறப்பெற்று,—

நீர் நிழலனைய சீர்பெறுகடவுளை - தண்ணீர்போன்று நிழலைப்போன்று மொருவரளவினும் பக்ஷப்பிரதி பக்ஷமில்லாதிருக்குஞ் சிறப்பினையுடைய கர்த்தாவை,—

சலமிலனாகிச் சார்ந்தவர்க்கென்றும் - அவ்வாறு பக்ஷப்பிரதி பக்ஷமில்லாதானாயிருக்கையிலேயுந் தன்னையடைந்தவர்களுக்கெப்பொழுதும்,—

நலமிகநல்கு நாதனையணைந்து - நன்மைப்பகுதிகளை மிகவுங் கொடுக்கும் இறைவனைக்கூடி,—

ஊழிவெய்மைபொருந்தா துயர்ந்தநீழல் வாழுநினைவர்போல - நண்பகலில் வழிநடந்தவர்கட்கு அவ்வழியிலுண்டாகிய பொடிச்சூடு நீங்கத் தக்கதாக வுயர்ந்த மரத்தினிழலிலேவந்து பிரியப்பட்டிருக்கும் நினைவையுடையாரைப்போல,—

திருவடிநீழல்சேர்ந்து கருவுறுதுயரங் களைந்திடுமே - இவ்வான்மாவுங் கர்த்தாவினுடைய திருவடிநிழலைப் பொருந்தித் தனக்குண்டாகிய ஜநநதுக்கமெல்லா நீக்கிக்கொண்டிருக்குமென்றறி என்க. (கரு)

---

## நிராகரணம்.

இருந்துன் கேள்வி திருந்திடு முயிர்க
ளறிவெனில் வாயிற் பொறிபுல னென்னை
மற்றவை பற்றி யுற்றறிந் திடுதலி
னறிவென வழங்கு முயிரென வுரைத்தல்
காணுங் கண்ணினன் கைக்கொடு தடவிப்
பூணும் பொருளின் பெயர்பல புகற
லென்னுங் கிளவி தன்னொடு தகுமே
யவ்வப் புலன்கட் கவ்வப் பொறிகளைச்
செவ்விதி னிறுவலி னறிவெனச் செப்பினை
யறிவி லாமைகண் டனமணை புலற்குப்
பொறிக ளேவலி னறிவொடு பொருந்திற்
கண்டதோர் பொறியாற் கொண்டிட வேண்டு
முதவிய தொன்றாற் கதுமென வியற்றின
ருண்டோ வென்னிற் கண்டன மேனாட்

கடவுளிற் கடிமலர் முடுகிய மதன
னங்கம நங்கந் தங்கிடக் கிடந்தது
வையின் றிரளிற் செய்ய சிறுபொறி
மாட்டி மூட்டின தன்றே மீட்டுந்
தேனமர் தவிசி னான்முக னுச்சி
யறுத்ததுங் கருவி பொறுத்தோ வன்றே
யீசன தியல்பு பேசுத றவிர்க
காழி மாநகர்க் கவுணியர் கடவுண்
ஞான மாகிய நற்பதி கங்க
ளெழுதுறு மன்பர்த மின்புறு மொழியாற்
களிறென வணைந்த கன்மனப் புத்தன்
முருட்டுச் சிரமொன் றுருட்டின ரன்றி
வாய்ந்த வாளொன் றேந்தின ரிலரோ
யென்றது மீர்வாள் கொன்றதென் பதுபோற்
றனித்துணை யருளாற் றுணித்தன ரென்ப
வாதலின் வாயி லளவினி லறிதலி
லேதமி லறிவுயிர்க் கெய்துத லிலதே
யிருட்கு விளக்கொன் றேந்தினர் போல
மருட்கு ஞான மன்னுத லுளதே
யென்றனை கருவிக ளியாவு மசேதனந்
துன்றிய வுயிருந் துரியத் தன்மைய
னாதலி னந்த ரனைவருங் கூடித்
தீதற வருநெறி தெரியுமென் றற்றே
நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச்
சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடு மென்றனை
பாதவ மென்றுஞ் சேதன மின்மையி
னிளைத்தோர் வம்மி னென்பதுந் துன்பம்
விளைத்தோர் தம்மில் வெறுப்புமொன் றிலதே
பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம்
வெய்ய பூழியி னுள்ளுற வழுங்கி
யாற்றுத லின்றி யாறியங் கினர்முன்
றேற்றிடு மென்று சொல்லவு மிலதா
லிவ்வகை கடவுட் கியம்புத றவறே
பாசஞானப் பழிவழி யொழிக
வீசன தருள்வழி யியம்புவன் கேண்மதி.

பெத்தநிலைமறுப்பு.

(இ-ள்.) இருந்துன்கேள்வி - இவ்வாறிருந்தது நீகேட்டகேள்வி நான் கூறியதற்குக் குற்றமென்ன,—

திருந்திடுமுயிர்களறிவெனில் வாயிற்பொறிபுலனென்னை - திருத்தமுண்டாகிய ஆன்மாக்கள் அறிவோடுங் கூடியிருக்கிற் சத்தாதி விடயங்களை அறிதற் கிந்திரியங்கள் வேண்டுவதின்று,—

மற்றவைபற்றி யுற்றறிந்திடுதலின் - அவ்விந்திரியங்களை ஆன்மாபொருந்தி ஒருவிடயத்தை யுற்றறிந்து வருகையால்;—

அறிவெனவழங்கு முயிரெனவுரைத்தல் - ஆன்மாவை அறிவென்று கூறப்படுமென்று நீ சொல்வது,—

காணுங்கண்ணினன் கைகொடுதடவிப்பூணும்பொருளின் பெயர்பல புகறலென் னுங்கிளவிதன்னெடுதகுமே - கண்ணிரண்டுந் தெரிபவன் கண்ணைக்கொண்டு பதார்த்தங்களைக்கண்டுகூருமற் கைகளைக்கொண்டுதடவிக் கையால் தட்டினபண்டங்களின்பலபெயர்களைச்சொன் னுனென் னும்சொல்லொடொக்கும். ஆன்மாவறிவாயிருக்கையில் தானுயறியாமல் இந்திரியங்களைக்கொண்டறிந்ததென்றுசொல்வது. இஃதன்றியும்,—

அவ்வப்புலன்கட் கவ்வப்பொறிகளைச்செவ்விதினிறுவலி னறிவெனச் செப்பினை - ஆன்மாவிற் கறியவேண்டிய அவ்வவ்விடயங்களுக்கேற்ற அவ்வவ்விந்திரியங்களைச் செவ்வையின் மாறுபாடற நிறுத்திக்கொண் டறிகையால் ஆன்மாவை யறிவென்றனை,—

அறிவிலாமைகண்டனம் - இதுகொண்டே ஆன்மாவுக்கறிவில்லை யென்பது கண்டோம்,—

அணைபுலற்குப் பொறிகளேவலி னறிவொடுபொருந்தில் - தன்னேடு பொருந்தவேண்டிய விடயங்கட்கேற்ற விந்திரியங்களையேவிக்கொள்கையால் ஆன்மா அறிவோடுங்கூடியிருக்குமென்னில்,—

கண்டதோர்பொறியாற்கொண்டிடவேண்டும்-ஆன்மா அறிவேயாகில் இப்பொழுதுகிட்டினதோரிந்திரியத்தைக்கொண்டுதனக்குவேண்டினவிடயத்தைப்புசிக்கவேண்டும். அஃதில்லாமையால்ஆன்மாஅறிவன்று.பின்னும்,

உதவியதொன்றற் கதுமெனவியற்றின ருண்டோவென்னில் - சோத்திரத்தாற் சத்தத்தையறிவதொழிந்து கிட்டின இந்திரியங்களைக்கொண்டு சடக்கெனவோர்தொழிலைச்செய்வதும் இப்பூமியிலுண்டோவென்னில்,—

கண்டனம்-அப்படிக்காணப்பட்டதுண்டு.அஃதெங்ஙனமென்னில்,—

மேனுட்கடவுளிற் கடிமலர்முடுகியமதனன் - முற்காலத்தில் இறைவனுடைய யோகத்தைத் தவிர்க்கவேண்டி மன்மதன் மணமமைந்த மலர்க்கணைகொண்டு கிட்ட,—

அங்கமனங்கந் தங்கிடக்கிடந்தது - அவனுடையசரீரம் அசரீரமாகிச் சாம்பராய்விட்டது,—

வையின்றிரளிற்செய்யசிறுபொறி மாட்டிமூட்டினதன்றேமீட்டும் - கண்கொண்டு பார்த்ததொழிந் தவன்மேல் வைக்கோற்றிரளைக் குவித்துச் சிவந்த சிறியதீப்பொறியை மாட்டியூதி யெரித்தன்றே. இஃதன்றியும்,—

தேனமர்தவிசி ஞன்முகனுச்சி யறுத்ததுங்கருவி பொறுத்ததோ வன்றே - வண்டுதங்கிய தாமரைத்தவிசினையுடைய பிரமன் நடுத்தலையைக் கைந்நகங்கொண்டு கிள்ளிப்போட்ட தொழிந்து ஒரு வாள்கொண்டறுத்துப்போட்டதில்லை,—

ஈசனதியல்புபேசுதறவிர்க-நான் ஆன்மாவிற்குக்கூறநீகர்த்தாவுக்குக்கொண்டுவந்துசொல்வானேன்,அதைவிட்டான்மாக்கட்குஉண்டாகிற்சொல்,—

காழிமாநகர்க்கவுணியர் கடவுள் - சீகாழியிற் கவுணிய கோத்திரத்திற் கெல்லாந்தலைவராகிய திருஞானசம்பந்தரால்,—

ஞானமாகியநற்பதிகங்க ளெழுதுறுமன்பர்த மின்புறுமொழியால் - அருளிச்செய்யப்பட்ட ஞானமாகிய நல்லதிருப்பதிகங்களை யெழுதப்பட்ட வண்மையுடைய சம்பந்தசரணாலயருடைய இனியவாக்கால்,—

களிறெனவணைந்தகன்மனப்புத்தன் முருட்டுச்சிரமொன் றுருட்டினரன்றி - மத்தயானைபோ லெதிர்ந்துவந்த புத்தனுடைய மொட்டந்தலையையுருண்டுவிழச் செய்ததல்லது,—

வாய்ந்தவாளொன்றேந்தினரிலரே - கூரிய வாளையெடுத்துக்கொண்டன்றே? ஆகையால் ஆன்மாக்கள் கண்டதோர் பொறியாற்கொண்டிட வல்லார்களென்றது,—

என்றதுமீர்வாள்கொன்றதென்பதுபோற் றனித்துணையருளாற்றுணித்தன ரென்ப - ஈர்வாள்கொன்றதென்னின் அவ்வாள் கொன்றதாகாமல் அவ்வாளைக்கொண்டொருவன் கொன்றாற்போல் ஒப்பில்லாத கர்த்தாவினுடைய அநுக்கிரகத்தினால் புத்தனுடையதலையைத் துண்டித்தனர் என்று பெரியோர் கூறுவர்,—

ஆதலின்வாயி லளவினிலறிதலி லேதமிலறிவுயிர்க் கெய்துதலிலதே - ஆகையால் இவ்விந்திரியங்களி னெல்லையினின்றறிந்துவருகையாற் குற்றமற்றிருக்குமறிவு ஆன்மாவிற்குண்டாகாதுதிருவருளறிவிக்கவேண்டும்,—

## முத்திநிலை மறுப்பு.

இருட்குவிளக்கொன்றேந்தினர்போல - இருளில் ஒருபண்டத்தையெடுக்க வேண்டினோர் கையிலே விளக்கைப் பிடித்துக்கொண்டப் பண்டத்தை யெடுத்தாற்போல்,—

மருட்குஞான மன்னுதலுளதே யென்றனை - இவனுடைய அஞ்ஞானமாகிய விருணீங்குதற்கு ஞானவிளக்கு நிலைபெற்று நிற்கத்தக்கதாக கர்த்தா அநுக்கிரகஞ்செய்யுமென்றனை,—

கருவிகளியாவுமசேதனந் துன்றியவுயிருந்துரியத்தன்மையன்-தத்துவங்கள் முப்பத்தாறும் சடம், ஆணவமலத்திற் செறியப்பட்ட ஆன்மாவுந் துரியத்தில் நிற்பானொருவன்,—

ஆதலினந்தரனைவருங்கூடித்தீதறவருநெறிதெரியுமன்றற்றே- ஆகையால் இதுதன்னிற்கூடித்திருவருளைப்பெற்றது தமக்குக்காட்டாகச்சிவனை பெறுமென்றது அநேகங் குருடர்தம்மிற்கூடிக் குற்றமற்றதொருபெரியவழியைக்கண்டவ்வழியேஒரூரில்சென்றனவொன்றதொக்கும். இஃதன்றியும்,

நீர்நீழ லனைய சீர்பெறு கடவுளைச் சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடுமென்றனை-நீரைப்போன்றும் நிழலைப்போன்றும் பக்ஷப்பிரதிபக்ஷமில்லாமலிருக்குஞ் சிறப்பினையுடைய கர்த்தா தன்னைவந்துகூடிய பக்குவான்மாக்கட்குப் பேரின்பமுண்டாக அநுக்கிரகஞ்செய்வனென்றனை,—

பாதவமென்றுஞ் சேதனமின்மையின் - மரமெப்பொழுதும் அறிவில்லாமற் சடமாயிருக்கையால்,—

இளைத்தோர்வம்மினென்பதுந் துன்பம் விளைத்தோர்தம்மில்வெறுப்புமொன்றிலதே-வெயிலால் இளைத்தவனாவம்மினென்று பிரியப்பட்டழைத்ததுந் தன்னை வெட்டினவர்மேலகிதப்படுவதுமிலவாம். இஃதன்றியும்,—

பொடித்திடுகொப்புள் வெடித்திடுபாதம் வெய்யபூழியி னுள்ளுறவழுங்கி யாற்றுதலின்றி - பொடியால் உள்ளங்காலிற் கொப்புளங்கொண்டதுடைந்து சுடும் புழுதிப்பட்டழுந்தி அதனால் ஆற்றமாட்டமல்,—

ஆறியங்கினர்முன் றேற்றிடுமென்று சொல்லவுமிலதால் - வழிநடப்போர்முன் மரஞ்சென்றுதோன்றி அவர்துயரந் தீர்த்ததென்பதுமதற்கில்லாமையால்,—

இவ்வகைகடவுட் கியம்புதறவறே - நீருநிழலும்போலுமென்னும் அவிகாரவாதங் கர்த்தாவிற்குக்கூறியது மிகவும் பழுதாம். ஆதலால்,—

பாசஞானப்பழிவழியொழிக வீசனதருள்வழி யியம்புவன்கேள்-இனி சரீரசம்பந்தமு நீங்காமற் கர்த்தாவையும் அவிகாரவாதஞ்சொன்னகுற்றத்தையுமுடைத்தாய் முத்திநெறியைவிட்டுக் கர்த்தாவின் திருவருளின்வழி சொல்வேன் புத்திபண்ணிகேள் என்க. (கசு)

---

## நிமித்தகாரணபரிணாமவாதிசங்கற்பம்.

புவன மியாவையும் புனிதன துருவாஞ்
சிவமுஞ் சத்தியு மெனத்தெளி யவற்று
ளசேதந மென்றொன் றறைதற் கிலதது
சேதந நுகர்பொழு திரண்டுமோர் திறத்தே
யிதுவெனு மொன்றை யதுவாய்ப் படுத்துப்
பொதுமையி னிற்கும போதமென் றறிக
பொற்பணி பேதம் புரைவழி யொருவழி
நற்பொனிற் றிகழ்வென நயப்பதொன் றன்று
லாவது மாகா தொழிவது மெனுமிப்
பாவக முண்மை பாரா தோர்க்கே
பாரா தோரெனப் பல்லுயிர் பகர்தலி
னாராய்ந் துரைக்கி னவைபிற வல்ல
பலபல பேத மிலவென் போருமில்
கண்ணின தொளியைக் கண்ணின தெனிலது
திண்ணிய விருளிற் செறிபொரு டெரித்தது
மின்மை மின்மினி யெனவிரு கண்மணித்
தன்மை தானுந் தாவில ததனாற்
கண்ணின துருவு மதிற்கதி ரொளியு
நண்ணருஞ் சத்தி சத்தர்க ணடிப்பே
யுலகே மெனத்திசை பத்தென வொருவன்
பலவாய் நின்ற படியிது வென்று
மூனா யுயிரா யுணர்வா யென்று
மானக் கண்ணி மணியே யென்றுந்
தாமே தாமாய்ச் செய்தன ரொன்று
நாமே சிவமாய் நண்ணின மென்றுங்
காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வு
மோர்யா துண்போன் றானே யென்று
மறிவோன் றானு மறிவிப் போனு

மறிவா யறிகின் றோனு மறிவுறு
மெய்ப்பொரு டானும் வியந்திது வெனப்படு
மப்பொரு ளியாவு மவனே யென்றுந்
தாய்தலைப் பட்டங் கொன்றாய்த் தென்று
மேதம தறநான் கெட்டே னென்று
மின்னு மின்னு மிறையோ னளித்தவை
பன்னி லெண்ணரும் பான்மைத் தாதலிற்
றருபொருள் கொள்பொரு டருவோன் கொள்வோ
னொருபொரு ளிவ்விய லுவப்பென வுணர்க
நுகர்பொருள் சத்தி நுகர்வோன் சத்தனென்
றிகல றுமுணர்வுவந் தெய்துத லரிதே
நானவ னெனுமிது நவைவழி நல்வழி
தானவ னுகை யிதுசா யுச்சிய
மித்திறன் றெளிய வுய்த்திடு மளவும்
யாதொரு வகையி னீதிய தாகத்
தானறி வழியே தலைநின் றென்று
மூனுயிர் சிவத்தி லொடுங்கிட நடத்தி
மூடு முழுமலம் வீடுங் காலை
கருவிக ளளவிற் புரிதரு மறிவு
சாக்கிரங் கனவு நீக்கமில் சுழுனை
துரிய மென்றவை பயிறரு மறிவு
துரியா தீதந் திரியாத் தன்மையி
லிறையரு ளுதவுங் கறையற மாறி
யறிவே யாகும் பிறியாக் கருவிக
ணிறைமுத லவத்தையி லறிவில தாகத்
துரியா தீதத் தோற்றந்
திரியா ததுநற் சிவகதித் திறனே.

### பேத்தநிலை.

(இ-ள்.) புவனமியாவையும் புனிதனதுருவாஞ் சிவமுஞ்சத்தியுமெனத்தெளி - இப்பிரபஞ்சமெல்லாஞ் சிவசொரூபமாயிருக்கும், இதிலருவமாயிருப்பதுசிவமு முருவமாயிருப்பது சத்தியுமென்று தெளி,—

அவற்றுளசேதநமென் றொன்றதைதற்கிலது - அவ்விரண்டுவகையினு மசேதநமாகச் சொல்லப்பட்ட தொருபொருளு மின்று,—

அதுசேதநனுகர்பொழு திரண்டுமோர்திறத்தே - அருவமா யறிவாயிருப்பானநுபவிக்குமிடத் தவ்விரண்டுபகுதியு மொன்றாயிருக்கும்,—

இதுவெனுமொன்றை யதுவாய்ப்படுத்துப் பொதுமையினிற்கும்போதமென்றறிக - இதுவென்றுசுட்டப்பட்ட தொருவிடயத்தை யநுபவிக்குமிடத் தவ்விடயந் தானேயாய் அதுவறிவென்றும் விடயமென்று மிரண்டாகாமற் பொதுமையில் நிற்குமென்றறி. இஃதன்றியும்,—

பொற்பணிபேதம் புணவழியொருவழி - பொன்னென்றாயிருக்கையிற் பொன்னுக்கும் பணிக்கும் பின்னஞ்சொன்னாற்போல அறிவிற்கும் பிரபஞ்சத்திற்கு மொருபக்ஷ மிப்படியுஞ் சொல்லலாம்,—

நற்பொனிற்றிகழ்வென நயப்பதொன்றன்றால் - நல்லபொன்னினுண்டாகிய மாற்றுப்பணியினிடத்துங் காண்டலாற் பொன்னும்பணியு மொரு தன்மையாயிருக்கப்பொன்னையும் பணியையுமறிவிக்கும் பிரபஞ்சத்திற்கு முவமையாச்சொன்ன தென்னதானென்றுகேட்கில்;—

ஆவது மாகா தொழிவது மெனுமிப் பாவகமுண்மை பாராதோர்க்கே- இவ்வுவமையாம்பகுதி இவ்வுவமையாகாப்பகுதியென்று சொல்லுமிப்பாவகமுண்மையைத் தரிசியாதவர்க்காயிருக்கும். உண்மை பார்த்தவரொன்றும்பாராதாரொன்றுங்கூறினதுகொண்டேயறிவிற் பின்னமுண்டெனில்;—

பாரா தோரெனப் பல்லுயிர் பகர்தலின் - உண்மையைத் தரிசியாதாரென்று நான் கூறியதனுள் நீ யான்மாக்களைத் தனித்தனியே யொருமுதலென்று கூறில், பலவாகக்கூறப்பட்டிருக்குமான்மாக்கள்,—

ஆராய்ந் துரைக்கி னவைபிற வல்ல - அத்தன்மையை விசாரித்துக் கூறுமிடத் தவ்வான்மாக்கள் சிவனுக்கு வேறாயிருப்ப தொன்றன்று, எல்லாஞ் சிவமுதலே யென்றறி. இஃதன்றியும்,—

பலபலபேத மிலவென் போருமில் - சிவமு மான்மாக்களும் பிரபஞ்சமுந் தனித்தனியொவ்வொருமுதலெனப்பலபேதங்களாகக்கூறுவாருமுளர் அது நித்தியமன்று. கண்ணென் றொருமுதல் கண்டுவருமாறுபோல ஆன்மாவென்றொருமுதல் தனித்தறிந்துவருமிடத்திதனை இன்றென்பானேனென்னில்,—

கண்ணின தொளியைக் கண்ணினதெனிலது-கண்ணொன்றைக்கண்டுவருங் காட்சி அக்கண்ணுக் குண்டானபடி காணுங்கண்,—

திண்ணிய விருளிற் செறிபொரு டெரித்தலு மின்மை - நெருங்கிய இருளிலிருக்கும் பொருளின்னதென்றென்றறக் காணும் பகுதியுண்டோ வில்லையோ? இஃதன்றியும்,—

மின்மினி யெனவிரு கண்மணித் தன்மைதானுந்தாவிலது - ஒருமின்மினி இருளை நீக்கியவாறுபோல இரண்டு கண்மணியுங்கூடி யிருளை நீக்கக் கண்டோமில்லை,—

அதனாற் கண்ணின துருவு மதிற்கதி ரொளியு நண்ணருஞ் சத்தி சத்தர்க ணடிப்பே - கண்ணின்வடிவும் அதன்கண் ஆதித்தப்பிரகாசத்தாலுண்டாகியகாட்சியும் இவையெல்லாமனத்தினலெட்டுதற்கரிய சிவம்சத்தி என்பாருடைய நாடகமென்றறி. இஃதெங்கேகாணப்பட்டதென்னில்,—

உலகேழெனத்திசை பத்தென வொருவன் பலவாய் நின்ற படியிது வென்றும்-"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்-புலனாயமைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றா - னுலகேழெனத் திசைபத்தெனத் தானொருவனுமே - பலவாகி நின்றவா தோணோக்கமாடாமோ." என்றும்,—

ஊனா யுயிரா யுணர்வா யென்றும் - "ஊனாகி யுயிராகி யதனுணின்ற வுணர்வாகிப் பிறவனைத்து நீயே நின்றாய் - நானேது மறியாமே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டாநின்றாய் - தேனாருங்கொன்றையனே

நின்றியூராய் திருவானைக் காவிலுறை சிவனேஞான - மானுய் நின்பொற் பாத மடையப்பெற்று லல்லல்கண்டங் கொண்டடியே னென்செய் கேனே.'' என்றும்,—

மானக்கண்ணே மணியே யென்றும் - "திருவேயென்செல்வமே தே னேவானோர் செழுஞ்சுடரோ செழுஞ்சுடர்நற் சோதீமிக்க-வுருவே யென் னுறவே யென்னூனே யூனி னுள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற-கருவே யென் கற்பகமே கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்காவா-யருவாய வல்வினைநோ யடையாவண்ண மாவடுதண் டுறையுறையு மமர ரேறே.'' என்றும்,—

தாமே தாமாய்ச் செய்தன ரென்றும் - "தாமே தாமாகச் செய்யு மவன்.'' என்றும்,—

நாமே சிவமாய் நண்ணின மென்றும் - "நாமொழிந்து சிவமான'' என்றும்,—

காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வு மோயா துண்போன் றானே யென்றும்-"காயாகிப் பழமாகிப் பழத்தி னின்ற விரதங்க ணுகர்வானுந் தா னேயாகி.'' என்றும்,—

அறிவோன் றானு மறிவிப் போனு மறிவா யறிகின் றோனு மறிவுறு மெய்ப்பொரு டானும் வியந் திது வெனப்படு மப்பொரு ளியாவு மவனே யென்றும் - "அறிவானுந்தானே யறிவிப்பான்றானே - யறிவாயறிகின்றான் றானே—யறிகின்ற - மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாயம் - அப்பொருளுந்தானே யவன்.'' என்றும்,—

தாய்தலைப்பட்டங் கொன்றாய்த் தென்றும்-"தாய்தலைப்பட்டங்குறுகி யொன்றாய்.'' என்றும்,—

ஏதம தறநான் கெட்டே னென்றும் - "நான்கெட்ட.'' என்றும்,—

இன்னு மின்னு மிறையோ னளித்தவை பன்னி லெண்ணரும் பான் மைத்து - முதலேகூறிவந்த திருவாக்குகளன்றி யின்னமு மேனு மநுக் கிரகம்பெற்ற தம்பிரான்களருளிச்செய்த செயல்களைக் கூறுமிடத்தெண் ணிறந்த பகுதியினை யுடையன,—

ஆதலிற் றருபொருள் கொள்பொரு டருவோன் கொள்வோ னொரு பொரு ளிவ்விய லுவப்பென வுணர்க - ஆகையாலொருவ னொருவனுக் குக்கொடுக்கும் பொருள், தான் கொள்ளும் பொருள், ஒருபொருளினைக் கொடுப்போன், அப்பொருளைக் கொள்பவன், எல்லா மொருபொருளா யிருக்கு மிம்முறையுடைத்தாகிய வத்தமென்றறிந்து பிரியப்படுவாயாக,-

நுகர் பொருள் சத்தி நுகர் வோன் சத்தனென் றிகலறு முணர்வு வந் தெய்துத லரிதே - இதனாற் புசிக்கப்பட்டிருக்குஞ் சத்தாதி விடயங்களு மவ்விடயங்களைப் புசிப்பவனுஞ் சத்தி சிவமாகிய சைதன்னியம்; இவையி ரண்டும் வேறல்லவென்று மாறுபாடற வறியு மறிவொருவனுக் குண்டா வது மிகவு மரிது,—

முத்திநிலை - கேவலம்.

நானவ னெனுமிது நவைவழி - ஆன்மாவுந் தனியே யொருமுதல், சிவமுந்தனியே யொரு முதலாமென்றிவ்வாறு துவிதபாவமாய்ச் சங்கற்பித்துக்கொண்டு நிற்றல் குற்றமுடைத்தாகிய வழியாயிருக்கும்,—

நல்வழி தானவ னுகையிது சாயுச்சியம் - நல்வழிதானொருமுதலறச் சிவமுதலேயாய் நின்று வருதல் சாயுச்சிய மென்னப்படும்,—

இத்திறன் றெளிய வுய்த்திடு மளவும் - இப்படி யிவனுக் குண்டாகத் தக்கதாக இவன் போதஞ் செலுத்துமளவும்,—

யாதொரு வகையி னீதியதாகத் தானறிவழியே தலைநின்று - சஞ்சாரத்தோடுங் கூடியிருந்தவன் அவற்றை விட்டுத் தானின்றது நீதியாக விது தனக்கு முத்திக்கு வழியென்று தன்போதத்தில தோன்றிய வழியில் தலைநின்று,—

என்று மூனுயிர் சிவத்தி லொடுங்கிட நடத்தி - கனவினு நனவினுமிவ் வுடம்பையு முயிரையுஞ் சிவத்திற் குள்ளே அடையச்செலுத்தி,—

மூடுமுழுமலம் வீடுங்காலை - ஒன்றையு மறியவொட்டாமற் பொருந்து மாணவமல நீங்குகையில்,—

கருவிக ளளவிற் புரிதரு மறிவு சாக்கிரங்கனவு நீக்கமில்சுழுனைதுரிய மென்றவை பயிறரு மறிவு - சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியமென்னப்பட்ட நாலவதரத்தினு மறிவது அறிகருவிகளிவ்வவத்தைகடோறு மேற்றக் குறைச்சல்களா நிற்பதாக விருக்கும். ஆகையால்இக்கருவிகளெல்லாங் கழன்றொன்றுமறியாமற் கிடக்குநிலை துரியாதீதம்,—

சகலம்.

துரியா தீதந் திரியாத் தன்மையி விறையரு ளுதவும் - இத்துரியாதீதத்தை விட்டு நீங்காமனிற்கையிற் கர்த்தாவின் திருவருள் கருவிகளைக் கூட்டி யிவனுடைய பெத்தத்தைச் சீவிக்கப்பண்ணும் பொழுது,—

கறை யற மாறி யறிவே யாகு - ஆணவமல நீங்கிக் கருவிகளோடுங் கூடி யறிவாய் நிற்கும்,—

சுத்தாவத்தை.

பிறியாக் கருவிக ணிறைமுத லவத்தையில் - இவனை விட்டு நீங்காம னிற்குங் கருவிமுப்பத்தாறும் நிறைந்து நிற்கும் சாக்கிராவத்தையில்,—

அறிவிலதாகத் துரியா தீதத் தோற்றந் திரியா ததுநற் சிவகதித் திறனே - எல்லாக் கருவிகளுங்கழன்றிருக்குந் துரியாதீதந்தோன்றினவிடத்து நீங்காம னிலைபெற்று நிற்பதே இவனது சிவகதி என்க. (கஎ)

---

## நிராகரணம்.

---

திறம்பெற நீயிங் கறைந்தமை கருதிற்
புவனமி யாவையும் புனிதன துருவெனி

லவன்முதற் காரண மன்று மென்னி
னிமித்த காரண நிகழ்த்துக வென்னி
யவனே காரண மனைத்துமென் றறைந்தனை
மண்டனிக் குலாலன் றண்ட சக்கராதி
காரண மூன்று மோர்பே ரணைந்த
தித்தா ரணிதனிற் கண்டது சாற்றுக
வத்த னியற்று மித்தொழில் பிறர்க்கோ
தனக்கோ வீணே வெனக்கீ தியம்புக
வீணெனிற் பித்தர் மாண்பறுந் தொழில்போ
றலைமையு மறிவு மிலதென விகழ்வர்
தனக்கெனி லஃதுமு னிற்பதொன் றன்றே
தன்போ லறிஞருந் தலைவரு மிலரான்
மின்போ னிலைமையை வேண்டலும் பழுதே
பிறர்க்கெனிற் பிறரும் பிறர்க்காம் பொருளும்
பொருட்கமை கருவியு மதற்குபா தானமுஞ்
செய்கையு மென்றோ ரைவகைத் தானொடு
மாறாச் சைவர் கூறா றொன்றா
னிச்சித் தாந்த மவசித் தாந்த
மென்சித் தான்ற வசித்தை மற்றீறு
தசித்தில தென்னிற் சித்ததென் னுலகி
னுலகா யதனும் பூதக் கூட்டஞ்
சலமேற் கொப்புட் டகுமெனச் சாற்றினன்
றீய கருமச் சீனர்சா வகர்பிறர்
ரேய மில்லென நிகழ்த்தின ரிலரோ
காண்டல் விரோத நிற்பிறர் கணித்தில
ரீண்டுன துரைக்குமற் றியார்கரி யுடலுஞ்
சித்தோ சித்தின் சேர்வாற் சித்தெனிற்
கடப டாதியு முடற்கட் சிதைவென்
தாபர வுயிர்போற் றனுவொழிந் திவற்றின்
மேவிய வுணர்வு விரவிடு மென்னிற்
சடத்துயிர் போலெனச் சாற்றினை யாகவி
னுடற்குயி ரிறையை யொழிந்துண் டன்றே
தருதிட் டாந்தமுந் தாட்டாந் திகமு
மொருபொரு ளாகி யுவமை பெறுதே
யொன்றே யாகி யுடற்கிறை தாபரத்
தோன்றிய நிலையில் விசேடமென் னுரைக்க
பூதச் சேர்வைப் பேதமென் றறையிற்
சேர்வைப் பேத மென்கொடு செப்புக
கருமத் தளவில் வருமெனிற் பித்த
ருரையிற் றிகழு முணர்வொழிந் தனையே
கருமஞ் செய்வோன் கடவுளன் றுடலு
மருவினின் றிருவினை வளரா நுகரா

சரு. கடவுளு முடலின் கண்பட றுஞ்ச
விடர்நல முறுத லிறங்குத லேறுத
லெவ்வகை யேனுஞ் செய்கையின் ருதலும்
பலகலை யுலகி னிலவுத லானு
மெண்ணரும் பொருளு மிரவியு மொழியப்
ருo. கண்ணென வொன்று காண்கையி னானும்
பாசப் பகுதியு மீசனு மொழியப்
பசுவு முண்டென் றிசையவேண் டின்றே
யிதுவெனு மொன்றை யதுவாய்ப் படுத்துப்
பொதுமையி னிற்கு மாயையின் பொற்பெனப்
ருரு. பொற்பணி யாவும் பொன்னாந் தன்மையி
னிட்கள சகளத் திருவுரு நிலையு
மீச னேயெனப் பேசுவ ரன்றி
யருவுரு வாகி வருமுல கென்னி
னனைத்து மாயை யெனத்தெளி கிலையே
சுo. யாவது மாகா தொழிவது மிலதெனு
பாவக மூலகா யதனது பான்மை
கட்கொலை வெகுளி காமங் களவுக
ளுட்படு மிவைவிட மொழியா தாரிலர்.
சோம பானஞ் சுறுபா னங்க
சுரு. ளாமென மறைக ளார்செவிப் பறைந்தன
மறையோன் புலைச்சியை மருவு மென்பது
முறையோ வெனிலது புனைமொழி யென்னிற்
சாதி பேத நீதி நீ தவறினு
மேதியை யேறு விழையா விரும்புங்
எo. கண்ணின துருவு மதிற்கதி ரொளியு
நண்ணருஞ் சத்தி நாடக மெனிலதற்
கேதுவும் பயனு மோத வேண்டு
நின்மொழி விரோதமு நீடுல கியற்கையுந்
தன்மசாத் திரமுஞ் சகலமு மென்செயு
எரு. மூலகே ழெனவிறை பலவாந் தன்மை
கடமொடு சார்வங் கலச மாதிக
ளடவுறு குயவ னுயின னென்றாற்
றனே யாகா வவைதா னுகா
னுயின் னென்ப தாக்கின னென்வே
அo. யானு யென்ப தனைத்து மவ்வகை
தானு காமையைச் சாற்றிடு மென்க
தாமே யெனுமித் தனியே கார
மழிந்தில ர்துவே யாய்த்தில ரதுவிட்
டொழிந்திலர் பிரிவில ரெனுமிவை யுணர்த்துங்

காயும் பழமுஞ் சுவையு நுகர்வ
தாயவன் ருனு மவன்முதற் றென்னு
மகிலமுந் தெளிய வறிவோன் ருனு
மகிலமு மறிஞரை யறிவிப் போனு
மறிஞர்க் கறிவா யறிகின் றேனு
மறிவிற் கறிபொரு ளாவோன் ருனு
மகிலமு மேனி யானவ னென்னுந்
தருபொருள் கொள்பொரு டருவோன் கொள்வோ
ஞெருபொரு ளாயி னுவப்புண் டென்க
நுகர்வோன் றனக்கு நுகர்பொருள் வேண்டிற்
றிகலறக் கிடையா திருந்ததெ னிரயமும்
வேண்டா ராயினு மெய்யுறு வியாதிக
ளீண்டா தொழியா திறைக்கிவை யீடல
சத்தியுஞ் சிவமுந் தாமே நுகருமென்
றித்திற னுணர்வவந் தெய்துவ தெவர்க்கோ
தமக்கே யென்னிற் ருமுண ராமையு
மமைப்பற வுணர்தலு மவர்க்கடை வன்றே
நானு மவனு நவையு நலனுந்
தானவ னுகையு நின்சா தனத்திற்
சகயோ கத்தைச் சாயுச் சியமெனப்
பகர்வது பதிபசு பாசத் தவர்க்கே
யாதொரு வகையென வோதிய திறைநூல்
சொன்னவற் றென்றன் றென்னில்வீ டெளிதே
தானறி வழியே தலைப்பொருள் பிடித்து
மேனிகழ் பலமும் வீடளித் திடுமே
நிலையாக் கருவியை நிலையாக் கருதிப்
புலையா டெது முலகா யதன்பொருள்
குட்டிய மின்றிநற் கோல மெழுதுத
லிட்டம தாயிற் கருவியு மிடங்களுங்
கருத்துற வுரைக்கத் தெரித்திடு மதீதத்
தறிவொன் றில்லோர்க் கிறையரு ளுதவுதல்
பிறிவறி வரிய செறியிரு ளிடத்தோ
ரந்தகர் காண வந்தோ ரெம்மை
நீவிருங் காண வேண்டு மென்றுங்
கெடுத்தோர் தீபங் கொடுத்ததை யொக்கு
மிச்செயற் கிறைவன் கொச்சய னன்றே
கருவி வசத்திற் றெரிவுறக் காண
வேண்டுந ரிலரா லீண்டறி வியாவுஞ்
சிவமே யென்று செப்பினை யவமுறு
பொறிபுல னறியா வறிவது பிரம

மென்றோர்க் குன்போ லிடர்ப்பட லிலதே
யேற்றங் கருவி யிருபதோ டிரண்டும்
போற்றுமைந் தவத்தையும் புகறிரி மலமு
மீசனு முயிரும் பேசினை யஃதொழிந்
தொன்றே யாகு மென்றநின் னியல்புந்
தாயர் மனைவியர் தாதியர் தவ்வைய
ராயவ ரெவரையு மோர்மையிற் காணுங்
கோகழி தூர்த்தர் கொடுந்தொழி றகுமே
யாக மற்றத னருணிலை தன்னிலை
யேக நாயக னாகிய விறைநிலை
நாசமில் பாசம் வீசிய வியனிலை
யினையவை யொன்று நினைவினு மின்றி
யுண்டெனு முணர்விற் கண்டது கருதி
விழுக்கெனும் புலன்வழி யொழுக்கமு மதுவாக்
கொண்டு பண்டையி லெண்டரு மடங்கு
வந்தவர் செய்த தந்தையை யன்றே
புன்மைக ணீங்க வுண்மை கேண்மதி.

பெத்தநிலை மறுப்பு.

(இ-ள்.) திறம்பெற நீ யிங்கறைந்தமை கருதின் - நீ நன்றாக இவ்விடத்திற் பெத்தமுத்திகளைக் கூறிய வற்றை விசாரிக்குமளவி லெப்படியிருந்தது, இதற்குக் குற்றமென்ன,—

புவன மியாவையும் புனிதன துருவெனில் - பிரபஞ்சமாகக் காணப்பட் டிருப்பனவெல்லாங் கர்த்தாவின் சொரூபமென்னில்,—

அவன் முதற்காரணம் - விசுவாதீதனுயுள்ள அச்சிவன் இப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாக வேண்டும்,—

அன்றா மென்னில் - அவன்முதற்காரணமன்றென்னில்,—

நிமித்தகாரண நிகழ்த்துகவென்-அவனை நிமித்தகாரணமென்றுசொல்லென்று நான்சொல்ல,—

நீ யவனே காரண மனைத்து மென்றறைந்தனை - நீ பின்னையுமவ் விசுவாதீதனாகிய சிவன்றானே நிமித்தகாரணமுந் துணைக்காரணமு முதற்காரணமு மாமென்று கூறினை,—

மண்டனிக் குலாலன் றண்ட சக்கராதி காரணமூன்றும் - மண்ணாகிய முதற்காரணமு மொப்பில்லாத குயவனாகிய நிமித்தகாரணமு மவனுக்குக் கருவியெனப்பட்டதண்டசக்கரமாதியாகியதுணைக்காரணமுமிவைமூன்றும் மூன்றுகாரணமா யிருப்பதொழிந்து,—

ஓர்பேரணைந்தது இக்காரணியதனில் கண்டது சாற்றுக - மூன்று மொருகாரணமா யிருப்பது இவ்வுலகினிடத்துக்கண்டதுண்டாயிற்சொல். நிமித்தகாரண மென்றது சிவனை, துணைக்காரணமென்றதுசத்திகளை, முதற்காரணமென்றதுவிந்துமோகினிமானென்னுமுபாதானத்திரயங்களை. இஃதன்றியும்,—

அத்தனியற்று மித்தொழில் பிறர்க்கோ தனக்கோ வீணோ எனக்கீதி யம்புக-கர்த்தாஇயற்றும் பஞ்சகிருத்தியம்பிறர்பொருட்டாகச்செய்துவரு கின்றானோ, அல்லது தன்பொருட்டாகச் செய்துவருகின்றானோ, அவை யிரண்டுமன்றிப் பயனற்றதாகச் செய்துவருகின்றானோ இதனை யெனக் குத் தெளியச்சொல். சொல்லமாட்டாயாயின் நான்சொல்லக்கேள்,—

வீணெனிற் பித்தர்மாண்பறுந் தொழில்போற்றலைமையு மறிவுமில தென இகழ்வர் - பயனற்றதாகச் செய்தானுமாயிற் பித்தராயுள்ளோர் செய்யு மாட்சிமையற்ற தொழில்போல விருக்கையாற் கர்த்தாவிற்குச் சர்வ முதன்மையுஞ் சர்வஞ்ஞத்துவமு மில்லையென்று பெரியோரிகழ்வர். ஆகையால் வீணாகச் செய்தனனென்று சொல்லவுமாகாது,—

தனக்கெனில் அஃது முன் நிற்பதொன்றன்றே - தன்னிமித்தமாகச் செய்தனனென்னில் அதுவு முன்சொன்னவாறு பொருந்துவதொன் றன்று. அஃதேனென்னில்,—

தன்போல் அறிஞருந் தலைவருமிலரான் மின்போனிலைமையை வேண் டலும் பழுதே - தன்னைப்போல் சர்வஞ்ஞத்துவமுஞ் சர்வமுதன்மையும் பிறரொருவருக்குமில்லாத படியினால் மின்போல் தோன்றிமறைந்துபோ கும் பிரபஞ்சவியற்கையைத் தனக்குவேண்டிச்செய்தானென்பது மிகப் பழுதாம். ஆகையாற் றன்பொருட்டாகச் செய்தனனென்பதுமாகாது,—

பிறர்க்கெனிற் பிறரும் பிறர்க்காம் பொருளும் - இத்தொழில்கர்த்தா பிறர்பொருட்டாகச்செய்தனனென்னில்தன்னை யொழிந்துபிறனென்றொ ருமுதலும் அப்பிறனெனப்பட்டவர்க்கு வேண்டின விடயமும்,—

பொருட்கமை கருவியும் அதற்கு உபாதானமும் - அவ்விடயம் புசிக்கத்தக்க கருவியும் அக்கருவிகடோன்றற்கோருபாதானமும்,—

செய்கையு மென்றோரைவகைத்தானொடு மாறாச் சைவர்கூறுர் - இவ் வுபாதாநத்தினின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் சிவனோடு மிவ்வை வகைக்கு மாறுபாடாகச் சைவராயுள்ளோர்கூறுர்,—

என்றால் நின்சித்தாந்தம் அவசித்தாந்தமென் - என்றிப்படியிருக்கை யால் நீ கொண்டிருக்குஞ் சித்தாந்தம் அவசித்தாந்தமென்று நீ தானே சொல். இஃதன்றியும்,—

சித்தான்றவசித்தை மற்றீனாது - சித்தாகியசிவம் அசித்தாகியபிரபஞ் சத்தைத் தன்னிடத்தினின்றுந் தோற்றுவியாது,—

அசித்திலதென்னில் - அசித்தென்பது பிரபஞ்சத்திற்கின்று. எல் லாஞ் சிற்சொரூபமே யென்னில்,—

அசித்ததென் உலகில் - இவ்வுலகத்தின்கண் பிரபஞ்சம் சடமா யிருப்பதென்று சாத்திரங்கள் கூறுவானேன். இஃதன்றியும்,—

உலகாயதனும் பூதங்கூட்டஞ் சலமேற் கொப்புள் தகுமெனச் சாற் றினன் - உலகாயதன் முதலாகப் பூதக்கூட்டமாயிருக்கும் பிரபஞ்சத்தை நீர்மேற் குமிழிபோலு நிலைநிற்பதன்றென்று கூறினன். அப்படியிருக்

கையில் நீயிப்பிரபஞ்சத்தைச் சிற்சொரூபமென்று சொன்னது உண்மை யாகாது,—

ஆன்மாவுண்டேனல்.

தீயகருமச் சீனர் சாவகர் பிறர் ஞேயமில்லென நிகழ்த்தினரிலரோ - பொல்லாத தொழிலுக்கு ஏதுவாயிருக்கும் புத்தர் சமணர் மற்றைச் சமயிகளனைவரும் இச்சரீரத்தில் ஓரறிவுண்டென்று சொல்வர். அதனை யொழிந்து நின்போல ஆன்மாவின்றென்பாரிலர்,—

காண்டல் விரோத நிற்பிறர் கணித்திலர் - பிரத்தியக்ஷவிரோதம் நீ காட்டினாற்போல் அப்புறச்சமயினு மிவ்வாறு கூறினரிலர்,—

ஈண்டுன துரைக்கு மற்றி யார்கரி - இவ்விடத்து நீ ஆன்மாவின்றெனற்கியார்தான்சான்று. இன்னொன்றொருவனைகாட்டு. இஃதன்றியும்,—

உடலுஞ் சித்தோ - இச்சரீரமு மறிவோவன்றோ,—

சித்தின் சேர்வாற் சித்தெனில்-அறிவோடுங்கூடி வாதனைப்பட்டு வருதலால் இவ்வுடலு மறிவென்னில்,—

கடபடாதியு முடற்கட் சிதைவென் - கடபடாதிகளும் இவ்வுடலைப் போலவையுமோருடலா யிருக்கையில் இவ்வுடல்போலுஞ் சஞ்சாரமின்றிக்கிடப்பதேன்,—

தாபர வுயிர்போற் றனுவொழிந் திவற்றின் மேவிய வுணர்வு விரவிடு மென்னில் - அக்கடபடாதிகளிற் பொருந்திய பேரறிவு எல்லா வடிவங்களினுங் கலந்துநிற்குமிடத்து உயிர்கூடிநிற்கு மிவ்வுடம்பில் தாக்கினாற் போல் மற்றக்கடபடாதிகளிற்றாக்கி நில்லாதென்னில்,—

சடத்துயிர் போலெனச் சாற்றினை யாகலி னுடற்குயி ரிறையை யொழிந்துண் டன்றே - உயிர்நிற்கு முடம்பேபோல் உயிரில்லாத வுடம்புகளி லிப்பேரறிவு பொருந்ாதென்றுசொன்னையாகையால் இவ்வுடற்குக் கர்த்தாவையொழிந் தோருயிருண்டாக வேண்டும். நான் திருஷ்டாந்தங்கூறினது கொண்டு எனப்படிச்சொல்லுகின்றீரொன்று நீசொல்லில்,—

தருதிட் டாந்தமுந் தாட்டாந் திகமு மொரு பொருளாகி னுவமைபெறுதே-ஒன்றிற்குவமையாகச்சொல்லப்பட்ட திருஷ்டாந்தமு முவமையைப் பற்றிநின்ற தாஷ்டாந்திகமு மொருபொருளாயிருக்குமாயின் பொன்போலுங் கொன்றையென்னு முவமை இவ்வுலகின்கணுண்டாகாது,—

ஒன்றே யாகிய வுடற்கிறை தாபரத் தொன்றிய நிலையில் விசேடமென்னுனைக்க - பசுமுதலின்றிப் பதிமுதலொன்றுமேயாயின் இப்பதிமுதலெங்கு நிற்குமிடத்துத் தாபரங்களினும் இவ்வுடற்கு விசேடமுண்டானதென்ன நீ சொல்,—

பூதச் சேர்வைப் பேதமென் றறையில் - பூதக்கூட்டுறவின் ஏற்றக் குறைவென்னில்—

சேர்வைப் பேத மென்கொடு செப்புக - பூதங்கள் கூடுமிடத்திற் பேதந்தான்வந்த தெதுகொண்டென்று சொல்,—

கருமத்தளவில் வருமெனில் - கன்மத்துக்கீடாகப் பேதமுண்டா மென்று நீ சொல்லில்,—

பித்த ருரையிற் றிகழுமுணர் வொழிந்தனையே - நீகன்மத்துக்கீடாய் வருமென்றது பித்தர்கூறுஞ்சொற்போல் விளங்காநின்றதுநீயுமறிவுகெட்டு விட்டதாயிருந்தது,—

கருமஞ் செய்வோன்கடவுளன்று-யாதொருகருமத்தைச்செய்துவருவோனைக் கர்த்தாவென்னப்படாது ஆகையால் இக்கன்மஞ்செய்ததுசிவமன்று,—

உடலு மருவி நின்றிருவினை வளரா நுகரா-உடலும் சடமாகையால் ஒரோதுவுமின்றிக் கன்மத்தையுண்டாக்கிக்கொள்ளாது, பிராரத்த கன்மத்தைத் தானுகப்புசிக்காது, சிவன்கூடிநின்றே புசித்தனனென்னில்,—

கடவுளு முடலின் கண்பட லுஞ்சல் - வாக்குமனுதீதனுயிருக்கும் சிவன் கன்மத்துக்கீடாக வோருடலினிடத்துவந்துபொருந்துதல் பிராரத்தந் தொலைந்தவாறே அவ்வுடலை விட்டுவிடுதல்,—

இடர் நலமுறுத லிறங்குத லேறுதல் - இவ்வுடலோடுங் கூடிநின்று புண்ணியபாவங்களைப்புசித்துக்கொண்டுவருதல் சாக்கிராதியவத்தைகளிற் றங்கி அதீதப்பட்டுக்கிடத்தல் ஈண்டுமுணர்த்துமுறைமையிலேறிச் சாக்கிரத்தானத்தில் வருதல்,—

எவ்வகையேனுஞ் செய்கையின்றுதலும் - இவையெல்லாமெவ்வாற்றானுங் கடவுளுக்கித்தொழிலில்லாமையானும்,—

பலகலை யுலகினிலவுத லானும்-கர்த்தா சர்வஞ்ஞனுகையாலும் பாசஞ் சடமாகையாலும் இவையிற்றைக்கற்க வேண்டுவதின்று. இவ்விருவகையுமின்றிப் பலசாத்திரங்களும் இப்பிரபஞ்சத்திலுண்டாய்வருதலினுனும்,—

எண்ணரும்பொருளு மிரவியுமொழியக் கண்ணெனவொன்று காண்கையினுனும் - எண்ணிறந்த பேதமான பிரபஞ்சமும் இவையிற்றை விளக்கஞ் செய்கின்ற ஆதித்தனுமின்றிக் கண்ணெனவொருமுதல்நடுவேநின்று கண்டுவருகையினுனும்,—

பாசப் பகுதியு மீசனு மொழியப் பசுவுமுண்டென் றிசையவேண்டின்றே - பாசத்தினுடைய வகையும் பதியினுடைய வகையுமின்றிப் பசுவினுடைய வகையுமுண்டென்று பொருந்தவேண்டும்,—

இதுவெனு மொன்றை யதுவாய்ப் படுத்துப் பொதுமையி னிற்கு மாயையின்பொற்பென - இதுவென்று சுட்டப்பட்ட ஒருவிடயத்தை விடயந்தானுயவ்வறிவானது பொதுவில் நிற்குமென்றது மாயாமயக்கத்தினுடைய பெருமையென்றறி,—

பொற்பணியாவும் பொன்னுந்தன்மையின் - பொன்னினுண்டாம் பணிகளனைத்தும் அப்பொன்போலிருந்ததன்மைபோல்,—

நிட்கள சகளத்திருவுந நிலையுமீசனேயெனப் பேசுவர் - நிஷ்களமாகிய அருவமும் சகளமாகியவுருவமும் இவையிரண்டுங் கர்த்தாவினுடைய சொரூபமாயிருக்குமெனப் பெரியோர் கூறுவர்,—

அன்றி யருவுருவாகி வருமூலமென்னில்-அன்றியருவாயுள்ளசிவமும் உருவாயுள்ள பிரபஞ்சமாமென்னில்,—

அனைத்துமாயையெனத் தெளிகிலேயே - பிரபஞ்ச மாயையாயிருக்கை யால் இப்பிரபஞ்சத்திற்கு உபாதாநமாயிருக்குமென்ற சிவமும் மாயையெ ன்று தெளிகின்றாயில்லையே. எனவே பிரபஞ்சத்திற் குபாதாநஞ் சிவமல்ல மாயையென்பதாம். இஃதன்றியும்,—

ஆவதுமாகாதொழிவது மிலதெனும் பாவக மூலகாயதனதுபான்மை- இஃதாம்பகுதி இஃதாகாப்பகுதி இவையிரண்டு மிலவென்னும் பாவகமூல காயதனுடையபக்கமாம். அம்முறைமை ஞானிகளுக்கின்றென்னில்,—

கட்கொலை வெகுளி காமங் களவுக ளுட்படுமிவைவிட மொழியாதா ரிலர் - மதுபாநஞ்செய்தல், கொன்றுபறித்தல், கோபித்துச்சொல்லல், பாதாரகமநஞ் செய்தல், பிறருடைய பொருளைக் களவுகொள்ளல் இப் படிப் பின்னுஞ் சொல்லும் பொல்லாங்குக ளெல்லா வற்றையுமாகா; இவையிற்றைவிட்டு விடுங்கோளென்று சொல்லாதிருப்பார் ஒருவருமிலர், இப்படிப்பட்டவையெல்லாஞ் செய்யினும் ஞானிகளுக்குத் தேவையில்லை தோடமேறாதென்று சாத்திரஞ் சொல்லுமென்னில்,—

சோமபாநஞ்சுராபாநங்களாமெனமறைகளார்செவிப்பறைந்தன-சோ மபாநஞ்செய்தல், சுராபாநஞ்செய்தல், இவையிரண்டுங்கொள்ளலாமென் றொருவருமறியாமல் வேதங்களார்செவியில்சொல்லின. இஃதன்றியும்,—

மறையோன் புலைச்சியை மருவுமென்பது முறையோ - பிராமணன் பறைச்சிக் காசைப்பட்டு அவளோடே கூடுவது முறைமையோ முறைமை யீனமோ,—

எனிலதுபுனைமொழி யென்னில் - பிராமணன்பறைச்சியைப் பரிசிக் கலாகாதென்று சொல்லுவது ஒருவரம்புகொண்டு சொன்ன தொழிந்து அவளிடத்திற் கூடினவிடத்தின்பம் விளைந்ததின்றோ வென்னில்,—

சாதிபேதநீதி நீ தவறினு மேதியை யேறுவிழையா விரும்பும் - பிரா மணனென்றுஞ்சண்டாளனென்றும் வழங்கிவந்த சாதித்தன்மையை நீயிப் போதுதவிர்த்துவிட்டாயாயினும் எருமையை இடபமானதுவிரும்பாது பசு வையேவிரும்பும். ஆதலால் ஞானிகளுக் கெல்லாமென்பதத்தமாகாது,—

கண்ணினதுருவுமதிற்கதிரொளியு நண்ணருஞ்சத்திநாடகமென்னில்- கண்ணினுடையபிரகாசமும்அதிற்கூடிநிற்குமாதித்தனுடையகாட்சி யும் பொருந்துதற்கரிய சிவசத்தியினுடையநாடகமாயிருக்குமென்னில்,—

அதற்கேதுவும் பயனு மோதவேண்டும் - இப்படிச் சிவனொருவுரு வத்தைக் கொண்டானாகில் அவனுக்கிப்படி யொருகுற்றமுண்டென்பது நீக்கிக்கொள்ள இப்படிப் புசித்தானென்றுஞ் சொல்லவேண்டும்,—

நின்மொழி விரோதமு நீடுலகியற்கையும் - விசுவாதீதனாயிருக்கும் சிவனிப்படிப் புசித்துவருவானென்று நீ சொல்லுஞ் சொல்விரோதமும்

நல்லவனிவன் பொல்லாதவனிவனென்று உலகிலுள்ளவர்கள் எல்லாம் அங்கீகரித்துக்கொண்டுவரு முறைமையும்,—

தன்மசாத்திரமுஞ் சகலமு மென்செய்யும் - புண்ணியபாவங்களின்னவென்றும் பாவஞ்செய்தாரை அரசன் தண்டஞ்செய்யக் கடவனென்றுந் தன்மசாத்திரங்களிற் சொல்லு முயைமையு மிப்படிச் சொல்லப்பட்டவையெல்லாம் ஆன்மாவொன்றில்லையாமாயின் அவையெல்லாமென்னபயனைச் செய்யும். இஃதன்றியும்,—

உலகேழெனவிறை பலவாந்தன்மை - "உலகேழெனத்திசை பத்தெனத்தானொருவனுமே." என்றதிருவாசகத்தின் தன்மை,—

கடமொடு சார்வங் கலசமாதிக ளடலுறு குயவனாயினனென்றால்-குடங்கள் சட்டிகள் கலசங்கள் இவைமுதலியனவாகச்சொல்லப்பட்டபாத்திரமெல்லாம் விரைவிற் பொருந்திச் செய்யப்பட்ட குயவனாயினனென்று சொல்லின்,—

தானேயாகா வவைதானாகான் - அக்குயவன் அப்பாத்திரங்களாகான், அப்பாத்திரங்கள் இக்குயவனாகாது,—

ஆயினனென்ப தாக்கினனென்பதாக்கின னெனவே-ஆயினனென்ன தாக்கினனென்றிலக்கணங்களிற் சூத்திரஞ் சொல்கையால்,—

ஆனுயென்பதனைத்து மவ்வகை தானாகாமையைச் சாற்றிடுமென்க - வானாய் மண்ணாயென்று சொல்லப்பட்டவெல்லாம் அச்சிவனவ்வாறு மண்ணுமாகானென்பதைச் சொல்லுமென்றறி,—

தாமேயெனுமித் தனியேகாரம் - தாமேதானாகச் செய்யுமென்னு மொப்பில்லாத ஏகாரத்தோடுங் கூடியிருக்குந் திருவாக்கு,—

அழுந்தில ரதுவே யாய்த்திலர் - தாங்களழிந்தார்களுமிலர், அச்சிவமுதலானாருமிலர்,—

அதுவிட்டொழிந்திலர் பிரிவிலரெனு மிவையுணர்த்தும் - அச்சிவமுதலையின்றிக் காரியப்பட்டாருமிலர், அம்முதற்கு வேறாயிருந்தாருமிலர் என்றிப்படியிருக்குமென்று சொல்லும்,—

காயும் பழமுஞ் சுவையு நுகர்வதாயவன்றானுமவன்முதற்றென்னும்- "காயாகிப் பழமாகிப் பழத்தினின்ற விரதங்க ளுகர்வானுந்தானேயாகி" என்றதிருவாக்குகாயும் பழமும் அவற்றினின்ற இரதமும் அவையிற்றைப் புசிப்பானும் அக்கர்த்தாவாலுமுண்டாகையால் இவையெல்லாஞ்சிவமுதலாக வுண்டானதென்று சொல்லும்,—

அகிலமுந் தெளியவறிவோன்றானும் - பிரபஞ்சமெல்லாவற்றையும் ஆக்கமறவறிபவனும்,—

அகிலமு மறிஞரை யறிவிப் போனும் - அறியும்பகுதியுள்ளவர்க்கு எல்லாவற்றையு மறிவிப்பானும்,—

அறிஞர்க்கறிவா யறிகின்றோனும் - அறியும்பகுதியுள்ளவர்க்கு அவரறிவாய் நின்றறியும் பகுதியை யுடையானும்,—

அறிவிற் கறிபொரு ளாவோன் றானும்-முத்தான்மாக்களுக்கு அறிபொருளாயிருப்பானும்,—

அகிலமுமேனி யானவனென்னும் - பிரபஞ்சமெல்லாமவனுக்குத் திருமேனியாகையால் இம்முறைமையுடையானென்று சொல்லும்,—

தருபொருள் கொள்பொருடருவோன் கொள்வோன் - ஒருவன்கொடுக்கப்பட்டபொருள், தான்கொள்ளப்பட்டபொருள், ஒருவன் பொருளைக் கொடுப்பவன், அப்பொருளை வாங்கப்பட்டவன் இவையெல்லாம்,—

ஒருபொருளாயி னுவப்புண்டென்க - ஒருபொருளாயிருக்குமாயின் மிகவும் பிரியம்வருமென்க. இப்படியுஞ் சொல்லுவார்களோ,—

நுகர்வோன்றனக்கு நுகர்பொருள்வேண்டிற்று - புசிப்பானொருவனுக்கொருபொருளைப் புசிக்கவேண்டிய விடத்து,—

இகலறக்கிடையா திருந்ததெனிரயமும் - அப்பொருளிவனுக்குமாறுபாடின்றி வந்து பொருந்தாதிருப்பானேன். எல்லாமொருபொருளாயின் நினைத்தபொழுது புசிக்கக்கண்டோ மில்லையே; ஆகையாலெல்லாமொன்றாயிருக்குமாயின் நிரயமுண்டாகாது. அஃதேனென்னில்,—

வேண்டாராயினு மெய்யுறுவியாதிக ளீண்டாதொழியாது - குன்மம் சூலை முதலியநோய்களை அநுபவிக்கவேண்டாமென்று அவர்களிருக்கினுமுடலினுண்டாகியநோய்க ளிவைவந்து பொருந்தியநுபவியாமல் விடா, ஆகையால் எல்லாமொன்றென்பதமையா ஆன்மாவின்றெல்லாஞ்சிவமநுபவிக்கு மென்றனை,—

இறைக்கிவையிடல - வேண்டிய பொருள் கிட்டாமலும் வேண்டாத நோய்கள் கிட்டியும் இவற்றினுண்டாகிய வருத்தம் ஆன்மாவுக்கல்லது சிவனுக்குண்டாகாது. இப்படியிருக்கையில்,—

சத்தியுஞ்சிவமுந் தாமேநுகருமென் றித்திறனுணர்வுவந் தெய்துவதெவர்க்கோ - ஆன்மாவின்று, சத்திசிவங்களே சுகதுக்கங்களனைத்து மநுபவிக்குமென்ற இப்பகுதியினுண்டாகிய ஞானம் இப்பிரபஞ்சத்திற்குள்ளே யார்க்குத்தான் உண்டாவது,—

தமக்கே யென்னிற் றாமுணராமையும் - சத்திசிவங்கட்கே இவ்வநுபோகமென்னில் அச்சத்திசிவங்களிப்பிரபஞ்சத்தை யறியாமையாலும்,—

அமைப்பற வுணர்தலு மவர்க்கடைவன்றே - அறியுமிடத்துச் சுட்டியறியாமற் றடையற எல்லாவற்றையுமொக்கவறிகையாலுஞ்சுகதுக்கங்கள் ஆன்மாவிற் கொழிந்து சிவசத்திகட்குண்டாவதன்றே, நானொருமுதலவனொருமுதலென்னுங் குற்றத்தையுடைய வழியென்று மிவனவனாதல் நல்லவழியாகிய சாயுச்சியமென்றுங்கூறினை,—

முத்திநிலைமறுப்பு.

நானுமவனு நவையு நலனும் - நானென்னுமான்மாவும் அவனென்னுஞ்சிவமு நவையென்னுங்குற்றமு நலனென்னுநன்மையும்,—

தானவனுகையு நின்சாதனத்தில் - இவ்வான்மா அச்சிவனுகவேண்டுமென்கையும், நீயெல்லாமொன்றென்பவனுகையால் உன்னுடைய சாதனத்திற்குட்பட்டதன்று. இஃதன்றியும்,—

சகயோகத்தைச் சாயுச்சியமெனப் பகர்வது பதிபசுபாசத்தவர்க்கே - சிவனேடொன்றுய்க் கூடிப்போவதைச் சாயுச்சியமென்றது திரிபதார்த்த நிச்சயம் வந்தவர் கொள்ளும் பகுதியாமே. இஃதன்றியும்,—

யாதொரு வகையெனவோதிய திறைநூல்சொன்னவற்றென்றன்று - இம்முத்தித்தன்மை கூடும்வரையுஞ் சங்காரத்தோடு கூடியிருப்பவனவற்றைவிட்டு நின்றதே நிலையாகக்கொண்டுபசரித்து வரக்கடவனென்று நீ சொன்னது சிவாகமம் முத்திக்கேதுவானவர் சரிக்கவேண்டிய முறைமை பலவழியுங்கூறும், அவற்றிலே யொருவழியுங் கூடப்பட்டதன்று,—

என்னில் வீடெளிதே-அப்படிச் சரிப்பதுதானே முத்திசாதனமென்னில் மோட்சத்தை யரிதென வேண்டுவதின்று, எல்லார்க்கு மெளிதாய்ப் பெற்றுவிடலாமென்றுசொல். இஃதன்றியும்,—

தானறிவழியே தலைப்பொருள் பிடித்து - ஆசாரியர் கற்பித்தவழியே ஒழுங்கில் வாராமல் தன்னுடையபோதத்திற்குத் தோன்றியவழியே தலையான வழியாகப்பிடித்து,—

மேனிகழ்பலமும் வீடளித்திடுமே - அவ்வழியே ஒழுகிவர அதனுலுண்டாகிய பலமும் வீட்டின்பத்தைத்தருமேல்,—

நிலையாக்கருவியை நிலையாக்கருதி - நிலையில்லாமைக்குச் சான்றான தேகாதிப்பிரபஞ்சத்தை நிலைநிற்கு மென்றுகருதி,—

புலையாடுதலு முலகாயதன் பொருள்-செய்யாத காரியத்தைச்செய்துகொண்டுவருவது உலகாயதன்கொள்ளும் பொருளாயொழிந்து சைவர் கொள்ளும் பொருளன்று,—

குட்டியமின்றி நற்கோலமெழுதலிட்டமதாயில் - சுவரில்லாமற் சித்திரமெழுதுவது ஒருவருக்குங்கூடாது. உனக்கிட்டமாயிருக்குமாயின்,—

கருவியு மிடங்களுங் கருத்துற வுாைக்க-தனுகரணபுவன போகங்கள் ஆன்மாவிற்கேயென்று சாத்திரஞ் சொல்லுமிடத்து,—

அதீதத்து தெரித்திடும் - சிவன் விசுவாதீதனுயிருக்கையால் அவனுக்கிவைவேண்டுவதின்று. இவையெல்லாம் ஆன்மாவிற்குவேண்டியிருக்கையால் ஆன்மாவிற்கில்லை இவையந்தரத்தே நிற்குமென்றுன்னுடைய போதமென்றுங் கூசாமனினைத்துச் சொல்லும். இஃதன்றியும்,—

அறிவொன்றில்லோர்க் கிறையருளுதவுதல் - சற்றுமறிவில்லா ஆன்மாக்கட்குக் கர்த்தாவின் அருளறிவைக்கொடுக்குமென்றனே, அங்ஙனமது செய்தல்,—

பிறிவறிவரியச் செறியிருளிடத்து - ஒருசற்றும் நீக்கக்காணுமற் செறிந்தவிருளிடத்தில் இருக்கும்,—

ஓரந்தகர் காணவந்தோரெம்மை நீவிருங்காணவேண்டு மென்றுங் கெடுத்தோர்தீபங் கொடுத்தஃதையொக்கும்-அந்தகனைக்காணவந்த ஒருவர் விளக்கைக்கொண்டுவந்துகண்டவ்விளக்கை அந்தகர்கைற்கொடுத்தென்னை நீவிருங்காணவேண்டு மென்ன அவனை அந்தகர்கண்டானென்பதொக்கும், அறிவில்லாதவான்மாக்கட்குக் கர்த்தா அறிவைக்கொடுக்கவந்ததென்றது,

இச்செயற்கிறைவன் கொச்சையனன்றே - அறிவில்லா ஆன்மாவிற் குத் தன்னருளைக்கொண்டறிவைக்கொடுத்தானென்பது கர்த்தாவும் இவ வான்மாவைப்போலறிவில்லாதவனுகவேண்டும். இஃதன்றியும்,—

கருவியசத்திற் றெரிவுறக்காண வேண்டுநரிலரால் - கருவிகளைக் கொண்டு தேகாதிபிரபஞ்சத்தை நன்ருகக்காணுங்காட்சியைச்சிவஞானிக ளொருவரு மதைவேண்டியிருப்பாரிலர்,—

அப்படியிருக்கையில் ஈண்டறிவியாவுஞ் சிவமேயென்று செப்பினை - இவ்விடத்துக் கருவிகளைக்கொண்டறியுமறிவெல்லாஞ்சிவமேயென்றனை,-

அவமுறுபொறிபுனலறியா - இந்திரியங்கள் சடமாகையினுல் அவை களையறியமாட்டா,—

அறிவது பிரமமென்றோர்க் குன்போ லிடர்ப்படலிலதே - எல்லாவற் றையுமறிவது பரப்பிரமமென்ற மாயாவாதிக்குமுன்போற்குற்றஞ்சொல்ல விடமின்று. அதேனென்னில், அவன்பிரமத்தையறிவென்றும் பிரபஞ்சத் தைச் சடமென்றுங்கூறினன். நீயெல்லாவற்றையுஞ் சித்தென்றமையால் குற்றமாம். இஃதன்றியும்,—

ஏற்றங்கருவி யிருபதோடிரண்டும்-அம்மாயாவாதி பதினுன்கு கருவியு மூன்றவத்தையுங்கூறினுன். நீயவனினும் வேறிருபத்திரண்டுகருவியும்,—

போற்றுமைந்தவத்தையும் புகறிமலமு மீசனுமுயிரும்பேசினை - சைவருபசரித்துக்கொண்டுவரும் அஞ்சவத்தையும் அவராற்கொள்ளப் பட்ட மூன்றுமலமுங் கர்த்தாவும் ஆன்மாவுமுண்டென்றனை,—

அஃதொழிந்தொன்றேயாகு மென்றநின் னியல்பு - அவற்றையெல் லாம் விட்டிப்பொழுதெல்லாஞ் சிவமொன்றுமே யென்று நீகூறுமியல்பு எத்தோடொக்குமென்னின்,—

தாயர் மனைவியர் தாதியர் தவ்வையர்-தாயும் மனைவியரும் வெள்ளாட் டிகளும் தமக்கையரும்,—

ஆயவரொவரையு மோர்மையிற் காணும் - அப்படிக் கூறப்பட்ட யாவரையும் விடயப்பார்வையாய்க்காணும்,—

கோகழிதூர்த்தர் கொடுந்தொழிறகுமே - கோவினுற் கழியுண்டு போர்த்தொழிலைக்கொண்டு அவரைக்கண்டு தன்னெல்லையில் நில்லாமல் அப்பாற்பட்டுக்கண்டுவரும் தூர்த்தர் கொடுந்தொழிலொக்கும்,—

ஆகமற்றதன் - நீசொல்லிவந்த ஞானத்தினது தன்மை இப்படி தவறாகக்கிடக்க,—

அருணிலைதன்னை யேகநாயக னாகியவிறைநிலை - அருளான்மாக்களை யுபகரித்து நிற்குமுறைமை ஆன்மாவிற்குத் தனக்கெனவோர் சுதந்தரமின்றி நிற்குமுறைமை கர்த்தா எவற்றினு நிறைந்து நிற்குமிடத்தொன்றினுந்தாக்கற்று நிற்குமுறைமைநிலை,—

நாசமில்பாசம் வீசியவியனிலை - அழிவில்லாப்பாசஞ் சர்வான்மாக்களையும் பந்தித்து நிற்குமுறைமை,—

இனையவையொன்று நினைவினுமின்றி - இப்படிக் கூறப்பட்டவையொன்றுமுன்னினைவினு மின்றி,—

உண்டெனு முணர்விற் கண்டது கருதில் - ஆன்மாவிற் கறிவின்று அறிவது சிவனே யென்று நீ நாட்டப்பட்ட அறிவால் நீயநாசாரமாகச் சொன்னதை விசாரிக்கில்,—

இழுக்கெனும்புலன்வழி யொழுக்கமு மதுவாய்க்கொண்டு - இந்திரியவாதனை பொல்லாதென்னுமிடத்து அவ்விந்திரியவாதனையை நீயாசாரமாகக்கொண்டு,—

பண்டையிலெண்டரு மடங்குவந் தவர்செய்த தந்தையயன்றே - பெத்ததிசையிற் செய்துவந்த அநாசாரத்திலும் முத்தித்திசையி னெண்மடங் கநாசாரஞ்செய்ய மயக்கத்தைத்தந்தவஞ்ஞானத்தை வெறுப்பதல்லது உனனைவெறுக்க வழக்கின்று,—

புன்மைக ணீங்க வுண்மைகேள் - இப்படிப்பட்டவஞ்ஞானமுனக்கு நீங்க நான் சத்தியமாகிய ஞானத்தை விரித்துச்சொல்கின்றேன் அதைப் புத்தி பண்ணிக்கேட்பாயாக என்க. (கஅ)

---

## சைவவாதிசங்கற்பம்.

அறிவா யறியு மறிவுயிர் கேவலத்
தறிவில னிருளொடும் பிரிவில னண்ணல்
கலைமுத லாக நிலவிய கருவிகள்
விளக்கென வுதவுந் துளக்கறப் பொருந்தி
யிருவினை நுகர்வில் வருவினை செய்து
மாறிப் பிறந்து வருநெடுங் காலத்
திருண்மல பாகமுஞ் சத்திநி பாதமு
மருவுழி யருளுரு மன்னவ னணைந்து
செல்கதி யாய்ந்து பல்பணி படுத்தித்
கருவியு மலமும் பிரிவுறப் பிரியா
ஞான நல்கலுந் தானது நோக்கி
தன்னையு மதனையுந் தன்முதற் பொருளையு

மின்னவென் றறியா விருவரு முயங்கி
யொன்று யுறுபய னுவப்பு
கரு. மின்றாய் நிற்கு மிதுசிவ கதியே.

பெத்தநிலை.

(இ-ள்.) அறிவாயறியு மறிவுயிர் - அநாதியே சகலத்தில் அறிவாயறிந்துவருகின்ற அறிவாயிருக்கும் ஆன்மா,—

கேவலத் தறிவில வி௫ளொடும் பிரிவிலன் - கேவலாவத்தையில் ஒன்றையுமறியான், அறிவில்லாமலவ்விடத் தாணவமலத்தையும் விட்டு நீங்கான்,—

அண்ணல் கலைமுதலாக நிலவியகருவிகள் விளக்கெனவுதவும் - இப்படிக்கேவலப்பட்டுக் கிடக்கையில் ஆன்மாவிற்குக் கர்த்தா கலைமுதலானதத்துவங்களைக் கண்ணுக்குக் காட்டான விளக்கின் தன்மைபோற் காட்டாகக் கூட்டுவன்,—

துளக்கறப்பொருந்தி யிருவினைநுகர்வில் வருவினைசெய்து - அக்கருவிகளோடு மசைவறக்கூடிப் பிராரத்தகன்மமான புண்ணிய பாவங்களைப் புசித்து வருமிடத்து ஆகாமியத்தையார்ச்சித்துக்கொள்ளும்,—

மாறிப்பிறந்துவரு நெடுங்காலத்து-இக்கன்மத்துக்கீடாகநெடுங்காலம் அச்சுமாறிப் பிறந்துவருமிடத்துச் சிவபுண்ணிய முண்டாம். அதனால்,—

இருண்மலபாகமுஞ் சத்திநிபாதமு மருவுழி - மலபரிபாகமுஞ் சத்திநிபாதமும் பொருந்தியவிடத்து,—

முத்திநிலை.

அருளுரு மன்னவ னணைந்து - அருளே திருமேனியாகிய கர்த்தா ஆசாரிய மூர்த்தமாகவந்து,—

செல்கதியாய்ந்து பல்பணிபடுத்தி - இவன் அடையப்பட்ட முத்திக் கேதுவையாய்ந்து பலபணியாகிய சரியைகிரியாயோகங்களில் நிறுத்தி,—

கருவியுமலமும் பிரிவுறப்பிரியா ஞானநல்கலும் - அச்சரியைகிரியா யோகங்களை முற்றச்செய்கையினால் கேவலசகலமிரண்டையு நீக்கி அநாதியேயிவனை யுபகரித்துக்கொண்டுவரு முண்மைஞானத்தைக் கொடுப்பன். அப்படிச்செய்தமாத்திரத்தில்,—

தானது நோக்கித் தன்னையு மதனையுந் தன்முதற் பொருளையும் - இவ்வான்மா உண்மைஞானத்தைத்தரிசித்து ஞாதுருவாகியதன்னையும் ஞானமாகியவுண்மைஞானத்தையும் ஞானத்திற்கு முதலாயுள்ள ஞேயத்தையும் ஆகிய இம்மூன்றுமுதலையும்,—

இன்னவென்றறியா விருவருமுயங்கி-அவ்விடத்திற் சுட்டியறியாமல் இவ்வான்மாவுஞ் சிவமுந் தம்மிற்கூடி,—

ஒன்றாயுறுபய னுவப்புமின்றாய்நிற்கு மிதுசிவகதியே - இரண்டுமொரு முதலாகி அவ்விடத்துற்றதொருபயனும் பிரியமும் இரண்டு மிலவாகையைச் சிவசாயுச்சியமென்று சொல்லப்படுவது என்க. (கக)

## நிராகரணம்.

இதுகதி யாக முதலறி வுயிரோற்
பொறிபுல னீங்க வறிவுயி ரன்றே
யடைகாய் நூறி னிடைசேர் சிவப்பென
விந்தியத் தொகையின் வந்தறி வொன்றுநின்
றின்று மென்ற லன்றே யெந்தை
யறிவில னதீதச் செறிவிலென் றுரைத்த
நின்மொழி விரோதமும் பின்முன் மலைவு
மன்வயி னிகழா மலமிரு ணிறையொளி
யான்மா விளக்கிற் றகுமருட் கலாதிக
ளீனமி லிவனிடத் தெவ்வா றிசைந்தன
விசைந்த தாயினு மிசையா தாயினு
மசைந்திடு முத்தி சாதன மவமே
சத்திநி பாதமோ தகுமல பாகமோ
வுய்த்த காரண காரிய மோதுக
பாகங் காரண மாகின் மற்றது
காலா வதியிற் காயா வதியின்
மேலா மென்னும் வினையுறு மவதியிற்
றுயரொன வுயிர்க்குத் தோன்றிடு மவதியி
னயமிகு மிறைவ னல்கிடு மவதியி
லேதிற் கூடு மோதுக விருவினை
யொத்த வெல்லையில் வைத்தன ரொன்னி
லருவினை தூக்க வருவினை நில்லா
வொருவினை புரிகா லிருவினை யாகா
வொப்புறு மாறு செப்புக தேசிக
னருளுரு வென்ற பொருளினை யாயின்
மாயா வுருவன் மாயா வுருவினை
யேயா னேய்ந்தவ ரெம்ம னோரே
பல்பணி ஞான காரண மென்னிற்
றொல்பணி தொறும்பயன் றொடுப்பத னாலு
மொருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரு
மரச ராய தருணத் தலைவரு
முதிர்பா சமயத் திதமுறு மாசரு
ஞானம் பெற்ற நன்மையி னாலு
மீனமில் பணியருட் கேதுவன் றென்றான்
ஞானேற் பத்தி நிமித்தமித் தொழிலென
வேனோர்க் கிறைநூ லியம்பிற் றென்னுங்
கருவியு மலமும் பிரிவுற வருடரு
மென்றனை கேவலத் தேது மறிவிலன்
றுன்றிய சகலத் தருணிலை தோன்று

௪0. வெவ்வ வத்தையி லிறையருள் பெறுகுவஞ்
செவ்விய ஞான தரிசந மாவது
நால்வகை மாயைப் பால்வரு ஞானம்
பண்டை ஞான மிதுவறி தாவரக்
கண்ட ஞான மிதுவரக் காணி
௪௫. லீன ஞானிக ளென்போர் யாருமில்
ஞான வேற்றுமை நாடலு மரிதே
தானு ஞானமுந் தலைவனு மென்றனை
யானபி னிவனு மிவனது ஞானமும்
பாசமும் பாச ஞானமு மென்றிவை
௫0. பேசுவ ரொன்றுப் பெற்றிய வாகலின்
மும்மைப் பொருட்கு மும்மைத் தன்மை
செம்மைத் தென்னிற் செலவுக ளெழுதுக
விருவருங் கூடி யொருப்ப ணுய்த்தென்
றருளினை யிவ்வா றபேதிக ணிலையே
௫௫. பதிபசு பாச முதிரறி வுகளுட
னுரு முன்னர்க் கூறுப் பின்ன
ரிருபொரு ணீத்துமற் றெருநால் வகையு
மீணமின் ஞாதுரு ஞான ஞேயமென்
றிசைய மூன்றுய்ப் பசுபதி யென்றவற்
௬0. றிரண்டா யிரண்டு மொன்றி னென்றுகத்
திரண்டாம் பயனெனுந் திருவரு டௌியிற்
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்று
மென்றிறை யியற்கை யியம்புத றகுமே
யொன்று மென்ற லன்றியு மூவப்பு
௬௫. மின்று மென்று லென்பய னியம்புக
வென்றனை விஞவு மியாவும் விளங்க
வென்றிகொள் கருத்தின் விரும்பினை யாயி
னதிக்கரை யானெனக் கொதித்தல மந்து
வெண்ணெயம் பதிதிகழ் மெய்கண் டவனரு
௭0. ளெண்ணிலை யுடையோ னொருவ னுரைத்த
தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமி ழுண்மையை
யருளுட னுய்ந்து கொள்ள
திருவருள் வினவ திருந்திடு மன்றே.

பேத்தநிலை மறுப்பு.

(இ-ள்.) இது கதியாக முதலறி வுயிரோல் - நீ யிப்பொழுது கூறி முடித்த இதுமுத்தியாகட்டும், அது பின்புகூறுவேம். ஆன்மா அநாதியில் அறிவாயிருக்குமாயின்,—

பொறிபுல னீங்க வறிவுயி ரன்றே - இந்திரியங்களும் அதனாலறியப்பட்ட விடயங்களு நீங்கினவிடத்தான்மாவிற்கு அறியும்பகுதி யுண்டாமோ,

அஃதிந்திரியங்கள் கூடியபொழுதறிந்தும் அவைநீங்கியபொழு தறியாமையுமாயிருப்பது ஆன்மாவிற்குள்ள இயல்பென்னில்,—

அடைகாய் நூறி னிடைசேர் சிவப்பென - பாக்கு வெற்றிலை சுண்ணும்புகூடி மத்தித்தவிடத்தில் அவற்றின் தன்மையின்றி நடுவேயொரு சிவப்பெழுந்தாற்போல்,—

இந்தியத் தொகையின் வந்தறி வொன்றுநின் றின்றுமென்ற லன்றேயெந்தை - இந்திரியங்களின் கூட்டத்தினடுவே ஓரறிவுதோன்றி யுடனேயழியுமென்றுகணபங்கங்கூறும் புத்தனுமேயப்பா நீ இஃதன்றியும்,—

அறிவில னதீதச் செறிவிலென் றுரைத்த - அறிவாயறிந்துவரும் ஆன்மாவிற்கு மலத்தினுல் நெருங்கியிருக்கு மதீதத்தானத்தில் அறிவின்றென்று சொன்ன,—

நின்மொழி விரோதமும் பின்முன் மலைவு மன்வயி னிகழா - உன் சொல்விரோதமும், ஒருக்காலறிவின்றென்றும், ஒருக்காலறிவென்று நீ முன்னொடுபின்மலைவாகச்சொன்ன விவையு நிலைபெற்றநல்லோர் கூட்டத்தினிடத்துச் சொல்லிக்கொள்ளப்படா. இஃதன்றியும்,—

மலமிருள்-ஆணவமலமோவென்னிற் சுத்தவிருளாயிருப்பதொன்று,-

இறையொளி - கர்த்தாதானோ வென்னின் மகா பிரகாசமா யிருப்பானொருவன்,—

ஆன்மாவிளக்கிற் றகுமருட் கலாதிகள்-ஆன்மாவிற்குத்தான் விளக்கைப்போற் காட்டாயுள்ள கலைமுதலிய தத்துவங்களும் மாயாகாரியமாயிருக்கையினுன் மயக்கமாயிருப்பதொன்று, ஆகையாலக்கருவிகள்,—

ஈனமி லிவனிடத் தெவ்வாறிசைந்தன - இருளாயிருக்குங் கேவலத்தில் அறிவில்லாதிருக்குமான்மாவிற்கு மகாபிரகாசமாயிருக்குங் கருவிகள் சென்று பொருந்திய தெப்படி,—

இசைந்ததாயினு மிசையாதாயினும் - அக்கருவிகள் கூடியறிந்தாலும் கூடாமற் கேவலத்திற் கிடந்தாலும் போகட்டும்,—

அசைந்திடுமுத்தி சாதனமவமே - நீ நிலைநிற்கமாட்டாமன் முத்தி சாதநங்கூறியது மிகவு நன்று யிருந்தது,—

முத்தி நிலை மறுப்பு.

சத்திநிபாதமோ தகுமலபாகமோ வுய்த்தகாரண காரியமோதுக-முன் இருண்மலபாகமுஞ் சத்திநிபாதமு மருவுழியென்றாய் அதிற்சத்திநிபாதங் காரணமாய் மலபரிபாகமுண்டாயிற்றோ மலபரிபாகங் காரணமாய்ச் சத்திநிபாதமுண்டாயிற்றோ இவற்றிற் செலுத்தப்பட்ட காரணகாரிய மியாதென்றுசொல்,—

பாகங்காரணமாகில் - மலபாகங் காரணமாய்ச் சத்திநிபாத முண்டாயிற்றெனின்,—

மற்றது காலா வதியிற் காயா வதியின் - அம்மலபாகமென்றது எண்ணிறந்த சரீரமெடுத்து வருவதற்குள் இன்னசரீரத்தில் முத்தி

யென்றிருக்குமோ அச்சரீரத்தின் எல்லையில் எண்ணிறந்தகாலஞ் செல்கையில் அதிலின்னகாலத்தில் இவனுக்கு முத்தியென்றிருக்குமோ,—

மேலாமென்னும் வினையுறுமவதியில் - அக்காலத்தி னெல்லையில் ஒன்றுக்கொன்று மேலாய் வரும் புண்ணியபாவங்களிரண்டுந் துலையொக்கவந்த வெல்லையிலேயோ,—

துயரொனவுயிர்க்குத்தோன்றிடுமவதியில்-எண்ணிறந்தகாலம்பிறந்திறந்துவருமான்மாவிற்குச்சகதுக்கமென்றுதோன்றினஎல்லையிலேயோ,—

நயமிகுமிறைவ னல்கிடுமவதியி லேதிற்கூடுமோதுக - ஆன்மாக்கள் மாட்டு மிகவும் பிரியத்தையுடைய கர்த்தா அவனையின்ன வவதரத்திலே காப்பனென்றுண்டே அவ்வெல்லையோ, இவற்றில் எவ்வவதரத்திலே கூடுமென்று சொல்வீர்,—

இருவினையொத்த வெல்லையில் வைத்தனரொன்னில் - புண்ணிய பாவமிரண்டுந் துலையொத்த காலத்தில் மலபாகமுண்டாமென்று பெரியோர் சொல்வாரொன்னில்,—

அருவினை தூக்க வருவினையில்லா - கன்மமருவாயிருக்கையினுற் புண்ணியமொருதட்டிலும் பாவமொருதட்டிலும்போட்டு இரண்டுமொத்ததோவென்று ஆய்ந்துபார்க்க உருவாகக் காணப்படாது. இஃதன்றியும்,—

ஒருவினை புரிகா விருவினை யாகா - ஒருபுண்ணியத்தைச் செய்யுமிடத்துப் பாவம் பாதியாகப் பகுத்து நில்லாது. ஒருபாவத்தைச் செய்யுமிடத்துப் புண்ணியம் பாதியாகப் பகுத்துநில்லாது. புண்ணியம் புண்ணியமாகவும் பாவம் பாவமாகவும் வரும்,—

ஒப்புறு மாறு செப்புக - புண்ணியபாவ மிரண்டுந்துலையொத்துவருவதெப்படியென்று நீ சொல்லவேண்டும். இஃதன்றியும்,—

தேசிக னருளுரு வென்ற பொருளினை யாயின் - ஆசாரியனுடைய வடிவு அருள்வடிவாயிருக்குமென்று நீ சொன்னதை விசாரிக்கையில்,—

மாயா வுருவன் மாயா வுருவினையேயான்-அழியாத்திருமேனியுடைய கர்த்தா அழிந்துபோகு மாயாசரீரத்தைப் பொருந்தான். அப்படியன்று காணும், ஆன்மாக்களைக்காக்கும்பொருட்டாகப்பொருந்துவனென்னில்,—

ஏய்ந்தவ ரொம்மனோரே - யாதொருவர் மாயாசரீரத்தைப்பொருந்தினவரொம்மைப்போல் ஆன்மவர்க்கத்திலே யொருவர், அதனை யொழிந்து வேறொன்றாகச் சொல்லப்படாது. இஃதன்றியும்,—

பல்பணி ஞான காரண மென்னில் - பலபணியாகக் கூறப்பட்ட சரியை கிரியா யோகங்களைச் செய்வது காரணமாக ஞானமுண்டாம் என்னில்,—

தொல்பணி தொறும்பயன் றொடுப்பதனாலும் - பழையதாகச் சொல்லப்பட்டு வரும் சரியை கிரியா யோகங்களைச் செய்வது காரணமாகச் சாலோக சாமீப சாரூபங்களுண்டாயதுபவித்துப்போ மென்பது திருவாக்குச்சொல்லி யிருக்கையாலும்,—

ஒருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரும் - ஒருதொழிலுஞ் செய்யாத சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தரும்,—

அரச ராய தருணத் தலைவரும் - அரசகோலம்புனைந்த வாலிபத்திற் கெல்லாந் தலைவராகிய சுந்தரப்பெருமாணாயனாரும்,—

முதிர்பர சமயத் திதமுறு மரசரும் - மிக்க அமணசமயத்தினின்று அதனைச்சமயமன்றென்று சைவசமயமே சமயமென்றறுதியிட்டுவந்த திருநாவுக்கரையரும்,—

ஞானம் பெற்ற நன்மையி னூலு மீனமில் பணியருட் கேதுவன்று - குற்றமற்ற சரியை கிரியா யோகங்களென்னுந் தொழில்களைச்செய்யாமல் ஞானத்திற்குக்காரணம் பதியேயல்லது, அவைகாரணமென்றதடாது,—

என்றால் - அல்ல வென்று சொல்லியிருக்கையில் நீ யுள்ளதென்று சொல்வதென்,—

ஞானோற் பத்தி நிமித்தமித் தொழிலென-ஞான உற்பத்தி நிமித்தம் இத்தொழிலென்று,—

ஏனோர்க் கிறைநூ லியம்பிற் றென்னும் - உன்னையொழிந்துள்ளோரெல்லார்க்குங் கர்த்தா நூல்களிலருளிச்செய்துவைத்திருக்க ஞானத்தைப் பெறுதற்கு நிமித்தமன்றி ஞானங் கொடுப்பதற்குச் சரியை முதலியவை நீ காரணமென்ற தென்னமாய் முடியும். எனவே ஞானம்பெறுநிமித்தந் தவமாமென்பதாம். இஃதன்றியும்,—

கருவியுமலமும் பிரிவுற வருடரு மென்றனை - அறிவாகிய கருவியு மறியாமையாகியமலமுநீங்கத்தக்கதாக அருட்பிரகாச முண்டாமென்றனை,—

கேவலத்தேது மறிவிலன் - கேவலாவத்தையில் ஆன்மா வொன்று மறியாமற் கிடக்கையினால் அவ்விடத்தருட்பிரகாசமுண்டாகாது,—

துன்றியசகலத் தருணிலைதோன்று - கருவிகணெருங்கியிருக்குஞ் சகலாவத்தையினும் அருட்பிரகாச முண்டாகாது,—

எவ்வவத்தையிலிறையருள்பெறுகுவம் - முன்கூறிய இரண்டிடத்தும் அருட்பிரகாச முண்டாகாதெனிற் பின்னெக்காலத்திலேதான் கர்த்தாவின் திருவருளைப்பெறுவோம்,—

செவ்வியஞானதரிசனமாவது-மயக்கமறத் தெரிசித்த ஞானமாவது,—

நால்வகைமாயைப் பால்வருஞானம்-தனு கரண புவன போகமென்னு நால்வகையோடுங் கூடியிருக்குமாயையின் பகுதியிலே நின்றறிந்துவரும் ஞானமெப்பொழுதுமுள்ள ஞானமாகவேண்டும்,—

பண்டைஞானமிதுவுறிதாவரக் கண்டஞானமிதுவரக்காணில் - இம்மாயையினால் அறிந்துவரும் ஞானமெப்பொழுது முள்ளஞானம். இது நீக்கத்தக்கதாகவேவரும்ஞானம் இத்தனுகரண புவன போகங்களாகக் காணப்படின்,—

ஈனஞானிக ளென்போர் யாருமில் - அஞ்ஞானிகளெனத் தக்கதாக வொருவருமிலர்; நீ கூறிய வசனத்தினுல் எல்லாரு ஞானவான்களாக வேண்டும்,—

ஞானவேற்றுமை நாடலுமரிதே - ஞானத்தின் வேறுபாடறியும் பொழுதரிதா யிருக்கும். இஃதன்றியும்,—

தானுஞானமுந் தலைவனுமென்றனை - ஆன்மாவுஞ் சிவஞானமுஞ் சிவமுமென்று மூன்ருகக்கூறினை,—

ஆனபினிவனு மிவனதுஞானமும் - சிவனுஞ் சிவனுடைய ஞானமுமென்றலான் ஆன்மாவுமான்மாவினுடைய ஞானமும்,—

பாசமும் பாசஞானமு மென்றிவைபேசுவர் - பாசமும் பாசத்தினுடைய ஞானமுமென்றிந்த மூன்று முதலிற்கு மூன்றுஞான முண்டெனப் பெரியோர் கூறுவர்,—

ஒன்ருப்பெற்றியவாகலின் - இது ஒன்ருகாமுறைமையால்,—

மும்மைப்பொருட்கு மும்மைத்தன்மை ; செம்மைத்தென்னிற் செலவுகளெழுதுக - இம்மூன்றுமுதலிற்கு மூன்று ஞானமுள்ள தென்கையால் ஆன்மா வொன்ருமிடத் தப்பசுஞானமும் பாசஞானமும் போனபடியெப்படியென்ன வேண்டும். இஃதன்றியும்,—

இருவருங்கூடி யொருபயனுய்த்தென் றருளினை-ஆன்மாவுஞ் சிவனுங் கூடி யொருமுதலாயிற்றென்று சொன்னுய்,—

இவ்வா றபேதிக ணில்லையே - இப்படிப்பெத்தத்திலிரண்டாய் முத்தியிலொன்ரு யிருக்குமென்பது மாயாவாதி மதமாகும்,—

பதி பசு பாச முதிரறிவுகளுட னுறு முன்னர்க் கூரு-பதி பசு பாசங்களும் அவற்றினுடைய ஞானங்களுமாறுவகையாக முன்கூறி,—

பின்னிருபொரு ணீத்துமற் றெருநால் வகையும் - அவ்வகையினும் பாசமும்பாசஞானமுமென்ற இரண்டையும் விட்டுப் பின்பு நான்காக்கி அந்நான்குவகையும்,—

ஈனமில் ஞாதுருஞான ஞேயமென் றிசைய மூன்ருய் - இதிலே பசுஞானமொன்றையும்விட்டுக்குற்றமில்லாத ஞாதுருஞானஞேயமென்று பொருந்தப்பட்ட மூன்ருய்,—

பசுபதி யென்றவற் றிரண்டாய்-அதிலேசிவஞானத்தைநீக்கியான்மா வென்றுஞ் சிவமென்று மிரண்டாய்,—

இரண்டு மொன்றி னென்ருகத் திரண்டாம் பயனெனுந் திருவருடெளியில் - இவ்விரண்டில் ஆன்மா அச்சிவனிடத்திற் கூடி யிரண்டு மொருபயனுய் நிற்குமென்று நீ சொல்லும் நிர்மல சாக்கிராதீதத் திருவருட் பகுதியைச் சொல்லுமிடத்து,—

சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றா மென்றிறையி யற்கை யியம்புத றகுமே - "இன்றெனக் கருளியிருள் கடிந்து" என்ற திருவிருத்தத்தால் திருவாதவூர் நாயனார் பேரின்பம்வேண்டிக் கர்த்தா வின் தன்மையை யருளிச்செய்தது நீ சொன்ன வத்தத்திற்குத் தகும். (ஒன்றுமல்லவிரண்டுமெல்லவொன்றுமிரண்டுமின்றுமல்லவென்பதுண்மை.) இஃதன்றியும்,—

ஒன்றா மென்றா லன்றியு முவப்பு மின்றா மென்றா லென்பயன் - பதி யும்பசுவு மொன்றுமென்று கூறியதன்றியு மிவ்விடத்தோரின்பமு மதனு அண்டாகிய பிரியமு மின்றாதலா லுனக்குப்பயனென்ன. எனவேபெறுவா னில்லையென்பதாம்,—

இயம்புக - நான் கூறியதத்தமன்றென்றீரோ, பின்னை இச்சித்தாந்த வத்தமிப்படி யிருப்பதென்று நீர்சொல்லும்,—

என்றனை வினவு மியாவும் விளங்க வென்றிகொள் கருத்தின் விரும்பி னையாயின்-பின்னை யெப்படி யிருப்பதென்றென்னை நீ கேட்டதெல்லாந் தெரியத்தக்கதாக உன்னுடைய திடமிகப்பெற்ற கருத்தில் விருப்ப முண்டாயின்,—

கதிக்கரை யானெனக் கொதித்தல மந்து - ஆற்றங்கரைப்பசுப்போல் அங்காமோ இங்காமோ வென்று நீ பதறிக்கொண்டு திரிவதெல்லாம் தெரி யத்தக்கதுவிட்டு,—

வெண்ணெயம்பதி திகழ்மெய் கண்டவனரு ளுண்ணிலை யுடையோ னொருவ னுரைத்த - திருவெண்ணெய்நல்லூரிலே விளங்கப்பட்ட மெய் கண்டதேவநாயனாருடைய அநுக்கிரகத்தி னுண்மையைப்பெற்ற மறை ஞானசம்பந்தநாயனார் எனக்கருளிச்செய்த அத்தத்தைக்கொண்டு,—

தவப் பிரகாசத் தன்மையில் விரித்த சிவப்பிரகாசச் செழுந்தமிழுண் மையை-முற் சநநத்தில் செய்த தவங்களின் மிகுதிகொண்டு நான் செய்த சிவப்பிரகாசமென்னும் செழுமையாகிய தமிழினுடைய அத்தத்தை,—

அருளுடனாய்ந்துகொள்ள-ஆசாரியருடன் கூடியாராய்ந்துகொள்ளவே,

திருவருள் வினவ றிருந்திடு மன்றே - பின்னை இத்திருவருளின் பகுதி எப்படியிருப்பதெனறு நீ கேட்ட ஐயமெல்லாம் நன்றாயுமக்கு விளங்கும் என்க. (உ0)

சங்கற்பநிராகரணமுற்றியது.

உமாபதிதேவர்திருவடிவாழ்க.

மெய்கண்டசாத்திரமுற்றுப்பெற்றது.

சந்தானகுரவர்தாளிணைவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பாடலகராதி.

## இருபாவிருபது.



## உண்மைவிளக்கம்

பிழைதிருத்தம் முடிந்தவுடன் வெளியிடப்படும்.